# கதைப் பாடல் சுவடித் திரட்டும் பதிப்பும்

(பகுதி - 3)

முனைவர் சு. தாமரைப்பாண்டியன்



உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

# கதைப்பாடல்
# சுவடித் திரட்டும் பதிப்பும்
## (பகுதி - 3)

முனைவர் சு. தாமரைப்பாண்டியன்

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
International Institute of Tamil Studies
இரண்டாம் முதன்மைச் சாலை
மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்
தரமணி, சென்னை - 600 113

## நூல் விவரக் குறிப்பு

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | கதைப்பாடல் சுவடித் திரட்டும் பதிப்பும் (பகுதி - 3) |
| ஆசிரியர் | : | முனைவர் சு. தாமரைப்பாண்டியன்<br>உதவிப் பேராசிரியர்<br>தமிழிலக்கியம் மற்றும் சுவடியியல் புலம்<br>உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>தரமணி, சென்னை - 113 |
| வெளியீட்டாளரும் பதிப்பு உரிமையும் | : | உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்<br>இரண்டாம் முதன்மைச் சாலை<br>மையத் தொழில்நுட்பப் பயிலக வளாகம்<br>தரமணி, சென்னை 600 113<br>தொலைபேசி எண் 044 - 2252 2992 |
| வெளியீட்டு எண் | : | 781 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | 2014 |
| பயன்படுத்திய தாள் | : | 18.6 கிகி டி.என்.பி.எல் வெள்ளை மேப்லித்தோ |
| நூலின் அளவு | : | 1/8 டெம்மி |
| எழுத்தின் அளவு | : | 11 புள்ளி |
| பக்க எண்ணிக்கை | : | 544 |
| அச்சுப்படிகளின் எண்ணிக்கை | : | 1200 |
| விலை | : | ரூ. 240/- (ரூபாய் இருநூற்று நாற்பது மட்டும்) |
| அச்சகம் | : | ஸ்ரீ சரவணா அச்சகம், சென்னை-600 001 |
| பாடம் | : | சுவடியியல் |

**முனைவர் கோ.விசயராகவன்**
இயக்குநர்
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி
சென்னை - 113

# அணிந்துரை

கதைப்பாடல்கள் திரட்டுதல் என்பது சிரமமான காரியம். சுவடிகள் கிடைக்கும் இடத்தைத் தேடிப் 'பழுமரம் தேடும் பறவைபோல்'அலைந்துகொண்டே இருக்கவேண்டும். உ.வே.சா.விற்குப் பிறகு சுவடிப்பதிப்புத் துறையில் தொய்வு ஏற்பட்டது. அதன் காரணமாகப் பல அரிய தமிழ் இலக்கியங்களை நாம் இழந்திருக்கிறோம் என்பது நிதர்சனமான உண்மை. இழந்தவற்றை மீட்டெடுப்பது சற்றுச் சிரமம். ஆனால் அழியக் காத்திருக்கும் இலக்கியங்களையும், ஆவணங்களையும் சுவடிகளிலிருந்து மீட்டெடுப்பது காலத்தின் கட்டாயத் தேவை. சுவடிகள் பதிப்புக் கல்வி பெற்றவரால் முறையாகச் சுவடியைப் பதிப்பிக்க இயலுமா என்றால் அது சற்றுச் சிரமமான காரியம்தான். 'ஏட்டுச் சுரக்காய் கறிக்கு உதவாது' என்ற பழமொழி இதற்கு நன்கு பொருந்தும். பயிற்சியும், அனுபவமுமே ஓலைச்சுவடிப் பதிப்பிற்கு முக்கியம்.

வாய்மொழி மரபு இலக்கியங்கள் வாழ்வாங்கு வாழும் தன்மைத்தன. எனினும் அவ்விலக்கியங்களைக் காலத்தே பதிவு செய்தால் திரிபுகள் குறைந்து காணப்படும். மரபுகள் காலந்தோறும் மாறும். எனவே அம்மரபுகளைக் களஆய்வு செய்து சேகரித்து உண்மை வரலாற்றையும் பண்பாட்டையும் இனங்காண முடியும். வரலாற்றை இனங்காண வாய்மொழி இலக்கியத்தை விட்டால் வேறுகதியில்லை என்பது ஆய்வு அறிஞர்கள் கண்டறிந்த ஊரறிந்த உண்மை. எனவே வாய் மொழி இலக்கிய வகைகளில் ஒன்றான கதைப்பாடல்களைப் பதிவு செய்வது மிகவும் அவசியம். கதைப்பாடல்கள் வாய் மொழி இலக்கியமாகக் கருதப்பட்டாலும் ஓலைச்சுவடிகளில் எழுதிவைக்கப்பட்ட வடிவமாக மிகுதியாகக் கிடைக்கின்றன. அவ்வாறு ஓலைச்சுவடிகளில் மறைந்துகிடக்கும் மக்கள் இலக்கியமான கதைப்பாடல்களைத் தேடிப்பதிவு செய்வது

அவசியமாகும். அவற்றைச் செய்பவர்கள் இன்று அரிதாகவே உள்ளனர்.

முனைவர் சு.தாமரைப்பாண்டியன் அவர்கள் சமூகக் கதைப்பாடல், வரலாற்றுக் கதைப்பாடல், புராணக்கதைப் பாடல் என்ற மூன்று படிநிலையுடைய கதைப்பாடல்களைச் சுவடிவழித் திரட்டிப் பதிப்பித்திருக்கிறார். இவர் வழங்கிய ஆய்வுரையில் நூலின் உள்ளீடுகள் துணுக்குகளாக நமக்கு பட்டவார்த்தமாகப் புலப்படுகின்றன. ஆண்டுக்கணக்கில் உழைத்து இந்நூற்களை வெளிக்கொண்டு வருகிறார் என்பது நூற்களைப் படித்தபொழுது உணரமுடிந்தது.

நாட்டுப்புறத் தெய்வங்களான சங்கிலிபூதம், வண்ணார மாடன், சிவனணைந்த பெருமாள், கசமாடசாமி, பலவேசக் காரன், கபாலக்காரன், பரமசிவ பாண்டியன், சிவனாண்டி பாண்டியன், அந்தரமுடையார், மன்னன் கருங்காளி வாதை, வன்னியடி மறவன், வண்ணமுத்துசாமி, முத்துப்பட்டன், உச்சினி மாகாளி, குலைவாழை இசக்கி, செண்பகநாச்சியார், மாரியம்மன், பிரம்மசக்தி, முத்தாரம்மன், பொன்னிறத்தாள், சின்னப்பிள்ளை நாச்சியார் முதலிய தெய்வங்களின் வரலாறுகள் கதைப்பாடல்களின் மூலமாக உணர்ந்துகொள்ள முடிகின்றன. பெரும்பாலான தெய்வங்கள் கொலையில் உதித்த தெய்வங்களாக உள்ளன. ஒவ்வொரு நாட்டுப்புறத் தெய்வ வரலாறும் சாதிய முரண்பாடுகளையும், சமூகச் சிக்கல்களையும், அரசியல் மோதல்களையும் உள்ளீடாகக் கொண்டிருக்கின்றன என்பதைக் கதைப்பாடல் தொகுப்பின் மூலம் உணர்ந்துகொள்ள முடிந்தது. இக்கதைப்பாடல்களை விரிவான ஆய்வுக்கு உட்படுத்தினால் மக்கள் வரலாறும் ஒடுக்கப்பட்டோர் பாரம்பரியமும் வெளிப்படும் என்பது திண்ணம். அனைத்து நாட்டுப்புறத்தெய்வ கதைகளையும் திரட்டினால் சமூக வரலாற்றைக் கட்டமைக்கலாம் என்பது இக்கதைப்பாடல்கள் தொகுப்பின் மூலம் உறுதிப்படுகிறது.

வரலாற்றுக் கதைப்பாடல்கள் பாண்டிய மன்னர் வரலாறு சார்ந்ததாகவே பெரும்பான்மையாக அமைந் துள்ளன. சீவலமாறன் தென்காசியை ஆண்ட பிற்காலப் பாண்டிய மன்னன். அவனது வரலாற்றைப் பொன்னுருவி தவநிலை, பரமசிவ சிவனுபாண்டியர் கதை, வன்னியடி மறவன் கதை ஆகிய கதைகள் குறிப்பிடுகின்றன.

சீவலமாறனுடைய குலச்சிறப்பு, ஆட்சிச் சிறப்புபற்றி கதைப்பாடல்கள் தெரிவிக்கின்றன. பாண்டியர் வம்ச சிக்கலுக்கு இத்தகைய கதைப்பாடல்கள் தீர்வு தரும். சீவலமாறனுக்கும் மறவர்குல ஜமீன் காட்டாரி பாண்டி யனுக்கு இடையிலான பகைமையுணர்வும் அதனால் நடை பெற்ற போர் பற்றிய செய்தியினையும் கதைப்பாடல்வழி உணரமுடிகிறது. மறவர், கள்ளர் இனமக்களின் இடப் பெயர்ச்சி வரலாற்றையும் கதைப்பாடல்களின் வழி அறிந்து கொள்ள முடிகிறது. மேலும் ஒடுக்கப்பட்ட மக்களின் வாழ்வு நிலையினையும் கதைப்பாடல் வழி கண்கூடாகக் காணமுடிகிறது.

புராணக் கதைப்பாடல்கள் சிவபெருமானின் திரு விளையாடல்களையும், சிவபெருமானின் பெருமைகளையும் முன்வைப்பதாகவே உள்ளன. சிவ அடியவர்களைச் சிவன் சோதித்து ஆட்கொள்ளும் பாங்கு சுட்டப்பட்டுள்ளது. பாமர மக்களுக்குச் சைவ, வைணவ மதத்தின் பெருமைகளை எடுத் துரைப்பதாகவே புராணக் கதைப்பாடல்கள் அமைந்துள்ளன. மதமாற்றம் நிகழ்ந்த காலகட்டத்தில் மக்களை இந்துமதத்தின் மீது பற்று கொள்ளச் செய்ய இத்தகைய புராணக் கதைப் பாடல்கள் இயற்றப்பட்டிருக்குமோ? என்று எண்ணத் தோன்றுகிறது. உச்சினி மாகாளிஅம்மன் கதை இதனைப் பட்டவார்த்தமாக வெளிப்படுத்துகிறது. இத்தகைய மத மாற்றம் தொடர்பான எதிர்ப்புணர்வுக் கதைகள் வாய்மொழி யிலும் நிரம்பக் கிடைக்கின்றன. புராணக் கதைப்பாடல்கள் நாட்டுப்புற வழிபாட்டு மக்களைப் பெருந்தெய்வ வழிபாட்டு நிறுவனச் சமயத்திற்குள் கொண்டுவர உதவி செய்துள்ளன என்று கொள்ளலாம். மேலும் அரிச்சந்திரன் கும்மி, பாரதக் கதைச் சார்ந்த சத்தியத்தின் மேன்மையை எடுத்துரைக்கும் கதைப்பாடலாக அமைந்துள்ளது. நான்கு கதைப்பாடல் தொகுதிகளுமே தென்தமிழக மக்களின் வாழ்வியல் சார்ந்த குறிப்பாக அடித்தட்டு மக்களின் அடையாள விழுமியத் தொகுப்புகளாகவே தோன்றுகின்றன. இக் கதைப்பாடல் தொகுப்பின் மூலம் முனைவர் சு.தாமரைப்பாண்டியன் அவர்கள் தமிழகத்தில் அதிகமான கதைப்பாடல்களைத் தொகுத்த பெருமையினை அடைகிறார். அவரின் கடின உழைப்பு அவருக்கு அந்தத் தகுதியைப் பெற்றுத்தந்துள்ளது என்றால் மிகையல்ல.

முனைவர் சு.தாமரைப்பாண்டியன் கவிதை, சிறுகதை, பாடல்கள், சுவடிப்பதிப்பு, சங்கஇலக்கிய ஆய்வு என்று பரந்துபட்ட கோணத்தில் பதினாறு நூற்களை ஏற்கெனவே வெளியிட்டுள்ளார். தற்பொழுது நான்கு நூற்களை வெளி யிடுகிறார். ஏறத்தாழ 20 நூற்களைத் தொடப்போகிறார் என்பதை நினைக்கின்றபொழுது வியப்பாகவும் அதே நேரத்தில் இத்தகையச் சிறப்புடைய அவரைப் பாராட்ட வேண்டும் என்ற எண்ணமும் மேலிடுகிறது.

முனைவர் சு.தாமரைப்பாண்டியன் அவர்கள் தமிழ் இலக்கியத் துறைக்கும், ஆய்வுத்துறைக்கும், சுவடிப்பதிப்புத் துறைக்கும் கணக்கற்ற நூற்களைத் தரவேண்டும் என்று நான் உளமாரப் பாராட்டுகிறேன்.

## உள்ளடக்கம்

முனைவர் **சு. தாமரைப்பாண்டியன்**
உதவிப் பேராசிரியர்
தமிழிலக்கியம் மற்றும் சுவடியியல் புலம்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
தரமணி, சென்னை - 113.

# ஆய்வுரை

கதைப்பாடல் என்பது கதைதழுவிய நிலையில் அமையும் பாடல் எனலாம். கதைத்தழுவிய நிலையில் அமைவதால் கதைப்பாடல் என்று அழைக்கப்படுகிறது. கதைப்பாடல் அதிகமாகக் கிடைப்பது தமிழகத்தில்தான் என்றால் மிகையாகாது. தமிழில் கதைப்பாடலை கதை, கும்மி, பாட்டு, போர், அம்மானை, காவியம், மாலை, குறம், தூது, மசக்கை, வெற்றி, சண்டை, ஏணிஏற்றம் எனும் பலபெயர்களில் வழங்கி வருகின்றனர். கதைப்பாடலைப் பாமரரின் அறிவுச்சொத்து, புலமைக்காவியம்; வாழ்வியற் கருவூலம்; சமூகம்காட்டும் காலக்கண்ணாடி என்றெல்லாம் அழைக்கலாம். ஒவ்வொரு கதைப்பாடலும் அடித்தட்டு மக்களின் வரலாற்றை ஏதாவது ஒரு நிலையில் பதிவு செய்துள்ளன என்றால் பொய்யாகாது. கதைப்பாடல்கள் சமூகம், வரலாறு, புராணம் எனும் முக்கூறுகளைப் பொருண்மைகளாகக் கொண்டு இயங்குகின்றன. எனவே நாட்டின் வரலாற்றை அறுதியிடத் துணைசெய்யும் கதைப் பாடல்களைத் திரட்டுவதும் பதிப்பிப்பதும் ஆய்வு செய்வதும் அவசியமாகும்.

தமிழில் 200க்கும் மேற்பட்ட கதைப்பாடல்கள் இருப்பதைத் தோராயமாக உணரமுடிகிறது. சில கதைப் பாடல்கள் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. பல கதைப்பாடல்கள் இன்னும் பதிவுறாமல் உள்ளன. பதிவுப்பெற்ற கதைப்பாடல் களும் மறுபதிப்பின்றிக் காணாமல் போய்க் கொண்டிருக்கின் றன. கதைப்பாடல்களைப் பதிப்பகங்களில் தேடிக் கண்டு பிடிப்பதே அரிதாகவுள்ளன. எனவே அனைத்துக் கதைப் பாடல்களையும் ஓரிடத்தில் கிடைக்கச் செய்வதன் மூலம் ஆய்வுத்தளம் விரிவுபெறும். மறைக்கப்பட்ட வரலாறும் தெளிவுறும்.

தமிழில் கிடைக்கும் கதைப்பாடல்கள் பெரும்பாலும் நாட்டுப்புறத் தெய்வ வரலாறு சார்ந்தவையாக உள்ளன. நாட்டுப்புறத் தெய்வ வரலாறுகளும் முழுமையாகத் திரட்டப் படாத நிலையே காணப்படுகின்றது. திரட்டப்பட்ட வரலாறும் முழுமையான வரலாற்றினைச் சுட்டாமல் சிலைகள் கிடைத்த வரலாற்றையும் தெய்வப் பெயர்ச்சி வரலாற்றையும் கோவில் கட்டிய வரலாற்றையுமே முன் மொழிகின்றன. இந்நிலையில் நாட்டுப்புறத் தெய்வங்களின் உண்மையான தோற்றவரலாற்றை அறியக் கதைப்பாடல்கள் பேருதவி செய்யும் என்பதில் எள்ளளவும் ஐயமில்லை.

கதைதழுவிய பாடல் மரபு தமிழுக்குப் பழமையானது. எனினும் கதைப்பாடல் வரலாற்றை நோக்கும்பொழுது கி.பி. 16-ஆம் நூற்றாண்டிற்கு முற்பட்ட கதைப்பாடல்களைக் காண்பதரிது. தமிழில் முதலில் தோன்றிய கதைப்பாடலாகக் கி.பி.1575-இல் தோன்றிய மூவர் அம்மானை கருதப்படுகிறது. ஆனால், அருணாசலம் அவர்கள் அருத(ன)குட்டி நாடாரால் இயற்றப்பட்ட வள்ளித் திருமணம்தான் முதலில் தோன்றிய கதைப்பாடல் என்பார். கி.பி.1600-இல் மானாட்டு சுந்தரம் நாடார் பாடிய வலங்கை மாலையும் கி.பி.1606-இல் ஆறுமுகம் நாடார் பாடிய வெங்கலராசன் கதையும் அடுத்தடுத்துத் தோன்றின. அடுத்து அருத(ன)குட்டி நாடாரால் கி.பி.1575 முதல்1675 வரையிலான காலக்கட்டத்தில் இயற்றப்பட்ட செண்பகநாச்சியார் கதைப்பாடல், கபாலக்காரசுவாமி கதை, அந்தரமுடையார் கதைப்பாடல், பெருமாள் தம்பிரான் சுவாமி கதைப்பாடல் ஆகியவை தோன்றின. அடுத்து, அல்லி அரசாணி மாலை கி.பி.1575 முதல் 1625 காலக்கட்டத்தில் தோன்றியது. கி.பி.1648-இல் இராமப்பையன் அம்மானை தோன்றியது. அதன்பின் கதைப்பாடலின் தோற்றம் அதிகரித்து 18 மற்றும் 19ஆம் நூற்றாண்டுகளில் உச்சம் பெற்றன எனலாம். கதைப்பாடலின் வளர்ச்சிக்கு வில்லுப்பாட்டும் கணியன் கூத்தும் பெருந்துணைபுரிந்தன. அதோடு கதைப் பாடல்கள் நின்று நிலைத்து நிலைபேறு கொள்ளவும் உதவின.

கதைப்பாடல்களில் பெரும்பான்மையும் ஆசிரியர் பெயர் இடம்பெற்றிருக்காது. ஆனால் சில கதைப்

பாடல்களில் ஆசிரியர் பெயர் காணப்படுகின்றன. அவ்வாறு காணப்படும் ஆசிரியர்கள் பெரும்பாலும் நாடார் இனத்தைச் சார்ந்தவர்களாக உள்ளனர். எனவே கதைப்பாடல்களின் மூலவர்களாக நாடாரின மக்களைக் குறிப்பிடலாம். வில்லிசைக்கலை இவர்களோடு நெருங்கிய தொடர்பு கொண்டுள்ளதை வரலாற்றின் வழி அறியலாம். மேலும் இம்மக்கள் பல நாட்டுப்புறத் தெய்வங்களை வழிபடுபவர் களாகவும் உள்ளனர். அவ்வாறு அவர்கள் வழிபடும் தெய்வங்க ளுக்கெல்லாம் கதைப்பாடல் இயற்றித் தெய்வங்களின் வரலாற்றை அழியாமல் பாதுகாத்தும் வருகின்றனர். நாடாரின மக்களுக்கு அடுத்தப்படியாக தேவரின மக்களிடம் அதிகப் படியான நாட்டுப்புறத்தெய்வ வழிபாடு நிலவுகின்றன.

நாடாரின மக்களின் தொன்மையான வரலாற்றை வெளிப்படையாக அறியமுடியவில்லை. வரலாற்று அறிஞர்கள் நாடாரின மக்களை மூவேந்தரின் வம்சாவழியினர் என்று குறிப்பிடுகின்றனர். பிற்கால வரலாற்றுச் சான்றுகளும் நாட்டுப்புற இலக்கியச் சான்றுகளும் நாடாரின மக்களைப் பாண்டிய மன்னர் பரம்பரையினர் என்பதைத் தெளிவாக எடுத்துரைக்கின்றன. நாட்டுப்புறக் கதைப்பாடல்களான சின்னணைஞ்சிகதை, அந்தரமுடையார்கதை, ஐவர்ராசாக்கள் கதை, அழகன் பெருமாள்கதை, வெட்டும் பெருமாள்கதை, உடையார் சுவாமிகதை, அரவமுத்துவீரன் கதை, பரமசிவ சிவனுபாண்டியர் கதை, வன்னியடிமறவன் கதை, பொன்னுருவி தவநிலை கதை, சிவனணைஞ்சபெருமாள் கதை முதலியவை மேற்கண்ட கருத்தை உறுதிப்படுத்தும் சான்றாதாரங்களாக உள்ளன. வாய்மொழித்தரவுகளும் பழைய நிலப்பத்திர ஆவணங்களும் இதற்குத் துணைசெய்கின்றன.

இத்தகைய பாரம்பரியம் மிக்க நாடார் இனமக்கள் நாயக்கர் ஆட்சி மதுரையில் நிலைபெற்ற பின்பு அதாவது கி.பி. 16-ஆம் நூற்றாண்டிற்குப் பின்பு பாரம்பரிய பெருமை களை இழக்கத் தொடங்கினர். மறவர், வெள்ளாளர், நாயக்கர், முதலியார் இவர்களின் கூட்டு ஆளுமையினால் அடித்தட்டு நிலைக்குத் தள்ளப்பட்டனர் என்பதற்கு வாய்மொழிச் சான்றுகள் நிரம்பக் கிடைக்கின்றன. திருவிதாங்கூர் அரசு ஆளுமையின் கீழிருந்த பகுதியில் வாழ்ந்த நாடார் இனமக்கள்

நாயர், வெள்ளாளர், நம்பூதிரிகள் மேலாண்மையால் கடைநிலைக்குத் தள்ளப்பட்டனர். இன்றும் பாண்டிய நாட்டு நாடார்களுக்கும், மறவர்களுக்கும் பெரும் பகை யுணர்வு நின்று நிலவுவதைக் காணலாம். மேலும் நாடார் இன மக்களால் இயற்றப்பட்ட கதைப்பாடல்களில் வெள்ளாளர் மற்றும் மறவர் சாதியினரைத் தாழ்த்திப் பேசுவதையும் காணமுடிகின்றது. குமரி மாவட்ட நாடாரின மக்கள் புதிய ஆளும் வர்க்கத்தால் விளிம்பு நிலை மக்களாக்கப்பட்டமை யினைக் களஆய்வில் கிடைத்த பழமொழி ஒன்று உறுதிப்படுத்தும்.

**"பள்ளு பறையனைத் தொட்டா தீட்டு**
**சாணானைப் பார்த்தாலே தீட்டு."**

இத்தகு விளிம்பு நிலை மக்களாக்கப்பட்ட நாடார் இன மக்களிடம் கல்வி அறிவு எப்படி வந்தது. கணக்கற்ற மருத்துவச் சுவடிகளையும் கதைப்பாடல்களையும் எப்படி எழுதி வைத்தனர் என்பது வியப்பாக உள்ளது. ஒருவேளை அரச பாரம்பரியத்தின் வழியாகக் கல்வி இப்பரம்பரை யினருக்கு வீட்டிற்குள்ளேயே வம்சாவழியினரால் போதிக்கப் பட்டிருக்குமோ? என்று எண்ணத் தோன்றுகிறது.

பிற்காலத்தில் பாண்டியமன்னரின் வம்சாவழியினர் தென்காசி, வள்ளியூர் பகுதிகளில் ஆட்சி செய்தமையினையும் நமக்குக் கதைப்பாடல்கள் கட்டியம் கூறுகின்றன. புதியவர் ஆட்சிப் பீடத்தில் அமர்கின்றபொழுது பழைய அரச மரபினரை நசுக்குவது மரபுதான் என்பதை நாடாரின மக்களின் பிற்படுத்தப்பட்ட தன்மையோடு ஒப்பிட்டுப் பார்க்கலாம்.

தென்மாவட்டப் பகுதிகளில் கிடைக்கின்ற கதைப் பாடல்கள் பெரும்பாலும் ஆதிக்க அடித்தட்டு வர்க்கத்தினரின் முரண்பாடுகளையும் மோதல்களையுமே பேசுகின்றன. ஆதிக்கவர்க்கத்தின் அடக்குமுறையினைத் திமிரியவர் அல்லது மீறியவர் படுகொலை செய்யப்பட்டுக் கொலையிலுதித்த தெய்வமாக மாறிய செய்திகளே கதைப்பாடலில் பொருண் மையாக விரவிக்கிடக்கின்றன. வாய்மொழித்தரவுகளும் மேற் கண்ட கூற்றை உறுதிப்படுத்துகின்றன. வெள்ளாளர், நாயக்கர், ரெட்டியார் ஆகியோர் ஆதிக்கவர்க்கமாகவும் நிலக்கிழார்

களாகவும் இருந்துள்ளனர். அவர்களின் ஆதிக்கத்தனத்திற்குத் தேவரின மக்கள் உறுதுணையாக இருந்துள்ளனர். ஆதிக்க வர்க்கத்தினர் தங்களின் தேவைகருதிக் கள்ளர், மறவர் இன மக்களை வடபகுதியிலிருந்து தென்பகுதிக்குக் குடியேற்றிய வரலாறும் கதைப்பாடல் மற்றும் வாய்மொழித்தரவுகளில் பெரும்பான்மையாகக் காணமுடிகின்றன.

வெள்ளாளர் இனமக்கள் நில அளவைக்காரர்களாக இருந்த காலக்கட்டத்தில் அடித்தட்டு மக்களின் நிலங்களைச் சூழ்ச்சியால் பறித்த செய்திகளும் வாய்மொழித்தரவுகளில் பரவலாகக் கிடைக்கின்றன. வாய்மொழி வழக்கிலுள்ள பழமொழிகளும் இதனை உறுதிப்படுத்துகின்றன. வெள்ளாளன் புத்தி/வெள்ளாவியில் வச்சாலும் போகாது; வேலிக்கொரு வெள்ளாடு/ஊருக்கொரு வெள்ளாளன்; வெள்ளாளன் கால்வச்சா/வெள்ளாம சொந்தமில்லை; மீசை நரைத்தாலும்/ஆச நரைக்காத வெள்ளாளன்; இருந்துங் கெடுத்தான் இருக்கன்குடி கணக்கன்/செத்துங்கெடுத்தான் இருக்கன்குடி கணக்கன்; இருந்துங்கெடுத்தான் போயிங் கெடுத்தான்/வேப்பங்குளத்து கணக்கன் - என்பன போன்ற பழமொழி களைச் சான்றாகக் காட்டலாம். ரெட்டியார், நாயக்கர் போன்றவர்களும் அடித்தட்டு மக்களை நசுக்கி வளமாக வாழ்ந்த வரலாறுகளும் வாய்மொழிச் செய்திகளாகக் கிடைக்கின்றன.

கள்ளர் இன மக்கள் குலத்தொழிலைச் செய்ததால் மாறிய சமூகச் சூழலில் அவர்கள் அடைந்த இன்னலையும் ஏற்பட்ட உயிர்ப்பலி இழப்பையும் கதைப்பாடல்கள் குறிப் பிடுகின்றன. ஆங்கிலேயர் இம்மக்களைக் 'குற்றப்பரம்பரை யினர்' எனப்பெயரிட்டு அழைத்தமையினை மேற்கண்ட கூற்றோடு பொருத்திப் பார்க்கலாம். மறவர் இனமக்களின் வீரச் சிறப்பினையும் கதைப்பாடல்கள் பதிவுசெய்துள்ளன. வன்னியடி மறவன் கதை, ஈனமுத்து சாமி கதை, பரமசிவ சிவனுபாண்டியர்கதை, சின்னணைஞ்சி கதை, உடையார் சுவாமிகதை, பொன்னுருவி தவநிலை முதலிய கதைப் பாடல்களைச் சான்றாகக் கூறலாம்.

புலையர் இனமக்கள் முற்காலத்தில் சமூகத்தில் மதிக்கத்தக்க நிலையில் வாழ்ந்தமையினைக் கதைப்பாடல்

மற்றும் வாய்மொழித் தரவுகள் மூலம் அறியமுடிகின்றது. புலையர் இனமக்கள் மந்திர தந்திரங்கள் கற்றவராகவும் மலைகளில் வசித்ததாகவும் கதைப்பாடல்கள் தெரிவிக் கின்றன. சுடலைமாடன் கதை, மன்னன் கருங்காளி வாதை கதை, சங்கிலிபூதத்தான் கதை முதலியவற்றைச் சான்றாகச் சுட்டலாம். வேப்புலாங்குளம் பகுதியில் பெரும் வீரனாகத் திகழ்ந்த சின்னத்தம்பி புலையனைத் திருக்குறுங்குடி வெள்ளாளருடன் மறவரும் சேர்ந்து படுகொலை செய்த வரலாற்றைச் சின்னத்தம்பி கதைப்பாடல் தெரிவிக்கிறது. புலையர் இனமக்கள் சமூகத்தில் உயர்ந்த நிலையில் வாழ்ந்து அடித்தட்டு நிலைக்குத் தள்ளப்பட்ட வரலாறுகள் வாய் மொழித் தரவுகளிலும் கிடைக்கின்றன. இராதாபுரம் வட்டம் சார்ந்த சில இடங்களில் ஊர்ப் பெயர்களும் குளங்களின் பெயர்களும் புலையர்கள் பெயரில் நின்று நிலவிவருவதைச் சான்றாகச் சுட்டலாம் (சான்று:வேப்புலாங்குளம் (ஊர்ப் பெயர்), கருப்புலாங்குளம் (குளப்பெயர்) மேலும் கொலையி லுதித்த தெய்வமாகப் புலையர் இனத்தைச் சேர்ந்த புலமாடன், புலமாடத்தி, குலை வாழை இசக்கி, மன்னங் கருங்காளி வாதை முதலிய தெய்வங்கள் வழிபாட்டிலுள்ளன. அவைகளை ஆய்விற்கு உட்படுத்துவதும் புலையர் இனவரலாற்றை அறியத் துணைசெய்யும். எனவே புலையர் இனமக்களின் வரலாற்றை மீட்டெடுக்கவும் கதைப்பாடல்கள் பெருந்துணைசெய்யும் என்பதில் ஐயமில்லை.

பிராமணர் இனமக்களும் மேல்தட்டு வர்க்கத்தினரும் இருந்து பிற மக்களைத் தீண்டத்தகாதவர்களாகக் கருதிய நிலையின் எச்சத்தை இன்றும் காணமுடியும். மேல்தட்டு வகுப்பினர் தங்கள் குலப்பெண்கள் பிற இனத்தவருடன் சேருவதைக் குல இழுக்காகக் கருதினர். எனவே குலத்தின் மானம் காக்க, ஆட்சியாளரின் துணையுடன், கலப்புமணம் செய்தவரைப் படுகொலை செய்தனர். இதனை முத்துப் பட்டன் கதை, சிதம்பரநாடார் கதை, காத்தவராயன் கதை, தூண்டிமுத்து கதை, பூச்சியம்மன் கதை முதலிய கதைப் பாடல்கள் மூலம் அறியலாம்.

இதைப் போன்று அடித்தட்டு மக்களும் தங்களுக்கும் கீழ்நிலையில் இருந்த இனமக்களைத் தீண்டத்தகாதவர்களாகக்

கருதிய மனப் போக்கினையும் கதைப்பாடல்கள் பதிவு செய் துள்ளன. பள்ளர் இனப்பெண்ணை வண்ணார் இனத்து வாலிபன் விரும்பியதற்காக அவனைப் பள்ளர் இனமக்கள் படுகொலை செய்த வரலாற்றினை 'வாசமுத்து கதை' தெரிவிக்கிறது. வண்ணாரமாடன் கதையும் ஆய்வுநோக்கில் பார்த்தால் மேற்கண்ட கருத்தை உறுதிப்படுத்தும்.

சமூகத்தில் பெண்கள் எந்த உரிமையும் அற்றவர்களாக வாழ்ந்து வந்தமையினையும் அவர்கள் ஆண் சமூகத்தால் போகப் பொருளாகப் பார்க்கப்பட்ட நிலையினையும் கதைப்பாடல்கள் பதிவு செய்துள்ளன. பாலம்மாள் கதை, ஈஸ்வரியம்மன் கதை, அனந்தாயி கீரிப்பிள்ளை கதை முதலியவற்றை அதற்குச் சான்றாகக் கூறலாம். கற்புநெறி காக்கப் பெண்கள் தீயில் பாய்ந்து உயிர்விட்டுத் தீப்பாய்ந்தம் மனாக வழிபாடு பெற்ற வரலாற்றையும் கதைப்பாடல்கள் பதிவு செய்துள்ளன. எனவே பெண்ணியம் சார்ந்த வரலாற்றை மீட்டெடுக்கவும் கதைப்பாடல்கள் துணைசெய்யும் என நம்பலாம்.

மேற்கண்ட செய்திகள் அடிப்படையில் பார்க்கின்ற பொழுது கதைப்பாடல்கள் இனவரலாறு , மொழிவரலாறு, நாட்டு வரலாறு ஆகியவற்றைத் தெளிவுசெய்ய உதவும் என உணரமுடிகிறது. எனவே இத்தகைய சிறப்புடைய கதைப் பாடல்களைத் தொகுத்துப் பதிப்பிப்பது அவசியம் ஆகும். கதைப்பாடல்களைப் பதிவு செய்ய அரசும் பதிப்பகங்களும் தன்னலமின்றித் துணைசெய்ய வேண்டும். இன்றும் பதிவு பெறாமல் பல்லாயிரக்கணக்கான ஓலைச்சுவடிகள் உள்ள நிலையில் ஒருசில பல்கலைக் கழகத்தில் ஓலைச்சுவடித் துறை யினை மூட முயற்சிகள் நடப்பதாக அறிகின்றபொழுது மனக்கவலை அளிக்கின்றது. இந்நிலை மாறி ஓலைச்சுவடித் துறையில்ஆர்வமும் பயிற்சியும் உள்ளவர்களைக் கொண்டு ஓலைச்சுவடிகளில் மறைந்துகிடக்கும் இலக்கியங்களையும் வரலாற்றினையும் பதிப்பித்துத் தமிழ் மொழியையும் தமிழக வரலாற்றையும் காக்க வேண்டும், அதற்கு அரசும் உதவிசெய்ய வேண்டும்.

கதைப்பாடல் சுவடிகளை முதன் முதலில் தேடிப் பதிப்பித்தவர் **கதைப்பாடல் பதிப்பு துறையின் தந்தை**யான குமரி

மாவட்டம் அகஸ்தீஸ்வரத்தைச் சேர்ந்த **கு. ஆறுமுகப்பெருமாள் நாடார்** ஆவார். இவரின் தந்தையார் பெயர் குமாரசுவாமி நாடார். கதைப்பாடல்கள் பதிப்பின் மூலவரான இவர் உவரி சுயம்புலிங்க சுவாமி மான்மியம், கன்னியாகுமரி பகவதி யம்மன் திருப்பணி களவுமாலை, குமரியாலய மகத்துவம் முதலிய நூற்களையும் பதிப்பித்துள்ளார். ஆறுமுகப் பெருமாள் நாடார் பற்றி விரிவான ஆய்வுகள் செய்யப்பட வேண்டும். ஏனென்றால் கதைப்பாடல்களை அவர் தேடிப் பதிப்பித்த பணி பாராட்டத்தக்கது. ஆனால் கதைப்பாடல் பதிப்புத்துறையில் ஆறுமுகப்பெருமாள் நாடார் குறித்து விரிவான செய்திகள் கூறாமை ஒரு வித இனக் காழ்ப்புணர்ச்சி என்றே தோன்றுகிறது. ஆய்வாளர்களுக்கு நடுநிலைமை பண்பு மிகவும் அவசியம். முத்துக்குட்டி சாமியின் சமூகப் புரட்சியானது எப்படி கிறிஸ்தவ ஆய்வாளர்களால் இருட்டடிப்புச் செய்யப்படுகிறதோ அதற்கு இணையாக இதனைக் கருதலாம். எனவே ஆறுமுகப்பெருமாள் நாடார் குறித்து விரிவான ஆய்வுகள் நிகழ்த்தப்படவேண்டும். கு. ஆறுமுகப் பெருமாள் நாடார் உச்சினிமாகாளியம்மன் கதை, முத்தாரம்மன்கதை, சுடலைமாட சுவாமிகதை, இயக்கியம்மன் கதை, வெங்கலராசன் கதை, மார்க்கண்டன் கதை, மாரியம்மன் கதை, பிச்சைக்காலன் கதை, வள்ளியம்மன் கதை, சங்கிலிபூதத்தார் கதை, கிருஷ்ணசுவாமி கதை, பார்வதியம்மன் கதை, முத்துப்பட்டன் கதை, தோட்டுக்காரி கதை, சின்னதம்பி கதை, பெருமாள்சுவாமி கதை, வல்லரக்கன் கதை, சிறுதொண்டர் பக்தன் வில்லுப்பாட்டு முதலிய கதைப் பாடல்களைப் பதிப்பித்துள்ளார். மேலும் இவர் சித்த மருத்துவம் செய்யும் வைத்தியராகவும் இருந்துள்ளார் என்பது கவனத்திற்குரியது.

கதைப்பாடலை முதன்முதலில் ஆய்வுரையுடன் பதிப்பித்த பெருமை **நா. வானமாமலை** அவர்களையே சாரும். நா. வானமாமலை அவர்கள் ஓலைச் சுவடிகளைத் தேடி அலைந்து கண்டுபிடித்து பதிப்பு முறைப்படி முறையாகக் கதைப்பாடல்களைப் பதிவுசெய்தார். எனவே இவரைக் **கதைப்பாடல் பதிப்பின் சிகரம்** என்று கூறலாம். இவர் கட்ட பொம்மன் கதைப்பாடல், வீணாதிவீணன் கதைப்பாடல், கட்டபொம்மு கூத்து, முத்துப்பட்டன் கதை, காத்தவராயன்

கதைப்பாடல், கான்சாயிபு சண்டை, ஐவர்ராசாக்கள் கதை ஆகிய கதைப்பாடல்களைப் பதிப்பித்துள்ளார்.

இவர்கள் இருவரின் பதிப்புப் பணியினை அடியொற்றி **முனைவர் சு. சண்முகசுந்தரம்** அவர்கள் மெச்சும்பெருமாள் பாண்டியன்கதை, சுடலைமாடன்கதை, ஈனமுத்து பாண்டியன் கதை, தேசிங்குராஜன் கதை, பழையனூர் நீலிக்கதை, மதுரைவீரன் கதை ஆகியவற்றைப் பதிப்பித்துள்ளார். **முனைவர் ஆ. தசரதன்** அவர்கள் கபாலக்காரன் கதைகள், மாரியம்மன் கதை, மார்கண்டேயன் கதை, பெருமாள்சாமி தம்பிரான் கதை, முப்புராதியம்மன் கதை, கம்சன் கதை, பத்மநாபசுவாமி கதை, நாச்சியாரம்மன் கதை, அந்தர முடையார் கதை முதலிய சில கதைப்பாடல்களைப் பதிப்பித் துள்ளார். **சிவ.விவேகானந்தன்** அவர்கள் பார்வதியம்மன் கதை, குருக்கேந்திரன் கதை, பிரம்மசக்தியம்மன் பிறவிக்கதை, செங்கிடாக்காரன் கதை, பலவேசக்காரன் கதை ஆகிய வற்றைப் பதிப்பித்துள்ளார். **உத்ராடம்** அவர்கள் அணைஞ்ச வனார் கதையைப் பதிப்பித்துள்ளார்.

சு.தங்கதுரை அவர்கள் சிதம்பரநாடார் கதை, பல வேசஞ் சேர்வைக்காரர் கதை ஆகியவற்றைப் பதிப்பித் துள்ளார். டாக்டர் ஏ.என். பெருமாள் அவர்கள் வெள்ளைக் காரன் கதையினைப் பதிப்பித்துள்ளார். முனைவர் வ. அலமேலு அவர்கள் தோட்டுக்காரி கதையினைப் பதிப்பித் துள்ளார். அ.ம. சத்தியமூர்த்தி அவர்கள் மன்னன் சின்னாண் டிக் கதைப்பாடலைப் பதிப்பித்துள்ளார். அ.கா.பெருமாள் அவர்கள் பொன்னிறத்தாள் கதை, தளவாய் மாடசுவாமி கதை, நல்லதங்காள் கதை ஆகியவற்றைப் பதிப்பித்துள்ளார். சூ. நிர்மலாதேவி அவர்கள் முத்தாரம்மன் கதை, கோவலன் கதை, சின்னணைஞ்சான் கதை, அரவமுத்துவீரன் கதை ஆகியவற்றைப் பதிப்பித்துள்ளார். தி. நடராசன் அவர்கள் வன்னியடிமறவன் கதை, தம்பிமார் கதை, கட்டபொம்மு கும்மிப்பாடல், கோவலன் கண்ணகி கதை, உடையார் கதை, பத்திரகாளியம்மன் கதை, அயோத்தி கதை ஆகியவற்றைப் பதிப்பித்துள்ளார். சு. சக்திவேல் அவர்கள் ஆந்திரமுடையார் கதை, புலமாடன் கதை, பொன்னிறத்தாள் கதை ஆகிய வற்றைப் பதிப்பித்துள்ளார். முனைவர் சு. தாமரைப்

பாண்டியன் அவர்கள் வல்லாள மகாராசன்கதை, குயில வண்ணான் கதை , நாககன்னிகதை, அனந்தாயி சீரிப்பிள்ளை கதை, வள்ளித்திருமணம் கதை, கபாலக்காரன் பிறவிக் கதை, கபாலக்காரன் போர்க்கதை, சங்கிலிபூதத்தான் கதை, மன்னன்கருங்காளி வாதை கதை, அபிமன்னன் போர்க்கதை ஆகிய கதைப்பாடல்களைப் பதிப்பித்துள்ளார். மேலும் கி. ஜெயக்குமார், டாக்டர் பி.டாக்டர்நசீம்தீன், முனைவர் தி.இராஜரெத்தினம், பூமிநாகநாதன், பிருந்தா, சண்முகம் பிள்ளை, ஆ. சிவசுப்பிரமணியன், மருதமுத்து, ஸ்ரீகுமார், செல்வலெட்சுமி, ஜெயலெட்சுமி, சக்திகனல், வீ. சொக்க லிங்கம், ச. முருகானந்தம் முதலியோரும் கதைப்பாடல் பதிப்புத்துறையில் குறிப்பிடத்தக்கவராவார்.

இன்று கதைப் பாடல்களை ஆய்வு செய்கின்ற ஆய்வாளர்களுக்குப் பதிவுசெய்த கதைப்பாடல்கள் முழுமை யாகக் கிடைக்கப்பெறவில்லை. எனவே கதைப்பாடல்களைத் தொகுத்து அனைத்துக் கதைப்பாடல்களும் ஓரிடத்தில் கிடைக்கச் செய்ய வேண்டும் என்ற அடிப்படையில் முதற் கட்டமாக நான்கு தொகுதிகளாகக் கதைப்பாடல்கள் திரட்டப்பட்டு வெளியிடப்படுகின்றன.

**கதைப்பாடல் திரட்டின் முதல் தொகுதியில்,**

1. பலவேசக்காரன் கதை
2. சங்கிலி பூதத்தான் கதை
3. பொன்னுருவி தவநிலை
4. வண்ணாரமாடன் கதை
5. கசமாட சாமி கதை
6. கபாலக்காரன் பிறவிக் கதை
7. கபாலக்காரன் போர்க் கதை
8. வெங்கலராசன் கதை
9. பரமசிவ சிவனு பாண்டியார் கதை
10. அந்தரமுடையார் கதை

எனும் பத்துக் கதைப்பாடல்கள் அமைந்துள்ளன.

**எகதைப்பாடல் திரட்டின் இரண்டாவது தொகுதியில்,**

1. உச்சினி மாகாளியம்மன் கதை
2. மன்னன் கருங்காளி வாதை கதை

3. வன்னியடி மறவன் கதை
4. வல்லாள மகாராசன் கதை
5. செண்பக நாச்சியார் கதை
6. வண்ணமுத்துசாமி கதை
7. நல்லதங்காள் கதை
8. நளாயினி கதை
9. அனந்தாயி கீரிப்பிள்ளை கதை
10. நாககன்னி கதை

ஆகிய பத்துக் கதைப்பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

**கதைப்பாடல் திரட்டின் மூன்றாவது தொகுதியில்,**

1. சித்திரபுத்திர நயினார் கதை
2. அமராபதி கதை
3. கஞ்சன் வதைக் கதை
4. பெருமாள் சுவாமி கதை
5. நாலுமந்திரி கும்மி
6. வள்ளித் திருமணம் கதை
7. கோவலன் கதை
8. பார்வதியம்மன் கதை
9. அபிமன்னன் போர்க்கதை
10. காலசுவாமி கதை

எனும் பத்துகதைப்பாடல்கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன. நான்காம் தொகுதியில்,

1. முத்தாரம்மன் கதை
2. பொன்னிறத்தாள் கதை
3. முத்துப்பட்டன் கதை
4. கான்சாயிபு சண்டை
5. அரிச்சந்திரன் கும்மி
6. சிறுத்தொண்டர் பத்தன் கதை
7. தேசிங்குராஜன் கதை
8. இசக்கியம்மன் கதை
9. சின்னப்பிள்ளை நாச்சியார் கதை
10. ஆரவல்லி சூரவல்லி கதை

ஆகிய கதைப்பாடல்கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

கிடைத்த கதைப்பாடல்கள் ஓலைச்சுவடி, தாள்சுவடி மற்றும் வாய்மொழிப்பதிவு வழியும் பதிப்பிக்கப் பெற் றுள்ளன. கதைப்பாடல் தொகுப்பிலுள்ள கதைப்பாடல்கள் சமூக, வரலாற்று, புராணக் கதைப்பாடல்களாக அமைந் துள்ளன. நான்கு தொகுதியிலும் சேர்த்து 40 கதைப் பாடல்கள் பதிப்பிக்கப்பட்டுள்ளன.

**பலவேசக்காரன்கதை** பலவேசக்காரன் எனும் நாட்டுப்புறத் தெய்வத்தின் பிறப்பு வரலாற்றைக் கூறுகிறது. சிவபெருமான் பார்வதியை மணமுடிக்கிறார். தேவர்கள் பரிசாகக்கொண்டு வந்த பொன்னரிய மாலையினைச் சண்டமுண்டன் எனும் அரக்கன் பறித்துச் செல்கிறான். பலவேசக்காரனும் பிரம்ம சக்தியும் சிவனால் பிறவி செய்யப்படுகின்றனர். இருவரும் சண்டமுண்டனை அழித்து பொன்னரிய மாலையை மீட்கின்றனர். பின்பு சிவனிடம் வரம் பெற்றுப் பூலோகத்தில் வந்து அமர்ந்து பூசை பெறுகின்றனர். இத் தெய்வவழிபாடு குமரி, நெல்லைமாவட்ட நாடாரின மக்களிடம் உள்ளது. இக்கதைப்பாடலை இயற்றிய புலவர் **சுடலைமுத்து நாடார்.** இவர் கபாலக்காரன் பிறவிக்கதை எனும் கதைப்பாடலையும் இயற்றியுள்ளார். இவர் மானாடு அருகிலுள்ள திருமலை புரத்தைச் சேர்ந்தவர்.

பலவேசக்காரன் பெயரில் பலவேசஞ்சேர்வைக்காரன் கதை எனும் கதைப்பாடலும் உள்ளது. இக்கதைப்பாடல் பங்காளிச்சண்டையில் கொலையுண்ட இருவரின் வீர வரலாற்றைக் கூறுகிறது. ஒருவேளை பலவேசக்காரனின் பிறப்பினை மேல்நிலையாக்கம் செய்ய பலவேசக்காரன் (பிறவி) கதையைச் சுடலைமுத்து நாடார் பாடியிருப்பாரோ? என்று எண்ணத் தோன்றுகிறது. காரணம், சுடலை முத்து நாடார் கபாலக்காரனுடைய பிறப்பினை மேல்நிலையாக்கம் செய்ய கபாலக்காரன் பிறவி எனும் கதைப்பாடலை இயற்றியுள்ளார். அருத(ன)குட்டி நாடார் இயற்றிய கபாலக்காரன் போர்க் கதையில் கபாலக்காரன் பிறப்புபற்றிக் கூறப்படவில்லை. அதை நிறைவு செய்யக் கபாலக் காரன் பிறவி கதையைச் சுடலைமுத்து நாடார் பாடினார் என்பது உண்மையானால் மேற்கூறிய கருத்தும் உறுதிப்படும்.

**சங்கிலிபூதத்தான் கதை** சங்கிலிபூதம் எனும் நாட்டுப் புறத் தெய்வத்தின் பிறப்பு வரலாற்றை எடுத்துரைக்கிறது. தேவர்கள், சிவனிடம் அசுரர்கள்போல் நாங்களும் பிறப்பு இறப்புடையவராக இருந்தால் எங்களுக்குச் சிறப்பு இல்லை. எனவே நாங்கள் இறப்பு இல்லாத தன்மையுடையவராக அருள் செய்ய வேண்டும் என்கின்றனர். அமிர்தம் கடையச் சிவன் கூறுகிறார். சங்கிலிபூதம், சேத்திரபாலன், சட்டநாதன் ஆகிய மூவரும் பிறக்கின்றனர். மூவரும் தேவர்களிடம் அட்டாதுட்டி செய்ததால் பூலோகம் அனுப்பப்படுகின்றனர். பூலோகத்தில் குடியிருந்த மரத்தை வெட்டிய செட்டியார் களைக் கொல்கின்றனர். நம்பிமலையில் காவல் பணி செய்கையில் சங்கிலிபூதம் பூஜைசெய்யும் பூசாரி தொழுத நம்பியின் குழந்தையைக் கொல்கிறது. இறுதியில் குற்றாலம் சென்று காவல் பணி ஏற்று, பூசையும் பெற்று **'கருப்பன்'** என்று பெயர் வாங்கிக் குடியமர்கிறது.

சங்கிலிபூதத்தின் வரலாற்றை **நம்பிராயன் கதையும்** எடுத்துரைக்கிறது. சங்கிலிபூதம் கதையை இயற்றிய ஆசிரியர் பெயர் அறியமுடியவில்லை. சங்கிலிபூதம் காவல் தெய்வ மாகக் கருதப்படுகிறது. நாடார் இன மக்கள் தனிப்பட்ட முறையில் கோவில் அமைத்து வழிபடுகின்றனர். பிற இன மக்களும் வழிபடுகின்றனர். திருக்குறுங்குடி நம்பிமலை யிலுள்ள நம்பிகோவிலின் அடிவாரத்தில் சங்கிலிபூதத்திற்குக் கோயில் அமைந்துள்ளது. சங்கிலிபூதத்திற்கு வெங்கலச்சிலை அமைக்கப்பட்டுள்ளது. சங்கிலிபூதத்தின் ஆலயம் அமைந்துள்ள இடத்தின் மேற்குப்பகுதியில் பாறை ஒன்று அமைந்துள்ளது. அதுதான் முன்பு சங்கிலிபூதத்தின் பீடமாக இருந்துள்ளது. இன்றும் அப்பாறையில் குங்குமம் சந்தனம் பூசி பூஜை செய்யப்படுகிறது. அப்பாறை பார்ப்பதற்குப் பலிபீடம் போல் அமைந்துள்ளது. ஒருவேளை யாரோ ஒருவனைச் சங்கிலியால் பிணைத்துக் கொண்டுவந்து இந்தப் பாறையில் வைத்து வெட்டிக் கொன்றிருப்பார்களோ? என்றும் எண்ணத் தோன்றுகிறது. சங்கிலிபூதத்தான் கதையில் வரும் தொழுத நம்பி வரலாறு உண்மையானது என்று தகவலாளர்கள் குறிப்பிடுகின்றனர். மேலும் தொழுதநம்பியின் இயற்பெயர் பச்சநம்பி என்றும் மனைவிபெயர் ருக்குமணி என்றும்

தகவலாளர்கள் குறிப்பிடுகின்றனர் (கூ.முத்தையா, சு. நடராஜன், திருக்குறுங்குடி). ஒருவேளை குழந்தை இறப்புக்கும் சங்கிலி பூதத்தின் இறப்பிற்கும் தொடர்பு இருக்குமோ? என்றும் கருதத் தோன்றுகிறது.

கருப்பசாமியும் காவல் தெய்வமாகக் கருதப்படுகிறது. ஆரியங்காவு அச்சங்காவுப் பகுதியில் ஐயப்பனுக்குக் காவல் தெய்வமாக அமர்ந்திருக்கிறது. இத்தெய்வத்தின் பெயரில் உள்ள **கருப்பன் கதைப்பாடல்** கருப்பசாமி தென்பகுதிக்கு வந்த வரலாற்றைக் கூறுகிறது. சங்கிலிபூதமும் ஆரியங்காவு அச்சங் காவு சென்று ஐயப்பனுக்குக் காவல் தெய்வமாக இருந்ததாகச் சங்கிலிபூதம் கதைப்பாடல் குறிப்பிடுகிறது. எனவே சங்கிலி பூதமும் கருப்பசாமியும் ஒன்றோ என நினைக்கத் தோன்று கிறது. மேலும் கருப்பசாமிக்குச் **சங்கிலி கருப்பன்** என்ற பெயரும் வழக்கிலுள்ளது சிந்திக்கத்தக்கது. அதுபோலச் சங்கிலிபூதமும் கருப்பன் என்று பெயர் பெற்றதாகக் கதைப் பாடல் குறிப்பிடுகிறது.

கருப்பன் கதைப்பாடல் வரலாற்றுத் தொடர்புடையது. கருப்பன் இரவிவர்ம மகாராசனை எதிர்த்த பகைவரைச் சூறையாடியதாகவும் வரகுண பாண்டியனின் படையை மீண்டோடத் துரத்தியதாகவும், விக்கிரம பாண்டிய நம்பி கருப்பனுக்கு மணிமண்டபம் அமைத்து வழிபட்டதாகவும் அறியமுடிகின்றது. எனவே இவற்றோடு பொருத்திப் பார்த் தால் சங்கிலி பூதத்தின் வரலாறும் வரலாற்றோடு தொடர் புடையதாக இருக்குமோ? என்று எண்ணத் தோன்றுகிறது. இதுகுறித்து விரிவான ஆய்வு செய்வது அவசியம்.

**பொன்னுருவி தவநிலை கதை** எனும் கதைப்பாடல் ஒரு வரலாற்றுக் கதைப்பாடல் ஆகும். பாண்டிய மன்னர்களின் வரலாற்றோடு தொடர்புடையதாக அமைகிறது. மேலும் சிவனணைந்த பெருமாள் எனும் நாட்டுப்புறத்தெய்வ வரலாற்றையும் எடுத்துரைக்கிறது. பொன்னுருவி தவமிருந்து பெற்ற சிவனணைஞ்சபெருமாள் திருமணமான வண்ணாத்தி சின்னணைஞ்சி மீது காதல் கொண்டு அழிந்த வரலாற்றைக் கதைப்பாடல் எடுத்துரைக்கிறது. பொன்னுருவி தவநிலை

எனும் கதைப்பாடலுக்குச் **சின்னணைஞ்சான் கதை** என்று வேறு பெயரும் நிலவுகிறது. சூ. நிர்மலாதேவி, ஜி. உத்திராடம் ஆகியோர் சின்னணைஞ்சான் கதையைப் பதிப்பித்துள்ளனர். அவர்கள் பதிப்பித்த சுவடிகளில் கதைப்பாடலை இயற்றிய புலவர் ஆறுமுகப்பெருமாள் நாடார் என்று குறிப்பிடப் பட்டுள்ளது. எனவே இதன் அடிப்படையில் பொன்னுருவி தவநிலை கதைப்பாடலை இயற்றிய புலவர் **ஆறுமுகப் பெருமாள் நாடார்** என்பது தெளிவாகிறது.

பொன்னுருவி தவநிலை கதைப்பாடலில் குறிப்பிடப் பெறும் சீவலமாறன் எனும் மன்னன் கி.பி.1753இல் அரசாண்ட சீவலவரகுண ராமனாக இருக்கவேண்டும். இவன் அபிராம அதிவீரராமனின் தம்பியாகவோ மகனாகவோ இருக்க வேண்டும். இவன் கி.பி.1753-இல் குற்றாலநாதர் கோயிலுக்கு அறக்கட்டளை அளித்துள்ளான் என்பது குற்றாலநாதர் கோயில் செம்புப் பட்டயத்தால் அறியமுடிகிறது (ஜி. உத்ராடம், ப. 23-31). இச்சீவலமாறன் பற்றி வன்னியடிமறவன் கதையும் பரமசிவ சிவனுபாண்டியர் கதையும் குறிப்பிடு கின்றன. எனவே சீவலமாறன் காலம் கி.பி.18-ஆம் நூற்றாண்டு என்று தெளியலாம். மேலும் பொன்னுருவி தவநிலை கதைப்பாடலில் வரும் சிவனணைஞ்சபெருமாள் காலமும் இதுதான் என்று கூறலாம்.

பொன்னுருவி தவநிலையில் குறிப்பிடப்படும் சீவலமாறன் எனும் பாண்டிய மன்னன் தென்காசிப் பகுதியை ஆண்டவன். இவன் வலங்கைக் குலம் எனும் நாடார் குலத்தைச் சேர்ந்தவன் என்பதற்குச் சின்னணைஞ்சான் கதைப்பாடலில் குறிப்பு உள்ளது. அதை உறுதிச்செய்யப் பரமசிவ சிவனுபாண்டியர் கதையும் துணைசெய்கிறது. அதாவது நாடார் குலத்தைச் சேர்ந்த சிவனணைஞ்ச பெருமாள் தாழ்த்தப்பட்ட குலத்தைச் சேர்ந்த வண்ணார் குலப்பெண்ணை விரும்பி மடிந்ததைக் கேலிசெய்யும் வகையில் குறிப்புகள் காணப்படுகின்றன. சுரண்டை ஜமீன் காட்டாரிப் பாண்டியனின் மந்திரிகளாகப் பணியாற்றிய பரமசிவபாண்டியன், சிவனாண்டி பாண்டியன் இருவரும் மறவர்குலத்தைச் சேர்ந்தவர்கள். இவர்கள் தங்கள் வேட்டை நாய்களுக்குச் சின்னஅணைஞ்சி, பெரிய அணைஞ்சி என்று பெயரிடுகின்றனர். நடுவக்குறிச்சி

பாண்டியர்களின் பெயர்தான் சின்னணைஞ்சி, பெரிய அணைஞ்சி என்பது. எனவே நடுவக்குறிச்சி பாண்டியர்களை அவமானப்படுத்தவே அப்பெயரை நாய்களுக்கு இட்டதாகக் கருதி நடுவக்குறிச்சி பாண்டியர்கள் சுரண்டை காட்டாரி பாண்டியன் மீது படையெடுத்தாகக் கூறப்பட்டுள்ளது. எனவே இச் செய்தியின் மூலம் வண்ணார் குலப்பெண்ணான சின்னணைஞ்சிக்காக உயிரைவிட்ட சிவனணைஞ்ச பெருமாளையும் அவனுடைய குலத்தையும் (நாடார் குலம்) இழிவுபடுத்தும் வகையில் மறவர் வீரர்கள் தங்கள் நாய்களுக்குச் சின்னணைஞ்சி, பெரிய அணைஞ்சி என்று பெயரிட்டனர் என்று தோன்றுகிறது. இங்கு நடுவக்குறிச்சி பாண்டியர் என்பது நாடார் குலத்தைச்சார்ந்த சீவல மாறனைக் குறிக்கிறது எனலாம்.

**வண்ணாரமாடன் கதை** வண்ணாரமாடன் எனும் நாட்டுப் புறத் தெய்வத்தின் வரலாற்றைக் கூறுகிறது. குயிலவண்ணான் என்பவனிடம் சலவைத் தொழிலாளியாக வேலை பார்க்கும் முண்டுசாமி என்பவன் குயிலவண்ணானின் மகளைக் காதலித்துக் கர்ப்பமாக்குகிறான். இதனால் கோபம் கொண்ட குயிலவண்ணான், முண்டு சாமியையும் அவனது அக்காவை யும் படுகொலை செய்கிறான். இருவரும் வரம்பெற்றுக் குயிலவண்ணான் குடும்பத்தை அழிக்கின்றனர். முண்டுசாமி வண்ணாரமாடனாகப் பூசைபெற்று அமர்கிறான்.

வண்ணாரமாடன் கதைப்பாடல் ஒரு குறியீட்டு நிலையில் அமைந்த கதைப்பாடல் எனலாம். உண்மையான கதையினை மறைத்து மாற்றிப் பாடப்பட்டுள்ளது. முண்டுசாமி மன்னர் குலத்தவன். அவனது பெற்றோர் இறந்ததும் பங்காளிகள் அவனைக் கொலைசெய்ய முயல்கின்றனர். முண்டுசாமியின் அக்காள் அதனை அறிந்து முண்டுசாமியினைக் காப்பாற்றிட அரண்மனையைவிட்டு வெளியேறுகிறாள். இருவரும் பசியினால் குயிலவண்ணானிடம் சிக்கிச் சலவைத்தொழில் செய்கின்றனர். குயிலவண்ணானின் மகளை விரும்பியதால் முண்டுசாமியும் தமக்கையும் கொலை செய்யப்படுகின்றனர். முண்டுசாமி வண்ணாரமாடன் ஆகிறான் என்று கதைப்பாடல் தெரிவிக்கிறது. இது முரண்பட்ட கருத்தாக அமைகிறது.

பொதுவாகக் கதைப்பாடல் தலைவனுடைய உண்மையான சாதிப்பெயருடன் இணைந்தே கதைப்பாடலின் பெயர்கள் அமைந்திருக்கும். சான்றாகப் புலமாடசாமிகதை, பகடைசாமி கதை ஆகிய இரண்டு கதைப்பாடல்களையும் குறிப்பிடலாம். அந்த வகையில் பார்க்கின்றபொழுது முண்டுசாமி வண்ணார் குலத்தைச் சார்ந்தவனாக இருக்க வேண்டும். **'முண்டு சாமி'**என்ற பெயரே அதை வலியுறுத்துவதாக அமைந்துள்ளது. மேலும் வண்ணாரமாடன் என்ற வண்ணார்குல இளைஞன் உயர் குலப்பெண்ணை விரும்பியதற்காகக் கொலை செய்யப்பட்டிருக்கிறான் என்பதே வண்ணாரமாடன் கதையின் உண்மைக்கதையாக இருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. வண்ணாரமாடன் கதைப்பாடலை இயற்றிய புலவர் **அருத(ன)குட்டி நாடார்** என்று முனைவர் ஆ. தசரதன் குறிப்பிடுகிறார் (செண்பக நாச்சியார் கதைப்பாடல், *ப.28*).

**கசமாடசாமி கதை** எனும் கதைப்பாடல் கசமாட சாமி எனும் நாட்டுப்புறத் தெய்வவரலாற்றைக் கூறுகிறது. இக்கதைப்பாடல் வில்லிசைக் கலைஞர் **திரு. ஆ. பிச்சைத்தேவர்** அவர்கள் பாட எழுதி எடுக்கப்பட்டுப் பதிவு செய்யப்ப ட்டுள்ளது. இதனை எழுதிய புலவர் பெயர் அறியமுடிய வில்லை. கசமாடசாமி கதை கொண்டையங்கோட்டை மறவன் ஒருவனின் வீரவரலாற்றைப் பேசுகிறது. மாடப்ப தேவருக்கும் மாடிப்பிள்ளைக்கும் மகனாகக் கசமுத்து பிறக்கிறான். தனது பராக்கிரமத்தால் கசமுத்து சோழ மன்னனிடம் மந்திரி பதவியைப் பெறுகிறான். சோழன் விலை உயர்ந்த மாலை ஒன்றைக் கசமுத்துக்கு வழங்குகிறான். நம்பந்தட்டை ஆதிமூலப் பெருமாள் கோவில் அருகிலிருந்த ஆற்றிலுள்ள முதலையைப் பிடிக்கும் பொறுப்பு கசமுத்திடம் ஒப்படைக்கப்படுகிறது. இரவு நேரத்தில் முதலையைப் பிடிக்கத் தூண்டில் போட்டு அமர்ந்திருக்கும் வேளையில், வன்னிக் கலந்தையைச் சேர்ந்த கள்ளர்கள் உய்க்காடு நம்பந்தட்டைக்குத் திருட வருகின்றனர். அவர்கள் கசமுத்து கழுத்திலிருந்த விலை உயர்ந்த மாலையினைப் பார்த்து அதைத் திருட முயல்கின்றனர். கசமுத்து கள்ளர்களுடன் மோதி இறுதியில் உயிரை விடுகிறான். கசமுத்துவின் மனைவி கசத்தியும் உடன்கட்டை ஏறி உயிரைவிடுகிறாள். இருவரும் சிவனிடம் வரம்பெற்றுத் தெய்வமாகின்றனர்.

கசமாடசாமி கதைப்பாடல் அக்காலத்தில் இருந்த தீவட்டிக் கொள்ளையர்களுடைய தொல்லையினை எடுத்துரைக்கிறது. இத்தகைய கள்வர் கொள்ளையினை அந்தரமுடையார் கதைப்பாடலும் எடுத்துரைக்கிறது. கி.ராஜநாராயணன் அவர்களும் கோபல்லகிராமம் எனும் நாவலில் இத்தகைய கள்வர் கொள்ளையினைச் சுட்டிக்காட்டியுள்ளர். நெல்லை அருகிலுள்ள வடுகம்பட்டி எனும் கிராமம் கள்வர் கொள்ளைக்கு ஆட்பட்டு அழிந்ததாக வாய்மொழித்தரவுகள் குறிப்பிடுகின்றன. நாங்குநேரிப்பகுதிகளிலும் இத்தகைய கள்வர் கொள்ளை நடந்ததாக அறியமுடிகிறது.

கட்டபொம்மனும் கொள்ளையிடுவதில் ஈடுபட்டான் என்று கூறியதோடு 'கட்டபொம்மன் கொள்ளைக்காரன்' என்ற நூலையும் தமிழ்வாணன் எழுதியுள்ளார். கட்ட பொம்மன் கொள்ளையடித்ததாக வாய்மொழிச் செய்திகளும் கூறுகின்றன. இதுகுறித்து நடுநிலையில் விரிவான ஆய்வு செய்வது அவசியம். எனவே அக்காலத்தில் மன்னராட்சி சீர்குலைந்து இருந்ததை இது காட்டுகிறது. மேலும் மக்கள் பாதுகாப்பு இன்றி வாழ்ந்ததையும் அறியமுடிகிறது. மேலும் கள்வர்களை எதிர்த்து நின்று உயிர் விட்டவர்களை மக்கள் தெய்வமாக மதித்துப் போற்றிய நிலையையும் உணர முடிகிறது.

கபாலக்காரன் எனும் நாட்டுப்புறத் தெய்வத்தின் பெயரில் இரண்டு கதைப்பாடல்கள் வழக்கிலுள்ளன. ஒன்று **கபாலக் காரன் போர்க்கதை** மற்றொன்று **கபாலக்காரன் பிறவிக் கதை. கபாலக்காரன் போர்க்கதை** கபாலக்காரன் வீரத்தைப் பறைசாற்றுகிறது. அதாவது கீழக்கரை நகரிலிருந்த குட்டி யாலி மரக்காயனும் குன்னாலி குட்டிமரக்காயனும் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்று ஒன்பது கப்பல் வைத்திருந்தனர். ஆயிரமாவது கப்பல் செய்ய மரம்வெட்ட எண்ணிக் கப்பலில் ஆட்களுடன் பயணம் செய்து திருவனந்தபுரத்தை அடைந்து, மன்னனின் அனுமதிபெற்று மலையில் மரம்வெட்ட வருகின்றனர். கபாலக்காரன் குடியிருந்த மரத்தை வெட்ட முயலுகையில் தீயசகுனம் தென்பட்டதையும் பொருட்படுத்தாமல் வெட்டுகின்றனர். இதனால் கபாலக்காரன் கன்னியாகுமரி பகுதியில் கப்பல்

வரும்போது மரக்காயர் கூட்டத்தைத் தாக்கிக் கொன்று விடுகிறான். இறந்தவர்கள் சிவனிடம் வரம்பெற்றுக் கபாலக் காரன் ஆலயத்தில் கணங்களாக அமருகின்றனர்.

**கபாலக்காரன் பிறவிக் கதை** கபாலக்காரனின் பிறப்பு நிலை குறித்து கூறுகிறது. அதாவது மங்கைபதி நாட்டில் பார்வதி தேவியார் பிறந்து வளர்ந்து வருகிறார். பார்வதி தேவியாரின் சாபக்காலம் முடிவு பெற்றதால் சிவன் பார்வதி தேவியாரை மணமுடித்து அழைத்து வரச்செல்கிறார். எனவே கயிலாயத்தைக் காவல் செய்ய கபாலமுத்தையும் கவுத்துக் காரனையும் இடைவெட்டும்பெருமாளையும் தோற்று விக்கிறார். காவலர்களுடன் காவல் செய்யும்பொழுது அங்கு வந்த எமதர்மனையும் காலனையும் அடித்து விரட்டி விடுகின் றனர். உயிர்களைப் பிடித்து வரும் பணியினையும் நயினார் விதிக்கும் தண்டனையையும் நிறைவேற்றி வருகின்றனர். சிவன் பார்வதியுடன் கைலாயம் திரும்பியதும் எமனும் காலனும் கபாலமுத்துவின் அட்டா துட்டிச் செயல்களைக் கூறுகின்றனர். சிவன் அக்கினித் தூணினை மூவரையும் தழுவச் சொல்கிறார். அவர்களும் அக்கினித் தூண்களைப் பிடுங்கிக் கடலில் எறிய முற்பட்டபொழுது சிவன் தடுத்து நிறுத்தி மன்னிப்புக் கோருகிறார். மேலும் மூவருக்கும் வரங்கொடுத்துப் பூலோகத்திற்கு அனுப்பி வைக்கிறார். ஸ்ரீரங்கத்தில் பெருமாளுடன் குடியமர்கின்றனர்.

கபாலக்காரன் போர்க்கதையினை **அருத(ன)குட்டி நாடாரும்** கபாலக்காரன் பிறவிக்கதையினைச் **சுடலைமுத்து நாடாரும்** இயற்றியுள்ளனர். கபாலக்காரன் போர்க்கதை கபாலக் காரனின் வீரம்பற்றி மட்டும் கூறுகிறது. கபாலக்காரனின் பிறப்புப் பற்றிக் குறிப்பிடவில்லை. எனவே அந்தக் குறை யினைப் போக்குவதற்குப் பிற்காலத்தில் கபாலக்காரன் பிறவிக்கதை இயற்றப்பட்டிருக்க வேண்டும் என்று தோன்று கிறது. கபாலக்கார சாமிக்கு மானாடு, நவ்வலடி, திருமலா புரம், மாடநாடார் குடியிருப்பு, வள்ளியம்மாள் புரம், காரிகுளம், தென்திருப்பேரி, மூக்குப்பேரி ஆகிய பகுதிகளில் வசிக்கும் நாடாரின மக்கள் வழிபாடு நடத்துகின்றனர். கபாலக்காரனை வழிபடும் மக்கள் பெரும்பாலும் மானாடு

பகுதியிலிருந்து இடம்பெயர்ந்த மக்களின் வழியினராகவே உள்ளனர்.

கபாலக்காரனுக்கும் குட்டியாலி, குன்னாலி மரக்காயர்களுக்கும் நடந்த போரையே கபாலக்காரன் போர்க்கதை விளக்குகிறது. கபாலக்காரன் உள்ளிட்ட பெருமாள்சாமி தம்பிரான் கூட்டத்தார்க்கும் கேரள அரசனுடன் தொடர்புடைய மரக்காயர்களின் படைவீரர்களுக்கும் இடையே நடந்த போராக இக்கடற்போரைக் கருதலாம். பெருமாள்சாமி தம்பிரான் விஜயநகர வேந்தர்களால் திருவனந்தபுரத்திற்கு அனுப்பப்பட்டிருந்தார். அதைப் பொறுக்காத கேரள அரசன் விசயநகரத்தாரை நேராக எதிர்க்காது தன் பகுதிக்கு வந்த பெருமாள்சாமி தம்பிரான் கூட்டத்தாரைத் தானும் எதிர்க்காது மேலைக் கடலில் கப்பற்படைகளின் தலைவர்களான குட்டியாலி மற்றும் குஞ்ஞாலி மரக்காயர்களை விட்டுப் பிடித்துக் கைது செய்யுமாறு கூறியிருக்கலாம். இந்த அரசியல் ஆட்டத்தில் பெருமாள்சாமி காட்டில் யாரும் காணாதவாறு ஒளிந்து கொண்டார். கபாலக்காரனும் அவனைச் சேர்ந்தார் சிலரும் சிறை பிடிக்கப்பட்டனர். இறுதியில் கடலில் வைத்து நடைபெற்ற கப்பல் போரில் குஞ்ஞாலி குட்டி மரக்காயனும் அவனுடைய வீரர்களும் இறந்ததாகவும் அறிந்து கொள்ளலாம். கி.பி. 1558-இல் கீழைக் கடலில் குஞ்ஞாலி மரக்காயரின் கப்பல் மூழ்கியது என்ற வரலாற்றுச்செய்தி உள்ளது. அது உண்மையானால் அக்கப்பலை மூழ்கடித்தது கபாலக்காரன் கூட்டத்தாராகவே இருக்க வேண்டும் (ஆ. தசரதன், கபாலக்காரன் கதைப்பாடல், பக்கம், 44 - 46).

திருவிதாங்கூர் ஆட்சியாளர்க்கும் விஜயநகர ஆட்சியாளர்க்கும் இடையே அமையும் வரலாற்றுக் குறியீட்டுக் கதையாகக் கபாலக்காரன் பிறவிக்கதை அமைந்துள்ளதை இனி ஆராயலாம். பிறவிக் கதையை ஆழ்ந்து படிக்கும்போது அக்கதை இருவேறு ஆட்சியாளர்களுக்கிடையே நடந்த அரசியல் போராட்டத்தை மையமாக வைத்து குறியீட்டு நிலையில் பாடப்பெற்றிருப்பது போல் தோன்றுகிறது. முதலில் சிவனுக்கு வேண்டிய இரு கூட்டத்தாரும் சண்டையிட்டுப்

பின் ஒரு கூட்டத்தார் மட்டும் பெருமாள்சாமியுடன் சீரங்கத்திற்கு வந்துவிடுகின்றனர். இக்கூட்டத்தார்க்கு எதிரிகளாகிய எமன், காலன், தூதன் கூட்டத்தினர் அடிபட்டுத் தோல்வி அடைகின்றனர். இவர்களைக் குஞ்சுமரக்காயன் கூட்டத்தார்க்கும், சிவன் பிறவி செய்த மூவரைச் சேர்ந்த கூட்டத்தாராகிய பெருமாள்சாமி தம்பிரான் கூட்டத்தார்க்கும் ஒப்பிடலாம். கேரள அரசனுக்கும் விசயநகர வேந்தர்களுக்கும் நடந்த அரசியல் போரராட்டத்துடன் இவ்விரு கூட்டத்தாரையும் இணைத்துப் பார்க்கலாம் (மேலது, ப. 27).

கபாலக்காரன் போர்க்கதை, வெள்ளைக்காரன்கதை, செங்கிடாக்காரன் கதை ஆகிய கதைகளில் குஞ்ஞாலி, குட்டியாலி மரக்காயர்கள் பற்றிய செய்தி காணப்படுகின்றது. இம்மரக்காயர்கள் பற்றிய செய்திகள் கேரளப்பகுதியில் கிடைக்கின்றன. குஞ்ஞாலி, குட்டியாலி என்பவர்கள் சிறந்த கடற்படைத் தலைவர்களாக இருந்துள்ளனர். மேலும் இவர்கள் மரக்கலம் செலுத்துவதில் வல்லமையுடையவராக விளங்கினர். மரக்கலம் செலுத்துவதில் வல்லவர்களாக இருந்ததாலும் மரக்காயர் வம்சத்தோடு தொடர்புடையவர்களாக இருப்பதாலும் **'மரக்காயர்'** எனும் அடைமொழி வழங்கியிருக்கலாம்.

குஞ்ஞாலி வம்சத்தினர் கேரள மாநிலம் பொன்னானியில் இருந்து கொச்சிக்குக் கடல் வாணிபம் செய்ய வந்தவர்கள். குஞ்ஞாலிகள் சாமூதிரிகளோடு சேர்ந்து, கப்பற்படையில் சேர்ந்து, பின்னர்க் கப்பற்படைத் தலைவர்களாகவும் ஆயினர். உள்நாட்டுக்கப்பல் போக்குவரத்துக்குத் தலைவனாக மிக்க வீரனான குட்டியாலி தேர்ந்தெடுக்கப்பட்டான். 1524-இல் குட்டியாலி அதிகாரத்திற்குக் கீழுள்ள கடற்படை போர்த்துக்கீசியக் கடல் போக்குவரத்து வாகனங்களைத் தாக்கியது. ஹென்ரிக் டி மெனஸஸ் என்பார் குட்டியாலியைப் பொன்னானி துறைமுகத்தில் தம் படைகளுடன் தாக்கினார். பின்னர் 1525லும் கொல்லத்தில் குஞ்ஞாலிகளை அவர் தாக்கினார்.

குட்டியாலியின் அதிகாரத்தால் போர்த்துக்கீசியர் கோழிக்கோட்டிலிருந்து இடம் பெயர்ந்தனர். 1528-இல் போர்த்துக்கீசியர் குட்டியாலியின் மீது போர்தொடுத்தனர். குட்டியாலி,

பார்க்கர் என்பவரால் சிறைப்படுத்தப்பட்டான். பிறகு பாச்சாச்சி மரக்காயர், குட்டியாலி உறவினர்கள், அலி ஆபிரகாம், கெய்ரோவன், இரண்டாம் குஞ்ஞாலி, குட்டியாலியின் மகன் ஆகியோரால் சாமூதிரியின் கடற் படை திருத்தி அமைக்கப்பட்டது. போர்த்துக்கீசியரைக் குஞ்ஞாலிகள் மீண்டும் இலங்கையின் கிழக்குக் கடற்கரையில் தாக்கினர். 1529-இல் போர்த்துக்கீசிய புதிய வைஸ்ராய், சாலியம் என்னுமிடத்தில் கோட்டை கட்டி அதில் பாதுகாப்புப் படைகளைக் காவல் வைத்தான். சாலியம் படைவீரர்கள் சாமூதிரிகளுக்கு அடிக்கடி தொல்லைக் கொடுத்ததால் சாமூதிரிகள் கழுத்தில் துப்பாக்கி வைத்தது போல் சாலியம் கோட்டை காணப்பட்டது. 1531-இல் சிறைவைக்கப்பட்ட குட்டியாலி கொல்லப்பட்டான். அவனது இடத்தை இரண்டாம் குஞ்ஞாலி நிரப்பினான்.

1536-இல் இடப்பள்ளி என்னுமிடத்தை மார்ட்டின் டி சூசா என்பவர் முற்றுகையிட்டார். அப்போது இரண்டாம் குஞ்ஞாலி போர்த்துக்கீசியரிடம் இடப்பள்ளியை விட்டு உடனே விலகுமாறு கட்டளை பிறப்பித்தான். 1540-இல் நடந்த போரில் சாமூதிரிகள் தளர்ந்துவிட்டதால் போர்த்துகீசியருடன் உடன்படிக்கை செய்து கொண்டார். இவ்வுடன் படிக்கை இரு தரப்பினருக்கும் நன்மையாக அமைந்தது. 1550-இல் மீண்டும் போர் ஏற்பட்டது. தொடர்ந்து நடந்த போரில் 1571-இல் சாலியம் கோட்டையைச் சாமூதிரிகள் கைப்பற்றிப் பரப்பனாடு மன்னனுக்குத் தானமாகக் கொடுத் தனர். சாமூதிரிகளுக்கும் போர்த்துக்கீசியருக்கும் இடையே மீண்டும் ஏற்பட்ட உறவால் 1591-இல் பொன்னானியில் சாமூதிரிகள் போர்த்துகீசியருக்கு நிலம் தானமாகக் கொடுத்தனர். இவர்களது உறவால் சமூதிரிகளுக்கும் குஞ்ஞாலிகளுக்குமிடையே உறவில் விரிசல் ஏற்பட்டது. இதனால் மூன்றாம் குஞ்ஞாலி மரக்காயர் கோட்டை கட்டி அதிலிருந்து போர்த்துக்கீசியரோடு சண்டையிட்டான். 1595-இல் நான்காம் குஞ்ஞாலி சாமூதிரிகளிடம் சபதம் கூறினான்.

போர்த்துக்கீசியரோடு சேர்ந்து சாமூதிரிகள் நான்காம் குஞ்ஞாலியை வீழ்த்த முயற்சித்தனர். 1600-இல் போர்த்துக்

கீசியரும் சாமூதிரியரும் 6000 காலாட்படைகளும் கடற்படைகளுமாகச் சென்று குஞ்ஞாலிகளின் மரக்காயர் கோட்டையை முற்றுகையிட்டனர். அதில் குஞ்ஞாலிகள் சாமூதிரிகளிடம் சரணடைந்தனர். சாமூதிரிகள் போர்த்துக்கீசியர் உதவியுடன் நான்காம் குஞ்ஞாலியையும் அவன் ஆட்களையும் கோவாவுக்குக் கொண்டு சென்று தண்டனை அளித்தனர். குஞ்ஞாலியின் உடலைத் துண்டு துண்டாக வெட்டிக் கோவாவில் பார்வைக்கு வைத்தனர். முஸ்லீம்கள் எச்சரிக்கையாக இருக்கவேண்டி அவ்வாறு செய்யப்பட்டதாம். அத்துடன் குஞ்ஞாலிகள் அழிக்கப்பட்டனர் (சிவ. விவேகானந்தன், செங்கிடாக்காரன் கதை, பக். 29 -32).

மேற்கண்ட வரலாற்றுச் செய்தியுடன் கபாலக்காரன் கதையினை ஒப்பிட்டுப் பார்க்கையில் முன்னர்க் கண்ட வரலாறு முரண்பட்டதாகத் தோன்றுகிறது. கபாலக்காரன் கதை, பத்மநாபசாமி கதை இரண்டும் ஒன்றோடு ஒன்று தொடர்புடையது. மேலும் பத்மநாபசாமி கதையில் பத்மநாபசாமியின் வீரர்களுள் ஒருவராகவே கபாலக்காரன் காட்டப்படுகிறான். ஆனால் குஞ்ஞாலி, குட்டியாலிகளின் வரலாறு வேறொரு வரலாறாகத் தென்படுகிறது. குஞ்ஞாலி குட்டியாலிகள் வரலாற்றில் அவர்கள் வம்சம் சாமூதிரிகள் ஆதரவுடன் சிறப்பாக வாழ்ந்ததும், பின்னர்ச் சாமூதிரிகளைப் பகைத்து அழிந்ததும், நான்காம் குஞ்ஞாலி யின் தலை வெட்டி எடுக்கப்பட்டுக் கண்ணூரில் பார்வைக்கு வைத்ததும் வரலாற்று வடுவாகவே உள்ளது.

**வெங்கலராசன் கதை** நாடாரின மக்களின் குல வரலாற்றோடு தொடர்புடையது. இக்கதைப்பாடலைக் கி.பி. 1606 இல் **ஆறுமுகம் நாடார்** எனும் புலவர் இயற்றினார். வலங்கை குலத்தவருக்கும் சோழனுக்கும் மோதல் ஏற்படுகிறது. எனவே வலங்கைக் குலத்தவரில் ஒரு பிரிவினர் ஈழத்தில் சென்று குடியேறுகின்றனர். அங்கு வெள்ளைக்காரனுடைய நீசச் செயலினால் வாழமுடியாமல் கப்பல் மூலம் இடம்பெயர்ந்து குமரி மாவட்டப் பகுதியில் குடியேறுகின்றனர். வெங்கலக் கோட்டையிட்டு வெங்கலராசன் வாழுகையில் வஞ்சிவேந்தன் அவனிடம் பெண் கேட்கிறான். வெங்கலராசன் குலமானம் காக்க மகளைக் கொன்று விட்டு இடம்பெயர்ந்து குறும்பூரில்

குடியேறுகிறான். அங்கும் நளராசன் எனும் மன்னன் பெண் கேட்கப் பெண் கொடுக்காமல் வெங்கலராசன் குடும்பத்தோடு அழிவதாகக் கதை அமைகிறது.

இக்கதைப்பாடலில் நாடாரின மக்களின் தோற்றம் குறித்த தொன்மக் கதை கூறப்பட்டுள்ளது. அதோடு நாடாரின மக்கள் சோழ நாட்டினைப் பூர்வீகமாகக்கொண்டு வாழ்ந்த நிலையினையும் எடுத்துரைக்கிறது. மேலும் நாடாரினத்தாரின் ஆதி மூதாதையராகிய செங்கமலன், அழகேசன், விக்ரமன், சேதுங்கன், காளிநாதன், ஏனாதிநாதன், தக்க ஏனாதிநாதன் ஆகிய எழுவரின் பெயர்கள் கூறப்பட்டுள்ளன. அதனோடு பனைமரமும் பனங்கொட்டையும் தோன்றிய வரலாற்றையும் நாடார் இனமக்கள் பனைத்தொழிலைக் குலத்தொழிலாக ஏற்றுக்கொண்ட செய்தியும் கூறப் பட்டுள்ளன. காவிரி அணை உடைப்பு ஏற்பட்டபோது "மண்குட்டை சுமந்து அணையை அடைக்கமாட்டோம். அது எம் குலத்திற்கு இழுக்கு" என்று கூறியதோடு இரு வலங்கைத் தலைவர்கள் உயிரைவிடுவதன் மூலம் நாடாரின மக்களின் குலச்சிறப்பினை அறிந்துகொள்ள முடிகிறது. வணிகர் இன மக்களுக்குத் தொல்லை கொடுத்த கள்வர் கூட்டத்தை வலங்கையர் வேரறுத்த செய்தியும் குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் இதனால் மகிழ்ச்சியடைந்த வணிகச் செட்டிகள் வலங்கையரைத் தோளில் தூக்கிச் சுமந்ததோடு **'தோளேறும் பெருமாள்'** என்று பட்டம் சூட்டிப் பெருமைப்படுத்திய செய்தியும் கதைப்பாடலில் கூறப்பட்டுள்ளது. வலங்கையர் ஈழத்தில் குடியேறிய செய்தியும் வலங்கையர் **'சான்றோன்', 'ஈழவன்'** எனும் சிறப்புப் பெயர் பெற்ற நிலையினையும் அறிந்துகொள்ள முடிகிறது. மேலும் ஈழத்தில் குலப்பெருமையை உயர்த்த 'சாணார் காசு' வெளியிடச் செய்த தன்மையினையும் கதைப்பாடல் நவில்கிறது.

நாஞ்சில் நாட்டில் வெங்கலராசன் வெங்கலக் கோட்டை கட்டி ஆண்ட செய்தியும் கூறப்பட்டுள்ளது. பெருமாள் சாமியும் வெங்கலராசனும் விசயநகர வேந்தர்கள் காலத்தில் தென்பாண்டி நாட்டிலும் தென் சேர நாட்டிலும் மிகவும் கருதத்தக்கவர்களாக இருந்தனர். வெங்கலராசன் குமரி மாவட்டப்பகுதியில் கோட்டை கட்டி இருந்தான். இதே காலக்கட்டத்தில் விஜயநகரவேந்தர்க்குத் திறைச் செலுத்தியும்

நிறுத்தியும் சேர நாட்டின் சில பகுதிகளையும் பாண்டிய நாட்டுப் பகுதிகள் சிலவற்றை ஆண்ட அகம்படிய மன்னனான உண்ணிக் கேரளவர்மன் என்ற பூதலராம வர்மன் (உண்ணிக்குட்டி) தென்காசிப்பாண்டிய அரச குலத்தினருக்கும் குமரியில் இருந்த வெங்கலராசனுக்கும் எதிரியாக இருந்தான் என்று ஆ. தசரதன் அவர்கள் பெருமாள்சாமி தம்பிரான் கதை நூலில் குறிப்பிடுவதன் மூலம் வெங்கலராசனின் சிறப்பினை உணரமுடிகிறது. மேலும் வெங்கலராசன் கோட்டை கட்டி ஆண்ட உண்மை வரலாறும் புலப்படுகிறது.

**பரமசிவ சிவனுபாண்டியர் கதை** தேவரினமக்கள் சார்ந்த வரலாற்றோடு தொடர்புடையது. இக்கதைப்பாடலை இயற்றியவர் சுந்தரபாண்டிய புரத்தைச் சார்ந்த **எஸ்.சொக்க லிங்கம் பிள்ளை** எனும் புலவராவார். இக்கதைப்பாடலை எழுதத் துணைநின்றவர் ஆ. வேல்சாமி பாண்டியன் தேவர் ஆவார். எஸ். சொக்கலிங்கம் புலவர் ஐந்தாண்டுத் திட்டம் குறித்த வில்லுப்பாட்டு ஒன்றையும் இயற்றியுள்ளார். சங்கர ஆவுடை தனது மகன் பரமசிவபாண்டியனுடனும் பேரன் சிவனாண்டி பாண்டியனுடனும் நாட்டின் பஞ்சம் நீங்க வேண்டி தீர்த்தயாத்திரை மேற்கொள்கிறாள். வரும் வழியில் ஊத்துமலை பகுதியை ஆண்ட காட்டாரி பாண்டியனைச் சந்திக்கின்றனர். காட்டாரி பாண்டியன் பரமசிவ பாண்டிய னையும், சிவனாண்டி பாண்டியனையும் தனது மந்திரிகளாக வைத்துக் கொள்கிறான். நடுவக்குறிச்சி பாண்டியர்களுடன் மோதல் ஏற்படுகிறது. இருவரும் பகையை முறியடிக் கின்றனர். அரண்மனையிலிருந்த சிலரின் சதியினால் தலை வெட்டப்பட்டு இருவரும் மரணமடைகின்றனர். சங்கர ஆவுடையாள் நாக்கினைப் பிடுங்கிக்கொண்டு உயிரை விடுகிறாள். சிவனிடம் வரம் பெற்று மூவரும் தெய்வமா கின்றனர்.

இக்கதையில் மறவர்கள் தென்சீமைக்கு இடம்பெயர்ந்த வரலாறு கூறப்பட்டுள்ளது. மேலும் அக்காலத்தில் ஏற்பட்ட கொடிய பஞ்சம் பற்றியும் சொல்லப்பட்டுள்ளது. காட்டாரி பாண்டியன் ஊத்துமலை ஜமீனாக இருக்கலாம் என்று தோன்றுகிறது. காட்டாரி பாண்டியனிடம் விசுவாசமாக இருந்த இரு வீரர்களும் மற்றவர்களின் பொறாமைக்கு

ஆளாகின்றனர். நடுவக்குறிச்சி பாண்டியர்களின் பெயரை வீரர்கள் இருவரும் தங்கள் நாய்களுக்கு இடுகின்றனர். நடுவக்குறிச்சி பாண்டியர்களின் பெயர் சின்னணைஞ்சி பெரிய அணைஞ்சி என்று கதைப்பாடல் கூறுகிறது. சிவ னணைஞ்ச பெருமாள் சின்னணைஞ்சியை மணமுடித்ததை இழிவுபடுத்தும் செயலாகவே இது தோன்றுகிறது. மேலும் சிவனணைஞ்ச பெருமாள்நாடார் குலத்தவன் என்பதும் இதன்மூலம் உறுதிப்படுகிறது. பரமசிவ பாண்டியனும் சிவனாண்டி பாண்டியனும் இறுதியில் சூழ்ச்சியில் சிக்கி தலை வெட்டப்பட்டு இறக்கின்றனர். பதவி வெறியினால் ஏற்பட்ட மோதலையும் இழப்பையும் இக்கதைப்பாடல் எடுத்துரைக் கிறது. உடையார்சுவாமி கதைப்பாடலும், அரவமுத்துவீரன் கதையும் இத்தன்மையில் அமைந்த கதைப்பாடல்களாக உள்ளன.

சுரண்டையில் சங்கர ஆவுடையார் கோவிலின் கிழக்குப் பக்கத்தில் பரமசிவ சிவனுபாண்டியர் கோயில் அமைந் துள்ளது. கோவிலினுள் பரமசிவ பாண்டியனுக்கும் சிவனாண்டி பாண்டியனுக்கும் சங்கரஆவுடைக்கும் சிலைகள் அமைந் துள்ளன. வீரர்கள் வளர்த்த இரண்டு நாய்களுக்கும் கோயிலினுள் உருவச் சிலைகள் காணப்படுகின்றன. பரமசிவ பாண்டியனும் சிவனாண்டி பாண்டியனும் தலைவெட்டப் பட்ட இடம் கோவிலின் கிழக்குப்பக்கம் சுமார் நூறுமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. தேவர் இனமக்கள் இத் தெய்வங்களை வழிபடுகின்றனர்.

**அந்தரமுடையார் கதை** எருக்கலம்பட்டி நாட்டை மாட நாடார் பொன்னிலங்கி தம்பதியினர் ஆண்டு வந்தனர். அவர்களுக்கு நீண்டநாள் பிள்ளை இல்லை. எனவே குல தெய்வம் செண்பகநாச்சியார் அம்மனை வழிபடுகின்றனர். செண்பகநாச்சியார் அம்மன் அழகான ஆண் குழந்தையைத் தந்து அருள்பாலிக்கிறார். குழந்தைக்கு அந்தரமுடையார் என்று பெயரிடுகின்றனர். பின்னர் அந்தரமுடையார்க்கு முறையான கல்வி கற்பிக்கப்படுகிறது. அந்தரமுடையார் போர்க்கலையினையும் நன்கு கற்றுத் தேறுகிறார். அந்தர முடையார் அரண்மனை கட்டி சீரும்சிறப்புமாக வாழ்ந்து

வரும் நளையிலே ஒரு நாள் அவர் வள்ளியூருக்கு பயணம் செய்கிறார். அங்கு பண்டாரபோத்தி மகளைக்கண்டு விரும்பி மணமுடிக்க விரும்புகிறார். பண்டாரபோத்தி முதலில் பெண்தர மறுக்கிறார். பின்னர் ஊராரின் வற்புறுத்தலின் பேரில் மணமுடித்துதர இசைகிறார்.

அந்தரமுடையார் திருமணக் கோலம் பூண்டு ஊர்வலம் வந்த காட்சியைக் காணப்பொறுக்காமல் சிலர், சாதிக்கு தக்கது செய்யாமல் முடுக்காய் வந்தவரை பின் கட்டாய் கட்டுங்கள் என்கின்றனர். மேலும் அந்தரமுடையாருடன் வந்தவரை அவர்கள் அடித்து துன்புறுத்துகின்றனர். இதனை அறிந்த அந்தரமுடையார் கலகம் செய்தவரைக் கட்டித் தூக்கி வருமாறு கூறுகிறார். வீரர்களும் அவ்வாறே செய்கின்றனர். பின்னர் அவர்களை மன்னித்து விடுதலை செய்கிறார். பின்னர் மணியக்காரன் என்பவன் பண்டாரபோத்தி அந்தரமுடை யாருக்குப் பெண் கொடுத்ததால்தான் மேல்வர்க்கத்தார் வீதிக்குள் அந்தரமுடையாரின் பல்லக்கு வந்ததென்று போத்தியைக் கட்டி இழுத்துச் சென்று அடித்து உதைக்கிறான். அந்தரமுடையார் மணியக்காரனிடமிருந்து பண்டாரத்தை மீட்டதோடு மணியக்காரனையும் மன்னிக்கிறார்.

அதன்பின்னர் அந்தரமுடையார் பண்டாரபோத்தியின் மகளை மணமுடிக்கிறார். அன்று இரவு பிரான்மலைக் கள்ளர்கள் வள்ளியூரைக் கொள்ளையடிக்கின்றனர். எதிர்த்தவர்களைக் கொல்கின்றனர். வீதிதோறும் கொள்ளையடித்துவிட்டுத் தப்பிச் செல்கின்றனர். மக்களின் கூக்குரல் கேட்டு வெளியே வந்த அந்தரமுடையார் விபரம் அறிந்து கள்ளர்களைத் தேடிப்போய் அனைவரையும் கொன்று சிலருக்கு உயிர்பிச்சை வழங்கி கொள்ளைப் பொருட்களை மீட்டுத் திரும்பி வருகிறார். மக்கள் அந்தரமுடையாரைப் போற்றிப் புகழ்கின்றனர்.

அந்தரமுடையாரின் வீரம் கதையின் பொருண்மையாக அமைந்துள்ளது. அந்தரமுடையார் பிரான்மலைக் கள்வரை வெற்றி கொண்டது மக்களுக்கு ஆச்சரியத்தையும் வியப்பையும் ஏற்படுத்தி இருக்க வேண்டும். எனவே அதனை போற்றும் வகையில் பாமரக் கவிஞன் அந்த வீர வரலாற்றைக்

கதைப்பாடலாகப் பாடியிருக்க வேண்டும் எனத்தோன்றுகிறது. கதைப்பாடல் அந்தரமுடையாரை அரசன் என்றே குறிப்பிடு கிறது. அந்தரமுடையார் நாடார் சாதியை சேர்ந்தவர். அவர் சோழ வம்சமரபில் வந்தவர் என்றும் பாண்டிய நாட்டை ஆளும் அதிகாரமுடையவர் என்றும் அறியமுடிகிறது. இதனைக் கதைப்பாடலில்,

> "நாளும் தொட்ட யோக பத்ரகாளி புத்ரனார்
> வள்ளல் செண்பக நாச்சியாரை வணங்கியே வாரார்
> ஆனகளக்காடு வள்ளியூர் திருநெல்வேலி
> அரண்மனைதோறும் பெரிய அம்பலங்கள் செய்தார்"

என்ற பாடல் வரிகளும்,

> "பாண்டிய நாட்டு அதிகாரம் பண்ணுதல் அறியாமல்
> ஆண்டிதன்னைத் தொட்டதற்கு அபதாரம் தாறோம்"

என்னும் வரிகளும் உறுதிப்படுத்துகின்றன. முனைவர் ஆ. தசரதன் அவர்களும் மேற்கண்ட கருத்தை உறுதிப்படுத்து கிறார். அதாவது அருதனக்குட்டி அடிகளார் என்ற புலவருக்கு (கி.பி.1575-1675) 13 தலைமுறைக்கு முன் திருவாரூரில் வாழ்ந்தவன் கருகாலன் எனப்பட்ட கரிகாலன் ஆவான். இவன் கரிகால் சோழனின் பரம்பரையினன். அவ்வாறெனில் உறையூர்ச் சோழன் ஆகலாம். இவனுடைய தங்கையே அந்தரமுடை யாரின் தாய் ஆவாள். அந்தரமுடையார் கரிகாலனின் மகளை தாரமாக மணந்தார். அவர் வள்ளியூர் எருக்கலை வட்டாரத்தில் அதிகாரம் ஏற்றிருந்ததாக அறியமுடிகின்றது.

வள்ளியூருக்கு வந்த கொள்ளையர்களை அவர் அடக்கினார். அந்தரமுடையார் பெயரில் கதைப்பாடலை கி.பி.17-ஆம் நூற்றாண்டில் அருதனக்குட்டி அடிகளார் பாடியுள்ளார் என்று குறிப்பிடுகிறார். அந்தரமுடையாரின் வீரச்சிறப்பைப் போற்றும் வகையில் மக்கள் அவரை தெய்வமாக வழிபடுகின்றனர். வள்ளியூர், மானாடு பகுதியில் அந்தரமுடையாருக்கு வழிபாடு நடைபெறுகிறது. அந்தரமுடையாரின் வழியினர் இன்றும் மானாடு பகுதிகளில் வசித்து வருகின்றனர். அந்தரமுடையாரின்

கல்லறை திருக்குறுங்குடி பகுதியில் உள்ளதென்றும் அறிந்துகொள்ள முடிகிறது.

**உச்சினி மாகாளி அம்மன் கதை** பத்திரகாளியின் பிறப்பு மற்றும் பெருமையினை எடுத்துரைக்கும் கதைப்பாடலாக அமைகிறது. சிவனின் உச்சந்தலையிலிருந்து மாகாளிஅம்மன் பிறக்கிறாள். விக்கிரமபுரியை ஆண்ட விக்கிரமாதித்தனுக்கும், பட்டி என்ற மந்திரிக்கும் இரண்டாயிரம் ஆண்டுகள் வாழ அருள்புரிகிறாள். இதனால் மனமகிழ்ந்து இருவரும் பத்திர காளிக்குக் கோட்டையுடன் கோயில் அமைக்கின்றனர். கோயில் பூசாரிக்குக் காளி உதவிசெய்கிறாள். பூசாரி அம்மன் கொடுத்த தங்கப்பாளத்தை விற்க முயலுகையில் சம்புதுரை எனும் வெள்ளைக்காரனிடம் மாட்டித் தங்கம் கிடைத்த உண்மை வரலாற்றைக் கூறுகிறான். சம்புதுரைக் கோவிலை உடைத்துத் தங்கத்தை எடுக்க முயல்கிறான். பத்திரகாளி அனைவரையும் கொன்று பழிதீர்க்கிறாள். சம்புதுரை மட்டும் அம்மனிடம் மன்னிப்பு கேட்டுக் கோவிலைப் புதுப்பித்து வழிபடுகிறான்.

இக்கதைப்பாடல் காளியம்மன் விடத்திலிருந்து உருவாகிச் சிவனின் உச்சந்தலை வழியாகப் பிறந்ததால் **உச்சினி மாகாளி** என்று பெயர் பெற்றதாக குறிப்பிடுகிறது. காளியம்மன் விக்கிரமன் எனும் ராஜாவின் குலதெய்வமாக மாறியதாகக் கதைப்பாடல் கூறுகிறது. நாடாரின மக்களின் தோற்றம் குறித்துக் குறிப்பிடும் வெங்கலராசன் கதையில் காளியின் புத்திரர்களில் ஒருவன் பெயர் விக்கிரமன் என்று கூறப்பட்டுள்ளது. எனவே உச்சினி மாகாளி கதையில் வரும் விக்கிர மனும் இவனும் ஒன்றா? என எண்ணத் தோன்றுகிறது. வெங்கலராசன் கதையில் வரும் வெள்ளைக்காரன் செய்தியும் உச்சினி மாகாளிஅம்மன் கதையில் வரும் சம்புதுரைக் குறித்த செய்தியும் ஒன்றுபட்டு அமைவதுபோல் தோன்றுகிறது. எனவே வெங்கலராசன் கதையின் அடிப்படையில் உச்சினி மாகாளி அம்மன் கதை படைக்கப்பட்டதா என்றும் எண்ணத் தோன்றுகிறது.

**மன்னன் கருங்காளி வாதை கதை** மன்னராசா எனும் நாட்டுப்புறத் தெய்வத்தின் வரலாற்றைக் கூறுகிறது. இக் கதைப்பாடலை இயற்றிய புலவர் பெயர் தெரியவில்லை.

குஞ்சுநம்பி, வலியநம்பி ஆகியோரால் கொலை செய்யப் பட்டு புலைச்சியும் அவள் வயிற்றிலிருந்த குழந்தையும் 'குலைவாழை இசக்கி', 'காளிமுத்து' என்று பெயர் பெற்று இசக்கியம்மனிடம் சென்று வரம் வாங்குகின்றனர். தப்பி யோடிய காளிப்புலையன் கட்டை தட்டிக் கீழேவிழுந்து உயிரைவிட்டுக் 'கழுக்காரன்' என்ற பெயருடன் அங்கு வந்து சேருகிறான். மதுரையினை இவர்களுடன் பல்வேறு வாதைகளும் சேர்ந்து அழிக்கின்றன. வாதைகளை வேலனும் வேலத்தியும் அடக்கி மலைக்குக் கொண்டு செல்கின்றனர். வாதைகள் வேலத்தியின் மகள் செண்பகக் குட்டியைப் பலிகொண்டு அவர்களுக்குக் கட்டுப்பட்டு நிற்கின்றன. தாழக்குடி மயிலெறி கணியன் தனது எதிரி வரத்தனை அழிக்க வாதைகளை வாங்கி வருகிறான். வாதைகள் மக்களுக்குத் தொல்லை கொடுக்கின்றன. எனவே கோயில் கட்டி வழிபடு கின்றனர். உடையாம்பிள்ளை வாதைக் கோயிலின் நேர்ச்சை பொருளை எடுத்துச் சென்றதால் உயிரைவிடுகிறான். வாதைகள் அவனது மருமகளையும் கொல்கின்றன. உடை யாம்பிள்ளையின் வழியினர் கோவில் கட்டி வழிபட, வாதைகள் கட்டுப்படுகின்றன.

இக்கதைப்பாடல் அடிமைத் தொழில் செய்தவர்களை மேல் வர்க்கத்தினர் படுகொலை செய்த நிகழ்வை எடுத்துரைக் கிறது. மேலும் இக்கதைப் பாடல் குலைவாழை இசக்கி, காளிமுத்து, கழுக்காரன் எனும் மூன்று நாட்டுப்புறத் தெய்வங்கள் வரலாற்றை எடுத்துரைக்கிறது. அக்கால கட்டத்தில் நிலக்கிழார்களிடம் பள்ளர், பறையர், புலையர் மக்கள் அடிமை வேலை செய்தமையினையும் கதைப்பாடல் குறிப்பிடுகிறது. மேலும் மலைவாழ் மக்கள் மந்திரங் கற்றவர்களாகத் திகழ்ந்தமையினையும் கதைப்பாடல் கூறுகிறது. சுடலைமாடன் கதைப்பாடலில் வாதைகள் பிறப்பெடுக்கும் முறையும் மொழி அமைப்பும் மன்னன் கருங்காளி வாதைக் கதையின் வாதைகள் பிறப்பு மற்றும் மொழிநடையுடன் ஒத்துக் காணப்படுகின்றன. எனவே இரண்டு கதைப்பாடல்களையும் இயற்றிய புலவர் ஒருவரோ? என்றும் நினைக்கத் தோன்றுகிறது. மன்னன் கருங்காளி வாதையினை நாடார் இனமக்கள் வழிபட்டு வருகின்றனர்.

கதைப்பாடல்களில் கோயில் கட்டப்பட்டதாகக் கூறப்படும் இடங்களில் மன்னன் கருங்காளி வாதைக்கு கோவில் இல்லை. ஆனால் சிவசுப்பிரமணியபுரம், வைராவிக்கிணறு, நம்பியான் விளை, லெவிஞ்சுபுரம் முதலிய இடங்களில் சிறப்பான வழிபாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.

**வன்னியடிமறவன் கதை** வன்னியடிமறவன் எனும் நாட்டுப் புறத் தெய்வத்தின் வரலாற்றைக் கூறுகிறது. இக்கதைப் பாடலை இயற்றிய புலவர் **நாராயணன் நாடார்.** மாடப்பத் தேவனுக்கும் கருமறத்திக்கும் மகனாக வன்னியடி மறவன் பிறக்கிறான். வாலிபப்பருவம் அடைகின்றபொழுது கன்னிக் களவு படிக்கச் செல்கிறான். களவு செய்கையில் செட்டி ஒருவனை அடித்துவிடுகிறான். செட்டி மன்னன் சீவலமாறனிடம் முறையிடுகிறான். சீவலமாறன் வீரர்களை அனுப்பி வன்னியடி மறவனைப் பிடித்துத் தலையை வெட்டச் செய்து விடுகிறான். வன்னியடிமறவன் நீலன், நீலியுடன் சென்று சிவனிடம் வரம்பெற்று மணிக்கெட்டி பொட்டலில் வழிபாடு பெற்றுக் குடியமர்கிறான்.

வன்னியடிமறவன் வழிபாடு முதன்மைத் தெய்வ நிலையில் அமையவில்லை. துணைத்தெய்வ வழிபாடாக அமைகிறது. நீலன், நீலி வழிபாடு உள்ள கோவில்களில் வன்னியடி மறவனுக்குத் துணைத் தெய்வ வழிபாடு நடத்தப்படுகின்றது. வன்னியடி மறவன் கதை மறவர் இனவரலாற்றைக் கூறுகிறது. மணிக்காஞ்சி நாட்டில் வாழ்ந்த வீரர்களான வீராளன் தேவன், வெட்டாளந்தேவன், புலித்தேவன், பொன்பாண்டித் தேவன், சாத்தான் குட்டித் தேவன், சிவராமத்தேவன், வல்லாளத் தேவன் ஆகியோர் பற்றிய குறிப்புகளும் இடம் பெற்றுள்ளன. வன்னியடி மறவன் கதைப்பாடல் ஒரு சமூகக் கதைப் பாடலாக அமைந்துள்ளது. அ.கா. பெருமாள், தி. நடராஜன், லாரன்ஸ் நாயகம் ஆகியோர் பதிப்பித்த வன்னியடி மறவன் கதைகளில் கதைக் கூறுகளில் முரண்பாடுகள் காணப்படு கின்றன. அவை மேலாய்விற்குரியன.

**வல்லாள மகாராசன் கதை** ஒரு புராணமும் வரலாறும் கலந்த கதைப்பாடல் ஆகும். இக்கதைப்பாடல் சிவபக்தியையும்

சிவனின் அருட்பெருமையினையும் வலியுறுத்துவதாக அமைந்துள்ளது. வல்லாள மகாராசன் கதை அருணாசல புராணத்தின் உட்கதைகளுள் ஒன்றாக அமைகிறது. நாட்டுப்புறப் புலவர் அதனை எடுத்துக் கதைப்பாடலாகப் பாடி வைத்துள்ளார். அருணயம்பதியை வல்லாள மகாராசன் ஆண்டு வருகிறான். அவன் மனைவியர் மல்லம்மா, சல்லம்மா. குழந்தை வரம்கேட்டு 32 தானதர்மங்கள் செய்கிறான் வல்லாள மகாராசன். முப்பத்திரண்டு தானதர்மமும் முறையாகச் செய்தால் இந்திரலோகப் பதவி கிடைக்கும் என்பதால் இந்திரன் அதைக்கெடுக்க நினைக்கிறான். நாரதர் தான தர்மம் செய்வதைத் தடுக்கப் பார்க்கிறார்; முடியவில்லை. சிவன் மாறுவேடமிட்டு வந்து பெண்தானம் கேட்கிறார். பெண்தானம் செய்யமுடியாத நிலை ஏற்பட்டபொழுது மனைவியைத் தானமாகக் கொடுக்கிறான். வல்லாளனின் பக்தியை மெச்சிய சிவன் முக்தி வழங்கி அருள்பாலிக்கிறார்.

வல்லாள மகாராசன் திருவண்ணாமலைப் பகுதியை ஆண்ட ஹொய்சாள மன்னன் ஆவான். இவனின் பெருமையினையும் பக்திச் சிறப்பினையுமே கதைப்பாடல் நவில்கிறது. தமிழ் மன்னர்களின் ஆளுகைக்கு உட்பட்டுத் திருவண்ணாமலைப் பகுதி இருந்தாலும் கர்நாடகத்தைச் சேர்ந்த ஹொய்சாள மன்னர்களின் ஆளுகையும் இப்பகுதியில் இருந்தது. இம்மன்னர்களின் கோவில் திருப்பணி சார்ந்த செய்திகள் கி.பி.1292ஆம் வருடத்திலிருந்து கி.பி.1343 வரையிலான ஒன்பது கல்வெட்டுகளில் காணக் கிடக்கின்றன. ஹொய்சாள பரம்பரையைச் சேர்ந்த மன்னர்கள் பத்தாம் நூற்றாண்டில் இருந்தே தமிழ் நாட்டுடன் தொடர்பு கொண்டிருந்தனர். திருவண்ணாமலையைப் பொறுத்தவரை ஹொய்சாள அரசர்களில் முக்கியமானவன் மூன்றாம் வல்லாள மகாராசன். இவன் சுந்தரபாண்டியனோடு அணிசேர்ந்து தொண்டை மண்டலத்தின் சில பகுதிகளைத் தன்னுடைய ஆட்சியின்கீழ்கொண்டு வந்தான். இதில் திருவண்ணா மலையும் அதைச் சுற்றியிருந்த பகுதிகளும் அடங்கும். இதனைத் திருவண்ணாமலையில் கிடைத்த கி.பி.1317-ஆம் ஆண்டு கல்வெட்டின் மூலம் அறிகின்றோம்.

மூன்றாவது வல்லாள மகாராஜனுக்கு வீர வைபோக வல்லாள மகாராஜன் என்ற பெயரும் உண்டு. திருவண்ணா மலை ஆலயங்களில் உள்ள கல்வெட்டுக்கள் முழுதும் இவன் காலத்தில் ஏற்பட்டவையே. இவை மூன்றாம் பிரகார மதிற் சுவரிலும் செதுக்கப்பட்டுள்ளன. முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டியது என்னவென்றால் அவன் கட்டிய வல்லாள இராஜகோபுரத்தைப் பற்றி எந்த விவரமும் இக்கல்வெட்டு களில் இல்லை. இது பரம்பரையாக வல்லாள கோபுரம் என்று அழைக்கப்பட்டாலும் அவன் கட்டியதற்கு ஆதாரமாய் இந்தக் கோயிலில் உள்ள ஐநூறு கல்வெட்டுகளில் ஒன்றைத் தவிர வேறு எதிலும் குறிப்பு இல்லை. ஒரே ஒரு கல்வெட்டு மட்டும்தான் இதை வல்லாள கோபுரம் என்று குறிப்பிடுவதாக அறியப்படுகிறது. மேலும் இக்கல்வெட்டுகளிலிருந்து மூன்றாவது பிரகாரமும் கிழக்குக் கோபுரமும் கி.பி. 1317-ஆம் ஆண்டு தொடங்கப்பட்டன என்றும் கல்வெட்டு ஒன்று கூறுகிறது. இந்தக் குறிப்பிட்ட கல்வெட்டு மிக முக்கியமான செய்தியை நமக்குக் கூறுகின்றது. இது தேவநாகரியிலும் கிரந்தங்களிலும் தமிழிலும் வடிவமைக்கப் பட்டுள்ளது.

இக் கல்வெட்டுகளில் இரண்டு தேதிகள் குறிக்கப் பட்டுள்ளன. ஒன்று கிறித்தவ ஆண்டு பிப்ரவரி 15-ஆம் தேதி 1317-ஆம் வருடம்; மற்றொன்று ஆகஸ்ட் 5-ஆம் தேதி 1317-ஆம் வருடம். இந்த இரு தினங்களிலும் இந்தக் கல்வெட்டு பொறிக்கப்பட்டதாக ஓர் அறிவிப்பு கூறுகின்றது.

வல்லாள மகாராஜன் திருவண்ணாமலைக்கு வந்தபொழுது அவன் செய்த நன்கொடைகளைப் பற்றிக் கூறுகிறது. இக் கல்வெட்டில் திருவண்ணாமலை 'அருண சமுத்ர வல்லாள பட்டணம்' என்று குறிப்பிடப்பட்டுள்ளது. மேலும் இந்தப் பகுதி ஹொய்சாள மண்டலத்தின் தலைநகரமாக விளங்கியது என்றும் கூறப்படுகிறது.

நிலவரி, கடைகள் வரி முதலியவற்றிலிருந்து கிடைத்த தொகையை அரசன் (மூன்றாம் வல்லாள மகாராஜன்) அண்ணாமலை ஆலயத்திற்கு தினமும் மூன்றுவேளை வழி பாட்டிற்கும் பஞ்சபருவச்செலவை அதாவது பிரதோஷம்,—

அமாவாசை, பௌர்ணமி (தீபப் பெருவிழா) முதலிய பண்டிகைகளுக்கு ஆகும் செலவை இதிலிருந்து எடுத்துக் கொள்ளும்படிப் பணித்தான். இச் செய்திகள் வட மொழியில் பொறிக்கப்பட்டுள்ளன. தமிழிப் பகுதியில் இவ்வரசன் அண்ணாமலையார் வழிபாட்டிற்காகவும் மேலும் விழாக்களுக் காகவும் 10,000 பொன் நன்கொடையாக அளித்ததாகவும் கூறப்படுகிறது. இக் காலத்தில்தான் மூன்றாவது பிரகாரமும் கிழக்குக் கோபுரமும் கட்டப்பட்டிருக்க வேண்டும். ஏனெனில் அறுபது ஆண்டுகளுக்குப் பிறகு செதுக்கப்பட்ட கல்வெட்டில் இந்தக் கோபுரத்தை வீர வல்லாள திருவாசல் என்று குறிப்பிட் டிருப்பது காணக்கிடக்கிறது.

மேலும் இங்குள்ள கல்வெட்டுகளில் நிலங்களின் நன் கொடையும், சிவாச்சாரியர்களுக்கு அளித்த தானமும் கூறப்பட்டுள்ளன. இக்காலத்தில்தான் நான்காவது பிரகார மதிற்சுவரும் கட்டப்பட்டது. வல்லாள மகாராஜன் முப்பத்து மூன்றாயிரம் பொன் ஆலயத்திற்காகக் கொடுத்ததை மற்றொரு கல்வெட்டு கூறுகிறது. இதுவேதான் அரசன் ஒருவன் கொடுத்த தொகையில் மிக அதிகமாகும் (ஸ்ரீ அருணாசலேசுவரர் திருக்கோவில் மஹாகும்பாபிஷேக மலர், 2002; முனைவர் ச. மெய்யப்பன், திருவண்ணாமலை, மணிவாசகர் பதிப்பகம்).

இத்தகைய சிவநெறி வழிபாட்டினனான வல்லாள மகா ராஜனின் புகழைப் புராணக்கதையோடு இணைத்துப் பாடியதில் வியப்பொன்றுமில்லை என்று கூறலாம்.

**செண்பக நாச்சியார்கதை** செண்பக நாச்சியாரம்மன் எனும் தெய்வ வரலாற்றைப் பேசுகிறது. இக்கதைப்பாடலை **அருத(ன)குட்டி நாடார்** என்பவர் கொல்லம் ஆண்டு 792 மாசி மாதம் 4ஆம் நாள் வெள்ளிக்கிழமை (கி.பி.1617) தேரியூரான தாங்கையூரில் இருந்த நாச்சியார் கோவிலில் அரங்கேற்றம் செய்தார் (ஆ. தசரதன், செண்பகநாச்சியார் கதை, ப. 13). கைலாய மலையின் கீழ்த்திசையில் நாச்சியாரம்மன் வீற்றிருக் கிறாள். அவளின் பெருமையை அறிந்த சிவன், அவளை

அழைத்து வரங்கொடுத்து, ஆவினன் குடிக்குப் போகச் சொல்கிறார். இடும்பன் தொல்லைதரச் சிவன் முருகனை அனுப்பி இடும்பனின் தொல்லையை அகற்றுகிறார். நாச்சி யாரம்மன் முருகப்பெருமானை வழிபட்டு வீற்றிருக்கிறாள். அதன் பின் தனது பக்தன் அருத(ன)குட்டியை ஆட்கொள்ளத் தென்பகுதிக்குப் பயணமாகி ஆட்கொள்கிறாள். பின் அங்கு வழிபாடு பெற்று அமர்கிறாள் என்று கதை அமைகிறது.

இக்கதைப்பாடலைக் குறித்து ஆ. தசரதன் அவர்கள் விரிவான ஆய்வினை நிகழ்த்தியுள்ளார். அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்திலுள்ள மருத்துவத் தமிழ்ச் சுவடிகளை விளக்க அட்டவணைகள் திட்டப் பணிக்காகப் புரட்டிய போது அதில் சுவடிக் குறிப்பாகச் (colophon) சோழமாதேவிப் பழனி... என்றிருந்த ஒரு குறிப்பிலிருந்து ஆவினன்குடி எனும் பழனித் திருத்தலம் ஒரு காலத்தில் சோழர் ஆட்சியைச் சார்ந்திருந்தது என்றும் அந்நாட்டு அரசிளங்குமரியின் பெயரால் இருந்தது என்றும் அறியமுடிந்தது. இதன் மூலம் பழனித் திருத்தலத்தில் சோழனின் படைப்பிரிவு ஒன்று இருந்தது. அங்கே அருத(ன)க்குட்டியாரின் முன்னோர் இருந்தனர் என்றும் அது அங்கிருந்து இடம்பெயர்ந்து போன பின் அவர்கள் தெற்கே குடிபெயர்ந்திருக்கலாம் என்றும் அறியலாம். இதற்குச் சான்றாகக் கி.பி.10-ஆம் நூற்றாண்டுப் பழனிக் கல்வெட்டு ஒன்றில் மூல பல கொற்றவாளர் எழுநூற்றுவர் என்று குறிப்பிடப்படுவதைக் காணலாம். இது வீரகேரளர் என்ற மன்னன் காலத்தது ஆகும்.

மேலும் இக்கதைப்பாடலைப் பாடிய அருத(ன) குட்டியார் தம்மை உளப்படுத்திப் பாடியிருக்கக் கூடிய சில பகுதிகளில் அன்னார் சிறுவயதில் சேனாட்டிலிருந்து மானாட்டுக்குக் குடிபெயர்ந்ததாகவும் அன்னாரைக் காணும் பொருட்டே செண்பக நாச்சியாரம்மனும் மாநாட்டுத் தாங்கையூருக்குக் குடிபெயர்ந்ததாகவும் அறிய முடிகின்றது. இதனால் பிற்காலச் சோழர்களின் ஆட்சியின் இறுதிக் காலத்தில் ஒரு குடியேற்றமும், அருத(ன)குட்டியார் பிறந்து சிறிது காலத்திற்குப் பின் மற்றொரு குடியேற்றமும்

ஏற்பட்டிருந்ததாகத் தெரிகிறது (செண்பகநாச்சியார் கதைப் பாடல், ப. 19 - 20)

இவரின் கருத்தின் அடிப்படையில் பார்க்கின்றபொழுது செண்பக நாச்சியாரம்மன் அருத(ன)குட்டி நாடாரின் மூதாதையரின் குலதெய்வமாக இருக்கவேண்டும் என்று தோன்றுகிறது. மேலும் மூதாதையர் இடம்பெயர்ந்த பொழுது குலதெய்வத்தையும் இடப்பெயர்ச்சி செய்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. ஆனால் அதனை மாற்றி அருத(ன) குட்டிநாடார் குலதெய்வ வரலாற்றைத் தன்னோடு இணைத்துப் பாடியிருக்க வேண்டும் என்று உணரமுடிகிறது.

**வண்ணமுத்துசாமி கதை** ஒரு சமூகக் கதைப்பாடல் ஆகும். இக்கதை ஆ. பிச்சை தேவர் வாய்மொழியாகப் பாடக்கேட்டு எழுதிப் பிரதி செய்யப்பட்டது. காத்தவராயன் கதை, சிதம்பரநாடார்கதை, தூண்டிமுத்து கதை, பூச்சியம்மன் கதை ஆகிய கதைப்பாடல்கள் மேல்தட்டு வகுப்புப் பெண்ணை விரும்பியவரின் கொலைச் செய்தியை அடிப்படையாக வைத்து பாடப்பட்டவை. வண்ணமுத்துசாமி கதையும் இந்நிலை சார்ந்ததுதான். பத்தபயப்புநேரியைச் சேர்ந்த மாடப்ப பணிக்கரும் மாடிப்பிள்ளையும் குழந்தைவேண்டித் தவமிருக்கின்றனர். ஆற்றில் வந்த குழந்தையை எடுத்து வண்ணமுத்து என்று பெயரிட்டு வளர்க்கின்றனர். அதே வேளையில் குருவிலாங்குளம் ஆளாத்திபிள்ளை, சுந்தராட்சி அம்மை தம்பதியர்க்கு **விசாலாட்சி** என்ற பெண் குழந்தை பிறக்கிறது. பருவவயதை அடைந்தபொழுது வண்ண முத்துவும் விசாலாட்சியும் விரும்புகின்றனர். விசாலாட்சி கர்ப்பமாகி ஒரு குழந்தையைப் பெற்றெடுக்கிறாள். ஆனால் குழந்தைக்கு அப்பன் யார்? என்று கூற மறுக்கிறாள். மகன் **தமிழ் அழகன்** வளர்ந்து தந்தையைத் தேடிச் செல்கிறான். அப்போது சாமியார் ஒருவன் வண்ணமுத்துவும் விசாலாட்சி யும் தனிமையில் சந்திப்பதையும், வண்ணமுத்துதான் அவனது தந்தை என்பதையும் தமிழ் அழகனுக்குக் கூறிவிடுகிறார். கோபம் கொண்ட மகன் தாயையும் தந்தையையும் கொன்றுவிட்டுத் தனது உயிரையும் மாய்த்துக் கொள்கிறான்.

மூவரும் சிவனிடம் வரம் வாங்கிப் பிராமணர்களுக்குத் தொல்லை கொடுத்துக் கூனியூரில் வழிபாடு பெறுகின்றனர். திருமலைக் கோவிலின் அருகிலும் வண்ணமுத்துவுக்கு வழிபாடு உள்ளது. வண்ணமுத்துவை வாசமுத்து என்ற பெயரிலும் மக்கள் வழிபடுகின்றனர்.

இக்கதையின் மூலக்கதை கதைப்பாடலில் மாற்றிப் பாடப்பட்டது போல் தோன்றுகிறது. அதாவது உயர் ஜாதி வர்க்கத்தினரின் பெண்ணை விரும்பியதற்காக வண்ணார் குலத்தைச் சேர்ந்த வண்ணமுத்துவையும் அவனை விரும்பிய விசாலாட்சியையும் அவர்களுக்குப் பிறந்த குழந்தையையும் உயர் வர்க்கத்தினர் கொலை செய்திருக்க வேண்டும். ஆனால் அதனை மாற்றி மகனே தாயையும் தந்தையையும் கொன்று விட்டு உயிரைவிட்டதாகக் கதை மாற்றிப் பாடப்பட்டது போல் தோன்றுகிறது. இதுபோன்று மாற்றிப் பாடப்பட்ட பலகதைகள் வழக்கிலுள்ளன. வண்ணமுத்துக் கதையினை வாசமுத்துக் கதையும் கூறுகிறது. அக்கதை மேற்சொன்ன கதையிலிருந்து முரண்பட்டு ஓரளவு உண்மையினை வெளிப் படையாகக் கூறியுள்ளது. அதாவது வண்ணார் குலத்தைச் சேர்ந்த வாசமுத்து பள்ளர் இனப்பெண்ணை விரும்பியதால் படுகொலை செய்யப்படுவதாக வாசமுத்து கதை அமை கிறது. எனவே எப்படிப் பார்த்தாலும் வண்ணமுத்துக் கதை சாதிய மீறலின் வன்மத்தை வெளிப்படுத்துகிறது எனலாம்.

**நல்லதங்காள் கதை** ஒரு சமூகக் கதைப்பாடல். பெண்ணுக்குச் சொத்துரிமை வேண்டும் என்ற சிந்தனையின் அடிப்படையில் தோன்றிய கதைப்பாடலாகும். காசி ராஜனுக்கு வாழ்க்கைப்பட்டுபோன நல்லதங்காள், ஏழு குழந்தைகளுடன் பஞ்சம் காரணமாக வாழ வகை தேடி, அண்ணன் நல்லதம்பி வீட்டிற்கு வருகிறாள். அங்கு அண்ணன் மனைவி மூளியலங்காரியால் அவமானப்படுத்தப்படுகிறாள். எனவே ஏழு குழந்தைகளையும் கிணற்றில் தள்ளிக் கொன்றுவிட்டுத் தானும் உயிரை மாய்த்துக் கொள்கிறாள். அண்ணன் நல்லதம்பி மனைவியைப் பழிவாங்கிவிட்டு உயிரை விடுகிறான். காசிராஜனும் உயிரை விடுகிறான். அனைவரும் தெய்வமாகின்றனர் என்று கதை அமைகிறது.

நல்லதங்காள் கதை முற்காலத்தில் தமிழக மக்களிடம் பெரும் செல்வாக்குப் பெற்றிருந்தது. நல்லதங்காள் கூத்தும் மக்களிடம் நிகழ்த்தப்பட்டது. நல்லதங்காள் கதை நிகழ்வு ஆந்திரா என்றும் தமிழகம் என்றும் இருவேறுபட்ட கருத்துக்கள் உள்ளன. சில ஆய்வாளர்கள் நல்லதங்காள் வழிபாடு தமிழகத்தில் இருப்பதையும் நல்லதங்காள் குழந்தை களுடன் குதித்து இறந்த கிணறு மதுரை அருகில் இருப்பதை யும் சுட்டிக்காட்டிக் கதை நிகழ்வு தமிழகமே என்று வாதிடுகின்றனர். எனினும் கதைத்தலைவி தெலுங்கர் இனத் தவள் என்று ஒப்புக் கொள்கின்றனர்.

**நளாயினிகதை** நிடதநாட்டு மன்னன் நளன். அவனுடைய மனைவி பெயர் தமையந்தி. அவர்களின் புதல்வி நளாயினி நளாயினி திருமண வாழ்வை வெறுத்து வாழ்ந்து வருகிறாள். பலநாட்டு அரசர்கள் நளாயினியை மணமுடிக்க வந்தனர். ஆனால் மறுத்துவிடுகிறாள். ஆண்களை நளாயினி வெறுப் பதை அறிந்த மவுக்கல்யர் எனும் முனிவர் கோபம் கொண்டு, மன்மத ரூபமிட்டு நளாயினியை மயக்கி, ஏமாற்றி திருமணம் செய்து கொள்கிறார். திருமணம் முடிந்த பின்பு நளாயினிக்குத் தக்க பாடம் கற்பிக்க எண்ணி பல்வேறு கொடுமைகள் செய்கிறார். ஆனால் நளாயினி பொறுமையாக அதனைப் பொறுத்து கணவனுக்கு வேண்டிய பணிவிடைகளைச் செய்கிறாள். முனிவர் நளாயினியை மேலும் சோதிக்க எண்ணி குஷ்டரோகியாக மாறுகிறார். குஷ்டம் நீங்க புண்ணிய தலங்கள் சென்று தீர்த்தமாட வேண்டும். ஆனால் என்னால் நடக்க முடியாதே என்று பாவனை செய்கிறார். நளாயினி கணவனின் நோய் தீர கூடையில் கணவனை வைத்து சுமந்து சென்று பல்வேறு திருத்தலங்களில் தீர்த்தமாட வைக்கிறாள். நோய் குணமாகவில்லை. பின்னர் பொன்னி என்ற தாசியின் மேல் கொண்ட மோகத்தால்தான் குஷ்டநோய் வந்தது. அவளை ஒரு நாள் சேர்ந்தால் நோய் நீங்கிவிடும். ஆனால் அவளிடம் கொடுக்க பணம் இல்லையே என்று கூறி நடிக் கிறார். நளாயினி பொன்னியுடன் கணவரைச் சேர்த்து வைக்க பொன்னியின் வீட்டின்முன், தினம் தினம் அதிகாலையில்

சுத்தம் செய்து, சாணம் தெளித்து கோலமிடுகிறாள். அதைக்கண்ட பொன்னி நளாயினிடம் ஏன் இவ்வாறு தினமும் என் வீட்டின் முன்பு செய்கிறாய் என்று கேட்கிறாள். நளாயினி கணவனின் நிலையையும் விருப்பத்தையும் கூறுகிறாள். பொன்னியும் சரி **வரச்சொல் உன் கணவனை** என்கிறாள்.தாசியிடம் சென்ற மவுக்கல்யர், தனது மன்மத ரூபத்தை வெளியில் சொன்னால், உன் தலை சுக்கலாக வெடித்து சிதறிவிடும் என்கிறார். எனவே தாசி அதனை யாரிடமும் கூறாமல் மறைத்து விடுகிறாள்.

தாசியுடன் இருந்துவிட்டு திரும்பிய பின்பு கணவனின் நோய் குணமாகி இருக்கிறதா? என்று நளாயினி தடவிப் பார்த்தாள். ஆனால் குணமாகவில்லை. மீண்டும் விடிவதற்குள் குற்றாலம் சென்று குற்றாலீசுவரரை வழிபட்டால் நோய்தீரும் என்றார் மவுக்கல்யர். எனவே கணவன் உயிரைக் காக்க கணவனைக் கூடையில் சுமந்தவாறு ஓடோடி வரும்போது, முனிவரின் சூழ்ச்சியால் காற்றும் பெருமழையும் அடிக்கிறது. அதைப் பொருட்படுத்தாமல் தனது உடம்பில் கணவனின் உடலில் உள்ள புழுக்கள் நெளிவதையும் பொருட்படுத் தாமலும் ஓடோடி வருகிறாள். இருட்டில் ஓடிவரும்போது கழுவில் ஏற்றப்பட்ட மாண்டவியர் எனும் முனிவரின் கழுவில் கால் தட்டுகிறது. அவர் வலிதாளாமல் கோபம் கொண்டு நாளை சூரியன் உதயமானால் உன் கணவன் இறந்துபோவான் என்று சாபமிடுகிறார். நளாயினி மன்னிப்பு கேட்டும் முனிவர் மனம் இரங்கவில்லை. உடனே கோபம் கொண்ட நளாயினி நான் ஒரு ஆடவருக்கு கை கொடுத்து, அவரையே தெய்வமென்று வணங்கி, அவர் வார்த்தைக்கு கீழ்படிந்து வணங்கி வாழும் ஒரு கற்புடையவளானால் சூரிய பகவானே நீ உதிக்காமல் இருக்கக் கடவது என்று சபித்தாள். உலகமே சூரியன் உதிக்காமல் சூன்யமானதால் சிவன், விஷ்ணு, பிரம்மா மற்றும் தேவர்கள் வந்து முனிவரையும் நளாயினியையும் சமாதானம் செய்தனர். பின்பு இருவரும் சாபத்தைத் திரும்பப் பெறுகின்றனர். அப்போது மவுக்கல்யர் சுயரூபம் எடுக்கிறார். சுயரூபம் எடுத்து பெண்ணே ஆடவரை நீ குறை கூறியதால் தான் நான் இவ்வளவு

நாடகத்தையும் நடத்தினேன். இப்பிறவியில் உனக்கு நான் இன்பம் தரவில்லை. அடுத்த பிறவியில் ஐந்து பேராக (தர்மன், அர்ச்சுனன், பீமன், நகுலன், சகாதேவன்) வந்து இன்பம் தருகிறேன் என்றார். நளாயினியும் மகிழ்ச்சியாக முனிவரின் பக்கத்தில் அமர்கிறாள். பின்னர் சிவன் பார்வதி தேவியருடன் கைலாய மலையில் போய் அமர்கின்றனர்.

நளாயினி கதை ஒரு புராணக் கதைப்பாடல் வகையைச் சார்ந்தது. பத்தினியாக வாழ்ந்து பேருபெற்ற நளாயினி வரலாற்றைக் கதை எடுத்துரைக்கிறது. ‘கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன்’, ‘கணவனே கண்கண்ட தெய்வம்’ எனும் பழமொழிகளை வலியுறுத்தும் கதையாக அமைந்துள்ளது. கற்புநெறியும், ஒருவனுக்கு ஒருத்தி என்ற கோட்பாடும் வலியுறுத்துவதாக அமைந்துள்ளது. பத்தினிப் பெண்ணின் பெருமையினை எடுத்துரைக்கிறது.

**அனந்தாயி கீரிப்பிள்ளை கதையும்** ஒரு சமூகக் கதைப் பாடலாகவும் பெண்ணுக்குச் சொத்துரிமை வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்துவதாகவும் அமைகிறது. அரிகிருஷ்ணப் பார்ப்பானின் மனைவி அனந்தாயி. அவள் வீட்டில் வளர்த்த கீரிப்பிள்ளை, தனது குழந்தையைக் கடித்துக் கொன்று விட்டது என்று தவறாக எண்ணிக் கீரிப்பிள்ளையைக் கொன்று விடுகிறாள். ஆனால் பாம்பிடமிருந்து கீரிப்பிள்ளை குழந்தை யைக் காப்பாற்றியதைப் பின்பு அறிந்து கண்ணீர் விடுகிறாள். அந்தப் பாவம் தீர அரிகிருஷ்ணப் பார்ப்பான் தீர்த்த யாத்திரை செல்கிறான். அங்குப் பாம்புகடித்து இறந்து விடுகிறான். அரிகிருஷ்ணப்பார்ப்பான் இறந்ததும் அவனது உறவினர் அனந்தாயியையும் அவளது குழந்தையையும் வீட்டைவிட்டு விரட்டுகின்றனர். ஊர் வழக்காளி அதற்கு உதவி செய்கிறான். இதனால் மனம் உடைந்த அனந்தாயியும் குழந்தையும் தவமிருந்து வரம்பெற்று, சதிகாரர்களை அழித்து, பதினெட்டு மாரியம்மனாகப் பிறப்பெடுக்கின்றனர்.

அனந்தாயி கீரிப்பிள்ளைக் கதை தொன்மையான கீரிப் பிள்ளைக் கதையினை அடிப்படையாக வைத்துப் படைக்கப் பட்டுள்ளது. ஒவ்வொரு நாட்டுப்புறத் தெய்வத் தோற்றமும்

ஒரு புராணக் கதையினை அடியொற்றி அமைவதுபோல் மாரியம்மனின் தோற்றப்பாட்டிற்குக் கீரிப்பிள்ளைக் கதை பயன்படுத்தப்பட்டுள்ளது என்று தோன்றுகிறது. இக்கதைப் பாடல் நாகதோச நம்பிக்கை குறித்து வலியுறுத்துவதாகவும் அமைந்துள்ளது. மேலும் உயிர்களுக்குத் துன்பமிழைத்தால் அது பெரும்பாவம் என்றும் அதற்கான பலன்கிடைக்கும் என்றும் இயம்பப்பட்டுள்ளது. பத்தினி சாபம் பலிப்பதோடு பத்தினி தெய்வமாவாள் என்ற கருத்தையும் வலியுறுத்துவதா யுள்ளது. பதினெட்டு மாரியம்மனின் பிறப்பினைச் சுட்டுவதாய் இக்கதைப்பாடல் அமைந்துள்ளது. மேலும் அனந்தாயி கீரிப்பிள்ளை கதையின் முடிவில் மாரியம்மனுக் குரிய கும்மிப்பாட்டும் இணைக்கப்பட்டுள்ளது என்பது கவனத்திற்குரியது.

**நாககன்னி கதை** புராணக்கதைகளுள் ஒன்று. நாககன்னி தெய்வக்கன்னி இருவரும் அக்கா தங்கையர் இருவருடைய போட்டி மனப்பான்மையால் போட்டி நடத்தி, அதில் நாககன்னி கார்கோடன் உதவியுடன் தெய்வக்கன்னியை வெற்றிபெறுகிறாள். தோல்வியுற்ற தெய்வக்கன்னி அடிமை வேலை செய்து கண்ணீர் வடிக்கிறாள். சிவன் அவளுக்கு உதவக் கருடனைப் பிறவி செய்து கார்க்கோடனை அழிக்கிறார். பின்னர் சிவன் முப்புராதியர்களை அழித்த வரலாறு அமைகிறது. ஆனால் அக்கதை முடிவடையாமல் உள்ளது. நாககன்னிக் கதை முத்தாரம்மன் கதையின் கிளைக்கதையாகும். ஆனால் நாட்டுப்புற கவிஞர் அதனை தனிக்கதைப்பாடலாக உருவாக்கியுள்ளார்.

நாககன்னி கதை புராண மாந்தர் பெருமை கூறுவதாக அமைந்துள்ளது. மேலும் அக்காள் தங்கை இருவரின் போட்டி யினையும் பொறாமையினையும் அதனால் ஏற்படும் விளைவுகளையும் குறிப்பிடுகிறது. மேலும் சிவபெருமானின் பெருமையும் திருவிளை யாடலும் இணைத்துக் கதைப்பாடல் பாடப்பட்டுள்ளது.

**சித்திரபுத்திர நயினார் கதையும், அமராபதி கதையும்** சித்திரபுத்திர நயினாரின் பெருமையினையும் வழிபாட்டை யும் கூறுவதாக அமைந்துள்ளன. **சித்திரபுத்திர நயினார் கதை**

சித்திரபுத்திரநயினாரின் தோற்றம், பதவி ஏற்பு மற்றும் குற்றமிழைத்தவர்களுக்கு மேலுலகில் வழங்கும் தண்டனை, நல்லவர்களுக்கு வழங்கும் நற்பதம் ஆகியவற்றை எடுத் துரைக்கிறது. சித்திரபுத்திர நயினார் கதை மனிதன் வாழ்கை யில் நன்முறையில் வாழவேண்டும், இல்லை எனில் மேலுலகில் அதற்கான தண்டனை கிடைக்கும் என்று கூறுவதோடு, மனிதனை நல்லமுறையில் வாழவைக்க அறிவுரை வழங்குவ தாயும் அமைந்துள்ளது. சித்திரபுத்திர நயினாரின் கதைப்பாடல் சுவடியின் தொடர்ச்சியாக **அமராபதி கதை** அமைந்துள்ளது. இக்கதை சித்திரபுத்திர நயினார் நோன்பினையும் அதை மேற்கொள்வதால் அடையும் மேலுலகப் பதவியினையும் எடுத்துரைக்கிறது. அமராபதி எனும் செட்டிப்பெண் சித்திர புத்திரர் நோன்பினை மேற்கொள்ளாமல் அடைந்த இன்ன லையும் சித்திரபுத்திரர் நோன்பினை மேற்கொண்டபின் அடைந்த மேன்மையினையும் அமராபதி கதை எடுத் துரைக்கிறது.

**கஞ்சன்வதைக் கதை** எனும் கதைப்பாடல் கஞ்சனின் அழிவையும் கிருஷ்ணரின் பெருமையினையும் எடுத்துரைக் கிறது. இக்கதை மகாபாரதத்தின் கிளைக்கதை. மகாபாரதத்தின் கிளைக்கதை நாட்டுப்புற மரபில் பாடப்பட்டுள்ளது. கஞ்சன் பெற்ற சாபம், கிருஷ்ணனின் பிறப்பு மற்றும் லீலைகள் கதையின் பொருண்மையாக அமைந்துள்ளன. கஞ்சனின் மரணத்துடன் கதை முடிவடைவதால் கஞ்சன் வதைக் கதை என்று புலவர் பெயரிட்டிருக்கலாம் என்று தோன்றுகிறது. இக் கதைப்பாடலுக்கு '**ஸ்ரீ கிருஷ்ணன் கதை**' என்ற பெயரும் நிலவுகிறது. கதைப்பாடலை அகஸ்தீஸ்வரத்தைச் சேர்ந்த **கு. ஆறுமுகப் பெருமாள் நாடார்** பாடியுள்ளார்.

**பெருமாள் சுவாமி கதை** திருமால் ஸ்ரீ ரங்கத்திலிருந்து இடம் பெயர்ந்து திருவனந்தபுரம் வந்த வரலாற்றைக் கூறுகிறது. மேலும் திருவனந்தபுரத்தில் திருமாலுக்குக் கோயில் எழுப்பிய வரலாறும் கூறப்பட்டுள்ளது. திருமாலுடன் சங்கிலிப்பூதம், கேத்திரபாலன், காளி முதலிய தெய்வாரும் இடம்பெயர்ந்து வந்ததாகக் கதைப்பாடல் கூறுகிறது. இக்கதைப்பாடல் திருமாலின் பெருமையினை உலகிற்கு எடுத்துரைக்கும்

கதைப்பாடலாக அமைந்துள்ளது. இதனை இயற்றிய புலவர் **அருத(ன) குட்டி நாடார்.**

**நாலுமந்திரிகும்மி** போதவாதித்தன், போதவிபூஷணன், போதவியாகர்னன், போதசந்திரன் எனும் நான்கு மந்திரிகளின் மதி நுட்பத்தை வெளிக்காட்டும் வகையில் அமைந்துள்ளது. மதுரை மன்னன் அழகேசனைக் காப்பதற்காக மந்திரி போதவாதித்தன் எடுத்த முயற்சியில் சந்தர்ப்பச் சூழ்நிலையால் குற்றவாளியாகிறான். அழகேசன் அவனைத் தண்டிக்க முயலுகையில் மதிநுட்ப மிக்க மந்திரிகள் பல்வேறு நிகழ்வுகளாகிய நீதிக் கதைகளைக் கூறி மன்னனின் மனதைத் தெளிய வைக்கின்றனர். இறுதியில் மன்னன் மந்திரி போதவாதித்தன் குற்றமற்றவர் என்று விடுதலை செய்வதாகக் கதை அமைகிறது. இக்கதை ஊழ்வினையும் சந்தர்ப்பச் சூழ்நிலையும் ஒருவனைக் குற்றவாளியாக்கி தண்டனை பெற்றுத் தந்துவிடும் என்று அறிவுறுத்துகிறது. இது கும்மிப் பாடல் வகையில் கதை தழுவிய நிலையில் அமைந்துள்ளது. நாலு மந்திரி கும்மியை இயற்றியவர் **சின்னதம்பி ஐயர்** ஆவார்.

**வள்ளித்திருமணம் கதை** ஒரு புராணக் கதைப்பாடல் ஆகும். அதாவது, நம்பி எனும் வேடர்குலத் தலைவன் சிற்றூர் எனும் பகுதியை ஆண்டு வருகிறான். அவன் மனைவியின் பெயர் மோகினி. இவர்களுக்கு ஏழு ஆண் குழந்தைகள் பிறந்தன. ஆனால் ஆசையாய் வளர்க்க ஒரு பெண் குழந்தை இல்லாமல் மனம் வாடினர். ஒருநாள் நம்பி காட்டில் வேட்டையாடும் பொழுது வள்ளிக்கிழங்கெடுத்த ஒரு குழியில் பெண்மகவு ஒன்றைக் கண்டெடுத்து மனைவியிடம் கொடுத்து வளர்க்கு மாறு கூறினான். வள்ளி பருவவயதை அடைந்தபொழுது தினைப்புனக் காவலுக்கு அனுப்பப்படுகிறாள். தினைப் புனத்தில் வள்ளியைக் கண்டு நாரதர் உனக்கான மணவாளன் முருகப்பெருமான் தான் எனக் கூறுகிறார். வள்ளி கோபமடைந்து நாரதரை விரட்டியடிக்கிறாள். நாரதர் முருகப்பெருமானிடம் சென்று வள்ளியினுடைய அழகினைக் கூறி, முருகனின் மனதில் ஆசையைத் தூண்டிவிடுகிறார்.

முருகன் வேடனாக வேடம் தரித்து வள்ளியிடம் சென்று திருவிளையாடல் நடத்துகிறார். வள்ளி அண்ணன்மார்களை அழைக்க முருகன் மறைந்துவிடுகிறார். பின்பு வளையல் செட்டி

வேடமிட்டும் வயதான முதியவர் வேடமிட்டும் திருவிளை யாடல் நடத்துகிறார். வள்ளி அண்ணன்மார்களை அழைக்க முருகன் மறைந்துவிடுகிறார். பின்னர் கணபதியின் துணை யுடன் வள்ளியைத் திருமணத்திற்கு சம்மதிக்க வைத்து மறைந்து விடுகிறார். வள்ளி உண்மை நிலையைப் புரிந்து அழுது புலம்புகிறாள். முருகபெருமான் காட்சியளித்து கந்தர்வமணம் செய்து கொள்கிறார். அப்போது அங்கு வந்த நாரதரிடம் வள்ளி மன்னிப்பு கோருகிறாள். பின்பு அங்கு வந்த வள்ளியின் சகோதரர்கள் முருகனுடன் மோதி மடிகின்றனர். வள்ளியின் வேண்டுதலை ஏற்று மீண்டும் அவர்களை உயிர்பிக்கிறார் முருகன். அதன்பின்பு இருவரும் விடைபெற்று செந்திலம் பதியை அடைகின்றனர்.

இக்கதையினைத் தொடர்ந்து வள்ளி தெய்வானை ஏசல் பகுதி தனியாக அமைந்துள்ளது. வள்ளி தெய்வானை ஏசல் தனியாகப் படைக்கப்பட்ட கதைதழுவிய பாடலாகும். அதில் முருகப்பெருமான் வள்ளியை மணமுடித்து தனது வீட்டிற்கு அழைத்துச் செல்கிறார். அங்கு வள்ளிக்கும் தெய்வானைக்கும் வாக்குவாதம் நடக்கிறது. இறுதியில் முருகப்பெருமான் இருவரையும் சந்துசெய்து ஒற்றுமையாக வாழவைக்கிறார். வள்ளித்திருமணம் கதையை இயற்றியவர் மாரிமுத்துப் புலவர் ஆவார். மாரிமுத்துப் புலவர் வள்ளித் திருமணம் கதையை இசைப்பாடலுடன் அமைத்துள்ளார். பாடல்கள் முத்து கிருஷ்ணன் என்பவரின் இசைப்பாடல்களை அடிப் படையாகக் கொண்டது என்ற செய்தியும் கதைப்பாடலில் கூறப்பட்டுள்ளது.

புராணங்கள் மனித சமுதாயத்தின் தனியுரிமைப் பத்திரம் என்பார் இ.பி.டைலர். மாலினோவஸ்கி இவை மனிதனின் தொடக்க நிலைகளைப்பற்றியும் தோற்றங்களைப்பற்றியும் கூறுவன. நடந்த நிகழ்ச்சிகளைக் குறிப்பன. அவற்றில் காணும் பாத்திரங்கள் கற்பனையாக இருக்கும் என்பார். மார்ஸ்முல்லர் ஒவ்வொரு புராணமும் ஏதோ ஓர் உண்மையைக் கூற விழைகிறது. அது அடுக்காக அமைந்த பல்வேறு செய்திகளை எல்லாம் அகற்றிக்கொண்டே வந்தால் செய்தியாகிய உண்மை

இறுதியில் கிடைத்துவிடும் என்று குறிப்பிடுகிறார் (சு.சண்முகசுந்தரம், நாட்டுப்புறவியல், ப.263).

மிகப்பழமையும் தொன்மையும் வாய்ந்தவற்றைப் புராதனம் என்பர். எனவே புராதனம் வாய்ந்த நூற்களைப் புராண நூல்கள் என்று கூறுதலும் உண்டு. புராணம் என்பதைப் புராதனம் என்பதோடு பழமையான வரலாறு என்னும் பொருளிலும் வழங்கலாம் என்பார் சு.சண்முக சுந்தரம்.

தமிழில் முதலில் தோன்றிய புராணம் திருத்தொண்டர் புராணம் ஆகும். புராணம் பற்றிச் சிதம்பரப் பாட்டியல் இலக்கணம் கூறுகிறது. கடவுளரின் பராக்கிரமங்களைக் கூறுதல், தல மகிமை கூறுதல், அடியவர் பெருமையைப் பாடுதல், சாதிப் பெருமையைச் சாற்றுதல், தலைவர்களின் வரலாற்றைப் பேசுதல் என்ற வகையில் தமிழ்ப் புராணங்கள் அமைந்துள்ளன.

கந்தப் புராணத்தினுடைய ஒரு பகுதியே வள்ளித் திருமணமாகும். இக்கதையும் வடமொழியில் இருந்துதான் மொழிபெயர்க்கப்பட்டதாகத் தெரிகிறது. கந்தபுராணம், இது மகாபுராணங்கள் பதினெட்டனுள் ஒன்று. இது லக்ஷம் கிரந்தமுடையது. இது தத்புருஷ கற்பத்தில் நடந்த சம்பவங் களையும் கந்தமூர்த்தி தோற்றம், சூராதிகள் ஒடுக்கம் முதலியவற்றையும் விவரித்துக் கூறும். இதிற் சங்கர சங்கிதையைக் கச்சியப்ப சிவாச்சாரியர் தமிழில் மொழிபெயர்த்தார். (அபிதான சிந்தாமணி, ப.405)

கந்த புராணத்தை கச்சியப்ப சிவாச்சாரியர் தமிழில் மொழிபெயர்த்த பின்பு மிகப்பெரிய செல்வாக்குப் பெற்றுள்ளது. தமிழகத்தில் அரிச்சந்திர புராணம், கந்த புராணத்தில் வள்ளித் திருமணம் சருக்கம் முதலியன மிகப் பிரபலம். ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில் வள்ளித் திருமண நாடகம் சுதந்திர உணர்வை மக்களுக்கு ஊட்டும் ஊடகமாகச் செயல்பட்டது.

வள்ளித் திருமணம் கதை மக்களிடம் பெற்ற செல்வாக்கு அளப்பரியது. எனவே இதனை அடியொற்றியே வள்ளித்

திருமணம் கதை என்பது வில்லுப்பாட்டாகப் பாடப் பெற்றிருக்க வேண்டும் எனத் தெரிகிறது.

வள்ளித் திருமணம் கதையின் கரு குறிஞ்சிப்பாட்டு தலைவன் தலைவியினுடைய காதலை எடுத்துரைப்பது போல் அமைந்துள்ளது. எனவே இதன் அடிப்படையில் பார்க்கின்ற பொழுது கந்தபுராணத்தில் வரும் வள்ளித் திருமணம் கதை தமிழ் செவ்விலக்கியம் சார்ந்தது என்று தோன்றுகிறது. இது குறித்தச் செய்தியை வள்ளித்திருமணம் குறிஞ்சிப்பாட்டு ஒப்பாய்வு என்ற நூலில் கண்டு கொள்க.

வள்ளி தெய்வானை ஏசல் என்பது வள்ளித் திருமணம் கதையின் அடுத்த நிலையைக் கூறுவதாக அமைந்துள்ளது. வள்ளித் திருமணம் கதையின் முடிவிற்கு பின்பு என்ன நிகழ்ந் திருக்கும் என்ற வில்லிசைப் புலவரின் எண்ணவோட்டத்தின் விளைவாக வள்ளி தெய்வானை ஏசல் தோன்றியதாகக் கொள்ளலாம். வள்ளி தெய்வானை ஏசலை எழுதிய ஆசிரியர் பற்றிய குறிப்புகள் பாடலில் காணப்படவில்லை.

**கோவலன் கதை** கோவலன், கண்ணகி, மாதவி ஆகிய மூவருடைய வரலாற்றை எடுத்துரைக்கிறது. தனது பக்தனைக் கொன்ற மதுரை பாண்டியர்களை வேரறுக்க மாகாளி கண்ணகியாகப் பிறந்து பாண்டியர்களைப் பழிதீர்ப்பதாகக் கதை அமைகிறது. கோவலன் கதை எனும் நாட்டுப்புறக் கதைப்பாடல் சிலப்பதிகாரக் கதை அமைப்பு நிலையிலிருந்து சற்று மாறுபட்டு அமைந்துள்ளது. கண்ணகியைக் கோவலன் மணமுடித்த அன்றே மாதகி கோவலனை அழைத்துச் சென்றுவிடுகிறாள். கண்ணகி பருவம் அடைந்த பின்னர், கழுத்தில் தாலி இருக்க, தனது மாமியாரிடம் விபரம் கேட்டுத் தெரிந்து கொண்டு, தாசி மாதகியிடம் சிக்கிய கோவலனை மீட்கத் தான் இறந்ததாக நாடகமாடுகிறாள். கோவலன் மாதகியிடம் இறப்பு நிகழ்வுக்குச் சென்று வரஅனுமதி கேட்கிறான். இதனால் கோபம் கொண்ட மாதகி கோவலனைக் கொலை செய்ய முயல்கிறாள். கோவலன் கண்ணகியை வணங்கி அதிலிருந்து தப்பிக் கண்ணகியிடம்

வந்து சிலம்பு விற்க மதுரைக்குச் சென்று இறக்கிறான். இக் கதைப்பாடலில் கோவலனைக் கள்வனாக்கிய வஞ்சிப்பத்தன் கதைக்கூறு, மாதகி உடன்கட்டை ஏறிய கதைக்கூறு, கண்ணகி, மாதகி கோவலன் அஸ்தியைக் காசி மற்றும் கங்கையில் கரைப்பது முதலிய பல கூறுகள் சிலப்பதிகாரக் கதையிலிருந்து முரண்பட்டு அமைகின்றன.

கோவலன் கதையினை நாட்டுப்புற மரபின் அடிப்படையில் பார்க்கின்றபொழுது **சிலப்பதிகாரக் கதை** கற்பனை சேர்த்து படைக்கப்பட்டதோ என்று எண்ணத் தோன்றுகிறது.

**பார்வதியம்மன் கதை** சிவன் பார்வதிக்கு மறைபொருளை உணர்த்திக் கொண்டிருக்கின்றபொழுது வேலவர் அதனை வண்டுருவில் பார்வதியின் கூந்தலில் மறைந்திருந்து கேட்டு விடுகிறார். இதனை அறிந்து சிவன் இருவருக்கும் சாபம் கொடுக்கிறார். பார்வதி மீனவர் தலைவன் அதியரசன், அருணவல்லி தம்பதிக்கு மகளாகப் பிறக்கவும், முருகன் கடலில் மகரமாகப் பிறக்கவும் சபிக்கிறார். பார்வதி எங்களுக்கு எப்போது சாபவிமோசனம் கிடைக்கும் என்று கேட்கிறாள். அதற்கு சிவன் நீ வளர்ந்து பருவமங்கையாகும்போது கடலில் மகரமாக கிடக்கும் முருகனைக் கரையேற்றி உன்னை மணஞ்செய்து கொள்வேன் என்கிறார்.

சிவனின் சாபப்படி பார்வதி அதியரசன் மகளாக வளர்ந்து பருவவயதை அடைகிறாள். கடலில் தொந்தரவு செய்யும் மகரம் குறித்து மீனவர்கள் அதியரசனிடம் முறையிடுகின்றனர். அதியரசன் கடலில் தொந்தரவு செய்யும் மகரத்தைப் பிடிப்பவர்க்கு எனது மகளை மணமுடித்துத் தருகிறேன் என்று அறிவிக்கின்றார். உடனே சிவன் சன்னியாசி வேடம் பூண்டு வந்து மகரத்தைப் பிடித்துக் கொண்டு வருகிறார். பார்வதி ஆண்டி சன்னியாசியை மணமுடிக்க விரும்பாமல் உயிரை விடுகிறாள். சிவன் பார்வதியின் உயிர் மீட்டு மணம் செய்து கொள்கிறார். பின்பு அதியரசனுக்கு வரம் நல்கி கயிலைக்குத் திரும்புகிறார்.

பார்வதியம்மன் கதை பார்வதியம்மன் பிறப்பு வரலாற்றைக் கூறுவதாய் அமைந்துள்ளது. பார்வதியம்மன் கதை பரதவர்கள் கிறித்தவர்களாக மாறுவதைத் தடுக்கப் படைக்கப்பட்ட கதையாகத் தோன்றுகிறது. பார்வதியம்மன் கோயில் கன்னியாகுமரி, திருநெல்வேலி, தூத்துக்குடி ஆகிய மாவட்டங் களில் காணப்படுகிறது. இக்கோயில்களில் கொடைவிழா நடை பெறும்போது பார்வதியம்மன் கதை வில்லுப்பாட்டாகப் பாடப்படுகிறது.

கன்னியாகுமரி மாவட்டத்தில் இலந்தையடி தட்டு, தொல்லை விளை, அகஸ்தீசுவரம் முதலிய ஊர்களில் பார்வதி கோயில் காணப்படுகிறது. இவ்வூர்களில் பார்வதி தனியாக விளங்காமல் துணைத் தெய்வங்களோடு வீற்றிருக்கின்றாள். தொல்லைவிளை என்னும் ஊரிலுள்ள பார்வதியம்மன் கோயில் பார்வதி தலைமைத் தெய்வமாகவும், துணைத்தெய்வங்களாகச் சிவன், பெருமாள், பொய்ப்பெண், புதுப்பெண், சுடலை மாடன், காலன், சாமக் கொடைக்காரன், பட்டாணித்துரை, இனப்பலிமாடன் எனும் தெய்வங்கள் காணப்படுகின்றன. இலந்தையடிதட்டு, அகஸ்தீசுவரம் ஆகிய ஊர்களில் பார்வதி தலைமைத் தெய்வமாகவும் சிவன், பெருமாள் துணைத் தெய்வங்களாகவும் உள்ளனர். எந்தக் கோயிலிலும் அதியரசனுக்கோ, அருணவல்லிக்கோ பீடம் இருப்பதாகத் தெரியவில்லை என்று சிவ.விவேகானந்தன் தெரிவிக்கிறார்.

அபிமன்னன் கதை அத்தினாபுரத்தை துரியோதனன் ஆண்டு வருகிறான். அதே வேளையில் இந்திரபிரஸ்தத்தை பஞ்ச பாண்டவர்கள் ஆண்டு வருகின்றனர். அப்படி அவர்கள் ஆண்டு வரும் நாளையிலே துரியோதனன் சூழ்ச்சி மூலம் தருமனை சகுனியோடு சூதாட வைத்து, நாடு நகரங்களை எல்லாம் பறித்துக் கொள்கிறான். மேலும் பன்னிரெண்டு ஆண்டு வனவாசமும் ஒராண்டு அஞ்ஞாத வாசமும் முடித்து வந்தால் நாட்டைத் திருப்பித் தருகிறேன் என்று கூறுகிறான். ஆனால் முன்னர் கூறியபடி நாட்டைத் திருப்பித்தர மறுக்கிறான் துரியோதனன். இதனால் பாரதப்போர் மூளுகிறது. பாரதப்போரில் பதிமூன்றாம் நாள் போரில் துரியோதனன்

சக்ரவியூகம் அமைத்து பாண்டவரை அழிக்க முடிவு செய்கிறான். இதனை அறிந்த தர்மன் கண்ணனிடம் காத்தருள வேண்டுகிறான். அதற்குக் கண்ணன் தர்மா இன்றைக்கு போர்க்களத்திற்குச் சென்று நீ போரிடக் கூடாது. மற்ற நால்வரும் திசைக் கொருவராய் சென்று போரிடவேண்டும். அவ்வாறு செய்தால் இன்றைய போரில் நீங்கள் வெற்றி பெறலாம். என்கிறார்.

அதேவேளை கண்ணபிரான் மனத்திற்குள் இன்றைய போரில் அர்ச்சுனன் மகன் அபிமன்னன் இறக்கவேண்டும்; பரம சிவனிடம் நான் அடகு வைத்த சக்கரத்தை மீட்க வேண்டும் என்று எண்ணுகிறார்.

தர்மனுக்கு பதிலாகத் திருஷ்ட தூய்மன் போர்க்களத்தில் துரோணரை எதிர்த்து தோல்வியடைந்து பாசறைக்குத் திரும்புகிறான். எனவே, தர்மரைக் காக்க அபிமன்னன் போர்க்களம் செல்கிறான். போர்க்களத்தில் துரோணரையும் அஸ்வத்தாமனையும், கர்ணனையும் அபிமன்னன் புறமுது கிட்டு ஓடவைக்கிறான். சகுனியின் மகன் காளிகேயனைக் கொன்று ஏனைய புதல்வர்களையும் விரட்டியடிக்கிறான். அதன்பின் போரிட வந்த துரியோதனனின் மகன் லக்கண குமாரனையும் கொல்கிறான். இதனால் துரியோதனன் மிகவும் கவலை கொள்கிறான். அப்போது அங்கு வந்த சிந்துதேசத்து அரசன் செயத்தரசன் நான் அபிமன்னனைக் கொன்று வருகிறேன் என்று கூறிவிட்டு போர்க்களத்திற்கு வந்து, துரோணர், கர்ணன் ஆகியோருடன் மோசப்போர் செய்முறையைக் கூறி, அதன்படி போர் செய்து அபிமன்னனை வீழ்த்தி, இறுதியில் அபிமன்னனை செயித்தரசன் சிகரதண்டத்தால் அடித்துக் கொன்று விடுகின்றான். அனைவரும் அழுது புலம்புகின்றனர். அர்ச்சுனனும் அழுது புலம்பி கோபம் கொண்டு நாளை அந்திப்பொழுதுக்குள் செயித்தரசனைக் கொல்வேன் என்று வஞ்சினம் கூறி பாசறையில் போய் அமர்கிறான் என்று கதை முடிகிறது.

காலசுவாமி கதை இயமதர்மனின் புகழையும் மார்க்கண்டேயனின் வரலாற்றையும் எடுத்துரைகிறது. கால சுவாமி கதையை **மார்க்கண்டேயன் கதை,** என்றும் குறிப்பிடுகின்றனர். மிருகண்டர், மருத்வதி தம்பதியினர் குழந்தை வேண்டி தவமிருக்கின்றனர். அப்போது, சிவன் மனதிரங்கி சப்பாணி, நோயுள்ள குழந்தை என்றால் நூறுவயது வரை வாழும். அறிவுடைய நல்ல குழந்தை என்றால் பதினாறு வயதுவரை வாழும்.எந்தக் குழந்தை வேணும் என்கிறார். மிருகண்டர், மருத்வதி தம்பதியினர் பதினாறு வயதுவரை வாழும் குழந்தையே போதும் என்கின்றனர். சிவனும் அப்படியே வரம் நல்குகிறார். குழந்தை மார்க்கண்டேயன் மிகுந்த சிவபக்தனாக விளங்குகிறான். எப்போதும் சிவ நாமத்தை உச்சரிப்பதையே பெரும்பேறாகக் கருதி வாழ்ந்து வருகிறான்.

இந்நிலையில் அவனுக்கு பதினாறு வயது நிறைவு பெற்றதால் எமதர்மன் உயிரைப் பறிக்க வருகிறான். மார்க் கண்டேயன் எமதர்மனை அருகில் வராதே என மிரட்டு கிறான். எனவே எமதர்மன் கோபத்துடன் பாசவலையை வீசுகிறான். மார்க்கண்டேயன் சிவநாமத்தை உச்சரித்து சிவலிங்கத்தை இறுக அணைத்துக் கொள்கிறான். இதனால் பாசக்கயிறு சிவலிங்கத்தையும் சுற்றிக்கொள்கிறது. இயமன் பாசக்கயிற்றை இழுத்தபோது மார்க்கண்டேயனுக்காக இரங்கிய சிவன் கோபம் கொண்டு எமதர்மனை உதைத்துக் கொன்று விடுகிறார். இயமதர்மன் இறந்ததால் உயிர்கள் மரணமில்லாதிருந்தன.

பூமி பாரம் அதனால் அதிகரித்தது. எனவே பூமாதேவி அப்பாரத்தினைத் தாங்கமுடியாமல் திருமாலிடம் முறையிடுகிறாள். அதனைத், திருமால் சிவனிடம் எடுத்துரைக்கிறார். சிவனும் இயமதர்மனை மன்னித்து உயிரெழுப்பி வரம்தருகிறார். எமதர்மன் எமபுரிக்குச் சென்று மீண்டும் உயிர்களைப் பிடிக்கும் தொழிலைச் செய்கிறான். அதனால் பூமியின் நிலைமை சீரடைந்தது. மார்க்கண்டேயன் புகழ் அவனியில் பரவியது.

மார்க்கண்டேயன் கதை ஒரு பழம் புராணக் கதை. இப் பழம்புராணத்தை வடமொழியில் மார்க்கண்டேய புராணம் எனும் பெயரில் பாடப்பெற்று பதினெண் புராணங்களுள் ஏழாவதாக அமையுமாறு தொகுக்கப் பெற்றுள்ளது. தமிழில் தேவாரம் தொடங்கி பிற சைவத் திருமுறைகளிலும் சிவபெருமானை நாயகனாகக் கொண்டு எழுந்த பக்தி இலக்கியங்களிலும் இப்பழம் புராணக்கதை நிகழ்ச்சிகள் சிவநெறிச் செல்வர்களால் சுட்டப்பட்டுள்ளன. இக்கதை, தனி நூல்களாகவும் எழுந்துள்ளது. பாடல்களாலும் உரைநடை யாலும் இவ்விரண்டும் அமைந்த நாடகங்களாகவும் இக்கதை எழுந்துள்ளது. பாமரர்களும் இக்கதையினை நாட்டுப்புறக் கலைஞர்கள் கூறக்கேட்டு இன்புற்றுள்ளனர். இவ்வாறு கூறப்பெற்ற கதை பனையோலைச் சுவடிகளில் இன்று கிடைத்து வருகின்றன.

சன்மார்க்க அன்பர் தொழுதூர் வேலாயுத முதலியார் வடமொழியில் முப்பத்திரண்டாயிரம் கிரந்தமுடைய மார்க்கண்டேய புராணத்தைத் தமிழில் மொழிபெயர்த்து உரைநடையில் தந்துள்ளார்.

தனிப்புராணமாக மார்க்கண்டேயன் கதை அமைந்தாலும் பிற புராணங்களிலும் அக்கதை எடுத்தாளப்பெற்றுள்ளது. சான்றாக வடமொழி கந்தபுராணத்தில் நான்காவது பாகமாக மார்க்கண்டேயன் சரித்திரம் இடம்பெற்றுள்ளது. இதன் தழுவலான கந்தபுராணத்தைப் பதிப்பித்த ஆறுமுகநாவலர் இக் கதையை மட்டும் எடுத்துத் தனி நூலாக வெளியிட்டுள்ளார். வடமொழிப் புராணத்தைத்தழுவி மார்க்கண்டேயர் புராணம் எனும் தலைப்பில் தமிழ்ப்புராண அமைப்புடன் குழந்தை வேலுக்கவிராயர் என்பவர் ஒரு நூல் இயற்றியுள்ளார். மார்க்கண்டேயன் காஞ்சி எனும் பெயரில் ஒரு நூலிருந்து மறைந்துபோனதாக மு. அருணாசலம் குறிப்பிடுகிறார்.

மார்கண்டேயன் விலாசம் எனும் நூல் வடலூர் வெங்கடராம உபாத்தியாயரால் ஐந்தாம் பதிப்பாக 1867-இல் பதிக்கப்பட்டுள்ளது. மார்கண்டேயன் கதை நாடகமாக இரு

பாகங்களில் கி.பி.1867-இலும், 1875-இலும் வெளிவந்துள்ளது. மார்க்கண்டேயர் சங்கீதசார ஒயிற்கும்மி எனும் பெயரில் கும்மி மெட்டில் 304 செய்யுள் மூலத்துடன் மார்கண்டேயன் கதை அப்பாவு முதலியாரால் கி.பி.1887-இல் வெளியிடப் பட்டுள்ளது. மார்கண்டேயன் கதைப்பாடல் சுவடிகள் மார்கண்டேயன் அம்மானை, மார்கண்டேயன் தவநிலை, மார்கண்டேயன் கதை என்பன போன்ற வடிவங்களிலும் கிடைக்கின்றன என முனைவர் ஆ.தசரதன் குறிப்பிடுகிறார்.

மார்கண்டேயன் கதையின் (காலசுவாமி கதை) காலம் கி.பி.16 ஆம் நூற்றாண்டின் இறுதியிலோ அல்லது கி.பி.17-ஆம் நூற்றாண்டின் முதலிலோ இயற்றப்பெற்ற இக்கதைப்பாடல் பின்பு ஓலைச்சுவடிகளிலும் எழுதிவைக்கப் பெற்றிருக்கலாம் என்று கருத இடமுண்டு. ஆனால் 18 அல்லது 19 நூற்றாண்டில் இக்கதைப்பாடல் பாடப்பெற்றது எனச் சிலர் கூறுவர். மார்க்கண்டேயன் கதையை இயற்றியவர் **நல்ல கூத்தன்** என்பவர் என்றும் முனைவர் ஆ.தசரதன் குறிப்பிடுகிறார் (மார்க்கண்டேயன் கதைப்பாடல், பக்.1-33). ஆனால் காலசுவாமிகதை, வெங்கலராசன் கதை, சித்திரபுத்திர நயினார் கதை, அமராபதிகதை ஆகிய கதைப்பாடல்களின் மொழிநடையினை அடிப்படையாக வைத்துப் பார்க்கின்ற பொழுது இக்கதைப்பாடல்களை இயற்றியவர் ஒருவரோ எனத் தோன்றுகிறது. வெங்கலராசன் கதைப்பாடலை இயற்றிய **ஆறுமுகம் நாடாரே** காலசுவாமி கதைப்பாடலை பாடியிருக்க லாம் என்றும் எண்ணத்தோன்றுகிறது.

**முத்தாரம்மன் கதை** தென்மாவட்டத்தில் பரவலாக வழிபடப்படும் நாட்டுப்புற பெண் தெய்வத்தின் வரலாற்றை எடுத்துரைக்கிறது. சம்புத் தீவுக்கு அப்பால் ஏழு கடலுக்கு அடுத்துள்ள சொர்ண பூமியில் கமலையென்ற திருச்சுனையின் அருகில் மாணிக்கப் புற்று ஒன்று இருந்தது. அதில் இருந்த நாகம் ஒரு அமுத கலசத்தை ஈன்றது. நஞ்சுடைய பாம்பு ஈன்ற அமுதக் கலசத்தில் இருந்து ஏழு அரக்கியர் தோன்றினர். இவர்களுக்கு நீலன், குமுதன், ஆதித்தன் என்ற முப்புராதியர்

பிறந்தனர். ஆனால் அரக்கியர்கள் குழந்தைகளை வளர்க்காமல் காட்டில் விட்டு விட்டு மறைந்து விடுகின்றனர்.

சக்தி முனி வளர்த்த வேள்வியின் புகை மண்டிட அதனை நீக்க வருகிறாள் பார்வதி. ஆனால் வேள்விப் புகையால் விளைந்த வேர்வையை வழித்தெறிய அவ்வேர்வை முத்திலிருந்து முத்தாரம்மன் தோன்றுகிறாள். அவ்வாறு தோன்றிய முத்தராம்மனை முப்புராதியர்க்குத் தாயாக, தெய்வமாக அனுப்புகிறாள் ஈஸ்வரி. முத்தராம்மனும் காண்டாபுரக் காடழித்து, முப்புரக் கோட்டையமைத்து முப்புராதியருடன் சிறப்புடன் வீற்றிருக்கிறாள். அவ்வாறு வீற்றிருக்கும் பொழுது முப்புராதியர்களும் அவர்களின் புதல்வர்களும் தேவர்களுக்குத் தொல்லைக் கொடுத்தனர். தேவர்கள் அதனைத் திருமாலிடம் கூறினர். திருமால் தேவர்களின் துயரைத் தீர்க்க முயல்கிறார். ஆனால் அதனை முப்புராதியரும் அவரின் புதல்வர்களும் முறியடிக்கின்றனர். இறுதியில் முப்புராதியரும் அவரின் புதல்வர்களும் முறியடிக்கப்படுகின்றனர். சிவன் முப்புரம் எரிக்க வில் எடுத்து வந்து இறுதியில் வில்லினைக் கீழே போட்டுவிட்டு கை கொட்டிச் சிரிக்க அப்போது தோன்றிய நெருப்பில் முப்புரம் எரிந்து சாம்பலாகிறது. இதனை அறிந்த முத்தாரம்மன் சிவனிடம் முறையிடுகிறாள். சிவன் அம்மனை சமாதானம் செய்து முப்புராதியர்களை உயிரெழுப்பி வரம் தருகிறார். முத்தாரம்மன் மனிதர்கள் மேல் விதைப்பதற்குப் பல்வேறு வகையான வித்துக்களை வரமாகப் பெற்று பூலோகம் வந்து பூசை பெற்று அமர்கிறாள்.

முத்தாரம்மன் கதையில் வரும் முப்புரம் எரித்த கதை சங்க இலக்கியங்களிலேயே காணப்படுகின்றன.

ஒருகணை கொண்டு மூவெயில்உடற்றி (புறம்.552)

எயிலெரி யூட்டிய வில்லன் (பதிற்.(கடவுள் வாழ்த்து) வரி:3)

தேறுநீர் சடைக்கரந்து திரிபுரந்தீ மடுத்து

(கலி. (கடவுள் வாழ்த்து) வரி:2)

கடந்தடு முன்பொடு முக்கண்ணான் மூவெயிலு
மூடன்றக் காண் முகம் போல (பாலைக்கலி.1:4-5)

இச்செய்திகள் மூலம் முப்புரமெரித்த செய்தி சங்ககாலத்திற்கு முன்னரே மக்கள் மத்தியில் பரவலாக வழங்கப்பட்டு வந்திருக்கின்றது என்பது தெளிவாகின்றது. பழமையான முப்புரமெரித்தச் செய்தி முத்தாரம்மன் கதையுடன் நெருங்கிய வகையில் இணைத்துப் பாடப்பட்டுள்ளது என்பது புலனாகிறது.

முத்தாரம்மன் தெய்வமாகப் படைக்கப்பட்டு வணங்கப் பட்டிருக்கின்றாள். மூன்று மன்னர்கள் வணங்கும் தாய்த் தெய்வம் என்பதுணர்த்தவும் மூவரையும் மூவரின் முப்புரத்தையும் காப்பவள் என்ற அடிப்படையிலும் ஒருடல் மும்முகம் அமைந்த தெய்வ வடிவாக முத்தாரம்மனைப் படைத்து வணங்கியிருக்கின்றனர். இத்தெய்வ வழிபாடு பின்பு தமிழகம் முழுவதும் பரவி வழிபாட்டினைப் பெற்றுள்ளது.

முத்தாரம்மனுக்கு முத்தாலம்மன், முத்தாளம்மன், முத்தியாலம்மன், மாரியம்மன், முத்துமாரியம்மன், முத்துமாலையம்மன், முத்துமாலை நங்கையம்மன், முத்தம்மன், சின்ன முத்தம்மன், பெரிய முத்தம்மன், சின்னம்மன், பெரிய அம்மன், சொரிமுத்தம்மன் என்ற பல பெயர்கள் வழக்கிலுள்ளன என்று முனைவர் சூ.நிர்மலாதேவி குறிப்பிடுகிறார் *(முத்தாரம்மன் கதை, ப.249)*.

**பொன்னிறத்தாள் கதை** பொன்னிறத்தாள் என்னும் பெண்ணின் படுகொலை நிகழ்வை மையமிட்டு அமைந்துள்ளது. கடையம் எனும் ஊரில் வடுகர் குலத்தில் பிறந்த பொன்மாரியை அணஞ்சபெருமாள் என்பவர் மாலையிடுகிறார். அவர்களுக்கு ஏழு ஆண் குழந்தைகள் பிறந்த பின்பு, தவமிருந்து ஒரு பெண் குழந்தையைப் பெற்றெடுக்கின்றனர். அக்குழந்தைக்கு பொன்னிறத்தாள் என்று பெயரிடுகின்றனர். பொன்னிறத்தாள் வளர்ந்து பருவமடைந்தபோது அவளை இணைசூரப் பெருமாள் என்பவன் மணமுடிக்கின்றான். மணமுடித்து இருவரும் இன்பமுடன் வாழ்ந்து வந்தனர். பொன்னிறத்தாள் கர்ப்பமடைகிறாள். நிறைமாதச் சூலியாக இருக்கும்போது அவள் சுனையாடச் செல்கிறாள். போகும்

போது தீயசகுனம் தென்படுகிறது. அதைப் பொருட்படுத் தாமல் சுனையாடச் செல்கிறாள். அங்கு காட்டாளம்மன் கோவிலில் கருவூலத்தை எடுக்க வந்த கள்ளர்களால் அவள் பலி கொடுக்கப்படுகிறாள். கள்ளர்களும் காட்டாளம்மனின் ஏவலால் புலி கடுவாய்களுக்குப் பலியாகின்றனர். மகள் இறந்ததைக் கண்டு பெற்றோர்களும் சகோதரர்களும் உயிரை விடுகின்றனர். இணைசூரனும் வாளை நட்டு அதில் சாடி உயிரைவிடுகிறான். வன்கொலையால் மாண்ட பொன்னிறத் தாள் சிவனிடம் வரம்பெற்று தனது மரணத்திற்குக் காரண மானவரின் குடும்பத்தையும் மதுரையையும் அழிக்கிறாள். அவளை அடக்க வந்த வேலனையும் பொன்னிறத்தாள் கொல்கிறாள். பின் வேலனின் மனைவி தந்த பலியை ஏற்று வேலனுக்கு உயிர்க் கொடுக்கிறாள். பின்பு வழிபாடு பெற்று அமர்கிறாள் என்று கதை அமைகிறது.

முத்துப்பட்டன் கதை முத்துப்பட்டன் எனும் சிறு தெய்வத்தின் வரலாற்றை எடுத்துரைக்கின்றது. ஆரிய நாட்டில் முத்துப்பட்டன் பிறக்கின்றான். அவனது அண்ணன்மார் களுடன் சண்டையிட்டுக் கொண்டு ஊரைவிட்டு வெளி யேறுகிறான். பின்பு கொட்டாரக் கரைக்குச் சென்று ராமராஜன் எனும் மன்னனின் அரண்மனையில் பணி புரிகிறான். சிறிதுகாலம் சென்றபின் தமையன்மார்கள் முத்துப்பட்டனைத் தேடி கொட்டாரக்கரைக்கு வருகின்றனர். அவர்கள் தம்பி முத்துப்பட்டனைச் சமாதானம் செய்து அவனை அழைத்துக் கொண்டு தங்கள் ஊருக்குத் திரும்பி வந்தனர். வரும் வழியில், அரசடித்துறையில் முத்துப்பட்டன் தாகமாக இருக்கிறது என்று கூறிவிட்டு நீர் அருந்தச் செல்கிறான். நீர் அருந்த சென்ற இடத்தில் பொம்மக்கா, திம்மக்கா எனும் இரண்டு சக்கிலிய குலப்பெண்களைக் கண்டு காதல் கொள்கிறான். அதனை முத்துப்பட்டன் சகோதரர்களிடம் தெரிவிக்கின்றான். சகோதரர்கள் எதிர்ப்பு தெரிவிக்கின்றனர். அதனை முத்துப்பட்டன் ஏற்காததால் சகோதரர்கள் அவனைக் கற்குழிக்குள் தள்ளி மூடிவிடுகின்ற னர். அதிலிருந்து தப்பிய முத்துப்பட்டன் வாலப் பகடையின்

அறிவுரைப்படி குடுமி, பூனுல் நீக்கி சக்கிலியர் குலத் தொழில் செய்து அப்பெண்களைத் திருமணம் செய்கிறான். அன்று இரவு ஆநிரைகளைத் திருடவந்த ஊற்றுமலை வன்னியரைக் கொன்று தானும் உயிரை விடுகிறான். பூச்சி என்ற பட்டனின் நாய் பொம்மக்காவும், திம்மக்காவும் ஆகிய இருவருக்கும் பட்டனின் இறப்பைத் தெரிவிக்கிறது. பொம்மக்கா, திம்மக்கா சிங்கம்பட்டி ஜமீனிடம் அனுமதி பெற்று உடன்கட்டை ஏறி உயிர்விடுகின்றனர். பின்னர் அனைவரும் சிவனிடம் வரம்பெற்று தெய்வமாகி அமர்கின்றனர்.

முத்துப்பட்டன் கதை நிகழ்ந்த பகுதி இன்று திருநெல் வேலி மாவட்டத்தின் ஒரு பிரிவாகவும், கேரள மாநிலத்தின் ஒரு பிரிவாகவும் காணப்படுகிறது. மேல் மலைத்தொடரின் தென்பகுதியில் கொண்ட நிலப்பகுதி இருபிரிவிலும் உள்ள சிற்றூர்களனைத்தையும் ஆரிய நாடு என்று அழைக்கப் பட்டது.

கதையில் வரும் தலைவியர் இருவரும் வாலப்பகடையின் மக்கள். பகடைகள் தெலுங்கு மொழி பேசும் சக்கிலியர். சக்கிலியர் பெரும் அளவுக்குத் தமிழ்நாட்டுக்கு வந்த காலம் எது? கிருஷ்ணதேவராயன் தஞ்சை மீதும், மதுரை மீதும் படையெடுக்கத் தனது தளவாய்களை அனுப்பினான். அவர்கள் தஞ்சையையும், மதுரையையும் கைப்பற்றினார்கள். கிருஷ்ணதேவராயனது காலத்திலேயே விஜயநகர ஆட்சி சீர்குலைந்தது. மதுரைத் தளவாய் விசுவநாதநாயக்கன் சுயாதிகாரம் பெற்ற மன்னனானான். அவனுடைய சேனை களோடு தமிழ்நாடு வந்தவர்களே சக்கிலியர்கள். அவர்கள் நாயக்கர் சேனைகள் தங்கியிருந்த இடங்களில் செருப்பு தைத்துக் கொடுத்து வந்தார்கள். மூடநம்பிக்கையுள்ள நாயக்க மன்னர்கள் கோயில் கட்டும்பொழுதும், அணைகள், பாலங்கள் கட்டும்பொழுதும் நரபலி கொடுப்பதுண்டு. அதற்காக இழிந்தவரெனக் கருதப்பட்ட சக்கிலியர்களைப் பிடித்துச் சிறையில் அடைத்துப் பலமுறை பலி கொடுத்தார்கள். உயிருக்கு பயந்து அவர்கள் ஓரிடத்தில் தங்காமல் சிதறினார்கள். அவ்வாறு சிதறியவர்கள் திருநெல்வேலி

மாவட்டம் என்று இன்று அழைக்கப்படும் பகுதியில் பல சிற்றூர்களில் குடியேறினார்கள். குடியேறியவர்கள் தங்கள் பரம்பரைத் தொழிலைச் செய்து பிழைத்தார்கள். இவ் வரலாற்றைக் கவனிக்குமிடத்து மதுரையில் திருமலை நாயக்கன் கட்டிடப் பணிகள் நடத்திய காலத்திற்கு முன்னர் சக்கிலியர் தென்தமிழ்நாட்டில் பரவினார்கள் என்று கருதலாம்.

கட்டபொம்மன் கதையில் அவனுடைய முன்னோர்கள், திருமலை நாயக்கனிடம் நரபலி கொடுப்பதற்காக சிறை யிலடைக்கப்பட்டிருந்த சக்கிலியர்களை மீட்க வாதாடி னார்கள் என்றும் ஒரு செய்தி கூறப்பட்டுள்ளது. இது மேற்கண்ட கருத்தையும் வலியுறுத்தும். திருமலை நாயக்கன் கட்டிடப் பணிகள் செய்த காலம் சுமார் 1623 முதல் 1655 வரை. அப்படியானால் சுமார் 300 ஆண்டுகளுக்கு முன்னர் சக்கிலியர் தமிழ்நாட்டில் நாயக்கர் ஆட்சி பலமாக வேரூன்றாத இடங்களுக்குக் குடிபெயர்ந்திருக்க வேண்டும். ஆரிய நாடு நாயக்கர் ஆட்சியின் கீழ் இல்லை. ஆகவே பகடைகள் அல்லது சக்கிலியர்கள் அங்குக் குடியேறி வாழ்ந்தார்கள் என்று எண்ணினால் தவறேதும் இல்லை. எனவே முடிவாக 260 வருஷங்களுக்கும் 300 வருஷங்களுக் கும் இடைப்பட்ட காலத்தில் இச்சம்பவங்கள் நடந்திருக் கலாம் (கி.பி.1658-1738).

பொதிகை மலை மேல் தற்போது காரையாறு அணை கட்டியுள்ள இடத்திலிருந்து ஒன்றரை மைல் தூரத்தில் பட்டவராயன் கோயில் இருக்கிறது. இது சொரிமுத்தையன் கோயிலுக்கு வடக்கே உள்ளது. இக்கோயிலினுள் மூன்று சிலைகள் உள்ளன. ஒன்றுபட்டவராயன் சிலை இடுப்பில் சல்லடம், ஒரு கையில் வல்லயம், மற்றொன்றில் சூர்க்கத்தி, தலையில் முண்டாசு, முறுக்கிவிட்ட மீசை, சாய்ந்து விழுவது போன்ற நிலை. மொத்தத்தில் கலைத்திறன் மிக்க சிற்பி தன் ஆர்வம் முழுவதையும் கொட்டிச் செதுக்கியுள்ளது போலத் தோற்றமளிக்கிறது. ஒரு பக்கத்தில் திம்மக்கா. இடுப்பில் ஒரு கூடை; ஒரு கை கூடையை அணைத்திருக்கிறது. இச்சிலை, பட்டவராயன் சிலைக்கு மற்றொரு புறமுள்ள பெண்ணுருவச்

சிலையைவிடச் சற்றே உயரமானது; மறுபுறம் இருக்கும் சிலை பொம்மக்கா அவள் கையில் ஒரு கலசம் மற்றொரு கையில் பொந்தடி என்ற கதை போன்றதடி. இரண்டு சிலைகளும் மிக அழகாகச் செதுக்கப்பட்டுள்ளன. பட்டன் சிலைக்கு அருகில் இரண்டு நாய் உருவங்களும் காணப் படுகின்றன.

இக்கோயிலின் முன்னுள்ள பாறையில் இக்கோயில் தோன்றிய காலம் 999 ஸ்ரீ என்று பொறிக்கப்பட்டுள்ளது. இது கொல்லமாண்டு சுமார் 150 வருஷங்களுக்கு முன் இக்கோயில் தோன்றியது என விளங்குகிறது. மற்றொரு கல்வெட்டு இக்கோயில் சிங்கம்பட்டியரால் கட்டப்பட்டதென்று கூறுகிறது. இக்கோயில் கட்டுமுன் இக்கோயிலில் உள்ள சிலைகள், இக்கோயில் இருக்கும் இடத்திற்குச் சுமார் நான்கு மைல் கிழக்கேயுள்ள சுளியமுத்து பட்டவராயன் கோயிலில் இருந்ததாகவும், அது மிகவும் பழமையான கோயில் எனவும் அதுவே ஆதிப்பட்டவராயன் கோயில் எனவும் கூறு கிறார்கள். இவ்விரண்டு கோயில்களுக்கும் நேர்த்திக் கடனாகச் செருப்புகளைச் சேர்ப்பிக்கிறார்கள். இது கவனத்திற்குரியது (நா.வானமாமலையின் கதைத்திரட்டு, பக்.13-17).

**கான்சாயிபு சண்டை** ஒரு வரலாற்றுக்கதைப்பாடல் ஆகும். பண்ணையூரில் பிறந்த கான்சாயிபை மூஸாலாலி என்ற பிரெஞ்சியன் வளர்க்கிறான். பிரட்டன் என்னும் ஆங்கில தளபதியிடம் இவன் வேலைக்குச் சேர்கிறான். ஆங்கிலம் கற்று ஆற்காட்டு நவாபின் படையில் சேர்கிறான். படிப்படியாக உத்யோக உயர்வு பெற்று கான்சாயிபு ஆற்காட்டு நவாபின் படையின் கமாண்டராக ஆகிறான். பிரிட்டிஷ்காரர்கள் தங்கள் சேவகத்தில் இவனை அமர்த்திக் கொண்டு டச்சு மற்றும் பிரெஞ்சுக்காரரை வெற்றி பெறுகின்றனர். பின்னர் கான்சாயிபு பரங்கிப் பெண்ணான மாஷா என்பவளை மணந்து கொள்கிறான். தமிழகத்தில் தென்பகுதி முழுவதிலும் வரிவசூலிக்கும் உரிமையை கிழக்கிந்திய கம்பெனி நவாபிட மிருந்து குத்தகைக்குப் பெறுகிறது. எனவே வரி கொடுக்காத பூலுத்தேவனை, கான்சாயிபு அடக்கி ஒழிக்கிறான். மேலும்

பாளையக்காரர்களிடமிருந்து ஒழுங்காக வரிகிடைக்க வகை செய்கிறான்.

பிரிட்டிஷ் கம்பெனியார் கான்சாயிபுவின் சேவையைப் பாராட்டி மதுரை சுபேதரராக நியமிக்கின்றனர். மதுரையிலிருந்து தென்பகுதி முழுவதையும் நவாபின் பிரதிநிதியாக ஆண்டு பிரிட்டிஷ் கம்பெனிக்காக வரிவசூலித்துக் கொடுத்து வந்தான். ஒரு ஆண்டிற்கு பின் வரி கொடாத சிவகங்கை பாளையக்காரருடன் கான்சாயிபு மோதுகிறான். சிவகங்கை பாளையக்காரன் கான்சாயிபுவை சமாதானம் செய்ய முயல்கிறான். அது முடியவில்லை. எனவே சிவகங்கை பாளையத்தார் ஆற்காடு நவாபிடம் கான்சாயிபு குறித்து பொய்யான செய்திகளைக் கூறி பகைகொள்ளச் செய்கின்றனர். இதனால் ஆற்காடு நவாபு கம்பெனியாரிடம் தமது நிருவாகத்திற்கு கான்சாயிபை மாற்றிட வேண்டும் என்று வேண்டினான். கம்பெனியார், கான்சாயிபுவை நவாபின் வேண்டுகோளை ஏற்குமாறு கூறுகின்றனர். ஆனால் கான்சாயிபு மறுக்கிறான். எனவே ஆற்காடு நவாபு படையும், கம்பெனியார் படையும் மதுரையை முற்றுகையிட்டன. ஆனால் போரில் வெற்றிபெற முடியவில்லை. இறுதியில் சதி செய்து கான்சாயிபுவைக் கைது செய்து தூக்கிலிடுகின்றனர்.

கான்சாயிபு சண்டை கதைப்பாடல் சாதாரண மனிதனாக இருந்த ஒருவன் உயர்பதவி பெற்று இறுதியில் சூழ்ச்சிக்கு இரையான வரலாற்றைக் கூறுகிறது. கான்சாயிபு சாதாரண படைவீரனாகப் பணியில் சேர்ந்து மதுரையின் ஆளுமையைப் பெறுபவனாக உயர்கின்றான். பூலுத்தேவனை ஒழிக்க இவன் ஆங்கில அரசுக்கு உதவியதன் மூலம் பதவி உயர்வு பெறுகிறான். ஆனால் சிவகங்கைப் பாளையக்காரனுடன் வரிவசூலிப்பதில் ஏற்பட்ட மோதலால் சூழ்ச்சியில் சிக்கி கம்பெனியாரின் எதிர்ப்பையும் நவாபின் எதிர்ப்பையும் சந்திக்கிறான். எனவே தனது ஆளுமையை நிலைநிறுத்த கம்பெனியாரையும் நவாபையும் எதிர்த்து போரிடுகிறான். இறுதியில் சூழ்ச்சிக்கு இரையாகிறான். இக்கதைப்பாடல் கான்சாயிபுவின் வீர தீர பராக்கிரமத்தை வெளிப்படுத்துகிறது.

தமிழர் வீரத்தைப் போற்றுபவர்கள் என்பதால் நாட்டுப்புற கவிஞன் அதனை கதைப்பாடலாக உருவாக்கியிருக்கிறான் எனலாம்.

அரிச்சந்திரன் கும்மி என்னும் கதை அரிச்சந்திரனின் பெருமையைப் பேசுகிறது. அரிச்சந்திரனின் பொய் பேசா தன்மையை மக்களிடம் எடுத்துரைத்து பொய்பேசாமை எனும் பண்பு உயர்ந்தது என்று கட்டியம் கூறுகிறது.

அயோத்தியாபுரி நாட்டினை அரிச்சந்திரன் சீருடனும், சிறப்புடனும் ஆண்டு வருகிறான். அவன் சத்தியத்தின் வழி நின்று பொய்பேசா பெருமையுடையோனாக வாழ்ந்தான். அப்படி அவன் வாழ்ந்து வரும் நாளில், மேலுலகில் இந்திரன் தனது சபையில் இருக்கும் தேவர்களைப் பார்த்து பூவுலகில் பொய்பேசாத அரசர்கள் யாரேனும் இருக்கிறார்களா? என்று வினவுகிறான். அப்போது வசிஷ்டமாமுனி எழுந்து எனது சிஷ்யன் அயோத்தியை ஆளும் அரிச்சந்திரன் பொய்யுரைக்க மாட்டான் என்று கூறுகிறார். உடனே விஸ்வாமித்திரர் எழுந்து, நான் அரிச்சந்திரனைப் பொய்சொல்ல வைப்பேன் என்று கூறுகிறார். சபை கலைந்து சென்றபின்பு விஸ்வா மித்திரர் அரிச்சந்திரனிடம் வருகிறார். அரிச்சந்திரனிடம் யாகம் செய்ய திரவியம் தானமாகக் கேட்கிறார். அரிச்சந்திரனும் தானம் தருகிறேன் என்று ஒப்புக் கொள்கிறான். முனிவர் சூழ்ச்சி செய்து நாடு நகரங்களை எல்லாம் அவனிடமிருந்து பெற்றுக் கொண்டு வீதிக்கு கொண்டு வந்து விடுகிறார்.

மேலும் முனிவருக்குத் தர வேண்டிய மீதி தொகைக்காய் தன் மனைவியையும் மகனையும் அடிமைக்கூலிகளாய் விற்றுவிடுகிறான். சந்திரமதியும், லோகிதாசனும் காலகண் டய்யன் என்பவனின் வீட்டில் அடிமைகளாய் வேலை செய்து வரும்போது லோகிதாசன் பாம்பு கடித்து இறந்துவிடுகிறான். அவனை எரிக்க எடுத்துச் செல்கையில் தனது கணவன் அரிச்சந்திரன் வெட்டியானாக வேலை செய்வதை சந்திரமதி அறிகிறாள். ஆனால் அரிச்சந்திரன் பிணத்தை எரிக்க முழந்துண்டும், காற்பணமும் வாங்கிவரச் சொல்கிறான். சந்திரமதி வரும் வழியில் காசி மன்னன் மகனைக் கொன்ற

பழியில் சிக்குகிறாள். மன்னன் சந்திரமதியின் தலையை வெட்ட ஆணையிடுகிறான். மனைவியின் தலையை வெட்டும் பணியை அரிச்சந்திரனே செய்யும் நிலை ஏற்படுகிறது. அரிச்சந்திரன் சந்திரமதியின் தலையை வெட்டினான். ஆனால் அவள் கழுத்தில் பூமாலையாக விழுந்தது. அரிச்சந்திரன் சத்தியம் தவறிவிட்டதே என்று பதறியபோது தேவர்கள் வந்து அவனைச் சமாதானம் செய்கின்றனர். மேலும் அவனின் பெருமையை உணர்ந்து மீண்டும் நாட்டை ஆளும் வரம் நல்குகின்றனர்.

அரிச்சந்திரன் கதை ஒரு புராணக்கதையாகும். அரிச்சந்திரன் திரிசங்குவின் புத்திரன். இவன் வருணனை நோக்கி எனக்குப் புத்திர சந்ததி நேருமேல் அக்குமரனைப் புருஷப்பசுவாகக் கொண்டு உன்னைத் திருப்தி செய்விக்கிறேன் எனக்கூறி அவ்வகை உதித்தகுமரனை யாகப்பசுவாக்கக் காதிருந்தான். தந்தையின் செய்கையுணர்ந்திருந்த குமரன் தன்னிலை உணர்ந்து பயந்து காட்டில் வசித்தான். பின்பு வருணன் அரிச்சந்திரனுக்கு மகோதர நோயுண்டாக்கினான். தந்தை மகோதரத்தால் பீடிக்கப்படுகிறானென வினவுற்று நகர்நோக்கி வருகையில் இந்திரனால் வனத்தில் ஆறுவருஷம் தடைப்பட்டு அந்த ஆறாம் வருஷக் கடைசியில் அசிகிரதன் என்பவனிடத்தில் சுனச்சேபனை விலையாகக் கொண்டு தந்தைக்கு அளித்தனன்.

குமரன் தந்தையை வருணகோ பந்தலுண்டாக்கியே மகோதரத்தினின்றும் நீக்கினன். இவன் சாம்ராட். இவன் தேவி சந்திரமதி மந்திரி சத்திய கீர்த்தி என்று அபிதான சிந்தாமணி குறிப்பிடுகிறது. அரிச்சந்திரனின் பொய் பேசா தன்மையே அவனை பாட்டுடைத் தலைவனாக்கியுள்ளது எனலாம்.

**சிறுத்தொண்டர் பத்தன் கதை** கர்னன், காசியில் பிறந்து சிவலிங்கப் பூசை செய்து திருச்செங்காட்டில் சிறுத்தொண்ட பத்தனாகத் தோன்றினான். அவன் மனைவி பெயர் திருவெண் காட்டு நங்கை. இருவரும் சிவனடியார்களுக்குத் தொண்டு செய்வதையே வாழ்நாள் கடமையாக எண்ணி வந்தனர். சிறுத்தொண்டர் தம்மைத் தொண்டர்களிற் சிறியவர் என்று

மதித்து சிறுத்தொண்டர் என்ற பெயர் பெற்றார். சிவன் இவரின் பக்திச் சிறப்பை உலகுக்கு எடுத்துக்காட்ட விரும்பினார். எனவே, சிவன் ஒரு சங்கமர் திருக்கோலம் கொண்டு இவரது வீட்டிற்கு அமுதுண்ண எழுந்தருளினார். நாயானார் சங்கமாரைக் கண்டுகளித்து அமுதுகொள்ள அழைத்தார். அதற்கு சங்கமர் நாம் ஆறுமாதத்திற்கு ஒரு முறையே அமுது கொள்வேன். அவ்வுணவு நரமாமிசத்துடன் கூடியதாக இருக்க வேண்டும். அதாவது ஒரே புத்திரனாய் அங்கப்பழுதிலானாய் ஐந்து வயதுள்ள சிறுவனாய் ஒரு உறுப்பும் குறையாதவனைச் சமைத்தல் வேண்டும் என்றார். இதனைக் கேட்ட நாயனாரும் அவ்வகையில் உணவு படைக்க உடன்பட்டார். பின்பு மனைவியிடம் வந்து அடியவர் கூறியதைக் கூறினார். அயலார் தங்கள் குழந்தைகளைக் கொலை செய்யச் சம்மதிப்பரோ? சம்மதிக்கமாட்டார். எனவே நமது குழந்தையாகிய சீராளதேவனை சங்கமர் விருப்பப்படி நரவுணவாகச் சமைத்துக் கொடுக்கலாம் என்றார். மனைவியும் உடன்பட்டாள். அதன்படி சீராளனை வெட்டி கறியாகச் சமைத்தனர்.

சங்கமர் உணவு உண்ண வந்தபோது எல்லா உறுப்புகளும் சமைக்கப்பட்டதா? என்று வினவுகிறார். நாயனார் தலை யொழிந்த மற்ற உறுப்புகள் அனைத்தும் சமைக்கப்பட்டன என்கிறார். சங்கமர் அப்படியானால் அதனையும் சமைத்து கொணர்க என்றார். அவரின் விருப்பப்படி தலைக்கறியும் சமைத்துக் கொணரப்படுகிறது. சங்கமர் கோலங்கொண்ட சிவபெருமான் அமர்ந்து உணவு உட்கொள்ளும் முன்பு என்னுடன் அமர்ந்து உணவு உண்ணுவதற்கு மற்றொரு சிவனடியார் வேண்டும் என்கிறார். நாயனார் எங்குத் தேடியும் அடியார் கிடைக்கவில்லை என்று வருத்தத்தோடு சங்கமரிடம் தெரிவித்தார்.

உடனே சங்கமர் நீரே எம்முடன் உணவு உண்ண உட்காரு என்றார். நாயனாரும் சம்மதித்து உணவு உண்ண அமர்ந்தார். உணவு உண்ணப் போகும்போது சங்கமர் தடுத்து நிறுத்தினார். உமக்குப் புத்திரர் இருந்தால் உடனுண்ண

அழையுமென்றார். சிறுத்தொண்டர் சங்கமரின் கட்டளையை மறுக்க அஞ்சினார். மனம் வருந்தியவாறு தெருவிற்குச் சென்று சீராளா என அழைத்தார். சிவனனுக்கிரகத்தால் சீராளன் தந்தையின் குரல்கேட்டு கல்விச் சாலையிலிருந்து ஓடிவந்தான். நாயனார் மகிழ்ச்சியில் திழைத்து மகனை வாரி அணைத்து வீட்டிற்குள் அழைத்துச் சென்றார். அப்பொழுது சங்கமரும் மறைந்தார். இலையிலிருந்த உணவுகளும் மறைந்தன. நாயானாரின் பக்தியைக் கண்டு வியந்த சிவன் அவர்க்கும் அவர் குடும்பத்தாருக்கும் அருள்பாலித்து மறைகிறார் என்று கதை அமைகிறது. இக்கதையின் தொடர்ச்சியாக காரைக்காட்டம்மையின் பக்திச்சிறப்பு கூறப்படுகிறது. மேற் கண்ட கதை மக்களிடம் பெற்ற செல்வாக்கும் பக்திச் சிறப்பும் சிறுத்தொண்டர் கதையை நாட்டுப்புற மரபில் பாடத் துண்டியிருக்கலாம் எனத் தோன்றுகிறது.

தேசிங்குராஜன் கதை ஒரு வரலாற்றுக் கதைப்பாடல் ஆகும். செஞ்சியைத் தலைநகரமாகக் கொண்டு ஒரு குறுநிலப் பகுதியை தேரணி மகாராசன் (சொரூப்சிங்)டில்லி பாட்சாவின் ஆணைக்குட்பட்டு ஆட்சி புரிந்து வந்தான். அவனுக்குப் பின் அவன் மகன் தேசிங்குராஜன் ஆட்சிக்கு வந்தான். தேசிங்கு ராஜன் தந்தையைப்போலவே தலைமை அரசிற்கு வரிகட்ட வில்லை. எனவே டில்லி அரசின் தென் மண்டல அரசப் பிரதிநிதியாக இருந்த ஆர்க்காட்டு நவாபு தேசிங்குராஜனிடம் வரிகேட்டு ஆள் அனுப்புகிறான்.

தேசிங்குராஜன் வரிகட்ட முடியாது; நவாபை போர்க் களத்தில் சந்திக்கிறேன் எனக் கூறுகிறான். அவன் அமைச்சர் களோ வரிகட்டி விடும்படிக் கூறினர். ஆனால் தேசிங்கு ராஜன் சொன்ன சொல்லைத் திரும்பப் பெறமாட்டேன் எனக் கூறிவிடுகிறான். அதுவரை பொறுமையாக இருந்த ஆற்காடு நவாபு தேசிங்குராஜனை அடக்கப் புறப்படுகிறான். தேசிங்கு ராஜனும் படையுடன் செல்கிறான். இருபடைகளும் போர்க் களத்தில் சந்திக்கின்றன. போர்க்களத்தில் எதிரிகளை வெட்டி வீழ்த்துகிறான் தேசிங்குராஜன். நவாபின் படைத்தலைவனான தாவுத்துக்கானும் தேசிங்குராஜனின் வாளினால் மடிகிறான்.

நவாப் பெரும்படையுடன் வந்து மீண்டும் வந்து தேசிங்கு ராஜனோடு போரிட்டு வெற்றி பெறுகிறான். தேசிங்குராஜன் எதிரியின் கையால் சாவதை இழிவாகக் கருதி தானே தன் நெஞ்சில் வாளை ஏந்தி இறுதியில் உயிரை விடுகிறான்.

மராட்டியர்களிடமிருந்து செஞ்சிக்கோட்டையை முகலாய தளபதி 1698ஆம் ஆண்டு கைப்பற்றுகிறார். பின்னர் ஔரங்கசீப் 18-01-1700-ல் சொரூப்சிங்கை செஞ்சி அரசராகப் பதவி ஏற்கச் செய்கிறார். ஔரங்கசீப் காலத்திற்கு பின்பு அவரின் மகன் ஷாஆலம் பதவியேற்கிறார். அவர் சதுதுல்லாக் கான் என்பவனை ஆற்காடு நவாபாக நியமித்து செஞ்சி அரசின் மேற்பார்வையையும் அவனிடம் ஒப்படைக்கிறார். அச்சமயம் ஆங்கிலேயரும் பிரஞ்சியரும் உள்நாட்டு அரசியல் விவகாரங்களில் தலையிடுவதைக் கண்டு சொரூப்சிங் கோபமடைந்தார். மேலும் செஞ்சி அரசுக்கும் சொரூப் சிங்குக்கும் எதிராகக் கூடலூர் எல்லையில் கலகம் செய்தனர். ஆனால் சொரூப்சிங் கலகத்தை அடக்கி ஆங்கிலேயரைத் தலை தூக்கவிடாமல் பார்த்துக் கொண்டார். ஆனால் டெல்லி அரசு பன்னிரெண்டு ஆண்டாக செலுத்தாத வரிப்பணம் எழுபது லட்சம் நாணயங்களை உடனே செஞ்சி அரசிடமிருந்து வசூலித்து அனுப்புமாறு ஆற்காடு நவாபுக்கு உத்தரவிட்டது. நோய்வாய்பட்டு கி.பி.1714 சனவரியில் சொரூப்சிங் மரணமடைந்தார்.

சொரூப்சிங்கிற்கு பிறகு அவர் மகன் தேசிங்குராஜன் பதவியேற்றார். அவர் டில்லி பேரரசுடைய அனுமதியைப் பெறாமலும் ஆற்காட்டு நவாபுக்கு அறிவிக்காமலும் பதவி ஏற்றார். இதனால் டில்லி பேரரசர் அடங்காக் கோபம் கொண்டார். உடனே வரி பாக்கியைச் செலுத்தக் கட்டளை இடுகிறார். தேசிங்குராஜன் வரிகட்ட மறுத்து டெல்லி அரசின் கோரிக்கையை நிராகரித்தார். ஆற்காட்டு நவாபு ஆங்கிலேயர், பிரெஞ்சியரின் கூட்டுச்சதியால் தேசிங்குராஜன் தோல்வி யுறுகிறார். பிறரிடம் சிறைப்பட்டு வாழ்வதைவிட இறப்பதே மேல் என்று எண்ணி 3-10-1714 காலை ஏழு மணிக்கு போர்க்களத்திலேயே தற்கொலை செய்து மடிந்தார் என்று

கோவிந்தசாமி தெரிவிக்கிறார் (*செஞ்சிக்கோட்டையின் வரலாறு, பக்.25-29*).

**இசக்கியம்மன் கதை** தென்பகுதியில் பரவலாக வழிபடப்படும் ஒரு பெண் தெய்வத்தின் கதை. இலட்சுமி எனும் கணிகை அவளின் ஆசை வேதியன் ஒருவனால் கொல்லப்படுகிறாள். அவளது நகைகளைக் கவர்ந்து செல்லும் போது அவன் பாம்பு கடித்து இறந்து போகிறான். கணிகை இறந்ததைக் கண்ட அவள் தமையனும் தற்கொலை செய்து கொள்கிறான். தமையனும் தங்கையும் சோழ மன்னனுக்கு இரட்டைக் குழந்தைகளாக மறுபிறவியில் பிறக்கின்றனர். இரவில் சோழன் குழந்தைகள் பசியினால் பேய் உருவெடுத்து வெளியேறி மாடுகளைக் கொன்று உண்டு விட்டு யாரு மறியாமல் தொட்டிலில் வந்து படுத்துக் கொள்கின்றனர். இதையறிந்த மன்னன் குழந்தைகளைக் காட்டில் கொண்டுவிடப் பணிக்க, காவலாட்கள் குழந்தைகளைக் காட்டில் கொண்டு விட்டனர். தமையன் பேயாக வேப்ப மரத்தில் குடியிருந்தான். அந்த வேப்பமரத்தை ஊர் மக்கள் வெட்டவே அதிலிருந்த நீலியின் தமையன் நீலன் மாள்கிறான்.

மறுபிறவியில் வணிகனின் மகனாகப் பிறந்த வணிகனான வேதியன் முன் மன்னன் மகளாகப் பிறந்து நீலியாகிய இலட்சுமி வருகிறாள். வந்து கள்ளிக் கொப்பு ஒன்றைப் பிள்ளையாக மாற்றி அதனைச் சாட்சியாக்கி நான் உன் மனைவி என்று கூறி அவனைத் தன்னுடன் வருமாறு அழைக்கிறாள். வரமறுத்த அவனை ஊர் மக்களிடம் அழைத்துச் சென்று முறையிட்டு வெற்றி பெறுகிறாள். ஊராரும் நம்பி அவர்களை ஊர்மடத்தில் தங்க வைக்கின்றனர். இரவில் பேயான இலட்சுமி வணிகனைக் கொன்றுவிடுகிறாள். மறுநாள் வணிகனின் தாய் உருவில் வந்து நீலி ஊரார் அனைவரையும் தன் தமையனைக் கொன்றமைக்காக பழிதீர்த்துக் கொள்கிறாள் என கதை அமைகிறது.

திருநெல்வேலி, கன்னியாகுமரி மாவட்டங்களிலே இத் தெய்வம் பெருஞ்சிறப்புடன் விளங்குகின்றது. இயக்கி என்ற

பெயரிலேயே இத்தெய்வம் விளங்குகின்றது. முப்பந்தல், வடசேரி, பிளவுக்கல், பாளையங்கோட்டை போன்ற பல இடங்களில் இவளுக்கென்று எடுக்கப் பெற்ற புகழ் பெற்ற கோயில்கள் உள்ளன. இவளின் பெயரில் இசக்கியம்மன் விற்கதை, பழகை நல்லூர் (பழையனூர்) நீலியம்மன் கதை என்ற பெயர்களில் நாட்டுப்புறக் கதைப்பாடல்கள் வழங்குகின்றன. பழையனூர் இசக்கியின் வரலாற்றைத் தெரிவிக்கும் இப்பாடல்கள் அவளுக்கென்று எடுக்கப்பெறும் திருவிழாவின் போது வில்லுப்பாட்டாக இன்றும் பாடப்பெற்று வரப்பெறுகின்றன.

நீலி வழிபாடு கி.பி 19ஆம் நூற்றாண்டு முன்பிருந்தே திருநெல்வேலி மாவட்டப் பகுதியில் இருந்திருக்க வேண்டும். எனத் தோன்றுகிறது. திருநெல்வேலிப் பகுதியிலுள்ள நீலிதநல்லூர் என்ற பெயர் இதற்குச் சான்றாக விளங்குகின்றது. இங்குள்ள கோயிலில் காணப்பெறும் கி.பி.10ஆம் நூற்றாண் டைச் சார்ந்த சோழன் தலைகொண்ட வீரபாண்டியனின் வட்டெழுத்துக் கல்வெட்டிலும் இவ்வூர் நீலிதநல்லூர் என்றே குறிப்பிடப்படுகின்றது. எனவே நீலி என்ற பெயர் வழக்கு இப்பகுதியில் கி.பி.பத்தாம் நூற்றாண்டில் வந்து விட்டதையும் நீலிவழிபாடு இப்பகுதியில் அக்காலத்திலேயே இருந்துள்ளது என்பதையும் இக்கல்வெட்டின் மூலம் அறியலாம் என்று வெ.வேதாசலம் தெரிவிக்கிறார் (இயக்கி வழிபாடு, ப.108).

**சின்னப்பிள்ளை நாச்சியார் கதை** எனும் கதைப்பாடல் பேய்க்குளம் எனும் ஊரில் அமைந்துள்ள சின்னப்பிள்ளை அம்மன் எனும் சிறுதெய்வத்தின் வரலாற்றை இயம்புகிறது. கைலாய மலையில் சிவன் பார்வதியுடன் அமர்ந்திருக்கின்றார். சிவன் அப்போது திருநடனம் புரிகிறார். சிவனின் வியர்வை பூமியில் விழுகிறது. அதிலிருந்து சின்னப்பிள்ளை நாச்சியார் அம்மன் தோன்றுகிறாள். அம்மன் சிவனிடம் வரம் வாங்க கணநாதர் மலையடியில் வன்னிமரத்தின் அடியில் தவமிருக்கிறாள். அம்மன் தவமிருக்கும் பூமி அவளின் வருகையால் நந்தவனமாக மாறுகிறது. உயிரினங்கள் தாயாரின்

புகழைப் பாடுகின்றன. அம்மன் தவமிருக்கும் செய்தியை அறிந்து சிவன் கயிலைக்கு அழைத்துவரச் சொல்கிறார். அங்கு மிகப் பெரிய மழுவை ஏந்தினால் வரம்தருகிறேன் என்று சிவன் கூறுகிறார். விசுவகர்மன் செய்து கொடுத்த மழுவை நாச்சியார் ஏந்துகிறாள். மகிழ்ச்சியடைந்த சிவன் வரம் நல்குகிறார். அதன்பின் சின்னப்பிள்ளை நாச்சியார் அம்மன் தேரிலேறி பவனி வருகிறாள்.

சின்னப்பிள்ளை நாச்சியார் கதைக் கூறு செண்பக நாச்சியார் கதையின் கதைக் கூறினை ஒத்து அமைகிறது. கதையில் அம்மன் பிறவி செய்யப்பட்டதற்கான கூறு காணப் படவில்லை. மேலும் இக்கதை ஒரு புனைகதையாகவே தெரிகிறது. சின்னப்பிள்ளை எனும் தெய்வத்தினுடைய உண்மை வரலாறு மறைக்கப்பட்டு புனைந்துரைக்கப்பட்ட கதையாக சின்னப்பிள்ளை நாச்சியார் கதை அமைகிறது எனலாம்.

**ஆரவல்லி சூரவல்லி கதை** மகாபாரத புராணக்கதை ஆகும். இந்திர பிரஸ்தத்தைத் தலைநகராகக் கொண்டு பாண்டவர்கள் ஆட்சிசெய்து வந்த்னர். அப்போது ஒருநாள் கண்ணன் பாண்டவரின் அரண்மனைக்கு வருகிறார். கிருஷ்ணா நதிக்கரையில் ஒரு பட்டணத்தை உருவாக்கி ஒரு கோட்டையையும் கட்டி ஆரவல்லி சூரவல்லி முதலிய ஏழு சகோதரிகள் ஆட்சி செய்து வந்தனர். அவர்கள் மாயமந்திர வித்தை களால் பல மன்னர்களை அடிமையாக்கியும் கொன்றும் ஆண் இனத்தை அழித்து விடுபவர்போல் திகழ்ந்தனர். எனவே அவர்களின் ஆணவத்தையும் வீமன் தன்னை வெல்ல யாருமில்லை என்று எண்ணும் ஆணவத்தையும் ஒரு சேர அடக்க நினைத்தார் கண்ணன். கண்ணனின் சூழ்ச்சியால் பீமன் ஆரவல்லி, சூரவல்லி சகோதரிகளிடம் தோல்வியுற்று பாதாள அறையில் அடைக்கப்படுகிறான். பின்பு கண்ணன் பீமன் தப்பிக்க உதவுகிறார். ஆரவல்லியரை அடக்க பாண்டவர்களால் அல்லிராஜன் அனுப்பப்படுகிறான். அல்லிராஜன்

கோட்டையை நெருங்கும்போது வந்த மாயமந்திரங்களை திரௌபதி கொடுத்த விபூதியால் நீக்குகிறான். பின்னர் பல்வேறு போட்டியில் வெற்றி பெறுகிறான்.

ஆரவல்லியின் வளர்ப்பு மகள் பல்வரிசையை அல்லி ராஜன் மணமுடித்து திரும்பும்பொழுது ஆரவல்லியின் சூழ்ச்சியால் இறந்துபடுகிறான். செய்தி அறிந்து பாண்டவர் படை நடத்தி வந்தனர். ஆனால் கோட்டை அருகில் வந்ததும் அனைவரும் கல்லாக மாறிவிடுகின்றனர். பின்பு அபிமன்யு, அல்லி ராஜன் உயிரை மீட்கிறான். பின்பு இருவரும் ஆரவல்லி, சூரவல்லி கோட்டைக்குச் சென்று விபூதியின் துணையால் கல்லான பாண்டவரின் படைகளை உயிர் மீட்கின்றனர். பின்னர் ஆரவல்லி, சூரவல்லி சகோதரிகளின் காதையும், மூக்கையும் அறுத்து பாடம் கற்பித்து விரட்டிவிட்டு அல்லி ராஜன், நாடு திரும்பி தனது மனைவியுடன் மகிழ்ச்சியுடன் வாழ்கிறான்.

ஆரவல்லி சூரவல்லி கதை புராணக் கதையாக இருந்தாலும் மாயாஜால மந்திரங்கள் கலந்த கதையாக பாடப்பட்டுள்ளது. மேலும் கதையில் பெண்கள் புதுமையான முறையில் நாட்டை ஆண்டதாகவும் கூறப்படுகிறது. பலவேந்தர்கள் அவர்களிடம் தோற்று அடிமைப்பட்டமையும் உயிரிழந்த நிலையும் கதையில் புதுமையின் அடையாளமாகும். ஆரவல்லி, சூரவல்லி கதை பெண்ணிய நோக்கில் அமைந்த தன்மையுடன் காணப்படுகிறது.

மேற்கண்ட நாற்பது கதைப்பாடல் சுவடிகளை பெருஞ் சிரமத்திற்கு இடையில் திரட்டி சிறிய ஆய்வுக் குறிப்புடன் பதிப்பித்துள்ளேன். குறைகளின்றி எந்தச்செயலும் நிறை வடையாது. எனவே எமது பதிப்பின் குறைகளை மன்னித்து நிறைகளை ஆய்வாளர்களும் பதிப்பாசிரியர்களும் ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். இதனை அடுத்து மறுபடியும் மூன்று தொகுதிகளை வெளியிடக் கதைப்பாடல்களைத் திரட்டி வைத்துள்ளேன். அவற்ற்றையும் விரைவில் பதிப்பித்து வெளியிட முயற்சிகள் மேற்கொண்டு

வருகிறேன். அவையும் விரைவில் வெளிவர இறைவன் உதவி செய்வான் என்று நம்புகிறேன்.

கதைப்பாடல் தொகுதிகளில் பதிப்பு நெறிமுறைப்படி எழுத்துப் பிழைகளும் ஒரு சிலப் பொருள் மயக்கம் தரும் இடங்களும் திருத்தம் செய்யப்பட்டுள்ளன. கதைப்பாடல்கள் ஒற்றைச் சுவடி அல்லது தாள் சுவடி கொண்டே பதிப்பிக்கப் பட்டுள்ளது. கதைப்பாடலில் கதையின பொருண்மையினை எளிதாக அறிந்து கொள்ளும் வண்ணம் உட்தலைப்புகளும் கொடுக்கப்பட்டுள்ளன.

நான்கு கதைப்பாடல் தொகுதிகளை வெளியிடுகிறேன் என்றால் அதற்கு உதவியவர்களுக்கு நன்றி கூறுவது எனது தலையாயக் கடமை. முதற்கண் இந்தக் கதைப்பாடல் தொகுதிகள் நான்கும் வெளிவர உதவி செய்ததோடு அணிந்துரையும் நல்கிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் முனைவர் கோ.விசயராகவன் அவர்களுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அடுத்து எனக்கு ஆய்வுத் தளத்தை அறிமுகம் செய்து ஊக்கப்படுத்திய எனது நெறியாளரும் பேராசானுமான **முனைவர் பீ. டாக்டர் நசீம்தீன்** அவர்களுக்கு எனது நன்றியினைச் சமர்ப்பிக்கிறேன்.

கதைப்பாடல் பதிப்புத் துறையில் என்னை ஈடுபடச்செய்த மதிப்பிற்குரிய நண்பர் **முனைவர் தி. இராஜரெத்தினம்** அவர்களுக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். அடுத்து நான் உதவிப்பேராசிரியராகப் பணியாற்றத் தொடங்கிய காலம் முதல் இன்றுவரை உற்ற தோழராக இருப்பதோடு இந்நான்கு நூல்கள் வெளிவரவும் உதவிய எனது மிகுந்த மதிப்பிற்குரிய கவிஞர் சங்கமம் கணேசன் என்ற **முனைவர் ஆ. கணேசன்** அவர்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியினைச் சமர்ப்பிக்கிறேன். அடுத்து கடந்த மூன்று ஆண்டுகளாக எம்மோடு நட்புக் கொண்டு எமது வளர்ச்சியில் ஆனந்தப்படும் **முனைவர் ம. செந்தில்குமார்** அவர்களுக்கும் எனது அன்புகலந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். அடுத்து, **முனைவர் மா. நயினார்** அய்யா அவர்களுக்கும்

நண்பர் **முனைவர் செ. ரவிசங்கர்** அவர்களுக்கும் நன்றியினை உரித்தாக்குகிறேன்.

இக்கதைப் பாடல் தொகுதிகள் வெளிவர உதவியதோடு ஊக்குவித்த **முனைவர் ஆ. மணவழகன், முனைவர் க.சுசீலா, முனைவர் கோ. பன்னீர் செல்வம், முனைவர் அ. சதிஷ்** ஆகியோருக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்து கதைப்பாடல் திருத்தங்களுக்கு உதவி செய்த தோடு எனது நலத்தையும் கண்ணுங் கருத்துமாகப் பார்த்துக் கொண்ட எனது மனைவி **தே. கிரிஜா** அவர்களுக்கும் எனது நன்றியினை நவில்கிறேன். நான்காவது தொகுதியினுடைய பிழைத்திருத்தங்களுக்கு உதவிய மாணாக்கர்கள் **எ.இராஜேஷ், பா.சிவரஞ்சனி, இரா.பத்மா, சு.கி.இராதாகிருஷ்ணன், வேல்முருகன்** ஆகியோருக்கும் எனது மேலான நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும் கதைப்பாடல் சுவடிகளைத் தந்து உதவிய **பொ. உடையார் நாடார்** (திருமலாபுரம்) **மு. பொன்சாமி நாடார், த. பொன்னையா நாடார், அ. அப்பாவு நாடார், நாறாயணன் நாடார்** (லீபுரம்), **பெ. சுப்பிரமணியன் நாடார்** (ஆமணக்கன்விளை), **ப. தங்கவேலு நாடார்** (காளாத்திமடம்), **ஆ.பிச்சைத் தேவர்** (வேட்டைக்காரன் குளம்), **ஜெ.பா. சாம் செல்வக்குமார் நாடார்** (புத்தளம்) முனைவர் ஆ.தசரதன் ஆகியோருக்கும் எனது மேலான நன்றியினை உரித்தாக்குகிறேன்.

1

# சித்திரபுத்திர நயினார் கதை

## (ஓலைச்சுவடி பதிப்பு)

(காளாத்திமடம்
ப. தங்கவேலு நாடார் அவர்களிடமிருந்து
ஓலைச்சுவடி பெறப்பட்டது)

## (துதி)

வேபு மா நெறி சேரும் வினைகளும்
தாக போக விடாதத் தள(ர்)ச்சையும்
சோக வாற்றியு(ம்) நால்வரு துன்பமும்
போக யானை முகவனைப் போற்றுவோம்.

## (வருபொருள்)

எத்திசையும் பூமாதேவி யிறைவனார் கயிலை சென்று
சித்திரை பூமி பாரம் பொறுக்கிலே(ன்) நாயே னென்னை
அத்த னாற்றினதிலே நான் தில்லை யம்பலத்திருந்து
சித்திரபுத்திரனார் தன்னை வகுத்ததோர் கதை சொல்வோம்.

## (காப்பு)

சீர்கொண்ட பூதலத்தில் சித்திரபுத்திரர் கதையைப்
பார் கொண்ட செந்தமிழால் பாடவே
பொற்கொண்ட வார்பூத்த கோலமுலை மாதீன்ற
கார் பூத்த குஞ்சரமே காப்பு.

## (கதை)

நான்முக மாலும் கூடி நஞ்சுண்ட கண்டத்தாலே
தேன்மயில் பூமாதேவி சொல்லின மொழியினாலே
வாழ்ந்த னிந்திர னியலா(ள்) வாழ் கோதை
வாழ்(த்)த ஆனதோர் கனக கற்ற (அ)ம்மானை கூறலுற்றேன்.

## (தெய்வத் துதி)

திரு மகிழ்ந்து வாழுமிந்த சித்திர புத்திரர் கதையை
விருப்பமுடன் பாட விநாயகனே முன்னடைவாய்
ஆனை முகத் துடையிருட் கொண்ட பிள்ளையாரே
தென்னை வல்லி சக்தி யிட(த்) தேசிகனே
காரணர்களான காரணிகர் தன் கதைக்கு
வாரான் மாமுகனே வந்தெனக்கு முன்னுதவுவாய்
அத்தி முகனே அரியோன் திருமகனே
வித்தைக்கு மூத்த வினாயகனே முன்னடைவாய்
குத்தம் பொருத்தருளும் குமாரன் துணையோனே
கத்தவர்கள் போற்றும் கணபதியே காத்தருள்வாய்
சக்தி கணபதியே தைய(ல்) நல்லாள் புத்திரனே

எத்திசையும் போற்றும் இறையோன் திருமகனே
பக்தி முத்தியாய்த் தொழுது பாவங்கள் தீர்ப்போனே
சித்திரபுத்திரர் கதையைச் செப்ப அருள் செய்வாயே
சீராக மாதுறையும் சித்திரபுத்திரர் கதையை
நேராக வந்துத(வு)வாய் நீல மயிலோனே
அந்தரியே தாயே அயனா ரிடத் திரு(க்)கும்
சுந்தரியே வெள்ளை நிறச் சோதியே முன்னடைவாய்

## (குரு வணக்கம்)

பக்தி யுடனே பல பொருளும் தெரிசித்த
புத்தி மிகு என் குருவை(ப்) போற்றி மிகப் பாடுகிறேன்.

## (சித்திரபுத்திரனார் பெருமை)

ஆதி அற்றாரும் அச்சுதரும் வேதாவும்
தீதில்லா முப்பத்து முக்கோடி தேவர்களும்
சித்தம் மகிழ்ந்து திறமாய்க் கணக்கெழுது(ம்)
உத்தமனார் இந்த உலகுக்குமோர் கணக்கர்
நேசமுடன் கணக்கு நிச்சயமாய் சொல்லிடுவோன்
புண்ணியம் செய்தோர் திறமும் பூதலத்திலே யிருந்து
எண்ணரிய பாவ(ம்) இயற்றினோர் தன் திறமும்
ஒன்றும் தவறாமல் உள்ளபடி எழுதும்
வெற்றி புனை நற்கணக்கன்
விண்ணோர் தொழும்படிதான்
அத்தி சூழ் நாட்டுக்கு யெங்கு மதிகாரி
முத்தி சூழ் நாட்டுக்கு யெங்கும் முதற்கணக்கர்
நாட்டுக் கணக்கும் நமனார் பெருங்கணக்கும்
ஏட்டுப் பிறத்தில் எழுதும் இயற்கணக்கர்
நல்லோர் குணங்கள் நடுவெழுதும் புண்ணியனார்
பொல்லார் குணங்கள் புறமெழுதும் புண்ணியனார்
தன்னை நினைத்தவர்க்கு(த்) தன்னோன்பு நோற்றவர்க்கும்
இந்நிலத்தில் செல்வம் இயல்பாய்க் கொடுக்க வல்லான்

## (கதையைக் கேட்க வேண்டல்)

நல்ல திருக்கதை நானிலத்தில் சொல்லுகிறேன்
எல்லோரும் நீங்கள் இயல்பாகக் கேட்டரு(ள்)வீர்
உத்தமன் தன்னுரையைக் கேளீர் ஒளிவளையீர்
அத்தரதிகாரிக் கதையை அன்பாகக் கேட்டருள்வீர்
மன்னவன் தன்னுரையைக் கேளீர் மயிலனையீர்
தென்னவன் தன்னுரையைக் கேளீர் மயிலனையீர்
பார் மன்னன் தன்னுரையைக் கேளீர் திருவனையீர்

சீர் மன்னன் தன்னுரையைக் கேளீர் சிறப்புடையீர்
கோவேந்தன் தன்னுரையைக் கேளீர் திருவனையீர்
வாள் வேந்தன் தன்னுரையைக் கேளீர் பாசுமொழியீர்
ஆணழகன் தன்னுரையைக் கேளீர் முதல்வளையீர்
வரமருள்வார் தன்னுரையைக் கேளீர் சிறப்புடையீர்
உத்திரங்கள் பேசாதே உண்மையுடன் கேட்டருள்வீர்

## (கணபதிக்குப் பூசை செய்தல்)

எண்ணரிய சித்திரை மாதத்தில் இயல்புடனே
உண்மைபெற முன்னாள் ஒரு சந்தியாக உண்டு
மத்த நாள் சித்திரைக்குச் சித்திரையில் வன்மையுடன்
உத்த புனல் மூழ்கி ஒளிசேர்ந்த பட்டுடுத்தி
புண்ணியங்கள் ஓங்கி பொழியுமொரு நற்தலத்தில்
எண்ணரிய பந்தலென்ன நிற காவணங்களிட்டு
தோரணங்கள் கட்டித் துலங்க மேல் கூடு கட்டி
பூரண பொற்கும்பம் வைத்து பொன்னின் விளக்கேத்தி
வாழை கரும்புடனே வாழைக் கரும்புதா னிருத்தி
சூழ்மணி பதித்த சோதிமணி ஒத்ததொரு
வேழைமுகத்து வினாயகனை முன்னிருத்தி
வாழை(ப்) பழமும் வருக்கைப் பலாச்சுளையும்
பூமாது கொண்ட புதியதொரு நற்கரும்பும்
அப்பளமும் தேனும் அவல்பொரியும் பயறும்
செப்பமா யோர் உடன் சேர்ந்த கரியமுது
புத்துருக்க நெய்யும் பொதுவறுவாம் பாறக்குழம்பும்
அத்தமதனால் அமுது செய்யப் பண்ணிவித்து
ஏதம் இல்லாத அடைக்காய் இலையமுது
நீதமுடனே நெய்வேத்தியம் செய்தபின்பு
தூபப்புகைக் காட்டி சோதிமணியால் அழைத்து
தீபத் தட்டேந்தி திரு வந்தி(க்) காப்பெடுத்து
சங்கரனார் பூசை அடவுடனே செய்த பின்பு

## (சித்திரபுத்திரனார் வழிபாடும் கதைக் கூறலும்)

சங்கரனார் மெய்க்க தனிக் கணக்கு தானெழு(து)ம்
சித்திரபுத்திரனைச் சீருடனே தான் நிறுத்தி
உத்தமமாம் நல்லொரு சந்தம் எடுத்து வந்து
வாசமிகு நல்ல திரு மஞ்சணத்தில் நீராட்டி
வீசுமிணை சிறிய வெம்பட்டினால் துவத்தி
பீதாம்பரத்து பெருபரு வட்டம் சேர்ந்து
சீதளவும் நல்ல சிறு செண்பக மாலை சாத்தி
நறிய செழுஞ் சாந்தம் நலம் பெறவேதான் சாத்தி

அறிவாய் முறைப்படியே அர்ச்சனை செய்தன(ன்)பாக
தென் நூலும் ஓதுகின்ற சித்திரபுத்திரர்க்கு
முன்நூலணி சாத்தி முத்தாபரணம் இட்டு
சூழ்பானை தண்ணீர் குறையறவே தான் சமைத்து
அன்பால் அடிசிலமுது செய்யப் பண்ணிவித்து
வெள்ளி யிலையினோடு விளங்கு மிடைக்கா யமுது
உள்ள(ம்) மகிழவே நெய்வேத்தியம் வந்துதான் பண்ணியபின்
சொல்லரிய தீபந் துலங்கு மெழிற் தீபமுடன்
பல்வகையும் சேர உபச்சாரங்கள் பண்ணியபின்
பொத்தகத்தினோ டிலங்கும் பொன்னின் எழுத்தாணியும்
வித்தகத்தால் வைத்து விரும்பிய உப(ச்)சாரமுடன்
குத்துடனே மாங்காய் குலையுடனே வாழைக்காய்
இத்தனைகள் ஆனாலும் இல்லை யென்று சொல்லாமல்
பூதலத்தில் உள்ள புதுப்பண்டம் அத்தனையும்
ஈதலத்தில் பார்த்து இன்பமுடன் தெண்டனிட்டு
ஆதரவாய்க் கொண்டு இருக்கை மிகவழைத்து
ஓங்கு உபசாரங்கள் உண்மையுடன் இயற்றி
பாங்கு பெறத் தெண்டனிட்டு பச்சமுடன் சொல்லுமென்றார்
ஆங்கு அவரும் கேட்க வாகா(ய்) கேளுமென்றார்
ஓங்கு புகழ் மாதர் மைந்தர் உண்மையுடன் கேட்டார்
சொல்லும் சொல்லும் என்று துன்பமறக் கேளுமென்றார்
கல்லு(ம்) முருக கருத்துடனே கேளுமென்றார்
மன்னும் புகழுட(ன்) மாங்கலியம் வாழ வென்று
இன்னும் சொல்லுமென்று இன்பமுற்றுக் கேளுமென்றார்
சொல்லடி என்று பேசி சோர்புடைக் கற்புடையார்
மலடிகள் நீங்கள் மனமுருகக் கேளுமென்றார்

## (கதைக் கேட்கத் தகுதியில்லாதவர்)

அள்ளி ஒரு நாளும் அன்புடனே பிச்சையிடா
கள்ளியாய் நீங்கள் கடக்கநின்றி கேளுமென்றார்
துச்சிலுக்கு இச்சையுடன் துன்பம் மிகப்பேசி
எச்சில் வரையா ரியல்போடி கேளாதே
அல்லல் நரகில் அழுந்தும் பொருளாய் இருக்கும்
பிள்ளை அழிக்கும் பெரும்பாவி கேளாதே
சண்டையிட்டு நிற்றலுமே தன்பேச்சு மேல்படவே
கொண்டவனைப் பேணாக் கொடும்பாவி கேளாதே
தன்னகத்தைச் சாத்தி வைத்துத்தான் கலப்பே இருந்து
பின்னங்கள் பேசும் பெரும்பாவி கேளாதே
ஆசையுடன் பேசும் அரும்பாவி கேளாதே
பொசிப்புக் கிடையாமல் பூமிதனில் வந்தலுத்து

பசித்தார் அருகிருக்கப் பார்(ர்)த்திருந்தார் கேளாதே
பூமிதனில் விளைந்தப் புதுப்பண்டம் வந்ததென்றால்
காமியமாய் வேறு கணவனுக்குத் தானீய்ந்து
தனக்கு வகுத்த கணவனுக்கும் தேவருக்கும்
மனத் தின்பந் தானீயாத மாபாவி கேளாதே
உள்ளபொருள் மாதா பிதாவுக்கு மூத்தகுரு
பிள்ளைக்கு உதவாப் பெரும்பாவி கேளாதே
வல்ல கணவனைத் தான் வம்பினால் வீண்பேசி
அல்லல் விளைத்த அரும்பாவி கேளாதே
ஒப்பாருங் கொண்டாடும் லோசியத்தைக் கேளாதே
அப்பாவி எல்லாம் அகல நின்று கேளுங்கோ

### (தகுதியிலார் கேட்டால் பெறும் தண்டனை)

சித்தமுறவே தினந்தோறும் நேசித்து
உத்தமனை நோக்கி ஒருநோன்பு நோற்காதவர்
பட்டிப் பலகாலும் பாவங்கள் தீராது
கட்டளையாகக் கரிந்து நிலம் சாவிகள(ாய்)
அவருடை(ய) அடியார்கள் மாகாசம் போய்விடுங்காண்
அவர் பூண்ட பணியும் பொடிப்பொடியாய்ப் போய்விடுங்காண்
அவர் தேடின பொன்னும் தெருவோ டலைந்துவிடும்
அவர் சிந்தித்த காரியங்கள் சேர்ந்து கைகூடாது
ஒல்லைப் பொழுதிலு வாதித்தனுக் குள்ளாவார்
எல்லைகள் தோறும் இரந்துண்டு போவார்கள்
உள்ளநாள் எல்லாம் ஒதுக்கிவைத்துத் தேடின பொன்
கள்ளரோடு வெள்ளம் கடு(ெ)கனவே கொண்டுவிடும்
சீரும் சிறப்பும் செல்வத்தால் வந்துதித்த
ஏரும் எருதும் அவரிடமும் பாழாய்ப்போம்

### (தகுதியுடையார் பெறும் பலன்கள்)

உத்தமனை நோக்கி ஒரு நோன்பு நோற்றவர்க்கும்
பத்தினியும் ஆவார் பல பிள்ளை(க்கு)த் தாயாவார்
சத்தி சிவம(ாய்) பொருந்தி தாட்டிகரா வாழ்ந்திருப்பார்
உள்ளியோ டுளியு சந்தான முண்டாவார்
உள்ளியோ டுளியு மங்கிலிய முண்டாவார்
உள்ளியோ டுளி யுலகாண்டு வீற்றிருப்பார்
உள்ளியோ டுளி செல்வ மிக வுண்டாவார்
ஆழிதான் வற்றினும் அவர்புகழ் குன்றார்
நாளும் பெரியோராய் நன்றாக வாழ்ந்திருப்பார்
இந்தப் பிறப்பில் ராசாவாய் வாழ்ந்திருப்பார்
அந்தப் பிறப்பில் அருள்பெற்று வாழ்ந்திருப்பார்

தோற்றாதச் செம்பொன் தோன்றும் அவரிடத்தில்
மற்றில்லா செம்பொன் வளரும் அவரிடத்தில்
புண்ணியவ ரானாலும் போதமில்லா ரானாலும்
மண்ணில் மதியுள்ளளவும் வாழ்ந்து மிருப்பார்

## (சித்திரை நோன்பும் பலனும்)

சித்திரைக்குச் சித்திரையில் சீரான பவுரணையில்
உத்தமனை நோக்கி ஒரு நோன்பு நோற்றிடுவார்
மைந்தர் எவரானாலும் மடந்தையளே யானாலும்
எந்தக் குலத்தி லெவர்களே யானாலும்
அந்தகரைக் கொன்ற அரும்பாவி யானாலும்
தந்தைதனைக் கொன்ற அருகள்ளர் ஆனாலும்
நித்தம் மதுவுண்ணும் நீசரே ஆனாலும்
இந்தக் கதையை இயல்பாய்க் கருத்தில் வைத்து
மூந்தச் சிவன் இவரே என்று மொழி பேசி
உலகத் தியற்கை என்று யோக மனம் பேசாமல்
இலகும்படி மனதிலே தோசமும் நினைந்து
நீங்குவாய் இத்தோசம் என்று நேமித்த துண்டானால்
ஆங்கியல்வாய் நோம்புக் கவரே வெளிப்படுவார்
இந்திரனைப் போலே இனிதூழி வாழ்ந்திருப்பார்
அந்த நெடுமால் பாதம் அழகுபெற வாழ்ந்திருப்பார்
சிவனருள் உண்டாகும் தீங்கொருநாள் வாராது
நலமுடைய தோசமெல்லாம் நாடோறு முண்டாகும்
முன்னோன்பு அறியாத முகடரே ஆனாலும்
இந்நோன்பு நோற்றார் இருபதம் பெறுவார்
புத்திரனை இல்லாதார் புத்திரனைப் பெற்றெடுப்பார்
முத்தியருள் புரியும் முன்னோன் பாதம் பெறுவார்
மாங்கிலிய வாழ்வு மனமகிழ்ந்து பெற்றிடுவார்
அங்கனுலக மெல்லாம் அவரே அரசாள்வார்
வல்வினையாம் பாதங்கள் வந்தணுகா என்னாளும்
நல்வினையாம் புண்ணியங்கள் நாடோறும் முண்டாகும்

## (இந்திரன் கதை)

சீரார் செவிசுவர சிந்தைக் களிசுவர
ஆராயிலு மிதனை அன்புடனே கேட்டருள்வீர்
இந்திரனார் தன்னுரையைக் கேளீர் நீர் உத்தமியே
அந்திர வானரசு ஆண்டுவரும் அந்நாளில்
தெய்வலோகத்து அரசு செழித்துங் களிப்பதனால்
தெய்வ லோகத்தைச் செலுத்தி அரசாளாமல்
எண்ணரிய கோடியெடுத்த சிவபூசை தன்னை

பண்ணிப் பிழைத்து பதம் பெற்றுக் கொள்ளாமல்
நாவுலகு பெருந்தீவை நாங்காண வேணுமென்று
தேவர்கள் எல்லோரும் சேரவே சூழ்ந்துவர
செம்பொன் மணித்தேரில் சிறப்புடனே தானேறி
பைம்பொன் உலகும் பதியும்விட்டு தேர்நடத்தி
விண்ணுலகில் கன்னியர்கள் மெத்தனவே சூழ்ந்துவர
மண்ணுலகில் வந்தாரே வாய்த்ததொரு இந்திரனார்

## (அகலிகையைக் கண்டு மோகம் கொளல்)

எண்ணாங் கர இயற்றும் மேந்திழையா(ள்) தான் கலி
புண்ணிய தீர்த்தமாடப் புறப்பட்டுப் பூங்காவில்
தத்தரமாய்ப் போம்பொழுது தான்கண்டார் இந்திரனார்
மெத்த மய்யலாய் மெய்சோர்ந்து அறிவழிந்து
தேர்மேல் விழுந்ததற்பின் தேவர்கள் சென்றெடுத்து
பாராமல் நடந்து பகல்கண்ட ஆசையினால்
காதல்கொண்டு இந்திரனார் மனவினைதா னினைந்து
ஆதரவு பேசி இருக்க அகலிகையிடம்
போய் வாரதுக்குச் சமயப் புத்திகளும் மறந்து
தீயவாய் நரகில் அழுந்தும் திறத்தாலே

## (அகலிகையை அடைய நினைத்தல்)

தேரை மிக நிறுத்தி தேவர்களை நிறுத்தி
ஆரமிகு இந்திரனார் இருபதம் ஏறி
மாயமாய்ச் சென்று மருத்து மாமலை தனிலே
காயகளிற்றையும் நிறுத்திக் காரிருளாகும் நேரம்
மாயபாசத்தை நம்பி வான்பதியைத் தானழிக்க
ஆசைத் துயரால் கலிமனை இடத்தே
சென்றாரே இந்திரனார் தெய்வ சுரும்பாகி

## (கோழியாக மாறிக் கூவுதலும் கௌதமரிஷி பூசை செய்யப் புறப்படலும்)

அன்றிரவு நல்லுறக்க மறிந்து நடுசாமம்
வேளையிது மாமெனவே விடியும்பொழுதே கூவும்
கோழியாய் நின்று கூவினார் இந்திரனார்
அப்போது கௌதம மாவிருஷி அறிவுடனே
எப்போதும் போல இருள் விடிந்ததென்று எழுந்து
தெண்டுங் கமண்டலமும் திருநீற்றுக் கோணியுடன்
கொண்டு சென்று கங்கைக் கரையிற் குறுகிநின்று

### (கௌதமமுனியின் சந்தேகமும் வீடு திரும்பலும்)

கெங்கை உறக்கந் தனைக் கண்ட கோலமாய்
அங்கு நின்று தான் கலங்கி அறிவழிந்து தான் திகைத்து
ஆதித்தன் கண்மலராய் அரும்பாய் இருந்ததுவே
இந்த மாயகை விதியோ ஏதோ தெரியாது
நந்தவனத்தில் சென்றுநாம் அறியவேணும் என்று
ஆதித்தன் கதிர்பட்ட அரும் மலர்கள் எல்லாம்
இதுயென்ன சோதனையோ ஈசுரே தஞ்சமென்று
அதிசாம நேரம் அறியாமல் வந்தோமே
என்று மனக்கவலை எய்தி மனையிடத்தே
சென்றறிவோம் என்று திரும்பிவரும் முன்னாக

### (இந்திரன் முனிவர் வேடம் பூண்டு அகலிகையிடம் செல்லல்)

இந்திரனும் அவ்விருளில் விருஷி சுருபமதாய்
வந்து அகலி(கை)யிடம் வாய்த் த(ர்)க்கம் இட்டு நின்று
மனக் கவலை மையல்நோய் வந்த வரலாற தெல்லாம்
மெனக்கெட இந்திரனும் மின்னோ டுரைத்து நிற்க

### (அகலிகையின் வாதம்)

பாவி கெடுவாய் பத்தினிமார் தன்னிடத்தே
தீவினையாய் வந்தனையே சீச் சீ யுன் மாயகையினால்
நீயும் அழிந்திடுவாய் நிச்சயமே தப்பாது
ஆசையில் வந்தவர்க்கு அகலி(கை) யுரைத்து நிற்க

### (இந்திரன் இறைஞ்சி நிற்றலும் முனிவர் வருகையும்)

வாசலனும் மாய மயக்கத்தால் வந்து இறைஞ்சி
ஆசைத் துயர்தீர்ப்பாய் அகலி(கை)யே என்ற போள்
அப்போது மாவிரிஷி யவ்விரா சாமமதில்
மெய்யாகப் போனவரும் மீண்டுவந்தார் கண்டீரே

### (முனிவரின் கேள்வி)

கண்டு யிதுவேது கனமாயம் என்று சொல்லி
அண்டர் பதிக்கோனா ஆரடா என்பதியில்
பூனைச் சுருபமாகப் புகுந்தொழிந்தான் இந்திரனும்
பூனைச் சுருபமாக பொன்னுல(க) இந்திரனே
அருந்துயில் நேரம் அறிவுகெட்டு வந்ததென்ன

### (இந்திரன் பதில்)

பேரும் பிறப்பும் பித்தது மென்றான நேரம்
இந்திரன் னான் கானரிஷி ஏயும் இடத்தில்

வந்தது வேறல்ல வருளிபலன் உண்டான
சாஸ்திரங்கள் கேக்கதான் வந்தேன் என்றுரைத்தான்

(முனிவர் மறுத்துரைத்தல்)

சாஸ்திரங்கள் நல்லதடா சாமத்திலே கேள்ப்பாய்
இந்நேரம் வந்(து)தெல்லாம் இடும்பு விளைக்க என்று
என் அகலி(கைக்கு) இச்சையுற்று வந்தாயே இந்திரனே
என்றே இருஷி யிருவிழிகள் கனல் சொரியே

(முனிவர் சாபமிடல்)

இன்றிரவு நேரம் மா இந்திரலோகம் அழியும்
இச்சாபம் இந்திரனை இட்டு எரியாமல்
துறச்சாபம் வேற சொல்லுவார் மாவிரிஷி
ஒருயோனி தானிருக்க உள்ளாசை கொண்டு மறு
ஒருயோனிக் காசை வைத்தாய் ஒருக்காலும் இப்பாவம்
தீராதுவென்று செப்பித் திரும்பியு மோர் சாபமிட்டார்
ஆராருந்தான் நகைக்க ஆயிரலிங்கம் உன்மேல்
வெடிக்கவென்று சாபமிட்டார் வெடித்ததுகாண் அன்நேரம்

(இந்திரன் முனிவரிடம் பிழைபொறுக்க வேண்டல்)

அடிக்கடி வீழ்ந்(து) தொழுது அறியாமல் செய்தப் பிழை
வெரியோனே நீ வொறுப்பாய் பிழைசெய்தேனே சிறியோன்
அரியவினை காமநோய் ஆசைமதனால் விரும்பும்
வஞ்சனும் நானே மாபாவியும் நானே
பஞ்சவினை மாயப் பழியும் சுமந்தேனே
வஞ்சகமாய் செய்தகுற்றம் மகாரிஷி நீ வொறுப்பாய்
பஞ்சவினைப் பாதகங்கள் பாபமே நீ வொறுப்பாய்
என்று சொல்லி இந்திரனு மிருஷியி(டம்) தெண்டனிட்டவன்
இந்திர லோகம் இழந்து நான் போகாமல்
இச்சாபம் தீ(ர்)த்து இரச்சிப்பாய் என்று மிக
அச்சாபத்தோட அருகேதான் நிற்பளவில்

(முனிவர் சாபம் தீர வழி கூறல்)

இருஷியும் இந்திரனைப் பார்த்தே இயம்பலுற்றார்
இருஷிகள் சாபம் இந்திரனே தீராது
ஆணவ மாய்கையினால் அழிய வந்தாய் இந்திரனே
தானுமா(ல)லயனையும் நீ தாரணியில் பூசைசெய்தால்
ஆயிர லிங்கமுந்தான் ஆயிரங்கண்ணாகும் என்றார்

## (இந்திரன் பூசை செய்தல்)

ஆயிரங் கண்ணாகும் என்ற அருள்முனியைத் தெண்டனிட்டு
தாணுமா(ஓ)லயனை(த்) தன்மனத்திலே துதித்து
ஆணவ மாய்கையெல்லாம் அடக்கியே போகமுற்று
தாணு மா(ஓ)லயனைத் தான்பூசை செய்துமிக
தான் செய்தக் குற்றம் தானுமே தீருமென்று
வானிருஷி சாபம் மா(ஓ)லயனே தீருமென்று
குற்ற(ம்) மற்ற(து) செய்ததெல்லாம் குருவே நீ தீருமென்று
மெத்தவே பூசை விரும்பியே செய்யலுற்றார்

## (மகாதேவர் வரம் கொடுத்தல்)

பூசைதனைச் செய்தப் புதுமைதனைக் கண்டாரும்
வாசமிலாக் கொன்றையணி மகாதேவர் வந்துடனே
ஆயிர லிங்கமுந்தான் ஆயிர(ங்) கண்ணாகுமென்று

## (இந்திரன்தேவி மலடாய் இருத்தல்)

ஆயிரங் கண்ணான் ஆயிராபதத் தோனும்
அரன்பாதம் தான் வணங்கி அமராபதி ஆண்டு
வர(ம்) அதிகம் பெற்று வாழுமந்த நாளையிலே
தானும் மலடாய் தன்தேவி த(ா)ன் மடலாய்

## (இந்திரலோகம் முழுதும் மலடாய்ப் போதல்)

வானவர்கள் எல்லாம் மலடாகப் போனதுவே
பூமி விளையாமல் பொன்மாரி பெய்யாமல்
காமன் எரிந்ததுபோல் காவெல்லாந் தானெரிய
ஆ(க)மபொருள்கள் எல்லாம் அத்திறமாய்ப் போனதுவே
காய்கள் பழுக்கும் மகரமரம் காயாதிருந்ததுவே
பூமரங்கள் எல்லாம் பூவற்றி இறந்ததுவே
மாமரங்கள் எல்லாம் வடுவு திறந்துப் போனதுவே
பால் பசுக்களெல்லாம் பால்வற்றிப் போனதுவே
பால் வற்றி தான்மலடாய் பசுவெல்லாம் போனதெல்லாம்
வானத்தில் பச்சியெல்லாம் மலடாகப் போனதுவே
கானத்தில் வாழ்மிருகங்(கள்) கடுமலடாய்ப் போனதுவே
ஈனா மலடாய் எல்லா உயிர்கள் எல்லாம்
தானாக நின்று தனியேதான் நிற்பளவில்
புல்லும் கருகி யொரு பூக்களும்தாம் இல்லாமல்
கல்லும் புவனமெல்லாம் கடும் சூட்டினால் வெடிக்கும்
இந்திரலோகம் எல்லாம் இப்படியே ஒழிந்து
இந்திரலோகம் எல்லாம் இயல்வழிந்து போனதுவே

## (இந்திராணியின் புலம்பல்)

இந்திரனார் தேவி இயல்வல்லி தானறிந்து
இந்திரனாரோடே வாழ்கோதை ஏது சொல்வாள்
விண்ணும் மண்ணும் உள்ளளவும் விமலனார் கட்டளையோ
எண்ணும் இளமையுமாய் இங்கொருத்தி நானிருக்க
கௌதமா ரிஷியுட கிழத்திக் காசையுற்றாய்
அவரிட்ட சாப முன் அவனியெல்லாம் சூழ்ந்ததுவே
ஆறிலொன்று கொண்டு அசையா மணிதூக்கி
மாரி யெல்லாம் ஆண்டு மதி மயங்கி விட்டாயோ
அனத்தம் விளைத்தாயே அந்திரமே நின்றாயோ
மனத்தில் துயரமெய்தி மலடாய் இருந்தோமோ
இடுவார்கள் பிச்சையைத் தானீயாதே யென்றோமோ
படுவார்கள் பட்டதெல்லாம் பட்டோம் நாம் இந்திரரே
அம்பலத்தில் நின்று அநியாயம் சொன்னவர்போல்
வம்பாக வாழ்ந்து மலடாய் இருந்தோமோ
உள்ளார் உடைமைக்குப் பேராசைபட்டவர்போல்
ஆராரும்மே சிரிக்க யான் மலடாய் யானேனே
காவலனே நாமும் மலடாகவும் பறவை மிருகம்
தேவர்களும் மொக்கச் சேர மலடாச்சே
இந்தவகைச் சொல்லி இந்திராணி புலம்ப

## (இந்திரன் பதிலுரைத்தல்)

இந்திரனும் கேட்டு லச்சையுற்று தான்வாடி
பொன்னுலகு இந்திரனார் புத்திரனே இல்லாமல்
தன்னுடைய வுள்ளமும் தளன்று மிகவாடி
என்ன விதியோ எனக்கு மகனில்லை என
தன்னிகரில்லாத தேவி தனக்கேதுரைப்பான்
மானே மயிலே மயிலே மட வன்னமே
தேனே கனியே தேவர் தொழும் தெள்ளமுதே
அந்தரன் மனம் மாற அடிமை கெள்ளு ஆரணங்கே
எந்தன் மனக்கவலை இப்போது கேட்டருள்வாய்
ஆயிரம் கோடி அடியார் இருந்தாலும்
ஆயிரம் ஞானியரெல்லாம் வந்து தொழுதாலும்
கோடித் திரவியங்கள் குப்பையாய் தூத்தாலும்
தேடு மிரு நிதியும் சே(ர்)ந்துபணி செய்தாலும்
பாலும் பழமு(ம்) நல்ல பாக்கியங்கள் சேர்ந்தாலும்
நூல் பலவும் கல்வி நுண்ணறிவு கற்றாலும்
புத்திரனே யில்லாமல் பூதலத்தில் வாழ்பவர்க்கு
வரத்தினை உண்டானால் வாழ்வுமில்ல்லை கண்டீரே

## (பிள்ளையில்லாதாரின் நிலைக் கூறல்)

ஆனை குதிரை அது வாள பிள்ளையில்லை
சேனையுடன் தேவர் சென்றுத் தொழுப் பிள்ளையில்லை
மைந்தனில்லா வீட்டில் மறையோர் வொசியார்கள்
அந்த மகவில்லா அகத்திலுமே செல்லார்கள்
பிள்ளை யில்லார் தம்முடன் பேசவுமே செய்யார்கள்
வள்ளைக் குழலே மைந்தனே யுண்டானால்
எல்லை பரு நரகில் லயத்திலே ஏங்கிடினும்
உள்ள வறுமை குழன்றுப் பலியேற்றிடினும்

## (இந்திரன் குழந்தைக் கிட்டுமெனல்)

தாள வரவென்று தழைப்பவர்களும் அவரே
வாழ வரவே வாழ்ந்து மகிழ்வாரும் அவரே
முத்தரென வாழ்ந்து மொழிவார்களு மவரே
அத்தனுடைய அருள் பெற்றோரும் அவரே
எல்லாக் குணமும் எழுதியவர்க்கு உண்டாகும்
நல்லோர் ஒரு மகனை நானிலத்தில் பெற்றிடுவார்
இன்மை பெற இப்புவியில் இனிதாக வாழ்ந்த பின்பு
நன்றாக இப்புவியில் நன்றாக செய்கடங்கள்
செய்து முடித்துத் திரும்ப நம்பேர் சொல்லுவார்

## (இந்திராணி பதில்)

உய்யும்படி இது காண் உண்மை மிக்க கேட்டருளீர்
என்று மனையாளுடனே இயல்வாகச் சொல்லியபின்
துன்று மலர்க்குழலாள் சுந்தரியும் ஏதுரைப்பாள்
எந்தனுட காதலனே எல்லார்க்கும் நாயகமே
மைந்தனில்லாதே நாம் மழைகாணா வாழ்பயிர்போல
வாடித் தளன்று வருந்தி மனங்கலங்கி
தேடித் தவம்செய்துச் சிறுவனில்லாதே இருந்தோம்

## (சிவனை வழிபட்டு வரங்கேட்கப் புறப்படுதல்)

என்றுரைத்தச் சுந்தரிக்கு இந்திரனும் ஏதுரைப்பார்
சென்றுச் சிவன் கயிலை சேர்ந்துத் தவம்புரிந்து
சந்ததியை வேண்டி தவமேற்ற வேணு(ம்)மென்று
இந்திரனும் தேவியுமாய் ஈசுரன்பாற் போகவென்று
சங்கரனார் அஞ்செழுத்தை தன் மனதிலே நினைந்து
மங்கைபங்கர் வாழ்கயிலை நோக்கி வழி நடந்தார்

## (நந்தியைத் தொழுதல்)

தென்கயிலை வெற்படைந்தத் தெய்வேந்திரனாரும்
அன்புடனே வாசலது காக்கும் நந்திதன்னை
சென்றுக் கண்டு தெண்டனிட்டு சீர்பாதம் கண்ணிலொற்றி
நின்றிரு கைகூப்பி நெடுமுச்செறிந்து நின்றார்

## (நந்தியின் கேள்வி)

நெடுமூச்செறிந் தழுது நின்றவனைத் தான்பார்த்து
தடுமாற்றமின்றி நந்திதான் ஏதுவார்த்தைச் சொல்வார்
பொன்னுலகை ஆளும் புலந்திரனே இந்திரனே
நின்னுடைய தேவியுடன் நீவந்த காரியமேன்
மெய்வருத்த முற்றாய் விதனமிக உண்டானாய்
கைவருத்தமுற்றி இரண்டுகாலும் வருத்தமுற்றாய்
ஓடிவந்தாய் இங்கே உளங்கவர்ந்து என்றனையும்
தேடிவந்தாய் இக்கருமம் செப்பாய் என உரைத்தார்

## (இந்திரன் பதில்)

அவ்வார்த்தைக் கேட்ட அமரர்கோன் ஏதுரைப்பான்
எவ்வார்த்தைதான் நான் இயம்புவேனோ அடியேன்
சீராய் உரைக்க சிரிப்புவரும் எல்லோர்க்கும்
ஆராய்ந்தும் உன்னடியேன் ஆனாலும் சொல்லுகிறேன்
புத்திரனை இல்லாதார் பொன்னுலகத்தே அறியார்கள்
அத்தகைய பொன்னுலகை ஆண்டிருந்து பிள்ளையில்லை
சந்ததிக்காய் நானடியேன் தவங்கிடக்க வந்தேன்நான்

## (நந்தி தவமியற்றச் சொல்லுதல்)

எந்தனைக் காத்திங்கே ரட்சிப்பாய் என்று மிக
அந்தமொழிக் கேட்டு அருள்நந்தி ஏதுரைப்பான்
வந்ததுவும் நன்று மகனுமுனக் குண்டாகும்
சிவனோடு உமையவளைச் சிந்தையுள்ளே தானினைந்து
தவ மாதினோடு தரையில் கிடவும் என்றார்
என்று நந்தி சொல்லு மியல்வாகவுங் கேட்டு

## (இந்திரனும் இந்திராணியும் தவமிருத்தல்)

நன்றெனவே இந்திரனும் நல்லதொரு தேவியுமாய்
பொன்கயிலை வாழ்தவத்தோர் புதுமையெல்லாம் பார்த்து
வைப்பார்
மின்கொடியே நம்மால் விளம்ப அரிதாமெனவே
எவ்வாறு தவம் புரிவோம் என்றே தெய்வேந்திரனும்

கொவ்வாய் பசுங்கிளியே கோதையே கண்டாயே
உள்ளமும் உச்சியும் ஒன்றும் தெரியாமல்
தள்ளரிய புற்று வளர்த்துத் தவங்கிடந்தார்

## (தவமிருந்த நிலை)

வேருகளோடி வியன்மரங்கள் தான் முளைத்து
பாருக்குள் வேரோடி படர்ந்துத் தவங்கிடந்தார்
இந்தப்படியே இயல்வாய் தவம் கிடந்தார்
அந்தத் தவத்தருமை அத்தன் அறிந்திலரோ
இந்தப் படித் தவங்கள் செய்வோம் என நினைந்து
சுந்தரியார் தம்முடனே சொல்லி விசாரமுடன்
பாதாளம் வெட்டி பருக்க அனல் வளர்த்து
வேதாள அக்னிகள் மேலே படர்ந்தெரிய
ஈசனே பிள்ளை யருள் என்றே தவங்கிடந்தார்
தேசனே பிள்ளை யருள் என்றே செப்பலுற்றார்
தண்ணீர் அருந்தாமல் சருகுப் வாசியாமல்
கண்ணீர் சொரிய கனல்கள் கவிழ்ந்து விழ
இந்தப்படி ஆண்டு இரண்டாயிரம் கிடந்தார்

## (சிவனும் பார்வதியும் இந்திரனிடம் செல்லல்)

அந்தத் தவத்தருமை அத்தனார் தாமறிந்து
தூய்ய தவத்தருமை சோதி யறிந்தற் பின்
பையரவிடம் மீதிருக்கும் பார்பதிக்கே ஏதுரைப்பார்
மின்னே உமையே விளங்கும் கிளிமொழியே
பொன்னே அவரருகே போவோம் எனப் போனார்

## (இந்திரன் பிள்ளை வரம் கேட்டல்)

கண்டான் சிவவரவு காதிலுற்று தானெழுந்து
வண்டாடும் தார்மார்பா வரந்தாயெனப் பணிந்தான்
முப்பத்து முக்கோடி தேவர் தொழுதுநிற்க
செப்பத்துடன் பிரம்மர் சேர்ந்த அரியுடனே
கந்தன் விநாயகன் கனக உருத்திரரும்
வந்த புதுமையெல்லாம் கண்டு மனமகிழ்ந்து
ஏதேது வேணுமென்று ஈசர் மனமகிழ்ந்து
பூலோகம் ஆளவொரு புத்திரனை வேணுமென்றார்

## (சிவன் மறுப்பும் பார்வதி பதிலும்)

இந்தப் பிறவியில் உனக்கில்லையே பிள்ளை என்றார்
அந்தமொழிக் கேட்டங் கருள்வா ளுமை யவளும்
நன்று நன்று தேவரீர் சற்றும் நடுவறிவீர்

ஒன்றும் அறியாது உலகத்தியற்கை என்று
ஆபாதகராய் சடன்ாய பாதகராய்
மாபாத(க)ராக வாழும் அந்த மானிடர்க்கு
உண்ண உடுக்க ஒருவகையும் இல்லார்க்கு
எண்ண மறியாத ஈனசண்டாளர் தமக்கு
கொடுப்பீர் மகப்பேறு கோலமுரையு மகற்கே
நடுநாயம் ஒன்று(ம்)மில்லை நாயகரே உம்மிடத்தில்
என்றுமையாள் சொல்ல ஈஸ்பரனார் தானகைத்து

**(சிவன் பதில் கூறல்)**

நன்றுமையே சொன்னாய்கேள் நாமிதுக்கங்கேது சொல்வோம்
செய்தார் தவம்பெறுவார் செய்யார் முடைவடைவார்
உய்யும்படி இதுவே லோகத் தியற்கை யென்று
தெய்வேந்திரன் செய்தத் தீவினைகள் மெத்தவுண்டு
மைதவழுங் குழலாளே அவன் மனத்தின்படி அருள்வோம்

**(பார்வதி பதிலும் சிவன் வரமளித்தலும்)**

என்றரனார் சொல்ல இமைய மயில் ஏதுரைப்பாள்
இன்று திருக்கண் கண்டா லொழிந்தோமோ
பார்வதிச் சொல்ல பரமசிவன் இறங்கி
தார்புகழும் இந்திரனே தந்தோம் நாம் பிள்ளை என்றார்
சங்கரனார் சொல்ல தவமுனியே போமெனவே
பொங்குக் கயிலையிலே போயங்கே வீத்திருந்தார்

**(சிவன் காமதேனுப் பசுவை அழைத்தல்)**

வீத்திருக்கும் தேவரிவர் விண்ணாளும் இந்திரர்க்கு
நாற்றிசையேன் புத்திரனைநான் கொடுக்கவேணும் என்று
சித்தந் திரும்பி திருமுகம் தான் மலர்ந்து
பற்றியுள்ள காமதேனுயென்னும் பசுவைத் தானினைத்தார்
நினைக்கும் பொழுதில் அந்த நேசமுள்ள நற்பசுவும்
கனைத்து வந்து சங்கரனார் கண்முன்னே தோன்றிடுமாம்

**(பிள்ளை ஈன்று கொடுத்துவரச் சொலல்)**

தோன்றுமந்த நற்பசுவை சுவாமிமுகம் நோக்கி
மூன்றுலோகம் போற்றும் முடிவேந்தன் இந்திரனும்
சந்ததி இல்லாமல் தளன்று மிக வாடி
வந்து நம்மை நோக்குமிகு மாதவங்கள் செய்து நின்றான்
பிள்ளை அவன் றனக்குப் பிள்ளை உண்டென்றே உரைத்தோம்

அன்னவன் பின்போய் அறிவுடைய பாலனொன்று
ஈன்று கொடுத்தற்பின் இங்குவா என்றுரைத்தார்

(பசுவின் பதிலும் சிவன் அருள்பாலித்தலும்)

தோன்றும் பசுவுமப்போ தொழுது விழுந்தெழுந்து
உத்தமரே நீர்தான் உரைத்தபடி புரிவேன்
வித்தகரே போக விடைதாரும் என்றதுவே
போகவிடை தாருமென்ற பொற்பசுவைத் தான்பார்த்து
அகமகிழ்ந்து அருளி அன்பாய் அனுப்பினாரே

(பசு இந்திராணியைப் பின் தொடர்தல்)

வேதப் பசுவுந்தான் மிகக்குளறக் கன்றாகி
போதத் துடைமிகிர்ந்து போந்தது நற்பசுவும்
இந்திரனும் தேவியுமாய் இன்பமுற்று மீண்டனரே
அந்திரமாய் நற்பசுவும் அவர்பிறகே வந்ததுவே

(இந்திரன் பசுவக் கண்டு இந்திராணியிடம் கூறியது)

பின்னே கனைத்து மிகப் பின்தொடரும் கன்றுதனை
முன்னே திரும்பி முகம்குளிரப் பார்த்தனரே
தோன்றும் குளற கன்றுதனைக் கண்டெடுத்த தூயோனும்
நற்ற குழற் சுந்தரிக்கு நன்றாய் யெடுத்துரைப்பான்
உமையம்மை பங்கிலுறை உத்தமனார்தான் நமக்கு
சமைய வளாகப் பசுவை சந்ததியாய்த் தந்தார்காண்

(இந்திரன் அமராபதி புகுதல்)

என்று சொல்லி இந்திரனார் இதயம் மிகக்குளி(ர்)ந்து
கன்றை இருகையாற் கட்டியெடுத் தணைத்து
ஒருவர்க் கொருவர் உண்மை மிகப்பேசி
தருவர் குளறகன்றைத் தான்மிகக் கொண்டோடி
சந்ததியாம் என்று கன்றைத் தானணைத்துக் கொண்டாடி
இந்திரனார் சந்ததி பெற்றிங்கே வா நீரெனவே
அயிராபதத்து வெள்ளை யானையுடன் தேவரெல்லாம்
இயல்வாக வந்து எதிர்ப்பவு அஞ்சி இட்டார்கள்
தேவத் திரளும் அந்த சேனாபதித் திரளும்
ஆவலுடன் சூழ்ந்து அம்பொற்பதி புகுந்தான்
அம்பொற்பதியில் அழகான கற்பகம் சூழ்
செம்பொன் இரவியில் சிறப்புடனே வீத்திருந்தார்

### (தாதியர்களுக்குக் கட்டளையிடல்)

மங்காத கன்றை வள(ர்)த்தெடுக்க வேணுமென்று
தங் காதலாலும் அந்தத் தாதியரைத் தானழைத்து
மானனையீர் நீங்கள் மனமகிழ்ந்து கண்டீரே
கானகத்தில் ஓட்டாமல் கட்டா வளவுமென்றார்

### (தாதியர் செயல்)

சாற்றுமந்த வார்த்தைதனைக் கேட்டுமந்த தாதியர்கள்
போற்றி எடுத்தணைத்துப் பொன்போல வள(ர்)த்தார்கள்
பாலமுர்தம் ஊட்டி வெள்ளைப் பாவாடை மேற்கிடத்தி
சீலமுடன் போற்றி சிறப்பாய் வாழ்வு(ம்) என்றார்
ஒரு நாளைக் கொருநாள் ஓங்கியவள் சந்ததிபோல்
அருமையாய்க் கன்றுதனை அன்பாய் வளர்த்தனரே

### (கன்றிற்குப் பெயரிடல்)

ஆர்பேரிடுவோம் என்று அரியதொரு நற்பசுவை
சீர்பெருகும் இந்திரனார் சிறந்ததொரு தாயார்பேர்
மாவேந்திரியா ளென அவரழைத்தார் நற்பசுவை

### (கன்றின் அழகு)

தெய்வேந்திரன் வளத்த தெய்வமணிக் காராவும்
கொம்பு இரண்டும் பொன்னா(ய்) கொளம்பு(ர)ண்டு வெள்ளியதாய்
செம்பதுமை போலும் திருவழகு நின்றிலங்க
மேருவரை போற் பசு மீறி வளர்ந்ததற்பின்
சேருவரை நானாட்டைச் சென்றது அம்மளவும்

### (இந்திராணி புலம்புதல்)

மைந்தன்மேல் ஆசையதாய் வாழ்கணவனைப் பயிற்று
இந்திரன் தேவி வாழ்கோதை என் சொல்வாள்
நான்தான் மலடிருக்க நான்பாவம் செய்தபடி
தானாக வந்த தனப் பசுவும்தான் மலடாய்
நிற்குதே ஏதுகுறை என்று நினைத்துப் பாரும்
மிக்க மக(வு) ஆசையினால் மின்னனையாள் சொன்னமொழி

### (இந்திரன் சிவனிடம் முறையிடல்)

இந்திரன் முன்கேட்டோடி ஈசர் திருமுன்பாக
வந்து அறிக்கையிட்டு வணங்கிநின்று என்சொல்வார்
மகன் தருவோம் என்று வாக்கருளிச் செய்தீரே

அகம்மகிழ்ந்து சந்ததிக்காய் அடியேனும் ஓடிவந்தேன்
பூமி கணக்கெழுதப் புண்ணியனார் வேணுமென்றார்

## (சிவன் தேவர்களை அழைத்தல்)

நாமிதற் கென்சொல்வோம் என்று நயந்திருந்து
ஆலமிடற்றோனும் அரிய பிரம்மாவை நினைத்தார்
மாலும் பிரம்மாவும் வந்தங் கடி பணிந்தார்
முப்பத்து முக்கோடி தேவர் முனிமூவர்
அப்பற்றியான அறுபத்து நாக்கோடி
இருஷி கண நாதர்களும் எமன் இனிதேவும்
நிருபன் குபேரன் நிருதி திசை பாலர்களும்
சந்திர சூரியரும் சத்தி மகாமுனியும்
கந்தன் கணபதியும் கார்வருண மன்மதனும்
தேவர்களோடே சிவனை அடிபணிந்தார்

## (சிவன் பதில்)

மூவர் முதல்வ னப்போ மொழிவார் ஒரு வசனம்
இந்திரனார் சொன்னமொழி எல்லோரும் கேட்டருளீர்
சந்ததிதான் வேணுமென்று தான்வந்தான் கண்டீரே

## (பூமாதேவியின் கோரிக்கை)

பூமாதேவி அப்போ போற்றிநின்று என் சொல்வாள்
பூமிபாரம் எனக்கு பொறுக்கவே கூடுதில்லை
பூமி புளுக்குதென்று பூமாதேவி சலித்து
பூமிபாரம் இறக்கப் புண்ணியனார் வேணுமென்றார்
தேவர்க்குத் தேவே சிவனே சிவனேயென்ன
மூவர்க்கு மெட்டாத முதலே விண்ணப்பமென
சாவுதான் இல்லாதுதான் துடிக்குது உன்னருள்தான்
ஆவிபோகாமல் அலுத்து நெடுநாள் கூடி
மது மற்றன தாளியிலே வைக்கிதே யின்றளவும்
இதுதானே நாற்றம் மேலுலகம் தான்வெடிப்பாய்
எனக்குத்தான் நாற்றம் பொறுக்குதில்லை எம்பெருமான்
மனக்கவலை தீரும்மையா என்று வணங்கி நிற்க

## (சித்திரபுத்திரன் பதில்)

அத்தாதி செயிற்று அப்போது கையமத்தி
சித்திரபுத்திரரைச் சிருஷ்டித்தார் அந்நேரம்
ஏழு நாகவளியும் எழுதிக் கொடுத்தாராம்

பாவி கணக்கும் பஞ்சமா பாதகர்தன் கணக்கும்
நாவுலகத் திலுள்ள நன்மை நத்திறக் கணக்கும்
அல்லல் பிறப்பறுக்கும் பலவாதன கணக்கும்
எல்லாக் கணக்கும் எழுதிக் கொடுத்தார் இயல்புடனே
இறைவார் முதலாக எல்லோரையும் வணங்கி
இறைவா ருளகணக்கை இயல்புடனே தான்வாங்கி
ஆர்வயிற்றில் சென்று அவதரிப்பேன் என்றுரைத்தார்

## (பசுவயிற்றில் அவதரிக்கப் புறப்படுதல்)

பேர்பெருகும் இந்திரன்தான் போற்றும் பசுவயிற்றில்
நறவெனப் பொய்கைதனில் நளினமலராய்த் தரித்து
வெறவென்று சொல்லிப் பிறப்பேனெனப் போனார்

## (தாமரைப் பூவாய் உருமாறல்)

போனதொரு சித்திரபுத்திரனார் அப்போது
ஆனதொரு தாமரைப் பூவாய் அவதரித்தார்
முன்னூற்றுக் காதம் முழுக்கவுள்ள பொய்கையிலே
நன்னூல் பிறசாதி நாடிவரும் பொய்கையிலே
அஞ்னூற்று காதம் அகலமுள்ள பொய்கையிலே
பஞ்சந்தி பொய்கைக்குள் பாவிற்ற பொய்கையிலே
எட்டிரட்டி கோடி இடமுள்ள பொய்கையிலே
மட்டுமலர் தாமரைகள் மருவிநிற்கும் பொய்கையிலே
சந்திரச் சூரியரும் சந்திப் பண்ணும் பொய்கையிலே
அந்தணர்கள் நால்வேதம் ஆய்ந்துரைக்கும் பொய்கையிலே
கன்னிமார் வந்து கலந்து நிற்கும் பொய்கையிலே
சன்னதி சிவாலயங்கள் தானுறையும் பொய்கையிலே
பத்தி முத்தியான பதவி தரும் பொய்கையிலே
சத்தி மகாமுனிவர் தவம் செய்யும் பொய்கையிலே
ஆயிர செங்கழுநீர் அலருமந்தப் பொய்கையிலே
ஆயிரந் தாமரைப்பூ தளிருமந்தப் பொய்கையிலே
வானவர் வெள்ளானை வந்திறங்கும் பொய்கையிலே
சாதிப் பிராமணர்கள் சந்தி பண்ணும் பொய்கையிலே
வேதப் பிராமணர்கள் வேள்விசெய்யும் பொய்கையிலே
தாமரைப் பூவாக தரித்தார் பெருங்கணக்கர்

## (இந்திராணி கனாக் காணுதல்)

தாமரைப் பூவாகத் தரித்திருக்கும் வேளையிலே
இந்திரனார் தேவி இன்பமுடன் கண்டு சொல்வாள்
மைந்தனாய் வந்து மடிமேல் இருந்திடவும்
காயாதப் புன்னைமரம் காய்த்துமிகப் பூத்திடவும்

சேயாக வந்து தெருவில் விளையாடிடவும்
அதிசயமாய் அரிய கனா கண்டேனென்று
புதிய திருவாசகமாய்ப் புகழ்ந்திருக்கும் அந்நேரம்

### (பசுவை காட்டில் இனத்தோடு மேயவிடல்)

கட்டுத்தறி பிடுங்கி கன்னியிளங் காராவும்
ஈட்டமுடன் வந்து எதிராக வந்ததுவே
கூப்பிட்ட சத்தம் குலக்கொடியாள் தான்கேட்டு
காப்பிட்ட கைகள் ஊறவே கழுத்தணைத்து
நான் மலடி என்று நலிவார்கள் இப்புவியில்
ஆன மலடி என்று அதிசயங்கள் சொல்வார்கள்
என்னோட கூடி மலடிருக்க நீவிதியோ
உன்னினத்தே கூடி வனத்தில் உறையாயோ
பூவார் சடையார் பொருட்டால் வெதும்பவிட்டு
நாவார வாழ்த்தி நறப்பசுவே இப்போது
பாஞ்சுவிடாதே பசுக்களுடன் கூடி
மேஞ்சு வாரும் என்று விட்டாளே அப்பசுவை

### (பசுவின் அழகு)

சிலம்பு மிகப்புலம்ப செழும்சதங்கைக் கொஞ்சிடவே
தலங்க எதில்லாமல் தான்மெல்லவே நடந்து
கண்டவர்கள் சொக்கலியோ இதுவெனவே
அண்டர் புகழ் அழகுப் பசுக்களுடன்
போனதுக் கானப் பசுவும் பொருந்தும் இனத்துடனே

### (பசு தீனி உண்ணல்)

கானகமெல்லாம் கடந்துக் கருமலையில் சென்றேறி
ஈனாதச் சாவியுடன் இளம்புல்லும் தானருந்தி
தானாகவே உதிர்ந்தச் சருகுமிக வருந்தி
பொற்புல்லும் தின்றுப் புனற்புல்லும் தானருந்தி
நற்புல்லும் தின்று நாவறண்டு வாயுலர்ந்து
தண்ணீர் உள்ளது தானொர்த்த மாட்டாமல்
தன்னவரும் பொய்கை தான் தேடியே ஓடி
தண்ணீரை நாடியங்கே ஓடிவரும் அளவில்

### (பசு தாமரைப் பொய்கையில் நீரருந்துதல்)

புண்ணியனார் வந்துதித்தப் பொய்கைப் பெருமைச் சொல்லி
பன்னிரண்டாயிரப் பரப்புள்ள பொய்கையது
இன்னிரண்டு பேசா இணைக்கமுள்ள பொய்கையது

வண்டுகளும் தும்பிகளும் வந்துறையும் பொய்கையது
கொண்டு பாலன்னம் குலாவி வாழ் பொய்கையிலே
தாமரை நின்று தயங்குமந்த பொய்கையது
பூமலியும் இந்திரையர் போற்றிநிற்கும் பொய்கையது
புண்ணியனார் வந்துதித்தப் பொய்கைக் கரையில் வந்து
நண்ணி இயந்த நன்றாக உள்ளிறங்கி
முன்னங்கால் வைத்து முகரையது நீட்டி
பின்னங்கால் பூமியிலே பலமிக வூன்றி
முத்தாமரை இலையை முகரையதனால் நீக்கி
சுத்தமாய்த் தண்ணீரைத் தானருந்தும் அந்நேரம்

### (தாமரைப்பூவை விழுங்கி பசு கர்ப்பந்தரித்தல்)

சித்திர புத்திரனார் சென்றுறைந்தப் பொய்கையிலே
நந்திய(ா) பூவை முறித்து நாயருந்தான் போட்டுநிற்க
தண்ணீருடன் பசு தாமரைப் பூ விழுங்கி
உண்ணீருடன் வந்து உரப்பலிற்றார் உத்தமனார்
பூவினுடன் கெர்ப்பம் பொலிந்து வளர்ந்தோங்க

### (கர்ப்பந் தரித்தப் பசுவின் நிலை)

தரித்த பொழுதே பசு தான்கலங்கி மெய்சோர்ந்து
வரித்த வயிறிட்டு வெண்கனங்கள் தோன்றாமல்
கைசோர்ந்து மெய்சோர்ந்து காலில்சிலம்பு புலம்ப
மெய்சோர்ந்து மாய்கையதாய் விரவிரைத்து தானடுங்கி
வேர்த்து விறுவிறுத்து மெய்நடுங்கி உடல்பதறி
போற்றும் உயிர்படைத்து உண்மை அறிவகன்று
முட்டி உயர்ந்து முன்வயிறு தான்தளர்ந்து
கட்டி எடுத்தாலும் கால்பாவம் கூடாது
கண்ணு மறைக்க கண்ணீரிட்டு காலும் நடைதளன்று
என்னும் அருந்திவரும் இரையொன்றும் தின்னாமல்
மயிர்க்குஞ்செறிந்து வாயால் நுரைகள் தள்ள
கயிற்றினங்கள் மெத்தனவே கலங்கி மிகத்தவித்து
அம்மம்மா வென்று அலறிச்சே அப்பசுவும்
சூரியனைப் பார்த்து அலறியதே அப்பசுவும்
வீரியமாய்ப் பசுவும் மெல்ல எழுந்திருந்து
மாதேவி வீட்டுக்கு வழியே வரும்போது

### (மக்கள் பசுவின் நிலை கண்டு புலம்புதல்)

இதேதுவென்று சொல்லி எட்டிநின்று பார்ப்பாரும்
மாதேவி கண்டால் மயங்குவாள் என்பாரும்
இதே விசனமிது இந்திரனார் கேட்டவுடன்

துக்கமுறுவார் துயர்கடல் புகுவார்
திக்குகள் தோறும் செப்பியவர் நிற்பளவில்
அவ்வவர் வீதித்தெரு அத்தனையும் தான்கடந்து

### (பசுவைக் கண்டு செட்டியார்கள் பதறல்)

செவ்வே நெறியயிலுஞ் செட்டியார்கள் வீதியிலே
செட்டிச்சி எல்லோரும் திரைநீக்கிப் பாத்திருந்து
கட்டி நல்லபுல்லு கனகப் பசுதனையும்
மாவேந்திரன் வள(ர்)த்த மாலைபசு தனக்கு
கூவென்னைக் கூடிக் கொடுத்தார்கள் தின்னாது
மலைமேலே ஏறி மலைப்புல்லு தின்கையிலே
நிலையா அரவங் கடித்ததென்ன நீர்தெளிப்பார்
பண்டிதர்கள் கூடிப் பார்ப்பார் பதைத்திடுவார்
கண்டவர்கள் நாகங் கடித்தது தானல்ல என்பார்
சந்தனங்கள் விட்டெறிவார் சாந்துமிகத் தெளிப்பார்
அந்தமுள்ள பூக்கள் அழகாய் சொரிந்திடுவார்
காவி சுமந்தெடுக்கக் கண்டோடி செட்டியார்கள்
கூவிப் பதற வந்து அழுது சலித்து நின்றார்
பசுவின் வயிற்றிலுள்ள பாலகனார் அப்பொழுது
அசுகையாய்ப் பார்த்து அதிசயமோ சொல்லுமென்றார்
செட்டியார்கள் கூடிச்செய்து வருத்தம் பார்த்து
செட்டியார்கள் தங்கள்தெரு வாழ்ந்திருக்க வென்று
போகுதே அப்பசுவும் புறத்தான வாசலிலே

### (பசுவின் நிலை)

அகமது தளன்று அறிவு தடுமாறி
தெய்வேந்திரனார் செம்பொன் மணிவாசலிலே
மெய்வருத்தத்தாலே விரைந்து விரைந்து வந்து
சுற்றி வளையவந்து சூரியனைத் தான்பார்த்து
மெத்த அறிவழிந்து மேலெனவே வாய்பிளந்து
ஆருங் காண நின்று அலறத் துடங்கியதாம்
பாரும் விண்ணும் தான் நடுங்கப் பதைபதைத்து அலறிடுமாம்
அவர்செம்பொன் மணித்தூண்மேலே சாய்ந்ததுவே அப்பசுவும்
சிவனே குருவேயென்று கிடந்ததுவே அப்பசுவும்

### (பசுவின் நிலையை அறிந்துவர தோழிகளை அனுப்புதல்)

திசைநடுங்க வான்கோதைச் செவியாற் தான் கேட்டு
..................................................................
என் அசையா மணியை அசைக்க வந்த காரியமேன்
மின்னனையீர் நீங்கள் விரைந்தறிந்து செப்புமென்றார்

### (தாதியர் இந்திராணியிடம் பசுவின் நிலையைக் கூறுதல்)

அங்கொரு தாதி அறிவாள் எழுந்திருந்து
தொங்கலிலே ஓடி சோதிமணி மண்டபத்தில்
சென்றறிந்து தான்பார்த்துத் திகைத்துநின்று தான் சலித்து
நின்றேங்கி விரைந்தாள் நெடுமூச்சு விட்டெறிந்தாள்
உற்றுப் பார்த்தாள் சலித்தாள் உள்ளத்தே ஓடிவந்தாள்
முற்றுப் போல் மார்புருஎ மோதியெழுதென சொல்லுவாள்
நாகமடந்தையரே நம்மிந்திரனார் தேவியரே
ஆகம சிறந்தனவாய் அன்று முதல் நீர்தாமே
வளர்பசு வதுதான் வானுலகம் ஏகுதென்றார்

### (இந்திராணி கேள்வியும் தோழியர் பதிலும்)

இளந்தோகை வாழ்மயிலே என்தோழிமாரே தான்
நான் வளர்த்தப் பசுவென்று நன்றாய் அறிந்தீரோ
ஆனதவப் பேறு அன்று வந்த நறப்பசுவை
நான்தான் அறியேனோ நாலுகாலில் சிலம்பு
கூந்தல் சிகப்பழகும் கொம்பு இரண்டோடும் வெள்ளியதாய்
இந்த வண்ணமானப் பசு இப்போ இயக்கமுற்று
வந்துகிடக்குது காண் மண்டபத்தின் தன்னருகில்

### (பசுவைக் கண்டு இந்திராணியின் திகைப்பு)

ஞானத் திருமொழியே என்று நா விரைவுடன்
சீனக் கதவு திறந்து வெளியில் வந்து
திடுக்கிட்டு எழுந்திருந்து சிங்காசனத்தை விட்டு
மதுகொண்ட காதலைப்போல் மண்டபத்தில் வந்துநின்று
காராவைக் கையாலணைத்து கண்ணீர் துடைத்து
சேரார் குழலாள் திகைத்து நின்றங் கேதுரைப்பாள்

### (மீண்டும் இந்திராணி புலம்பல்)

தேனே குழலே தியக்க வந்தக் காரியமேன்
மானே குயிலே மயக்க வந்தக் காரியமேன்
நச்சுப்புல்லு தின்றீரோ நாகங் கடித்ததுண்டோ
இச்சையுடன் மேயப்போன இடங்களிலே
பாராதாள் பார்த்தாளோ பாதகத்தி பார்த்தாளோ
ஒருகடவு ஆமணக்கை இளஞ்சினையாய்த் தின்றீரோ
தொடுக்கும் படியிடத்தில் சோளமது தின்றீரோ
என்று சொல்ல மண்மேல் விழுந்தழுது ஏந்திழையும்
நின்று பரிதவித்து நெடுமூச்சு தானெறிந்து

### (இந்திராணியும் ஆயரிடையரை அழைத்துவரக் கூறல்)

பிள்ளை இல்லாமல் பெருக்க அலைந்ததுவும்
தள்ளவிழுங் கன்றதனைத் தான் வளர்த்த பேரிதுவோ
அசையா மணியசைக்க யார்செய்த பாவமிது
பசுவுக்கு வந்தநோய் பார்த்தறிந்து சொல்வோரை
ஆயரிடையர் தம்மை அழைத்தோடி வாருமென்றாள்

### (ஆயரிடையர் வருகையும் பதிலும்)

ஆயரிடையர் தம்மை அழைத்தோடி வந்தார்
ஏழுலகும் கொண்ட வெருமாள் எழுந்திருந்து
சூழ்நில ஆயருடன் சூழவந்து பார்த்துரைப்பார்
கச்சுவெரு முலையே காரிகையே நீகேளாய்
நச்சுப்புல்லு தின்றதல்ல நாகம் கடித்ததல்ல
கொத்தோடே ஆமணக்கைக் குலையோடே தின்றதல்ல
மற்றொருவர் பாத்ததல்ல வன்கண்ணர் சொன்னதல்ல
ஆர முலையீர் பசு அடங்கி சுகம் கண்டீரே
பாத்தியவே சினைபருவங் காணக் கண்டீரே
இன்று நாளை ஈனும் மீற்று மயக்கமிது
என்றுதான் சொல்லி இடையர் மனை போனதற்பின்

### (இந்திராணி குறிக் கேட்டல்)

அப்போ சிவனார் அரி உமையுடனே
இப்போது இந்திரனார் தேவி கிடந்து தவிக்க
குறிசொல்லவா என்று ஒரு கோலவிழி தேவதையை
ஹெறியுடனே தானனுப்ப நேரிழையாள் வாசல் வந்து
குறிசொல்வேன் இப்போது கொம்பனையே கேளுமென்று
அறிவுவெறச் சொன்னால் அடிமைகாண் உந்தனுக்கு
மெழுகியே கோலமிட்டு மிக்கநிறை நாழிவைத்து
எருதுகனம் முற்றினுடன் நீர்கட்டினங்கள் தான் பரப்பி
வொன்னின் கணபதியைப் வொற்பீட மிருத்தி
வண்ணப் பிளகிலேயும் வாகுடனே ஏற்றிவைத்து
மாணிக்கத்தாலே வயிர விளக்கேற்றி
ஆணிக்கனகம் அருகாகவே சொரிந்து
தொழுதுநின்றாள் சுந்தரியும் தொகைக்குறி உரைப்பாள்
பழுதுபடாக் குறிகள் பட்டது காண் வெண் அணங்கே
நச்சுப்புல்லு தின்றதல்ல நாகங் கடித்ததல்ல
வொச்சாருவு சார்ந்ததல்ல புண்ணியமுண்டாகுதுகாண்
கானார் குழலாளே நல்லகாலம் உமக்கிது காண்
தேனார் மொழியாளே பசு சினைப் பிறந்தான் கண்டீரே

### (குழந்தை, பசுவின் வயிற்றில் தரித்ததைக் கூறுதல்)

மாலைக் குழலா ளே மயக்கப் படுகுது காண்
ஆலைக்கிடு கரும்புபோலே அழுங்காதே
மாலும் பிரம்மாவும் மாகதேவருடன் உமையும்
வேலன் கணபதியும் வேத மறை மாமுனியும்
மூலமுடன் முப்பத்து முக்கோடி தேவர் சொல்ல
சாலப் பூமாதேவி தன்பொருட்டால் தாரணியில்
பாலகனார் வந்து பசுவின் வயிற்றில் தரித்தார்
பாலன் பிறக்கும் பரிவுதனை நீ கேளாய்

### (சித்திரபுத்திரனார் பிறப்புச் சொல்லி குறிகாரி திரும்பிச் செல்லுதல்)

பொன்னின் எழுத்தாணியுடன் பூணூலுஞ் சிறக்க
நாட்டுக் கணக்கும் நமனார் பெருங்கணக்கும்
வாட்டமில்லாதத் தெய்வலோகத்தில் வாழ்கணக்கும்
தன்மக் கணக்கும் தலத்தில் மிக்கோர் தன்கணக்கும்
கன்மக் கணக்கும் கலியுகத்தின் தன் கணக்கும்
சுத்தன் பிரம்மன் அருளின் சொற்படியே
இத்தனையுங் கொண்டு பிறக்கிறார் உத்தமனார்
சித்திரைக்குச் சித்திரைப் பதினெட்டாந் தெய்தியிலே
பத்திரை ஞாயிறுமாய்ப் பதினாறு நாழிகைக்குள்
தேசம் எழுதவென்று செங்கதிரோன் தோன்றுகிறான்
மாசற்ற உத்தமனார் வந்து பிறக்குகிறார்
உலகம் எழுதவென்று உண்மையுடன் தோன்றுகிறார்
இலகு நிலமைப்படி காணீதென்றுதான் போனாள்

### (குழந்தைப் பிறப்பு விழா முன்னேற்பாடுகள்)

குறிபார்த்துப் போனபின்பு கோலவளைக் கையாளும்
நெறிகாத்த ஈசர் நிலமைத் திருவுளமோ
ஆதரவாய் சொல்லிய வளர் ஆவினைப் பார்ப்பளவில்
போத மடுவிட்டு புறத்துச் சினைக் குறியாய்
மாதமொரு பத்து வளர்ந்தாப்போல் உள்ளுளைந்து
வேதமிக விளங்கும் விண்ணவனார் தேவியரும்
அந்தணர் சித்தர்களும் ஆன இமையோர் சூழ
மந்தரம் போல் நின்ற கொலுமண்டபத்தே இருந்து
அந்நேரமே பிறவியென்று மனதிலுண்ணி
வானம் புவிலோகம் மண்பூமியுஞ் சிறக்க
தானமிகக் கொடுத்துத் தரணி அலங்கரித்தார்
முத்து வளைந்தார்கள் முக்காதம் பந்தலிட்டார்

கொத்தோடே பூத்தொடுப்பார் குலைவாழை நாட்டிடுவார்
சாந்தால் மெழுகிடுவார் சந்தனத்தால் கோலமிட்டார்
மாந்தளிரான பட்டால் வண்ண மேற்கட்டி கட்டி
நாலறைக் கட்டி நடுவே திரை வளைந்து
மேலறைக் கட்டி வியன் வியனாகக் கோலமிட்டு
சேல்விழியா ரெங்குந் திருவிளக்குப் பாவித்தார்
வேல்விழியா ரெங்கும் விளங்கவே கோலமிட்டார்
நள்ளிருள்க்கோர் விளக்காய் நல்இலங்கென வீற்றிருந்து
வள்ளுவனைத் தேடி யழைத்தோடி வாருமென்றார்

## (வள்ளுவன் வருகை)

வந்தேன் வழியடிமை செந்தாமரையாரே
எந்தனை யிப்போ அழைத்த ஏதுபணி விடையெது
வாராய்நீ வள்ளுவனே மண்டலமெங்கு மறிய
சீரான நற்பசுவின் வயிற்றில் சிறப்பாக
பாலன் பிறக்குதென்று பறைசாத்தி வாவெனவே
ஏலக்குழலணங்கு இயல்போல விடைகொடுக்க

## (வள்ளுவன் முரசறைதல்)

கூறப்பெற்றே னென்று கும்பிட் டெழுந்திருந்து
ஏறுவிடை யானையின் மேலேறி முரசுவைத்து
ஏழுலகுமறிய இடிபோல முரசடித்தார்
வாழுமிந்திரன் தேவி வளர்த்த மணிக் காராவும்
தாமரைப் பூவிழுங்கித் தாரணியி லப்பொழுது
காமியமாய்ச் சூலாகிக் கற்பகத் தருவின் கீழே
பாலகனைப் பெற்றெடுக்கப் பலவொழுது தினற்றமிட்டார்
ஏலவே யேழுலகோர் இப்போது வாருமென்ன
அண்ட ருலகேழு மறியப் பறைசாத்தி

## (தேவர்கள் வருகை)

மண்டபங்கள் சூழுந்திருக்கும் வான்பதியில் வந்தவுடன்
முரசறை கேட்டவுடன் மூவுலகும் தான் வரவே
அரசு முனி தவத்தோர் எல்லோருந் தான்வரவே
வந்தவர்க் கெல்லாம் வடிவாசனங் கொடுத்தார்
வந்தவர்க ளெல்லாம் வகைவகையாக இருந்தார்
பிள்ளை பிறக்க அமிழ்தம் வந்ததென்றார் பொன்பெருமாள்
வெள்ளாணை வந்து திருமஞ்சணம் விசிற
மாணிக்கஞ் சங்கு வலம்பிறத்தே நின்றூத
ஏணிப் பவளத்தியல் வாச்சிய முழங்க
முப்பத்து முக்கோடி தேவர்கள் முன்னியற்ற

தெப்பத்துட னுமையுந் திருமாதுங் கைகொடுக்க
ஆயிர மாதர் அருகாக வந்து நிற்க
பாயிர ஞாலப் பகவதியாள் வந்து நிற்க

## (சித்திரபுத்திரனார் பிறப்பு)

பொன்னில் கலந்தேந்திப் பிடித்தார்கள் பூவையர்கள்
மன்னர் பெருமாள் வார அதிசயங்கள்
ஆயிரங் கிங்கிலுவ ரசைக்க வொண்ணாப் பொற்றகடும்
மாயிரு ஞாலமெல்லாம் வணங்காதப் பொத்தகமும்
பொன்னி னெழுத்தாணியுடன் பொத்தகமுங் கைபிடித்து
தன்னிரு காதிலிட்ட தனிக்குண்டல மிலங்க
முன்னாளில் மார்பிலிட்ட முப்புரி நூலுமிலங்க
தன்னாலே தான் கற்ற கல்வி தழைத்தோங்க
அத்தர் திருவருளால் ஆவின் வயிறுவிட்டு
சித்திரைக்குள் சித்திரைநாள் சீராம் பவுரணையில்
நித்தமா திற்றன துலங்கிய நாள் நீதியுடன்
உத்தமமான உயர்ந்த முகிழ்த்த மதில்
மண்ணுலகுந் தான்புகழ வாழ்ந்தோங்கியே தழைக்க
விண்ணுலகம் தான் மகிழ மிகக் குரவையிட
ஆண்டானார் வந்து பிறந்தா ரவனிதனில்

## (பிறந்த குழந்தைக்கு வாழ்த்துக்குரவை)

கூண்டு குரவைபாட்டு கொப்புளுந் தானறுத்து
ஒருகால் குரவையிட்டார் பூலோகம் வாழவென்று
இருகால் குரவையிட்டார் ரீருலகம் வாழவென்று
முக்கால் குரவையிட்டார் மூவுலகும் வாழவென்று
திக்காமல் நாக்காற் றிசை வாழக் குரவையிட்டார்
ஐங்கால் குரவையிட்டார் தாங்கள் வாழவென்று
மங்கையர்க ளாறுதரம் மகிழ்ந்து குரவையிட்டார்
ஏழுகால் குரவையிட்டார் ஏழுலகம் வாழவென்று
கூடிக் குரவையிட்டு கொம்பனையார் நிற்பளவில்

## (குழந்தையின் அழுகை)

அரியோ மரியோ மானே யெனவழுதார்
தெரிவோ இதுகணக்குச் செய்வோ மென்றழுதார்
நமனோ நமனோ நானென்று தானழுதார்
..................................................
சித்திர புத்திரருஞ் சிறப்பாக மிகவழுது

## (தாதியர் குழந்தையைக் கொஞ்சுதல்)

பத்தன் னுறக்கமென்று பார்த்திருந்தார் தாதியர்கள்
பிள்ளை பிறந்ததனைப் பொன்பெருமாள் கண்டவுடன்
வள்ளலையோர் பத்துமாதஞ் சுமந்தாப் போல
சொரத்தியப் பட்டென சுரிகுழலுந் தானெழுந்து
ஆரத்தியமையாய் பச்சுடம்பாய் வளமுலையுந் தான்சுரந்து
பிள்ளைதனை எடுத்துப் பிரியமுடனே யணைத்து
வள்ளலை மார்பணைத்து வைத்தங் கினிதிருந்தார்

## (குழந்தையைப் பராமரித்தல்)

அப்போது தாதி யரிவா ளெழுந்திருந்து
இப்போது பச்சைப்புளி மிளகு யினியவெல்லம்
வாசமுடன் சுக்கரைத்து வளமெழுகு போலுருக்கி
காயமுங் கூட்டிக் காரிகைக்குத் தான் கொடுத்தார்
வாங்கிக் குடித்து வாகாய்க் குழல் முடித்து
பாங்கியர்கள் சூழுந்திருக்கப் பாலகனைத் தன்மடியில்
வைத்திருந்து உச்சிமொகந்து வார்காது மூக்குருவி
நெத்தி திருத்தி நிறைமார்பு தானமுக்கி
பாதந் திருத்திப் பலகாலும் நீராட்டி
வேதமது வோதுதல் போல் மிகுசெவியில் தானூதி
உச்சிதனை முகந்து உள்ளங்கால் தான்முகந்து
மெச்சிந் திருநுதலில் வெண்ணீற்றுக் காப்பணிந்து
ஈரந் துவத்தி இணை ஆடைதான் போட்டு
ஆரஞ் சிறந்தப் பொன்னால் அழகாய்த் திலகமிட்டு
சேனைப் புகட்டிச் சேய்யிழையாக மாற்றி

## (தாய் இந்திராணி எல்லோர்க்கும் பரிசு தரல்)

மானனைய இந்திராணி மகனை எடுத்தணைத்து
பட்டாடைக்குள்ளே யந்தப் பாலகனைத் தான் கிடத்தி
மட்டுமலர் குழலாள் வாகுபெறத் தானிருந்து
வந்த பேர்க்கெல்லாம் வாரி எண்ணெய் வார்ப்பித்தாள்
அந்தணர் மற்றோர்க்கும் அரியதானங் கொடுத்தாள்
பையோடே பாக்கும் படலோடே வெற்றிலையும்
வைய மீரேழுலகில் வந்தவர்க்கெல்லாம் கொடுத்தாள்

## (இந்திரனிடம் தாதியரை அனுப்புதல்)

அப்போது இந்திரனார் அன்புடனே கேட்பதற்கு
தப்பாதத் தோழியரை தானே யனுப்பிவிட்டாள்

## (தாதியர் தெருவழியே வரல்)

ஆசிலடியாளு மருள்பெற்றே னென்று சொல்லி
ஏகும் பணிவிடையால் லிறைஞ்சி எழுந்திருந்து
மாதாளம் பூம்பட்டை மருங்கில் விரித்துடுத்து
தாது குழல்மீது தார்மாலை புனைந்து
இலுமிச்சம் பூப்பட்டை விரித்தே காசந்தான் போட்டு
கொலுகாண் பெண்களைப் போலக் கூண்டுசில பெண்கள் வர
சுத்தி முடித்தக் குழலிலங்க தோடிலங்க
பத்திபத்தியாய் யணிந்த பன்மணிகள் தான்துலங்க
வாரிறுகப் பூண்டமுலை மார்பிற் பணியிலங்க
பாதத் தள மிரண்டும் பண்பாய்த் துவண்டசைய
கார்மேகம் போன்றக் குழல் கனக யிடைதுவள
ஆரமுலையாளு மன்னம் போலே நடந்து
பாடகமே லிட்ட பசும்பொன் சிலம்பலம்ப
சூடகமுந் தோள்வளையே தோளே துவண்டசைய
வார் காதுக்கிட்ட வயிரப் பணி யிலங்க
.............................................
வாசலும் வாசற்படியுமது கடந்து
தேசகப் பாவையெனத் தெருவீதியில் வரவே

## (இந்திரலோகம் சென்றடைதல்)

ஆனை அலங்கரித்துக் கொண்டு வந்தா ராயிழைக்கு
ஆனையின் மேலேறி யதிரத் திடியுட னடத்தி
சேனைபல சூழத் தெய்வேந்திரன் கொலுகில்
மானனைய தாதியரும் வந்து அதிசீக்கிரமாய்
ஆனை யிறங்கி அந்த வாயிலையுந் தானடைந்து
சேனைப் பதியிருக்குஞ் சிங்கார மண்டபத்தில்
பொன்னின் படியைப் பொருந்த மிதித்தேறி
மின்னின் பிரகாசமென வெள்ளிப் படியேறி
சென்றாளே தாதியருந் தெய்வேந்திரன் மண்டபத்தே

## (இந்திரனிடம் அறிவித்தல்)

நின்றுபல வார்த்தை நிசமிற்று யேது சொல்வாள்
அஞ்சு சிங்காசனத்துக்கு முன்பாகத் தெண்டனிட்டு
கொஞ்சு கிளிவாய் மொழியாள் கூப்பிட்டுச் சொல்வாளே
இந்திரனே சோபனங் காண் இறையவனே சோபனங் காண்
சந்திரர்கள் சூரியர்கள் தக்கவரே சோபனங் காண்
சோபனங்கள் சோபனங்கள் தோன்றலுக்குச் சோபனங்கள்
சோபன முண்டோடி யுங்கள் தோன்றலுட வாசலிலே

நாட்டுக்குச் சோபனமே நல்லோருக்குஞ் சோபனமே
தாட்டியமையால் சோபனங்கள் தான்விளம்ப விண்ணப்பங்கள்
தவமெல்லாம் வாழவொரு தம்பி வந்த சோபனங்காண்
விண்ணவரே சோபணங்காண் வேதியரே சோபனங்காண்
அண்ணலெங்க ளிந்திரர்க்கோர் ஆண்பிறந்தச் சோபனங்காண்
என்தம்பிரானே இறைவனார் இந்திரனே
உந்தன் மனையா ளுகந்து வளர்த்தப் பசு
தாமரைப்பூ விழுங்கி தரணி மிகவாழ்
மாமதுர வாக்கால் மகவுவந்தக் காரணத்தால்
சித்திரைக்குச் சித்திரை பதினெட்டாந் தேதியிலே
சித்திரை ஞாயிற்றுக் கிழமை சிறப்புடனே
பொன்னி னெழுத்தாணியுடன் பொத்தகமும் கைபிடித்து
மன்னவர்களென்ன வொருமைந்தனும் வந்த சோபனங்காண்
என்றென்று கேட்டார்க ளெல்லோருந் தான்மகிழ்ந்து
நன்றென்று கேட்டவர்கள் சோபனங் கொடுத்தார்

## (இந்திரன் தாதியர்க்குப் பரிசு தரல்)

இந்திரனார் சோபனத்துக் கேதேசிதான் கொடுத்தார்
அந்தரத்திலுள்ள அரிய பணிதான் கொடுத்தார்
கோடித் திரவியங்கள் கோடாமற் தான் கொடுத்தார்
மாடை கொடுத்தார் வாகான பலா கொடுத்தார்
ஆனை மேலேற்றி யளவிறந்தப் பொன் கொடுத்தார்
இச்சையுடனேயிடு பதைக்கண் தான் கொடுத்தார்
பச்சைவடங் கொடுத்தார் மணிகள் பல கொடுத்தார்
கட்டுப்புடவை யெல்லாம் கட்டோடேதான் கொடுத்தார்
இட்டிருந்த ஆபரணமெல்லா முடன் கொடுத்தார்
அடைக்காயும் வெள்ளிலையும் அன்பாக எல்லோர்க்கும்
அடங்க வழங்கினா ரங்கிருந்த மன்னவர்க்கு
ஆவலுடன் கொடுத்து அன்பாய் எழுந்திருந்து

## (இந்திரன் குழந்தையைப் பார்க்க வரல்)

காவலன் செய்தது காண் இனி வேணுமென்று
காவல னப்பொழுது கனகபல்லக் கேறாமல்
காவலன் வெள்ளானை கருதியே ஏறாமல்
காவலன் நற்பரி கருதியொன்றில் ஏறாமல்
காவலன் இந்திரனார் கால்நடையே ஓடிவந்தார்

## (இந்திரன் வீற்றிருத்தல்)

ஆதித்த னப்போ அமரர்கோனைப் பார்த்து
அந்தரத் தேரேறி அமரர்கோன் சீக்கிரமாய்

வந்து முழுகினார் வானவர்கோன் பொய்கையிலே
திருவாய் விளக்கித் திருமஞ்சன நீராட்டி
திருவாசகக் கற்பகத்தார் தானுறையும் மண்டபத்தில்
அம்பொன் சிங்காசனத்தி லரசாக வீற்றிருந்தார்

### (இந்திரன் எல்லோர்க்கும் பரிசு தரல்)

செம்பொன்னறைத் திறந்து செழுந்தியர் தான் வாரி
ஆனபரதேசிகட்கும் அந்தணர்க்கும் தானமிட்டார்
மானபர னிந்திரனார் மழைபோலே தானமிட்டார்
பால்பசுக்கள் கோடிப் பார்ப்பார்க்கும் தானமிட்டார்
இரப்போர்க்கு எள்பொறியு மின்பமுடன் தான் கொடுத்தார்
தானமிட்ட மன்னன் தங்கமணி மாளிகையில்
வானவர்கள் சூழநிற்க மணியாசனத் திருந்தார்
வள்ளலிருக்க மற்றொரு தாதி எழுந்து
வெள்ளிமடலிற் பாக்கு வெற்றிலை கற்பூரம்
வைத்துச் சுருள் கொடுத்தார் வண்ண மடல்தனிலே
வைத்தச் சுருளெடுத்து வழங்கினார் எல்லோர்க்கும்

### (இந்திரன் குழந்தையைப் பார்த்தல்)

இலையமுது தான்முதலா ஈந்திருக்கு மந்நேரம்
தலைவனவ னிந்திரனார் சந்ததியைக் காண்பதற்கு
தாதியரைத் தானழைத்துத் தாமக் குழலாரும்
சோதி யருளாலே வந்துய்ய தொரு பாலகனை
எடுத்துக் கொடுப்போங்கோ வென்றுரைத்த போதேதான்
அடுத்திருந்த தாதியர்கள் எல்லோருந் தானெழுந்து
பட்டாடைக் குள்ளிருந்தப் பாலகனைத் தானெடுத்து
இட்டமுடன் தாதியர்க ளிருண்டாயிரஞ் சூழ்ந்துவர
முன்னெடுத்த தாதியர்கள் மூவாயிரம் பேர்கள்
பின்னெடுத்த தாதியர்கள் பொன்மலர்ப் படியன
ஆயிரங் கிங்கிலியர் அசைக்கவொண்ணாப் பொற்றகடும்
வாயுரங்கள் சொல்லி மாதுநல்லார் தான் தாங்கி
பொற்கலத்தி லேந்திப் பொழுதுதயஞ் செய்தாற்போல்
மற்பொலியுந் திண்புயத்தான் மன்னவனார் கைகொடுத்தார்

### (இந்திரன் குழந்தையைக் கொஞ்சுதல்)

வாங்கியெடுத்து வலக்கண்ணாய்க் கொண்டிருந்தார்
தாங்கியெடுத்து தன்மார்போடே யணைத்து
கண்டான் மகன் முகத்தைக் கண்ணாயிரத்தாலே
உண்டான சந்தோஷ முரைக்க முடியாதே
உச்சி முகந்து உள்ளங்கால் தான் முகந்து

பச்சைத் திருமேனி யெங்கும் பரிமளங்கள் போலமுகந்து
இந்தவுலகில் பிறந்தீரே எங்களிரு கண்மணியே
மைந்தனோ எந்தன் மருந்தோ இவ் வாரமுதோ
வானா ருலகம் வழிகாட்ட வந்தீரோ
ஈனாதா ளீன்ற இளவாழைக் கன்றோதான்
மலடிருந்தா ளீன்ற வாழை இளங் குருத்தோ
உலகுக் கணக்கெழுத வந்தவொரு வுத்தமரோ
பூமிக் கணக்கெழுத வந்தவொரு புண்ணியரோ
தாமதிக்கச் சொல்லித் தன்கையால் தானமிட்டார்
வளர்கின்றத் தாதியர்க்கு வண்ணப்பணி கொடுத்தார்
பழக்கமாகப் பேசி பால்கொடுக்குந் தாதியர்க்கு
முத்துவெனக் கனப்பட்டு முன்கை வளையுமணிந்து
முத்துரட்டி தானீய்ந்து பாலகனைத் தான்முகந்து
அந்த மகனழகை அநேகமாய்த் தான்பார்த்து
சுந்தரியாள் கைகொடுங்கோ என்று சொல்லி பின்பவனும்

## (பிராமணரை அழைத்து குழந்தைக்குப் பெயரிடல்)

தெய்வப் பிராமணரைத் திரும்ப வழைத்துவந்து
ஆவலுடன் பெற்ற அரிய மகனார்க்கு
மருவளருந் தாருடைய மாசனங்க ளெல்லோரும்
திருந்த முகிழ்த்த முட்டுச் செப்பும் பேறென்றுரைத்தார்
அந்த மொழிகேட்டு அருமறையோ ரெல்லோரும்
சிந்தை மகிழ்ந்து திறமாய்ப் பொருத்தமிட்டு
சித்திரைக்குச் சித்திரை சீராம பவுரணையில்
மத்தியான நேரம் வாழுஞ் சுக்கிர ரோரையிலே
ஒன்பது நவக்கிரக மொன்றாகுமோர் முகிழ்த்தம்
இன்பமுட னன்னேர மியற்பாலன் பிறந்தான்
ஈரேழுலகு மொன்றாயிருக்குஞ் சிவன்போலாம்
பாரேழு மெய்த்திட அப்போ பாலகனைக் கொண்டுவந்தான்
சித்திரையில் வந்தவர்க்குச் சித்திரபுத்திரரும்
இத்தகையபேரிட் டின்பமுடன் அழைத்தார்
பேரிட்ட பார்ப்பாருக்கும் பெரியோருக்கும் மற்றோர்க்கும்
சீரிட்ட பாற்பசுக்கள் சிறப்பாய்க் கொடுத்தருளி
தானம்பல கொடுத்து தானிருக்கு மளவில்

## (ஆவின் பாசமும் தண்டனை பெறலும்)

ஆனசிவன் பாலனைப் பெற்றெடுத்த நல் ஆவும்
வல்ல மகனுக்கு மனமருகி யன்புடனே
நல்லமுலைக் கொடுத்து நற்பசுவும் நின்றிடுமாம்
நிற்கும் பசுவொரு நாள் நேசமுள்ள பாலகனை

பொற்குளம்பால் நெஞ்சில் பசுமிதித்து நிற்பதுக்கு
ஆலத்தை யுண்டவர் போலஞ்சி மிக நடுங்கி
கண்டுவிழுந் திந்திராணி கலங்கிப் பயந்தோடி
மண்டலிகனாக வந்த மகனை வாரியெடுத்து
கெட்டேனே யென்று கிளர்ந்து சினம்பெருகி
மட்டுமலர் கற்பகம்போல் வாழ்பசுவைத் தண்டித்தார்

### (பசு ஈசனிடம் செல்லல்)

பிட்டார் குழலார் மலர்க்கை யடிபட்டதற் பின்
கிட்டாத நற்பசுவும்கிளர்ந்து சினம்பெருகி
இங்கு நில்லேன் என்றெல்லோருந் தான்காண
மங்குசெரி வெள்ளிமலை நோக்கித் தான் போனதுவே
வெள்ளி மலைதனிலே வீற்றிருக்கும் ஈசர்முன் போய்
தள்ளி விழுந்து தலையா லுயர நோக்கி
கண்ணீ ரொழுகக் கதறித் துயரமுற்று
தண்ணீரு முண்ணாமல் தான் கிடந்(து)ப் பசுவும்

### (பசுவின் வருகை ஏதெனச் சிவன் கேட்டல்)

துக்கமுடனே பசுந்தான் சோர்ந்து நடப்பதுகாண்
அக்கணமே ஈசன் அதுமுகம்பார்த் தேதுரைப்பார்
வாராய் பசுவேநீ மா துயரத்தோடு வந்து
சோராமல் சோர்ந்து துவண்டு விழுந்தழுது
துன்ப்படுவ தெல்லாஞ் சொல்வாயென வுரைப்ப

### (பசு வந்தக் காரணம் சொல்லல்)

பின்பு (சிவபெரு)மானைத் தொழுது பேசலுற்றதப் பசுவும்
அத்தரே எங்க ளுமையம்மை தனைப் பங்கில் வைத்து
பித்தரே யென்ன பிரியமுடனே யழைத்து
இந்திரற்குப் பிள்ளைக் கொடுத்துவா யென்றுரைத்தீர்
அந்தப்படியே அடியே னவர்கள் பின்போய்
பாலகனை யீன்று கொடுத்தேன் பரிவுடனே
சாலவனைத் துரத்தி தானடித்தங் கோட்டியிட்டார்
அந்த அடி பட்டதற் பின்னாலே யான் பயந்து
வந்துவிட்டே னென்று வருந்தி யுரைத்ததுவே

### (சிவனின் ஆறுதல் மொழி)

சிந்தை மகிழத் தானுஞ்சீறி நகைத் தேதுரைப்பார்
இந்திரன் தான் செய்தப் பிழை யேதென் றெடுத்துரைப்பேன்
புத்தி யழியாதார்க்குப் புத்திரரை யாங் கொடுத்திற்றால்
அத்தி முகனாணை அவன்மேலுங் குற்றமில்லை

என்மேலே குற்றமில்லை இங்கே நாமேது சொல்வோம்
உன்மகனை யிங்கே உனக்கழைத்து நாம் தருவோம்
நெஞ்சு வருந்தாதே நெடுமூச் செறியாதே
வஞ்சக மில்லாதாவே மனமகிழ்ந்து நில்லுமென்றார்
ஈசனுரைத்த மொழி கேட் டெழிற் பசுவும்
நேசமகனை நினைத் தங்கே நின்றதுவே

### (இந்திரனும் இந்திராணியும் பசுவைத் தேட உத்தரவிடல்)

நேசமிகு மிந்திரனுந் தேவியுந் தானேது செய்தார்
பாலன் பசித்துப் பதறி யழாதபடி
பாலமிர்தம் வாங்கப் பசுவதனைத் தேடுமென்றார்
தேடுமென்றச் சொல்கேட்டுத் தேசமெல்லாம் தேடினரே
காடுதோறுந் தேடிக் காணோமென வுரைத்தார்
காணோமென வுரைத்தச் சொல்கேட்டுக் காவலனும்

### (இந்திரன் இந்திராணி வருத்தம்)

பூணாரம் பூண்ட புலர்மிசையு மேது சொல்வாள்
வீணுக்கு அடித்து விரட்டி விட்டோ மிப் பசுவை
ஆணுக்குப் பாலினி தாரார் கொடுப்பா ரென்றுரைத்தாள்
பாலார் கொடுப்பார்கள் பாலகனுக் கென்றழுதாள்
மேலார் அளிப்பார் விடலை தனக்கென்றுமுதாள்
தாயா ரிரங்கியழு தாராவேந்த னென்ன சொல்வார்
மாய்கையாய் வந்த பசு மாய்கையாய்ப் போச்சு தென்றார்

### (குழந்தையைத் தொட்டிலிலிட்டுச் சீராட்டல்)

முற்றுமொரு பசுவின் பாலமிர்தம் தன்மகற்கு
குற்றம் வராதபடி கொடுத்து வளர்த்தனரே
இந்திரனும் அப்போது அத் தச்சரை அழைத்து
தந்திரத்தால் தொட்டில் சமைத்துக் கொடுவாருமென்றார்
மாணிக்கத்தால் வகுத்த வயிரப்பலகைத் தைத்து
ஆணிப் பொன்னாலே அழகுபெறச் சமைத்து
செம்பொன் கம்பிவாங்கி சிறுகயிறு தான் பூட்டி
ஐம்பொன்னார் தொட்டி லழகுடனே கொண்டுவந்து
வைத்தறபின் மன்னன் மகாபிரியத்தோ டெடுத்து
தச்சருக்கும் பணிக்காகத் தான் கொடுத்தப் போதினும்
சித்திரபுத்திரரைச் சீர்சிறந்தத் தொட்டிலிலே
வைத்துத் தாராட்ட மன்னனுஞ் செப்பினரே

### (தாதியர் தாலாட்டுப் பாடல்)

அன்பால் புகட்டிய அரிய தொட்டில் மேல்கிடத்தி
தான்பாடுந் தாதியர்கள் தாராட்டத் துடங்கினரே

தொட்டில் தனையசைத்து சூழநின்றத் தாதியர்கள்
தட்டி உறங்கத் தனைத்தாராட்டுஞ் சீர்கேளிர்
ராரார் ராராரோ ராரார் ராரார் ராரார் ராராரோ

## (சித்திரபுத்திரர் பிறப்பின் நோக்கம்)

இந்திரனார் செல்வமெல்லா மீடழிந்து போகாமல்
வந்து பிறந்த மகனாரைச் சொன்னாரோ
ஐந்தருவின் கீழே அரசிருக்குஞ் சுந்தரிக்கு
மைந்தனென வந்த மதகளிற்றைச் சொன்னாரோ
தும்பிக்கைச் சூழ்குழலாள் துய்யசிவன் வாசலிலே
கம்பி காதாட்டி கணக்கெழுத வந்தாரோ
வண்டாரக் கடுக்கை வளைந் தகன்ற வாசலிலே
கண்டார் மகிழக் கணக்கெழுத வந்தானோ
ஈசனருளா லியமன்தன் வாசலிலே
தேசக் கணக்குச் சிறந்ததெழுத வந்தானோ
மண்ணிற் கணக்கு மகாதேவர் தன்கணக்கு
விண்ணிற் கணக்கும் விரைந்தெழுத வந்தானோ
சீதபதி போலே சிறந்த முகத்தழகும்
ஆதியானக் கட்டளை யாதரித்தப் பாலகனோ
சிட்டகர் கணக்கும் துரோகிகள் கணக்கும்
சிட்டாக் கணக்குந் தெரிந்தே வந்தானோ
பூவேந்திரன் தவத்தால் புண்ணிய பாவமறிய
மாவேந்திரியார் மைந்தரென்று சொன்னாரோ
கள்ளிகள் தன்கணக்கும் காதல் பெருங்கணக்கும்
ஒள்ளியதாக வெழுதியுந் தரிக்க வந்தானோ
நன்மைக்கும் திண்மைக்கும் நாடி யறியாத
புன்மை நாவிற் புறமெழுத வந்தானோ
சீரார் சிவலோகம் தெய்வப் புவிகளெல்லாம்
ஆராய்ந்துச் சொல்ல அறிவுளனாய் வந்தானோ
சந்திரர்கள் சூரியர்கள் சாதிப் பிராமணர்கள்
மந்திரநூல் வேதம் வரம்பு செய்ய வந்தானோ
பூவின் பொருட்டாலே பொற்றாமரைக் கயிற்றின்
ஆவின் வயிற்றில் அவதரித்த வாரமுதோ
பஞ்சமா பாதகர்க்கும் பர்த்தாவைப் பேணாதார்க்கும்
மிஞ்சு நாகம் வெளியடைக்க வந்தானோ
எங்களரும் பொருளோ யிந்திரனார் பெற்ற கண்ணோ
எங்கள் குலம் வாழ எழுந்தருளும் நாயகமே
தாராட்டு முற்றும் குருவே துணை
இந்தபடியே யியல்வாக தாராட்டி
அந்த மகனை முழுது மரிதாய் வளர்த்தனனே

## (இந்திரர்க்கு உணவு படைத்தல்)

உம்பர்கோன் மண்டபத்தி லுண்மையுடன் வந்திருக்க
செம்பொற்கலம் வைத்து திருக்கையால் நாவாராற்ற
அமுது மிகப் படைத்தார் ஆனதொரு இந்திரர்க்கு
அமுதுறு சுவையுங்கூட்டி யமுது செய்தார்
திருக்கை விளக்கிச் சிங்காசத் திருந்து
மருக்கமழும் பாக்கும் வண்ணமிகு வெற்றிலையும்
கற்பூரச் சுண்ணமிட்டு காவலனுந் தானருந்தி
நட்பு மிகுந்து நன்றா யிருக்கையிலே

## (குழந்தையைப் பாலருந்த வேண்டல்)

அப்போதொரு தாதி அறிவா ளெழுந்திருந்து
மைப்போ லிருண்ட குழல்வாரியே தான்முடித்து
பாரமுலை ததும்ப பைந்தொடியு மோடிவந்து
ஆரமுலைப் பாலமுது செய்யு மென்றுரைத்தனள்

## (கல்வி கற்பிக்க வாத்தியாரை அழைத்தல்)

உன்பா லுண்ணவோ உற்றபசுவில் பிறந்தேன்
உன்பா லுறங்கவோ உங்கள் மனைதன்னில் வந்தேன்
வானவர் கோனார்க்கு வந்த மகனார் மொழிகேட்டு
ஆனவிசனமெல்லாம் அமரர்க ளென்றுரைத்தார்
இந்த அறிவு சொன்ன என் மகனை இப்போது
மந்திர நூல் வேதகல்வி வருத்திவைக்க வேண்டுமென்று
வாத்தியார் தம்மை யழைத்தோடி வாருமென்றார்

## (ஆசிரியர் கல்வி கற்பித்தல்)

சாஸ்திர நூல் தானறியு மந்திரங்கள்
ஓதுவார் தம்மை ஒரு நொடியிற் தாமழைத்தார்
வேதப் பிராமணனும் வந்தான் விண்ணம்பரத்தில்
ஆசனத்தின் மேலே யருகிருந்தா ரண்ணாவி
வாசமிகுஞ் சந்தனத்தால் மாடமாளிகை புதுக்கி
நிறைநாளில் நிறைவிளக்கு நிறைமரக்கால் முற்றும்வைத்து
நிறைமிகுந்த பூக்கள் நாலுதிக்கிலுஞ் சொறிந்து
பொன்னின் கணபதியைப் பொற்பீட மீதிருத்தி
சின்னப் புதல்வனையுஞ் சிறப்பாகவே ஒப்புவித்து
பாவாடை மீதிருத்தி பழந்தேங்காய் பொறி யவலும்
ஆவின்பால் சர்க்கரையும் மடக்காயும் வெள்ளிலையும்
தெட்சணையும் வைத்துப் படைத்தார் சிறப்புடனே
தெட்சணையும் வாங்கித் தேங்கா யடித் துடைத்து

வினாயகனார் பூசை விதவிதமாக முகித்து
அனாதி முதலான அறிவுரையுங் கைக் கொடுத்தார்

### (ஆசிரியருடைய உரையை மறுக்கக் கூறல்)

ஆயிரம் பார்ப்பார் அரியோமெனவே
பாயிரநூல் வேதம் படிப்பிக்கு மண்ணாவி
அரி அரி யென்று அருகே யிருந்தோத
அரியரி யென்ற சொல்லை யப்பிள்ளைக் கேளாமல்
அரிநமோ நமோவென் றருகே யிருந்தோதி
விரியநூல் வேதமெல்லாம் விளங்க வெடுத்தோதி
எனக்குமொரு அண்ணாவி உண்டோ யிந்திரரே
எனக்கொருவர் கைக்கூலி கட்டிராதே யெப்போதும்
நானொருவர்க்குக் கைக்கூலி கட்டுவனோ நம்மாணை
நானொருவருக்கு அண்ணாவியாகிறது நாந்தாமே
எனக்குமொரு அண்ணாவி ஈசனல்லாதில்லை மன்னே

### (குழந்தை ஆசிரியராகி வாசித்தல்)

மெனக்கேடா வுங்களுக்கும் வேதமதி சொல்வேன்கேள்
என்றேட்டை யெறிந்து யெழுந்திருந் தப்பாலிருந்து
நன்றியுடன் தான் கொணர்ந்த நற்பொத்தகம் விரித்து
சுன்னேட்டின்படி வாசிக்கக் கேளுங்கோ எல்லோரும்
நன்னெறியில் நூல் விளைத்து நற்பீட மீதேற
கையில் இரண்டெடுத்து கடுகனவே சித்தர்
மெய்யிதுகாண் காப்பெடு விண்ணவரே கேளுமென்ன
பூமியெல்லாம் வாழவென்று புண்ணியனார் வாசித்தார்
கோமன்னர் வாழவென்று கொற்றவனார் வாசித்தார்
ஓரேடு வாசித்தா ருலகமெல்லாம் வாழவென்று
ஈரேடு வாசித்தார் ராச்சியங்கள் வாழவென்று
நூல் முறையே மூன்றேடு நொடிக்குமுன்னே வாசித்தார்
நாலேடு வாசித்தார் நகரங்கள் வாழவென்று
அஞ்சேடு வாசித்தார் அகரங்கள் வாழவென்று
பஞ்சவர்கள் வாழவென்று பத்தேடு வாசித்தார்
அவ்வேடு போட்டு அடுத்தேடு கையாலெடுத்து
சைவநூல் வேதந் தழைக்கவென்று வாசித்தார்
தேவர்கள் வாழவென்று திருவேடு வாசித்தார்
மூவர்கள் வாழவென்று முதலேடு வாசித்தார்

### (நகர்வலம் காணப் புறப்படல்)

சித்திரபுத்திரனார் சிவனார் பெருங்கணக்கு
இத்தனை நேரஞ் சென்றதே யிந்திரனாரே

இங்கிருந்து வாசிக்க நேரமில்லை இந்திரரே
அங்கே சிவன் வாச லருகிருக்க நாம் போறோம்
நகரச் சோதனை காண நாம் போறோ மிந்திரரே
சிகரந்தனிலிருக்கும் சிவன் பாதத்துக்கே போறோம்
என்று கணக்கைச் சுருட்டிக் கக்கத்திடுக்கிலே யடுக்கி
நன்றியுடன் புறப்பட்டார் நற்கணக்க ரப்பொழுது
வயிரங் காணிக்கையாக எடுத்துக் கொண்டுவர
ஆயிரங் கண்டர் அருகாகச் சூழுந்துவர
இந்திரர்களது வானத்திலேறிய யுத்தமனார்
அந்திரவான் கயிலையானை நோக்கி நடந்தார்
வச்சிர வாளேந்தும் பகவானுந் தேவியுமாய்
அச்சமுடன் மைந்தனடி நோக்கிப் போயினராம்

## (சித்திரபுத்திரன் திருக்கயிலை அடைதல்)

சித்திரபுத்திரன் திருக்கயிலை சென்றடைந்து
உத்தமனார் கோவிலுடன் சென்று தான் புகுந்து
நாடிப் புகழ்ந்து கண்டு நாரியு மீசர்தனை
தேடிப் பணிந்தான் திருவாசகம் படித்தார்
வந்து பணிந்தவனைக் கண்டு மழுவிடையோன்

## (சிவன் காமதேனுவிடம் உரைத்தல்)

சிந்தா மகிழ்ந்து காம தேனுவைப் பார்த்தேதுரைப்பார்
பைம்பொற் பசுவே யுன்பாலகன் தானிங்குவந்தான்
உம்பர்க்கு நாயகனும் ஓடியிங்கே வந்திடுவான்
வந்தாலும் நான் கொடுக்க மாட்டோமென்றே விடுவாம்
சிந்தாகுலந் தீர்க்குஞ் செல்வனைப் பார்த்தருள்வாய்
என்றரனார் சொன்னப் பொழுதே யெழிற்பசுவும்
சென்று மகனார் திருமுகத்தை மோந்ததுவே
மோந்து திருமுகத்தை முத்தமிட்டுக் கொண்டதற்பின்
ஏந்துமிரு கொம்பா லிறங்கத் தடவியதே
கொம்பால் தடவி குலாவி நிற்கு மன்னேரம்

## (இந்திரன் கயிலாயத்திற்கு வருகை)

ஐம்பொ னுலகா ளும்பர்கோன் தேவியுடன்
நன்மகனைத் தேடிநாடித் திகைத்திடவே
தன்மகனார் பொன்தடம் நோக்கி வந்தனரே
வந்தான் கயிலை மலைதனிலே வானவர்கோனே
சிந்தாகுலத்தார் சிவனை வந்து தெண்டனிட்டார்

### (இந்திரனின் விண்ணப்பமும் சித்திரபுத்திரனின் மறுப்பும்)

தெண்டனிட்டபோது சிவனார் முகம் நோக்கி
வண்டமருந் தாராய் வந்தவாறே ஏதுரையாய்
உரையென் றரனா ருள மகிழ்ந்து கேட்டதற்பின்
விரைகொண்ட கற்பகத்தார் விண்ணவர்கோன் ஏதுரைப்பான்
நானடியேன் முன்னமிங்கே நற்தவஞ் செய்து அருளால்
.............................................................
என் மகன்மேல் பாக்கியத்தி லெண்மடங்கு தானெனக்கு
உன் மகன்மேல் பாக்கியந்தான் உண்டாச்சென வுரைத்தார்
அந்தவுரைக் கேட்டு நின்றார் சித்திரபுத்திரனார்
வந்தரனார் பாதமலர் மீதிலே விழுந்தார்
விழுந்தவனை ஏந்தி விரைய அரனார் தாமும்
அழுந்து முன்பாய்க் கைதூக்கி ஆவலுட னெடுத்தார்

### (சிவன் சித்திரபுத்திரருக்கு ஆணையிடல்)

ஆவலுட னெடுத்து அங்கன்பால் நிறுத்தி வைத்து
காவல் புரிந்தும் தான் கட்டியங்கள் சொல்லி நின்றான்
அப்போ தரனார் அறிய சித்திரபுத்திரனைப் பார்த்து
இப்போது நீதான் யமனுட வாசலுக்கு
சித்தாந்தம் வேதாந்தஞ் செய்யு முறைப்படியே
அஷ்டாந்தக் கணக்கும் அடவா யெழுதுமென்றார்

### (சிவன் இயமனை அழைத்தல்)

என்றே சிவனார் இயமன்றனை யழைத்தார்
என்றரனார் தானழைக்க அந்தகன் வந்தேதொழுது
அஞ் செழுத்தி னுள்ளானே அடியார்க் கெளியானே
பிஞ்சுமதி சூடும் பெருமா னுமைபாகர்
மூவர்க்கு முன்னோனே மும்முதலா முக்கண்ணே
எவர் பணிவிடைக்கு யிங்கே அழைத்த காரிய மேன்

### (இயமனுக்குப் பணி சொல்லல்)

புவியாவும் காண் நடம்புரிந்தவரும் என சொல்வார்
கலிய னுபத்திரத்தால் கன்றினாள் பூமியவள்
அன்றபய மிட்டார்க ளெல்லாருந் தான்கூடி
அன்றபய மிட்டதற்கு ஆனகணக்கரும் பிறந்து
நாட்டுக் கணக்கெழுத நல்லாரைத் தீயாரை
ஏட்டிலெழுதி யியலக் கணக்கா வாசித்தார்
நன்மைக்கு நல்லபடி நாடியறிந் துரைக்க

தின்மைக்குத் தீயபடி செப்பமுடன் போகிறார்
என்றார் அரனார் இயமன் மன்றாடித் தொழுது

### (இயமன் புறப்படல்)

நன்று நன்றுவென்று விடை நமனும் வாங்கி மீண்டு
திருமாலைத் தான் வணங்கிச் சிறப்பாய் விடைவாங்கி
பிரமாவைத் தான்தொழுது பிரியாவிடை வாங்கி
நின்றபொழுதே பிரம்மா நிமலனருளால் அழைத்து
இன்று முதல் நன்றா இருபேரும் வாழவென்று
கட்டக் கயிறுடனே கபால சூழபாசம்
கொட்டக் கோலுங் கொடுத்துக் கோலக்கிடா வளித்து
ஆர மிக்கக் கொடுத்து அரி பிரம ரென் சொல்வார்

### (சிவன், பிரம்மா, இந்திரன் மூவரும் மறைதல்)

வாரீர் இயமராசே வழியடிமை செய்வார்மேல்
சிவனை நினைத்து திருத்தொண்டு செய்வார்மேல்
தவத்தை மிக நினைந்து தானஞ் செய்வோர் தன்மேலும்
அஞ்சவே சொல்லாதே அரனார் வெறுத்திடுவார்
இஞ்சொல் மிகவுரைத்து எவ்விடை கொடுத்தார்
இயமர்தனை அனுப்பி இயல் மூவரும் மறைந்தார்

### (இயமனின் பயணம்)

இயல்மூவர் போனதற்பின் இயமனா ரங்கிருந்து
கோலக்கிடா வேறிக் குறைத் தலைப் பூதஞ்சூழ்
வாலக்கிடா வேறி வந்தார் இயமதர்மர்
பல்லுக் கடிப்பவர் சூழ்ந்து வர
நல்லமுரசு சின்னம் நன்றாய் முழுங்கி வர
ஏழுலகந்தான்தீர இந்திரலோகம் புகுந்தார்
வாழும் புவி தழைக்க வந்தார் இயமதர்மர்
தேரோடும் வீதித் தெருவிலே செல்கையிலே

### (இயமனும் சித்திரபுத்திரரும் சந்தித்தல்)

தாரோடு மாலையணி தர்மனெனும் கூற்றுவனை
சித்திரபுத்திரனார் சேனைக் கண்டு தானெதிரே
புத்தியுள்ள நற்கணக்கன் போய்ச்சென்றுக் கூட்டிவந்து
இருவருந் தான்கூடி இசையவிதம் பேசி
தருவரகம் போலக்கூடி தாரணியில் மீதுவர
இருப்புத் தடிக்காரர் ஈண்டருகுஞ் சூழ்ந்துவர
நெருப்புத் தடிக்காரர் நீணிலத்தைச் சுற்றிவர
தேரின் மீதேறிப் புறப்பட்டார் சீமானும்

## (சித்திரபுத்திரன் தீர்ப்பு எழுதுதல்)

பாரிலுள்ளோர் தன் கணக்கைப் பார்த்தார் பலர்புகழ
சிவனே குருவேயென்று திருநீறணியாதார்
தவமே புரியாதார் தண்ணீர்ப் பந்தல் வையாதார்
அப்பாவி யோலை அரவெழுதிப் போடு மென்றார்
இப்பார நாடுதனி லெய்த எழுதுமென்றார்
அவ்வேடு போட்டும் மறுவேடும் வாசித்தார்
செவ்வேட்டில் பெத்தெடுத்தத் தாயைச் சினந்துரைத்தான்
மண்ணிலிருந்து மண்ணோரஞ் சொன்னான் காண்
எண்ணில வழக்கத்தினை யீடாகச் சொன்னான் காண்
அம்பலத்தில் நின்று அநியாயஞ் சொன்னான் காண்
வம்பணிவா ருடைமைக்கு வாஞ்சை யுற்றார்
தம்பற வெள்நரகத்தில் தள்ளுமென்றார்
அம்பவள செல்வத்து வெழுதிக் கொண்டார்கள்
பொல்லாங்குச் செய்து புறக்கடைக்குச் சேருமந்த
கல்லாக் கசடர் கணக்கு மெழுதினரே
சிவனை வணங்காதார் திருக்கோவில் சுற்றாதார்
அவனை வணங்கு மன்பர்தனைப் போற்றாதார்
பிச்சைக்கு வந்தவரைப் பின்னேவா வென்றவர்கள்
பச்சைக் குழந்தைகளைப் பார்த்தே தானிருப்போர்
கன்று வருந்தக் கரந்து பாலுண்டவர்கள்
மண்ணி லிருந்து வழக்கோரஞ் சொன்னவர்கள்
சுற்றம் பசிக்கச் சோறுண் டுடலெடுத்து
குற்றம் பலபுரிவோர் கோள்கள் பறைந்திடுவோர்
நெற்றிதனில் வெண்ணீறு நித்த மணியாதார்
பொற்றை யுடலெடுக்கப் புலால் மடக்கத் தின்றவர்கள்
தானியத்தில் சாவிதனைக் கலந்து வித்திடுவோர்
நானிலவிக்கும் நெல்லை நாளிற் குறைத்திடுவோர்
காலி நீருண்ணும் பொழுது கலைத்திடுவோர்
சூலியர் தம்முந்திக் கருப்பந் துலைத்திடுவோர்
பிள்ளை யழிப்பார் பிறர்பொருளை வஞ்சிப்பார்
உள்ளபொருளை யுபயோகித்தா லில்லை யென்பார்
தூரவழிக்கும் துணைவாரோமென்று சொல்லி
ஆருமில்லாக் காட்டி லடித்துப் பறித்திடுவோர்
நீராடும்போது நிறைந்த குளிச்சீலை யன்றி
சீராகும் நீரிற் தினமும் முங்கிக் குளித்திடுவோர்
ஆலயத்தைக் கோபுரத்தை அந்தச் சிகரமதை
சீலமுடன் பார்த்திருந்துத் தீண்டா மலங்கழிப்போர்
தீயவலங் களிக்கும்போ தடக்காய்த் தின்றிடுவோர்
ஆயவந்த வேலைதனில் ஆனமொழி பேசிடுவோர்

உத்தமமான உயர்ந்தக் குடியதனில்
அத்தங்கெடுத் துலகில் அக்கினியே சாட்சியதாய்
கொண்டமனையாள் வருந்தக் கூத்தியார் தன்னை வைத்து
பண்டையுள்ள பொன்களெல்லாம் பாராமத் தானழிப்போர்
மாதாபிதா வருந்த வயிறு வளர்த்திடுவோர்
ஆதாரமுற்றாரை யறக்கொடுமைச் செய்திடுவோர்
இட்டுண்டு வாழாதா ரேற்றவர்க்கு யில்லை யென்பார்
மட்டுண்ட தென்று மகிழ்ந்து பொசிப்போர்
கூட்டிக் கொடுத்துவிட்டுக் காட்டிக் கொடுத்தவர்கள்
நீட்டும் பிளக்கடையில் நின்று மெல்லக் கேட்டவர்கள்
கோழிப்போர் கத்திகட்டி கூசாதே விட்டிடுவோர்
ஆழியுலகில் பறவையை யம்பால் யடித்திடுவோர்
கன்னமிடுவோர் களவுடனே தான் புரிவோர்
அன்னமிடுவோர்க் கறக்கொடுமைச் செய்திடுவோர்
கொண்ட கணவனுக்குக் குறிப்பறிந்து யூட்டாதாள்
பண்டுச் சொன்ன பேச்சை பழங்கதையாய் தான் முடிப்போர்

## (தவறு செய்யும் ஆண்களுக்குத் தண்டனை)

இப்படிக்குக் காத்த யியல்வுக் கேடானவரை
செப்பமுடன் கொண்டுபோய் செந்தணலிட்டு
பாசத்தை வீசி பதறவே தான் பிடித்து
நாசிதனில் நஞ்சைவிட்டு நாக்கிலே தூண்டிலிட்டு
உச்சிதனிலே யுரத்த முளை யறைந்து
அச்சப்படக் கண்ணி லாணி தனை நிறுத்தி
கையிரண்டும் பின்கட்டாய்க் கட்டி இருகால் பிணித்து
மெய்யிற் குருதியொழுக மிக அடித்து
மார்வைத் துளைத் திருப்பு வன்சங்கிலி கோர்த்து
கூரிய நாராசங் கொடுஞ்செவியினூடேற்றி
ஆண்குறியிற் றூண்டி லறவேதான் கோர்த்திறுக்கி
மாண்புடைய பெண்குறியில் வாளிருப்பு தூண்டிலிட்டு
தரைமீ துடலந்த காவிரைந் திழுத்து
வரைமீதி லேற்றி மறுக வுதைத்து குட்டிப்
பாறைதனில் போட்டு பதற விரைந்திழுத்து
வேறுவேறா யுடலை வெட்டிவெட்டிப் போட்டிழுத்து
உள்ளங்கால் பீற உரத்த அடியொட்டியின் மேல்
தள்ளி நிறுத்தி தயங்க அவர் குடலை
இருவாளாலே இருபிளாவாய் தானறுத்து
காரமுள்ள உப்பைக் கரைத் ததன் மேலே யொழுக்கி
முள்ளுவனத்தூடே முகங்கீழாய்ப் போட்டிழுத்து
பள்ளம் மேடென்று சற்றும் பாராமல் போட்டிழுத்து
தள்ளுங்கோ வளர்நரகத்திற் தானென் றுரைத்தான்

உள்ளபடி யென்றுரைத்தங் கெழுதினரே
நல்லோர் பெரியோரை நடுங்கப் பறைந்ததிவன்
பொல்லாத வாயில் புழுச்சொரிய வெட்டுமென்றார்
கொண்டவளைப் பேணாக் கொடும் பாவியாகுமிவன்
துண்டப்படவே துணித் துணியாய் வெட்டுமென்றார்
அந்தணர்தன் சொத்தை அடித்துப் பறித்ததிவன்
மைந்தனுடல் முற்றும் மழுவாற் பிளவுமென்றார்
பத்தினி தன்னைப் பதற பறைந்ததிவன்
கொத்துடைய நாவைக் குலையோடரியு மென்றார்
இந்தப்படிப் பாவமெண்ணாமல் செய்தவரை
வந்திப்படிச் செய்து வன்னரகில் போடுமென்றார்

## (தவறு செய்யும் பெண்களுக்குத் தண்டனை)

அவ்வீதி விட்டு மறுவீதி வந்தார் ஆணழகர்
செவ்வீதி தன்னில் இருந்த அவளொருத்தி
பெற்றத் தாய் சொத்தைக் களவுச் செய்து பின்பார்த்து
சொத்திட்டுக் கொண்டவர்களைச் சூதுசெய்துப் போடுமென்றார்
குறைத்த மாமிசத்தைத் தரும் பாவியானவளும்
உரைத்த தளக்கும் நாளில் ஒதுங்க வையாப் பாவிகளும்
குத்து முர லுலக்கை தனைக் கூரையில் சாத்தினவர்
மெத்துஞ் சுளகு மெழுகாத வஞ்சியரும்
அன்புடனே நீர்ச்சால் அது மூடாப் பாவியரும்
இன்பமுடனே வாசல்படி கழுவா தேழையரும்
உண்ணும் கலம்விளக்கி உண்ணாதப் பாவிகளும்
மண்ணில் பேயாய்ப் பிறக்க வகுத்தங் கெழுதினரே
வத்திணையாய் நாளும் வளருமடுப் பெரியை
நித்தமெருப் போட்டுப் புதையாத நீலிகளும்
கண்டபோ தொன்று சொல்லிக் காணாப்போ தொன்று சொல்லி
மிண்டவரைப் பொல்லா நரகில்வீழ வெழுதுமென்றார்
அகம் வாசல் மன்றி லதிநடை வழியில்
இகலமே கோமியத்தால் வீடு மெழுகாதவரும்
காலையெழுந்து முகங்கால் கழுகாக் கன்னியரும்
சீலமுடன் உறக்கஞ் செய்யுமந்தக் கன்னியரும்
தோன்றவே மாதவிடையால் தூடக்கு வந்தால்
மூன்று நாளென்று முழுகாப் புலச்சிகளும்
இந்த உலகில் இயல் வாழ்வெல்லா மிழுந்து
அந்த நரகத் தழுந்த வெழுது மென்றார்
அவ்வேடு கள்ளிகளேடு வந்து சிக்கியதே
பர்த்தா விருக்கப் பசியாறிக் கொண்டவர்கள்
நத்தாகத் தன்வீட்டை நன்றாயடைத்து வைத்து
குண்டாணிகள் சொல்லக் குறளி பேசி

சண்டையிட்டு முன்னே சருவுவா ளிப்பாவி
ஆதித்தன் வந்தும் அனந்தல் தெளிந்தாளிலை காண
மாதிற்ற பாயை மடக்காமல் போட்டு வைத்தாள்
சீதேவி வந்தாலும் சிதறுமவள் வீட்டில்
மூதேவி நின்று முனிந்துமொழி பேசிடுவாள்
கொண்ட கணவனுக்கு முந்திவழி கொண்டிடுவாள்
பண்டறியாக் கள்ளியவள் பர்த்தாவை விட்டுவிட்டு
தீர்த்தம் ஆடித் திருநாளும் பார்த்தாள் காண
பார்த்ததோர் கண்ணில் பெருக முளையறைந்து
ஏற்ற நரகிலிட்டு எரியுமென்றார் புண்ணியனார்
சுவர்த்தங் கிவர்களைத்தான் கொண்டார்கள் பட்டோலை
கல்மாரியும் மழையுங் கண்டொதுங்க வந்தவர்க்கு
இல்லிடமு மில்லை யென்றாளே மாபாவி
போகும்போது இல்லிடத்தைக் கூடக்கொண்டுதான் போவாளோ
தீம்பாவியேத் தீநரகத்தில் தள்ளுமென்றார்

## (செட்டியார் தெரு வழியே வரல்)

செட்டியார் தன்தெருவில் வந்தார் சிறப்புடனே
செட்டிகள் வந்து தெண்டனிட்டுப் போற்றிநின்று
அச்சமுடன் வாய்புதைத்து அடியேன் விண்ணப்பமென்றார்
பச்சை மிளகு விற்போம் பதர்மிளகு விற்றிடுவோம்
வில்லாச் சரக்கை விலைச்சரக்காய் விற்றிடுவோம்
செல்லாப் பணத்தைச் சென்றிடப் பண்ணிவிப்போம்
எல்லாப் பிழையும் பொறுத்தருளு மென்பொருள்
பலசரக்கைப் பைக்கூறை வாழப் பதங் கொடுத்தார்

## (வெள்ளாளர் தெருவழியே வரல்)

வெள்ளாளர் தன்தெரு வீதியிலே வந்து நின்றார்
உள்ளாகும் நெல்லு உலத்தாப் பதருடனே
கள்ள மரக்கால் கவண்ட வோர்நாழி
நள்ளிருளில் கள்ளரைப்போல் நல்ல மொழிபேசி
எள்ளளவு சற்றுமிரக்கமற்றுத் தானளப்போம்
என்றார்கள் வெள்ளாளர் இசைந்தார் பெருங்கணக்கர்
நின்றுவிடுமென்று நெடுந்தெருவிலே போனார்

## (பட்டர் தெருவழியே வரல்)

பட்டர்மார் வீதியிலே வந்தார் பரிவுடனே
பட்டர்மார் கண்டுபணிந்து தொழுது நின்றார்
தழுகைப் பணியாரமுடன் தானேற்றி நின்றுரைப்பார்
குளிப்போஞ் சேவிப்போம் கோவில் பூசித்திடுவோம்

ஏறாதமலை தன்னை ஏறிப் பணி பணிந்திடுவோம்
வேறுகூறாக வெழுதி வெருட்டாதே புண்ணியரே
நன்றென்று சொல்லி நடந்தார் பெருங்கணக்கர்.

### (குசவர் தெருவழியே வரல்)

முன்றுதனில் வரவே முன்வந்து தான்குசவர்
வேகாதப் பானைதன்னை வெந்ததென்று நாங்கள் விற்போம்
ஆகாதப் பானைதன்னை அடைத்துடனே வித்திடுவோம்
அதை ஏட்டில் எழுதாதே இயல்நரகில் தள்ளாதே
இதம்பேசி யுங்களுக்கு என்ன பதம் வேணுமென்றார்
மண்ணே பதம் ஒழிய மத்தப் பதமில்லை யென்றார்
மண்ணை வனைந்துண்ணப் பதந்தாரு மன்னவரே

### (கண்ணாளர் தெருவழியே வரல்)

கண்ணாளர் வீதியிலே வந்தார் பெருங்கணக்கர்
கண்ணாளர் வந்து கணக்கர் பதந் தொழுதார்
உற்றுறவாய்ப் பேசி உண்மைபல சொன்னாலும்
சற்றாகிலுங் களவுதா னென் குடியிருக்கும்
வாய்க் கரிசிதானும் வகையில்லை யென்றா ருத்தமனார்

### (செக்கர் தெருவழியே வரல்)

தீப்பாவி செக்கர் தெருவிலே சென்றுரைப்பார்
எண்ணையிலே தண்ணீ ரிப்போது விட்டானென்பார்
திண்ணமுள்ள செக்கிலே போட்டுத் திரியுமென்பார்

### (சான்றோர் தெருவழியே வரல்)

எவ்வேந்துஞ் சோழனிரு கண்மணி யென்ன வந்தோர்
செவ்வேந்து மீசர் திருமேனியிற் பிறந்ததோர்
சம்பானை வென்றிரட்டை சங்குதனைப் பறித்தோர்
தம்பிநாடகங் காண சந்தோஷமாக்கி விற்றோர்
திருமருவு சோழனுக்குச் செவ்வந்தி கொண்டு வந்தோர்
வருசைப் பெற்ற சான்றோர்கள் வண்ணத்தெருவில் வந்தார்
அப்போது சான்றவர்கள் அவரை வந்துத் தெண்டனிட்டார்
கற்புடைய சாதியென்று கணக்கில் லெழுதிவைத்தார்

### (வண்ணான் நாவிதர் வந்து வணங்கல்)

வண்ணானும் நாவிதனும் வந்தங் கடிபணிந்தார்
எண்ணாதப் பாவம் யாமறியோம் ஏழையர்கள்
எங்களுக் கென்னவரம் ஈய்வாயெங்கள் பெருமாளே
உங்களுக் கென்னபதம் வேணுமென்றார் உத்தமனார்

எங்களுடைய கூலியெவர் தான் பிடித்தாலும்
எங்கள் வயிற்றிற் பிறக்க வரந்தந்தருளும் என்கோவே
வண்ணான் நாவிதன்கூலி வந்தியினாலே பிடித்தோர்
வண்ணான் நாவிதன் வயிற்றில் மறுற்றுப் பிறப்பரென்றார்
அந்தத் தெருக்கடந்து அப்பாலே போகையிலே

## (அந்தணர்கள் வந்து வணங்கல்)

அந்தணர்கள் வந்து அடிதொழுது தெண்டனிட்டார்
ஊறுகாய் தண்ணீருடன் வந்த பேர்களுக்கு
வீருந் தகையாற்றி விண்ணப்பஞ் செய்யலுற்றார்
தாரை நீரேத்திடுவோந் தானங்கள் வாங்கிடுவோம்
ஊருதேசந் திரிந்து ஒருபொழுது உண்டிடுவோம்
இல்லங்கள் தோறும் இடும்பிச்சை யேற்றிடுவோம்
நல்லகன்னிய தானம் நாங்களே வாங்கிடுவோம்
தீர்த்தம் பிறர்பொருள்க்காய் சென்றோதியே திரிவோம்
ஆத்திரப் பாவமேற்றும் அரும்பொருள் வாங்கிடுவோம்
இத்தனையுங் குற்றமென்று எழுதாதே புண்ணியரே
அத்தனை மன்றாட்டுக் கேட்டு நின்றா ரந்தணரும்
பிரம்மபதம் உங்களுக்குப் பிரியாவிடை யிதுகாண
வரமது அந்தணரே வந்து தந்தோம் உம்மானை
என்று சொல்லியே தெருவெல்லா மிகவெழுதி
நன்றிகெட்டார் தன்கணக்கும் நாட்டங்களும் எழுதி

## (புண்ணியங்கள் செய்வோர் புள்ளிவிவரம்)

புண்ணியங்கள் செய்தோர்கள் புள்ளிதனைச் சொல்லலுற்றார்
எண்ணி எடுத்தங்கே இயல்பாய் எழுதலுற்றார்
சிவனை வணங்கினவர் சிவபூசைச் செய்தவர்கள்
சிவத்துக்கு நல்ல சிவாலயங்கள் கட்டினவர்
நாராயணர்க்கு நற்கோவில் கட்டினவர்
சீராம் பிராமணர்க்குச் சிறக்கமனை கட்டினவர்
மாயேஸ்வரற்கு மடங்கட்டி வைத்தவர்கள்
போயென்ற கங்கை புண்ணிய நீராடினவர்கள்
சாலைமடங்கள் வைத்தோர் சத்திரங்கள் கண்டவர்கள்
நாலுதிசையு மென் னந்தவனம் வைத்தவர்கள்
இடிந்தப் பழங்கோவில் எடுத்துப் புதுக்கினவர்கள்
பொடிந்தப் பயிர்தனக்குப் போதநீர் விட்டவர்கள்
வீங்கு மிருட்காலில் மிகுபசியால் வந்தவர்க்கு
பாங்குடனே யன்னம் பகுந்தங்கே யிட்டவர்கள்
வெப்பமிகுங் கொடைநாள் பாலைமிக வெளியில்
ஒப்புடனவே நீர்ப்பந்த லுவப்புடனே வைத்தவர்கள்

அகுதி பரதேசிக்கு அன்னமிகப் படைத்தோர்
தகுதிபெரு நல்லோர்தனக்குப் பொருள் கொடுத்தோர்
முன்னாளில் வாழ்ந்து முசித்துப் பின்கெட்டவர்க்கு
பொன்னானது கொடுத்து புத்தி மகிழ்வித்தோர்கள்
வீறிட்ட போர்க்களத்தில் மெல்லார்ப் படைப்போரில்
சோறிட்டார்தன் முன்னேதோன்றி நின்றுபட்டவர்கள்
தந்தாரந் தாரம் பிறதாரம் புத்திரர்கள்
இந்த உலகி லியல்பாய் நடந்தவர்கள்
அடைக்கலமாய் வைத்த பொருளை யழியாமல்
திடத்துடனே காத்துத் திரும்பக் கொடுத்தவர்கள்
கற்றோர்க்கும் வேதியர்க்கும் காசுபணங் கொடுத்தோர்
உற்றார்க்கு நல்லஉறவு முறையார்க்கு மிட்டோர்
இடுக்கத்துடன் வருந்தி யேதுமின்றி வந்தவர்க்கு
உடுக்கப் பிடவை யுகந்து கொடுத்தவர்கள்
பிச்சை யெடுப்போர்க்குப் பிரியமுடன் சீக்கிரத்தே
இச்சையுடன் பிச்சையிட்டு எழுந்தருளு மென்றவர்கள்
தங்க வருவார்க்குத் தங்க இடங் கொடுத்தோர்
வங்கமுறு ஆசிரியனை வணக்க முற்றோர்
செருப்புங் குடையுஞ் சிறந்த பிராமணர்க்கு
விருப்பமுடனே விரந்துக் கொடுத்தவர்கள்
வாரமுறையாமல் மகிழ்ந் துரைத்தோர்
ஓரம் பறையாதே யுகந்து வழக்கு உரைத்தோர்
வெள்ளத்தே போவோரை வீழ்ந்துப் பிடித்தவர்கள்
பிள்ளைப்பால் வார்த்தோர் பிணிக்கு மருந்தளித்தோர்
மங்கையரைக் கள்ளர் வழியிற் பறிக்கையிலே
அங்கவரைத்தான் காத்து அவர்க்காகப் பட்டவர்கள்
மிக்க விருந்து வந்தால் வேறிடத்தில் வையாமல்
ஒக்கவிருந் தங்கொரு இடத்தில் உண்டவர்கள்
வந்தார்க் காசனமிட்டு வாரார்க் குலையேற்றி
செந்தாமரை போற்சிறந்து முகம் மலர்ந்தோர்
அகுதி பணத்தை யளித்தங் கெடுத்தவர்கள்
மிகுதி பசுத்திரளில் விடையிடம் விட்டோர்கள்
பசுக்கள் உரசப் பருந்தரிகள் நாட்டினவர்கள்
விசுக்கென்று கண்டார் முகத்தில் முழியாதவர்கள்
ஆவை வணங்கி அனுதினமும் கும்பிடுவோர்
நாவிற் சிவகதையை நாள்தோறும் மேந்திடுவோர்
உத்தமமாக உகந்து திருநீறு இடுவோர்
கஸ்த்தூரி ரெங்கர் கனகத்திரு நாமமிட்டோர்
சூரியனை நாடோறுந் தோத்திரங்கள் செய்தவர்கள்
மூரி வினாயகனை முன்னின்று கும்பிடுவோர்

சிந்தை மகிழ்ந்து திருக்கோவில் சூழ்ந்திடுவோர்
கந்தனை நாளுங் கருதித் தொழுதிடுவோர்
மாதாவை பிதாவை மகிழ்ந்து தினந் தொழுவோர்
வேதநாமங்கள் விதித்த நெறியே நடப்போர்
குருவை மறவாதார் குருநலனிற் குன்றாதார்
பருவமுறக் கடித்தப் பாம்பினை விஷமிட்டோர்
அஞ்சி யடைந்தோரை யஞ்சாதே காத்திடுவோர்
பஞ்சம் அதனிற் பகுந்தன்ன மிட்டவர்கள்
நன்றாய் ஒருவர் செய்தநன்றி மறவாதார்
வென்றான் கைவாரம் விரும்பிப் பறையாதார்
கன்னிய தானங் கட்டிக் கொடுத்தவர்கள்
பொன்னியாறே யதிப் புதுப்புனலில் மூழ்கிடுவோர்
வைய்கைத் திருநதியில் வந்து புனலா டினவர்
செய்கையுடன் தண்பொருணை சேர்ந்து புனலாடினவர்
கோபுரங்கள் வைத்தோர்கள் கோசாலை கட்டினவர்
மாபுராதர்க ளிருக்க மண்டபங்கள் செய்தோர்கள்
உருத்திரர் உமை பாகர சங்கரர்க்கு
திருத்தே ருண்டாக்கித் திருநாள் நடத்தினவர்கள்
ஆறுகுளங் கண்டு ஒரணை கட்டினபேர்கள்
சென்று படியும் நல்ல செய்கால் திருத்தினவர்
மா விருக்கைப் பூக மந்தாரந் தானெருங்க
பூவிருக்குந் தோப்பு புதுக்கவைத்து உண்டாக்கினவர்
கணவனுரைத்த மொழி கடவாத கன்னியரும்
குணமுடனே நல்லவார்த்தைக் கூறும் பெரியோர்கள்
ஐந்து முகத்தோன் சோமவாரம் அன்பாக நோற்றிடுவார்
சிந்தை மகிழ்ந் தேகாதேசி விரத மெடுத்தோர்
மகாமதிதோறும் மகிழ்ந்து புனல் மூழ்கினவர்
சீர்கயிலையீசர் சிவன் இயலினன்பு வைப்போர்
தென்புலத்தோர்க் குற்ற திதியிற் கடன் கழிப்போர்
பொன்புடைய நோன்பு பொருந்தவே நோற்றிடுவோர்
மாறில்லாக் கற்புடைய மானழகு மங்கையர்கள்
நீறு எப்போதும் நெற்றியிலே இட்டிருப்போர்
அழுத குழந்தை தன்னை யன்பாயெடுத் தணைப்போர்
ஒழுகினவர் தமக்கு ஊன்றுகோல்தான் கொடுப்போர்
மாலை விளக்கு மகாகோவிலுக் கிடுவோர்
காலை யெழுந்து புனல்மூழ்கிக் கடன் கழிப்போர்
காய்ந்தத் தலைக் கெண்ணெ யரப்புக் கடிந்தளிப்போர்
வாய்ந்தப் பள்ளி யோதுவித்து வாத்தியாரா யிருப்போர்
ஓதிவைத்த வாத்தியார் கூலி யுகந்தளிப்போர்
மாதுபள்ளிக் கூடங்கள் மாதே தேடி வைத்தோர்
ஆதுலா சீலையது வெளுப்பா இருந்தவர்கள்

மானிலத்தி லுள்ளார்க்கு மயிர்வினைகள் முற்றிவித்தோர்கள்
துணிவெளுக்கும் வண்ணார் கூலிக் கொடுத்தவர்கள்
பூவினுக்கு மள்ளாப் புலைப் பேருதான் கொடுப்போர்
ஆவிகடுவாய் யிரையிட் டன்பாய் வளர்த்தவர்கள்
ஆரிடத்து மாண்புற் றகன் மகிழ்ந்து தானிருப்போர்
பாரிடத்து சொல்லும் பலபுண்ணியம் புரிவோர்

## (புண்ணியம் செய்வோர் பெறும் பலன்)

இப்படிக் கொற்ற யியல்புடைய புண்ணியங்கள்
முப்பத்திரண் டறத்தின் முற்றி விற்ற புண்ணியங்கள்
செப்பமுட னறிந்து செய்தப் பெரியோர்கள்
இப்புவியில் வாழ்ந்து இருந்து சிலநாட் கழித்தால்
தப்பாம லீசுரனார் தன்னடியிற் றான் சேர்ந்து
வைப்பாக யிவ்வுலகில் வாழ்ந்து முசிப்பார்
இவ்வுலகத்தில் லியற்கையுடன் தான் பிறந்து
அவ்வுலகத்தி லமரர்களைப் போலிருப்போர்
அண்டர் புகழ் அரனார் கிருபை செய்ய
மண்டலிகர் சித்திரபுத்திரர் மகிழ்ந்தங் கெழுதினாரே

## (சித்திரபுத்திரன் தனது தாயின் இல்லம் வரல்)

இப்படித் தப்பாம லிவ்வுலகில் நற்கணக்கும்
ஒப்பமுடனே எழுதி யுண்மைப் படுத்தினனே
இந்தப் புவி பாரமிருக்கவே வந்துதித்தோர்
தந்தைதாய் பாதந்தான்சென்று கண்டனுப்பி
வருவேனெனப் போனார் மன்னவர்கள் தான்திரும்பி
அரன்பதஞ் சொல்லிப்பின் அவர்களுந்தான் போனதற்பின்
மாதாவகந்தனிலே வந்தார் பெருங்கணக்கர்
மாதாவைத் தந்தையரை வணங்கியிரு பாதமதில்
இருபத்தோர் புஷ்பம் தாளேற்றிப் பணிந்தாராம்

## (பெற்றோர் வாழ்த்துதல்)

அருமைத் திருமகனை அன்னைபிதாவும் வாழ்த்தி
சிவனார் முகத்துக்குச் செங்கழுநீர் பெய்வீர்
பூலோக மடங்கலுக்கும் பூவாசம் போலிருக்கும்
நமனார் முகத்துக்கு நல்ல பூவா யிருப்பீர்
நமஷ்கரித்த நன்மகனை நன்றாகவே வாழ்த்தி

## (பெற்றோர் சித்திரபுத்திரனை உபசரித்தல்)

ஆசனம் போட்டிருத்தி யப்போது தான்சமைக்க
வாசமலர் மாளிகையும் வளமையுடனே புதுக்கி

நன்றாய் சமையுமென்ன நல்லதெனவே சிலபேர்
சென்று மாளிகை புதுக்கிச் செம்பொன் மதில் தீத்தி
அடுக்களைப் பந்திமுதல் அலங்கரித்து பொற்சருவம்
மடுக்கரையிலே விளக்கி வாகுடனே சுத்திபண்ணி
பாலிலரிசி கழுவிப் பரிவுபெறவே சமைத்தார்
சீலவிரத நோன்பு சிவபூசைக்கே யான்
மத்து முண்டான மரக்கறி யுள்ளதெல்லாம்
கொத்துக் கொத்தாக அங்கே கொண்டுவந்து தான்சமைத்தார்
தேன்குளம்பு சக்கரையுஞ் செங்கதலி மாங்கனியும்
ஓங்கு பொறித்துடனே வுண்டான வஸ்து வெல்லாம்
பாங்குபெறச் சமைத்து பத்தியுடன் மன்னவர்க்கு
அன்றாட்டின எண்ணெய் அன்றாட்டின சுரப்பும்
சென்றுகொண்டு நல்ல திருமுடிக்கு நெய் வார்த்து
பன்னீராலே முழுகி பட்டாலே தான்துவத்தி
முன்னூல் விளக்கி முடிகொடி பட்டுடுத்தி
திருமுடி சாற்றுஞ் சாத்தித் திருக்குழலில் மலர் சாற்றி
திருப்பாதமும் விளக்கி சிங்காசனத் திருத்தி
செம்பொன்னைத் திறந்து திருக்கையாற் தானமிட்டு
செம்பொன் கலம்வைத்து துருக்கைதனை விளக்கி
தலைவாழை இலையைத் தானறுத்து பீடமதில்
இலையோ டமுதுகறி பாதமாகப் படைத்து
அன்பால் மகனே அமுது செய்யுமென் றுரைத்தாள்

### (மாதாவின் மயக்கம்)

உன்வீட்டிலே யமுது உண்டோமோ யாமாகில்
உன்வயிற்றில் வந்து பிறவோமா மாதாவே
என்ற பொழுதே யியல்பான மாதாவும்
நின்று பரிதவித்து நெடுமூச்சு தானெறிந்து
மகவாசை யில்லாத மாபாவி யானேனே
அகமகிழச் சந்ததி நானறியாத பாவியென்று
காதல்மக வில்லாத கன்னியருந் தாவதென்ன
போதமயங்கிப் போய்ச் சாய்ந்தாள் பஞ்சணைமேல்

### (தாயும் மகனும் அன்பால் நெகிழ்தல்)

மாதா மயங்கியபின் மைந்தன் எழுந்திருந்து
மாதாவைத் தான்வணங்கி வண்ணமுலைப் பால்தன்னை
உண்ணவே தாருமென் றுகந்து நிற்க அப்போது
தண்ணீரு குடித்து தாகந் தெளிந்தார் போல்
கைதொழுத பாலகனைக் கட்டியெடுத் தணைத்து
மைதொழில் விழியாளும் மடிமேலே வைத்திருந்து

வருக்கைப் பிலாக்கனியும் வாழைச் செழுங்கனியும்
சருக்கரை நற்சீனி தக்கபலாக் கனியும்
ஆவின்பாலில் விரவியமுது செய்யுமென் றுரைத்தாள்
ஆவின்பால் வாங்கி அமுது செய்து அங்கிருக்க
சாந்து சவ்வாது பன்னீர் சந்தனக்குங்குமக் குளம்பும்
பூந்தளிரா மேனியெங்கும் போதமிகப் பூசி

## (மகனுக்குத் தாயின் அறிவுரை)

தயவாகத் தன்மகனைத் தானணைத்து யென்சொல்வாள்
இயமலோகக் கணக்கு எழுதவே போவீரால்
மலடி கைப் பெண்சாதிகளை வாசித்து எழுதாதே
தலைமகனைத் தான்கொடுத்து பின்சந்ததியை வாங்காதே

## (சித்திரபுத்திரர் கயிலாயம் சென்றுச் சேருதல்)

ஏதுகுற்றம் பேசினீர் என்னுடைய மாதாவே நீ
தலைவாழை யிலையை யறுத்தீரே நிண்ணயமாய்
அதுதனையும் பட்டோலை கொண்டோமே யன்னேரம்
மதியில்லார் போலே மாதாவே பேசாதே
மற்றுபல சொல்லி மாதாவே நில்லுமென்று
சித்திரபுத்திரருஞ் சிவன்கயிலை போய்ச் சேர்ந்தார்

## (தேவாதி தேவர்களின் வணக்கம்)

முப்பத்து முக்கோடி தேவர்களும் வந்துகண்டார்
அறுபத்தியா மிருஷி யனேகரும் வந்துகண்டார்
சந்திரருஞ் சூரியருந் தானவரும் வானவரும்
இந்திரனு மாலயனு மெல்லோரும் வந்துகண்டார்
கந்தன் கணபதியுங் காரி வயிரவனும் வந்தார்
வந்தமுனி தேவரெல்லாம் வணங்கிநின்றா ரப்போது

## (இயமன், சித்திரபுத்திரருக்கு, சிவனின் ஆணை)

சித்திரபுத்திரரும் சிவன்முன் பட்டோலை தனை
புத்தியுடன் வாசித்து நின்றாரே புண்ணியனார்
தன்மகக் கணக்குக ளெழுதி வந்தவரைத்தா ரைனார்
நன்மை தின்மையுள்ளபடி நமனருகே தானிருந்து
வாகுடனே செப்புமென்று மனமகிழ்ந்தங் குரைத்தனரே
ஆகிலடியென் னருள் பெற்றே னென்று சொல்லி
கூறப் பெற்றேனென்று கும்பிட் டெழுந்திருந்து
நாறு மலரணியும் நமனையுங் கிட்டழைத்து
தாமித்த நீங்கள் தன்பதியிற் போயிருந்து

பூமிபார மிறக்கிப் புகழ்ந்திருங்கோ வென்றுரைத்தார்
தாமிதங்கள் பேசித்தா னீர் அப்பொழுது

## (பூமாதேவியின் விண்ணப்பம்)

பூமி சுமந்தருளும் பூமாதேவி சிவனே
என்னுடைய விண்ணப்ப மினிக் கேட்க வேணுமென்றார்
இன்னாள் முதலுஞ் சுமந்தே னானுன் னருளை
என்தாள் உள்ளளவும் பொறுப்பேனோ வெம்பெருமான்
தன்னிரு கைக்சுவ்பி சங்கரனைப் போற்றி நிற்க

## (சித்திரபுத்திரனுக்குப் பணி சொல்லல்)

என்னது சித்திரபுத்திரனே யிப்பொழுது
பாவபுண்ணிய மறிந்து பழுமுதிர்க்கா யிருக்க
சீவையிட்டுப் பூசிச் சிவக்கும் படியாகி
தேசம் பராபரியுமென்று செம்பொன் முத்திரையும்
பாசக்கயிறு சூலம் பருத்த தண்டுமே முதலாய்
கண்ணாதாகி சிவகாரியம் போல மற்றுமுள்ள
பணிவிடை காண்போரைப் பரமேசுரி யனுப்ப
விடைகொண்டுதா னியமன் மீண்டான் பதிக்கே

## (சித்திரபுத்திரன் கணக்கு எழுதுதல்)

படைகள் மிகநெருங்கப் பாராக்கிடா வெட்டி
வெற்றிக் குடைபிடித்து வெண்சாமர மிட்ட
கொற்றக் குடைக்குள்ளே கூற்றன் வரவே கணக்கன்
தானுமொரு தேரேறி தன்மனுடன் கூடவந்து
வானும் இமயபதியும் மற்றுமுள்ள லோகமெல்லாம்
நன்மை தின்மை யாராய்ந்து நன்றாக் கணக்கெழுதி
தன்மனுட மாளிகையில் தான்வந்து அவதரித்து
நாலு வாசலுக்கு நடுவே யோர் மாளிகையில்
காலுடனே கணக்கா கனகாசனம் விரித்து
இருந்து பட்டோலை யியல்பாக வாசித்து
திருந்தவே நன்மை செய்தோர் தான்வரவே

## (சித்திர புத்திரனின் அரண்மனை அலங்காரம்)

வடக்கு வாசல்வகுத்து மாணிக்கத் தூண் நிறுத்தி
இடம்பெற பந்தலெழிற் காவணம் போட்டு
மாணிக்கத்தாலே வயிர நிலை நாட்டி
ஆணிப் பொன்னாலே கதவடவாகத் தான்போட்டு
மாடங்கள் கட்டி வயிர விளக்கேத்தி
கூடங்கள் கட்டிக் குளிர்ந்த மலர்க்காவுடனே

தண்ணீர்ச்சால் பந்தல்தான் விளங்கவே சிலரும்
புண்ணியத்துக்கா யிரட்டிப் பொருந்தக் குடுத்துவர
அது காண்போரை யவ்வழிக்கே காவல்வைத்து
இதுவாங் கயிலை வழியென்று பேரிட்டிருக்க
கீழ்வாசல் தனக்குக் கேசவனைத் தான்நோக்கி
ஆள்வாரென நாமஞ்சி பயந்துச் செல்வோர்
வாரவழிக் காவணங்கள் மகாமோ முதலாப்போட்டு
நாறுமலர் தூக்கி நற்பட்டா லலங்கரித்து
வெளியில்லா மாளிகை வீதிதோறு முண்டாக்க
வழியில் தாகந் தீர வாய்த்தப் பொய்கைக்கு வந்து
மட்டில்லாக் காவும் மலர்துளசி தீர்த்தமுடன்
அட்டதிசைப் பாலர் அறிவு உள்ளோர் மற்றவரும்
வந்திருக்க மண்டபமும் வயிரமணி விளக்கும்
சந்திரனைப் போலே தானு நிலைக் கண்ணாடி
மாட மாளிகை கூடம் வாய்த்த கோபுரங்களுடன்
மேடை கொலு ஆசாரம் வெள்ளைவளித்தே சிறப்பாய்
செண்பகந் தூக்கிச் செங்கழுனீர் தானிரைத்து
பன்சொல் மொழியாள் பாடலாடல் புரிய
வீரமணியால் விளங்க நிலைநாட்டி
ஆரமணிக் கோபுரத்துக் கணியாக வாசல்கண்டு
வெள்ளிக் கதவுமிட்ட தாதியரைக் காவல்வைத்து
வள்ளல் பானமாய் வாக்குவழி யடிமை யானவர்கள்
வாரவழி வைகுண்ட னாதவழி யென்றுரைத்து
வேறுமொரு வாசல் விரைய வகுக்கவென்று
வந்து தெற்கு வாசல் வழிதோறும் முள்பரப்பி
இந்துவா யம்பு யெரியுந் திக்கினியும்
சுக்குப் பாரச் செற்றவருக்கே சுடுமணலும்
அக்கினிச் சேறும் மறுப்போடு கலப்பருப்பும்
பாறை தெரிய வெட்டிப் பருங்கழுக்கள்தா னாட்டி
கூரை பிறங் காவுங் குளுந்த நிழலில்லாமல்
தீமாறு தீ நெருப்புத் தீர வனத்தருகே
பேயாறு பேய்நரியாய் பெரியகடு வாயோனாய்
நெட்டெறும்பு கொட்டுதேள் நெடும்பாம்பு தான்வெகுவாய்
அட்டைப் புழுக் குளமும் மானைப் புழுக் குளமும்
இருபத்தெட்டுக் கோடிப் பழுவான ஏரிகளும்
அருவா எருப்போடு ஆனைமுதல் புழுவும்
எரிவாய் நரகமெழுதி முதலுண்டாக்கி

அரிய பாதகரை யிழுத்து அங்கங்கே வாரவழி
கல்லால் நிலைநாட்டி இரும்பாலே பூட்டி
பாதகரைத் தெண்டிக்கப் பாவிக்குக் காவல்வைத்து
தூதர் பலபேருடனே சூழ்ந்து நெருங்கிவந்து
மேற்கே யொருவாசல் வெளியிலே கண்டுடனே
பார்க்கப் பயங்காட்டும் அப்பாவதர் சூழ
கருநாயுஞ் செந்நாயுங் கலந்து கட்டியே நிறைத்து
பெருவா யீறுடனே பிணந்தின்னும் பூதமொடு
குறைதலை பேய்கழுகு கூளிபருந்து காகம்
இறையளவு அற்பமிட மில்லாதே யெங்கும் விட்டு
செக்குலக்கையும் திருகல் செப்புத்தூண் தீயொழுக
பக்கமதிலே திறக்கப் பருந்தோரண வாசல்
காரிரும்பு தன்னா லக்கதவு நிலைநாட்டி
நீரில்லா அத்தலத்தில் நெருப்பெரியச் செம்புருக்கி
பஞ்சமா பாதகர்க்குப் பருக்கவே வாய்தனிலே
கெஞ்சக் கெஞ்சவோர் கிங்கிலியரை நிறுத்தி
இப்படியே வாசலெல்லாம் வகுத்ததற் பின்

## (சித்திரபுத்திரன் வள்ளுவரை அழைத்து ஆணையிடல்)

செப்பமுடன் மனுஞ் சித்திரபுத்திரராம்
தங்கமணி யாசனத்தில் தானிருந்து தங்கலிலே
இங்கிதங்களாய்ப் பேசி யிருபேரு மோர்மொழியாய்
வள்ளுவனுக்கு ஆளைவிட்டு வரவழைத்தார்
அஞ்சாணிற் கட்டை யடக்கி வா வள்ளுவனே
கஞ்சாய் பயத்தி லிறக்கா யிருக்க வள்ளுவனே
இச்சைப்படியே இறந்தவர்களை யடக்கி
பச்சைத் தீப்பற்றப் பறையையறை பறையறைவாய்
என்று சொல்லிக் கும்பிட்டுப் போனான் னியல்வுடனே

## (வள்ளுவன் பறையறைதல்)

துன்று மதவானை துலங்க வலங்கரித்து
நெற்றிக்குச் சுட்டி நிழலாடக் கண்ணாடி
காலுக்குத் தண்டை கழுத்துக்கு வீரமணி
அரசிலை தூக்குமுடனான தொரு சங்கிலியும்
இருகொம்பு பொன்னாலிசை யவளைச் சாத்தி
ஆனை யலங்கரித்து ஆதாழியாய் முரசை
ஆனைமேல் (ஏற்)றிய பத்திரகாளி தன்னை
கும்பிட்டார் அரக்குக் குடிக்கு மளவறிந்து
தம்பட்டம் வைத்தந்த தந்திதனி லேறி
அரக்கக் குடித்த வெறியால் தீரபறை முழக்கி
பெருக்கும் பதினா லுலகறியப் பேசலுற்றார்

(வள்ளுவன் பறையறைந்து பேசுதல்)

ஆனசாதி யீனசாதி அறிவுடனே தான்பிரித்து
மானிலத்தில் நாலுவகை மானிடர் பிரித்து
பழமுதிர காயிருக்க பறையை மிகமுழக்கி
அளவாக அஞ்சாணிற் கட்டை யலறப்படுத்தி
தீப்பற்ற வேணுமென்று திரும்பப் பறைசாற்றி
வெய்பொருவு தோளான் வீதியிலே வந்துநின்று
முறையிட்டுத் தன் பறையை முழக்கினான் அப்போது

(வள்ளுவனுக்குக் கல்லடி)

பறையறைவு கேட்டுப் பார் பிள்ளைகளாய்
செங்கலுடன் கல்லுஞ் சிதற எறிந்தார்கள்

(வள்ளுவனின் சாபம்)

மங்கலுடன் கல்லு வாரி யெறிந்தார்கள்
பிள்ளைகள் தானெறியப் போய் நீர்குடித்த வள்ளுவனும்
கள்ளு வெறியோடெ கடுக முரசடித்தார்
பூவோடு பிஞ்சுதிர பூத்த இலையுதிர
காயோடு காய்த்தக் காய்கனிந்த பதிமுதலாய்
கட்டான காளையர்கள் கனத்தெறிந்தோர் தானுதிர
வெட்டெனத் தன்முரசை மிகமுழங்கி பின்னுரைப்பான்
தினம்பிறப்ப தாயிரமுந் தினமிறப்ப தாயிரமும்
சனமிகுதி யேறாமல் தரணிபார மிறக்க
ஏழுலகும் நின்றதிர யெழும்பியேதான் முரசை
வாழுநமனார் கணக்கை வந்தங் கடிபணிந்தான்

(பயந்துபோன மக்கள் இயமலோகம் செல்லல்)

அந்தமொழிக் கேட்டுத்தான் தாரணி யுள்ளோர்
இந்தவகை யெதென்றெழுந்து ஆன பிறகே
எல்லோருங் கூடி இயமலோகம் புகுந்து
நல்ல தன்மராசரையும் நற்கணக்கனார் தனையும்
கும்பிட் டடிபணிந்து கூடிநின்றார் அப்போது
அம்புவியில் மானிடவார் இணையடிப் பிறகே
வந்ததென்று மகிழ்ந் தியமர் கேள்ப்பளவில்
அந்தகன் முன்னே அறிக்கையிட்டார் மானிடவர்

(வள்ளுவன் செய்தப் பிழையைப் புகார் கூறல்)

வள்ளுவனார் செய்தப் பிழை மன்னவரே நீர்கேளீர்
கள்ளு வெறியன் கனமுரசைத் தான் முழக்கி

வருகையிலே பார்ப்பார் மகவு யிளங்குழந்தை
சரசமதாய் அவனைத் தானெறிந்து நின்றார்கள்
அரக்கு வெறியாலன்று முளைத்த தெல்லாம்
கருக்குளியல் பூமுதலுங் கனத்தெறிந்தோர் தான்முதலும்
ஒக்கவுதிரென்று உரைப்பான் மறுசபதம்
தக்கதாயிரம் பிறக்கத் தானாயிர மிறக்க
என்று பறையடித்தா னெல்லோருந் தான் கேள்க்க
அன்று வந்த யெங்கள் குறை அடியோர்கள் சொல்லவந்தோம்

## (வள்ளுவனை அழைத்து விசாரணை)

மன்றில் நடந்தகுறை வள்ளுவனைத் தானழைத்து
நன்றியுட னையிருவர் நடுவாகக் கேட்கலுற்றார்
அப்போது வள்ளுவனும் அடியிணைகளைப் போற்றி
இப்போது வந்தகுறை என்னாலே வந்ததல்ல
அரக்கென்று மரக்காளி அம்மைமிக வார்த்தாள்
அரக்குமது வெறியால் கலக்கினே னெம்முரசை
பிள்ளைகளாய்க் கூடிப் பெருக்க எறிந்தார்கள்
உற்றமொழி சொன்னதெல்லாம் உறுதியாமென்று போலே
சாபமது சொன்ன சாம்புவனைத் தான்பார்த்து

## (மதுவை வரவழைத்தல்)

கோபமிகுதி வந்து கொண்டுவா அம்மதுவை
என்று மதுவை யவர் இசையவே வேறடைத்து
மன்றில் துருத்திதனில் வாகாக விட்டதற்பின்
எல்லோருங் காண இயல்கெட்ட அம்மதுவும்
வல்லபமா யெங்கும் வளைத்துச் சுற்றியேயோடி
துள்ளித் துடித்துச் சூழ்ந்து துடர்ந்துவரும்
வள்ளுவனார் காலடியில் வந்து விழுந்திடுமாம்

## (எமதர்மராசாவின் அறிவிக்கை)

அரசுக்கு விழுந்ததற்பின் ஆனதர்ம ராசாவும்
இரக்க மிகுதி வந்துயியம்புவா ரெல்லோர்க்கும்
ஏலவே பூமாதேவி ஈசர்திரு முன்பாக
ஞாலமதிக சுமைநான் சுமக்க மாட்டோமென்று
ஆலமிடத்தார்க்கு அபயமிட்டுச் சொன்னதினால்
கால முறைமையிது கலியுகத்தின் தன்முறைமை
சாபமிட்டாளவள் அவனும்தான் தவிர்க்கப் போகாது
பாவகாரிக்குச் சாபம் பலிக்குமே அல்லாது
நன்மைக்குச் சாபமில்லை நல்லவரே போமெனவே
தன்ம னவரை அனுப்பித் தானும் அங்கிருந்தாள்

## (சித்திரபுத்திரர் கதைகேட்போர்க்கு வாழ்த்து)

மானிடரும் வள்ளுவரும் வந்தனராம் மனைதனிலே
தானிவருங் கணக்கருந்தான் விளம்பவே தான்கேட்டு
என்றும் புவனபதியாய் இருந்தார்கள் கொலுவில்
நன்றிபெருங் கணக்கர்கதை நாள்தோறுஞ் சொன்னவர்கள்
பாடிப் படித்தவர்கள் பக்தியுடன் கேட்டவர்கள்
நாடி எழுதினவர் நல்லவித மெடுத்தோர்
மக்கள் மனைசுற்ற மகளொடு மகவுண்டாம்
மிக்கவே செல்வமுண்டா மென்மேலும் வாழியதே
வாழி அவர்கள் வங்கிசமுந்தான் வாழி
என்று மிந்தக் கதையை இக்கலியுகந் தனிலே
நன்றாய்ப் படித்தோரும் நற்கதையைக் கேட்டோரும்
ஆல்போல் தழைத்து அருகதுபோல் வேரூன்றி
மூங்கில் போலன்ன சுற்றமுசியாமல் வாழியதே!
சித்திரபுத்திர நயினார் கதை முகிழ்ந்தது.

(முற்றும்)

# 2

# அமராபதி கதை

## (கிளைக் கதை)

### (ஓலைச் சுவடிப் பதிப்பு)

(காளாத்திமடம்
ப. தங்கவேலு நாடார் அவர்களிடமிருந்து
ஓலைச் சுவடி பெறப்பட்டது.)

### (கதை)

செட்டிச்சி தன் கதையைச் சீருடனே சொல்லுகிறேன்
எட்டிக் குல வங்கிசமாம் பாருக்குத் தலவாசம்
கருவாயுதித்த தெல்லாங் காட்சி பெறு நன்னகரில்
திருவாரூர் தன் வளமை இனிதுரைக்கிறேன் கேளீர்.

### (ஊர் சிறப்பு)

வீதிவிடங்கப் பெருமான் மின்னுடனே தானுறைந்து
ஆதிபரன் வீத்திருக்கும் அக் கோவிலுள்ளது காண்
சிக்காதுத் தேரூர்ந்த செம்பியற்குத் தானரனார்
பதவிதனை யீந்த கதை பார் மீதிற் சொல்ல லரிது
தன் மகீவராகத்தான் பிறந்து மோட்ச வழி
நன்மை பெறவல்ல பற்றுற நாடிப் பிறந்திடுமூர்

### (சிபிச்சக்ரவர்த்தி பெருமை)

அந்தநகர்தா னாளும் அரசன் திருட்சேர்மன்
வந்த புறாவதனால் மாங்கிசத்தைத் தானீந்து
துலா பாரந்தானேறிச் சொக்க மது பெற்ற நகர்

### (திருவாரூர் பெருமை)

கலாப மயிலாடுங் காவில் அன்னம் வீத்திருக்கும்
பூஞ்சோலை யாவதெல்லாம் பொதி நிறையுஞ் சந்தனமும்
மாஞ்சோலை காரகிலும் வளர் செண்பகக் காவும்
புல்லு முதலாகியதும் புஷ்பமே யல்லாது
நெல்லு முதலான பயிர் நிறை விளைவா மென்னாளும்
மாதம்மும்மாரி மறவாதே தான் பொழியும்
ஆதலினால் முப்பூவும் அலங்காரமுள்ள நகர்
தன்னிற் பிறந்தவர்கள் தன்ம பரியாலகனார்
என்னில் முத்தான புகழ் இயந்த தவம் பெற்றனவாம்

### (அமராபதி மணமுடித்தல்)

முத்திபெறும் நன்னகரம் முக்கண்ணார் தம்மருளால்
நித்திய கலியாணனே நீள் வணிகர் தன் குலத்தில்
வந்த தன்மகுத்தன் வழி வந்த தரும ராசனவன்

அந்தக் குலம் வாழ்க அருள் வணிகர் தன்மகளாம்
அமராவதி யென்ற ஆரணங்கைத்தான் வதுவை
சமராதி வெழுதி தங்களைப் போலச் செய்தவனும்

## (செல்வச் சிறப்பு)

வாழ்ந்திருக்கும் மன்னாளில் வணிகன் தன்மராயருக்கும்
சூழ்ந்தக் கடல் நீரமுதம் ஆர்க்கும் உதவியதுபோல்
சிந்தாமணி யேவல் செய் தன்மை யென்னாளும்
வந்துதவி செய்த வகை மாநிலத்திலுள்ள பொருள்
தனதனிடத் துதவி தருவெனவே நிறைப்பு
ஏந்தருளுஞ் சிறக்க இயந்த பொருளாவதுதான்
ஆயிரமா மேரும் தூக்கின் சந்த ஆளடிமை
மாயிரு ஞால நிலம் வயலுழுது நெல்விளைவித்து
பட்டறைக் கெட்டியாக வித்திருப்பதுவும்
மட்டில்லா வாழ்கறவை மாராகம் போல மகவு
நித்தம் ஆயிரம் பசுக்கள் நிறை சூலா யீன்றிடவும்
அத் தந்திர விபங்களான பல் வகையில்
உண்டான நற் பொருள்கள் உதவி நலஞ் செய்திடவும்
அண்டர் மகிழ் செல்வ மடங்களும் வந்தெய்திய பின்
ஆண் பெண்ணாயுள்ள மக அகம் நிறையப் பெற்றிடவும்
ஊனமுற்ற தெவர்களுக்கு உதவினப் போலாகியதும்
மக்கள் மிகுந்த செல்வம் மனை வாடகையுள்ள செல்வம்
மிக்கச் செல்வ முள்ளதெல்லாம் மெத்த வந்தெய்தியதே

## (கணவனே தெய்வமென வாழ்தல்)

புலட்சிக் கிடங் குடாப் பூவுதையமான மங்கை
இலட்சுமி தானுமம் இவளில்லில் மிகுந்தே யிருப்பாள்
செல்வக் களிப்பதனைச் சீர்கண்டு பார்பதியும்
குருவே மிகுதெய்வமெனக் கொண்டாடுகிற சிஷ்யரைப் போல்
பருகு பொருந் தல்லதெல்லாம் பத்தாவால் வந்ததென்ன
புருஷனே தெய்வமென்ன போற்றிப் பணிந்தெவளும்

## (அமராபதி அறம் செய்தல்)

நாயகனா ரியந்த நாளுங் குறையாதபடி
வாசமிகு நற்றவத்தை வருந்திநாஞ் செய்வோ மென
திசைக்குத் திசை சத்திரங்கள் திசைதோறும் உண்டாக்கி
இசைக் கிசையாய் காவுகளும் இணங்க மலர் நந்தவனம்
பூவுள்ள பூடதெல்லாம் பூமியிலே யுண்டாகி
நாவுள்ளபோதே யவரும் நல்கியுரைச் செய்திடவே
பொய்கைக் குளங்கா லணைகள் பொருந்திய ஆம்பலதும்

வைகை யாறெப்போதும் மாரி பொழியப்பெருகி
குறைவில்லாச் செல்வமென்ன குளங் காலணை பெருகி
நிறைவாகச் செய்தலும் நித்தமும் நீராலே ததும்ப

## (நோயாளிகளுக்கு உதவுதல்)

நொண்டி நடவாத கிழவர் நோய் மிகுதி கொண்டவர்கள்
வறுமைபடு துன்பமெய்தி வருந்து பிணி குட்ட முதல்
வெறுமை யென்று வந்தவர்க்கு விருந்து பலநாளு மிட்டு
நோய்க்கு மருத்துவன் நொடியிற் குறைந்தாற்றி
வாய்க்கு ரசனை கேட்ட வகையெல்லாந்தான் கொடுத்து
முற்றும் விருந்திட்டு வெகு முதிய சிறையாம் விலங்கு
அற்றமதனால் நீக்கி அரும்பொருளுந் தானீய்ந்து

## (அடிமை நெறியில் உதவுதல்)

உழுதுண்ண யோில்லாத உழவு மாடுவகைக்கு முதல்
முழுது மவர்க் களித்து முன்னின்று கேட்டவர்கள்
பலிசை யில்லாதக் கடன் பழம் பொருளுந்தான் கொடுத்து
வலிது செய்து வாங்காமல் வர வரவே வாங்கி நலம்
தான் பெறவே யெல்லோர்க்குந் தாய் போலிருந் துதவி
நான் பெரியோனென்றொரு நாள் நல்கி யுரை பேசாமல்
அடியார்க்கடியார் போல அடிமைத் தொழிலெனவும்
படிமீதிலுள்ளவர்க்குப் பல நாளுந் தானீய்ந்து

## (அன்ன சத்திரம் அமைத்தல்)

அன்ன சத்திரந் தனக்கு அன்னமது தானீய்ந்து
அன்னக் கொடி தனை அவள் வாசலிலே கட்டி வைத்து
ஆயிரங் கோட்டை அரிசி அளாவர் மதிபோல
மாயிரு ஞாலமதில் வாழ் மடவார் கையீந்து
கடன்படு உப்பதுவும் கணக்குத் துகையாக
ஆறு கலமா மெனவும் ஆசை சீர் சாங்கர்யம்
வேறு பல காயமதும் வென்றாடிய போதா மிளகும்
இத்தனைக்குங் காய் கறிகள் எல்லாம் வரவழைத்து
அத்தனையும் நன்றாய் அடைவாய் சமையுமென்றார்
சோறு கறி நெய் தயிர் பால் சொன்னபடி சாடுதனில்
வேறு வேறு யேற்றி மிக்க சத்திரந்தோறும்
வந்தப் பரதேசியர்க்கு மற்றவர்க் கெல்லா மீய்ந்து
அந்தச் சோறங்கே அருந்தாத பேர்களுக்கு
வைத்துண்ணப் பொற்சருவ மரக்கறி காய் பச்சரிசி
புத்துருக்கு நெய்பாலும் புதுப்பண்டமு மிகுதி
கொடுக்கச் சமைத்துண்டவர்கள் கோவிந்தா ஆவார்கள்

## (பல்வகை தானம் செய்தல்)

அடுக்கவுரை சொன்னவர்க்கும் அப்பாலே நிறைவார்க்கும்
உத்தம தானங் கொடுத்து உடுக்கப் புடவைக் கொடுத்து
அத்த மிகு தானங்கள் அதிமறையோர்க் கீய்ந்து
கன்றிய தாழை பலதும் கனகத் தாமை பலதும்
சொர்ன தானம் பலதும் கருதி மறையோர்க்கீய்ந்தும்
வாழ்க்கப்படாத பெண்களை வாழ்வியாக முகித்து
கோள்களது வாராமல் கொண்டு பல தானமிட்டு

## (முப்பத்திரண்டு அறம் செய்தல்)

முப்பத்தி ரெண்டறமு முசியாமல் செய்தவளும்
அப்பத்தியா மொருவர் ஆரொருவர் வந்தாலும்
நாளும் விருந்திட்டு நல்விரத நன்னோன்பு
வாழும்படி நடத்தி மற்றும் வேறிலங் யென்
உலகத் தியற்கைத் தவ உண்டான நல் விரதம்
பலகத் தறிவதானால் பஞ்சாட்சரங் கேட்டு
குருவை யடிவணங்கிக் குரு தெட்சணை கொடுத்து

## (கணவனை தொழுதல்)

மருவிய தன் நாயகனை வணக்கமுடனே வணங்கி
அன்ன மலர்க் கீய்ந்து அடிசில் செட மருந்தி
பின்னை யொரு தெய்வமில்லை புருஷனே தெய்வமென
முப்போதுந்தான் வணங்கி முற்றுமவர் தேடுபொருள்
ஒப்புடனே ஒன்று பற்று ஒருகொடியா யிடவை
தலம் வரை வென்று அன்னதானம் பலதுங் கொடுத்து
பாவமதனைத் தானீக்கிப் பத்தலது நன்றெனவே
இட்டுண்ட செல்வமது என்றுந் தவறாதபடி
கட்டளையாய் செய்தவளும் கணவனருகே யிருக்க

## (சித்திரபுத்திரனார் அமராபதி கணக்கைப் பார்த்தல்)

மேலும் அவர் கதையை விளம்புவேன்தான் கேளீர்
நாலுவாசல் தனையும் நடுவனுடனே வகுத்தது
மாளிகையில் வீற்றிருக்கும் வான் கணக்கர் தாமும்
கோளிலிசைந்த குற்றம் குறிப்பிலே தானெழுதி
இருந்தப் பட்டோலையதை எடுத்த தட்டவனே யென
திருந்த யெழுதினவர் செய்தி கணக்கறிய
பெரும் வழியா விரசு போர்த் தெழுதிக் கொண்டவரும்
திருவனையாள் தன் கணக்கைத் திரும்ப யெடுத்தே பார்க்க
செட்டிச்சி செய் தவந்தீங்கு இல்லாத பழமை
பட்டோலை வாசகங்கள் பார்க்கும் பொழுதிலங்கே
தன் கணவன் தெய்வமதைத் தவறாமொழி பேசும்

மின்பதியாள் பட்டோலை விரசிலேதான் பார்க்க
அமராபதி யோலை அகப்பட்டு வாசித்தார்

## (முப்பத்திரண்டு அறம் செய்தலைக் கூறுதல்)

துமராத பெண்ணமுதின் சொற்க் கதையைக் கேட்டருவீர்
நமனே யிமையபதி நடுவனே நீா கேளீர்
அமராபதி செய்யும் அறத்தின் பெருமையது
தூரத்துக் குத்தூர்க்குஞ் சுமை தாங்கி வைப்பித்தாள்
ஆரத்தெரு வீதிதோறும் அம்பலங்கள் கட்டிவைத்தாள்
ஆயிரங்காதம் அருங்குளங்கள் வெட்டி வைத்தாள்
மாயிரு ஞாலத்துள் வழிசாலை வைப்பித்தாள்
சந்திகள் தோறுஞ் சத்திரங்கள் கட்டிவைத்தாள்
அந்தணர்கள் வந்திருக்க அதிக மாளிகைச் சமைத்தாள்
அம்பலங்கள் தோறும் அடைக்காய்கள் வைப்பித்தாள்
வம்பலருங் கோதையர்கள்க்கு மாவுகளு முண்டாக்குவித்தாள்
பிள்ளைப் பால் காயுங்கான் பொற் பெருமாள் வாசலிலே
உள்ளது மில்லை யெண்ணாள் உத்தமியாள் வாசலிலே
சொன்னது மில்லை யென்று சொல்லாள் ஒரு நாளும்
அன்னக்கொடி நின்று அழைக்கும் அவள் வாசலிலே
கோதானமில்லார்க்குக் கொடுக்கும் அவள்வாசலிலே
எத்தானமும் கொடுக்கும் என்றும் அவள் வாசலிலே
கொற்று கறுப்பார்க்குக் கனல்அருவாள் தான் கொடுப்பாள்

## (அமராபதியின் ஈகைச் சிறப்பு)

சித்திரை மாதஞ் செருப்புக் குடையுடனே
மத்திரும் வைகாசி மாதம் வயலுடனே
நத்திருக்கும் பூவெடுக்க நந்த வனத்துடனே
உற்றிரங்கள் பேசாமல் ஒன்றும் பழுதாகாமல்
சித்திரை மாதஞ் சிறப்புடனே யீய்ந்திடுவாள்
காட்டெருமை நின்று கனைக்கும் அலன வாசலிலே
புலிக் கன்றுடனே நல்ல புல்வாயும் நின்றுறையும்
நலிக் கண்ட சீவனெல்லாம் நலியாதொரு நாளும்
உழுதுண்ண யேரில்லார்க் குழவு மாடுதான் கொடுப்பாள்
பழுதில்லாதுண்ணப் பைம்பொன்களுங் கொடுப்பாள்
பலிசை யில்லாதக் கடன் கொடுத்து பரிவுடனே
மெலிவில்லாதபடி வேண்டியே கொண்டிடுவாள்
கூனர் குருடர்க் காசனம் பள்ளிக்கூடமுங் கட்டிவித்தாள்
ஆனபரதேசி மொண்டிக் கசன முண்ணாது மிட்டாள்
அன்னக் கொடி கட்டிவிற்றாள் அமராபதி வாசலிலே
என்றுமொரு நாள் போலீவாள் பல பொருளும்
அற்றைக் கருகல் முப்புச் செல்லும் அவள் வாசலிலே

ஆனைத்தலை யளவு பல்காயஞ் செல்லுமவள் வாசலிலே
தேனும் பால் சால்தோறுஞ் சேர்நிறைந்திருக்கும்
மாயிரு ஞால மீதில் வந்த பரதேசியர்க்கும்
ஆயிரங் கோட்டை அரிசி செல்லும் அவள் வாசலிலே
தன் தொட்டில் தாய்த் தொட்டில் தன் மகளார் தொட்டிலுடன்
முத்தொட்டில் கட்டி முசியாமல் வாழுகிறாள்
பின் தொட்டில் கட்டி பிரியமுடன் வாழுகின்றாள்
செப்புத் திரண்ட தசை சேயிளையா ளொருநாளும்
முப்பத்தி ரெண்டறமும் முன்னே நடத்துகின்றாள்

## (அமராபதி சித்திரபுத்திரர் நோன்பு செய்யாமை)

இப்புவியிலுண்டான நோன்பு விரதமெல்லாம்
தப்பாமலொன்றுந் தவறாமல் நோக்குகின்றாள்
என் நோன்பு நோக்க வறியாளிசைக்கேடி
பின்னை யொருநாள் எனையும் பேசவறியாள் காண்
கணக்கர் கணக்கர் என்று கேட்டுக் கருத்திலறியாளோ
பிணக்காகச் சொல்லுமென்று பின்னுமறியாளோ
கணக்கரிருந்த வூரில் கரும மறியாளோ
வணக்க முற்று கால்காசு வைத்து மறியாளோ
ஒரு மாநிலத்தி லுழுது உண்டறியாளோ
கரும மொருநாளுங் கணக்கொடு பேசிலையோ

## (சித்திரபுத்திரரின் கோபமும் எமனின் ஆலோசனையும்)

அவளுக்கிட்ட பொசிப்பு மெழுத்து முகிந்தது காண்
அவளை யிப்போதே கூட்டிவா யிமதன்ம ராசாவே
அப்போது இமனவனா வந்து கைப்பிடித்து
இப்போது செட்டிச்சியைக் கூட்டி யிங்கே வந்தோமானால்
பஞ்சரவின் குஞ்சி பதறிவிடும் பாருலகில்
தஞ்சமில்லை வேறு சற்றுமிறக்க மில்லை
ஆண்டிப் பரதேசியர்க்கும் அன்னை பிதா போலிருந்தாள்
தீண்டாதச் செட்டிச்சியைச் செய்தக் குற்றம் பொறுப்பாய்

## (சித்திரபுத்திரர் அமராபதியை அழைத்து வரச் சொல்லுதல்)

மன்னி யமன் கைப்பிடித்த மண்ணாட்டு கேளாமல்
என்னை நினையாத யீனசாதிக் கன்னி தன்னை
இனி சற்றுநேர மிருக்க வொட்டேன் பாருமென்று
முனிந்து வெகு கோபமுற்று முன்னிறைத்தூதுவரை
அழைத்த வுடனே தூதர் அங்கு விரைந்தா ரன்னேரம்
விளைந்த வினைச் செட்டிச்சியை விரையக் கொடுவாரீர்

### (தூதருக்கு எமதர்மன் ஆலோசனைக் கூறுதல்)

என்று அவரனுப்ப யியமனவரை யழைத்து
நன்றுதான் தூதரே நகரிக்குப் போவீரால்
தன்மங்கள் செய்வார் மேல்தறியாதே செல்லாதே
நன்மை சிவபூசையா மேல் நாடியே செல்லாதே
அரனா ரடியவர் மேல் அண்டவே செல்லாதே
பரனா ரடியவர்மேல் பார்த்தேதுஞ் சொல்லாதோ
சிவ சிவா வென்றவர் மேல் செல்லாதே தீண்டாதே
தவன மடப்பள்ளி தான் பலது செய்யாமேல்
உபாய மாய்ச்சென்று உருக்காதே தூதுவரே
அவத்தங்களா யவரை யஞ்சப்படுத்தாதே
மார்க்கண்டனால் பட்ட மயக்க மறிவீரே
ஏற்கெனவே கண்டு யிருந்து பிடி தூதுவரே
பாவிகளானவரை பதறப் பறைந்தவரை
ஆவியழித்து சுருசப் பிடித்திழுத்து
கொண்டு வா தூதுவரே யென்று கூற்றனனுப்ப

### (தூதுவர் அமராபதி வீட்டு வாசலில் செல்லுதல்)

கண்டு பின் தூதுவரைக் கணக்கர் வரவழைத்து
என்பேரை சொன்னவரை யியம தன்மா வென்றவரை
அன்பா யருகிருக்க யங்கேதான் வைத்துவிடு
என்பேரு சொல்லாத யீன சாதிகள்தனை
வன்பாய் பிடித்திழுத்து வாருங்கோ வென்றவுடன்
இரும்புத்தடிக்காரர் இரண்டாயிரம் பேரும்
நெருப்புத்தடிக்காரர் நெட்டுர ராயிரம்பேர்
சொன்னவுடனேதான் தூதர் விரைந்தோடி
அன்னவள் தன்வாசலிலே சென்றார்க ளந்நேரம்
வந்து வளைந்தார்கள் வான் வாட்டி வாசலிலே

### (அமராபதி அறம் செய்கை கண்டு தூதுவர் நடுங்குதல்)

நந்தவனம் வைத்ததுவும் கண்டார் நமதூதர்
சினம் தாங்கிப் பாதை மடம் சிறந்த தண்ணீர் பந்தலுடன்
அமரர் தருமம் ஈவது போல அன்ன சத்திரமீவதுவும்
அன்னக் கொடி நின்றளைப்பதுவுங் கண்டார்கள்
பொன்னின் பெருமாள் தன் புண்ணியத்தைக் கண்டவர்கள்
சண்டையிட வந்தடியுமது போட்டு
கொண்டு வந்த பாசமதைக் கோவித்துதான் போட்டு
நின்றார்களப்போ நெடுமூச்சுத் தானெறிந்து

### (வேறு தூதுவர்களை அனுப்புதல்)

நன்று நன்று உங்களுக்கு நன்மொழிகள் சொன்னாளோ
மீண்டும் சிலதூதர் தம்மை விரைய வரவழைத்து
தீராதக் கள்ளிதன்னைச் சீக்கீரத்திலே கொணர்ந்து
பாராமல் செக்கில் பதைக்கத் திரித்துவிட்டீர்
என்று பல வசனமியற்ற கணக்கர் தாமுரைத்தார்
மன்றுலகிலே போக வகுத்துவிட்டார் தூதுவரை
வந்து வளைந்தார்கள் வாள் வாட்டி வாசலிலே
முந்த வந்த தூதரிலும் முனிந்து வெகுகோபமுடன்
சமைய வழி பார்த்துத் தானிருந்தாரன்னேரம்

### (தூதுவர் அமராபதியின் அறச்செய்கைக் காணுதல்)

சுமைசுமையாய் பால் தயிரும் சிறந்த வண்டியிற் சோறும்
சத்திரங்கள் தோறுந்தான் போகவிட்டவளும்
மத்துஞ் சில புதியோர் வந்திருப்போராய்
பிறப்பட்டாள் வீதியிலே பின்பு கண்டார்தூதர்
அந்ததின் பொருளும் கண்டு அல்லோருந்தான் மயங்கி
இவளை யழைக்க வென்றோ ஏவினா ரியம தன்மர்
இவளைக் கொடுபோகி லிரப்போர் தவிக்குமென்று
தலை சாய்த்துத் தானிருக்கத்தான் வந்தாள் தையலையாள்

### (தூதுவருக்குப் பானகம் கொடுத்தல்)

இலை மிளகு தின்னாம லிளைத்து வெகுபசியால்
காதவழி நடந்து காதாலே பேசுகிறீர்
ஏது குறை யுங்களுக்கு யிடர்தீர்ப்பேன் தம்பியரே
என்று சொல்லித் தூதுவர்க்கு யியல்பானகங் கொடுத்தாள்
நன்றியுட னீய்ந் துடனே நன்மை தின்மை சொல்லாமல்
கொடுத்தப் பானக மதைக் குடித்தார்களன் நேரம்

### (தூதுவர் அமராபதியை வாழ்த்தி விடைபெறுதல்)

அடுத்த பட்டோலையிலே அவரெழுதிக் கொண்டாரே
மருந்து போல விருந்து சொன்ன மாதாவே நீர்தாமும்
இருந் தரசாளு மென்று யியம லோகம் புகுந்தார்

### (தூதுவர் செட்டிச்சியின் பெருமைக் கூறுதல்)

ஓங்கு மியமார் செயுண்மை வெறு நற் கணக்கரே
நாங்கள்தான் போன செய்தி நன்றியுடன் கேளுமென
தெண்டனிட்டு நின்று சொல்வார் செட்டிச்சி செய் தருமம்
ஆண்டவர்க்கு மேற்குமது பிரித்துச் சொல்லவென்றால்

தேவருக்கு மவரது செப்பி யொன்றுந் தவறில்லை காண்
யாவருக்கு மொன்றுபெற யியந்திருக்கு மேந்திளையே
தீண்டப் பயப்படுவோந் திருவுளங்க ளெப்படியோ

## (சித்திரபுத்திரனார் தூதுவரிடம் கோபம் கொள்ளுதல்)

கண்டு சொல்லுந் தூதுவனாகக் கோபித்துப் பார்த்துரைப்பார்
கள்ளிக்குத் தன்மங் கண்ட நாளிலுண்டோதான்
வள்ளியோ ரென வளர்த்து வாரீரே தூதுவரே
ஒள்ளியதாய் பானகம் உங்களுக்குத் தந்தாளோ
அள்ளிக் குடித்து அரும்பசியுந் தீர்ந் தீரோ
அந்நேரம் பட்டோலை கொண்டோ மறிவிலியீர்
தின்றுஞ் சினம் போலத் தீர வெறுத்தவரை

## (மொட்டயனையும் பிராமணத்தியையும் அனுப்புதல்)

வேறு சில தூதுவரைப் போகவிடவேணுமென்று
மாறு கொண்ட சித்திரபுத்திரரும் வந்துடனே
உற்றப் பேர் ராராய்ந்து உண்மையினாலே தேர்ந்து
பெற்றத் தாயைக் கொன்ற பெரும்பாவி மொட்டையனும்
கொண்ட பிராமணனைக் குலை மருந்தால் கொன்று விட்டு
கொண்ட பிராமணனைக் கொன்ற பிராமணியும்
பாசக் கயிறுங் கொடுத்துப் பாப்பாத்தி கையிலே
மோசமில்லாதத் தண்டை மொட்டையனார்தன் கையிலே
இருவரையுங் கூட்டியே யேதேது புத்தி சொல்வார்
தரு வரகம் போலே தா னீய்ந்தா ளானாலும்
தவத்தருமை பாராதே தன்மத்தைப் பாராதே
சிவத்தருமை பாராதே செட்டிச்சி தன்னை யிப்போ
என் பேரு சொல்லாளை யெடுத்து கொடுவாரீர்
என்னோன்பு நோற்காளை யிப்போ கொடுவாரீர்
முன் போன தூதரைப் போல மோசமது வந்த துண்டால்
பின் னிரக்கம் பார்ப்பதில்லைப் பிளப்பே னிருவரையும்
என்று புத்தி சொல்லி யிருவரையும் போகவிட்டார்

## (இருவரும் செட்டிச்சியை வளைத்தலும் தீயசகுனம் தென்படலும்)

கன்றி மனம் புழுங்கக் கன்மியர்கள் வந்துடனே
சென்று வளைந்தார்கள் செட்டிச்சியார் தனைத்தான்
அன்றொரு நாளும் அமராபதிப் பெருமாள்
தங்கள் தாயார்க்குத் தக்க தானமாடி
எங்குஞ் சிறக்கத்தான் மீய்ந்து வரு மன்னேரம்

கொல்ல வந்தப் பிராமணியுங் கூட வந்த மொட்டயனும்
வல்ல வரிப் பூனையாய் வலத்தோடிப் போனதுவே

(அமராபதி செட்டிச்சி தீய சகுனம் கண்டு புலம்புதல்)

பூனைக் குறுக்கிட்டது தான் புத்தியல்ல வென்று சொல்லி
தானமதிலேது குறை தான் வந்ததோ அறியேன்
இணைபிரியா மன்னவரே யென்தன் மகா ராசாவே
துணையாகுமன்றே யான் தோஷம்பல செய்தேனோ
பாவம் விளைத்தேனோ பலபழிகள் செய்தேனோ
ஏவல் பணிவிடையி லிடர் வந்த தின்றெனவே
ஆகையினா லிக் குறியும் அடியாள்க்கு வந்தது காண்
சாகிறது போலச் சழன் வருங்காண் கண்ணே
என்னதான் வந்தாலும் யான் படுவே னென் கோவே
என்னவளே சலியாதே யென்று மனந்தேற்றி

(அறம் செய்யும்நிலை குறித்து அறிய அமராபதி புறப்படல்)

ஆயிரஞ்சாட்டிலே சோறுகறியமுதும்
ஆயிரஞ் சாட்டிலே பால் பழமும் அப்பமுடன்
சத்திரங்கள் தோறுந் தாளேற்றி யன்னமிட்ட
அத்திரம் பட்டினிகள் ஆராயவேணுமென்று
சந்திகள் தோறும் பிறப்பட்டாள் தையலையாள்
அந்தணர் அகந்தோறுஞ் சென்று அமராபதியும்
தூரத்தில் காதந் துலையா வளி நடந்தோர்
பாரத் தெருவீதிகளில் பசியோடிராதே ஐயா
அறதேசி பரதேசி ஆனப்பெரியோரும்
பரமாம் யாரும் பசியோடிராதே அய்யா
பசித் திளைத்தோ மென்று பட்டினியே தூங்காதே
அசத்தியங்கள் வாராமல் அமுதுசெய்யவாருமென்பாள்
சத்திரங்கள் தன்னில் சாப்பிடாத பேர்களுக்கு
வைத்துண்ணவே சருவ மடப்பள்ளி அம்பலங்கள்
அரிசி கறிகாய்கறிகள் ஆன பால்கள் நெய்தயிரும்
உரிமையுடன் கேட்டதெல்லாம் உடனீய்வே னய்யாவே
என்று சொல்ல வந்தவர்க்கு யீய்ந்து முதலே பருவம்
சென்று சென்று சொல்லித் திரிந் தனேக நேரமதாய்
அதி சாம நேர வரைத்தான் விசாரித்தறிந்து

(கணவனை அமராபதி உபசரித்தல்)

பதினாறு நாழிகைச் சென்றதன் பின் பத்தாவை
கும்பிட் டடிபணிந்து குளித் தமுது செய்யுமென
அம்பிட்ட வேல் விழியாளான் வென்னீர்
கொண்டு வந்து பின்பக்கம் படித்துவிட்டு யிதை படிக்க

அண்ணல் பரனடியார் அரக்கார் வென் றமுது
சங்குநாத முழக்கித்தான் செய்பு மன்னேரம்
எங்கு முபசரித்து மிளைப்பாறு மென்றனளே
கொல்ல வந்தக் கூற்றுவனும் கூட வந்த பிராமணியும்
தன் கையால் நாயகன் மேல் தண்ணீரும் விட்டுவிட்டு
பன்னீரும் விட்டுப் பரிமளிக்க மெய்யதனை
முறுக்கிப் பிடித்து முளுக் காட்டியே யமுது
அறிக்கை யுடையவர் தானமுது வொசிக்கும் நேரம்
பக்கத்தி லாயிரம்பேர் பரிந் தமுது தான் பொசிக்க
மக்கள் மருமக்கள் வந்த புதியோர் முதலாய்
வல்லபமா யங்கே வாசல் படியிருந்தாள்

## (மொட்டையனும் பாப்பாத்தியும் பால் கேட்டல்)

அன்னேரம் பொன் பெருமாள் அவர் முகத்தைத்தான் பார்த்து
இன்னேரமா மளவும் பசித்திருந்த தையனே தம்பியரே
அடியாள் தன் பேரில் அபராத முண்டு கண்டீர்
வடித் திறக்கிய சோறும் வாழையிலையுங் கொணர்ந்து
ஆசனமது செய்யுமென அப்போது மொட்டையனும்
ஆசனமது யெங்களுக்கு ஆகாது இன்னேரம்
பாலுந்தான் வேணுமென்றாள் பாப்பாத்தி கள்ளியவள்
பரலோகில் பாரம் பழக்குலையோதான் பாரம்

## (கயிலைப் பசு அமராபதியை முட்டிக் கொல்லுதல்)

பரலோகில் பாரம் யென்ன பால் கறக்க போகையிலே
எல்லே வந்திருந்த யியல்பு கெட்ட பாப்பாத்தி
காராவின் கொம்பில் கலந்து கொண்டா ளன்னேரம்
காரா அருகுச் சென்று கன்று விட்டு பால்கறக்க
கடக் காலுங் கையுமாய் காரிகையாள் செல்லளவில்
கடைக் காலைத் தானுதைத்துக் கபிலை சீறிப் பார்க்க வுனக்கு
வைக்கலுடன் புல்லும் வைத்தாளில்லையோ உனக்கு
பக்குவத்தில் கழுகிப் பகிர்ந்தார்களில்லை அய்யோ
என்று சொல்லிப் புல்லு யெடுத்துதான் போடுகையில்
இன்றி யமதூதர் இருப்பதறியாமல்
முத்தி முகந்தடவி முன்னின்றக் காரிகையை
குத்தி யெடுத்துப் பசுக் கூரிய கொம்பாலே
எடுத் தெறிய மூச்சை யற்று எமதன்ம ராசாவே
நடுக்க மிகவாக நாயகியுந்தான் விழுந்தாள்
சிவனே குருவே யெனச் சிவ சிவா வென்றவளும்
அவசியமாய் நானும் அழிந்தேனே யின்னேரம்
இறைவா முறையோ யிது நான்படுவேனோ
முறை யிடவு மாட்டாமல் மூட்சையுற்றுத் தான்கிடக்க

## (மொட்டையனும் பாப்பாத்தியும் அமராபதியைத் துன்புறுத்தல்)

பர்தாவு மற்றோரும் பாங்கியருந் தோழியரும்
உற்றார்க ளெல்லோரும் ஓடிவந்து தானெடுத்தார்
இனத்தார்தனைப் பார்த்து யிதுவோ யிறுதி யென்றாள்
மனத்தாபங் கொள்ளாமல் மகாதேவர் யென்றுரையீர்
கன்மம் நமக்கு இருந்திதோ காரிருளில்
தனம் மொருநாளும் தவறாதே காரிருளில்
ஆவி யகன்றதுவே யவ்வளவிற் றூதுவர்கள்
தாவிப் பிடித்துக் கயிற்றால் மிக வளைத்து
இரும்புத் தடியா லிருபுறமுந் தானடிக்க
விருப்புத் தவரும் விதிவசமோ வென்றழுதாள்

## (அமராபதியைத் தர்மம் வந்து சூழுதல்)

கர்மவல்லி யென்னு மொரு காற்று வந்த வீசிடுமாம்
எமன்விடு தூதரிட்ட பாசக் கயிற்றை
அப்பால் பறித்தெறிந்து அடியை விலக்கிடுமாம்
முப்பாலுந் தானீய்ந்து முனிந்து கொன்றக் கற்றாவும்
அவள் கூட்டைக் காற்று அருகே கிடந்தது காண்
தன்மங்கள் கூடித் தலை செய்து நிற்கையிலே
அவள் செய்த தன்மங்கள் அங்கே வந்து சூழ்ந்ததுவே

## (மீண்டும் அமராபதியை வதைத்தல்)

வன்ம முற்றுத் தூதர் வளைந்து பிடித்திழுத்து
இரும்புத் தடிகொண்டடித்தார்கள் யேந்திழையை
நெருப்புத் தடியால் நெருக்கினார் கிங்கிலிவர்
சூலத்தால் குற்றித் துண்டப்படுத்தினரே
ஆலமுண்டார்போல அசந்து அமராபதியார்
இதுவோத ரணப்படுவேன் யெமதன்மராசாவே

## (வீரகண்டி எனும் காற்று வந்து உதவுதல்)

புதிய திருவாசகங்கள் கேட்டபொழுதே ஓடி
வீரகண்டி யென்னு மொரு காற்று வந்து வீசிடுமாம்
பாரதினிலே பைங்கொடியும் பதறாமல் நின்றாளே

## (அமராபதியைத் துன்புறுத்தல்)

ஐந்நூறு காதம் அகலமுள்ள கற்பரும்பில்
மருசளைய மென்குழலை வைத்து வைத்துத் தானிழுத்தார்
முன்னூற்றுக் காத முள்ளுமுனக் காட்டுடே

பின்னி யிரு கைப் பிடித்துப் பெருக்க யிழுத்தனரே
முதுகு வடுப்படவே முள்ளோடு தானிழுக்க
இதுவேதான் நான்படுவேன் யமதன்மராசாவே

### (தானத்தால் துன்பம் விலகுதல்)

என்றபொழுதே யியல்பான காடெல்லாம்
குன்றுதோறுஞ் சந்தணமாய் குளிர்ந்து தளுத்ததுவே
நந்தவனம் புஷ்பம் நறுமணமாய் வீசிடுமாம்
இந்திரலோகம் போலிருந்தாளே செட்டிச்சியும்

### (செட்டிச்சியைக் கணக்கரிடம் கொண்டு வருதலும் நரகத்தில் தள்ளுமாறு கட்டளையிடலும்)

கொண்டுபோன தூதுவர்கள் கொடுஞ் சீக்கிரத்தோடி
மண்டலீகர் தன்னை வணங்கி நின்று யென் சொல்லுவார்
கல்லு வன முள்ளுக் காட்டுடே போட்டிழுக்க
நல்ல மலர் காவுகளாய் நாயகமே பூத்தது காண்
அத்தனைக்குந் தருமஞ் செய்தாளோ கள்ளியவள்
மற்றுமெனை நினை யவன் பாவிகள் ளிதனை
நரகத்தில் தள்ளுமென நற்கணக்கர் தாமுரைக்க

### (செட்டிச்சி போறவழி சிறப்புறுதல்)

நரகக் குழிதோறும் நாயகியைத் தானிழுக்க
நரகக் குழி கிடந்த நரகரெல்லா மப்பொழுது
உரக்க யிவள் பொருட்டா லுற்றா ரகில லோகம்
அட்டைக் குளத்தில் மூக்கினா ரந்நேரம்
அட்டைக் குளத்தில் கிடந்தவர்க ளெல்லோரும்
செட்டிச்சியராலே கீழ்லோகம் பெற்றார்கள்
போறவழி யெல்லாம் புகழுடைய தோப்பாச்சு
செல்லுமிட மெல்லாம் சிவலோகம் போலாச்சு
வாரவழி யெல்லாம் மலர் சொரிந்த மரமாச்சு
செல்லுமிட மெல்லாஞ் சிவலோகம் போலாச்சு
கல்லு வனமெல்லாங் கற்பூரமாய் தளிர்க்கும்
படுத்தின பாடெல்லாம் பாவை மேல்ச்சாரவில்லை
வடுக்களுமில்லாமல் மாந்தளிர் போலேமேனி
நெருப்பும் அமராபதியைச் சுடாது தணித்தல்
அழகாக நின்றாளய்யா வெனத் தொழுதார்
இளமை யழகாக யென்ன தன்மஞ் செய்தாளோ
இன்னுமெனை நினைக்கவில்லை யீனசாதிக் கள்ளியவள்
இன்னுமொரு பாடு செய்யுமிந்த யேந்திழையை
ஆயிரந் துருத்தி யவள்மேல் போட்டுது மென்றார்

ஆயிரந் துருத்திகளை அடைவாகப் போட்டூதி
செப்புத்தூண் மேலேத்தச் செந்தழலாகிய தூண்
அப்போது கண்டு அந்திர மேலென்ற வுடன்
சந்தனமுங் குங்குமமுந் தானாகப் பூத்ததுவே

### (அமராபதியின் புதுமைய்ய சிவன் காணுதலும், அருள் செய்தலும்)

அந்தப் புதுமைதனை அரனாரும் பார்த்திருக்க
அன்பு பேறே யொழிய அதிய தவம் வேறுமில்லை
மின்னா ருமைக்கு விளம்பினார் சிவனும்
தண்ணீர் தவிக்குதென்றாள் தரார் கருங்குழலாள்
உண்ணீரெனவே யுருக்கிவிட்டார் செம்பதனை
தண்ணீராய்த்தான் குடித்துத் தாகந்தெளிந்தனளே
விண்ணாருங் காராள விதனமுந்தான் காணாள்
சித்திர புத்திரரே செப்பத் தூண் தணிந்திதுகாண்

### (அமராபதியைப் பாறையிலிட்டு வதைக்கக் கூறுதல்)

அத்தனைக்கு நல்ல தவஞ் செய்தாளோ கள்ளியவள்
என்னை நினையாதாள்க் கிதுவோ படும்பாடு
இன்ன மதிகபாடு இவள்க்குண்டென மொழிந்து
பாறையிலே போட்டுத் துவையு மந்தப் பைங்கொடியை
பாறையிலே போட்டுத் துவைத்தார்கள் பாவிகள்
துருவையிலே போட்டுத் திரியு மந்த சேயிழையை
ஈர வாள் கொண்டு அரியுமந்த யேந்திழையை
அக்கினியில் போட்டு அமுக்குமென்றா ரணங்கை
அக்கினியில் போட்டு அமுக்கினா ரந்நேரம்
உரலிலே போட்டுத் துவையு மந்த வுத்தமியை
உரலிலே போட்டுத் துவைத்தாருடன் தூதர்
சுழலிலே போட்டுத் தூவுங்கோ தூயமொழியை

### (அமராபதியின் அறம் மீண்டும் காத்தல்)

துவராத வாயு வந்துதான் வந்து வீசிடுமாம்
சீதேவி யென்கின்ற சீவனுமுள்ளே பறந்து
மாதேவி யென்கின்ற மாந்தளிர்போல நின்றனளே

### (மீண்டும் அமராபதியை வதைத்தல்)

என் நோன்பு நோக்காதார்க் கிதுவோ படும்பாடு
தன் மேனியுரு வழியத்தான் காய்ச்சி யிடுங்களென்றார்
தீயிற் காய்ச்சின குறட்டைத் திருமேனி தொட்டிழுக்க
வாயிலனற் பொரியை வாரி யிறைத்து நிற்க

## (மீண்டும் அறம் வந்து காத்து நிற்றல்)

மேனியுருக் கெட்டு விழுந்து மிகத் தணைந்து
நாறுமிதுபாடுபட நல்ல தன்மராசாவே
கேள்க்கலையோ வென்று கிளிமொழியாள் சொல்லளவில்
நாள்ப் பொழுதிலங்குச் செய்த நல்ல தன்மம் வந்துதவி
தென்றல் குளிர்ச்சிபரப்பச் சீவனு முண்டாகியதே
மன்றல் குழலாள் வாகுபெற நின்றனளே

## (அமராபதிக்கு உதவி செய்தல்)

தண்ணீருழலையது தான் வெறகே மாற்றாமல்
தண்ணீர் தவிக்குதென்று தார்குழலாள்தான் கேட்டாள்
செம்பை யுருக்கித் திருவளைகையில் வார்த்தாரே
செம்பையும் பன்னீராய்க் குடித்துத் தாகந் தீர்த்தாள்
முன்னே யொருவன் முன் குத்தாய்க் குத்துகையில்
பின்னே யொருவன் பிடரி பிடித்துத் தள்ளுகையில்
ஈயாத பாவி யொரு யேழை பெற்றப் பிள்ளையது
வாரி யெடுத்து வாயார முத்தாடி
வேர்வை துடைத்து மேனி புழுதித் தள்ளி
ஒட்டைக் கொடுத்து வரா தாயாரைத் தேடி
காட்டிக் கொடுத்துக் கண்மகிழ வீத்திருமென்றார்

## (சித்திரபுத்திர நயினார் தன்னை நினைக்காத அமராபதியை மீண்டும் வதைக்கக் கட்டளையிடல்)

ஒருக்காலு மென்னை நினையாளே யூதாரி
இருக்காலு முக்காலு மில்லாதப் பாடுகளை
செய்துத் தவிப்பதல்லால் தேன்மொழிக்குச் சேதமில்லை
மெய் துலங்குகின்றவளை வேறு மொருபாடு செய்ய
இவளை ஒரு மரக்கா லேழுவோடத் தான்போட்டு
அவளையொரு செக்கில் நூதரமாகப்போட்டு
ஆனையைப் பூட்டி அடியுங்கோ வென்றுரைத்தார்
மாவினை யென்றோடு வலு செக்கிலே போட்டு
நரகமது யென்கின்ற நங்குரப் பாரமேற்று
மரகமது மூடழ நின்ற மதயானை மாமுகனை
வீரகண்டி யென்ற செக்கில் விரையவேதான் பூட்டி
மேரு நகண்டதுபோல மிகத்துரத்தியே யடித்தார்
ஒருக்கால் பிணைய லடித்தார்கள் உத்தமியை
இருக்கால் பிணைய விசைய அடித்தார்கள்
அவளாடையுடுத்த அழவும் நெகிழ நெளிந்து

அவளன்னத்தைப் பெற்ற வயறு மறுக் களிந்து
காய்முறுப்புத் தானசையுங் கழிந்து பிணங்களுக்கானதுவே

### (செக்குமுறிதலும் செக்கடிப்பான் கணக்கரிடம் முறையிடலும்)

பாயிரத்த யென்னை பறந்தங்கே வந்ததுவே
ஆடிவருஞ் செக்கில் ஆயிளையாள் செய்தவத்தால்
ஓடு அகப்பட்டு மடல் கைமுறிந்ததுவே
செக்கடிப்பான் சென்று திரும்ப முறையிட்டான்
செக்குலக்கை யெங்களால் தேட முடியாது
நீலியைக் கொண்டுவந்து நிறுத்த உலக்கை முறிந்து
பாலமுது போன்ற பருவுலக்கை யெப்போது

### (சித்திரபுத்திரனார் அமராபதியைக் குடத்தில் அடைக்கச் சொல்லுதல்)

தேடுவோமென்பளவில் சித்திரபுத்திரனாரும்
ஓடுகின்ற செக் குலக்கைக் குதவி யென்ன செய்தாளோ
ஈதோ படும்பாடு யென் தன்மராசாவே
சீதேவி யென்கின்ற சீவனுமுப்பறந்து
உறுப்பெல்லாங் கூட்டி உருட்டி யெழுந்திருந்து
மறுத்து மொழி பேசாத மானனையாள் நின்றனளே
சித்திரபுத்திரருஞ் சீறி சினந்து நின்று
இத்தனைப் பாடுபடுத்தி யிவளையான் செய்ததெல்லாம்
அத்தனையும் பலித்துதில்லை யவள் செய்த தன்மத்தால்
இத் தகமை நின்ற யிவளை யினி யிப்போது
சாலடியிற் சாத்தி பொன் சரிவளையை
ஏலவேதான் பிறந்த யென்னையை வில்லென்று சொல்லி
குட்டையில் பிண்ணாகக் கையிடு குடத்திலடை யென்றாரே
குட்டையிலே வாரினார் குடத்தி லடைத்தார்கள்

### (அமராபதியை எண்ணை, பிண்ணாக்குக் கூவி விற்கச் செய்தல்)

சொரியிலிரற்ற மிறைற்றதொரு தோல்க்குடமும்
மீண்டும் அவள் தலையிலேற்றி யிதை வில்லெனவே
ஆண்ட கைத் தூதர் அடித் தடித்துப் பின்போனார்
நீண்டதொரு வீதியில் போய் நின்று விலை கூறுவளே
கூண்டத் தெருவீதிக் கோதையரே நீர் கேளீர்
என்னுடைய மேனியிரற்ற யெண்ணை விக்குகிறேன்
பொன்னையீர் நீங்கள் புறப்பட்டுக் கொள்ளுமென்றார்
பேதமுறுமென்னுடலிற் பிண்ணாக்கு விக்குகிறேன்

கோதையரே நீங்கள் வந்து கொள்ளுங்கோ வென்றுரைத்தாள்
மங்கை நல்லீ ரென்னுடலில் வந்த யிந்த யெண்ணை
இங் கியல்லாய் விக்கிறேன் யெல்லோரும் கொள்ளுமென்றார்
பாங்குடனே யென்னுடலிற் பரந்த யிரற்ற யெண்ணை
பூங்கொடியீர் நீங்கள் பிறப்பட்டுக் கொள்ளுமென்றார்
மெய்யல்ல வென்னுடைய மேனியிரற்ற வெண்ணை
பொய்யல்ல நீங்கள் பிறப்பட்டுக் கொள்ளுமென்றார்
சீரியதாமென்னுடலில் சேந்த தசைப் பிண்ணாக்கும்
காரிகையே நீங்கள் கடுகெனவே கொள்ளுமென்றார்

## (மக்கள் வாங்காது வீட்டுக் கதவடைத்தார்)

எண்ணைப் பிண்ணாக்கென துயிலள் வடிவைக் கண்டபெண்கள்
கண்ணிரண்டும் பொற்றிக் கதவு மடைத்தனளே
பாதகத்தி யெண்ணை பருஞ் சத்தங் கேட்டவரும்
காதிரண்டும் பொத்திக் கதவு மடைத்தனளே
அவ்வீதி யெல்லாம் அடைத்துத் தாழிட்ட பின்பு
செவ் வீதி யொன்றில் சென்றாளே தேன்மொழியும்
அந்த தெருவிலுள்ள ஆயிழைமார்தான் கேட்டு
இந்தப் படியே யெவரும் கதவடைத்தார்
இப்படியே நாலுதெரு வீதியெல்லாங் கூறிலர்
அப்பாவி தன் முகத்தில் விழிக்க அஞ்சிப் போனதற்பின்

## (பிராமணத்தி சித்திரபுத்திரனார் நோன்பின் சிறப்புக் கூறுதல்)

உற்றதொரு உள்த் தெருவி லொருத்தி முதற் கற்புடையாள்
மற்றவள் தா னென்னை விக்க வாரதறியாமல்
நற் கணவனுக்கு அசனம் நல்கியுபசரித்து
பொற்க் கலத்தில் நீர்க்கழுவிப் போட வந்தாள் கண்டனளே
கண்டா ளிப்பாவி முகத்தைக் கனங்குழலும்
உண்டோ யிவளுக்கொரு துணைக் காளெனவே
ஆவென்னக் கைவிரித்தா ளய்யோ விதி யிதென்றாள்
ஏவென்ற கள்ளிக் கிது யெப்போது துலையுமென்றார்
கூவி யழைத்தாள் குளுந்த நல்ல வார்த்தைச் சொன்னாள்
பாவி யுனக்கிது பலித்துதென வுரைத்தாள்
என்ன தோசம் பாவி யியற்றினாய் பூமிதனில்
முன்னே நீ செய்த வினைமுற்று முனைத் துடர்ந்து
அன்னாள் முதலா யருந் துயரம் பண்ணுவித்து
இன் னாளழவும் யிருக்க ரகப்பட்டாயோ
என்று பல சொன்ன ஏந்திழையைத் தானோக்கி
இன்று யெனக் கீடேற கிசைந்த புத்தி சொல்லுமென்றாள்

தலைக் கடைக்கே நின்றுய்ய பாலச் சாதிப் பிராமணி சொல்லுவாள்
சில நோன்பு வெவ்வேறு செய்து முடித்தாலும்
சித்திரபுத்திரனார் திருனோன்பு நோக்கிலனால்
இத்தனையோ பாடு யிதிலேற்ற முண்டு கண்டாய்
இப் பாடுபட்டு முனக் கின்ன மறிவில்லையோ
கற்பு மிகுந்தக் கள்ளியே யான் சொல்லக்கேள்
சித்திர புத்திரா வென்று திருநாமங் கூறுமென்றார்
உற்ற மொழி வசன உரைத்தவளைத் தெண்டனிட்டு

### (அமராபதி சித்திரபுத்திரனாரை வேண்டி தஞ்சமடைதல்)

இதுவுமொரு நோன்பு நோற்றாமல் நானிருந்தேன்
அதனாலே வந்த பாடென்று யறிந்தவளும்
சித்திர புத்திரரே துணை யென்றாள் செட்டிச்சியும்
அத்தனையும் கேட்டு ஆன கணக்கருடன்
சென்று முறையிட்டுடனே சேயிழையு மன்னேரம்
நின்று தொழுதாள் நெடுமூச்சுத்தா னெறிந்தாள்
உன்னை நினையாம லூறு வினையிற் பட்டறிந்தேன்
என்னை யினி நீர்தாம் ல்ட்சிக்க வேண்டுமென்றாள்
சித்திரபுத்திரனே தேவர் தொழுஞ் சமேரனே
உத்தமனே நானு முன் னடைக்கல மென் றோதினளே

### (சித்திரபுத்திரனார் அமரபாதியைக் காத்தல்)

அடைக்கல மென்றவளும் அஞ்சி யுரைக்கக் கேட்டு
எடுத்தக் கணக்கோ டெழுத்தாணி தன்னை வைத்து
ஓடி யெழுந்தங்குறுக்கி வருந்தூதர் தம்மை
நாடி விலக்கி யினி நானுண் டுனக்கெனவே
என்னை யிரற்றக் குடத்தை யெடுத் தெறிந்தப்பாலே
வண்ணைச் சதைப் பிண்ணாக்கை வாங்கி யெறிந்தப்பாலே
சுமை தனையும் அப்பாலே தூரப் பறித்தெறிந்து
அமையும் அமையுமென அச்சந் தவிர்த்தனளே

### (அமராபதி சித்திரபுத்திரனாரிடம் அடைக்கலமாதல்)

அச்சந் தவிர்ந்த ஆரணங்கு மப்பொழுது
உச்சியிலே கைக் கூப்பி நின்றங்கோர் வார்த்தை சொல்லுவாள்
ஆதியே யென்னை அடைக்கலமாய்க் காத்தருளும்
சோதியே நாயேன் துயரப்படாதபடி
கடை போல் காப்பாய் கருணையினாலென றொழுது
அடைவாக வீழ்ந்தங் கடி தொழுது நின்றனளே

## ( சித்திரபுத்திரர் நோன்பினைச் செய்யாததால் பட்ட வேதனையைக் கூறுதல் )

செப்புமந்த வார்த்தைச் சித்திரபுத்திரர் கேட்டு
இப்புவியில் செய்தத் தவமியம்பினா ரெல்லோர்க்கும்
காதவழிக் கொரு கல்கிணறு வெட்டிவித்தாள்
பாரச் சுமைதாங்கி பந்தல் நடக்காவணங்கள்
கற்க் கோவில் கல்மடங்கள் காலணைகள் பொய்கை முதல்
திக்குத் திசை தோறும் சிறப்பாகக் கண்டு வைத்தாள்
வாழ்க்கைப் படாதப் பெண்களை வாழ்வியாக முடித்தாள்
பாக்கியமா யெல்லோர்க்கும் பகிர்ந்திட்டு உண்டிருந்தாள்
அன்னக் கொடி கட்டி அறச்சாலை கட்டி வைத்தாள்
சொர்ணம் வழங்கி வைத்தாள் சோறு தவறாமலிட்டாள்
மழைக்கு மடங் கட்டி வைத்தாள் வளரும் நந்தவனம் வைத்தாள்
தழைக்கும்படி சுற்றங் கிளை தனக்குத் தானங் கொடுத்தாள்
கன்னிய தானஞ் சிலவு கருதி மறை பொற் கீய்ந்தாள்
தன்னுடைய பத்தாவைச் சலியாமற் றான் தொழுதாள்
என்னை நினையாமல் என்னோன்பு நோராமல்
என் பேரு சொல்லாம லிப்பாடு பட்டாளே

## (சித்திரபுத்திரனார் நோன்பு முறை கூறுதல்)

நின்றாள் மயங்கி நெடுமூச்சு விட்டெறிந்தாள்
என்று பல சொல்லி யேந்திழையை தானோக்கி
என் னோன்பு நோக்க வேண்டாமோ யென்பிறப்பே
உன் னோன்பு நோக்க வகை யுரையும் உத்தமரே
பொன்னி னெழுத்தாணி பொன்னாலே பொஸ்தகமும்
பொன்னாலே பூண் நூல் புதுப்பட்டாடை முதலாய
வைத்துப் பூசித்து மாளிகையு முண்டாக்கி
கொத்தோடே மாங்காய் குலையோடே வாழைக்காய்
அன்றாடின பெண்ணை அன்றாடின அரப்பும்
மன்றில் விளைந்த தெல்லாம் வாகவே படைத்து
இத்தனையும் வைத்து நோக்குமென்றார் யெம்பெருமான்

## (சித்திரபுத்திரனார் நோன்பினால் வரும் பயன்)

இத்தனையும் வைத்து நோக்கினே னென்றதுண்டால்
இனக் கென்ன பதத்தைத் தருவீர்காண் எம் பெருமான்
உனக்குக் கூட்டோடே சொர்க்கங் கொடுப்போம் நாணுற்றமியே

## (சித்திரபுத்திரனார் அமராபதியை அவளுடைய உடம்பு கூட்டில் வருமாறு கூறுதல்)

நாயகமே நாயடியாள் நன்மை பெறவந்ததென்றால்
நாயகமா யியல்தன்மராசாவும் நன்மை பெற
வேண்டாமோ வென்றளவில் விண் கணக்கரு மகிழ்ந்து
பூண்ட வொறை யிருவரையும் பொருந் தலைத்துக் கொள்வோம்யாம்
சத்தியவாக்கா யுரைத்துத் தன் தூதரை யழைத்து
அத்தைக் கறுகல் உப்புச் செல்லும் அமராபதி வீட்டில்
கூடு வெந்து போகுமுன்னே கூட்டில் விட்டு வாருமென்றார்

## (அமராபதி நல்வழிக்கு உதவுமாறு கணக்கரிடம் கேட்டல்)

நாடி விடை கொடுக்க நாயகியு மேதுரைப்பாள்
நரகவழி கினிமேல் நடக்காதே புண்ணியரே
நரக வழி கண்டனையே யினிமேல் நடத்துவனோ
உன் பெருமைதன்னை யுலகறியும் உத்தமரே

## (அறம் செய்தவர் அடையும் பேரினைக் கூறுதல்)

உன் புகழால் நல்ல வழி உதவிடுவீ ருத்தமரே
வடக்கு வாசல் தன்னை திறவுமென்றா ருத்தமரும்
வடக்கு வாசல் வழியே மங்கையரைத்தான் கூட்டி
மாணிக்க மண்டபத்தில் வந்த அமராபதிக்கு
பேணிக் கணக் கெழுதும் பெருமாளு மேதுரைப்பார்
இவன் சிவனை நினைந்து திருநீறணிந்தவன்காண்
சுமைதாங்கி தண்ணீர் பந்தல் சிறப்புடனே வைத்தவன்காண்
மாதீர்த்தமாக மதில் வருகித்து வாழ்ந்தவன் காண்
ஆதிபரன் பூசைக் கொடுத் தன்புடனே வாழ்ந்தவன்காண்
நந்தவனம் வைத்து நிற பூவெடுத்தவன் காண்
எந்தனையுந் தானினைந்து என்னோன்பு நோற்றவன்காண்
திங்கள்கிழமை சிவனோன்பு நோற்றவன் காண்
தங்க வருவார் கிடமுந் தானமும் யீந்தவன் காண்
நாவுள்ள போதே நற்பாக்குத் தின்றவன் காண்
நாவுள்ளபோதே நல்வாக்குச் சொன்னவன் காண்
கண்ணுள்ளபோதே நல்ல கண்காட்சி கண்டவன் காண்
காதுள்ளபோதே நல்ல காவியங்கள் கேட்டான்காண்
ஆதி சிவனைப் போற்றி யறிக்கையுடன் வந்தவகைகாண்
அவர்கள் நன்மை பெற்று வாரவழி யிது காண் ஆரணங்கே
அவர்கள் செத்துச் சில்லிட்டுச் சிவலோகம் வாரவர்க்கு
மாணிக்கம் பொற்புராகம் வயிர வயிடூரியமாம்
ஆணிக் கனகப் பொன் ஆடைமேற் கட்டியதாம்

ஆலவட்டம் வீச அடியார் பணிமாற
பால் பழமுஞ் சோறும் பசியாறவே கொடுத்து
நிறை மிகுந்தப் பூக்கள் நல்ல யிருவாட்சி பிச்சி
குறைவில்லாதே சொரிந்து கூடிவந்து யில்வழியே
சிவனார் திரு பாதஞ் சேவிப்பார் கண்டீரே

**(மேலுலகில் வாழுகிறாயா, கீழ் உலகில் வாழுகிறாயா என்று கணக்கர் கேட்டலும் அமராபதி பதிலுரையும்)**

சிவனார் பதங்கண்டு சிறப்பாக யெப்போதும்
இங்கே யிருக்கின்றையோ ஒன்னிடத்தில் போறாயோ
இங்கே அடியாள் தனியே யிருப்பேனோ உத்தமரே
என்தன் மராசாவும் யிங்கிலையே நாயகமே
உன்தன் பெருமை யெல்லாம் உலகுதனி லுண்டாக்கி
வருவே னானென்றவுடன் வாய்த்த விடைகொடுத்து

**(அமராபதியின் உடலை எடுத்தல்)**

திருவளையதூதர் கையிற் சிறப்பாகவே கொடுத்து
கூடு வெந்து போகுமுன்னே கூட்டிவிட்டு வாவெனவே
கொண்ட வெறுப்பில்லாளைக் கொண்டுச் செல்லு முன்னாக
யெண்ணை யிட்டு நீராட்டி யித்த கோடி யுடுத்து
வண்ணப் பந்தல் போட்டு வாகாய் சடங்கறுத்து
முந்த வணிந்தப் பணிமுழுதும் பணி பூட்டி
தந்த பல்லக்கில் தானேற்றிச் சூழ வந்தார்
பாடியடித்ததோர் பக்கமே சூழ்ந்து வர
ஆடை பொன்னு முத்தும் அவரவர்க்கே தானமிட்டார்
வந்தபேருக் கெல்லாம் வழங்கினார் நெய்முதலாய்
சந்தியளவுந்தான் மிக்க கொடுத்தார்
அமராபதிக் கூட்டை அலங்காரமா யெடுத்தார்

**(மக்கள் அமராபதிக்கு அழுதுபுலம்பி பூவுலகில் கருமாதிச் செய்ய முயலுதல்)**

பொன்னுலகில் போறீரோ பொற்கொடியே என்றழுதார்
நங்கைக்கு நெல்குற்ற நாம் பிழைத்தோ மென்பாரும்
ஆண்டி பரதேசி குருடான முடமான செவிடு
மாண்டு விட்டோமென்று வழிதோறும் நின்றழுதார்
ஏற்று விடபெற கெல்லாம் யேங்கித் தடுமாறி
காற்ற இறை யினிமேல் காற்பவராறென் றழுதார்
தன்ம ராசாவுந் தம்பி தமையன் மாரும்
நன்மை பெறு மக்கள் சுற்றம் நாடி மிக வழுதார்

தம்பட்ட மல்லாரி தவில் முரசுதான் முழங்கி
கம்பம் வெடிப் பூவாணம் சுடுகாடுதான் முழங்க
கட்டைதனை முக்கால் கடிந்துடனே சுற்றி வந்து
கட்டையிலே வைத்து கன்மத் தொழில் நடத்தி
மகனார் தலை சிரைத்து வாய்க்கரிசி தானுமிட்டு
மகனார் குடமுடைத்து வாய்க்கரிசி தான்போட்டு
அம்மாடி யென்று அழுது நிற்கும் வேளையிலே
தன்ம ராசா அழுது சந்தனக் கட்டையின் மேலேற்றி
ஈமத்தில் நிறைந்து எரியை மூட்டும்போது

**(அமராபதி உயிர்த்து எழல்)**

காம வல்லியென்று மொரு காற்று வந்து வீசிடுமாம்
பொன்மாரி புனல்மாரி புற்பமாய் பெய்திடுமாம்
நன் மாரி பெய்திடவே நாறி அமராபதியும்
அச்சமர உயிர் பறந்து அரகரா வென்றெழுந்தாள்
நற் சொற்பனங் கண்டாப் போல யெழுந்தாளே நாறியரும்
இட்ட கட்டையும் பூங்காவனமா யெழுந்திருந்தாள்
கட்டைக்கு மப்பாலே கடக்கப் போய் நின்று சொல்வாள்
சித்திரபுத்திரனார் சிவனார் பெருங்கணக்கர்
நிற்ற மிலட்சம் பிழை பொறுத்த நின்மலனே
உன் புதுமை தன்னை உலகறிய வேண்டாமோ
என் பேரு சொன்னா கட்டை காயுமோ புண்ணியரே
அந்த வுரைதானும் அவர் செவியில் கேட்டவுடன்
சந்தன மரங்களாய்த் தளிர்ந்துதே கட்டையெல்லாம்
தாமரைப் பொய்கைத் தடாகமாய் சூழ்ந்ததுவே
பூமாறுனா தலம்போலப் பொங்கியதே கங்கைநதி
பொய்கை தனைக் கண்டு போற்றி செயத்தா ரெல்லோரும்

**(அனைவரும் அமராபதியிடம் நலம் விசாரித்தல்)**

தையல் மடவாரைத் தான் வந்து கண்டார்கள்
ஏழை யடியாரை லட்சிக்க வந்தீரோ
ஆளடியா ளென்ன தவஞ் செய்தாரோ ஆரணங்கே
தன்ம ராசாவுந் தன் மக்கள் சுற்ற மெல்லாம்
நன்மை செய்தக் காரணமே நாறியரே யென்றாரே
வந்து மேனி தடவி வணங்கி நின்றா றெல்லோரும்
தந்தன்மராசாவும் சந்தோசங் கொண்டு நின்றான்

**(அமராபதி மீண்டும் பூவுலகம் வந்த காரணம் கூறல்)**

தன் மக்களுந் தொழுது தானிற்க அப்பொழுது
என் கணவன் றன்னோடே யினி யிருக்க வந்தேனா

பாலன் குழந்தைக்குப் பால் கொடுக்க வந்தேனோ
ஞாலமதி லன்ன சுற்றம் நான் பாற்க வந்தேனோ
சம்பா அரிசிதான் தீட்டிப் பால் காய்ச்சி
பைம் பொற்க் கலம் விளக்கி பரிந்துண்ண வந்தேனோ
நினைக்கப் பகரோனும் நெஞ்சுள்ளே நின்றெரியும்
எனக்கு மென் மங்கை யிங்கிருக்கக் கூடாது
தான் புட்ட பாட தெல்லாம் தன் கணவனோடுரைத்து
நான் வந்த காரணந்தா னாயகமே கேளுமென்றாள்
சித்திர புத்திரா வென்று திருநாமந்தான் கூறி
சித்திர புத்திரர் நோன்பு திண் புவியில் னோக்க வந்தேன்

## (சித்திரா பௌர்ணமி நாளில் சித்திரபுத்திரர் நோன்பு நோற்றல்)

பதினெட்டுப் பட்டடையோர் பலசாதியு மறிய
ஆதிசெயமான னோன்பு அறிவித்திருந் தவளும்
சித்திரைக்குச் சித்திரையில் சீராம் பவுரணையில்
சித்திரபுத்திர நோன்பு சிறப்புடனே நோக்கவென
தூற்பார் தொழிப்பார் தோரணங்கள் நாட்டிடுவார்
நாற்காத வழிக்கு நடை காவணம் போட்டு
மாளிகை மண்டபமு மவர்காண கோவில்களும்
நாளிகையி லுண்டாக்கி நலம்பெறவே விதானித்து
பட்டா லலங்கரித்து பவளத்தாலே நிறைத்து
மட்டு மலர் தூக்கி வண்ணப் பிலா வெழுதி
சந்தனத்தாலே தரைமெழுகிக் கோலமிட்டு
அந்தமுள்ள பீடமிட்டு அதின்மேல் கும்பம் வைத்து
திரு மாதுமை பாகன் அருளால் சிறப்புடனே
பருவட்டம் பூனூல் பண்பாயதில் சாத்தி
பொன்னாலே பொஸ்தகமும் பொற்பிரம்பும் பண்ணி வைத்து
பொன்னாலெழுத்தாணி புகழ்ந்தங் கருகு வைத்து
குத்து விளக்குக் கொழுந்து பெறத்தானேற்றி
நிற்றங்களை நிரைற்று நிறை மரக்கால் நெற் சொரிந்து
கொத்தோடே மாங்காய் குலையோடு வாழைக்காய்
உத்த கமுகஇளனீர் உடன் கரும்புதா னிறைத்து
பச்சை யடைக்காயும் பண்புடனே வெத்திலையும்
தெட்சணையும் வைத்து சிறப்பா யலங்கரித்து
அன்றாடின யெண்ணை அன்றாடின அரப்பும்
நன்றிபெற ஐந்து வகை நற்கனிகளும் படைத்து
பூமிதனில் விளைந்த புதுப் பண்ட மத்தனையும்
தரமிதற்க வைத்து சருவரகம் காய்கனியும்
பால்பழமு மேற்றிப் பாலாலே பொங்கலிட்டு

ஆலமுது செய்தார்க்கும் அரிய கண் கணபதிக்கு
சித்திர புத்திரர்க்குஞ் சிறந்தப் பூசை நடத்தி

### (பிராமணி சித்திரபுத்திர நயினார் கதையை அமராபதிக்குக் கூறுதல்)

சித்திரபுத்திரர் கதையைச் சிறப்புடனே சொல்வாரை
தேடித் தெருவே திரிந்து விசாரிப்பளவில்
நாடிக் கணக்கர் பேர் நாடி யமராபதியும்
என்னை நினைத்தாள் காண் என்பிறப்போ யென்று சொல்லி
பொன்னுலகில் முற சொன்ன புகழ் நூல் பிராமணியை
அழைத்துக் கதை சொல்லவே யனுப்பி விட்டா ரன்னேரம்
தழைத்த முகில் கரத்தாள் தையல் அமராபதியும்
பிராமணியைக் கண்டு பிரியமுடன் தெண்டனிட்டு
பிராமணியை மாளிகையின் பீடத்திலே யிருத்தி
ஆபரண மாடை பட்டு அலங்காரமாய் கொடுத்து
தீபதூபம் நிறைந்து தெட்சணை வைத்து படைத்து
கதைக் கேட்க வேணுமென்று காரிகையுந் தானிருக்க
கதை நூல் முறைப்படியே கதை விரித்துச் சொல்ல அவள்
கேட்டுச் சந்தோசித்து கிருபைக் கடலாகி

### (மக்களுக்குத் தானம் வழங்குதல்)

தீட்டு புகழ் சித்திரபுத்திரரைத் தெண்டனிட்டு
பூசை முடித்து புகழ்ந்து அன்னமும் விளங்கி
ஆசனத்தின் மேலிருந்த ஆயிமனங் குளிர
கேட்ட பொருள் கொடுத்துக் கிருபையுடனனுப்பி

### (மக்களுக்குத் தானம் வழங்குதல்)

வாட்ட மில்லா தானம் வழங்கினானெலோர்க்கும்
இட்டகடன் முறியை யியல்பாகத்தான் கழித்தார்
மட்டில்லா சொறிமை வழங்கினாள் மானிடர்க்கு
கைக்குடை பண்ணி காரனோர்க்குத் தானமிட்டாள்
மிக்க பிராமணர்க்கு வேண்டியதான வரங்கொடுத்தாள்
கோதான மில்லார்க்குக் கோதானமுங் கொடுத்தாள்
மாதானம் யெல்லோர்க்கு மகிழ்ந் தளித்து தானிருந்தாளே

### (அமராபதி கூட்டோடு கைலாசம் செல்லுதல்)

என் னோன்பு நோற்று யிருந்தாளே பெண் பிறப்பு
தன்னோன்பு நோற்ற தையலமரா பதியை
கெணநாதரே நீங்கள் இவளை முல்ல தேர் கொடுபோய்
கூட்டோடே தேரேற்றிக் கொண்டு வா நீறெனவே
நீட்டோலை வாழ் கணக்கர் நேராகத் தானனுப்ப

மந்திரவிமானமுடன் வந்து கெணநாதர் வர
அந்திர வானம் நிறைய அவர்கள் வரும் பெருமை
கண்டு அமராபதியும் காசினியோருக் குரைவாள்
அண்டர்பதிக்கெய்தி அரனார் பதங்காண
கூட்டோட கயிலாசம் போறேனான் கோதையரே

### (சித்திரபுத்திரன் நோன்பின் பயன் கூறுதல்)

ஆண்டுக் கொரு நோன்பு அயராமல் நோற்பவர்க்கு
பொன்னி னெழுத்தாணியும் பொஸ்தகமும் பண்ணி வைத்தால்
பொன்னுலகிலே யவர்கள் புத்திரரும் பெற்றெடுப்பார்
சீற்றுவ மெற்றக் கொடுப்பார் சித்திரபுத்திரர் நிறைய
ஆத்திரங்கள் வாராது ஆறனாளை மெய்யதுகாண
என்று சொல்லியே சிவனே யிறைஞ்சித் தொழுது நின்றாள்

### (சித்திரபுத்திரர் அமராபதியை வரவேற்கச் சொல்லுதல்)

அன்றிரவு சொல்லி யம்மை யுமையைத் தொழுதாள்
தேவாதி தேவர்களைச் சேர வடிதொழுதாள்
பூவந்து வீழ்ந்தது காண் போறேன் சிவலோகம்
மார்பளவு பூக்கள் வந்தே சொரிந்திடுமாம்
அரமணிக் கணக்கருட திருவுளத்தால்
வந்து கெணநாதர் வாய்த்த தன்ம ராசனையும்
பைங்கொடியாள் தனையும் பைம்பொன் மணித்தேரேறி
பொன்னுலகத்தோடு வரம் புகழ் கணகருமிருந்து
என்னோடுடன் பிறந்தாள் வாராளென்ன கேட்டு
ஏலங்குழலணங்கே யெதிற்பவும் நீங்கள் சென்று
ஆலாத்தி யேந்தும் அவர்க்கென்றார் புண்ணியரும்
அப்படியே சென்று ஆலாத்தி சாமரையும்
முப்பழமும் பாலுமுசியாமலே கொடுத்து
அமரர் குலங்கூடி ஆனதன்ம ராசனையும்
அமராபதியைக் கூட்டி அருகேதான் விட்டனரே

### (அமராபதி சித்திரபுத்திர நயினாரிடம் வரம் கேட்டல்)

சித்திரபுத்திரருஞ் சிறப்பா யருகிருத்தி
பெற்ற பெரியோர் சிறப்பும் பிரியமுடனே பேசி
தேவர் அமிர்தந் தித்திக்கவே கொடுத்து
தேவர் பதியிரு நீ யென்று சிறந் துரைக்க
பிச்சையிட்டுப் பிள்ளைப்பால் வாரது பிரியமுடன்
இச்சையுட னுமையே யெப்போதுந் தாள்துதித்து
மன்று தினி லிருக்க வரந்தாரும் புண்ணியரே

## (உயர்ந்த குலத்தில் பிறக்க வரம் நல்குதல்)

என்றவுரை கேட்டு யியல்வாம் பெருங்கணக்கர்
அற்றைக் கறுக்கல் உப்புச் செல்லா ராசோமாகிய வர்க்கத்தில்
குற்றம் வாராமல் கொடுத்த வரந்தா னவர்க்கு
உற்ற மகளாய் பிறவு மென்றா ருத்தமரும்

## (அமராபதியின் மறுபிறப்பு)

அத்த னருளாலவள் வயிற்றிலே பிறந்து
இவள் வளரு முன்னாளில் யியல் தன்மராசாவும்
அவள் பிறந்தாப் போலே அருமறையோர் தன்குலத்தில்
வந்து பிறந்து வளர்ந்து பக்குவமாக
முந்த விதித்தபடி முகிற்றுக் கலியாணம்
நன்றியுடன் செய்து நாள்தோறுமே வாழ்ந்து
என்றும் பிரியாவிடையா யினிதிருந்து
சித்திரனுக்குள் சகித்தீரே சித்திரபுத்திரர் நோன்பை
வித்துருவமாய் வாழ்க விதிப்படியே நோற்றாரே
இன் நோன்பு தன்னை யிடைவிடா தியற்றி
தன்னோன்பால் செல்ல மதலையது மிகவுண்டாகி
மைந்தர் பதினாறும் பெற்று மகிழ்ந்துடனே
சிந்தை யுற்று கன்னிமார் தங்களைப் பெற்றெடுத்து

## (சித்திரபுத்திரர் நோன்பை மறத்தல்)

நீடுழி வாழ்ந்து நெடுங்காலம் சென்றதன் பின்
ஏடவிழும் பூங்குழலா ளியல் மைந்தர் தன்னோடு
வாழுமந்த நாளில் மறந்தாரே யின்னோன்பை
பாங்காக வாழும் பவுசுதனை நினைந்து
ஆங்காரத்தாலே அற மறந்தாளின் னோன்பை

## (அமராபதி வறுமை நிலை அடைதல்)

நற்கணக்கர் தன் விரதம் நாளிலிகழ்ந்ததினால்
பொற் கொடியாள் தான வாழ்வு போகத் துடங்கியதே
சிறக்குந் திருவகல் செல்வம் மிக்க குறைய
கறக்கும் பசுக்களெல்லாம் கள்ளர் கொண்டு போனார்கள்
பண்டிருந்த பட்டுப் பணிப் புடவையுள்ள தெல்லாம்
கண்டிருந்தாப் போலே கன்னமிட்டுப் போனார்கள்
வெள்ளியுடன் வெங்கலம் பொன் வீட்டிலுள்ள பாத்திரமும்
உள்ளதெல்லாங் கள்ளர் ஒருக்காலே கொண்டார்கள்
புறத் தொருவர் காணாமல் பூமியின் கீழே புதைந்து
மறைத்து வைத்த பொன் னனதெல்லா மண்கொண்டு போனதுவே

வண்ணப்பூ மணவரையும் மாடமும் மாளிகையும்
திண்ணைப் பிறமு மொக்கத் தீ பட்டுப் போனதுவே
கன்னல் வயலுங் கதலி யிளந் தோட்டமுந்தான்
சென் னெல் வயலு மொக்கத் தீஞ்சுதான் போனதுவே
தளுக்கு மரமெல்லாந் தளிருதிர்ந்து போனதுவே
பழுக்குமரமெல்லாம் பழ மாறிப் போனதுவே
வரத்து நல் எள் பயிறு வளமை சிறுதானியங்கள்
அறைந்த கடல்களெங்கும் அலைக ளெழுந்து பொங்கி
நிறைந்தக் குளங்களெல்லாம் நீர் வற்றிப் போனதுவே
இறைக்கத் துலையாம லென்றும் நிறைந்திருக்கும்
உரைக் கிணறு மேடைகளு மூத்தடைத்துப் போனதுவே
பள்ளங்களாய் கண்ட பாரடையுள்ள வாவியெல்லாம்
வெள்ளங்கள் வண்டலிட்டு மேடாகப் போனதுவே
செந்துவரவாய்க் குத்த முதல் தானெ மொழியுஞ் சீதனமாம்
வந்த பசுவெல்லாம் மலடாகப் போனதுவே
கூட்டில் வளந்து தினம் கொஞ்சுங் கிளிகளெல்லாம்
காட்டில் பறந்தோடிக் கானில் மறைந்ததுவே
ஆண்ட அடியாரும் அன்ன சுற்ற முள்ளோரும்
வேண்டாதவர் போல வெறுத்தோடிப் போனதுவே
பேறு பெறவேதான் பெற்றெடுத்த மக்களெல்லாம்
சீறியரவு போலச் சினக்கத் துடங்கினரே
கொண்ட கணவன் மிகு கோபத்துடன் வெகுண்டு
மண்டி யெதிர் நின்று வாய் தர்க்கமிட்டாரே
வாசமுடைய வங்கிஷம் அன்ன சுற்றம்
பாசமுள்ளோ ரெல்லாம் பகையாய் முடித்தனரே
தன்னுடனே தான் பிறந்த தம்பி தமையரெல்லாம்
முன்னறியார் போலே முகமுறிச்ச லானதுவே
கண்டவர் களெல்லோரும் கள்ளி யிவளென்று சொல்லி
பண்டையுள்ள செல்வமெல்லாம் பாழே கவிழ்த்தாளே
வண்டார் குழலாள் வருந்தி பசி மிகுந்து
கண்டார் அகந்தோறும் கஞ்சிக்குக் கெஞ்சினளோ
பைங்கொடிக்கு நாள்தோறும் பண்டுவந்தச் செல்வமெல்லாம்
வந்த வழியேதான் மறுத்தோடிப் போனதுவே
மடைக்கு நடுவாக வாய்த்ததொரு நீர் சுரத்தில்
உடைத்தக் குளமம் போலச் செல்வம் ஓடி வற்றிப் போனதுவே
அடையாதச் செல்வம் அடைந்த தெல்லாம் ஒன்றுமன்றி
கடைக்காரர்பால் போல கவிழ்ந்தோடிப் போனதுவே
நாள்வரையே செல்வமெல்லாம் நாளுக்கு நாள் குறைந்து
வேழ முண்டு போட்டவிளாங்கனி போலானதுவே
ஆன செல்வ மெல்லாம் அடியோடே போனதடா
மானனையார் மெற்ற மருகிவருந்தினரே

தின்னத் தவிடு மற்றுத் தீராப் பசிபெருத்து
அன்ன மின்னார் மெய்சோர்ந்து அறிவழிந்து வாடியதே
தாகமுற்றா லோர் சிரம் கைத் தண்ணீருங் கிட்டாமல்
சோமற்று நாளுந் துடித் தாவி சோர்ந்தாளே
பேணி யுடுக்க வொரு நற்றத் துணியுமின்றி
நாணிச் சிறுகூரை நாரிட்டுடுத்தினளே
சார மழை வெயிலுக்குத் தானிருக்க வீடுமன்றி
ஊரில் மரந்தழைகள் தோறு மொதுங்கினளே
வாசமிகும் பூங்குழலிவாடுமந்த நாளையிலே
பேசரிய பொல்லாப் பிணிகளுந்தான் பற்றியதே
சித்திரபுத்திரனார் திருநோன்பிக ளந்ததினால்
புத்தியினா லிந்த வினை பூங்கொடிக்குப் பூண்டதுவே
பாராம விசும்பும் பதினாலுலகிலுந்தான்
ஆராம படாத அருந்துன்பப் பட்டனளே

### (அந்தண முனிவர் அமராபதி வீட்டிற்கு வருதலும் உணவு கேட்டலும்)

இவ்வாறு துன்பமுட னிருப்பாள் வெறுமனையில்
அவ்வாறு கண்டோர் முனிவ னய்யனகத்துக் கேகினரே
அய்யமெடுக்க வந்த அந்தணனைத் தா னோக்கி

### (உணவில்லை என்று அமராபதிக் கூறுதல்)

செய்யமனாக் கிளவி தெண்டனிட் டங்கேது சொல்வாள்
அய்யமிட வென் னகத்திலான துமக் கொன்றுமில்லை
வெய்யமறை வித்தகரே வேறகத்தே செல்லுமென்றாள்

### (அந்தணமுனியும் அமராபதியும் உரையாடுதல்)

உற்ற வசனம் உரைத்தற்பின் வேதமுனி
சித்தமுற நின்று சிரித்தங்கே யேது சொல்வார்
இரு பிடி சோறிருந்தா மிரந் தொருவர் சென்ற தென்றால்
ஒருபிடி சோறானாலும் உதவுவா ருத்தமியே
அவ்வள வானாலும் தருகிறது குறைந்தாலும்
எவ்வள வானாலும் யெனக் கசன மீய்ந்தி டென்றார்
அந்த மொழிக் கேட்டவளும் அந்தணரே யன்னமிட
எந்த னகத் தய்யமும் கெள்ளவு மில்லை யென்றாள்
உந்த னகத்தில் யான் உறு பசியால் வந்ததென்றால்
எந்தனக்கு அய்ய மில்லை யென்று சொல்லாதே
தினையள வானாலுஞ் சீராய் பகுத்திடென்றார்
தினை யளவு கெங்கே நான் செல்வே னென்றுரைத்தாள்
அந்த மொழி கேட்ட முனி அவள்மேலே யன்பு வைத்து

## (முனிவர் சித்திரபுத்திரனார் நோன்பை மறந்ததால் இந்நிலை உனக்கு ஏற்பட்டதெனக் கூறுதல்)

இந்த வினைதா னிவள்க்கு யெதனாலே வந்ததென்று
வந்த வினைக்குறையை வகுத்துரைக்க வேணுமென்று
சிந்தை தனில் யோகா திறமாகத்தான் பார்த்து
யோகத் திறத்தா லுணர்ந்து முனியோகை யுடன்
பாகு மொழிக்கேற யமராபதிக்கு வகுத்துரைப்பார்
வற்றினையாய் செல்வம் இருந்ததினால்தான் மறவாய்
சித்திர புத்திரன் திருநோன்பை அறமறந்தாய்
அந்த விரதம் மறந்ததினால் ஆயிளையே
இந்த துயரமுனக் கெய்வா யென்றுரைத்தார்

## (சித்திரபுத்திரர் நோன்பை நினைத்தவுடன் இழந்த எல்லாவற்றையும் அமராபதி பெறுதல்)

அந்த மொழிக் கேட்டு அமராபதி அப்பொழுது
சிந்தை தனில் மெய்ய தென்று சித்திரபுத்திரனை நினைத்தாள்
சித்திரைக்குச் சித்திரை திரு ஞாயிற்றுக்கிழமையிலே
உத்த விரதத்துக்குக் குண்டானஅவ்வீரறு வெல்லாம்
மனதில் நினைந்தேற்ற வந்தது காண் நன்னேரம்
வனிதையரும் நூல் முறை வருளி யிந்த மா விரதம்
திறத்துடனே நோக்கச் செல்வ மற்ற வந்ததுவே
அறத்துடனே செல்வம் அடைய துடங்கியதே
கன்றுக் கறவை முதல் கள்ளர் கொண்டு போன தெல்லாம்
ஒன்று நூறாய் ஒருகால் வெருகியதே
கள்ளர் கொண்டு போன கலம் வெள்ளி வெங்கலம் பொன்
உள்ள தெல்லாம் சேர ஒளியாமல் வந்ததுவே
மறைந்த பொருள் பூமியின் கீழ் மண்ணுண்டு போனதெல்லாம்
அறத் திறத்தால் ஒன்றுக் கோராயிரமாய் வந்ததுவே
வெந்த திரு மனையும் மெல்ல படிசாலைகளும்
சிந்தை மகிழ சிறப்பாய் வந்தெய்தியதே
பூங் கருப்பஞ்சோலைப் புதுகதலி தோட்டமுடன்
பாங்குடனே சென்னல் யொன்று பத்து நூறானதுவே
வம்புவெறும் பூமாறி நின்ற மரங்கள் யெல்லாம்
மழையில்லாப்போலே மருவி நின்ற மரங்கள் யெல்லாம்
கொம்பு குலுங்கக் குலை குலையாய் பூத்ததுவே
நீடியதோர் மலடாய் நின்ற மரங்களெல்லாம்
ஓடி வளர்ந்தங்கே குறி குலுங்கக் காய்த்ததுவே
பாங்குடனே கொல்லைக் கொளாமல் நிறைதாரு வென்று
தேன் வொதிந்து சிந்தத் தினமும் பழுத்ததுவே

நீரத்துப் போன நெடிய குளங்களெல்லாம்
காரொற்றுப் பெய்து கடல் போலே பெருகியதே
ஊற்றடைத்துப் போன உறைக் கிணறும் ஓடைகளும்
நாற் திசையும் மெய்க்க முன் போல நன்றாய் பெருகியதே
நீர் கொண்டு வண்டலிட்டு நீரை நாமேடாள
பார் கொண்ட வாவி யெல்லாம் பண்டு போலானதுவே
நெடுநாள் மலடாகி நிறை பசுக்களெல்லாம்
கடனாகம் போலே செங்கன்றுதனை யீன்றதுவே
வனத்திலக்கன்று முன்னே வந்த கிளிகளெல்லாம்
இனத்துடனே முன்போ லிவளிடத்தில் வந்ததுவே
வெறுத்தபடி யாரும் பெந்துக்க ளுற்றாரும்
மறுத்தோடி வந்து மனதி லன்பு வைத்தனரே
மனது கருத்து முன்னாள வைப்புறுத்து மக்களெல்லாம்
தினமும் அவள் பணிவிடையைச் செய்யத் துடங்கினரே
எரியக் கோபத்தோடிருக்கு மந்த தன் கணவன்
மாறு பாகங் கொள்ளாமல் மனத் தன்பு வைத்திருந்தாள்
பகையாக வாழ்ந்த அந்த பாசத்தா ரெல்லோரும்
நகையாக வந்தவள் முன்னுணாமல் நின்றனரே
தறுகண்ணரா யிருந்த தம்பித் தமையரெல்லாம்
மறுக மொழி தள்ளாமல் வணக்கமுடன் வாழ்ந்தனரே
கள்ளியிவளென்று முன்னாள் காய்ந்து சொன்னபேரெல்லாம்
பள்ளடிமை போல வந்து பணிந் தேவல் செய்தனரே
உப்பற்றக் கூழுக்கு என்று திரிந்தவர்தான்
முப்பாலுஞ் சோறு முது புரையேற விட்டனரே
எத்திறத்தினாலு மிறந் தொழிந்த செல்வ மெல்லாம்
சித்ர புத்திரனருளால் திரும்ப வந்து சேர்ந்ததுவே
உடைத்தக் குளம் போலச் செல்வம் உடைந்தழிந்து போனதெல்லாம்
படைத்தச் சிவனருளால் பண்டு போலாகியதே

## (அமராபதி அறம் செய்தல்)

கடைக் காலில் பால் போல கவிழ்ந்தகன்றச் செல்வமெல்லாம்
போர் வேழமுண்ட களி போலிடைந்த செல்வமெல்லாம்
அல்லலுற்றுச் செல்வமுண்டாகி நாடோறும் வாழ்ந்தல்லோ
ஈட்டும் பசியா லிடையா திடைந்தவள்தான்
நாட்டிலுள்ளோ ரெல்லோர்க்கும் நாளும் விருந்திட்டனளே
நிறைந்தோ ரகத்திலுமோடிருந்தாள் கிட்டாதாள்
சிறந்தத் தண்ணீர் பந்தலெட்டுத் திக்கிலுந்தான் வைத்தனளே
நாரைத் தொடுத்து துணியுடுத்த நாரியாள்
சீராற்றிப் பட்டு குரு தேகியர்கு மீய்ந்தனளே
வெய்யில் மழைக்கு வெளியில் கிடந்தவள்தான்

அய்யமற ஊர்தோறும் அம்பலங்கள் கட்டினளே
துய்ய உடல்வந்து துடர்ந்தப் பிணிகளெல்லாம்
அய்ய மறப் போய் நல்லழகுடையா ளாயினளே

## (சித்திரபுத்திரர் நோன்பு செய்து நலமாக வாழ்தல்)

ஆண்ட சித்ரபுத்திரன்றனை மறந்தங் கல்லலுற்றாள்
மீண்டு நினைந்தேற்ற மிகு வாழ்வு வாழ்ந்தனளே
முன்னிகழ்ந்த நோன்பெடுத்து மூவுலகில் செல்வமுற்று
இன்னில மெல்லாம் புகழ யியல்புடனே வாழ்ந்தனளே

## (அமராபதி கதைச் சொன்னவருக்கு அமரபதம் நல்குதல்)

ஈரேழுலகி லிவள் செல்வம் போலில்லை யென்று
பாரோர் புகழப் பரிவுடனே வாழ்ந்தனளே
நோன்பு மறவாமல் நூறாண்டு வாழ்ந்ததற்பின்
தேன்போல் மொழியாளுஞ் சிவ கிருமையா யிருந்தாள்
அன்னாள் கதைப் படித்த ஆள் பிராமணியை
சொன்னபடியே கணக்கர் சொர்க்கத்தே சேர்த்தனராம்

## (அமராபதி அரன் பாதத்தை அடிதொழ வேண்டுமெனல்)

அமராபதியாள்தனையும் அவள் கணவனாரதனையும்
தவறா மொழியாகத் தன்மக் கணக்கரவர்
கெண்ணாதரை விடுப்பக் கிரணமுள்ளதேர்க் கொடுபோய்
இணைபிரியா திருவரையும் யியல்பாகக் கூட்டி வந்தார்
சித்திரபுத்திரரைத் தெண்டனிட்டா ரந்நேரம்
புத்தி மறவாமல் போற்றித் தொழுது நின்றார்
அன்னேரமே கணக்கர் அவர்கள் முகம் நோக்கி
இன்னமுதே கென்ன பதம் வேணுமென்றாரப்போது
இத்தனை காலம் ரெட்சித்தீ ரெம் பெருமாள்
சித்திரபுத்திரரே தின்பூமி யிப்போது
கலியனுபாதிகளாய் கபடுகள்தான் பிறந்து
வலிய தொழில் பெருத்து மறந்தார் குரு மொழியை
பூமியில் நான்போகப்பெருத்த மில்லை புண்ணியரே
தாமரை போன்ற பாதத்தோன் காண வென்கோவே
அரன்பாதங் கண்டு அடி தொழவு வேணுமென்றாள்

## (பிரம்மனை சந்தித்தல்)

வரமதிகம் பெற்ற மங்கையுந் தன்மரையும்
சிவன் பாதஞ் சேர்க்கச் சித்திர புத்திரர் மகிழ்ந்து
நமனுடனே தெய்வபதி நாயகன் பால் வந்தனரே
உம்பர் கோன் கண்டு உள்ள மிக மகிழ்ந்து

அம்புவியோர் போற்றும் அரசே நீர் வாருமென்று
இருந்துக் கணக்கர் யியல்புகளுந் தானுரைத்து
அருந்தும் அமுது அவர் கீய்ந்துதான் சில நாள்
புரந்தா னரன் பதியை விட்டு புகழ் கணக்கர்
பிரமனருகே சென்று பிரியங்களுமுரைத்து
நேசமுடனவ் வுலகில் நீடுழி நாளிருந்து

**(மாயவனைத் தொழுதலும் கைலாயத்தை அடைதலும்)**

மாயனார் வாளுமந்த வைகுண்டத் தேகினரே
வைகுண்டத்திற் சிறப்பும் வளமைகளெல்லா முரைத்து
நீவேறென் றெண்ணாமல் நினைந்தவரைத் தானேற்கும்
சேவேறு மீசர் திருக் கயிலை சேர்ந்தனரே
கயிலையில் சென்றதற்பின் கணக்க ரமராபதிக்கு
நயனமது மூன்றுடைய நாயகனைக் காண்பித்தனரே

**(அமராபதி அரனைத் தொழுது பாதத்தில் விழுதல்)**

சேர்ந்து கயிலை சிவனாருமைதனையும்
நேர்ந்து தொழுது நிமலனே சங்கரனே
ஆனை யுரித்தோனே அரனே உருத்திரனே
மானை யிடத்தேந்து மழுவை வலற்றேந்தும்
ஐயமுகனே ஆலமுண்டவனே அற்புதனே
கைமுகனை யீன்றவனே கண் மூன்றுடையவனே
வேங்கை யுரிற்று உடுத்து விடையேறும்
பாங்குடைய தேவே படர் வெஞ்சடையோனே
திங்களணி வேனியனே செங்கமலத்தோ னயனும்
அங்க னெடுமாலும் அறியாத வாரனனே
பாரிதனக் குடலிற் பாதி கொடுத்தவனே
வேரி மலர் கொன்றை மிகுந்த புயத்தோனே
வேறி குமரன் சொற்ப் பொருட்டு விரும்பிச் செவி தாழ்த்தோனே
நோக்குதனை யறுதல் விழியாற் காய்ந்தவனே
ஆதித்தன் பல்லை அடியோடுதீர்த்தவனே
சோதிச் சுடலைதனிற் சுகமா யிருப்பவனே
பண்ணவனே யென்றென்றும் பத்தியுடன் பொற்ப் பதத்தில்
விண்ணவருங் காண விழுந்து தொழுதனரே

**(சிவன் பாதம் போற்றிக் கைலையில் வீற்றிருத்தல்)**

வீழுந்து தொழுதுவந்த மெல்லியர்கேந்திளையும்
ஆய்ந்து கிருபை யதனால் முகம் னோக்கி
வம்பவிழுங் கூந்தல் மயிலே யெழுந்திரென
செம்பவளம் போன்ற திருவாயால் செப்பினரே

ஈசர் யெழுந்திரென யின்பமுடன் செப்பியபின்
வாசங் குழலாரு மன்னவருந் தானெழுந்தார்
சிந்தை மகிழ்ந் தெழுந்து நின்றவரைத்தான் சிவனார்
அந்திப் பிறை நுதலே அன்பினுட னின்று முதல்
நம்மிடத்திலே யிருங்கோ யென்றுரைத்தார் நாயகனார்
கொம்மை முலையாருங் குண ஜீவனுமாக
அரனார் பணிவிடையா லருகே யிருந்தனரே
பரனார் பணிவிடையால் பணிந்தங் கிருந்தனளே
நித்தந் தொழுதேற்றி நேசம் உமை தனக்கு
சித்தம் கிளந்து திருத் தோழியாக நின்றாள்
அன்பு கனம்பிகையாள் அமராபதி பெருமாள்
வானவரும் போற்ற மிக வாழ்ந்தங் கிருந்தனரே

## (வாழி)

சித்திரபுத்திரர் கதையைச் செவி குளிரத்தான் கேட்டோர்
புத்திர சம்பத்தும் பொருள் புண்ணியமுந்தான் பெறுவார்
பால்சோறும் நல்ல சகல பாக்கியமு முண்டாவார்
நால் வேத நூல்முறையே நன்றாக வாழியதே
ஈசனார் வாழி யிமையவல்லிதான் வாழி
வாசமிகுங் கங்கை முதல் மானதிகளும் வாழி
பூமாது வாழி புருஷோத்துமன் வாழி
நாமாது வாழி யிமையவர்கள்தான் வாழி
இந்திரனார் வாழி யிமையவர்கள்தான் வாழி
சந்திராதித்தர் தழைத்து மிக வாழி
ஆனை முகவன் வாழி ஆறுமுகவனார்வாழி
தென்கயிலை வாழி திருப்பாற்கடல் வாழி
இன்பமுறு பவிருசையர்க ளெல்லோருந் தான்வாழி
நந்தீசுரரவர் வாழி நற் கணங்கள் தான் வாழி
எந்த வுலகில் இருஷிகளுந்தான் வாழி
தண்டேசுரா வாழி தாரகைதான் வாழி
கொண்டல் மிக வாழி குவலையமெல்லாம் வாழி
கற்றோர் மிக வாழி கவிஞர் மிக வாழி
உற்ற கதை யீதென்று உரைத்தவர்கள் வாழி
கேட்டவர்கள் வாழி கிருபையுடனின் நோன்பை
ஈட்ட முடனோற்றவர்க ளெல்லோருந்தான் வாழி
சித்திர புத்திரனார் திருநோன்பால் பகுபதம் பெற்று
பிற்றன பிறப்பறுக்கும் பெம்மா னுமைபாகர்
நித்தம் கயிலை தனில் நீடுழிதான் வாழி
பக்தர் சிறு தொண்டர் பரமுனிவர் வாழி
இன்னோன்பு நோற்றவரும் யிக்கதைக் கேட்டோர் வாழி

பொன் மாரி பெய்து புவிலோகமு வாழி
ஏட்டி லெழுதின கதையை யெல்லோரும் நல்ல தென்று
கேட்டிருந்தபோர்கள் கிளைமுழுதும் வாழ்ந்திருப்பார்
வரதக் காலச் சமுத்திரம் போல் வாழி வாழ்ந்துதழைத்து
கேட்டிருந்த பேர்கள் கிளை முழுதும் வாழ்ந்திருப்பார்
கத்துக் கதை படித்தோர் காசினியில் வாழ்ந்திருப்பார்
உண்ணா முலையா ளுமையம்மைதன் பொருட்டால்
விண்ணோர் புகழ வந்த மேதினியில் வாழ்ந்திருந்தார்
ஆழி சூழ் பூமிதன்னில் அவனி முழுதாண்டிருப்பார்
வாழியவர்கள் வங்கிசமுந்தான் வாழி
என்று மிந்தக் கதையை யிக் கலியுகந்தனிலே
நன்றாய் படித்தோரும் நற்கதையைக் கேட்டோரும்
ஆல்போலத் தழைத்து அருகதுபோல் வேரூன்றி
மூங்கில் போலன்ன சுற்றமுகியாமல் வாழியதே
சித்திரபுத்திர நயினார் கதை முகிந்தது முற்றும்
அமராபதி சிவலோகஞ்சேர்ந்த கதை முற்றும்.

( சுபம் )

3

# கஞ்சன் வதைக் கதை

## (ஓலைச் சுவடிப் பதிப்பு)

(சிவசுப்பிரமணியபுரம்
த. பொன்னையா நாடாரிடமிருந்து
ஓலைச்சுவடி பெறப்பட்டது)

## (காப்பு)

ஆலிலை துயின்ற மாயன் அசுரர்கள் கொடுமைத் தீர்க்கக்
கோலமாங் குழவி யாகிக் கோகுலம் தன்னில் வந்து
சீலமாய் மாமன் கஞ்சன் செயலினை யழித்த காதை
பாலன் யான் வில்லிற் பாட பரப்ரமம் துணைசெய்வாரே.

## (விநாயகர் துதி)

செம்பொன் மகா மேருதனில் திட்டமாகப் பாரத்தை
சேர்ந்த வலக் கொம்பினால் வரைந்தவா – அங்கு
தேவர்க் குபகாரியாய்ப் பரந்தவா
நம்பியிந்தப் புன்சொல்லதை நாவினால் உரைப்பதற்கு
நல்மொழிகள் தந்துதவும் தாயகா – எங்கும்
நாடுங் குலசேகர விநாயகா
அண்டபிண்டம் ஈன்றருளி அரவணையிற் கண் துயிலும்
அச்சுதன் திருக்கதையை வில்லினில் – நாங்கள்
அன்புடனே பாடுமிந்தச் சொல்லினில்
கண்ட பல சொற்பிழைகள் கண்டிடினும் இச்சபை வாழ்
கற்றவரும் மற்றவரும் தேர்ந்துமே – இதை
கைக் குழந்தைச் சொல்லெனவே ஓர்ந்துமே
நன்று நன்று நன்றெனவே நல்லாசி தான்கூறி
நாடி யெமை ஆதரித்துப் பூணுமே –நாட்டில்
நலமுடனே உங்க ளருள் வேணுமே.

## (கதைப் பாடல் ஆசிரியர்)

அம்புலியைச் சேகரத்தில் அணிந்த பரன் அருளால்
ஆயர்குலம் தன்னில் வளர் அரிகதையைச் சொல்வேன்
சொல்லுவேன் திருவருளை உன்னி நெஞ்சிற் பதித்து
சிறப்புடன் வலங்கைகுலம் தன்னிலே உதித்த
அகத்தீசர் புரம்வளரும் குமாரசுவாமி நாடார்
அவர்புதல்வன் நா னாறுமுகப்பெருமா ளிந்த
கொல்ல மாயிரதத்து நூற்று ஒன்பதிலே மேடம்
கூறுந்தெய்தி எட்டில்வெள்ளி வாரத்தில் துடங்கி
கூறுங் கிட்டிணன் கதையிற் குற்ற மிருந்தாலும்

குணமுடனே பெரியோரும் குரவோரும் பொறுப்பீர்
சொல்லரிய ஆதித்தன்முன் மின்மினி போலாகச்
சோதியாம் ஸ்ரீகிட்டிணன் கதை யுரைப்பேன் கேளீர்

**(போஜராஜனுக்கு இரண்டு குழந்தைகள் உதித்தல்)**

அம்புலியின் வங்கிசத்தில் அவதரித்த போஜன்
அம்புவியை ஆளரசர் அல்லோர்க்கும் மேலாய்
நீதி வழுவாது நாலெட் டறமுங் குறையாது
நீணிலத்தில் வடமதுராபுரியதனை யாண்டு
இருக்க உக்கிரச்சேனனுடன் தேவகனெனவும்
இரண்டு பிள்ளைக ளுதிக்க ராஜன் மனம் மெய்ச்சி

**(உக்கிரச்சேனன் மணமுடித்தலும் கஞ்சன் பிறத்தலும்)**

பலதொழிலும் பயிற்றுவித்து மணமதுவும் முடித்து
பால னுக்கரச்சேனனுக்கு முடியதுவும் சூட்டி
முடிசூட்டி வைத்து மன்னன் திருநாட்டை அடைய
முகனையுடன் உக்கிரச்சேனன் வடமதுராபுரியை
ஆண்டிருக்கும் நாளையிலே மனைவி கெர்ப்பமுற்று
ஆண்குழந்தை யொன்றுபெற்றாள் அவன் தனக்குத் தந்தை
கஞ்சனென்று நாமமிட்டு களிப்புடனே வளர்க்க

**(கஞ்சன் தீயகுணத்தாரோடு நட்பு கொண்டு வளருதல்)**

காவலனார் குழந்தை யது கடின மனத்தோடு
கூடினதாய் குழந்தைமுதல் துஷ்டரோடு பழகி
கூறவொண்ணாக் கொடுந்தொழில்கள் நடத்திவரும் நாளில்
சராசந்தன் சாலுவனும் தந்தவக்கிரனும்
தனக்குத் துணையாகச் சிசு பாலனையும் கூட்டி
மகததேசத் தரசன் மக்கள் இருவரையும் மணந்து
மனம்போன போக்காக நடந்துவரும் நாளில்

**(தேவகியை எடுத்து வளர்த்தலும் வசுதேவனை மணம் செய்வித்தலும்)**

இவனுக்குப்பின் எட்டுப்பிள்ளை இருந்தும் பெண்ணொன்றில்லா
ஏக்கமதால் தேவகனின் மகள் தனையே எடுத்து
தேவகியாளென நாமம் இட்டு அன்பாய் வளர்க்க
தேன்மொழிக்குக் கலியாணப் பருவம்வரத் தகப்பன்
இவளழகுக் கேற்ற வரன் யாரென விளம்ப
இந்துவிற் சிறந்த மந்திரி யொருவன் சொல்வான்
சாருகதேசத் தலைவன் சூரசேனராஜன்
தன்புதல்வன் வசுதேவன் தனக்கு நிகராக

அம்புவியில் அழகுடைய ஆடவரைக் காணேன்
அரசனே என வுரைக்க உக்கிரச்சேனனும்
தேகம் புளகித்து வசுதேவரை யழைத்து
தேன்மொழியை மணமுடித்துக் கொடுத்துச் சிறீதனமாய்
ஆயிரத் தெண்ணூறு ரதம் நானூறு யானை
அசுவம் பதினாயிரத்தோ டிருநூறு தோழி
இன்னும்பல வரிசைகளும் ரதமீதி லேற்றி

### (தேவகியின் எட்டாவது குழந்தையால் கஞ்சன் இறப்பான் என அசிரீரி கூறுதல்)

ரதமூர்ந்து போகவென்ன கஞ்சன்மனத் தெண்ணி
ரதமோட்டி வடமதுராபுரியை வலம் வரவே
ராஜன் கஞ்சன் கேட்டிடவே ஆகாயம் தன்னில்
அசரீரியாக நின்று ஆகாய வாணி
அல்லோரும் கேட்டிடவே அறைந்திடுவாளாமே.

### (வேறு )

தேரை ஊர்ந்திடும் தீரனாம் கஞ்சனே
தேன்மொழியா முன் தங்கை யித் தேவகி
பெற்றிடும் பிள்ளை தன்னி லெட்டாம்பிள்ளை
பிறகு உன்னுயிர் மாய்த்திடும் கஞ்சனே

### (வசுதேவன் பிறக்கும் எட்டுக் குழந்தையையும் கஞ்சனிடம் ஒப்படைப்பேன் என்று கூறுதல்)

என்ற வார்த்தையைக் கேட்டந்தக் கஞ்சனும்
எரிச்சலாகவே வாள்கொண்டு வெட்டிட
எண்ணங் கொண்டவன் சாடிவரக் கண்டு
எதிரே சென்று வசுதேவன் சொல்லுவான்
எண்ணி எட்டுக் குழந்தையும் ஈவேன்நான்
என் மனைவியைக் கொல்லாதே மைத்துனா
அற்பர் செய்யும் தொழிலை நீர் செய்திட
அகுமோ வெனக் கஞ்சனும் நின்றனன்

### (எட்டாவது குழந்தையை ஒப்படைத்தால் போதும் என கஞ்சன் கூறுதல்)

நின்றிட வசு தேவருந் தேவகி
நீதியாகவே தன் நாடடைந்துதான்
மன்மதனும் ரதியெனவே கூடி
மகிழ்ந்திருக்க வோர் புத்திரனைப் பெற்றாள்

பெற்ற பிள்ளையைக் கையி லெடுத்துத்தான்
பெருமையாக வசுதேவனு மப்போ
கஞ்சன் கிட்டக் கொடுக்கக் குழந்தையின்
காந்தியைக் கண்டு சந்தோசமாகவே
மைத்துனரே நீர் இச் சிசுவைக் கொண்டு
மங்கைத் தேவகி தன்னிடம் ஈவீரே
இவனைக் கொண்டொரு கேடு மெனக்கில்லை
எட்டில் வாரவன் அல்லோ எனக்கெமன்
அவனை யானும் வதைப்பேன் நீர் போமென
ஆதரவுடன் சொல்ல வசுதேவன்

## (தேவகி மகிழ்ச்சியடைதல்)

குழந்தை தன்னை எடுத்துக் கொடுவந்து
கோதை தேவகி கையிற் கொடுத்தனன்
கொடுத்துப் பிள்ளை தனையே வளர்த்திட
கோதையும் வசு தேவனும் கூடியே
ஒன்றின் பின் னொன்றாய் ஆறு குழந்தையை
ஒண்டொடியாளும் பெற்று இருந்திட

## (நாரதர் கஞ்சனின் பழம் பிறப்புக் கூறுதல்)

கோமுகராஜன் பெற்றபெண் ரோகணி
கொடி யிடையை வசுதேவனு மப்போ
வதுவை செய்து சுகமாய் இருக்கவே
வான லோகத்திலே கீதம் பாடிடும்
நாரதர் கஞ்சன் முன்னிலையில் வந்து
நளினமாகவே ஓர் வார்த்தைச் சொல்லுவார்
உனக் கனுகூலமான வோர் காரியம்
உண்மையா மிதை உன்மனத்தே வைப்பாய்
என்னவே யது யாதென் றறிகுவாய்
ராஜன் உக்கிரச் சேனனும் வேட்டைக்கு
காட்டி லேகியே நிற்கிற வேளையில்
கன்னி நல்லாளும் பூத்து முழுகிட
மன்னவ னன்று வேட்டைக்குச் சென்றவன்
மறு நாளும் வரவில்லை அப்போது
கெந்தருவரிலே தரும னென்போன்
கிளி மொழியின் மேல் மோகங்கொண் டுக்கிரச்
சேனன் போலாகிக் கன்னியைக் கூடிட
சேயிழையும் அறிந்து சபித்தனள்
சாப மேற்றுமே கெந்தருவன் போனான்

சதிருடன் முன்னே தேவர் குழாத்துடன்
போர்புரிந் துயிர் நீத்த காலநேமி
பூதலத் துள்ளே நீயாய் பிறந்தனன்
ஆதலால் உங்களுக்கும் சுரருக்கும்
அனர்த்தம் எப்போதும் என்று உரைத்துமே
உன் தங்கைபெற்றப் பிள்ளையின் கையினால்
உயிரிழக்க வருமெனச் சொல்லியே

**(உக்கிரசேனன், வாசுதேவன்,தேவகி ஆகிய மூவரையும் சிறையில் அடைத்தல்)**

நாரத முனி போகவே கஞ்சனும்
நமக்குத் தாய்தந்தை பந்து தங்கை பகை
அவள் வயிற்றில் உதிக்கும் சிசுவதும்
ஆச்சரியம் நமக்குப் பகையாச்சே
என்று கோபத்தால் சென்றவன் தங்கையிடம்
இருந்த ஆறு குழந்தையையுங் கொன்றான்
கொன்றதும் போதாதென்று கால் கைகளில்
கொடியிடைக்கும் வசுதேவர்க்கும் உக்ரச்
சேனனுக்கும் கொடிய விலங்கிட்டு
சேஷம் ஆரும் இருக்கிறாரோ வென்ன
பார்த்திட வசுதேவரும் கண் சைகை
பண்ணி ரோகணி ஆயர் மனைசென்றாள்
சென்றிட மூவரையும் பிடித்துத்தான்
திட்டெனச் சிறை மீதி லடைத்தனன்

**(தேவர்களும் பூமாதேவியும் திருமாலிடம் முறையிடல்)**

**(வேறு )**

அடைத்துவைத்து கஞ்சராஜன் அவனிதனை யாளுகையில்
அரசருடன் குடிஜனங்கள் தம்மை (அரசருடன்...)

நீதிநெறி யில்லாது நிட்டூரம் செய்துவர
நீணிலத்தில் அதர்மம் மலை போலே (நீணிலத்தில்...)

வளர்ந்திடவே பூமாது சுமைபொறுக்க மாட்டாமல்
வந்து விதி தன்னிடத்தில் ஆனாய் (வந்து...)

உருவங்கொண்டு வந்திடவே உம்பர்கள் குழாத்துடனே
உத்தமி பூமாதை வலம் வந்து (உத்தமி)

போற்றிப் பணிந்து மகிழ்ந்து பூமாதைப் பார்த்து விதி
புகலுவாராம் ஓர்வசனம் அப்போ (புகலுவாராம்...)

அம்மணி யுன் என்னமெல்லாம் அறிந்தோம் அவனிசுமை
ஆற்றாமல் வந்தா யது நம்மால் (ஆற்றாமல்...)

நீக்கமுடியாது நமைக் காத்து இடர் நீக்குகின்ற
நீலவர்ணர் தன்னிடத்தில் போவோம் (நீல...)

என்றுவிதி தன்னுடனே தேவேந்திர னாதியரும்
எழுந்து புவி மாதுடனே கூடி (எழுந்து...)

பாற்கட லருகேவந்து பச்சைமாலை தோத்தரிக்க
பாவனையாய் துயில் நீங்கி மாயன் (பாவனை...)

கமலை மார்பில்விளங்கக் கையிற் பஞ்சாயுத மிலங்க
காட்சிசெய்ய அல்லோருங் கண்டு (காட்சி...)

ஆனந்தக் கண்ணீர் சொரிய ஆடினார் அதுசமயம்
ஆன் வடிவு கொண்ட புவி மாது (ஆன்வடிவு...)

ஆண்டவனே இவ்வேளை ஆதரிக்க உம்மையன்றி
ஆருமில்லை என்னத் தொழுதேற்றி (ஆருமில்லை...)

துட்ட ராக்கதர்க ளிந்தப் பூமியெங்குமே நிறைந்து
தொல்லை பல செய்யலுற்றா ரிந்த (தொல்லை...)

அவனிச் சுமை தன்னோ டிந்த அசுரர்களையுஞ் சுமக்க
ஆகாது நீர் அழிக்க வேண்டும் (ஆகாது...)

## (திருமால் பூமாதேவிக்கு ஆறுதல் கூறுதல்)

என்னவே புலம்பிநின்ற ஏந்திழைக்கு நாரணரும்
இதமுடனே ஓர்வசனம் சொல்வார் (இதமுடனே...)

தேவகி வசுதேவர்க்குச் சிறுவனாய் யான் பிறந்து
சீக்கிரமாய் உன்பாரம் நீக்க (சீக்கிரமாய்...)

வருவே னென யாபேரும் வணங்கியவ ரூர்போக
வடபத்திரம் தன்னிற் துயில்கின்ற (வடபத்திரம்...)

## (மாயவள் அனந்தனைப் பிறக்கச் சொல்லுதல்)

மாயவள் க்ஷிராப்தியிலே மத்தியிற் சென்று அனந்தன்
மனமகிழ ஓர்மொழி யுரைப்பார் (மனமகிழ...)

தேவகி வயிற்றி லெழு மாதம் சிசுவா யிருந்து
திரும்ப ரோகணி வயிற்றில் மூன்று (திரும்ப...)

மாதந் தங்கியே பிறந்து வளர்ந்திரு வென் றுரைத்து
மாயை யிடத்தோர்மொழி யுரைப்பார் (மாயை...)

ஆயர் மனையாள சோதை அவளுக்குப் பிள்ளையாக
ஆரணங்கே நீ போகும் முன்னே (ஆரணங்கே...)

ஏழுமாதப் பிண்டத்திற்கு யாதொரு விக்கினமின்றி
இரட்சியென மாயனுரை செப்ப (இரட்சி...)

## (மாயை யசோதை வயிற்றில் கருவாதல்)

நல்லதென மாயை சென்று நாரணன் உரைத்தபடி
நலமுடைய தேவகி வயிற்றில் (நலமுடைய...)

ஏழுமாதத்துச் சிசுவை ஏந்தலாய் எடுத்துவந்து
ஏந்திழை ரோகணி உதரம் தன்னில் (ஏந்திழை...)

அடக்கிவைத்து மாயை யவள் ஆயர்பாடி தன்னில் வளர்
அசோதை கருப்பைக்குள்ளே யமர (அசோதை...)

## (பலராமன் பிறப்பும் வளர்ப்பும்)

இப்படி யிருக்க மூன்று மாதம்செல்ல ரோகணியும்
இந்துபோலோர் ஆண்குழந்தை ஈன்றாள் (இந்து...)

பிள்ளை பிறந்து விழ வாங்குள்ள பூமி தாழ்ந்திடவே
பேரவர்க்குப் பலராமன் என்ன (பேரவர்...)

தேவகி ரோகணி யிரு பேருக்கும் பிறந்ததனால்
சிசுவுக்குச் சங்கருஷண ரென்றும் (சிசு...)

இட்டத்துடனே கலப்பை ஆயுத மிருகைக் கொண்டு
இன்னும்பேர் ஹலாயுதன் எனவும் (இன்னும்...)

மூன்று நாமம் இட்டு நந்த கோபனும் குழந்தை தன்னை
மூகனையுடனே வளர்க்கும் வேளை (மூகனை...)

தக்க பருவத்திற்கு பள்ளி தன்னிலே சாந்தீபரிடம்
தனையனைப் படிக்கவைத்துக் கொஞ்ச (தனையனை...)

நாளையிற் பலவித்தையும் நன்றாகவே படித்து
நட்டஞ்செய்யும் பிரலம்பர சூரன் (நட்டஞ்...)

தன்னை வதைத்து எவ்வர்ணப் பருவமதா யிருக்கத்
தானொரு கதையுரைக்கக் கேளும் (தானொரு...)

## (பலராமன் ரேவதி திருமணம்)

ஆவர்த்திக தேசத்திற்கு இறைவன் ரேவகராஜன்
அநேக நாளாகக் குழந்தை யின்றி (அநேக...)

இருக்கவொரு பெண்பிறக்க ரேவதியென்றே யழைத்து
இஷ்டமாய் வளர்த்துவர மங்கை (இஷ்ட...)

பருவம்வர ரேவகனும் பாலகிக்குத் தக்கவரன்
பாரினிற் காணாதுவெண்ணுங் கூட்டி (பாரினிற்...)

சதுர்முகனிடத்திற்சென்று சாட்டாங்கத் தெண்டனிட்டு
சாற்றுவாராம் ரேவகனாம் ராஜன் (சாற்று...)

என்மகளுக் கேற்றவரன் எந்தவுலகிற் படைத்தீர்
என்னலும் விதிசிரித்துச் சொல்வார் (என்னலும்...)

திரேதா யுகங்கடந்து துவாபர யுகத்தி லிங்கே
சேர்ந்தனை நீ இங்கிருந்து கீழே (சேர்ந்தனை...)

பூலோகம் செல்லுதற்கு முன்னே யிந்த யுகம்பாதி
பூர்த்தியாகும் அங்குவல்லோ னான் (பூர்த்தி...)

பலராமனுக்குக் கொடும் என்னவிருபேருமாக
பாதைகூடி மண்ணுலகில் வந்து (பாதை...)

அயனுரை தவறாமல் ரேவதியைக் கூட்டிவந்து
அம்மன் ரோகணி சுதன் தனக்கே (அம்மன்...)

மணமுடிக்க வேணுமென மங்கையரைக் கூட்டிவர
மன்னன் பலராமன் கண்டீதென்ன (மன்னன்...)

உயரமெனக் கலப்பையினால் இழுத்திடவே குள்ளமாக
உம்பர்கள் சமூகம்ஆசி கூற (உம்பர்...)

மங்கல வாத்தியம் முழங்க மன்னன் பலராமனுக்கு
மாது ரேவதியை மணம் சூட்டி (மாது...)

தருமநீதி குன்றாமல் ரேவதி பலராமரும்
சந்தோஷமாய் துவாரகையி லிருந்தார் (சந்தோஷமாய்...)

## (யசோதை, நந்தகோபன் அவதாரமெடுத்தல்)
## (வேறு)

அரவரசனை மாயன் அனுப்பின பின் பாற்கடலைப் பார்த்து
ஆயர்பதி தன்னிற் பல ஆவினங்களாகி நிற்பீ ரென்றும்
அண்டர்தமை மண்ணுலகில் ஆயர்குலத்தே வுதிப்பீ ரென்றும்
அனுப்பிடவே சதுர்முகனும் அட்டவசுவின் முதல்வனான
துரோணனுடன் மனைவி தரை என்பவளையுங் கூட்டிச்
சொல்வார்

தூயவனே உலகமதைக் காத்து ரட்சை செய்யுகின்ற மாயன்
ஆயர்பாடி தன்னிலிப்போ அவதரிக்கப் போகிறபடியால்
அசோதை நந்த கோபனென அவதாரம் செயவேண்டும் நீங்கள்
என்றமொழி தவறாமல் எல்லோரும் அப்படியே ஆக

## (கிருஷ்ணன் பிறத்தல்)

எம்பெருமாள் தேவகியின் எட்டாவது குழந்தையாக
கெற்பமுற்று ஈரைந்து மாதம் முடிவான பொழுதேதான்
கெம்பீர ஆவணியில் புதன்வாரம் ரோகணியாம் நாளில்
அமரபக்கத் தட்டமியில் கௌலவம் ரிஷப லக்கிணத்தில்
அமிர்தயோகம் கூடும்வேளை தன்னி லவதாரம்செய்தார் மாயன்

## (தேவகியின் அச்சமும் கிருஷ்ணனின் ஆறுதல் மொழியும்)

மாய னவதரித்தவுடன் தாயாரும் தந்தையும் மகிழ்ந்து
மகனுடைய முகம்பார்த்து மாதாவும் ஏதுமொழி சொல்வாள்
கர்த்தனே நீர் வாரசெய்தி கஞ்சனறிந் திவ் வண்ணமாய்ச் செய்தும்
காணாதென முன்னேபெற்ற ஆறு குழந்தைகளையும் கொன்றான்
மேலுமென்ன செய்வானோ காப்பாற்ற வேண்டுமென் றிறைஞ்ச
மேலவனும் வாய்திறந்து அன்னையரைத் தேற்றியேது சொல்வான்
என்னை யெடுத்து ஆயர்மனை தன்னில்விட்டு அங்கிருக்கும் பெண்ணை
இங்கெடுத்து வாருமெனக் கேட்டு வசுதேவர் சடைவாக
உன்னை யெடுத் தெவ்விதமாய்க் கொண்டுபோவே னென்னச் சிறுபாலன்
உமதுகை யென்மேற்பட விலங்குதெறித்தோடு மெனச் சொல்ல
வசுதேவ னோடிச் சிசுதன்னைத்தொடவே விலங்கு மீள
வரட்டுமெனவே யெடுத்துப் போகவே குழந்தைப் பாதம் பட்ட
மாத்திரத்தில் வாசல்திறந் தப்புறத்தே வந்துஆயர் தங்கள்
மனைதனிலே சிசுவைவிட்டு மாயசத்தி தன்னையெடுத் தேகி
மதுரை நகரானதிலே தனது காராக்கிரகத் துள்ளே
மடமடென ஓடிவந்து மனைவி கையிலே சிசுவை ஈய
கதவுகளும் பூண்டு கைகால் தன்னிலும் விலங்குவந்து பூண
கண்டுயிவர் சந்தோஷமா யிருக்கும் வேளை காவலர்கள்

## (குழந்தைப் பிறந்த செய்தியை கஞ்சன் அறிந்து குழந்தையைக் கொல்ல முயலுதல்)

குழந்தை யழும் சப்தம்கேட்டு கொடிய கஞ்சனுக்கு உரைத்தார்கள்
கோபத்துடன் கஞ்சன்வந்து குழந்தையைக் கொடுவென உரைக்க
தேவகி யழுது அண்ணா சிசுவதுவும் ஆணல்ல பெண் என்றாள்
தீரமுடன் ஏதெனினும் கொல்லாமல் யான் விடேனெனவே
குழந்தையைப் பிடித்தடிக்க எத்தனிக்கும் வேளை யோக மாயா
குழந்தையும் அடிபடாது ஆகாயந் தன்னில்நின்று சொல்லும்

### (மாயக் குழந்தை உண்மையைச் சொல்லி மறைதல்)

கடின நெஞ்சினைப் படைத்த கஞ்சனே நான் ஆரென
நினைத்தாய்
கல்லதிலே மோதி யுயிர் நீக்க வும்மா லாமோடா மூடா
உன்னை வதை செய்யச் செகதீசன் சிறு பாலகனாய் வந்து
ஒருவீட்டில் வளருகிறான் என்னவுந்தன் தங்கைபிள்ளை
தன்னை
கொன்றனையே மாபாவி என்றுடனேதான் மறையக் கண்டு

### (கஞ்சன் உத்திரசேனன், வசுதேவன், தேவகி ஆகிய மூவரை விடுதலை செய்தல்)

கொடும்பாவி கஞ்சன் மனதேக்கமுற்று தகப்பனுடன் தங்கை
எல்லவரையுந் துதித்து பிழைபொறுப்பீர் என்னமுறை யிட்டு
இருக்கும் விலங்குங் கழற்றி ஏகுங்கள் எனவே சொல்லிக் கஞ்சன்

### (கஞ்சன் தூக்கமின்றி இருத்தல்)

தன் மனைக்குள்ளே வுறக்கமின்றி மனத் துக்கத்தோ டிருக்க
தயவுடனே ஆயர்மனை சென்ற சிறு பாலகனை நந்தன்
சந்தோசமாய் வளர்த்தி கிட்டிணன் எனவே நாமம் இட்டு
சங்கையுடனே பாலன் தனக்குப் பல பொன்பணியும் பூட்டி
ஆதரிக்கவே மதுரை நகரந்தனிலே வசிக்கும் கஞ்சன்
ஆசனத்தின் மீதிருந்து ஆலோசனைகள் பல செய்வானாம்.

### (கஞ்சன் மந்திரிகளுடன் ஆலோசனைச் செய்தல்) (வேறு)

மந்திரிமாரை வரவழைத்துக் கஞ்ச ராஜனும் – முன்னே
மாய சத்தி சொன்ன வார்த்தை யுரைத்துமே சொல்லுவான்
என்னுயிர் மீளும் வகையுரைப்பீ ரெந்தன் மந்திரி – என்ன
எழுந்துமே துன்மந்திரிகள் பலரேது சொல்லுவார்
எங்களை இப்போ தனுப்பினால் தவறியச் சிசு – எங்கு
இருந்தாலும் கொன்றுவருகிறோ மென்று வுரைத்தனர்

### (கிருஷ்ணனைக் கொல்ல கஞ்சன் பூதகியை அனுப்புதல்)

உரைத்திடக் கஞ்சனும் நீங்களிப்போது போகவேண்டாம் – அந்த
ஒண்டொடி பூதகி தன்னை யனுப்புகிறேனென்ன
பூதகியை யழைத் திப்போ பிறந்தக் குழந்தைகள் – எந்தப்
பெட்டகத்துள் ளிருந்தாலும் வதைத்துவா வென்ன
கூறிடப் பூதகி நஞ்சுப்பால் கட்டியே சென்று – பல
குழந்தைகள் தன்னை வதைத்து ஆயர்பாடி தன்னில்

## (கிருஷ்ணன் பூதகியைக் கொல்லுதல்)

வந்து கிருட்டிணனைக் கொல்ல வெண்ணியே மங்கை - ஆயர்
வனிதை யசோதையின் நட்புடன் வீட்டிலே வந்து
சிசுவை எடுத்து அமர்த்திடும் பாவனையாக - வைத்து
சீக்கிரமாய் தனம் தன்னைக் கொடுத்திடப் பாலன்
பாலுடன் பூதகி தன்னுயிர் தன்னையும் உண்டு - சிறு
பச்சைக் குழந்தை யழுதிடக் கண்டந்தத் தாயும்
ஓடி மகனை யெடுத்திடப் பூதகி மாண்டு - அங்கு
உயர்ந்தப் பருவதம் போல கிடக்குமப் பேயை
நந்தகோபன்முதல் ஆயர் பலருமாய்க் கூடி - அந்த
நாரியை வெட்டியே துண்டுதுண்டாக்கி எரித்தார்

## (சடகா சூரனைக் கஞ்சன் ஏவுதல்)

எரித்துப் பதனமாய் பாலனைக் காருவெனவே - நந்தன்
ஏற்பாடு செய்து இருக்கிற நாளிலே ஓர்நாள்
பூதகி மாண்டதைக் கேட்டுச் சகடாசுரனை - கஞ்சன்
போயந்தப் பாலனைக் கொன்றுவா வென்னவே சொல்ல
ஆகட்டு மென்னப் புறப்பட்டு நந்தகோபன்றான் - வந்து

## (சடகாசூரனை கிருஷ்ணன் அழித்தல்)

ஆகாரம் உண்கிற வேளையில் கிட்டிணன் தன்னை
கொல்ல வேண்டுமென் றருகில் வர அக்குழந்தை - கண்டு
கோபித்துக் காலால் உதைத்து அவனையும் கொன்று
மேலிருந் தேறி யழுகிற சப்தத்தைக் கேட்டு - ஓடி
மெல்லி யசோதை எடுக்க அசுரனும் மாண்டு
இருக்கவே நந்தகோபன் கண்டு ஆட்களைக் கொண்டு - வந்து
எடுத்து எரித்திட்டு மகனை வளர்க்கிற நேரம்

## (கஞ்சன் அனுப்பிய துரணாவர்த்தனெனும் அரக்கனை அழித்தல்)

ஒருநாள் யசோதை கிருட்டிணனை நீராலாட்டி - கையில்
ஒண்டொடியாளு மெடுக்கக் கனந்தோன்றியதால்
பூமியி லிட்டு இருக்கிற நேரந்தனிலே - கஞ்சன்
போக வனுப்பிய துரணாவர்த்த னெனும் சூரன்
காற்றுருவமாக வந்து குழந்தையைக் கெளவி - கொண்டு
ககனத்திற் செல்கிற வேளையிற் கண்ணபிரானின்
பாரம் பொறுக்காது கீழ்விடக் கண்டந்தக் கண்ணன் - கெட்டி
பாதகன் தன்னை யழுத்திப் பிடித்திடவேதான்
பாரம் பொறுக்காது கீழேவிழுந்து மடியப் - பாலன்
பட்டவன் மார்பினில் ஏறி யிருந்திடக் கண்டு

### (கிருஷ்ணனின் வாயினுள் உலகம் தெரிதல்)

அம்மை யப்பருடன் பந்துக்கள் யாவருங் கூடி – தேடி
அரவணைச் செல்வனைக் கண்டு எடுத்துக் கொடுபோய்
அன்னை யசோதை குளிப்பித் திருக்கிற நேரம் – பாலன்
ஆவெனக் கொட்டாவி இட்டிட வாயினிடத்தே
அட்ட குலாசலம் அட்டதிக்குப் பாலர் யானை – வரும்
ஆதித்தனோடு நவகோளும் அண்ட பிண்டமும்
சர்வமும் தோன்றிடத் தாய் கண்டு சந்தோசம் கொள்ள – மாய்கை
தன்னை விடுத்துமே மாயனவள் மனம் மாற்றி

### (குக்குடா சூரனை அழித்தல்)

இருக்க மகனெனப் போற்றி வளர்த்திடும் நாளில் – ஒரு
ராக்கதன் கோழி யுருவுடன் வந்திடக் கண்டு
குக்குடா சூரனை மாயனரைக் கணந் தன்னில் – கையால்
குத்தி யுயிர் நீத்துப் பாலுண்டிருக்கிற வேளை

### (கிருஷ்ணன் வெண்ணை திருடலும் இடைச்சியர் யசோதையிடம் புகார் சொல்லுதலும்)

ஆயர் மனைதனில் பாலுடனே தயிர் வெண்ணெய் – மாயன்
அகப்படு மட்டும் எடுத்துக் குடித்து விடுவான்
இப்படியே பல நாளுங் குடித்து வரவே – இல்லில்
இருக்கும் இடைச்சியர் எல்லோரும் ஒன்றுபோற் கூடி
அசோதை யிடத்திலே வந்து பராதி யுரைக்க – அவள்
ஆகட்டும் நீங்கள் கையோடே பிடித்து வாருங்கள்
என்னாளும் கோபிகள் எல்லோரும் காத்துஇருக்க – பாலன்
எந்நாளும் உண்பது போலவே உண்டிட்டுப் போனான்
ஆனாலும் நாமள் அசோதைக்குச் சொல்லுவோ மென்ன – கூடி

### (இடைச்சியரிடம் யசோதைக் கோபப்படுதல்)

அல்லோரும் வந்து மொழிந்திடக் கேட்டு அசோதை
வெகு நாளாய் புத்திரப் பேறின்றியே இருந்திட்டு – இப்போ
விதியின் கிருபையினாலே இப் பாலனைப் பெற்றேன்
பெற்ற துங்களுக்கு மன அல்லலுண்டடி மெத்த – நீங்கள்
பேசவேண்டாம் பையல் வந்தாற் பிடித்து வாருங்கோ

### (கிருஷ்ணனின் லீலையை யசோதை அறிதல்)

என்று உரைத்திட மாதர்கள் கூடியே வந்து – கண்ணன்
எப்போ வருவா னென்றெண்ணி யிருந்திட வோர்நாள்

கண்ணன் பால் வெண்ணெயை உண்டிடக் கண்டந்தப் பெண்கள்
– வந்து
கட்டிப் பிடித்தோர் முறிக்குள்ளே அடைத்து வைத்திட்டு
யசோதைக்குச் செய்தி யுரைத்திடப் போகிறவேளை – பாலன்
அங்கே யிருந்து பாலுண்டிடக் கண்டுமே வெட்கி
மாயமதான குழந்தையென மனத் தெண்ணி – ஆயர்
மாதர்கள் கூடி மலங்கி யிருக்கிற நேரம்
அசோதை யொருநாள் தயிர்க்கடையும்வேளை தன்னிற் –பாலன்
அம்மா பசிக்கு தெனக்குப் பால் ஈயெனச் சொல
கேட்டு அசோதை மகிழ்ந்து பாலூட்டுற நேரம் – கீரம்
கிளம்ப இறக்கிட வேண்டுமென் றெண்ணி யசோதை
போய்விட்டு வாரதற் குள்ளே கிருட்டிணன் றானும் – கல்லை
போட்டுத் தயிர்ப் பாண்டம் தன்னை வுடைத்து விரைவாய்
சென்று ஒரு முறி தன்னிலே நின்றுமே மாயன் – உரல்
சேர நிறுத்தியே வெண்ணெய் தனை வாரி யுண்டு
குரங்குக்கும் ஈந்து இருக்கிற நேரந்தனிலே –ஆயர்
கொடியிடையாளாம் அசோதை வந்து கண்டு கொண்டாள்.

## (கிருஷ்ணனை யசோதை அடிக்க விரட்டுதலும் ததிபாண்டர் முக்தி பெறுதலும்)

## (வேறு)

கண்டபோது கிருட்டிணனும்– பயந்தவன் போல்
கண்களில் நீர் சோர வழுது
கால் விரவதாக வோடி சாலருகிலே யிருக்கும்
ததிபாண்டன் முன்னிலை வந்தார்
வந்திடத் ததிபாண்டன் கண்டு – கிருட்டிணனை
வாழ்த்தி யிரு கையாற் றொழுது
வாருமையா யோகிகட்கும் வானவர்க்கும் காணரிய
வண்ணமுடை பாதார விந்தம்
கண்டதும் துயரம் விண்டேனே –கமலக்கண்ணன்
காட்சி காணக் கண்ணுமில்லையே
கண்மணி யினி யான்பெறும் புண்ணியங்க ளேதுமில்லை
கமல மலர்ப் பாதச் சேவையே
என்னவே கிருட்டிணன்றானும் – ததிபாண்டனை
இன்பமுட னேபணிந்தவன்
என்தாய் யசோதையவள் கெம்பீரமாய் வெருட்டி
வம்புசெய்யவே வருகிறாள்
உம்மிடம் இருக்குஞ் சாலுக்குள் –எந்தனைவைத்து
உரிமையுடன் காப்பீரே யாகில்
உத்தமனே நீருரைத்த சொற் றவறா துந்தமக்கு

நற்பதம் அளிப்ப னென்னவே
சொல்லைநம்பிச் சாலுக்குள்ளாகத் -ததிபாண்டனும்
சுந்தரன் கிருட்டிணன் றன்னை
சற்றுந் தெரியாதபடி சுற்றிச் சாலை மூடிவைத்து
பற்றியதன் மேலே இருந்தான்
இந்திட அசோதை கண்ணுற்று-பாண்டு ரங்கரே
என் மகன் கிருட்டிண னெங்கே
என்னலும் சினந்தவர்போல் நன்னயமாய்த் ததிபாண்டர்
என் புட்டத் திருக்கிறா னென்றார்
என்றிடக் கிருதென்றண்ணியே - அசோதை போக
இரு விழி யில்லாத ரங்கனும்
எம்பெருமான் தன்னிடத்தில் பண்புட னிருவிழியும்
நண்புடனே பெற்றுக் கொண்டனன்
கொண்டதும் நயமில்லை யென்ன - கிருட்டிணனை
கூட்டிப் பிடித்தேது சொல்லுவான்
கோபாலனே கண்வேண்டாம் ஆவலுட னுன்பாதம்
தாவெனவே பெற்றுக் கொண்டனர்
கொண்டவுடன் புட்பகம்வர - அதிலேறியே
கோலாகலமாக ரங்கனும்

### (யசோதை, கிருஷ்ணனை உரலில் கட்டிப்போடுதலும் நளகூபன், மணிக்கிரீவன் சாபவிமோசனம் பெறுதலும்)

ஆவலுடன் சென்றிடவே காவலன் கிருட்டிணனும்
தாயிடத்தில் வந்து சேர்ந்தனன்
சேர்ந்திட லகுவாய்ப் பிடித்து - அசோதையவள்
திட்டென உரலிற் கட்டியே
சீறியே அடிக்கவர பாறியே ஸ்ரீகிட்டிணன்
மாறிப் புறக்கடை வழியாய்
உரலையும் இழுத்து மருதின் - சந்தின்வழியே
ஓட மரு தப்புறம் வீழ
உத்தமன் குபேரனவன் பெற்றவன் நளகூபரன்
மற்றவனும் மணிக் கீரிவன்
என்னுமிரு பேரும் மருதாய் - நாரதமுனி
ஏற்படுத்தும் சாபவசத்தால்
இருந்தவர்கள் கிருட்டிணன் வருந்தியோடும் பாதம்பட
அருந் தவசீலராக வந்தார்

### (ஆயர்கள் யமுனைக்கரையில் வீடுகட்டி வாழுதல்)

மரமுறிந்த ஓசைகேட்டதும் -ஆயவர்கள் வந்து
மாயமிகு ஏதோ வெனவே

மதிகேடாய் இங்கிருந்தால் சதிவந்து சூழுமென
அதிவேமாக நடந்து
யமுனை நதிப் பாங்கரிலுள்ள – பிருந்தாவன
எல்லையிலே வந்து வீடிட்டு
எல்லவரும் அங்கிருக்க நல்லதெனக் கோன்களுடன்
வல்ல ராம கிட்டிணர்களும்

### (கஞ்சன் அனுப்பிய பகனோடகா சூரனைக் கிருஷ்ணன் அழித்தல்)

கன்றுமேய்த்து வாரவேளையில் – கஞ்சன்விட்ட
கசடர் பகனோடகா சூரன்
கட்டுடனோர் கொக்காயும் மட்டுடைய கன்றாயும்
செட்டுடனே கூடியிருந்து
கன்றுரு வெடுத்த அசுரன் – துள்ளியாடிக்
காதலுட னோடி வரவே
கண்டு கிட்டிணபகவான் அண்டர்தொழவே விளாவில்
செண்டெனவே தூக்கியெறிந்தார்
எறிய வசுர னுயிர்விட – பகாசூரனும்
எடுத்துக் கிட்டிணனை விழுங்க
எவ்வுலகு மெகொதிக்க செவ்வையாய்க் கிட்டிணன் பண்ண
கௌவையுடனே அசுரனும்
கிட்டிணனைக் கக்கிபிடவே –கீழே குதித்து
கிழித்தனரே மூக்கைப்பிடித்து
கிழிக்க மறுநா ளசுரன் பழிக்கஞ்சாப் பாம்பாக வர
பழிச்சென மடித்தார் பகவான்.

### (இந்திரன் கல்மழை பெய்வித்தலும் கிருஷ்ணன் மக்களைக் காத்தலும்) (வேறு)

மடித் தவரு மிருக்க – தை மதியில்
மானிடவர் கூடி
மகிழ்ச்சியுடன் கோக்கள் பாலனத்திற்காக
மாக மீதிற் சுரர்கோன் பூசைச் செய்தலை
மாற்றிச் சிறீகிட்டிணன் – கோவர்த்தன
மலையினிற் கூட்டி வைத்து
இந்திரர்க்கே பூசை – யில்லாது
இளங் குழந்தைக் கிட்டிணன்
இட்டமுடன் பெண்கள் எல்லோரையுங் கொண்டு
இந்த மலையினிற் செய்யச் சுரர்கோனும்
என்று மில்லாக்கோபம் – உண்டாகியே
ஏழுமே கந்தனையும்

அழைத்துடன் கல்மழையாய் – நீங்கள் பெய்து
அரைச்சணம் தன்னி லந்த
ஆயர்கூட்டத்துடன் ஆண்களையுங் கொன்று
அப்புறம் செல்வீர் எனவே மேகங்களும்
ஆகட்டென்றே கூடி –கல்மழையாய்
ஆயர்கள்மேல் விழவே
ஆயர்கள் தத்தளிக்க –குழந்தையும்
ஆனந்தமா யோடி
அங்கொரு சுண்டு விரல்கொண்டு அம்மலை
ஆகாசம் மீதிலே ஏற்றிக் குடையாக
அப்போ பிடித்திடவே –ஆயர்களும்
ஆண்களும் உட்சேர
அமரர்க் கதிபதியும் –மெய்யறிவு
அன்புடனே தோன்றி
அரவணைச் செல்வனே அறிவு குறைவினால்
ஆங்காரங் கொண்டுநான் இக்குறையைச் செய்தேன்
அரியே பொறுப்பீரென –இந்திரனும்
அடியினில் வீழ்ந் தெழுந்து
போகச் சிறீகிட்டிணன் –இல்லில் வந்து
பூரித்து ஆயருடன்

## (காளியனைக் கிருஷ்ணன் வதைத்தல்)

போசன முண்டு மறுநா ளதிகாலை
பிள்ளைகள் கூடவரக் கன்றுகள் கொண்டு
பின்னும் முன்னாய் நடந்து –காளின்னியாம்
என்னும் மடுவருகே
காளியன் தன்னுடைய –விஷத்தினால்
கன்றுமேய்த்த ஆயரில்
கட்டழகருடைய அஞ்சாறு பிள்ளைகள்
காயஞ்சோர்ந்து விழக் கண்டுமே கிட்டிணன்
காளியன் ஏவலினால் – வந்தவினை
கடுகென மாய்க்க வேணும்
என்றெண்ணி மாயவனும் – மடு
அருகாக நின்ற கடம்பில்
ஏறியே பொய்கை நடுவே குதித்திட
எங்கெங்கும் வெள்ளம் வளிந்தே பரந்திட
எரியெனக் காளியனும் – கோபித்தவன்
எழுந்து கிருட்டிணனை
கடித்து மேலெங்குஞ் சுற்றி – முறுக்கிடக்
கண்டு ஆயர் சிறுவர்
கட்டுட னோடியே தாய் தந்தைக்குச்சொல்ல

கடிதாக வந்தவர் பார்த் தனுதாபமாய்
கலங்கி யசோதையம்மை –உயிர்விடக்
காத்திருக்கும் வேளை
மங்கையாம் ரோகணியும் –அசோதாய்
மலங்க வேண்டாங் குழந்தை
மட்டுடன் செய்கிற வேடிக்கையை நீங்கள்
மாறிப் பார்த்தா னந்திப்பீரென் றுரைத்திட
மார்க்கமாய்ப் பார்த்திருந்தார் – அவ்வேளையில்
மாயவன் என்ன செய்தார்
தேகம் பெருகச்செய்ய – காளியன்றன்
தேகத் தெலும் பொடியச்
செய்யவே காளியனும் பெருமூச்சிட்டு
சிறீகிட்டிணன்றனை விட்டிடவே யவர்
தேறி வாலைப்பிடித்து –ஆயிரம்
சிரசிலும் காலைவைத்து
திரு நடனஞ்செய்திட – காளியனும்
சிரசு நடுக்குறவே
சிறீகிட்டிணா கிட்டிணாவென் றோலமிட
செய்யிழை நாகஸ்ரீகள் தாலிப் பிச்சை
ஸ்ரீகிட்டிணா தாவெனக் – காளியனை
சிட்சியா தோட்டி மாயன்
கரைதனிலே வரவே – அசோதை
களித்துடனே மகனை
கண்டே கனியே ரசமே யென்றெடுத்து
கட்டி யணைத்து மனைதனிற் சென்றவர்
காட்சியுட னிருக்க – கிட்டிணனும்
கட்டுடன் ஏதுசெய்தார்.

## (கிருஷ்ணன் ஆயர் பெண்களின் ஆடையை ஒளித்து வைத்தலும் ஆடை வழங்கலும்)

## (வேறு)

ஆயர் மாதர் பலர் கூடிய முனைநீர் ஆடவே எண்ணங் கொண்டு
அல்லோரும் வந்தவர் ஆடை களைந்து அப்பக்கந்தனிலே வைத்து
நீராடி மாதர்கள் கூடிவரும்முன்னே நீலவர்ணன் கிட்டிணன்
நேரிழைமார்களின் ஆடையை வாரியே நீண் டங்கு நின்ற புன்னை
மரத்தினில் தூக்கியே மாயவன் தானும் மறைந் திருக்கும் வேளை
மடந்தையர் கூடி நீராடிக் கரையேறி மண்ணினி லாடை தன்னை
காணமலே பல பக்கங்களும் பார்த்து கன்னியர் சோர்ந்து நிற்க
காரிகையா ளொருதி புன்னை மேலாடை தன்னையும் கண்ணனையும்

கண்டு எல்லோரும் துகிலினைக் கேட்டிட கண்ணன் நீங்கள் கூடி
கையுயரத் தூக்கியே தொழுவீராகில் கன்னியரே துகிலை
தாரேனெனப் பெண்கள் அப்படியே செய்ய சந்தோசமா யிறங்கி
தையலர்க் கேற்ற புடவை யளித்துமே தாமோதர னிருந்தார்

## (சாகரவேந்தனிடமிருந்து நந்தகோபனைக் கிருஷ்ணன் மீட்டல்)

இருக்கவொரு தினம் நந்தகோபன் ஏகாதசி விரதமிருக்க
எண்ணி உதயத்திலே ஸ்நானம் செய்திட யமுனை நதியில்
வந்து
நீராடும் வேளையில் நந்தனைச் சாகர வேந்தன் தூதர்பிடித்து
நிச்சயமாகக் கொண்டு போகிறா ரென்னவே நீராடச் சென்ற ஆயர்
அசோதைக் குரைத்திடவே கிலேசங்கொண்டு அம்மை
யழுதிடவே
அச்சுதனாகிய பாலகனும் வேலை அரசனிடஞ் சென்றிட
ஆசாரம் செய்து வருணனும் பூசித்து ஆயராம் நந்தனையும்
அச்சுதனாகிய பச்சைப் பாலனையும் அன்புடன் விட்டனராம்
விட்டிடவே நந்தகோபனும் பாலனும் வீட்டிலிருந்திடவே

## (சுதர்சனனைக் கிருஷ்ணன் வதைத்தல்)

விட்டுணு வாகிய கிட்டிணன் புல்லாங் குழலை எடுத்தூத
ஆயர் மாதர்களும் கேட்டு மாமன் மாமி ஆடவர் தங்களையும்
அறவே மறந்து கிருட்டிண சுவாமியின் அண்டையில்
வந்தமர்ந்தார்
அமர்ந்தவர் களவர் தங்கள் இல்லேகிட அச்சுத னோர் நாளில்
ஆயராம் நந்தகோபனை விழுங்கிய அரவாம் சுதர்சனனை
சரணார விந்தத்தினாலே வதைத்துமே சண்டன் பதிபோக்கி

## (சங்கசூடனைக் கிருஷ்ணன் அழித்தல்)

சங்கையாய் வீட்டின் இடத்தே இருந்திட சங்கசூடனெனுமோர்
இராக்கதன் வந்தொரு கோபிகையை எடுத்தேகப் பலராமர்
ஏகிச் சூலாயுதம் கொண்டு அடித்திட ராக்கதன் பெண்ணைவிட்டு
ஓடிடவே கண்ணன் கண் டதி வேகமாய் ஓடிவந்து கையினால்
ஓங்கி யறைந்து உயிரைக் கவர்ந்து உரிமையுடனிருக்க

## (கிருஷ்ணன் நப்பின்னையை மணஞ்செய்தல்)

பின்னும் மிதுலையில் நந்தகோபனுட மைத்துனன் கும்பனுக்கு
பெண்ணா ளொருத்தி நம்பின்னை யென்பவள் பிறந்து பருவம் வர
சாலநேமியெனும் ராக்கதன் பிள்ளைகள் ஏழுபேரும் காளையாய்
கட்டுடன் கும்பன் தொழுவினில் நின்றிடக் கண்டு கிலேசமுற்று
இந்த யெழு ரிஷபந்தனைக் கொன்றவர்க் கென் மகளை ஈவேன்

என்று பறைசாற்ற கண்ணனும் கண்டுமே ஏழு ரிஷபத்தையும்
கொன்று வெற்றிகொண்டு நம்பின்னை மங்கையை குலத்தோர் மனமகிழ
கும்பன் கலியாணம் செய்து கொடுத்திடக் குணமுடனே யிருந்தார்.

**(கஞ்சன் அனுப்பிய அரிட்டன் முதலிய அரக்கர்களைக் கிருஷ்ணன் அழித்தல்)**

**(வேறு)**

இருக்குமந்த நாளையிலே ராஜன்கஞ்சன் விட்ட
ராக்கதனாம் அரிட்டனையும் எங்க ளரி கொன்றார்
கொன்றிருக்கும் வேளையிலே பின்னுங் கஞ்சன் விட்ட
கொடிய கேசிலியோமணன் தன்னைக் கண்ணன் கொன்று
இருந்திடவே கஞ்சன் அக் குரூரை யனுப்பி
ராமகிட்டிணரோடு நந்த கோபனையும் கூட்டி
வரும்படியாய் உரைத்தசெய்தி கேட்டுஅக் குரூரர்
வந்துசெய்தி சொல்ல மூன்று பேருமாய் எழுந்து
மதுரைநகர்க் கேகுகின்ற வழியில் வண்ணானான
மதமுடைய தாருகனை வதைத்து முண்டு உடுத்து
வரும் வழியில் சுதர்மனிட்ட மாலையையு மணிந்து

**(திரிவக்கிரி என்ற பெண்ணின் கூனை நிமிர்த்தல்)**

வண்மையுடன் கஞ்சனுக்குச் சந்தனங் கொண்டேகும்
திரிவக்கிரி என்று நாமம் கொண்ட கூனி தன்னை
திருமாலும் கூன்நிமிர்த்து சந்தனமும் பறித்து
பதினாறு வயதுடையாள் போலாக்கி வைத்து

**(குவலைய பீடம் எனும் யானையைக் கொல்லுதல்)**

பச்சைமாலும் அன்று தங்கி பகலவன் உதிக்க
மல்லுயுத்தம் செய்யவேணும் என்று போறவேளை
மலைபோலே யானைவந்து செறுத்திடவே கண்டு
வழிவிடென வேவுரைக்க யானைப்பாகன் வந்து
வல்லமை யுண்டானால் தள்ளிப் போவென உரைக்க
ஆயிரம் பேரின் வெலமுடைய நல்ல யானை
ஆங்காரக் குவலையா பீடந்தனையும் கண்ணன்
அடித்தவரும் கொம்பொடித்து கொன்று சுறுக்காக

**(முஷ்டிகன், சானூரனைக் கொல்லுதல்)**

ஆனையுடன் இருந்தபேர்கள் அத்தனையும் கொன்று
கஞ்சனிடத் தொருவரும் அசைக்கொணாத வில்லை

கண்ணனெடுத்தே முறித்துப் போட்டு நிற்கும் வேளை
முஷ்டிகன் சானூர னென்னும் அண்ணன் தம்பி இருபேர்
முகுந்தனுடன் போர்பொருத வந்துநிற்கும் நேரம்
கண்ணன்பல ஏழமைகள் சொல்லியுங் கேளாது
கடுத்துவரக் கண்ணன் சானூரன் றனை யடுத்தும்
பலராமன் முஷ்டிகனோடே எதிர்த்தும் சண்டை
பலமாகச் செய்தவர்கள் இருவரையும் மடித்து
பின்னும் பல மல்லரையும் லகுவாகப் பிடித்து

## (கஞ்சனை வதை செய்துக் கிருஷ்ணன் கொல்லுதல்)

பிரபலமாய் இருக்கையிலே கஞ்சனேது சொல்வான்
துஷ்டப்பிள்ளை இருவரையும் துரத்துங்கள் படாளே
சும்மா யிருக்கின்ற ஆயர் தங்களைப் பிடித்து
கொல்லென உரைத்தமொழி கண்ணபிரான் கேட்டு
கொடிய கஞ்சன் மேற்சாடி கிரீடத்தையும் பிடுங்கி
குடுமியை எட்டிப்பிடித்து தலைகீழாய் அறைந்து
கொன்ற பின்னும் கோபம் பொறுக்காது கண்ணன் தானும்
யுத்தகளம் எங்குமே இழுத்தவர்க்கு முத்தி
ஈந்தவரும் பின்னுமவன் தம்பிமார்கள் தம்மை

## (திருமால் பாற்கடலில் பள்ளிகொள்ளுதல்)

வதைத்தவர்கள் மனைவிமக்கள் தன்னைக்கொண்டு முத்தி
வழியடைய சமஸ்காரம் செய்து மனந் தேற்றி
காராக்கிரகத் தமர்ந்த அனைவரையும் நீக்கி
கண்ண னிதாக நின்று பாரதப்போர் முடித்து
பூமிபாரம் தீர்த்துக்கண்ணன் புகழுடன் பாற் கடலில்
புண்ணியங்கள் பலபெருக பூரித் தமர்ந்தனரே.

## (விருத்தம்)

ஆயனாய் மாயன் தோன்றி அசுரர்கள் பலரைக் கொன்று
நேயமாய் பூமி பாரம் நீக்கியே மாமன் றன்னை
மாயவே செய்த காதை மறப்பின்றி படித்தோர் கேட்டோர்
ஆயனார் உலகில் வாழ்ந்து அரும்பேறு கொள்வர் தாமே.

(சுபம்)

(கதைப்பாடலை இயற்றிய புலவர் கு. ஆறுமுகப் பெருமாள் நாடார்.)

# 4

# பெருமாள் சுவாமி கதை

## (தாள் சுவடிப் பதிப்பு)

(சிவசுப்பிரமணியபுரம்
த.பொன்னையா நாடாரிடமிருந்து
தாள் சுவடி பெறப்பட்டது)

## (விநாயகர் காப்பு)

மருவணி துளசி மாலை மாயவன் அரங்கன் கண்ணன்
கருநிற வர்ணன் சீதக் கமலயோன் திருவின் நாதன்
திருவனம் தன்னிலுற்ற செய்தியைச் செப்பச் செவ்வே
ஒருமருப் புடைய வேழ உமைமகன் காப்பதாமே.

## (விஷ்ணு துதி)

சிவத்தினில் சத்தி தோன்றி தெளிவுறு சத்தி தன்பால்
உபத்திரன் வளர்ந்து நின்ற உருத்திரன் பதத்தில் வந்து
விபத்தருள் விஷ்ணு வுந்தான் வீறதால் விளையாட் டெல்லாம்
நவத்தருள் உலகம் தன்னில் நரரிடத் தியம்ப லுற்றேன்.
மகரங்க மடம் வரர்கன் நரசிங்கனுடன்
புகழ்நயனன் போற்றும்பொற் குறளோன் நிகரில்லா
மன்னனொடு மூபேரும் வாளரசன் தன்னுடனே
பின்னும் குதிரைமுகம் பேசுமே.

## (நாட்டுச் சிறப்பு)

வலிய புகழ் சேரமன்னர் குருநாடாண்ட
வளமைதனைக் கேளும் நீ ராய்ந்து கேளும்
புலியுடனே புல்வாயும் வோர் துறையில்
பொருந்தியே நீரருந்தும் புதுமைகேளீர்
கலியுகத்தில் ரண்டரையாம் வருடந்தன்னில்
கருதலர்கள் சிங்கமெனம் கரியமால்தான்
குலிசமுகத் தேவர்களும் நரரும்போற்றக்
குன்றாமல் திருவனந்தம் குறித்தாரன்றே
அல்லனைய திருமேனி கமலக் கண்ணன்
அனந்தமதில் அமர்ந்தகதை தன்னை நல்க
செல்லகொல்லம் எழுநூற்றி தொண்ணூற்றெட்டில்
சிறந்தக் கும்ப மாதமதில் தெய்தி நாலில்
நல்லபுகழ் ஆன சுக்ரவாரம் தன்னில்
நாளான மான்றலையில் நவின்ற காதல்
சொல்லவல்ல புலவோர்கள் பொறுமென கற்றோர்
ஆணையடி யென் சிரமீதில் சூட்டினேனே

## (அவையடக்கம்)

பொன்மடந்தையும் சிறக்கப் பூ மடந்தை வாழ்க
போர்மாது வீரமகள் நாமாது புகழ

நன்மடந்தை மாதுமையும் நம்பனருள் நல்க
நாயகன் குன்றாத தந்தி பாதமதைப் போற்றி
சக்கரமா லரங்கம் விட்டுத் தனி வழியதாக
தான்நடந்து திருவனந்தம் தன்மையுட னமர்ந்த
இக்கதையை யான்சிறிது புன்சொல்லினாற் சொல்ல
என்னெழுத்தும் சீர்தளையும் ஈன்றோர்கள் பொறுமே
மருவளரு மானபுகழ் வீரவளர் நாடன்
மங்காத கங்காளி தந்தருள வந்தோன்
திருவளரும் புயரூபன் அமிர்தமொழியோகன்
செந்தாமரைப்பதி சிறந்துவளர் செல்வன்
அருவளருங் குருவின் முறை மறவாதயோகன்
அருதன் அருதக்குட்டி இக்கதையைச் சொன்னேன்
பொருளுரை களறிய மந்தப் புலவோர்கள் முன்னே
புன்சொற் கதைக் கின்சொல்லினாற் பாடலிசைபெறுமே
மாசற்றசெந்தமிழில் வல்லோர்கள் முன்னே
மதியில்லான் சொன்ன சொல் எதுபோலாச்சு
ஆதித்தனைக் கண்டங்கு அலர்ந்தசெந்தாமரைமுன்
அடுக்கநின்ற கொட்டிமலர் அதுவும்சரியாமோ
சோதிபெறும் திருவிளக்கின் தன்னொளியைக் கண்டு
துய்ய வானின் மின்னினொளி தானுஞ் சரியாமோ
காதவழி யானாலும் கடந்தோடும் பேர் முன்
காலில்லா முடவனவன் தானுஞ் சரியாமோ
வெற்றி மயிலாடக்கண்டு தன்னிறகை விரித்து
வீறாக வான்கோழி நான்சரி யென்றாப்போல்
கற்றப் புலவோர்கள்முன்னே கட்டுரைத்தக் கதையை
கைக்குழந்தைச் சொல்லெனவே கற்றோர்கள் பொறுமே.

## (விருத்தம்)

திருமால் கதையைப் பார்மீதில் செப்பமுடனே பாடுதற்கு
கருமாமேகம் உருவளர்ந்து கனக்கமின்னி இடியிடித்து
பருமா வரையைப் பொதிந்தமுகில் பாரேழ்பெருகப்பெய்வது கண்
ஒருமா நிலத்தை நனையாத உற்றபனி சென்றுரைப்ப தொப்பாம்.

## (ஸ்ரீரங்கநாதன் பூஜைப் பெற்று வீற்றிருக்கும் அழகு)

## (வேறு)

திருவளரும் புயரூபன் அரிய திருமால்தான்
திருவனந்தாபுரி யமர்ந்தக் கதைபாட
அரிய திருமா லயனும் வேணி யரனாரும்
ஆனைமுகன் வேளும் வந்தஞ்சேலென் றருள்வாய்

மருவனைய திருமாதே வாலை சரசோதி
வந்திக் கதைக்கு நீ அஞ்சேலென் றருள்வாய்
கரிய திருமா லென்னும் ஶ்ரீபத்மநாபா
கமலமகள்கொழுனனே அரியநெடுமாலே
இலகு புகழ்மார்பனே இரணமுக தீரா
எத்திசையும் புகழ் கொண்ட பெருமாளே
உலகுதனை யோரடியால் அளந்தோனே
உன்கதைக்கு நீவந்து உதவி யருள்தருவாய்
கண்ணனே வெண்ணைதனையும் உண்டோனே
காலிநிரை மேய்த்தோனே கரியநிற வண்ணா
பெண்ணாகி ஆணாகி நின்ற பெருமாளே
பேருருவமாகப் பிறந்துடையோனே
எண்ணாம லிரணியனை இருபிளவு செய்த
இரணமுக சிங்கமே அமிர்த நாயகமே
பண்ணாக இக்கதையைப் பாடவருள்தருவாய்
பண்டுலகை உண்டங் கமர்ந்த பெருமாளும்
கஞ்சனை வெஞ்சமர் தனில் கொன்ற தீரா
கரியமுகில் வண்ணனே கமலமகள் கொழுனா
பஞ்சவர்க்கா யுதவி பாரதம் பொருத
பங்கயக்கண்ணனே துங்கநெடுமாலே
புள்ளிவாயின் கிளி சரவணை யமர்ந்தாய்
புகழான கெருட வாகன மீதிலேறி
உள்ளமுறவே கதையை இசைபாட வருள்வாய்
உலகுபுக ழிக்கதைக்கே யருள்தருவாய்
போரங்க ராவணன் தன்போர்முகித்து
பொற்கொடிச் சீதை சிறைமீண்ட அன்னாள்
சீரங்க மேவியே இனிதிருந் தருளி
சிந்தையுடனே பூசைக் கொண்டிருந்தாரே
பூசையுந் தெய்வாரமுங் கொண்டிருந்து
புதுமையுடனே கீர்த்தி புகழ்வளரும் நாளில்
வாசமுறு குழலார்கள் வந்துசேவிக்க
மல்லாரி சின்னம் பலதும் முழங்க
திருமதிலும் ஒளிமுடியும் அருண மண்டபமும்
திருக் கோபுரமும் சிவாலயமுமாக
அருமைபெறு சிகரமுடி மாட மாளிகையும்
அமரர் சிறையிடமீண்ட மண்டபவாசலும்
மேவு சிகரமானதொரு வர்த்தமண்டபமும்
மேவு புகழானதொரு காலமண்டபமும்
கேசி மதியானதொரு கெற்ப மண்டபத்தில்
கிருபையுடனே மாயன் இனிதிருந்தாரே

கோடி நூறாயிரம் திருவிளக்கெரிய
குங்குமம் பரிமணம் சந்தனம் வீச
நாடியே தேவர்கள் சூழ்ந்தடிவணங்க
நாராயணனும் இனிதிருந்தாரே
சித்திரமாகவே நகரிகுழல் பாட
ஸ்ரீரங்கநாதனும் இனிதிருந்தாரே
அத்திரம் சேர்விழி மாத ரிசைபாட
அழகான மணிமண்டபத் திருந்தாரே
பூமாலை வீசவே பாமாலை பாட
புகழாகத் தேவர்கள் பூசைபணி மாற
தேவர்கள் சூழவே திருநாமமோதி
ஸ்ரீரங்கம் மேவி இனிதிருந்தாரே
இனிதாகவே மாயன் இனிதாயிருக்க
இயலான மறையோர்கள் பூசித்துவரவே
நனிவேதம் நாலு முறையாக மகிழ்வாக
நகரான ஸ்ரீரங்க நாதன் மனம்மகிழ
மனம் மகிழ ரெத்னக் குடைகள் நிகழ்த்த
மங்கையர்கள் வெண்குரவை பாடி இசைபாட
கனக நவரெத்தினப் பூமாரிபொழிய
கங்கைகுல வங்கிசத்தோர்கள் முறை செய்ய
செய்துப் பல பூசையும் திருமாலின் முன்னே
சேவித்து வாரதொரு நேரமதிலேதான்

## (பூஜைமுறை பரிபோனதால் வேதியனின் புலம்பல்)

வெய்ய சில மறையவர்கள் முன்பானநம்பி
மெய்ப்பாகவே சிலபேர் தங்களில் முறிந்து
நன்றிது தீதிது என்று நினையாமல்
நாடியே மறையவர்கள் வெகுளியதனாலே
இன்றை முறை என் முறை என்றொரு மறையோன்
இனிதாகவே பூசை செய்துவரு மன்னாள்
தள்ளுண்டு ஒருகூறு பூசித்த மறையோன்
தாரரசரோடு அனியாயம துரைத்தான்
உள்ளுண்டு புறமுண்டு ஆகிலு மன்னவர்கள்
ஒரு வாரமாகவே முறை சோதியாமல்
மன்னவர்க ளென்முறை கேட்டதுவுமில்லை
வளமையாய் என்முறை நடந்ததுவு மில்லை
கன்மமிது வென்றுமே வொருகூறு நம்பி
கைமுறை மாறியே இருந் தந்த நாளில்
இன்பமுடனே யந்த ஆதி மறையோனும்
இருகூறு மொருகூறதாக நடத்த

முன்புமுறையுந் தவிர்த் தந்த மறையோனும்
மிண்டே கருமம் நடந்துவரும் நாளில்
கைமுறை நம்பிதான் செய்துவரும் நாளில்
கண்டுசலித்து மனமதுபொறாமல்
வெய்யமனது புழுங்கி வெதும்பி
மெத்தவே னப வேதியன் சித்தம் தளர்ந்து
ஐயகோ மெய்யனே ஆதிநாரணனே
அடியேனைக் காப்பது ஆரோவறியேன்
செய்யும்வகை ஏதெனவே உண்ண விதியற்று
திசைமாறி மாமறையோன் கேள்வியற்றிருந்தான்

### (விருத்தம்)

முன்முறை நடத்தும் நம்பி முறைமையைத் தவிர்க்கையாலே
கைமுறை தானும்விட்டு கருமமு மிழுந்து போர்ந்து
நன்முறை மன்னர் கேளா நாடென மனதில் நொந்து
இம்முறைக்கேது செய்வேன் என முறைவொழிந்து நின்றான்.

### (வேதியன் தவமிருத்தல்)

### (வேறு)

ஒழிந்தபூசை வேதியனும் உண வசன மில்லாமல்
ஒருவர் துணையில்லாமல் உயர்மறையோன் சடைத்து
வளிந்த சினத்துடனே மாயவன்றனை நினைத்து
மாமறையோ னவ்வனத்தில் வருந்தித் தவமிருந்தான்
தவமாகவே யிருந்து தார் மறையோன் தீ முடித்து
தஞ்ச முந்தன் தாளெனவே தார் மறையோனுந் தொழுது
புவனத்தை யோரடியதா யளந்த புண்ணியனே
பொங்கரவிற் பள்ளிகொண்ட புகழான பச்சைமாலே
ஆச்சிமனையில் வளர்ந்த அச்சுதனே பச்சைமாலே
ஆடரவிலே துயின்று அம்புவியை ஆண்டோனே
பேச்சி முலைப் பாலையுண்ட பெரிய திருமாலே
பேருருவமாக நின்ற பெருங் கருணைக்கடலே
இரணியன் மார்பதனை இருபிளவாய்ப் பிளந்து
இன்பமுள்ள சிங்கமாக இருந்தபெருமாளே
வரமுள்ள ராவணனை வாய்த்த முடிபத்தும் விழ
வல்லச் சரந்தொடுத்த வரிசைத் திருமாலே
காலி நிரைமேய்த் தூரில் கண்டவர் கொண்டாடிடவே
கஞ்சன்றனை நெஞ்சிடந்த கரியமுகில் வண்ணனே
வாலியின் மார்பைப் பிளந்து மராமர மூடுருவ யெய்து

வந்த கரதூஷணனை மடியச் சரந்தொடுத்து
கலங்கி யரக்கர்விழ கனத்தபடை நெருங்க
கதிரோனு தயமென்னும் கட்டான மாளிகையும்
இலங்கை யழிவுசெய்ய எழுகடலையு மடைத்து
ஏறிச் சரந்தொடுத்து ராச்சதரையும் வதைத்து
இந்திர செயித்தனையும் லங்காபுரிச் சேனையையும்
இறக்கச் சரந்தொடுத்த இனியதிருமாலே
மந்திரமலை கடந்து மருந்து மலையெடுக்க
வண்ண அனுமானையேவி வரவழைத்த மாலே
சந்திரரும் சூரியரும்தான் கடவாத யிலங்கை
தலமும் பூங்காவனமும் தண்டரள் மாளிகையும்
வெந்து தீ நீறாக விழ விரைந்தங் கெரிந்திடவே
மெய்ப்பட னனுமானாலே விற்பனங்கள் செய்தோனே
முன்முறை யுண்டான பூசை முகித்து நடத்திடவே
மூன்றே கருமம் நமக்கு முகித்துத்தரவும் வேணும்
என்முறையும் பூசைகளும் இசைந்து பறித்துக்கொண்டார்
இதுகாரியம் நமக்கு இசைத்து நடத்தவேணும்
உத்தமான சங்கடங்கள் உரைத்துப் பலதும் பேசி
உண்மையுடன் மாயவரை உணர்த்திப் பலகாலுந்தான்

## (வேதியன் முன் திருமால் வருதல்)

வெற்றிமறையோன் தவத்தில் விரைந்து நினைத்திடவே
விண்ணவர்கள் போற்றும் மாயன் வேதியன் தவத்தில் வந்தார்
பூதங்கள் குடையிடவே பூண்டுதெய்வார் சேவிக்கவே
பொங்குகடல் போல தெய்வப் பூவையர் குரவையிட
வேதங்க ளொலிமுழங்க மெய்கன்னிமார் கீதம்பாட
வேண்டிடுந் தெய்வார்கள் சூழ விருது குறித்துவர
சங்கொலி முழங்கிவர தாரை விருதூதிவர
சங்கையுடன் தெய்வப் பெண்கள் வெண்சாமரை வீசிவர
திங்கள் செறி நன்முகத்து தெய்வக் கன்னிமார்கள் சூழ
திருந்து முலகளந்தோன் பொருந்தும் தவத்தில் வந்தார்.

## (விருத்தம்)

சீதரன் பங்க னெங்கோன் சிலைதனை எடுத்தமாயன்
வேதமுந் தானாய் நின்று வெண்ணெய்தான் திருடியுண்டோன்
பாதமும் வருந்த மண்ணைப் பரிவுட னளந்த மாயோன்
மாதவம் செய்துநின்ற மறையவன் தவத்தில் வந்தார்.

## (வேதியன் தனக்கு ஏற்பட்ட அநீதியைக் கூறுதல்)

## (வேறு)

வந்த மாயவன் பதம் மீதினில் மறையோன் வந்து வணங்க
வரவே யுந்தன் நினைவேதென மாய னுரைசெய்ய
அந்தவேளையில் முனியானவன் அனியாயமதுரைத்தான்
ஆதிநூல் வழிமுறையானதை அடைவாய் எடுத்தாய்ந்து
உரைத்தான் முன்னே மறையோன் அதை உணர்ந்து மறையோர்க்கு
உத்த மாயவ னுரைத்தே உயர்மறையோனையும் பார்த்து
பறைந்தா னந்த தெய்வதானமும் பழநூல் வழி நடப்பும்
பண்டுபண்டுள்ள கால காலமும் பதிபூசையும் முறையும்
முதலானதோ ராதிகாலத்தில் முன்பூசையும் முறையும்
மூவராகிலும் ஏவராகிலும் முறைமாறுகள் செய்தால்
தலம் மீதினில் மறையோர் சிலர் தனமே வெகுகனமாய்
தானபூசையும் மானவேதமும் தானே நடத்தாமல்
வெகுவானதோர் தவம் மீதினிதில் மதிகேடுகள் பலதாய்
வெற்றியாகவே எத்தியே நமை மீண்டே படையடித்து
அகுதே தள்ளி முறைமாறிட அவர் பூசையும் பறித்து
ஐயகோவென வெய்யவேதியன் அனியாயம துரைத்தான்
செய்தான் செய்தவகை கண்டுறு தேசமன்னவர்க் குரைத்தேன்
திருந்தமுறை அனியாயமும் கேட்டோர்களு மில்லை
பையரவினில் விழிகண் டுயில் பச்சைமாலே யுன்பாதம்
பற்றி யெனக் கருள்தாவென பரமாபதமடைந்தேன்
அடைந்தே னுந்தனருள் தாவென அரிய தவம்புரிந்தேன்
அமலா கலைவிமலா உனக்கபயம் உனக்கபயம்
கடைந்தக் கடலமுதாகிய கண்ணா உனக் கபயம்
கஞ்சமா மலர்த் திருவானவள் கணவா உனக்கபயம்
அபயம் உனக் கபயமென அருள் மாமறையோனும்
அடரச்சில் துடரச்சில் அனியாயம துரைத்தான்

## (திருமால்அனந்தையில் முதல் பூஜை முறை தருகிறேன் எனக் கூறுதல்)

சபையாகிய தேவர்புடைசார மறை யறியா
தடுமாறின மறையோனையும் அருளேதென வமர்த்தி
அருளேபுரிந் தன்பதாகவே அரு மாமறையோர்க்கு
ஆனவாறுகள் வேதநீதிகள் அருள் மாயவனுரைத்தார்
வருமாறுகள் தவமேபெற வைகுண்ட பதமடைந்தோர்
வண்மை பூதலவாழ் மூர்த்தியே வந்தாலெனப் புரிந்தேன்
புரிந்தேன் ஸ்ரீரங்கம்விட்டு மறுபூமியிற்போக
போறேன் பிறகே வாவென புகழ் மாயவ னுரைத்தார்

திருந்தச் சிலதென்பூமியில் செலவேணு மிப்பொருட்டால்
சென்றால் திருவனந்தபுரம் திருமுன்பது வுனக்கே
உனக்கே முன்பு தருவோம் பதி உறைந்தாலென வருளி
உற்ற மாயவனுரைத்தே உயர்மறையோனையு மனுப்பி
வனத்தே நின்ற பதியானதோர் வளர் ஶ்ரீரங்கந்தனிலே
வளமாய் வரக்கண்டே மறையவர்கள் பூசைபுரிய
தனிமாயவன் பதிபுக்கியே சகியாநெடுமாலும்
தானபூசையும் மான வேதமுந்தானே கொள்ளாமல்
இனிநானொரு மறுபூமியில் போறேனென இசைத்து
இலங்குந் திருநெடுமாலவர் இயல்வழி கொண்டார்

## (திருமால் அனந்தை நகருக்குப் புறப்படுதல்)

## (விருத்தம்)

அறிவுட னிருந்த மாயன் அரங்கத்திலமர்ந்த நாதன்
வெறியுடன் மறையோர் தங்கள் வேற்றுமைசெய்து தம்மால்
முறிவுடன் வேறுகூறாய் முன்முறை தவிர்க்கையாலே
செறிவுட னரங்கம்விட்டு தெட்சணா புவியிற் போர்ந்தார்.

## (வேறு)

தெட்சணாபூமி தன்னிலேபோகவே
தேசமெங்குந் திருமுறையாகவே
பக்குவஞ் சில மன்னர்க்கருளியே
பண்டு பண்டுள்ள காரியங்கள் செய்ப
செப்பமான திருவரங்கந்தன்னில்
செய்யும் பூசையுந் தா னழியாமலே
எப்போதும் போல நீங்களிருமென
இசைந்து தானத்தவர்க்கு மருளியே
மன்னுநீதி மலைநாடு தன்னிலே
மாயவன் பதிதா னெங்கும் வேறில்லை
புண்ணிய தலந் தென்பூமி நாட்டிலே
போறேன் போறேன் அனந்தாபுரத்திலே

## (மறையோன்,கேத்திரபாலன், சங்கிலிபூதம், ஈஸ்வரபாலன் உடன் செல்லுதல்)

என்று சீரங்கத்தார்க்கு மருள்செய்து
இன்பமாகத் தவமறையோனையும்
நன்று நன்று நீ என்பிறகே வந்தால்
நாட்டிலுள்ள திருமுன் புனக்கென்ன
கன்றுந் தாயுங் கடைக்காலும்போலவே

கானா மாமறையோனையுங் கூட்டியே
மன்றில் நல்லதோர் சீரங்கந்தான்விட்டு
வன்மையான குல பூதஞ் சூழவே
பூதா பூதம் குடைகள் விரிக்கவே
பொன்னின் மாதர் கவரிகள் வீசவே
நாத வேதங்கள் கீதமொலித்திட
நல்ல தெய்வமாதர் குரவைபாட
கோத்திரமுள்ள பூதப் பிசாசுடன்
கோடிப்பூதங்கள் கைவிரித்தாடிட
கேத்திரப்பாலன்_தானும் பின்னேவர
கெம்பி ஈஸ்வரபாலனும் பின்வர
அங் கிலங்கிய கீதமொலித்திட
ஆனதேவர் களாதி செயமென
சங்கிலிப்பூதம் தானும் பின்னேவர
தாகமான பெரும்பூதம் கைகொட்ட

## (திருவானைக் காவு அரனை அனைவரும் வணங்குதல்)

செங்கண்மால் பாதம் நோக நடந்துதான்
திருவானைக் காவானதில் வந்தனர்
வந்துதானுந் திருவானைக் காவிலே
வாசமாமுனி பூசித்தத் தானத்தை
பண்ணான சுவேத முனிவன்_மேல்
பட்டுருவிய மாமரந் தானுமே
வெண்ணாவலதாக வளர்ந்ததும்
வேத மாமுனி பூசித்திருந்ததும்
புண்டரீகம் வாழ்கின்றதோர் பொய்கையும்
பொற்கருணை யென்ற பதியானதும்
அண்டர் மாமுனி வந்து தொழுததும்
ஆனபொற்பதம் தன்னவன் தன்னோடே
மாவலிவாணன் மாறிப்பிறந்ததும்
வண்ணைநவ்வல் பதியது தன்னிலே
ஆலியும் பலநூலும் சிலந்தியும்
ஆவலோடு அவர் பூசித்தங்ஙனே
ஒயிலாக இருவரும் கூடியே
உம்பர்நாயகன் பொற்பதம் போற்றியே
பயிலான அரன்பதம் பெற்றதும்
பண்டுபோற் கயிலாசத்திற் சென்றதும்
திருநீற்றுச் சோழன் வந்து பிறந்ததும்
திரு மாமணிமண்டபம் கண்டதும்
வரம் மாறிய ராவணன் தன்னையே

வதைத்ததிலும் பிரமன் விடாமலே
ராம ராம அவதாரந்தன்னிலே
லிங்கமாம் பிரதிஷ்டைகள் செய்ததும்
பூரணக் கெதியென்னும் மனுமுறை
புண்ணியதல மீதென்றுகண்டுதான்
திருவானைக் காவானதி லீசரை
சென்றுமால் நெடுமால் தொழுதங்ஙனே
வருமாலென ஈசனருள்செய்ய
வந்தோ மந்த தெட்சணாபூமியில்
போறோம் போறோ மனந்தாபுரத்திலே
புண்ணியோனே புரம்மூன்றெரித்தவா
ஆறுசெஞ்சடை சூடிய ஐயனே
அத்தனே நல்லமுத்தனே யன்பதாய்
வீறதாக விடைதந்தருளென்ன
வேணிநாதனைப் போற்றிநின்றார் மாயன்
ஏறிலேறும் பரனாரு மப்போது
இன்பமாக விடையுங்கொடுத்தனர்

## (திருமால் மற்றும் பூத கணங்கள் திருவையாறு வருதல்)

வேண்டி மாயன் விடைகொண்டு போகவே
மிக்க தேவர்கள் சேவித்து பின்வர
கூண்டமாயவன் தெய்வப்பெரும்படை
குஞ்சப்பாவைகள் வீசுங்குறப்பூதம்
காளிகூளி கணங்களும் சேவிக்க
காளிமாபூதம் கைதட்டிப் பின்வர
ஆழிதன்னை அடைத்த பெருமாள்தான்
அம்புவியையோர் அடியா லளந்தவர்
தாடகை தன்னை வீழக் கரந்தொட்டோன்
சக்கராயுதந்தன்னைத் தரித்தவர்
கூடமாபூதம் சேவித்துப் பின்வர
கொற்றமான திருவையாறு வந்தனர்

## (திருமால் கூட்டத்தார் சீகாளியன்பதி வருதல்)

## (விருத்தம்)

திருவையாறுதனில் வந்து தெய்வமா முனிவர்போற்ற
அருவமாய் நின்றசோதி அடியிணைக்கண்டு போற்ற
மருவணி துளசிமாலை மயாவன் சீதைநாதன்
தெரிவைய ரிசைகள்பாட சீகாளியன்பதியில் வந்தார்.

## (சீகாளியன்பதி மக்கள் திருமாலை வரவேற்றல்)

## (வேறு)

வந்தார் மாயவர் வந்தாரென்பார்
வண்ணத்தெருக்களை யலங்கரிப்பார்
செந்தாமரை மாது லட்சுமியின்
தெய்வப்பெருமாளும் வந்தாரென்பார்
குந்தாதேவி தன் மக்களாலே
கொடிய நூற்றுவர் தன்னைவென்றோன்
கொந்தார் குழலார்கள் கண்காண
கூண்டங் கினிதாக வந்தாரென்பார்
சன்னன் தனையன்று சூறைகொண்டு
கடியபடை வல்லோரைச் செயித்து
துன்னும் துரோணாச்சாரிதனையும்
துய்யசிறுவீட்டு மன்றனையும்
செந்நெல்விளைகின்ற குருநாட்டை
சிறந்தபஞ்சவர்க் காக்கி வைத்து
வண்ணப் பெரும்படை மன்னரையும்
வதைத்த மாயவர் வந்தாரென்பார்
தீரன் திருமாலும் வந்தாரென்பார்
சிலைவல்ல மாயன் வந்தாரென்பார்
வீரன் திருமாலும் வந்தாரென்பார்
வேதநாயகன் வந்தாரென்பார்
வந்தார் மாயவர் வந்தாரென்பார்
வரிசையுடையதோர் வேதியர்கள்
கொந்தார் குழலார்கள் கன்னியர்கள்
கொடிசேரிடை நல்ல மாதர்களும்
சீராய்பதிகளை யலங்கரிப்பார்
தெய்வப்பூசையும் பணிமாறியே
காரார் குழலெனும் மாது நல்லார்
கனக வீதிக ளலங்கரிப்பார்
கும்பக்குடம் வைப்பார் வீதியெல்லாம்
கோலப் பரிமளம் தொளித்திடுவார்
வம்பு குடிகொண்ட ஸ்தனமடவார்
மாயன் வருகிற தெருக்கள்தோறும்
வீதித் தெருவெல்லாந் தூற்றிடுவார்
மிக்க தெருவாசல் மெழுகிடுவார்
சோதி நவமணித் தோரணங்கள்
சுற்றுத் தெருவெல்லாம் விளக்கிடுவார்

செம்பொன் மணிமாட வீதிதனில்
தெய்வப் பெருமாளும் வாரபோது
கொந்தார் குழலார்கள் சந்தோஷமாய்
கோல வர்ணங்க ளெழுதிடுவார்
கதலிக் குலையது நாட்டிடுவார்
கமுகின்பாளைகள் நிறைத்திடுவார்
மதனச் சிலை வேளை ஈன்றமாயன்
வார வாரதோர் தெருக்களெல்லாம்
நித்திலம் பச்சை நிறைத்திடுவார்
நீலவிழி சேருங் கன்னியர்கள்
கொத்தின் மலராகக் குவித்திடுவார்
கொந்தார் குழலார்கள் சந்தோஷமாய்
சித்திர வர்ண ஸ்தன மடவார்
தெருக்கள் தெருக்களை யலங்கரிப்பார்
முத்துநகையான மங்கையர்கள்
முன்னும் பின்னுமாய்ச் சேவிக்கவே
கர்மக்களைதனை விளைத்திடுவார்
கதிரோ னுதயத்தை மறைத்திடுவார்
தாமக்குழல்தனை யவிழ்த்திடுவார்
சரணஞ் சரணஞ் சரணமென்பார்
சேரத் தேன்மொழி மாது நல்லார்
தெருக்கள் தோறுமே யலங்கரிப்பார்

### (திருமாலிடம் சிவன் வந்த விபரங் கேட்டல்)

சீகாளியன் பதியானதிலே
திருமா லழகிய பெருமாள் தானும்
மாயப் பொருளாலே ஈசுரரை
வந்து கண்டிட ஈசுரரும்
காயாம்பூ வர்ண மேனியனே
கண்ணனே வெண்ணை யுண்ட மாலே
ஆச்சி இடையர்தம் மனை வளர்ந்த
அச்சுதா நந்தகோபாலனே
பேச்சி முலைப்பாலை யுண்டகண்ணா
புறப்பட் டிங்கே நீர்வந்த செய்தி
சீரங்கப்பதி விட்டு வந்த
செய்தி யாதெனவே கேட்டார்
வாரங்கமுடன் வேதியர்கள்
வைத்த பூசைதான் மாறிடவே
ஒருவர்க்கொருவர் தானொவ்வாமல்
உத்தபூசையும் பறித்துக்கொண்டார்

மருவ மறையோனும் வனந்தனிலே
வந்து தவத்தினில் நமைநினைத்தான்
வனத்தில் வேதியன் தவத்தைக் கண்டு
வைகுண்ட பதம்தான் கொடுத்தோம்
அனந்தாபுரத்திலே போகவந்தோம்
அருளே புரிவீரென மொழிய

### (சிவனிடம் விடைபெற்று உறையூர் வருதல்)

நன்று நன்றிது நன்றெனவே
நாதன்திருப்பதி தனிலிருத்தி
அன்று பூசையும் மாயவர்க்கு
ஆனசிவனாரு மருள் கொடுத்தார்
சென்றுவாருமென் றுரைத்திடவே
சிவனா ரிணை யடிதான் தொழுது
குன்றுதனை யன்று எடுத்தமாயன்
குளிர்ந்தக் காவேரி யாறும்விட்டு
காவேரியெனும் ஆறுவிட்டு
கமலக் கடம்பாறு தானும்விட்டு
பூவேரியது பொழிந்திருக்கும்
புதுமை வளர்கின்ற சோழ நாட்டில்
தெய்வப்பதி மிக்க பதியிற்சென்று
திருமா லழகியபெருமாள் தானும்
மையுற்ற குழல் மாதேவி
வந்துபிறந்தாளே உறையூரில்
உத்திரமான உறையூரிலே
உகந்து திருமாலும் வழிநடந்து
சித்திரமுத்திக் குவித்தான்
தெய்வப் பெருமாளும் வாரபோது
அமிலென அவளிதிற் றோன்றி
அரசர் பலரையும் வென்றிருந்த
தமிழறிவாட்டி தானிருந்த
தலங் கடந்து வரப்பொழுதே

### (சோழநாடு வருதலும் சோழநாட்டின் சிறப்பும்)

சோழ நாடான தேசமிது
சொல்லத் தொலையாது இவ் வளமை
பாளை கமழ்கின்ற பூங்காவிட்டு
பஞ்சவர்ணச் சோலைதனிலே வந்தார்
வண்ண மாமரம் தென்னங்காவாம்
வரிசையுடையதோர் பூமரமாம்
கன்னற்செடியுடன் கதலிகளாம்

கமல வாவியாம் பூங்காவாம்
ஆசனியுட னத்திகளாம்
அரசி செண்பக மா மரமாம்
வீசும் பூங்கா வனமதிலே
வீரப் பலாவுட னாசனியாம்
புன்னை நிழலாம் பூ மரமாம்
பொங்குஞ் சமுத்திரம் போலொலியாம்
வண்ணமுடையதோர் சாலைகளாம்
வாவி தன்னுட னாறுகளாம்
செந்நெல் விளைகின்ற திருநிலமாம்
செருந் தாருறைச் சோலைகளாம்
மின்னும் மாதுளை மா மரமாம்
மிக்க நாரத்து குளவிந்தமாம்
தாழைகளாம் வாழைகளாம்
தண்மையுடைய தோ ராறுகளாம்
வாளைபாயவே காளை துள்ள
மற்றும்பல வண்டு கலந் தெழவே.

## (திருவாரூர் வந்தடைதல்)

## (விருத்தம்)

வாள்விழி சீதைபங்கன் வண்டம ரிலங்கை கட்டோன்
சூழவே விரலையூன்றித் தூண்டுமாமுனியை வென்றோன்
சேளமா யுறைந்திருந்த ஸ்ரீரங்கம் விட்டுப் போர்ந்து
சோழ நன்னாடுதன்னில் துய்யபூங்காவில் வந்தார்.

## (பூங்காவனச் சிறப்பும் திருவாரூர் வந்தடைதலும்)

## (வேறு)

பூங்காவில் மாயவனார் வந்தபொழுதேதான்
புன்னை மலரானதிலே பூவை யிசைபாட
பாங்கான மயி லன்னம் பாடி விளையாட
பண்ணாக இசைவண்டு பாடி மலர்சொரிய
மந்தியோடிக் குதிமாறி விளையாட
மாயவரைக் கண்ட வரலாறு தனிலேதான்
குந்தியே கருமந்தி கைதட்டி யாட
கோபாலகிட்டிணனைக் கண்டபொழுதேதான்
செம்மந்தி யோடியே தேமாவின் கனியை
சிறுமந்தி கை கொடுத்தங்கே யெறிய
கும் மந்திரமாகவே குரங்கு பல தேட
கோலமுடன் மயாவரைக் கண்டபொழுதேதான்

மயிலாடக் குயில்கூவ மானினங்கள் சூழ
வஞ்சியிடையார் தெய்வக் கன்னிமார் சூழ
வெயிலான களிசோலை வெங்கதிரெரிய்ப
மேகங்கள் சோலையதின் மேல்வந்து தூவ
நத்தினங் கோடேறி முத்தினம் சொரிய
நாகமது தாழை மலரானது சொரிய
கொத்துமலர் வஞ்சிக் கொடிகள் நின்றசைய
கோலமுடன் வாழைக்குலையது நெருங்க
ஆறிலொரு கடமை கொண்டங்குள்ள மன்னன்
அசையாத மணிகட்டும் சோழ வளநாடு
கூறி லொன்றாகப் பிரிந்தவளநாடு
குன்றாமல் தெய்வ வளநாடது நன்னாடு
மண்ணுக்குள் மனுநீதிகண்ட புகழ் மன்னன்
வரிசையுடை சோழ வளநாடதுவுங் கண்டார்
பண்ணுக்கிசைந்த நல் பாவலர்க்காக
பரம னன்றொரு தூது நடந்த வளநாடு
சொல்லுக்குமேலான சோழவளநாடு
சுகமான சோழவள நாடதுவும் கண்டார்
நெல்லுக்கு வெகுவான நித்தன் வளர்நாடு
நீதியுள்ள சோழ வளநாடதுவுங் கண்டார்
பூங்காவனமும் புதுமலர்ச்சோலை
பொய்கையும் ஆற்றங்கரையுங் கடந்தார்
பாங்கான செஞ்சாலி மருதங் கடந்து
பங்கய வாவியுங் கண்டுமகிழ்ந்து
அருபமாய் ரூபமாய்நின்ற பரநாதன்
ஆகமுறவே பூசைக் கொண்டிருந் தருளி
திருவாரூர்பதி தன்னிலே செல்ல
திசைபுகழ் நெடுமாலும் வந்திருந்தாரே.

## (விருத்தம்)

வந்தார் மாயன் திருநாட்டின் வளமை கண்டங்ககம் மகிழ்ந்து
செந் தாதுறையும் வாவிகளும் செந்நெல் விளையுந் திருநிலமும்
நந்தாவனமும் பூங்காவும் நாட்டின் புகழுங் கண்டருளி
சிந்தாமணி வாழ் உலகொப்ப திருவாரூரில் வந்தாரே.

## (சிவன் திருமாலை வரவேற்று உபசரித்து விடை தருதல்)

## (வேறு)

திருவாரூர்பதியில் வந்து திருமாலழகிய பெருமாளும்
மருவிடவே உமைபாகர் மகாதேவர் தம்பிரானார்

பாதியுடல் கொண்டருளும் பச்சை யுமைபங்க னெங்கோன்
வீதிவிடமானதையும் விரைந்து பெருமாளுங்கண்டார்
கண்டபோதே ஈசுரனார் கண்ணனையும் வரவருளி
கொண்டல் வண்ணா குலமாலே குறுகவந்த காரணமேன்
என்று பரனா ரருள எம்பெருமா ளேதுரைப்பார்
மன்றுதனில் வீரத்தெய்வமான மலைநாடதிலே
புந்திமகிழ் திருவனந்தாபுரமதிலே யிருக்கவேணும்
கன்றுதனைக் கால்வாரிக் கனி எறிந்த பெருமாளும்
தெட்சணாபூமியிலே செல்லவேணுமென்று சொல்ல
மைக்கண் ணுமையாள் பாகர் மனம்மகிழ்ந்து ஏதுரைப்பார்
நன்று நன்று பெருமாளே நாட்டையளந்த மாலே
நன்றியுடன் வாருமென்று நாரணரைத்தான் வினவி
மைத்துனரைக் கொண்டாடி மாயவனார் தனையிருத்தி
கொத்தலரும் பூங்குழலார் கூண்டு இசைபாடிடவே
எத்திசையோரும் புகழ எம்பெருமாளு மிருக்க
மைத்துனரு மினிதிருந்தார் மாயவர் கொண்டாடிடவே
விருந்தளித்தார் பரநாதர் விஷ்ணு பரநாதனுக்கு
பருந்தேறும் மாயவனார் பாவனையா யங்கிருக்க
சோழ நீதி நல்வளமை சொல்லிப் பெருமாட் குரைக்க
நாளும் நாளுங் கீர்த்திகொண்ட நல்ல திருவாரூரில்
வசு வாசு துங்கமேனி மாயவனா ரினிதிருந்தார்
பசுவாக உருத்தரித்தப் பரனாரே யெனப்புகழ
மாயவர் வந்தாரெனவே மனமகிழ்ந்து பரனாரும்
நேயமுள்ள ஆடல்பாடல் நித்தம் நித்த மருள்புரிய
மத்தளம் முரசு கொம்பு வன்னமுள்ள நாதசுரம்
சித்திர மடந்தையர்கள் சேவித்து நின்றேயாட
வண்ண மாலை கட்டிடுவார் வாசமலர் வீசிடுவார்
கின்னரங்கள் பாடிடுவார் கீத வித்தை மங்கையர்கள்
பண்ணுத் தமிழோதிடுவார் பணிமாறு காலமெல்லாம்
இன்னிசைகள் மிகவுரைப்பார் இசைமங்களம் பாடிடுவார்
தெய்வக்கன்னிமார் பாட சில கணிகைமா ராட
மைவிழிசேர் மடவார்கள் வாசகங்கள் கூறிடுவார்
வேதமுறையாங் கீதம் மெல்லியர்கள்தான் பாட
பூதமதும் இனிதிருந்த புதுமைகண்ட அப்பொழுதே
சால தீபதூபமுடன் சாற்றும் மறையோர்கள் செய்ய
மாலவரு மினிதிருக்க மாமறையோர் பூசிக்கவே
சாத்துமாலை ஏத்துமாலை சந்திரப் பூ வடமாலை
கோர்த்த பிச்சிப்பூமாலை கோடிக்குல்லை பொன்மாலை
பூமாலை பொன்மாலை பொன்னரிய மாலையிட்டு
நாமாது மறையோத நல்ல தீபதூபங் காட்ட

வெற்றியுடன் மாயவரும் விமலன் திருவாரூரில்
கத்த லாடல் பாடல் கண்டு கண்ணனுமோ இனிதிருந்தார்
இருந்து ஒரு பொழுதுமட்டும் ஈசனைக் கண்டாசரித்து
விருந்து பெருமாளெனவே விண்ணவர் கொண்டாடிடவே
அன்றிரவு அங்கிருந்து ஆன திருவாரூரில்
வென்றியுட னரனாரை வினவியவ ரடி தொழுது
ஈசனே என்தம்பிரானே எங்கும் நிறைந்திட்டவனே
சாசுவதமா யாறு சமயமதாய் நின்றோனே
அஞ்செழுத்துக்கே யுதவும் ஆரணனே ஐம்முகனே
ஐம்பதின் மேலொன்றாக ஆன பரமேசுரனே
திங்க ளரவே யணியும் சிவப்பொருளே எவ்வுயிர்க்கும்
இன்பமுள்ள மூலப்பொருள் எனவே இருந்தவரே
பண்ணுக்கும் இசைக்கு மெட்டா பரனே பரஞ்சுடரே
எண்ணெழுத்துக்கு மடங்கா இறையவனே எம்பரனே
என்று திருமாலவரும் ஈசனையும் போற்றிக்கொண்டு
வென்றியுட னரனிடத்தில் விரைய விடைபெற்ற பின்பு
தருவான சக்கரத்தான் தன்மையுள்ள பெருமாளும்
கருவாக வுருத்தரித்தக் கதிரவனா ருதயத்திலே
குருவே நீர் சரணமென்று குன்றாமல் மனதிலெண்ணி
திருவாரூர்பதியில் நின்று தெற்குநோக்கினார் பெருமாள்

## (விருத்தம்)

நோக்கினார் தெட்சணத்தே நுண் ணிடை சீதைபங்கன்
தாக்கினா லரக்கர் சேனை தலைத்தடுமாறி நீற
காக்க மாம் புவியையாண்டு கண்ணனாய் வெண்ணையுண்டோன்
வாக்கினால் கணங்கள் பூதம் வணங்கிட அவிடம் விட்டார்.

## (தில்லைவனம் வந்து ஈசனை வழிபடல்)

## (வேறு)

நின்று திருவாரூரதுவுமிட்டு
நீலநெடுமாலுந்தான் வரவே
குன்று தனையன்று குடைவிரித்த
கோலநெடுமாலும் வாரபோது
வென்றியுடையதோர் கேத்திரபாலன்
வீராதிவீரன் முன்வரவே
நன்றியுடையதோர் சங்கிலியும்
நாடும் ஈஸ்வரபாலனோடு
காள மாபூதம் தான் நடக்க

காற்றுடன் மழை கலந்தெழும்ப
பாளைசேர்த்திடும் பூங்காவிட்டு
பச்சைமாலவர் வாரநேரம்
வல்ல வடநூல் சிறந்திடவே
வண்ணக் கவிவாணர் பாடிவர
தில்லை வனமது தெரியக்கண்டார்
செம்பொன் மணிமுடி மாயவனார்
அல்லல் தவிர்த்தெமை யாண்டுகொண்ட
அரனார் திருவம்பலமெனவே
கல்லை நிரையாக மேய்த்தடைத்த
கரிய மாலவர் வாரநேரம்
வில்லை முறித்தங்கே பெண்ணைக்கொண்ட
வெற்றி மாலவர் வாரபோது
முல்லைவனத்திலே இடையர்பதி
முடுக வந்தாரே மாயவனார்
மடையில் வாளைகள் குதிபாய
மன்னுசிதம்பரம் தெரியக்கண்டார்
கடையால் குடமுட னணைக் கயறும்
கையில் தடிகளும் வைத்து நின்று
கோலுங் குடங்களும் வைத்து நின்று
கோபாலரைக்கண்டு மனம் மகிழ்ந்து
பாலுங் குடங்களுமெதிரே வைத்து
பச்சைமால் தன்னைத் தொழுது நின்றார்
நன்று நன்றெனக் கையமர்த்தி
நகைத்தபேருக்கும் நன்மைசொல்லி
இன்று நீங்களும் நில்லுமென்று
இடையர்க்கருள் கொடுத்தார் பெருமாள்
கல்லைப் பெண்ணாக்கி நடத்திவைத்தோர்
காலால் வழிவிட்டுத் தான் நடந்தார்
தில்லைக் கோவிந்தப்பதியு மிப்போ
தெரியுதென்னவே மனதில் கொண்டு
பொன் னம்பலமும் போமெனவே
புதுமால் நடந்து முடுகச்செல்ல
வண்ணம் பலதும் முறைப்பாடும்
வளமை பலதுமே கேளுமெல்லாம்
சித்தம்பலமும் திருமதிலும்
சிகர கோபுர நால்மதிலும்
பக்தர் கோடிகள் தொழுதுபோற்றும்
பலமண்டபங்கள் தான்கடந்து
முன்னம் பலமும் முறை முறையே

முத்தும் பெருமாள்தான் நடந்தார்
வண்ண பலதும் செய்திருக்கும்
வர்ணமண்டபம் தான் கடந்தார்
ஆயிரங்கால் மண்டபமும்
ஆன மணிமண்டபங் கடந்தார்
வேயிறத்தோ ரின்ப மாதர்
வீர மண்டபந்தான்கடந்தார்
முத்து மண்டபம் முதல் மண்டபம்
மூலமண்டபந்தான் கடந்தார்
சத்ர மண்டபத் தழகைக் கண்டு
சகல மாய வனாசரித்து
பொன்னின் படிவாசல் தனிற்புகுந்து
பொங்கும் கூத்தனி னம்பலத்தே
மின்னிற் சிறந்ததோர் ரெத்னாதி
மிகக்கணங்களுஞ் சிறந்திலங்க
மூலப்பொருளாய்ச் சிறந்திருக்க
முத்தி னொளிசேரும் மண்டபத்தில்
ஓலக்கமாகச் சிவசமயம்
ஒக்க யிருக்கின்ற திருப்பாக்களும்
உயிருக்குயிராய் உலகுக்கொன்றாய்
உமையாள் பாகரு மினிதிருந்தார்
தயிரும் பாலுமே திருடியுண்டோன்
தானே செல்கிற வேளையிலே
பதஞ்சலியுடன் புலிப்பா தரும்
பரனே பரமெனப்போற்றி நிற்க
கரிமாமுகமுள்ள கணபதியும்
கருணையுடன் வந்து போற்றிநிற்க
தேவ தேவாதி சூழ்ந்து நிற்க
தேவ ரின்பங்கள் சிறந்திலங்க
மூவர் முதல்வர்கள் முத்திபெற
முகந்துதேவர்க ளிறைஞ்சி நிற்க
மயில்வாகனத் தெழுந் தருளும்
வள்ளி நாயக ரருகில் நிற்க
பயிலும் தெய்வநாதர் சூழ
பண்ணும் தவமுனிமார்கள் போற்ற
பிரம்மதேவ னிந்திரனும் போற்ற
பிஞ்சுகனே வுன் சரணமென்ன
வரமுடையதோர் வைரவரும்
வால நாயகி கீதம்பாட

சங்கொலியுடன் நாதகீதம்
சயமகீதமும் தான்பாட
குங்குமம் பிச்சி கொழுந்துடனே
கோலமாய் பச்சைக்கொடி நெருங்க
வேதம் முழுங்கவே கீதம் பாட
மெல்லி நல்லார்கள் சேவிக்கவே
பாதம் கெதியென்றே சிலபேர்கள்
பரனே பரமெனப் போற்றி நிற்க
ஏறி லேறிய எம்பெருமாள்
இலங்கி நிற்கும் பொன்னம்பலத்தே
மாறி யாடிய சீர் பாதத்தை
மாயவன் கண்டு தெரிசித்தாராம்

## (திருமாலிடம் சிவன் வந்தக் காரணம் கேட்டல்)

முத்தின் விளக்காம் பொன் விளக்காம்
மூன்று கோடித் திருவிளக்காம்
பத்தி விளக்கி னொளி தனிலே
பச்சைமால் தனைக் கண்டபோதே
சித்தம் மகிழ்ந்து பரனாரும்
திருமால்தனைக் கண்டு அருள்புரிந்து
இத்தூரம் நீர் போர்ந்த தேதோ
இலங்கும் திருமாலே எனவுரைத்தார்
பேர்ந்தவா றுடை செய்திகளும்
புகல்வேன் கேட்டிடும் மைத்துனரே
சேருந்தென்பூமி திருவனந்தம்
செல்ல வேண்டியே மனதிலெண்ணி
ஆரும் புகழுமிப் பூதமுடன்
அந்தணனையும் கூட்டிக்கொண்டு
போர்ந் தங்கிருந்து நான் பூசையுண்ண
போறேன்போறேன் நான் புண்ணியனே
என்று பெருமாளுஞ் செப்பிடவே

## (உமையாள் திருமாலிடம் குசலம் விசாரித்தல்)

இறையோன் மனம் மகிழ்ந்தேது சொல்வார்
வென்றிமால் செய்த விண்ணப்பத்தை
மிக்கச் சிவனாருங் கேட்டிருந்து
வண்ண மாயவன் சொன்னபோதே
மங்கை யுமையம்மை தனைநோக்கி

உண்ணா வுமையே நீ கேட்டிலையோ
உன் னண்ணன் வந்த காரியத்தை
திருவரங்கத்தில் நின்ற அண்ணன்
தெய்வ மலைநாடு ஆனதிலே
அரவணை யொத்து நிற்குந்
திருவனந்தாபுரத்திலே போகவந்தார்
மருவணி குழ லுமையவளும்
மனதிற் கேட்டபின் னேது சொல்வாள்
அருமையுள்ள தோ ரெந்தன் அண்ணா
அருமை நங்கையுமெங்கே என்ன
வெற்றி உமையம்மை தான் வினவ
மேகவர்ணரும் தான் மகிழ்ந்து
உற்றகணவனும் போறபோது
உடைய பாரியும் கூடவல்லோ
அருமைத் தங்கை நீகேட்டதற்காய்
அன்புடன் சொன்னே னென் உமையம்மை

## (திருமால் விடைபெற்று மறுபதிக்குப் பயணமாதல்)

இருந்த பதிவிட்டு மறுபூமியில்
ஏகினீரே என் அண்ணாவென்ன
அன்றைக் அவ்விடமே தானிருந்து
ஆனநெடுமாலும் பூசையுண்டு
குன்றிற் கதிரவ னுதயத்திலே
கோல மாயவன் விடையுங்கொண்டு
தில்லைக் கோவிந்தப் பதியிற் சென்று
சிவனார் தன்னுட பதியுங்கண்டு
கல்லைப் பெண்ணாக்கி நடத்திவைத்தோர்
கடுக நடந்தாரே திசைநோக்கி.

## (விருத்தம்)

நடம்புரி தில்லைநாதர் நாயகர் பதியுங்கண்டு
குடந்தையி லாயனானோர் கொற்றமால் பூமிநோக்கி
வடந்தனில் துயின்ற மாயன் வரிசிலைஎடுத்த கோமான்
கடந்தனர் பாதம் நோகக் கமலமாங் கண்ணன் றானே.

## (வேறு)

கண்ணனாம் புவிக் காவலனான மால்
காவலான பெரும்பூதம் சேவிக்க
பண்ணை யூதி நிரை மேய்த்த பச்சைமால்
பள்ளிகொண்ட பெருமாள் தா னானவர்

அச்சமற்ற அழகான பச்சைமால்
ஆயனாக அமர்ந்திருந்த மாயன்
இச்சையாகவே பெண்கள் துகில் கொண்டு
ஏறிக் கொண்டா ருயர்ந்த மரத்திலே
சுற்றியங்கு வளர்ந்த மருதினைத்
தூய மண்ணினில் வீழ மிதித்தவர்
புற்றிலா டரவத்தின் படத்திலே
பூமி மேலே திருநடஞ் செய்தவர்
சக்கரத்தால் கதிரவன் தன்னையும்
தள்ளியங்கே ஒளித்து மறைத்தவர்
பக்குவமான பெண்வடிவாகியே
பண்டு தேவர்க் கமிர்தம் பகிர்ந்தவர்
தில்லை கண்டு நடஞ் சேவித்தங்ஙனே
தெற்கே நோக்கி நடந்தார் பெருமாளும்

## (மதுரைப்பதியை அடைதல்)

வல்லப்படி வட நாடு தான்விட்டு
வைகை யாற்றினை நோக்கியே மாயவர்
ஆற்றிலே யணை கட்ட வந்தன்றுதான்
ஆரடியத்தால் பாண்டியன் கையினால்
மாற்றினா லடியுண்டதோர் வள்ளலார்
மண் சுமந்ததோர் வைகையாறு தன்னில்
ஏற்றமான பெரியதோர் மாயனும்
இசைந்து கூடிய கேத்திர பாலனும்
கூற்றனென்னுங் கணங்களுடனே தான்
கொல்லவல்ல தோர் மாகாளி கூட்டமும்
தவமான தோர் சங்கிலிபூதமும்
தக்க ஈஸ்வர பாலனும் கூடவே
மாலவர் தன்னைச் சேவித்துப் பின்வர
வைகை யாற்றிலே வந்தார் பெருமாளும்

## (சிவபெருமானின் திருவிளையாடல் கூறுதல்)

சாற்றிய பூதச் சம்மந்தரானவர்
சம்மந்தப்பெருமாள் கையி லேடுதான்
ஏற்றமான தொரு வைகையாற்றிலே
ஏடதோடி எதிரே முன்னேறியே
ஏடகப்பதி தன்னையுங் கண்டுதான்
இன்பமான மதுரைப்பதி புகழ்
நாடதின் சீர்சிறப்பும் வளமையும்

நல்ல மா மதுரைப்பதி கண்டுதான்
அத்தனராம் அழகிய சொக்கனார்
அன்று மண் சுமந்த வைகையாற்றிலே
புத்திதானே களித்துறக் கண்டுதான்
பொன்னி மாயவர் வந்தார் மதுரைக்கே
மதுரைப்பதியான வளமையும்
மங்கை பங்க னழகிய சொக்கனார்
குதிரை தன்னைத் தெருவில் நடத்திய
கோல வீதித் தெருவிலே வந்தனர்
அன்று தானும் அழகிய சொக்கனார்
ஆனநல்ல திருவிளையாட்டெல்லாம்
முன்பு கூடல் நடத்தும் பெருமாள்தான்
முத்திலங்கும் வடவாசல் வந்தனர்
பண்பதாக அழகிய சொக்கனார்
பாணனுக்குப் பலகைக ளிட்டதும்
பெண்ணில் வந்தியாம் பிட்டு வாணிச்சிக்கு
பித்தரானவர் கூடை எடுத்ததும்
வண்டமிழ் புகழ் சீறிய சொக்கனார்
வணிகனாகி வளைகூறி விற்றதும்
தண்டில் வல்ல பணிக்கனை வெல்லவே
தகடமான பரிசை எடுத்ததும்
செம்மையான திருவிளையாட்டுகள்
தேசந்தன்னில் பல கீர்த்தியானதும்
உண்மையாகவே மாயனைக் க்ண்டுதான்
ஒக்கவே சொல்ல எண்ணத் தொலையாது

## (மதுரை சொக்கநாதரை தரிசித்தல்)

உய்யும் பாதை அறிகுவோ மென்னவே
உம்பர்யாவரும் கெம்பீரமாய்த் தொழ
செய்யபாதங்கள் நோக நடந்துதான்
செம்பொன் மாடத்தெரு வீதி தன்னிலே
துள்ளும் வெள்விடை ஏறும் பரநாதச்
சொக்க மா பதியான தலத்திலே
வள்ளலாஞ் ஶ்ரீரங்க மகிபனார்
வந்தனர் சொக்க மாபதி தன்னிலே
நித்திலம்புரி கோபுர வாசலும்
நீதியாகிய மண்டப வாசலும்
கொத்து மாமணி மண்டபச் சாலையும்
கோலமான கொடிமர வீதியும்
செல்லும் நந்தி திருமுத்த வாசலும்

செம்பொன் மாமணி மண்டப வீதியும்
அல்லனைய ஸ்ரீகுழல் மாதர்கள்
ஆடரங்கும் அணிமணித் தூண்களும்
அக்கரவும் பிறையு மணிந்தவர்
ஆனவாலயம் ஆளும் பரநாதச்
சொக்கர் தம்மைத் தெரிசித்து மாயவன்

## (உமை பார்வதிக்கு அருள்பாலித்தல்)

துங்கமால் நெடு மாயவரானவர்
பங்கயம்சேரும் சங்குமுகத்தினாள்
பாத மாமலர் கோ கனத்தவள்
அங்கயக் கண் உமையம்மை தன்னையும்
ஆன மாயவன் பாசமுடன் கண்டு
தங்கையாகிய செங்கயற் கண்ணியை
சங்கை மாயவன் கண்டங்கருள் செய்ய
செங்கண் மாலவன் தன்னை யுமையவள்
தெண்டனிட் டடி போற்றியே அன்றிரா
கன்று கண்ட பசுவது போலவே
கண்ணனை யுபசாரங்கள் செய்தபின்
வென்றியாகிய மாயனு மங்ஙனே
வீரிபக்கல் விடையது வேண்டியே

## (திருமால் மற்றும் பூதகணங்கள் தென் பூமிக்குப் பயணமாதல்)

நேயமாய் மதுரைப்பதி விட்டுமே
நீதியானதோர் பூதங்கள் சேவிக்க
தேசமானதோர் தென்பூமி நோக்கியே
தெய்வமாயன் புறப்பட்டு வந்தனர்.

## (விருத்தம்)

பிட்டது சுட்ட வந்திப் பெண்கொடிக் கன்பு செய்தோன்
மட்டணி சொக்கர்தம்மை மாயவன் வந்துகண்டு
அட்டதிக் களந்தமாயன் அரவணை யமர்ந்த செல்வன்
திட்டென மதுரைவிட்டு தெட்சணாபுவியில் வந்தார்.

## (அவனியாபுரம் வந்தடைதல்)

## (வேறு).

மதுரைதனை விட்டு மாயவனார்
மானாமதுரையுந்தான் கடந்து

பிதுரின் வழிவந்த மாயவரும் பிரியப்
பிராமணன் பின்னே வர
சதுராய் நடந்திடும் சங்கிலியும்
தாண்டும் ஈஸ்வர பாலனோடே
அதிருங் குரல்வல்ல கேத்திரனும்
ஆல மாகாளி கூட்டமுடன்
காள மாபூதம் வேதாளையும்
கபாலந்தனை ஏந்தும் மாபூதமும்
பாளைக் கமழ்கின்ற பூங்காவிட்டு
படரு மவனியாபுரத்தில் வந்தார்
அவனியாபுரந்தன்னில் வந்தார்
அரிய பெரும்பூதம் தன்னுடனே
கவனம் நடத்தியே வண்மைவிட்டு
காள மா பூதம் தன்னுடனே
உடனாகவந்த மறையவனும்
உலகு தொழவந்த மாயவரும்
நடவாப் பெருவழியாகவேதான்
நல்ல பெருமாளும் நடந்தருளி
நல்ல பெருமாள் நாகப் பெருமாள்
நாமப் பெருமாள்தான் நற்பெருமாள்
வல்லப் பெருமாள்தான் மாற்றலரை
வதைக்கும் பெருமாளும் வரும்பெருமாள்
ஆலின் வடிவு கொண்ட பெருமாள்
ஆன பெருமா ளரும்பெருமாள்
வேலுப் பெருமாள்தான் மேவலரை
வென்ற பெருமாளும் வழி நடந்தார்

## (ஸ்ரீ வில்லிபுத்தூர் அடைதல்)

நடந்தார் ஸ்ரீவில்லிப்புத்தூரில்
நகரும் வளங்களும் கண்டருளி
வடந்தனில் துயின்றிட்ட பிரான்
வருவார் ஸ்ரீவில்லிப்புத்தூரில்
புத்தூர் கண்டவ ரகம் மகிழ்ந்து
பொன்னும் பெருமாளுந்தான் நடந்தார்
தத்தி மந்திகள் குதி பாயும்
சந்த வெளிவிட்டுத்தான் நடந்தார்
முத்தும் பெருமாளுந்தான் நடக்க
முது பூதம் கண்டுச் சேவிக்கவே
பத்து நூறென மாபூதம்
பச்சைமாலவர் முன் நடக்க

முன் நடக்கவே மாயவனார்
முதல் மறையவன் பின் வரவே
வண்ணமுடை தெய்வக் கன்னியர்கள்
வளைந்து நின்றவர் குரவையிட
குரவை யொலியது மொகு மொகென
குஞ்சம் பணிமாறி நின்றிடுவார்
விரையத் தெய்வார்கள்தான் சூழ
வீரநெடுமாலும் தான் வரவே
சங்குச்சக்கரம் வாள் கெதையும்
தரித்த மாயவன் முன்வரவே
கண்காணப் பலபூதம் வந்து
கார் வண்ணர் தமைச் சேவிக்கவே.

## (திருமால் குற்றாலம் வருதல்)

## (வேறு)

சேவித்துப் பூதம்வர திருமாலும் நடந்துவர
பாவித்து மாயவரும் பார்மீதிலே நடந்தார்
மருங்குற்ற உமைதமையன் மாறியாடும் பெருமாளும்
கருக் குற்றந்தனைத் தவிர்த்த கயிலாசப் பரஞ்சோதி
திருக் குற்றாலத்தில் வந்தார் திருமாலு மப்பொழுது
இருக்க வுத்த பதியாக இனிதிருந்தார் பூவுலகில்
தங்க நெடு வீதிகளும் தமிழ் முழங்கும் மேடைகளும்
குங்குமம் சேர் வாவிகளும் குறும்பில்லா நெடுந்தெருவும்
வேதாவும் உருத்திரரும் வீறுடனே ஆதரிக்கும்
பாதாள வாசல்களும் பைம் பொன்னின் மேடைகளும்
அரசர் பலர் மனம் மகிழ ஆனந்தத் திருக் கூத்தும்
முரசதிரும் மண்டபமும் முக்கோடித் தேவர்களும்
பத்தியுள்ளோர்தான் புகழும் பண்பான தாவளமும்
புத்தியிலே வுறைந்திருக்கும் புத்திடங்கொண்டார் தனையும்
வந்துகண்டு மாயவனார் வண்மையுட னாதரித்து
சிந்தையுற்று மாயவனார் தென் பூமிதா னோக்கி
கடுநடையதாய் நடந்து கன பூமிதனிலே வந்தார்

## (திருமால் கூட்டத்தார் அழகர்பதி வருதல்)

அடுபூசை சமைத்திருந்த அழகர்பதிதன்னில் வந்தார்
அழகருட திருநாமம் ஆன புகழ் மெத்தவுண்டு
புளகிதமா யழகர்பதி பொன்னாடு போலிருக்கும்
திருமதிலு மொளி முடியும் சென்று கண்டார் மாயவனார்
மருவணியும் மண்டபமும் மாயவனார் கண்டருளி

கொண்டலெனும் மேனியனார் குருந்தேறும் மாயவனார்
கண்டழகர் திருப்பதியில் கார்வண்ணனா ரவதரித்து
புண்டரீகக் கண்ணனும் பூசையுண்டங் கினிதிருந்தார்
கண்டவர் கொண்டாடிடவே கதிரவனா ருதயத்திலே
பாராளும் மாயவனார் பள்ளிகொண்டார்தான் வரவே
காராரும் மாயவனார் கள்ளர்பிரான்பதியில் வந்தார்

## (திருமால் ஆழ்வாரைக் காண வருதல்)

கெருடவாகன முடையோன் கீர்த்தியுள்ள பெருமாளும்
தருவுடைய பொதிகைமலை தனிலிருக்கும் அகத்தியனார்
கயிலாசந்தனிலிருந்து கையுடனே கொண்டுவந்தார்
அயில்சேரும் விழிமடந்தை ஆன கெங்கை யானவள்தான்
கமண்டலத்தில் வந்தகெங்கை கனவரை மேலேயிருந்து
தவண்டமிட்டு மடமடெனதான் பொருந்துமெனச் சொரிந்து
பூவுலகம் வாழவென புவனமெங்கும் நெல்விளைய
நாவுலகந்தான் வாழ்க நல்லநகரணை பலதும்
முண்டகஞ்சேர் திருக்குளமாம் முத்தாறாம் வாவிகளாம்
தணடமிழ்சேர் வாவிகளாம் சந்தனப் பூங்காவனமாம்
காவினங்கள் பூமலர்கள் கமுகினங்கள் குலைசரிய
மாவினங்கள் பூச்சொரிய மயிலினங்க ளாடல் செய்ய
செம்பொன்னிற திருச்சாலி திகள்வரப்பில் குலைசரிய
நம்பமலர் வெஞ்சாலி நல்வரப்பில் தலைசாய்க்க
மடையில் நின்ற சின்னவாளை மண்டி வயல்தனிற் குதிக்க
கடைச்சியர்கள் குரவையிட கன்னல் சென்நெல் கலகலவென
நாற்றினமும் போற்றனமும் நல்ல செந்நெல் விளைநிலமும்
பார்த்த பார்த்த திசைதோறும பைம்பொன்னின் நாடிதென்ன
தெய்வலோகச் சிறப்பதென்ன திருமால் கண்டு அகம் மகிழ்ந்து
இவ்வுலகந்தான் பொருந்தும் இயல்பெல்லாங் கண்டிருந்து
நல்லதென்று நகைபுரிந்து நடந்து திருமாலவரும்
அல்லனை மேனியுள்ள ஆழ்வாரைக் காணவென்ன
தன் பொருந்தும் அறுவிட்டு தான் நடந்து பெருமாளும்
மின் பொருந்தும் முடியுடையயோன் மெய்ப்பான் மண்டபத்தே.

## (திருமால் உலா கண்டு பெண்கள் மயங்குதல்)

## (விருத்தம்)

மண்டபம் மாடகூடம் வயல் பெறும் மதிலும் சுற்றும்
அண்டர் மா முனிவர் போற்றும் அருள் நெடும் வீதிகண்டு
எண்டிசை யளந்த மாயன் இலங்கையை யழித்த வீரன்
வண்டணி ஸ்ரீரங்கத்தான் மைந்தனார் பதியில் வந்தார்.

## (வேறு)

வந்தார் திருநகரில் வண்ண மாயவன் மாலவன்தான் வரவே
அந்தம் புகழான தெய்வார் அவ்வீதி கண்ட மடவார்கள்
மடவார் புடை சூழ இன்ப மாயனைக்கண்டு மையல்வெகுவாய்
குடம்போ லிளந்தனத்தார் கோல மனதோர் சூத்திரப் பாத்திரர்கள்
பாத்திர மங்கை நல்லார் பச்சைமால் தன்னை வீதியற் கண்டிடவே
மாத்திரை நேரத்திலே கூடி மங்கை மடவார் மிகச் சூழ்ந்து
சூழ்ந்த கலையுடையும் இன்பத்தோனை மயிலி னிடையழகும்
வேலைப் பழித்தவிழி சேரும் மின்னாரிருகையின் வீச்சழகும்
அழகர் மிகுபதத்தில் உள்ள ஆன சிலம்பு நல் பாடகமும்
இளவாழைபோற் சிறந்த இன்பக் காலில் கரந்தையும் கட்டழகும்
கட்டான நள்ளி தென்ன இரு கையும் விரலும் முழந் தாளும்
பட்டாடை வாழை தன்னைக் கண்டு பழித்தக் குரங்கதின் மார்பழகும்
அல்குலிடையசைய நல்லதான மணிக்கச்சை சுற்றசைய
வல்ல துடியெனவே சேர்ந்த வாய்த்த இடையுந் திருவயிறும்
திரு மார்பின் கீழுதித்த ரோமம் சிற்றெனும் பினொழுக்காமெனவே
ஒரு சீரெடுத்ததென்னவரும் ரோமத்தழகும் இடையழகும்
அழகா மிருஸ்தனமும் மேலே ஆனதோர் ரெட்டிணத் தாழ்வடமும்
புளகித வாடைகளும் அதில் பொன்னின் திருஞாணும் பொற்நலனும்
கலங்கா நடையுடையும் வரும் கன்னி இரு கர வீச்சழகும்
அலங்கார வாவிதனில் பண்டு அமைந்த செந்தாமரைபோல் முகமும்
முகமோ முருக்கிதழ்போல் பல்லின் மூலா முறுவலும் முத்தெனவே
பகர்மேற் சிறந்திருந்த நல்ல பற்கோர்வை சொல்லின் மொழியழகும்
மொழியும் குமிழ் மூக்கும் மென் முகத்தின் சிறப்பும் குறுவேர்ப்பும்
குழியு மிருபுருவம் கண்டால் கொஞ்சும் சிலை காமன் வில்லெனவே
குழலுந் திருமுகமும் இடை கொஞ்சும் நடையும் தனமசைய
இளகாத் திருமனமும் சித்திர ஏலா யிலம்பை இவர்களென்ன
இவர்கள் அரம்பை யென்ன நடை எய்யும் விழிபோல் திருமாலும்
கவரும் விழிச்சுழியும் பெண்ணாள் கன்னிக் கரும்பின் கழுத்தழகும்
கரும்பைப் பழித்தச் சொல்லார் வரும் கஞ்சமலர் முக மங்கையர்கள்
கரும்பாடும் பூங்குழலார் நல்ல தோகை மடவார்கள்தான் கூண்டு
மயில் போல வல்லியர்கள் செம்பொன் வஞ்சிக் கொடியிடை மாது நல்லார்
குயில்போல் மொழியனையார் நல்ல கோதையர் மாயனைக் கண்டருளி
மயாவனை வீதியிலே சித்திர மங்கையர் கண்டு மனமுருகி
ஆசை விழிவலையார் இவர் ஆரோ ஆரென் றறியாமலேதான்
மல்லிற் சிறந்த புயன் சிலை மதனோ கருணைவடிவேலோ
கல்லாற் கவணெறிந்த வள்ளி காந்தனோ செந்தி லமர்ந்தவனோ
செந்தினில் வேல்னென்றால் திருக்கையினில் வேலொன்று தோணுதோ
இந்திரன் தோகையரே இவராரோ அமராவதி வேந்தோ
அமராபதி வேந்தரென்றால் அயிராணி யெங்கே வெள்ளை யானையெங்கே

குமரன் தனைப் பயின்ற கொடுங் கூற்றை யுதைத்திடுங் கோமானே
கூற்றை யுதைத்திருந்தால் வண்ணக்கோல மழு வொன்று தோன்றாதோ
நீற்றை யணிந்தவனோ ஆனால் நெற்றியிற் கண்ணொன்று தோன்றாதோ
தோன்றாதோ மங்கையரே அதைச் சொல்லவாரீரோ துடியிடையே
ஏண்டி யுரையெனவே மையல் இன்ப முறைந்தந்த நேரத்திலே
ஓரான மங்கை நல்லார் பல உண்மையறிந்தாளொரு தோழி
நாராயணரிவர் காண் இனி நானறிந்தேனடி நண்ணுதலே
நண்ணும் மதன சரம் அந்த நங்கைமார் மீதினிற் பட்டுருவி
பண்ணான மங்கையர்கள் இன்பம் பாரானோ முகம் தாரானோ
இன்பத் தனம் நெருங்க இரு கையிறுக நமைப் புலகானோ
அம்பொன் திருமார்பில் பூ வரிய திருத்தொடை தாரானோ
தாராரும் மாயவரை வெகு சந்தோஷமாய்கண்டு கன்னியர்கள்
பாரானோ வென்று சொல்லி நின்று பாவித்திருப்பார்கள் பைந் தொடிமார்
பையநடப்பாரும் கண்டு பாரவிழிவலை வீசிடுவார்
கையிற் சுருள்கோதி வரும் காமசரத்தை அமர்விடுவார்.

## (நெல்லை பதிக்குப் பயணமாதல்)

## (விருத்தம்)

காமனோ அமரர் வேந்தோ கடம்பரி வேலன்றானோ
நாமமே சிறந்தசோதி நண்பனோ நங்கைமார்கள்
மா மணம் சிறந்து நின்ற மாயவன் தன்னைக் கண்டு
வாமமே மின்னும் செம்பொன் மங்கையர் மகிழ்ந்து நின்றார்.

## (வேறு)

மகிழ்ந்தே திருமால் மறுகி வரவே
மங்கையர்கள் வெண்குரவை பாடி யிசைபாட
புகழ்ந்தே முன்செட்டியார் பெற்ற குமாரன்
புளியினூட வொந்திலே புகுந்தபதிதன்னை
பதியான விஷ்ணுவின் திருவுருவமெனவே
பாரரசர் பூசித்திருந்தபதி காணும்
மதியான மாயவன் பதியிதுவெனவே
வாய்த்த வணிகன் பிள்ளை மாயவனாகி
செட்டிச்சி பிள்ளையது மாயவனாகி
திருப்பூசை கொண்டங் கினிதிருந் தன்னாள்
அட்டதிக்கும் புகழ் ஆழ்வாரெனவே
அரசர் மனம் மகிழவே வெகுபூசை கொண்டு
கட்டான மாயவன் கண்டு மகிழ்ந்து
கருணையுடன் முன்னர் திருப்பதி தன்னில்
செட்டாகத்தேவர்கள் வந்து தொழவே

சேவித்து மறையவனும் கூடியேவரவே
வந்ததொரு மாயவன் தானும் மகிழ்ந்து
மண்டபத்துள் வீற்றிருக்கின்ற நேரம்
சிந்தையுறு மாயவரும் வேதபூசிகரும்
திருந்தவே பூசையும் கொண்டங்கிருந்தார்
சீரானமாது சேர் மாயவன்றானும்
திருப்பூசைக் கொண்டங் கினிதிருந்தாரே
பேரான நெடுமாலும் விடிவதன் முன்னே
புறப்பட்டுப் பூதப்படைகள் நெருங்க
பூதங்கள் சூழவே கீதங்கள் பாட
புண்டரீக மாயவன் வாரபொழுதே தான்
காதங்கள் தூரமெனக் கண்டுமே மாயன்
கமலபதம் நோகவே தானும் நடந்து
வல்லபடியே யந்த மாயவன் றானும்
வாகான தெய்வார்கள் சூழவரவே
நெல்லைநாதன் பதி யிது தானோவென்ன
நீண்ட திருக்கோபுரங் கண்டு நின்றார்.

## (நெல்லை பதியில் மாயவரை சிவகாமி உபசரித்தல்)

### (விருத்தம்)

நின்றனன் கருணன் தன்மேல் நெடுஞ் சரந்தொடுத்த கோமான்
குன்றை யன்றெடுத்த மாயன் குரங்கினைச் சேனை கொண்டோன்
வென்றிசே ரிலங்கையானை விரைவுறு தலையறுத்தோன்
மன்றணி நெல்லை நாட்டில் மாயவன் வந்து நின்றார்.

### (வேறு)

நின்ற மாயவன் புகழ்ந்து நெல்லை வனம் கண்டு
நித்தலம் பதியெனவே மெத்தமனம் மகிழ்ந்து
மன்றுதனில் நின்று நடமாடும் அரனானோர்
மானிடத்தே வைத்த வள்ளல் தேனிடத்தை வைத்தோன்
சங்கர மடைந்த பாகனெங்குமாக நின்றோன்
துண்டனை யுதைத்து மதன்தனை எரித்தகோமான்
கங்காளியோடே கூடி வாதாடும் நாதன்
கண்டங் கறுத்தோன் பிரமாவின் தலை இடர்ந்தோன்
உண்ணாவுமை தன்னையொரு பங்கினில் தரித்தோன்
ஓடும் அரவத்தை முடிமீதினிற் றரித்தோன்
அண்ணாமலை தானெனவே பூசையது முண்டு
ஆலமதை யுண்டு அமரர் அடி தொழவே நின்றோன்
நெல்லுக்கு நெல் வேலியாக நின்ற பரநாதன்

நேரிழையை பாகம் வைத்த நித்திய கல்யாணன்
வல்லுக்கிசைவான தொரு மாதங்கியாளான
வடிவுடைய மங்கை யுமைபாகரையுங் கண்டு
செல்லும்போதே மாயவன் திருக்கோபுரங் கண்டு
திருவிளக்கு மாளிகையும் சீராகக் கண்டு
அல்லனைய மேனியனே அரகரா சிவனே
அரனேபரனே யென்ன ஆயனும் வணங்க
நெல்லைப் பதியானதிலே சித்திரமண்டபத்தே
நித்திலம் நிரைத்தமணி பொற்பதம்புகுந்து
செல்லவே யரனாரும் திருமாலைக் கண்டு
செம்பொன் திருவாய் மலர்ந்து வரமருளிச்செய்து
சிந்தை புகழ் மாயவரே திருமாலே என்ன
சீரங்கந்தான் விட்டு வந்த செய்தி செப்புமென்ன
விந்தைசெறி மாயவரும் அரனாரை வணங்கி
மெய்ப்பாக வந்த அந்த செய்திதனைச் செப்ப
அந்தமுறும் வடிவுடையாளாள் உமையம்மை
ஆன புகழ் மாயவரை அன்பாக வினவி
சிந்தை மெய்க்க விருந்துமிட்டு சிவகாமி தாயார்
செல்வ னெங்கள் அண்ணரே நீர் திருக்கண் துயின்றிருமே
இருவு மிரும் மாயவரே என்று அரன்அருள்
இன்பமுடன் மாயவனார் அன்றங்கே யிருந்து
கருவுருவ மேனியனார் காசினியை உண்டோன்
கதிரவனா ருதயத்திலே விடையுங்கொண்டு போனார்
வல்லபடி மாயவனார் நெல்லைப்பதி விட்டு
வாகுடனே தென்பூமி ஆனபடிபோக
மல்லனைய திண்புயத்தான் மாயவன் பின்வந்த
மறையவனார் பின்போக அஞ்சலிலே நடந்தார்.

## (களந்தையன் பதி வருதல்)

## (விருத்தம்)

மறையவன் பின்னே போக மாநெல்லை கடந்து மாயன்
உறை தயிருண்டு கொண்டு உட்பொருளாக நின்றோன்
முறைமுறை நடத்தும் நெல்லை முன்நிலம் கடந்து போர்ந்து
கறைமிடற் றண்ணல் வாழும் களந்தையன் பதியில்வந்தார்.

## (வேறு)

களந்தைக்கே கர்த்தரையும் கலியுகத்து மெய்யரையும்
வளர்ந்த நல்லதிருமேனி மாயவரும் மறையவனும்
சங்கையுள்ள கேத்திரபாலன் தன்னுடனே சங்கிலியும்

குங்குமம் சிறந்தபொய்கை குவிந்த மலர்ச்சோலைகளும்
செங்கண் நெடுமால் கடர சிறந்த ஈஸ்வரபாலன் வர
அங்கண் நெடுவிழி மடவார் ஆன தெய்வக் கன்னியரும்
குடமாடி என்னும் மலை கொடி பிடித்தான் தன்னுடனே
அடைவாகவே யிருந்த அந்த மலைவாரத்திலே
பூங்காவுந் தேன் கமுகும் பொய்கைமரச் சோலைகளும்
பாங்கான வன்னமலைப் பாவையர்கள் குரவையிட
நித்தம் செந்நெல்விளை நிலமும் நீண்ட மரக்காவுகளும்
கொத்தலரும் செண்பமும் குங்குமப் பூங்காவனமும்
இத்தையெல்லாம் கண்டருளி இன்னாடு பொன்னாடெனவே
சித்தமுடன் திருமாலும் திருவான மலைநோக்கி
செங்கோலின் முறை நடக்கும் திருக்களந்தை தன்னைவிட்டு

## (திருக்குறுங்குடி வருதல்)

நங்கை மலர்மாதுபுயன் நாயகனார் பதியில் வந்தார்
நாயகனார் செய்தியென்று நற்றமிழ்சேர் மாயவனார்
வாகாகவே வானுவா மாமலையை வந்துகண்டு
அன்னேரம் மாயவனும் அப்பதி கண்டு அதிசயித்து
வன்னமுறும் மாயவனார் வானுவாமலை கடந்து
அங்குவர மாயவனார் அன்னேரமே நடந்து
சிங்கார நம்பிதேசம் தெரியுது மெற்கேயெனவே
குன்றாத மண்ணளந்தோன் குறுங்குடியோ வெனக்குறுகி
கன்றாலே கனியெறிந்த கரியமுகில் மேனியனார்
செய்குந்தமாக நின்ற தெட்சணா புவி கிழக்காய்
வைகுண்டபருவதமும் வளர்ந்திருந்த மாமலையும்
உருவாகவே யனுமான் ஒருமித்து இலங்கையிலே
வருமாது லட்சுமியை வைத்த சிறை காணவென்ன
குருவே சரணமென்ன குதித் தனுமான் பாய்ந்தமலை
திருவான மருபிமலை தென்பாகத்தே யிருக்க
மன்றுதனில் வல்லமலை வளர்ந்தங்கே தானிருக்க
மன்றுதனில் முன்னாளில் மாவலியா ரிருந்த தலம்
குன்றுகள் தான் நெருங்கும் மலை குடமாடி தன்னடியில்
வென்றியுள்ள நான்மறையோர் வேள்வி நடத்திட்ட தலம்
அன்று நெடுமாலவரும் அரன்தனைப் பூசித்த தலம்
குன்றதுதான் நடந்த தலம் குணங்கள் மிகச் சிறந்த தலம்
வைதேவன் தன்னருளால் வளர்ந்த நல்ல மாயவனார்
மெய்யாக ஆனிரையை மேய்த்ததொரு அரியதலம்
மலைநம்பிதானிருக்க மற்றுமொரு நம்பியென்ன
சிலை நம்பியாகவந்த திருப்பாற்கடல் நம்பியும்
புளகிதமாய் மாயவனார் பூங்காவன மானதிலே

அழகி நம்பியெனவே இருந்த அந்த அரிய தலம்
மண்ணளக்க வெண்ணையுண்டோன் மற்றுமொரு மாவலியால்
தண்மையுடனே குறுகி சஞ்சலித்து நின்ற தலம்
மருக்குறும் திருமார்பன் வண்ண முள்ள மாயவனார்
திருக்குறுந் திருவாக நின்றதொரு தெய்வதலம்
குறுங்குடி தனையே கண்டு கொண்டல் நிற வண்ணனாரும்
உறுங்குடி தானீதெனவே உற்ற நம்பிபதி யெனவே
அம்புவியில் கீர்த்தியுள்ள அழகியதோர் நம்பிபதி
உம்பர் தொழும் மாயவனார் உற்ற கேத்திரபாலனோடே
நம்பிவந்த மறையோனும் நற்சங்கிலி மா பூதமும்
வம்பணிந்த பூந்துளசி மாலை மாயன் வந்தபோது
இங்கிருந்த நம்பியானும் எதிரே சென்றுதான் வினவி
சங்கையுள்ள மாயவனார் சன்னிதியில் வந்திருந்தார்

## (திருமால் சங்கிலிபூதத்தையும் கேத்திரபாலனையும் நம்பிகோவில் காவலுக்கு அமர்த்துதல்)

செம்பொன் மணிமாளிகையும் திருக்கொடி மா மரமுடனே
நம்பு மலர்ச்சோலைகளும் நாட்டாறாம் வாவிகளாம்
அருண மணிக் கோபுரமும் ஐம்பொன் மணிமண்டபமும்
திருமதிலும் சுற்றுகளும் செங்கமல வாவிகளும்
கண்டுமகிழ்ந்து மாயன் காசினியை அளந்த கோமான்
தண்டமிழ்சேர் மாயவனார் சன்னிதியில் அமந்திருந்தார்
இருந்து தலம்கண்டபோதே இயல் நெடுமாலேதோ சொல்வார்
பருந்தேறும் மாயவனார் பாவனையா யேது சொல்வார்
வாராய் நீ கேத்திர பாலா வாய்த்த சங்கிலி பூதத்தானே
சீராக மலைநம்பியைச் சேவித்திங்கே நில்லுமென்றார்
நில்லுமென்று இவருரைக்க நேசமுள்ள கேத்திரபாலன்
சொல்லுவானா மொருவார்த்தைத் தூயமாயன்தன்னுடனே
உம்பாதம் சேவித்தல்லோ உம்மருகே பூசைகொண்டு
வண்மையுட னிருப்பேனென்று வந்தேன் நானும்முடனே
இடைவழியில் நிறுத்திவிட்டு எங்கே நீர் போறீரென்றார்
குடை பெரிய கேத்திரபாலன் கூறும் மொழிதனைக் கேட்டு
தவத்தைவிட்டீரென்ற வார்த்தைதான் நெடுமால் கேட்டபோதே
நவத்தமுள்ள செவிதனிலே நாராயந் தரித்ததுபோல்
கண்ணான மாயவனார் கண்கலங்கி மனம் நடுங்கி
புண்ணாக மனது நொந்து புவியளந்தோ ரேது சொல்வார்
வாராய் நீ கேத்திரபாலா வளமையொன்று சொல்லுகிறேன்
சீரான மலை நாட்டில் திருவனந்தாபுரமதிலே
நேராக நான்போறேன் நீயுமங்கே வந்ததுண்டால்
ஓராமல் அவர்தனையும் உறுகொலைகள் செய்திடுவாய்

தெய்வமாலை நாட்டிலுள்ள சீர்கேளு கேத்திரபாலா
மெய்யான சேரபூமி மேதினியின் வளமைகளும்
வேதத்தின் நெறிநடத்தும் வேதியர்கள் முறைமைகளும்
போதமுற்ற முனிமார்கள் பொருந்தும்முறை மாமறையும்
மருவஞ்சிக் குழலார்கள் மதனனென வந்தமன்னன்
திருவஞ்சியாதித்தன் செங்கோலி வீதிகளும்
ஆறிலொரு கடமைகொண்டு ஆண்டிருந்ததோர் பூமி
கூறிலொன்றாய்தான் பிரிந்தக் கொற்றவர்கள் மலைநாடு
பிரம வழி மறையோர்கள் பெண்ணீதி குன்றாமல்
மரபு நெறிக்குன்றாமல் மகாதேவர் பூசைகளும்
தெய்வநெறி யறியாமல் செங்கோலின் முறைநடத்தும்
வையகத்தில் நெறிநடத்தும் வடநாடு தென்னாடு
அந்தமாலை நாடுதனில் ஆன தெய்வச் சன்னிதியில்
வந்தால் நீ யன்னாட்டில் மனிதரையும் வதைகள்செய்வாய்
நல்லோர்கள்தனை வதைப்பாய் நாட்டிலுள்ளோர் நமை நகைப்பார்
நில்லு மிந்தப் பதிதனிலே நேசமுள்ள கேத்திரபாலா
எல்லையில்லா ஈஸ்வரபாலா ஏத்த சங்கிலியேயென்ன
மல்லனைய மாயன்சொல்ல மனம்மகிழ்ந்து கேத்திரபாலன்

## (திருமால் வள்ளியூர் வருதல்)

மின்பயிலும் மாயவனார் விரையவங்கே தான்நடக்க
அன்பாக வந்ததொரு அருள்மறையோன் பின்வரவே
வேதாள பூதம்வர மிகுகணங்கள் பின்தொடர
பாதாள ரூபமுடன் பலபூதம் தான்வரவே
கன்னலுடன் கதலிகளும் கால ணையு மேரிகளும்
செந்நெல்விளை திருநிலமும் தென்னைமரச் சோலைகளும்
சேலையொத்ததோர் விழியார் தெய்வமாதர் சூழ்ந்துவர
பாலைப் புதுவூரைவிட்டு பள்ளிகொண்டார்தான் நடந்தார்
மைக்குன்றாமேனியனார் வன்னமுள்ள மாயவனார்
நெய்க்குன்றாமலை கடந்து நீலநெடுமலையும் விட்டு
அப்பினிலே கண்வளர்ந்த அச்சுதனா ரப்பொழுதே
உப்புக்கண்டம் பொத்தைவிட்டு உயர்ந்த மலைக்காவுமிட்டு
பள்ளிகொண்ட மாயவனார் பாரவள்ளிநாகரில் வந்தார்

## (முப்பந்தல் பகுதிக்கு வருதல்)

வள்ளி நகர்தனைக்கடந்து வாராரே மாயவனார்
மின்னிமின்னி மழைபொழியும் பொன்னிவாய்க்கால் தனைக்கடந்து
வண்ணமுள்ள வண்மைநகர் வாவிகளுந்தான் கடந்து
அட்டதிக்கு மளந்த மாயன் தொட்டிச்சிகுளமும் விட்டு
முட்டுக்கு முட்டாக வந்த முப்பந்தல் தனிலே வந்தார்

## (தோவாளை பகுதிக்கு வருதல்)

செப்பமுடன் மாயவனார் திருக்கிராம அகரமதில்
ஒப்பமுடன்தான் வரவே உகந்து திருமாயவனார்
ஆடல் வர்ணப்புகழ்பெருமாள் அரக்கியர்கள்தனை வதைத்தோன்
தாடகை மலைதனிலே தானிருந்த தாடகைக்கு
ஊடுருவச் சரந்தொடுத்த உலகளந்தா ரப்பொழுதே
தோடணிந்த மலைமார்பன் தோவாளைதனைக் கடந்தார்

## (நாஞ்சில் நாட்டின் வளம் காணுதல்)

போதமுடனே நடந்துப் பூதநாதன் தன்னைக்கண்டார்
நாத கீதமொலி முழங்க நலலதெய்வார் சேவிக்கவே
மாஞ்சோலை குயில் கூவ மந்தி குதிபாயும் நாடு
நாஞ்சிவளர்நாடு கண்டார் நாராயணப்பெருமாள்
காராளர் போராளர் காசினியிற் பெரியோர்கள்
சீராளர் கங்கைக் குலம்சிறக்க வந்த நல்லோர்கள்
பேராளர் நாட்டிலுள்ள பெருமை கண்டங் ககம் மகிழ்ந்து
பேராளர் தன்கீர்த்தி பேசவுமோ தொலையாது
மோருக்கு முத்தளக்கும் முது நாஞ்சி நன்னாட்டில்
பாருக்குள் நெறிநடத்தும் பரிவுடைய வேளாளர்
செந்நெல்லால் எவ்வுயிர்க்கும் திருந்தஅறம்வளர்த்தோர்கள்
கன்னலாலே சிவபூசைக் கண்டிருந்த காராளர்
ஏரடித்துத் தொழிக்கலக்கி இசைந்தச் செந்நெல் நடுவாரும்
பாரகத்தி லுழுவாரும் பகடுதனைப் பூட்டிடுவார்
கூறுகூறாகத் திருத்திக் கூர்விழிசேர் கடைச்சியர்கள்
நாறு நடக்குரவையிடும் நல்லொலியும் சொல்லொலியும்
மடை தனிலே மொழுமொழென வலம்புரி நின்றோசையிட
நடைதனிலே தனமசைய நல்லசெந்நெல் நடுவாரும்
துடை தனிலே குழலசைய துண்டு செந்நெல் நடுவாரும்
கடைத்தெருவில் நடப்பாரும் கான வர்ணமயில் போலே
நெல்விளைந்து கதிர்விரிய நெடுங்கரும்பு குலைசரிய
வல்ல வயல்கூறுக் கொண்டு வளைந்து செந்நெல் அரிவாரும்
போரேறக் கதிர்குவித்துப் பெரும்பகடு தனைப்பூட்டி
சூடேறச் சூடடித்து தூத்து நன்றாய் பொலிவீசி
முத்தாலே நெல்முகந்து மூலைதனில் குவித்திடுவார்
கற்றாவு பால் சுரந்து கன்றுதனக் கிரங்கி நிற்க
பறளி நல்லாறுகளும் பல அணையு மேரிகளும்
அறலினமும் பறலினமும் ஆன செந்நெல் விளைநிலமும்
நன்னாடு யிதுவெனவே நாரணர் கண்டகம் மகிழ்ந்து

## (திருமால் சுசீந்திரம் வருதல்)

நன்னாஞ்சி நாட்டிலுள்ள நகர்வளமுங் கண்டருளி
தென்னாடு சுசிந்தைப்பதி சென்றுக் கண்டாரே பெருமாள்
வண்ணமுள்ள திருமதிலும் வளர்ந்தச் சிகரமுடியும்
அந்தர மார்க்கமாக ஆனதெய்வ நாயகனாம்
இந்திரன் பூசித்தத் தலம் இதுவேதானென மகிழ்ந்து
சிவிந்தா புரியானதிலே தெய்வரங்கப்பெருமானும்
சௌந்தரியமான தெய்வ தாணுமா லயனாரை
விந்தை நெடுமாயவரும் மெய்ப்பாகவே மகிழ்ந்து
வந்துக் கண்டு மாயவனார் வாய்த்தத் திருக்கண் களிக்க
கண்களிக்கக் கண்டு நின்று கமலபதம்தான் தொழவே
தண்களிக்கப் பெருமையுள்ள தாணுமா லயனாரும்
வந்தீரோ மாயவரே வடக்கிருந்து இப்போது
எங்கே தான்போறீர் நீர் என மொழிந்தா ரீசுரரும்
ஈசுரனார் தாம்கேட்க ஏதுரைப்பார் மாயவனார்
ஆசையுட னொரு வார்த்தையது கேளு மீசுரரே
பெருவனம்தானா யிந்த பேரான தென்புவியில்
திருவனந்தம் தனிலிருக்கச் சீராக நான் போறேன்
என்று திருமாலுரைக்க ஈசுரரும் மனமகிழ்ந்து
நன்றெனவே வந்ததொரு நாரணரைத்தான் வினவி
தென்கடலும் திசைமோதி திசைவெளியும் மலையளவும்
மின்கடந்துக் கொள்வேனென்று வீறுடனே நிற்குதுகாண்
கிட்டவங்கே கீழ்பாலே கிருபையுடன் நம்முடனே
மட்டணியும் பூங்குழலாள் மாறியாட வந்தவள்தான்
திட்டெனவே தென்கரைக்குச் சிதறாமலே யமர்த்தி
வெட்டெனவே வந்திருந்தாள் வீறுடனே மாதங்கியும்
வன்னமுள்ள மாதங்கியை மயிலினியாள் மனம் மகிழ்ந்து
கன்னியவள் குமரியென்று கலங்காமல் வீற்றிருந்தாள்
அப்படியே தென்பூமியை அலைகடலும் கொள்ளாமல்
இப்படியே இருப்பதுவும் எமைவேண்டிச் செய்ததுதான்
என்று சொல்லி ஈசுரரும் இன்பமுற்று மனம்மகிழ்ந்து
அன்றிரவு நாரணர்க்குஆனபூசை யருள் புரிந்து
குன்றுதனை எடுத்தமாயன் கோலமுடன் விடைகொடுப்பார்

## (திருமால் கோட்டாறு வருதல்)

மன்றளந்த மாயவனார் வருமளவில் மறையவனும்
பினனேதான் வருமளவில் பெருமாளைக் காணாமல்
அன்னேரம் மனதுநொந்து அருள் மறையோன்தான் நடந்தார்
சுசிந்தைவிட்டு மேற்கேநோக்கி திருமாலும் வந்தபோது
குவிந்த மலர்ச்சோலைகளும் கூண்ட பல வாவிகளும்

வேட்டமுட னிந்திரனார் வெள்ளானை முன்னாளில்
கோட்டாலே குத்தி வந்த கோட்டாறுதான் கடந்து
அஞ்சன நல்மேனியனார் ஆன புகழ் மாயவனார்

## (வள்ளியாறு காணுதல்)

பஞ்சவர்ணக்காடும் விட்டு பள்ளிகொண்டார் தான்நடந்து
மஞ்சாரும்மேனியனார் மறையவனைப் பின் னகற்றி
வஞ்சமற்ற திருமாலும் வள்ளியாறுதனிலே வந்தார்

## (விருத்தம்)

வந்தார் வள்ளியாறுதனின் வளமைகண்டு அகமகிழ்ந்து
செந்தாருறையும் வாவிகளும் சேரபூமி நகரிதென்ன
பொந்தாதுறையும் மடமாதும் புனமா மயிலி னிள நடையும்
சந்தோஷங் கொண்டகம் மகிழ்ந்துதானே நெடுமா லினிதிருந்தார்
வேள்விமலையில் தலையைவைத்து வெண்பூதன்னி லுடலை வைத்து
ஆழியதிலே கால் நீட்டி அருஞ் செந்நெலிலே கைபரப்பி
நாளும் நாளும் புகழோங்க நடந் தந்தி கண்டகம் மகிழ்ந்து
வாளும் சிலையும் தரித்தபிரான் வள்ளியாறுதான் கடந்தார்

## (திருமால் மலை நாட்டின் வளம் காணுதல்)

## (வேறு)

வள்ளியாறு தான்கடந்து மாயவனார் வாரபோது
தெள்ளியதோர் ஸ்ரீரங்கத்தில் சேவித்த நல்மறையோனும்
பள்ளிகொண்ட மாயவரை பற்றிவந்த பார்ப்பானும்
கொள்ளிவாய் பூதமுடனே கூண்டுதெய்வார் சேவிக்கவே
தெய்வ மலை நாடதிலே திருமாலும் வந்தபோது
வையகந்தானளந்த மாயன் மலைநாட்டின் நீதிகண்டார்
நீடுபுகழான தெய்வ நேச மலைநாடதிலே
நாடுகளும் வீதிகளும் நல்லமன்னர்தன் முறையும்
வஞ்சி யாதித்தவர்மா வாழுந் தெய்வமலைநாடு
செஞ்சொல்வளர் சேரமன்னர் செலுத்துகின்ற குருநாடு
சிறந்தப் பல்கலை நூலும் தெரியும் திருமலைநாடு
அறந் தழைக்கவந்த மன்னர் ஆளும் தெய்வ மலைநாடு
கன்னடர் தெலுங்கர்சேனைக் காணவந்த பேரை எல்லாம்
சொன்னச் சொன்ன வீரம்செய்து துரத்துகின்ற மலைநாடு
மங்காதக் கீர்த்தியுள்ள மா சனங்கள் வாழும்நாடு
சிங்காரத் துரை மக்களும் செல்வரவர் வாழும்நாடு
பகையைத் துரத்திவென்ற பஞ்சவர்கள் கீர்த்தியைப்போல்
அகத்தடிமை மா சனங்கள் அன்புடனே வாழும் நாடு

வரிசைக் குமரியுள்ள வண்ணத் தெய்வமலை நாடு
அரிசிப்படி மா சனங்கள் அன்புடனே வாழும் நாடு
எங்குமெங்கும் புகழாக லட்சுமியார் சிறந்திருக்கும்
கங்கைக்குல வங்கிசத்தோர் கருணையுடன் வாழும் நாடு
தங்கமது வாழும் நாடு தன்மையுள்ள தெய்வநாடு
குங்குமமும் செந்தாமரையும் கூடவே வளரும் நாடு
சேரகுல மன்னவரும் சிறந்த நல்ல மறையவனும்
நேராக நான்குசாதி நீதியுடன் வாழும் நாடு
தெய்வமுறை திருமுறையும் செல்வமிது தன்னுடனே
மைவிழிசேர் பெண்பிறப்பு வரம்பழியாமற் காத்து
பெரும் பகைகள் வராமல் பேரரசுக் குன்றாமல்
வரம்பழியாமல் காத்த மன்னர் சேரன் வாழும் நாடு
மைக்கொடிய கண்ணாரை வதைத்ததோ ரடைக்கல மாயர்
கைக்கொடிய பட்டணத்தைக் கண்டுமனம் மகிழ்ந்து மாயன்
மாமரமும் பூமரமும் வாய்த்த நல்ல பலாமரமும்
காமரமும் செண்பகமும் கன்னலுடன் கதலிகளும்
ஆசனியும் குங்குமமும் அரசதிக மாமரமும்
வேயுடனே தாழைகளும் விளங்குத் தென்னங் காவுகளும்
வன்ன வண்ணச் சோலைகளும் வாவியும் செந்தாமரையும்
அன்னமுடன்குருவினமும் அன்புடனே என்றும் நன்றாய்
சேர்ந்து மிகவே வாழும் தெய்வ வீரமலை நாடு
வார்ந்துவமாய் ராசமன்னர் வாழுகின்ற மலைநாடு
தென்னாடு பொன்னாடு சேரமன்னர் வாழும் நாடு
நன்னாடு இதுவெனவே நாரணர் கொண்டாடிடவே
செந்நெல் வளர் நன்னாடு சென்றயன்பதி மீதில்வந்தார்

### (மலைநாட்டில் பூஜைகொள்ள நினைத்தல்)

மன்னர் நீதியும் வளமும் மாயவரும் கண்டருளி
இந்த மலை நன்னாட்டில் இருந்து பூசைக் கொள்ளவென்று
வந்த மறையோனுடனே மகத்துவமாய் முன்னும் பின்னும்
இருக்கத் தலமே நமக்கு ஏற்றதலம் வேணுமென்று
மருவெட்டுந் திருமார்பன் திருவெட்டாறு தனிலேவந்தார்
மாதிலங்குந் திண்புயத்தான் மாயவனார் தானுமப்போ
ஆதிகேசவப் பெருமாள் அவர்தனைக் கண்டகம் மகிழ்ந்து
குழித்துறையும்தான் கடந்து குற்றமற்ற மாயவனார்
பழிப்பற்ற வீரராசன் பாறசாலைதனிலே வந்தார்

### (திருவனந்தபுரம் காணுதல்)

குவளைவிழி மாயவனார் குன்றாம லப்பொழுது
தவளைக் கரையாக் குளமும்தான் கடந்தார் மாயவனார்

உதியங்குளம் தான் கடந்து உற்றாண்மைக்கோடு மிட்டு
நிதியாரும் மாயவனார் நெய்யாற்றின்கரை கடந்து
கூட்டப்பனைதான் கடந்து குறும்பனையாம் சேரி புக்கி
நாட்டமுடன்தான் வரவே நல்லபுகழ் மாயவனார்
வேங்காநல்லூரு மிட்டு விழிஞ்ஞுமதுந்தான் கடந்து
நீங்காம லப்பொழுதே நேமமும் கண்டார் பெருமாள்
கோட்டுக்கால்தான் போட்டு குருந்தேறும் மாயவனார்
காட்டூருதனைக்கடந்து கரமனையாறதுவுமிட்டு
சோலைக் கரமனை யாற்றை சொல்லத் தொலையாதெனவே
சாலையம்பதி கடந்தார் தண்டரள் மாயவனார்
அருமருந்தன்ன மாயன் அழகுசிறந்திட்டதெய்வம்
திருவனந்தா புரிவனத்தைச் சென்று கண்டார்பெருமாள்

## (விருத்தம்)

திருவனந்தா வளத்தைச் சென்று நின்றெங்கு மானேன்
மருவனப் பிறவித் துன்ப மயக்கறுத் தாண்ட செல்வன்
பெருவன மீதேதென்ன பேதலித் தமர்ந்து நின்று
அருமையும் பெருமையானோ னமர்ந்தனன் பெருவனத்தே.

## (வேறு)

சென்று பெருமா ளனந்தா புரத்தில்
திக்குந் திசையும் தெரியாமல் நின்றார்
அன்று புவன மளந்த நெடுமால்
ஆன நெடுமால் சிறு குழந்தை யுருவாக
தள்ளு நடையும் தலைமொழியுமாக
தாலநெடுமால் சிறு குழவி யுருவாக
வள்ளல் பொருத விழி மஞ்சனய மேனி
வாசமலர் பூந்துளசி மாலை மணம் வீச
தண்டை யசைய கனகப் பாதமலர் கொஞ்ச
சதங்கைமணி கிண் கிணி யசைந்து இசைபாட
துண்ட நுதலிற் கனக சுட்டியது புரள
துய்ய வரையிற் கன வரைஞாணசைய
முண்டகம் மலர்ந்தத் திருவுந்தியதன் மேலே
முத்து வடமாலையது கொத்து மணிமார்பில்
கொண்டலெனும் மேனியனார் ஞாயிறொளிபோலே
கொஞ்சு மொழிவாய்முகமும் அஞ்சனயமேனி
தஞ்சமெனவே யுலகைதா னாண்ட பெருமாள்

## (சிறுகுல மாது குழந்தையைக் காணுதல்)

சங்கைபெறவே குழவி தன்னுடைய ரூபம்
வஞ்சமறவே புரி யனந்தாவனத்தில்

வந்தப் பெருமாளை யொரு கடைமாது கண்டாள்
கண்ட சிறு குலமாது ஆண்டை யிருளென்ன
கார்வண்ணனின் வரவு ஏதென நினைத்தாள்
தண்டமிழ் நூல் மறையவனை பின்னாகத்தேடி
தாகமுறவே வரவே ஒருவரையுங் காணாள்
இப்பாரெல்லாம் புகழ் இவ்வனத்தில் நின்ற
இலுப்பையின் பேட்டிலொழித்தார் பெருமாள்
அப்போதுக் கண்டதொரு சிறுகுல மடந்தை

## (மறையோன் திருமாலை தேடிப் புலம்புதல்)

ஆருமறியா வனத்திலேது வரவென்ன
நின்றபொழுதே யொரு மறையவனும் வந்து
நீலநெடுமா லடியைத் தேடியே யோடி
மன்று தனில் நின்றவனும் மாயவனைக் காணான்
மனம் மறுகியே மனசு வறுமையுடன் நின்றான்
நொந்து மறையோ னவனும் தேடியே காணான்
நூலசைய மார்பலைய தேடியே ஓடி
இந்த இலுப்பை யடியில் வந்தாரே பெருமாள்
எங்கே யொழித்தாரோ இசைந்தடிகள் காணேன்
ஓடுவான் மீளுவான் உயர வனமெங்கும்
உற்ற கன்றை விட்ட ஆவினம் போலே
வாடுவான் தேடுவான் நெஞ்சோடு அறைவான்
வாகுபெறு தெய்வமே நாரணா கோவே
மாயமோ தெய்வமே நாரணா எனவே
வளமையுடன் மாயவன் மந்திர முரைப்பான்
நேசமா யரி கிருஷ்ணா கோவிந்தா வென்பான்
நேராக வென்னை மனம் விட்டீரோ வென்பான்
அழுவான் தொழுவான் குழைந்து விழுவான்
அரி கரி நாரணா அரி நமா வென்பான்
தெளிவரிய சிங்கமே ஸ்ரீ கிருஷ்ணா வென்பான்
ஸ்ரீ பத்மநாபா வெளி நில்லு மென்பான்
அரி கரி கோவிந்தா கேசவா வென்பான்
ஆராழி மாயனே மாயமோவென்ன
புவிமகள் புருடனே பூதநாயகனே
புண்ணியமோ இது வென்று முறையிடுவான்
காவிலுறத் தேடுவான் காணும் மதியறியான்
காடுமல்ல நாடுமல்ல வீடு குடியில்லை
தாவியே தாய்விட்ட கன்றதுவை போல
தடுமாறியே மனசு கெடுமாறி மிகுவாய்

ஆருமிலையோ வனம் தன்னிலிது மீதே
ஐயகோ வெய்யகோ வென்ன அழுவான்
ஊருமிலை போய்விட ஒருவரு மிலையோ
உண்மையுடன் மாயவரைக் கண்டவரு மிலையோ
என்று சொல்லி மறையவனும் முறையிட் டழுது

## (சிறுகுலமாது திருமாலைக் கண்டதைக் கூறுதல்)

இறங்கி மறையோனவனும் வீதியிற் பார்த்தால்
குன்றசைய தனமசைய வஞ்சியிடை துவள
கோலமயிலென்ன வொரு கொம்பனையும் நின்றாள்
கொஞ்சு விழியுமொளியும் செஞ்சொல் மொழியழகும்
குற்றமறு வண்ணமுள்ள அன்னமொனும் நடையும்
கஞ்சமுக மென்ன விழி காமசர மென்ன
கன்னி மொழியென்னு நுதல் காமதனு சென்ன
மஞ்சனைய குழலழ்கு வடிவு மதனென்ன
வானுலகுதனில் தெய்வ அரம்பை யிவளென்ன
பஞ்செனை நடந்துவரு பாதம் மலரென்ன
பற்க் கோர்வையும் சால நற்கோர்வை யென்ன
இடைதுவள நடையசைய இருவிழிகள் புரள
இரணமுகத்து ராச ராச மதனென்ன
உடை கனக அல்குலிசை ஊர்வசிபோ லொருத்தி
உலகுதனிலே யொரு கடைமாது நின்றாள்
நின்ற சிறு குலமாதை வென்றி மறையோனும்
நேரிட்டுப் பார்க்கவே திருமுகத்தைக் கண்டான்
இன்றிதிலே நின்றதோரு ஏந்திழையே நீதான்
எங்கு நின்றிங்கொருவர் வந்தது கண்டீரோ
கண்டீரோ வென்று முறை மாமறையோன் கேட்க
காரிகையு மங்கோ ரிசைந்த மொழி சொன்னாள்
தண்டையொடு பாதமலர் கிண்கிணிகள் கொஞ்ச
தாழ்வடமு மரைஞாணும் மேக வுருவாக
தப்பரவியே நடையிட்டு வொரு பாலன்
தானாக யிந்தவழி பாய்ந்து போய் நின்றான்
இப் பாரெலாம் புகழு மிவ்வனத்தில் நின்ற
இலுப்பையின் பேட்டில் புகுந்ததொரு பாலன்
பிள்ளையொழித் திங்கொருவர் நாங்கள் வரக் காணோம்
பெரியோர்களா யொருவர் வந்தவருமில்லை
வள்ளைப் பெருங்கண் மடமாது வுரை செப்ப

## (இலுப்பைப் பேட்டில் மறையோன் திருமாலைக் காணுதல்)

மறையவனு மங்கே மனங் குளிர்ந்தனனே
ஓடியே சென்றவனும் நாடி வனமூடே
உயர்ந்த மரப் போட்டினி லுற்றவனும் பார்த்தான்
தேடியே பார்ப்பானும் வாடி மெலிவாகி
சீரணியும் மேனியுருத் தேடியவன் காணான்
வந்துமரப் பேட்டிற் புகுந்த வுருவெங்கே
வரவழைத்தென்னை நீர் மாயமோ செய்தீர்
அந்த மறையோனுடைய விழி தனிலுங் காணான்
அரவணையிற் பள்ளிகொள் மாயனுருதன்னை
சிந்தைதனி லஞ்செழுத்தை யுச்சரித்து நாடி
ஸ்ரீ பத்மநாபாவென் றுத்தவனும் பார்த்தான்
விந்தைசெறி பாதமலர் கிண்கிணிகள் கொஞ்ச
வீரதண்டையிட விரைந்து நடம் செய்தார்
அச்சுதன் மதுதானென இசைந்தவ னிருந்தான்
மெச்சியே முகுந்தண்டம் நிச்சயங் கண்டு
விண்ணவர்களென்ன வரும் மாதவனிருந்தான்
இருந்து பெருமாளுமே இலுப்பையின் மூட்டில்
இலங்கு முடி தெற்கு வடக்காக நிமிர்ந்தாரே
பருந்தேறும் மாயவன் பாதம் வடக்காக
பைம் பொன்னொளி மின்னுமுடி பாதாள மட்டாய்
தெற்கு வடக்காகவே பள்ளி கொண்ட மாயன்
சீராக யின்பத் திருவனந்தல் செய்தார்
நிற்கும் புகழான இலுப்பையினூடே
நெடுமாயவன் அனந்தம் பள்ளி கொண்டார்.

### (விருத்தம்)

பள்ளிதான் கொண்டு மாயன் பருவரையென்ன நின்று
உள்ளுறைந்திருந்த சோதி உலகினி லொன்றாய் நின்றேன்
புள்ளினை ஈடு செய்தோன் பூதலமளந்த கோமான்
தெள்ளிய மலை நாடுள்ளில் திருவுருவனந்தல் செய்தார்.

## (மறையோன் திருமாலுக்குப் பூஜை செய்தல்)

### (வேறு)

திருவனந்தபுரமதிலே தெற்கு வடக்காக மாயன்
வரிசையுடன் பள்ளிகொண்டார் வானமுட்ட நின்ற மாயன்
உரிமையுள்ள மறையோனும் ஊர் தேடிப் போனபோது

எதிராக மறையவனோர் ஈழுவனை எதிரே கண்டான்
திருமால்க்குத் தீபங்காட்ட தீ வேணுமென் றுரைத்தான்
அரியதொரு ஈழுவனும் ஆன தென்னஞ் சிரட்டை தன்னை
தீபதூபம் காட்டவேணும் சிரட்டையின்னம் கொடுவுமென்றான்
ஆயவனு மப்பொழுதே அஞ்சி சிரட்டை கொடுத்தான்
நெருப்பெடுத்து மறையவனும் நீதியுடன் வந்து நின்றான்
திருக் குங்கிலியமிட்டு திருமாற்குப் பூசை செய்தான்

### (திருமால் மன்னன் கனவில் தோன்றி கோவில் கட்டச் சொல்லுதல்)

அந்த இரவு நேரத்திலே ஆன திரு நெடுமாலும்
இந்த நல்ல ராச்சியத்தை இருந்தாண்ட மன்னவர்க்கு
நினைவாக நித்திரைக்கே நித்தலம் செய்தார் பெருமாள்
புவனமதி லிருந்தவர்க்குப் பூவுலகில் மன்னவர்கள்
திருச்சேரும் மன்னவன்தன் திருமனதி லுதித்ததுவே

### (மந்திரிமாரிடம் மன்னன் கண்டக் கனவைக் கூறுதல்)

மருச்சேரும் மலைமார்பன் மந்திரிமார் தனக்குரைத்தான்
இன்றிரவில் நானே கண்ட இருங்கனவு கேளுமையா
வண்ணமுள்ள மாயவனார் வந்து நின்றார் தானொருவர்
வடநாடு தன்னில் நின்று வந்தோமுன் பூமியிலே
அடையுடனே திருக்கோவில் அரிய சுற்று மாளிகையும்
இடமுடைய மண்டபமும் எனக்கு வைத்துத் தாருமென்றார்
வடமறையும் புரிநூலும் மறையவனாய் வந்து நின்றார்
சேடனைப்போலே யவரும் சீறி முன்னேவரவுங் கண்டென்
ஈடுடைய கருடனொன்று இவர் கூட வரவும் கண்டேன்
கோடுடைய குலயானை கொஞ்சி முன்னே வரவுங் கண்டேன்
நாடு தன்னில் நம்முடைய நாராயணர் பதியுமில்லை
ஈதெது மந்திரிகாள் இசைந்த மொழி சொல்லுமென்றார்

### (மாயோன் பள்ளிகொண்ட இடத்தைக் காணுதல்)

மாதேறும் பயத்தழகன் மன்னவனார் கேட்ட போதே
மந்திரிமார் தந்திரிகள் மறுத்தொரு விண்ணப்பம் செய்தார்
செந்தமிழோர் மனம்மகிழ திருச்சேரும் மன்னவனே
விந்தை செறி திண்புயனே வீரமணி மாலை மார்பா
ஐந்திருபோற் குடையுடைய அரசே கெம்பீர மன்னா
சிந்தையுற்று திருமனதில் சிறந்த கனா வானதெல்லாம்
சந்தமுட னுரைத்திடலாம் தாரரசே கேளுமென்றார்
மாயவனார் தென்பூமியில் வந்து கண்டு மாநிலத்தில்

பாயமுட னனந்தமதில் பள்ளி கொண்ட பெருமாளும்
ஆசையுடனொரு மறையோன் அமர்ந்திருந்தானெனக் கேட்டார்
தேசமதில் பெறும் கீர்த்தி சென்று நாம் காண்போ மென்றார்
அந்நேரம் மன்னவரும் ஆன புகழ் மந்திரிமார்
வண்ணமுள்ள மந்திரிமார் வந்து கண்டார் வனமதிலே
ஒருகாத நீளமென்ன உலகளந்தார் பள்ளிகொள்ள
வருங்கதம்மா கூடவந்த மறையவனும் தானிருந்தான்
இருந்த அந்த மறையோனையும் இன்பமுள்ள மாயனையும்
திருந்தவந்த மன்னவர்கள் செப்பமுடன் கண்டு சென்று
காதில் வந்த மன்னவர்கள் கண்டார்கள் கண்களிக்க

## (வேதியன் திருமால் பள்ளிகொண்ட வரலாற்றைக் கூறுதல்)

வேதியனைக் கேட்பளவில் விரைந்து சொன்னான் வரலாறு
சேதியுடன் தெய்வப்பதி ஸ்ரீ ரங்கத்திலிருந்ததுவும்
சோதி பெறும் மாயவர்க்குத் திருப்பூரை செய்ததுவும்
வேதியர்கள் வெறுத்ததுவும் மிகுதவங்கள் செய்ததுவும்
ஆதிமறை மாயவரும் அருள்புரிந்து வந்ததுவும்
அனந்தமதில் போவதற்கு அருள் நெடுமால் வந்ததுவும்
வனந்தனிலே வந்ததுவும் மாறாடி யொழித்ததுவும்
கண்டுநின்ற கடைச்சியவள் காட்டியங்கே கொடுத்ததுவும்
கெண்டையங்கண் விழிமடவாள் கிருபையுடன் சொன்னதுவும்
சென்றந்த ஈழுவனார் தென்னஞ்சிரட்டை கொடுத்ததுவும்
அன்று திருத்தீப தூபம் அருள் மறையோன் செய்ததுவும்
இவ்வாறு நடந்தச் செய்தி இன்பமுடன் மறையோனும்
செவ்வாகச் சொன்னபோது தேசமன்னர் மனம்மகிழ்ந்து

## (கோவில் அமைக்க நினைத்து மன்னன் திருமாலை வணங்குதல்)

மறைதேட வுரைதேட மாதவர்கள்தான் தேட
உறைதேட உயிர்தேட உற்றவர்கள்தான் தேட
தமைத்தேடி எல்லோரும் தட்டழிந்து காணாதார்
நமைத்தேடி யாளவந்தார் நல்ல புகழ் மாயவனார்
என்று மன்ன ரின்பமுற்று இறையோனைத்தான் வணங்கி
முன்றுதனில் நின்றதொரு மூன்றதொரு பத்து மன்னர்
இன்றிதிலே கோயில் வைக்க இசைந்தாரே மன்னவர்கள்
மன்றுதனில் மாளிகையும் மன்னவர்கள் காணவென்று
திருமாலுந் திருவுருவம் சென்று கண்ட மன்னவர்கள்

உருவேது பதமேது ஒளிமுடி தானிங்கேது
பருவதம்போ லுருவான பச்சைநிற மேனியுடன்
மருதுளசி மாயவனார் மண்மீதிற் பள்ளி கொண்டார்
அருமேனி வுயரமது ஆகாசம் முட்டிநிற்கும்
திருமேனி நீளமது தெரியாது வொருவருக்கும்
இருபாதம் வடமலையில் இயல்முடிதான் கடல் வரையும்
உருவான பொருளமைய உயர் மாடம் வைப்போமென்ன
என்று நின்று மன்னவர்கள் எல்லோரு மொருமனமாய்
குன்றுதனை யெடுத்தவனே கோபாலா சரணமென்ன
மன்றுதனை யன்றளந்து மண்ணையுண்டோன் வெண்ணையுண்டோன்
கன்றுதனைக் கால்வாரி கனி எறிந்த கார்வண்ணனே
பேச்சி முலைப்பாலையுண்டு பேதை துகில் கொண்டோனே
வாச்சதொரு கடல் வண்ணனே மலர்மாதின் திருமார்பா
ஏச்சியே குண்டோதரனை இயல்முடிக எறுத்தோனே
காச்சிய பால் வெண்ணைதனைக் களவு செய்தக் கார்வண்ணரே
உன்னுடைய பெருமை தன்னை உலகிலுள்ளோ ரறிவாரோ
என்னுடைய தண்டளவும் இனிச்சுருங்க வேணுமென்றார்
கோத்திரத்தில் மன்னரெல்லாம் கூண்டு நின்றங் கப்பொழுதே
தோத்திரங்கள் செய்து நிற்க தூயமுடி மன்னவர்கள்
சேரமன்னர் திருக்கரத்தில் தெண்டளவு சுருங்கியதாம்
பாரமுடி மன்னவர்கள் பாவித்தங்கே மனமகிழ்ந்து

### (கோயில் அமைக்க கன்னரை அழைத்தலும் அவர் சிறப்பும்)

வருமேனி பெருமாள் தான் மன்னவர்கள் தங்களுக்காய்
பருமேனிதான் சிறுத்து பள்ளிகொண்ட பெருமாள்தான்
திருமேனி சுருங்கக் கண்டு தெய்வமறை மன்னவர்கள்
திருக்கோயில் வைக்கவென்ன தெய்வக்கண்ணாளரை யழைத்து
கண்ணாளர் பண்ணாளர் காசினியில் சிறந்தோர்கள்
மண்ணாளும் மன்னவர்க்கு மணிமுடிகள் வைத்தோர்கள்
பொன்னுலகி லிந்திரர்க்கு புட்பத்தேர் கொடுத்தோர்கள்
மின்னுமணி யனந்தையிலே வீறாக யிருந்தவர்கள்
ஆகாசம் தனிலேறி அரும்பொறிகள் சமைத்தோர்கள்
வாகான நீரில்வர மரக்கலங்கள் சமைத்தோர்கள்
எண்ணரிய பல்லுயிர்க்கும் இனிதாகவே வளர்க்க
மண்ணை உழவாயுதங்கள் வகுத்து மிகக் கொடுத்தோர்கள்
உட்சமயம் புறச்சமயம் உகந்து சிவனருளாலே
நற்சமயம் பன்னிரண்டும் நல்வேடம் கண்டவர்கள்
மண்ணிலுள்ள மனிதருக்கு மானிபத்தைக் காத்தவர்கள்

பண்ணரிய பாவலர்க்கும் பாரமறை வேதியர்க்கும்
எண்ணும் முறை முறையாக எழுத்தாணி கொடுத்தோர்கள்
விண்ணாளும் வேந்தருக்கு வீர சரம் கொடுத்தோர்கள்
நட்டுவர்கள் முட்டுவர்கள் நல்லதொரு நாடகமும்
கொட்ட நல்லமத்தளமும் கூர்மையுடன் கொடுத்தோர்கள்
மாவுத்தன் தனக்கடங்கா மதகரியைத் தான்நிறுத்த
வாகொத்த துறட்டியுடன் மழுவாளும் கொடுத்தோர்கள்
இல்லாளும் பர்த்தாவும் இருபேருமொரு சரட்டில்
கல்லுருவந்தனைச் சமைத்து கைத்தொழவே வைத்தோர்கள்
வல்லநல்ல இசைபாட வாணரெனும் தமிழோர்க்கு
வில்லுடனே வீசுகோலும் வெற்றியுடன் கொடுத்தோர்கள்
மண்ணிலுள்ள மன்னவர்கள் மனமகிழ்ந்து தங்கப்பொழுதே
கண்ணுள்ளோ ரிவரெனவே கண்ணாளர்தனை யழைக்க
மன்னர்விட்ட ஆளோடே மாந்தையர்கள் வந்து கண்டு
தென்னவரே உலகாண்ட சேரகுலத் துதித்தவரே
சீராரும் மன்னவரே திருவஞ்சிக்களத்தோரே
பாரான வந்திருக்கும் பாரமுடி மன்னவரே
திருந்தும் முடிராசர்களே சிறந்தாளைவிட்டு யிப்போ
பரிந்தெம்மை யழைத்துவிட்ட பணிவிடை ஏதெனத் தொழுதார்

## (மன்னன் கோயில்கட்டக் கூறுதலும் மரம்வெட்டச் செல்லுதலும்)

தொழுததொரு மாந்தையரைத் துய்யமுடிமன்னர்கண்டு
பழுதறவே மரங்கள் வெட்ட பாங்குடனே மாந்தையர்க்கு
சொல்லுவாரா மொருவார்த்தைத் துங்கமுடி மன்னவனார்
மல்லனைய திண்புயத்தான் மாயவர்க்கு இப்பொழுதே
வல்ல மணிமண்டபமும் வாய்த்த மதில் சுற்றுகளும்
அல்லனைய மாயவர்க்கு அழகுபெற வைக்கவேணும்
மன்னவர்க ளருள்புரிய மாந்தையர்கள் விடைகொடுபோய்
சின்னவுளி பெருவுளியும் சீரானவாச்சிகளும்
சீரானச் சிற்றுளியும் சிறந்த நல்ல பேருளியும்
காராரும் மலைபிளக்கக் கனத்தநல்ல கல்லுளியும்
நேராகத் தானெடுத்து நீதியுள்ள மாந்தையர்கள்
பேரானமலை நோக்கி பெருமையுடன் நடந்தனரே.

## (விருத்தம்)

நடந்தனர் மாந்தை வேந்தர் நல்லதோர் மலையை நோக்கி
கடந்து வெங்கானம்புக்கும் கனவரை தன்னின் மீதே

அடர்ந்ததோர் சோலைதன்னில் அரியதோர் மரங்கள் கண்டு
தடந்ததோர் திருநிலைக்கால்தான் குறித்தடுத்து நின்றார்.

### (மலையை உடைத்தல்)

### (வேறு)

கட்டமான மலையைப் பிளக்கவே
கண்ட மண்கட்டம் தன்னைப்பறித்தனர்
துட்டமான உளிகள் நிறுத்தவே
தூண்டிப் பாண்டிக்குழிகள் பறித்தனர்
கொட்டுலாவிய கூடமெடுத்தவர்
கோலமாந்தைய ரொன்றுபோற் கூடியே
திட்டெனவே எடுத்துடன் போட்டல்லோ
திருவனந்தாபுரத்திற் கொடு வந்தார்

### (தூண்களில் சிற்பம் செதுக்குதல்)

கொண்டுவந்து திருநிலைக் கால்களை
கோலமாகவே சித்திரம் கொத்தினார்
வண்டுபாடிடும் சோலைமரத்தையே
வன்ன வண்ணங்கள் செய்து வகுத்தனர்
சிங்கத்தூண்களுடன் யாழித்தூண்களும்
சீரதாகவே ரத்தின தூண்களும்
அங்கத்தூண்களும் ஆனையின் தூண்களும்
அம்மானையது ஆடிய தூண்களும்
அன்னத்தோடே யழகிய வர்ணமும்
ஆன நல்ல அருள்மணித் தூண்களும்
பொன்மயமான தாமரைப்பூவதும்
பொற்கிளியும் மயிலுமெழுதினார்
வாகானதோர் வாரணத்தூண்களும்
வாய்த்த நல்ல பலபல வர்ணமும்
பாசமாமணித் தூண்களும் பண்ணியே
பச்சைமாலுக்குக் கோயில்தான் வைக்கவே
முத்தியாகப் பலவர்ணம் செய்தார்
முத்திலங்கும் முகப்பணித் தூண்களும்
சித்திரப் பணிசெய்து முகித்துடன்
சீர்மையான வரிக்கல் செதுக்கியே
உத்திரங்களும் செய்து முடித்துடன்

## (திருநிலைக்கால் வைத்தல்)

ஊடே நல்லதோர் மாந்தையர் கூடியே
சித்திரை மாசம் பத்தாம் தியாதியில்
சிறந்ததோர் நல்ல சுக்கிர வாரத்தில்
உத்திரமென்று நாளில் சிறந்ததோர்
யோகவாரங்கள் பூரணபக்கமும்
சிக்கெனநல்ல சிங்கமுகூர்த்தத்தில்
தேங்காய் தானுமடித்து முறையுடன்
விக்கினேஸ்வரா வென்று வணங்கியே
வெள்ளிலையு மடைக் காயும் வைத்துடன்
பக்கமான வியாழன் வுதயமாய்
பாரில் நாலா விடங்களும் சுத்தமாய்
உத்திரமான திருநிலைக்கால் நாட்டி

## (கோவில் அமைத்தல்)

ஒளிமாடமாம் மண்டபம் வைத்தவர்
உத்திரங்கள் மிகுத்துடன் வைத்தவர்
ஊடேநல்ல பலகை பரப்பனார்
மெத்தவே மணல் இட்டுடன்குத்தியே
வேண்டத்தக்க வரிக்கல்லடுக்கினார்
அத்தித்தூணும் அழகிய தூண்களும்
வண்ணத்தூண்கள் பல பல நாட்டியே
வண்மையாகவே மேல் தட்டும் கட்டினார்
கண்ணோளர்க்கு மனங்கள் மகிழவே
கனக மாமணி ரத்தினம் வைத்தனர்
எல்லையில்லாப் பலகை நிறுத்தியே
ஏற்றமாகிய செம்பு கடாவினார்
மல்லரானதோர் மாயவன் மண்டபம்
மணிமாடமாம் கூடும் வகுக்கவே
காரெனவே கருநிற மாயன்
கனகநல்ல திருப்பதம் காணவே
நேரதாக வொருவாசல் நீக்கியே
நெடுமாலின் திருவுரு காணவே
சீரதாகவே நல்லலோர்கள் காணவே
திருவாசல் நடுவில் வகுத்தனர்
சீரதாகத் திருவாசல் மூன்றுதான்
திருமாமணி வாசல் தானாகவே
தெய்வமாய்த் திருமேனியழகனார்

செந்தாமரையின் முகங்காணவே
மெய்ப்பதாக வொருவாசல் கண்டனர்
வீறதாகவே மாந்தையில் வேந்தர்கள்
திருக்கோவிலும் வைத்து முகித்துடன்
திருச்சுற்று மதிலுந் துடங்கினார்
பருகவெட்டுத் திசையுள்ள வீதியும்
பண்பதாக அளந்து பெருக்கினார்
அகல நீளமளந்து பெருக்கியே
ஆன பூமியில் வானம் பறித்தனர்
செகம் மீதினில் தூளி சுமந்துதான்
தீரவே நல்ல சிக்கலுமிட்டனர்
வரிக்கல்லை எடுத்து அடுக்கியே
வண்ண வண்ண நல் சித்திரம் வைத்தனர்
பெருக்கவே நல்ல சாந்து மளித்தவர்
பின்பதிலே தகடுகளொட்டினார்
செம்பினாலே தகடுகளொட்டியே
திருமாமதில்ச் சுற்றுகள் கட்டினார்
முன்புள்ள திருவாசல் முகப்பிலே
முத்தழுத்தியே சித்திரம் வைத்தனர்.

## (விருத்தம்)

சித்திரம் பலதுங்கண்டு திருமணி மாடம் சுற்றும்
வத்திரம் செம்பொன் மின்னும் வஞ்சிவாழ் மன்னர் மெய்க்க
பத்தியாய் ரத்தினங்கள் பலபல வகையாய்க் கண்டு
வித்தக மாந்தை வேந்தர் விரும்பியே பணிகள் கண்டார்.

## (மன்னர் வியக்கக் கோயில்கட்டி முடித்தல்)

## (வேறு)

மட்டான ஒளிமாடம் மண்டபச் சிறப்புடனே
துட்டான திருமதிலும் சுற்றுக்கட்டி வைத்தனராம்
திருமதிலும் சுற்றிக்கட்டி செம்பொன்னாற் கதவும்செய்து
அருண மணி மண்டபங்கள் அழகுபெறவே சமைத்து
பூசைப்புரை அன்னப்புரை புண்டக வாவிகளும்
தேசிகர்க்கு அன்புடனே தெசவாரப் புரையுங்கட்டி
முன்மண்டபம் பின்மண்டபம் முத்திலங்கு மாளிகையும்
மன்னவர்கள் சிறந்திலங்க மணிமாட மண்டபமும்
ஆதி நூல் மறையவர்க்கு அலங்கார மாளிகையும்
சோழத் தூண்ணதிகளும் தூய்ய பொன்னின் வாசல்களும்

மாலை கட்டு மண்டபமும் வண்ண வண்ணச்சாலைகளும்
கோல வட்டமானதொரு கொற்ற மணி மண்டபமும்
மன்னவர்கள் மனசுமெய்க்க மணிக்கலைதான் புரள நின்று
கன்னலெனும் மன்னன் மொழி கன்னியர்கள் களிக்க நின்று
வால வட்ட கோலப்புரை வானுதல் சேர் மடந்தையர்கள்
கோல வட்டக் கன்னியர்கள் கூத்தாடும் மண்டபமும்
மண்டபமும் அம்பலமும் வண்ண மணித்தூணுங் கண்டு
கண்டவர்கள் கொண்டாட காசினியில் வேந்தர்முன்னே
மாமறையோர் சொற்படியே மங்கையர்கள் தானுமங்கே
பூவுறையும் மா மணம்சேர் பொன்னுறையும் மஞ்சுங்கண்டு
முன்பந்த லலங்கரித்து முத்துரத்தினம் பதித்து
சொன்னச் சொன்ன வர்ணமுடன் சுகிர்தப் பணி பதித்து
மைவர்ண நிறமுடைய மாயனுக்கு வாகனமாய்
தெய்வக் கருடாள்வரை சிறக்க வட கீழ் மூலையில்
பொற்பீடம் பண்ணிவைத்து புதுமைபெற அலங்கரித்தார்
மெய்ப்பான திருமஞ்சண விளாச்சாலை யலங்கரிப்பார்
திருமஞ்சணமெடுத்திடவே தெய்வக் கூவ வாவிகட்டி
அருமையுடன் நந்தவனம் அது தனக்கும் தலங்குறித்து
கோவிலுடன் பல சிறப்பும் கொத்த மணிவாசல்களும்
தேசமெங்கும் எண்ண நல்ல சிறப்பு பல செய்தனராம்
அறையுடனே அரங்குகளும் ஆனமணி மண்டபமும்
குறைதீர்த்து மாந்தையர்கள் கொற்றவரைத் தொழுதனராம்.

## (கன்னர்களுக்கு மன்னன் சிறப்புச் செய்தல்)

## (விருத்தம்)

ஒளிமணி மாட கூடம் உறுதிருமதிலும் சுற்றும்
தெளிவுறச்செம்பொன்னாலே சேர்ந்துதான் மாந்தையவேந்தர்
வழிமுறைநூலில் வந்த மறையவர் பாதம் வாழ்த்தி
உளம் மகிழ்ந் தரசர் பாதம் உற்றிட வந்து நின்றார்.

## (வேறு)

போற்றிநின்ற மாந்தையரை புகழ் வேந்தர் வரவழைத்து
ஏற்றமுள்ள நிதிபலதும் இன்பமுறவே கொடுத்து
வண்ண வண்ண பச்சை வடம் வளம்பெறவே உபசரித்து
மண்ணரசர் மாந்தையரை மனைதனுக்கே யனுப்பிவிட்டார்

## (மறையோனுக்கு முதல் உரிமை நல்குதல்)

மாந்தையரைப் போகவிட்டு மறையோரைத் தானழைத்து
போர்ந்த நல்ல மறையோர்க்கு பொன் பலதுந் தான்கொடுத்து

ஓமமதுதான் முகித்து உற்றமறை தானோதி
காமக்கனல் பற்றாமல் கண்ணர் திருவருளாலே
புத்தியுடன் சித்திசெய்து புகழ்மறையா லுச்சரித்து
சத்திகளும்தான் நிறுத்தி சாஸ்திரத்தால் மறையவர்கள்
வாசமுடன் மன்னவர்கள் வரலாறுதான் நினைத்து
பூசையது செய்துவர பேரெடுக்கவேணுமென்ன
அக்கரையா ரிக்கரையார் ஆனதொரு தென்கரையார்
சிக்கெனவே தானழைத்து தெய்வ மறையோர்களையும்
வந்த வந்த மறையோரும் மன்னவருங் கூண்டிருந்து
இந்தநெடுமால்பிறகே இசைந்து வந்தமறையோனை
முந்தமுந்த முறைப்பாடு முன்னிருந்தித்தான் கேட்டார்
அந்தநல்ல மறையவனும் அறிவித்தானடிவழியை
சீரங்கத்திலிருந்துவும் திருப்பூசை செய்ததுவும்
வாரங்கமாய் வேதியர்கள் வகை பூசைபறித்ததுவும்
வனந்தனிலே போயிருந்து மாதவங்கள் செய்ததுவும்
புனந்தனிலே திருமாலும் புகழாகத் தோன்றியதும்
திருமறையோன் தன்னுடனே திருமாலென்றுரைத்ததுவும்
வரும்பிறவிதனை மயக்க வைகுண்டம் கொடுத்ததுவும்
திருவனந்தம்தனில் போறோம் தெற்கேவா வென்றதுவும்
அருமையுடன் திருமுன்பு ஆள் நீ என்றுரைத்ததுவும்
திருமுன்புதருவோம் நாம் திருவனந்தாபுரமதிலே
வரும்வாறுயித்தனையும் மறையோனும் மகிழ்ந்துரைத்தார்
அப்படியே மன்னவரும் அருள் மறையோரும் கேட்டு
செப்பமுடன் திருமுன்பு கொடுத்தாரே செல்வமுற
திருமுன்பில் அவனிருக்க சிலமறையோர் பூசைசெய்ய
மருவஞ்சிக் குழலார்கள் வந்து சில முறைகள் செய்ய
தூத்திடுவார் மெழுகிடுவார் தூபதீபங் காட்டிடுவார்
சூத்திரர்கள் பலபேர்கள் துய்ய முறை செய்திடுவார்

## (திருமாலுக்கு பூஜை செய்தல்)

மருவனைய மலரதனால் வடமாலை கட்டிவார்
திருவளரும் மாயனுக்குத் திருப்பூசை தான்நடத்த
அமுதமெனக் கறிகள்வைப்பார் ஆனசில மறையோர்கள்
குமுத மொழி மடவார்கள் கூத்தாடுவார் சிலபேர்
நட்டுவார்கள் முட்டுடனே நல்லதொரு மேளதாளம்
கட்டாகப் பணிமாறக் காவலர்கள் கற்பித்தனர்
மெய்ப்பாக மாயனுக்கு வெகுபூசை தான் நடக்க

உற்பனமும் உம்பளமும் உலகு தனி முறைநடத்தி
திருவிளக்குத் தெய்வம் முதல் சிவபூசை குன்றாமல்
அருள் விளக்கு அம்புவியில் அமுதுபடி குன்றாமல்
தேசங்கள் தானும் விட்டு சிறந்த நலல குடியுமிட்டு
நேசமுடன் நெடுமாலும் நீடுழி காலமாக
பூசை கொண்டு தானிருந்தார் பூலோகம் வாழவென்ன.

(சுபம்)

(கதைப்பாடலை இயற்றிய புலவர் அரு(ன)குட்டி நாடார்.)

5

# நாலு மந்திரி கும்மி

(ஓலைச்சுவடி பதிப்பு)

(திருமலாபுரம்
பொ.உடையார் நாடாரிடமிருந்து
ஓலைச்சுவடி பெறப்பட்டது.)

## (காப்பு)

பூரணமாய்நின்ற பரம்பொருளைப்போற்றி
புகழ்மிகுந்த சரவணர்தாள் போற்றிவாழ்த்தி
நாரணன்சே ரிலக்குமியாள் பாதம்போற்றி
நான்முகனோடு ருத்திரனா ரடியை வாழ்த்தி.

## (விநாயகர்)

ஆரணஞ்சேர் சரஸ்வதியாள் பாதம்போற்றி
அன்புடன் நாலுமந்திரி கும்மிபாடக்
காரணஞ்சேர் சிவபெருமானளித்த யெங்கள்
கணபதியி னிருசரணங் காப்புத்தானே.

## (சிவன்)

செந்தமிழ்போற்று மளகாபுரி வாழு
மந்திரி நாலுபேர் மீதினிலே
சந்ததியாய்க் கும்மிப் பாட்டுரைக்கச் சிவ
தந்திமுகன் பாதங் காப்பாமே.

## (முருகன்)

வையகந்தன்னிலே நாலுபேர் மந்திரி
மார்க்கமுடன் கும்மிப்பாட்டுரைக்க
செய்யும்படிக் கருள் செந்தில் வடிவேலர்
சீர்பாத மென்றைக்குங் காப்பாமே.

## (கதை)

பூலோகந்தன்னிலே நாலுபேர் மந்திரி
போதவாதித்த னுடன்பிறந்தோர்
சாலோகமுள்ள கும்மி தழைக்கத் தமிழ்
சாற்றுவேன் வாலை துணையாக.

போதவாதித்தனும் போதவிபூஷணன்
போதவியாகர்னன் போதசந்திரன்
மாதளவீசிய மதுராபுரிதனில்

வாழ்ந்திருந்தார் சில காலமட்டும்.
தென் மதுராபுரியிற் பிறந்துஅழ
கேசனிடம் மந்திரியானதுவும்
நன்மைதரும் வேலா துணையாகத் தமிழ்
நவிலுவேன் வாலைப் பதம்போற்றி.

## (இயற்றிய புலவர்)

ஆடும்சிதம்பரர் தன்னருளால்பெற்ற
ஐயன் சுப்பிரமண்யர் கைக்குழந்தை
நாடெல்லாம் போற்றவே வீரபத்திரன்வாசல்
நல்ல வசனப் பிரசங்கனடி.

தேசம்புகழவே யோதி வைத்தார் குரு
தேவதை பாற்கடலாடிவர
வாசம்புகழ்சின்னதம்பிதமிழுக்கு
வாக்கருள்வாய் பரமேஸ்வரியே.

## (காராளர் வம்சம்)

ஆதியில் தென்மதுராபுரியி லிவர்
சாதியிற் காராள் வமுசத்திற்
பாதி மதிசூடும் நாதனைப்போற்றியே
பாதையேசூடி நடந்தார்கள்.

## (ஒட்டகக் கதையும் நால்வர் மதிநுட்பமும்)

பாதைவழியே இவர்நடக்கப் பெருங்
காலால் ஒட்டகம் போயிருக்க
கோதையர்மக்களும் நாலுபேர்யோசனை
கொண்டு வழியே நடந்தார்கள்.

ஒட்டகந்தப்பி யொருமாதம்அதை
விட்டலைந்த பொருளுக்காரன்
அட்டதிக்கெல்லாந்தான் தேடியவர்
கிட்டவேவந்து மொழிந்தானப்போ.

ஒட்டகமிவ்வழி காணீர்களோவென்று
உரைத்திட நால்வரிலே யொருவன்
கட்டுடன் தப்பிய வொட்டக மொற்றைக்கண்
பொட்டையோவென் றொருவ னுரைத்தான்.

சூலென் றொருவ னுரைத்தாண்டி முழங்
கால்முட மென்றொருவ னுரைத்தான்
வால்கூழை யென்றெருவ னுரைத்தான் மொழி
வஞ்சனங்களுஞ்சரி யாயிருக்க

சொன்னவடையாளந் தான்சரியே யென்
அண்ணர்கா ளொட்டக மெங்கே யென்றான்
பள்ளிய ஒட்டகங் கண்டதில்லை நடை
பார்த்து மொழிந்தோமென்றே யுரைத்தார்.

பார்த்துஉரைத்த மொழியேது நமது
கோத்திரனா மழகேசனிடம்
சாற்றுவோம் வாருங்க ளிம்மொழியை யென்று
நேத்தியாய்க்கூட்டி நடந்தார்கள்.

தங்கம் பொன் வெள்ளி யிரும்புடன்பித்தளை
கதிருடன் வெங்கலமா யுருக்கி
சிங்காரமாய்ச்செய்த கோட்டையிற் சென்றங்
செப்பினான் ராஜாதி ராஜனுடன்.

செப்பிய வார்த்தையைத்தான்கேட்டு ராஜன்
செப்புவான் நாலுபேரைப் பார்த்து
விற்பனராமிவர் நாலுபேருமென்று
மெத்தவே ராஜன் மனமகிழ்ந்து

ஒட்டகங் காணோமென் றுரைத்தீர் அதற்
குள்ள வடையாள மேதுரைத்தீர்
நட்டணைசெய்யாமல் நீங்கள் நாலுபேரும்
நாவா லுரைசெய்யு மென்றுரைத்தார்.

ராஜனுரைத்த மொழிகேட்டுமந்திரி
நாலுபேரு மனந்தான் மகிழ்ந்து
போஜராஜனிவன் பாதம் பணிந்துதான்
புத்திவிசேஷங்கள் கற்றவனாம்.

போதவாதித்த னப்போது சொல்வா னொரு
பாரிசங்கூடி யிரைமேய்ந்து
பேதமையாக நடக்கஒருகண்
பொட்டையாமென்று மொழிந்தே னென்றான்.

போதவிபூஷணன்றா னுரைப்பான் பாதை
போகையிலே நடந்தான்பதியே
சாதகவொட்டகக் கெர்ப்பமிதுவென்று
சந்தேகமில்லாமற் சொன்னே னென்றான்.

போதவியாகர்னன்தா னுரைப்பான் பாதை
போகையிலே மூன்றுகால் பதிய
சாதகமாயொரு கால் பதியவில்லை
தானென்ற கால்முட மென்றுரைத்தான்.

போதசந்திர மந்திரி யேதுரைப்பான் பாதை
போகையிலே ஈக்கள் கடித்த ரத்தம்
பாதைவழியில் சிதறினதால்
கூழை வாலென்றெருவ னுரைத்தான்.

## (நால்வரும் மதிநுட்பத்தால் மந்திரிபதவி பெறல்)

இப்படியாகவே நாலுபேர் மந்திரிகள்
வெம்புலிபோல் உரைத்திடவே
செப்பமா யழகேந்திரன் மகா
விற்பனமுள்ளவ ரென்றுசொல்லி

சொல்லுமொழியினா லொட்டகக்காரன்
துடர்ந்தானென் றாயிரம் பொன்கொடுத்து
செல்லுமென்றுசொல்லி தானனுப்பி யப்போ
செப்புவான் நாலுபேரைப் பார்த்து

பார்த்துடன் வாசல் மந்திரி காரியம்
பார்த்து அதிகாரஞ் செய்யு மென்று
போசனத்துக் கோ ராயிரஞ் சம்பளம்
பொன்னுங் கொடுத்தங்கே வைத்தாராம்.

## (நாடு நலம்பெறல்)

நாலுபேர் மந்திரிமா ரிருக்க நல்ல
ராஜன் சிறப்புடன் வாழ்ந்திருக்க
பாலும்பழமு முண்டாயிருக்க நல்ல
பங்கய மாது நிறைந்திருக்க

கீரி யரவ மொன்றாய் வாழ்கப் பசு
சீறும்புலியு மொன்றாய் வாழ்கப்

பாரினில் மாதமும் மாரிகள் பெய்திடப்
பட்டணத் தாறி லொரு கடமை

மேதினி யேழைப் பரதேசிக் கன்னம்
வேண்டியடாயகங் கொடுத்துவர
நீதிவிசாரணை மந்திரி செய்திட
நீதியா யாவருந் தானிருக்க

(தீயவினை வருதல்)

ராஜனிருந்து அரசாளமந்திரி
நாலுபேரு மதிகாரஞ்செய்ய
வாசனையாகவே தானிருக்க வினை
வந்த வகைதனைக் கேளுங்கடி.

(போதவாதித்தன் பரிசோதனை)

பட்டணமு மந்தக் கோட்டைகளும் பரி
சோதனைப்பார்க்கவே வேணுமென்று
கட்டளைகொள் போதவாதித்தனு மவன்
பட்டணஞ் சுற்றியே வந்தானப்போ.

(பத்திரகாளியின் கண்ணீர்)

பட்டணத்துக்கு வப்புறத்தில் நல்ல
பத்திரகாளி யம்மன்கோயில்
துட்ட மகமாயி அர்த்தராத்திரி வேளையில்
சோதனையாக அழுகலுற்றாள்.

பத்திரகாளி குரல்கேட்டு சிறு
பத்தனாம் போதவாதித்தனுந் தன்
சித்தமுங் கலங்க மப் பத்திரகாளிமுன்
செப்பினான் போதவாதித்தனுமே.

(போதவாதித்தன் கேள்வி)

ஆரம்மாசொல்லு அழுகிறது உன்
அடிமை யிதோவந்து நிற்கிறேன் நான்
பாரம்மா யென்முகம் மாதாவே பர
மேஸ்வரியே ஜெகதீஸ்வரியே.

சொன்னமொழி தன்னைத்தான் கேட்டு ஜெக
ஜோதியெனும் பத்திரகாளியம்மாள்

என்னை யாதரி நீ யாரடா வந்தவன்
இப்போதெனக்கு நீ சொல்லுமென்றாள்.

காளி யுரைத்த மொழிகேட்டுக் கரு
ணாகரன் போதவாதித்தனுமே
வாள்சரங்கொண்ட மகமாயி சொந்த
வடுமையிதோ நான் வந்தேனென்றான்.

சொந்தவடுமையாய் வந்தாயானால்
சொல்லுவாய் நீயா ரென்மகனே
விந்தைபெறு மழகேசனிட வாசல்
மந்திரி போதவாதித்த னென்றான்.

வாடாமகனே யென்றுரைக்க மக
மாயியை சுற்றி யடிபணிந்து
தேடக்கிடையாத அம்பிகையே குரல்
செய்த வகையேது மாதாவே.

(அழகேசனுக்கும் நாட்டு மக்களுக்கும் ஆபத்து எனல்)

போதவாதித்தன் மொழிந்திடவே பரி
பூரணி மெத்த மனமகிழ்ந்து
நாதன் கயிலையில் வீற்றிருக்குஞ் சிவ
நாயகி சொன்னதைக் கேளுமினி .

என் றுய ருன்னிடஞ் சொன்னதினால் நீயும்
என் றுயரம் தீர்க்கப் போறயோ
பொன்மலராக்கிய மாதாவே யுன்
புண்ணியத்தில் தீர்ப்பே னென்றுரைத்தான்.

இந்தப்படிமந்திரி தானுரைக்கப் பர
மேஸ்வரி மெத்த மனமகிழ்ந்து
கந்த மலர்க்குழல் பத்திரகாளி
கருணை புரிந்ததைக் கேளுமினி.

மந்திரி போதவாதித்தனே நானும்
வகையாகச் சொல்லுவேன் கேட்டிடுவாய்
தந்திரமாகவே ராஜாதிராஜனுந்
தாரணிதன்னிலே வாழ்ந்திருந்தான்.

தாயென்று எண்ணிப் பணிந்துகொண்டாய் நானும்
தாழ்ச்சியில்லாமல் மகிழ்ந்துகொண்டேன்

நீயன்று வந்தாயே போதவாதித்தனே
தாயென்றுசொல்லுவேன் கேள்மகனே.

நாளைபொழு தஸ்தமான வுடனங்கே
நாழிகை யீரேழு சென்றபின்பு
வேளைக்குதவி பஞ்சணைமெத்தையில்
வேந்தன் மனையாளுடன் படுக்க

சர்ப்பமொன்றுவந்து தீண்டுதையா பின்னுஞ்
சாதனையாய் மறுதேசத்தாரும்
நம்பள் விடுமுறைக்குப் பெருமதியாற்
கையிலே வாங்க நெஞ்சூடுருவும்.

சம்பாவரிசி நஞ்சாக வருமதைச்
சாப்பிட்டால் பஞ்சபூதம்போகும்
அன்பா யிவ்வளவுந் தீர்ப்பாயானால் ராஜன்
ஆளுவான் பூலோக முள்ளவும்.

### (போதவாதித்தன் ஆபத்தை விலக்குவேன் எனல்)

என்றுமகமாயி தானுரைக்கப் பொன்
னிணையடியைத் தொழுதே பணிந்து
நன்று உன்பாத கிருபையினா லிதை
நான் விலக்குவே னென்றுசொல்லி

தாள்பணிந்து மவன் வந்திருந்தா னப்போ
தானுங் கதிரோ னுதித்திடவே
காளிதாசன் சொன்னபடி நடத்தவென்று
காரணமாகச் சிரித்தாண்டி.

### (போதவாதித்தன் மூணுபிடி சாதம் கேட்டல்)

வந்துதே தேசவுடுவறையுஞ் சம்பா
வர்க்கங்களும் பணியாரமுடன்
கந்துலவு மழகேசனிடத்திலே
சொந்தமாய்க் கொண்டுபோய் வைத்தாண்டி.

கண்டுஅரசன் மகிழ்ந்திருக்க அப்போ
காரண போதவாதித்தனுமே
பண்டின் றதிசயமாயிருக்குதென்று
மந்திரிசொல்லவே ராஜனுமே

காரணமேது காண் மந்திரியே அதைக்
கேட்டுவாயென்று ராஜன்கேள்க்கப்
பார்மன்னர்விட்ட விடுமுறையே நாளைப்
பார்க்கலா மென்றொரு பக்கம்வைத்தார்.

மந்திரிசொல்லவே ராஜனுந்தானப்போ
சிந்தை மிகவும் களிகூர்ந்து
எந்தவிதங்காணும் மந்திரியேயென்று
யேகினான்போசனச் சாலையிலே.

சாதம்அரிசி சமைத்திருக்க அன்னந்
தானேபொசிக்கின்ற வேளையிலே
வேதன்விதியை விலக்கென்று மந்திரி
வேணு மூணுபிடிச் சாதமென்றான்.

அன்னமென்றுமந்திரி தான்கேள்க்க மகா
அழகேசனு மூணுபிடி கொடுத்தான்
தீனனென்று சொல்லிக்கொடுத்திடுஞ் சாதத்தை
சீலையில்வைத்து முடிந்தாண்டி.

## (போதவாதித்தன் பாம்பினைக் கொல்லுதல்)

அன்றுகதிரோன் மறைந்திடவே அர்த்த
ராத்திரி காளிதன் சொற்படிக்கு
சென்றுஅரண்மனைதான் புகுந்து ராஜன்
தேவியுடன் நித்திரை செய்கையிலே

சர்ப்பம்வரக்கண்டு போதவாதித்தனும்
தன்கையில் மந்திர வாளதினால்
விற்பன போதவாதித்தனுஞ் சர்ப்பத்தை
வெட்டிட ரெண்டு துண்டாகவேதான்

## (போதவாதித்தன் வினையில் சிக்குதல்)

வெட்டிவிழுந்திடும் பாம்பினிடரத்தம்
மெல்லிநல்லாள் கொங்கைமீதில் விழப்
பட்டபாடுகளும் மிப்படியாவென்று
பார்த்தானாம் போதவாதித்தனுமே.

சுண்டு விரல்நகத்தா லெடுத்து விரல்
துண்டாய்நறுக்கியே கூட்டிவைத்தான்

கண்டுதானாரடா வென்றுரைத்தாள் தேவி
காரண போதவாதித்த னென்றான்.

இராஜனைத் தேவிதா னெழுப்பி நல
மாச்சுதே போதவாதித்தனரைக்
காசும்பெறாத பயலுமென் கொங்கையைக்
கைதொட நீதமோ வென்றுரைத்தாள்.

தேவியுரைத்த மொழிகேட்டு அப்போ
திடுக்கென்று ராஜ னெழுந்திருந்தான்
பாவிப்பயல்செய்த ஞாயத்துக்கு யென்ன
பாவனை செய்குவோமென்று சொல்லி

நிற்கும்போது ரண்டாஞ்சாமங் காக்கும் நல்ல
நேசன்போதசந்திர மந்திரியும்
பக்குவமேது மறியாமற் பாரி
சுற்றியே மந்திரியும் வீதி வந்தான்.

## (போத விபூஷணன் நாய் கதைக் கூறுதல்)

வார்த்தைக் கண்டங்கே ஆரடாவென்று
வழுத்தினானா மழகேசனுந்தான்
மார்க்கமுடன்சொல்லக் கேளுமென்றிரண்டா
மந்திரி சொல்லதி தொடர்ந்தானே.

காஞ்சன்மாமிருகை சிரங்கவ்வியக்
காலையில் மன்னவனைத் தொழுது
வாஞ்சையாளு மிடத்திற் பிரவேச
மன்னனுக் குத்தாரஞ்சொல்லாமல்

பிள்ளையைப்போலே வளர்த்தானாந் தினம்
பேரும் வயிரவ னென்றுசொல்லி
வெள்ளிநிறமுள்ள கூருளசிங்கத்தை
விரும்பியேகூட்டி நடந்தானாம்.

பேதனவாரிட பட்டணத்தில் நல்ல
கேசவனென்றொரு செட்டியிடம்
சாதகமாயவன் வேடனு மப்பொழுது
தாவி யவரிட மேதுரைப்பான்.

செட்டியாரே யெங்களுக்குத் திரவியம்
சொல்லவேணு மோராயிரம் பொன்

வட்டிகொடுத்துத் திருப்பவும்வரைக்கும்
வனமிருகச் சிங்கத்தை யீடாக

வைத்துக்கொள்ளுமென்று சீட்டெழுதிக் கையில்
வாங்கினா னாயிரம் பொன்தனையும்
கைத் துகையானவன் மிருகச்சிங்கத்தைக்
கையிற்கொடுத்து வணிகனிடம்

வாரு வனமிருகச் சிங்க முன்னைவைத்து
வாங்கினேன்செட்டியிடம்பொருளுஞ்
சேரும்வரைக்கு மவரிட்டகட்டளை
செய்துகொண்டு நீ வாழ்ந்திருப்பாய்

என்றுபுவிவேடன் நாய்க்குப் புத்திசொல்லி
இன்பமாய்த் தன்னிட தேசமதில்
சென்று திரையிங் கொடுத்துவிட்டுப் பணஞ்
சேகரஞ்செய்திடும் நாளையிலே

வேடன்மனையிலே தானிருக்க வன
மிருகசிங்கம் வணிக னிடமிருக்க
பாடுபட்ட வூழ்வினைகளினா வந்த
பாவனைசொல்லுவேன் கேளுமையா.

கப்பல் வியாபாரஞ் செய்யவேணுமென்று
காரியமாகவே சிங்கமதை
முப்பாலுஞ் சோறுமா யுண்டுகொண்டு வீட்டை
மூதுணர்ந்தே நீ காருமென்றான்.

நல்லதென்றுசொல்லி சிங்கஞ்சொல்ல செட்டி
நயந்தே தோணியி லேறியபின்
வல்லபமாகவே செட்டிப்பெண்சாதியும்
வாகான சோரனைத் தான்சேர்ந்து

சோர னனுதினம் வருகிறதும்அவனைச்
சொந்தமாய்க்கூடி வாழ்கிறதும்
சாருமுளைப்பாக்குத் தின்கிறதும் நல்ல
சரசபோகங்கள் செய்கிறதும்

கைப்பிடித்திருவரும் ஆடுவதுங் காமன்
கலைகள்முறைதனைப் பாடுவதும்

இப்படியாகவே சோரனுடன்சுடி
இன்பமாய் வீட்டி லிருக்கையிலே

வீரன் வனமிருகச் சிங்கங் கண்டங்கேதான்
வேளைவரட்டுமே யென்றுசொல்லி
பாரயோசனைகள் மனதில் நாய்
பண்ணிக்கொண்டுதா னிருக்கையிலே

வந்ததே சோரனும் வீட்டிற்புகுந்ததே
வைரவனு மவனைக் கடித்து
தந்துவேறாக பிளந்தெறிவதை
தான்கண்டுசெட்டி மனையாளும்

கையைநெறித்து அவனையெடுத் தாருங்
காணாம லாழக் குழிதோண்டி
ஐயையோவென்று யெடுத்தவனைக் குழி
ஆழத்திலிட்டுப் புதைத்தாளே.

வீட்டி லதிசயமா யிருக்கக் கடல்
மேவியசெட்டி திரும்பிவர
தாட்டீகமாகவே வீட்டில் வந்திருக்கச்
சந்தோஷமாகவே மிருகச்சிங்கம்

கேட்டு வணிகனைத்தான் புரண்டு பின்னும்
கொல்லையி லோடிப் பின் னூளையிட்டு
வீட்டுச்செட்டியும் போகையிலே முன்னே
செத்தபிணத்தை வெளியிழுத்து

நாணி யென்னவகை யென்று செட்டிகேட்க
நாயு முண்மையைச் சொல்லுதுகாண்
மாணயி லிவனைக் கடித்ததுவும் யிவன்
மாண்டதுவும் பெண்டீர் சேர்ந்ததுவும்

அன்னை யன்றுமுதல் தன்னைக் கண்பாராமல்
அன்னமிடாமற் றுரத்தியும்
தன்னுள்ளேதானும் மெலிந்ததுவும் மெத்த
சங்கடமிதற்கவள் செய்ததுவும்

நாயுமுரைத்த மொழிகேட்டுசெட்டி
நாயகிதன்னை வரவழைத்து

வாயைக் கிழித்துத் துரத்திவிட்டான் செட்டி
வாரும் வனமிருகச் சிங்கமென்றான்.

பாசமுடன்வேட னெழுதிக் கொடுத்திட்ட
பாங்கா முறிற்சீட்டை தானெடுத்துச்
சொச்சமவன் செட்டி நாயின்கழுத்திலே
சொந்தமுடன்சுட்டி சொல்லிடுவான்.

எந்தனுக்குச்செய்த வுபகாரந்தனை
சிந்தையில் யான்மறவேனே
சிந்தைமகிழ்ந்துந்தான் நீயும் வேடனிடஞ்
சேரு வனமிருகச் சிங்கமென்றான்.

ஆமென்றுசொல்லி வனமிருகச் சிங்கமும்
அப்பாதைவிட்டு நடந்திடவே
நாமென்று நாணயங் கொண்டுபோ யஞ்சலி
நாமேதிரும்புவோ மென்றுசொல்லி

காட்டுக்குள்ளேவேடன் தான்வரவே யெதிர்
கண்டு வணங்கிய சிங்கமதை
சீட்டுக்கழுத்திலே தான்போட்டுஅப்போ
சென்றதன்வேடனைக் கண்டதுவே.

வந்த வனமிருகந் தன்னைக் கண்டித்து
வஞ்சனைசெய்துமே வந்ததென்று
அந்தவிடத்தில் செடியிற்கட்டி
அறுத்துக் கழுத்தை நடந்தாண்டி.

பட்டணஞ்சென்று இடைவழியிற்செய்த
பார்வனை செட்டி யுளம்புகுந்து
கட்டியழுது வணிக னுரைத்ததை
காரணமாய்ப் பழிவந்ததென்று

வேடனுடனே மடிந்தாண்டி செட்டி
கூடவேதானு மிறந்தாண்டி
தேடியலைந்து மொழிவேடனுட
தேவியுங்கூட மடிந்தாளே.

இப்படியாக மடிந்தார்கள் முன்னாள்
ஏதென்றுந் தீர்க்கம் விளங்காமல்

அப்படிக்கல்லவோ வந்து முடிந்திடு
மையனேயென்று முரைத்தாண்டி.

போதவிபூஷணன் சொன்னகதைகளைப்
பொருந்தவே ராஜனுந்தான்கேட்டு
நீதிமுறையிது தான்சரியென்று
நெஞ்சில்நினைந்து நீ யேகுமென்றான்.

## (போதவியாகர்னனிடம் போதவாதித்தனின் குற்றத்தை மன்னன் கூறுதல்)

புத்தியென்றுசொல்லி தான்போனான் அப்போ
போதவியாகர்னன் பட்டணத்தைச்
சுற்றிவருகையில் ராஜனைக்கண்டப்போ
தோத்திரஞ்செய்தங்கே நின்றாண்டி.

நின்றவன் ராஜனைக் கண்டு வணங்கிட
நேசங்காண் போதவியாகர்னனே
தென்றல்வந்து வீசுஞ் சப்பிரகூடத்தில்
தேவியுடனே படுத்திருக்க.

நித்திரை சோதித்து அர்த்தராத்திரி வேளை
பெற்ற தாயென்று நினையாமல்
காதகத் துரோகிதான் போதவாதித்த னென்
காரிழையைத்தொட நீதியுண்டோ.

## (போதவியாகர்னன் கீரிப்பிள்ளைக் கதைக் கூறுதல்)

என்னடா போதவியாகர்னனே யென்று
சொன்னதெல்லா மந்திரிதான்கேட்டு
மன்னவன்பாதம் பணிந்துகொண்டுமூன்றாம்
மந்திரிசொல்லத் தொடர்ந்தானாம்.

சீருலகோர்புகழ் போதவியாகர்னனும்
செப்பவேண்டும் சில நீதியென்று
பாருலகமாளும் அழகேசன்முகம்
பார்த்து மனுநீதி சொல்லலுற்றான்.

ஏதுபராபரஞ்செய்தாலும் அதில்
இன்னதுவென்றே யறியாமல்
சூதுமுன்னாலே நடந்தகதையொன்று
சொல்லுகிறேன் கேளுமையாவே.

சந்திரகிரி யென்றொரு தேசமையா அந்தத்
தாரணியிலொரு வேதியனும்
மந்திரத்திலோது முறையறிந்து ஒரு
மைந்த னில்லாத படியாலே

புத்திரவாஞ்சை பெரிதாகி கீரிப்
பிள்ளையைத் தானீன்ற பிள்ளையைப்போல்
எத்தேச காலமும் ஐயனுந் தேவியு
மேந்தி யிருக்கையினால் வளர்த்தார்.

கந்தவேல்தன் கிருபையினால் கெர்ப்பங்
காரிழை யீரைந்து நாள்சுமந்து
மைந்தன்பிறந்து வளர்ந்திடவே பெற்ற
மாதாவு மிக்க மனமகிழ்ந்து

தொட்டிலிற்பிள்ளை படுத்திருக்கக் கீரிப்
பிள்ளையும் பத்திரமாய்க் பார்த்திருக்கப்
வெட்டியெடுத்து அரைக்கீரைக்காகவே
போனாள்தன்கொல்லைக் கிணற்றருகே.

கொல்லைதனி லம்மாள் தானிருக்கக் கீரிப்
பிள்ளையும் பத்திரமாயிருக்க
தொல்லை வூழ்வினையினாலே வந்த
துயரத்தைச் சொல்லுவேன் கேளுமையா.

கெம்பீரமாய்ப் பிள்ளைதா னிருக்க ராகு
கேதுவுந் தொட்டிலின் மீதிறங்க
தம்பியைத் தீண்ட வருகுதென்று கீரி
தானுமே பாய்ந்து கடித்திடவே

பாம்பு கடிபட்டுதான் சாகப் பெற்ற
பாவியிடத்திலே கீரிபோக
பாம்பினிடரத்தம் வாயிலிருக்கக் கண்டு
பாலனைக் கொன்றிங்கே வந்ததென்று

முன்னும் பின்னொன்று மறியாம லவள்
முன்குணம் யாதொன்றும் பாராமல்
தன்னரிவாள்கையில் தானெடுத்துக் கீரி
தன்னைப்பிடித்துக் கழுத்தறுத்தாள்.

கீரிதனையுங் கழுத்துறுத்தா ளந்தக்
கேவலமாகிய மாபாவி
மாறியது புரண்டுகொண்டு வீட்டு
வாசலின்முன்வந்து பார்க்கையிலே

சர்ப்பமிறந்து கிடக்கிறதும் பிள்ளை
தானிருந்து விளையாடுகிறதும்
இப்படியாய்ப் பழிவந்ததென்று அந்த
ஏந்திழை பிள்ளையுட னிறந்தாள்.

வேதியனும்வெளி போனவனு மிதை
மெய்ப்புடனேவந்து பார்க்கையிலே
ஆதிமுடிவுக ளிப்படியோவென்று
ஐயருங் கூடியிறந்தாராம்.

இந்தப்படிக்கு முடிந்தார்கள்முன்னாள்
ஏதென்றுந் தீர்க்க விளங்காமல்
அந்தப்படிக்கல்லோ வந்துமுடிந்திடும்
ஐயனேயென்று வுரைத்தானாம்.

மூன்றாமந்திரி போதவியாகர்னன்
முத்தமிழோர் கதை சொல்லிடவே
தோன்றுநீபோவென் றுரைத்திடவே யப்போ
போதசந்திரன் தானும்வந்தான்.

## (போதசந்திரன் குருடன் கதைக் கூறுதல்)

வந்தவன்ராஜனைக் கண்டு வணங்கிட
வாருங்காண் போதசந்திரனே
அந்தப்புறத்துக் குட்போதவாதித்தன்
ஆக்கினைசெய்ததைக் கேட்கிலையோ.

மாதுடன்பஞ்சணை மெத்தையின்மேற் சப்ர
மஞ்சத்தில்நானும் படுத்திருக்கச்
சூதுசெய்ய ராத்திரி வந்தவன் என்னிட
தோகையரைத்தொட நீதியுண்டோ.

மந்திரியென்னடா வென்றுரைக்க அந்த
மன்னவன்பாதம் பணிந்துரைப்பான்

செந்திருமேவிய திண்புயனே ஜெக
தீஸ்வரனே அழகேஸ்வரனே.

பொல்லாத போதவாதித்தனென்று
பிறந்ததோ வுங்கள் திருவுளத்தில்
சொல்லு மீதுள்ளது வென்றறிந்தாலும் பின்
ஒன்றுபத்தாக விளங்கவேணும்.

ஒன்று பத்தாக விளங்காமல் அதில்
உள்ளபடியே நடவாமல்
சொன்னமொழியாலே கேட்டதினா லந்த
துன்பமொரு கதைக்கேளுமையா.

மிதுலை யென்றொரு தேசமையா கண்ணும்
இல்லாதவன் பிறவிக் குருடன்
கதலிபோலவன் தேவியைக் கூட்டியே
காசிவழியே நடந்தாண்டி.

பாதைவழியே வந்திருக்க ஒரு
பாதக னவ்வழி தானடக்க
கோதை யவனுட னாசை கொண்டு பிறவிக்
குருடனைவிட்டு நடந்தாளே.

தேவி குருடனைத்தான் பிரியப் பர
தேசிபோல் ஒண்டியாய்தான் புலம்ப
பாவிப்பயலாலே வந்திடு நியாயங்கள்
பாங்குடன்சொல்கிறேன் கேளுமையா.

காவேரிப்பட்டண மீதிருந்து ஒரு
கலிங்கன்செட்டியவன் தேவியுடன்
கோபமாய் மாமனார் வீட்டிலிருந்து
குருடனிருக்கும் வழியில் வந்தான்.

வந்த வணிகன் குருடன் புலம்பிய
வார்த்தையைக்கேட்க அவனுரைப்பான்
சொந்தமனையா ளென் தேவியுட னிந்தப்
பாதை வழியாக வந்திருந்தோம்.

வெள்ளாள னென்றொரு பாவிவந்தா னவன்
மெல்லி நல்லாளை யவன் புணர்ந்தான்

உள்ளமகிழ நடந்தார்கள் தானும்
ஒண்டியாய்ஆறுநாள் பட்டினியே

நின்று தவிக்கிறேன் காட்டுக்குள்ளே உங்கள்
நேசமா யென்னையுந்தான் கூட்டிச்
சென்று ஒருநகர் தன்னில்விட்டாலுங்கள்
ஷேம பலனொன்று உண்டாகும்.

அந்தகன் சொன்ன மொழிகேட்டு செட்டி
அன்னமும் ரொம்பவே தான்போட்டு
சொந்தமனையாளைக் கொண்டு பின்னாலே
கூட்டிவா வென்றுரைத்தாண்டி.

கூட்டிவாவென் றுரைத்திடவே செட்டி
கோதையும் நாயகனைப் பார்த்து
காட்டிலிருக்கும் குருடனைக்கூட்டியே
காசியிற்போகவு நியாயமில்லை.

நாயகிசொன்னதும் கேளாமல் செட்டி
நன்மையுண்டாமென்று தானினைந்து
தாமாகக் குருடனைக்கூட்டியே
தானே வழியில் நடந்தார்கள்.

சிங்களதேசத்திற் போய்ச்சேர்ந்து ஒரு
செட்டியார்வீட்டிலே தானிறங்கி
திங்களுதிக்கச் சமையற்செய்து இவர்
தீங் கதிரோனு முதித்திடவே

மூவருங்கூடி விஜயநகரமே
முந்தியபாதை வழியில்வந்தார்
யாவருங்கேள்வி யிவ்வூரில்லை யென்றான்
பாவி குருட னுரைத்தாண்டி.

பாவி குருடனுரைத்திடவே அந்தப்
பட்டணத்துள்ள ஜெனங்களெல்லாம்
கூடி யடைக்க குருடனுக்கே செட்டி
கோதை மூவரையும் பார்த்து

ஏதுவழைத்தது வென்றுரைக்க அப்போ
தீவினை வந்த குருடனுமே

மாதுவுடனே வருகையிலே செட்டி
மையல்செய்து பெண்ணைத் தான்பிடித்து

என்னைவிட்டுப் போறானென்று சொல்லிக் கூடி
ஏங்கியழுகிறே னென்று சொல்லி
மன்னுங் கண்கெட்டவன் சொல்லைகேட்டு ராஜன்
வகைகளொன்றும் விள்ளாமல்

செட்டியை வெட்டவே தானுரைத்தான் பெண்ணை
கெட்டியே சுண்ணாம்பறை யடைத்தான்
மட்டிக்குருடனும் ஒண்டியாய்ப் பின்னு
மாக வந்தொன்று மறியாமல்

காட்டுக்குள்ளே செட்டி வந்தபிற கிவர்
காப்பாற்றி யன்னங் கொடுத்ததுவும்
நாட்டுக்குள்ளே கொடு வந்ததுவும்அதை
நாரியென் பெண் ணென்றதுவும்

நீதிகெட்ட ராஜன் கேட்டதுவும் என்னை
நீதியுடன்வெட்டுப் பட்டதுவும்
சோதிமுகத்தாளை நம்மிடத்தில் விடச்
சுண்ணாம்புக் கால்வாயில் வைக்கலுற்றார்.

பட்டினி யாயாறுநாள் காட்டுக்குள்ளே
பசியாற் றளர்ந்து நொந்தாற்போல்
செட்டிக்குச்செய்த துரோகத்தை யென்று நான்
தீர்ப்பேனென்று சொல்லித்தான் புலம்பி

தூதுவரோடிக் குருடன்சொன்னமொழி
சொல்லிராஜன் மனங்கலங்கி
ஏதுவினைசெய்தோ மென்றுஅவன்
ஏத்திக் குருடனைத்தான் வதைத்தான்.

முன்னாலே செத்தவ ரனேகமுண்டு அதை
என்னாலே சொல்லி முடியாது
பன்னவே கண்டு மிருந்தாலு மதைப்
பாங்காகவிளங்க வேணும் .

மந்திரியா மிந்தப் போதசந்திரன் கதை
மார்க்கமுடன் சொல்லத்தான்கேட்டு

சந்திரன்போய் கதிரோனுதிக்க ராஜன்
தானங்கள்செய்து கொலுவிருந்தான்.

## (மன்னனின் கோபம் தீராமை)

ஆதிநாள் மந்திரிமார்களை யெல்லாம்
அழைத்துவரச்சொல்லிதா னிருந்தான்
சோதிமுகமுள்ள ராஜ னழகேசன்
சொல்லுகிற வார்த்தையைக் கேளுமினி.

யாவி யுடலு மொன்றாயிருக்க வென்ன
காரணங் காணும் அமைச்சர்களே
தேவியுட னானும் பஞ்சணை மெத்தையில்
சிங்காரமாக படுத்திருக்க

போதவாதித்தனும் வந்தானாம் அப்போ
பொற்கொடிக்கோதையைத் தொட்டானாம்
கோதை பதறியே ஆரடாவென்றுதான்
கேட்கவே போதவாதித்த னென்றான்.

இப்பேர்க்கொத்த போதவாதித்தனை
யென்ன சித்திராக்கினை செய்கிறது
செப்புவீரென்று மன்னன்வெகுண்டங்கே
சீறியெழுந்து கடுகடுத்து

போதவாதித்தன் பார்த்து ராஜன்
யோசனைகளெல்லா முறையுமென்ன
நீதிமுறையாய் நடந்தாயேயென்ன
நிந்தனையெல்லா முறையுமென்றார்.

## (போதவாதித்தன் கிளிக்கதைக் கூறுதல்)

மந்திரிமார்க ளுரைத்திடவே போத
வாதித்தன்முன்பின் நடந்த கதை
தந்திரமாக யுரைத்திடவேஅந்த
தாரானைக்கேட்டு அனைவோரும்

பூருவமாகிய மந்திரியே மகா
புண்ணியமான மனுநீதி
பாருலகாளு மழகேசன் முகம்
பார்த்து மனுநீதி சொல்வாண்டி.

சம்மையாய் நீரு முரைத்தீரே பெண்
உத்தமனம்போலே நினைத்தீரே
நன்மைசெய்யத் துன்மையான கதையொன்று
நான்சொல்லுகிறேன் கேளுமையாவே.

காசலை யென்றொரு தேசமையாஅங்கே
காவிந்த னென்றொரு வேதியரும்
சிலாத்திரு ஐயனுமேஅந்த
நகரில்நெடுநாள்முதலாய்

தேகியென்றே பேருதான்வாங்கி அந்த
தேசத்தில் பிச்சைகள் தானெடுத்து
ஆகமுடனே தழைத்திருக்க அந்த
அம்மன் கிளியொன்றுதான் வளர்த்தாள்.

பிள்ளைபோலே அதைவளர்த்தார் தமிழ்
பேசவும்நன்றாய்ப் பழக்கிவைத்தாள்
தெள்ளு மனுவுக்கியான மோதிவைத்தாள் எல்
தேசபாஷைகளுங் கூறிவைத்தாள்.

பேசியபேச்சைக் கிளிதானும் பெற்ற
பேதை இவளென்று தானினைந்து
வாசமுடன்வீட்டு மேலாகப் பர
லோகமுடனா கை யிருந்திடவே

பட்சிகள்கூடி அனேகங் கிளிகள்
பாகையி லாகாச மேற்பறக்க
கெச்சிதமாகக் கிளிகள்பறந்ததைக்
கேட்டிருந்து யெங்கே போறீரென்று

எங்கேபோறீரென்று தான்கேட்கமுன்னே
ஏகியே பச்சைக் கிளிதானும்
மங்கையெனுங் கடல் மீதிருக்குந் திவ்ய
மாங்கனிக்குப் போறோமென்றதுவே.

வாரிக் கனிகள் பொசிப்பதென்ன யிந்த
வையகத்தில் கனி தானிருக்க
கூறுமென்று கிளிக ளுரைக்கவே
கூடி யிதுவும் பறந்ததுவே.

அன்னையும் பிதாவும் வயதல்லவே யிவர்
தானும்போசித்தாற் பதி யாள்வாரென்று
என்றைக்கும் காப்பாற்றி விடுவாரென்று
ஏகிக் கனிகொண்டு வந்ததுவே.

வீட்டுக்கிளி கனி கொண்டுவர அதை
வேதியன்கண்டு மன மகிழ்ந்து
தாட்டீகமாக கிளியொன்றுரைக்க முன்
தாறினை யெல்லா முரைத்திடவே.

தாறினையெல்லாங் கிளியுரைக்கக் கனி
தாவென்று வேதியன்தான் வாங்க
பார்தனில் வாழ்கின்ற ராஜனுக்கு
பார்த்தனனுங் கொண்டு வைத்தானாம்.

இராஜன் கிளியையுந்தான் பார்த்து
தானுரைசேதி யெல்லாங்கேட்டு
போசன் மனது மகிழ்ந்திடவே யிதைப்
பூமியிலுள்ளோர் பிழைக்கவென்று

ஆவலுடன்மாமரம் வைத்ததுவும் அது
ஆகாசமாக வளர்ந்ததுவும்
காவலுடன்கட்டாய்தான் பார்த்துநிற்க
காத்துவருகிற நாளையிலே

வேதியன்வீட்டிற் கிளியிருக்க மாவும்
வேந்தனிடந்தனிலே யிருக்க
பாதிமதிசூடும் நாமனால் வந்திடும்
பார்வினை மீண்டதைக் கேளுமையா.

மாவுமொருகனி தான்பழுக்க ராகு
கேதுவும் நாளதுமேற் படுக்க
பாவம்யேறிப் பகலோடின் காந்தியாற்
பாம்புவிஷங்கனி வாங்கினதே.

சூரியகாந்தியாய்ப் பாம்பு விஷங்கனி
தொட்டிட ராஜனறியாமல்
ஷறிய மாங்கனி கொண்டுவாடா வென்று
கொற்றவன் சொல்லத் தொடர்ந்தானாம்.

தூதுவரோடிப் பிடுங்கிவர அதைத்
தொல்லுல கெல்லாருந் தான்பார்க்க
மாதுபுயன் குருவான பெரியோரே
மாங்கனி தின்னு மென்றே யுரைத்தான்.

மாங்கனியைக் குருநாதன் றின்ன வுயிர்
வாங்கவே யேமனிடம்போக
ஏங்கியே ராஜனும் வேதியன் பாவியை
இப்போது கொண்டுவா வென்றுரைத்தான்.

கொண்டுவந்தார் மறை வேதியனைத்தான்
கோத்திரம் பிரமத் தியானத்தினால்
கண்டுனை விடுமென்று சொல்லி ஒற்றைக்
கண்ணைப் பிடுங்கியே விட்டாரே.

வேதியன்கண்ணைப் பறிகொடுத்து நாலு
வேகமாய் வீட்டுக்குத் தானடந்து
சாதனையெல்லாம் நீ செய்தாயே கிளி
தன்னைப் பிடித்துக் கழுத்தறுத்தான்.

கொற்றவனும் பின்னறிந்து செய்யாமலே
கோவிந்தனும் மனம் பாராமல்
சுத்தனம்போலே செத்தார்கள்பின்னுந்
தீவினை வந்ததைக் கேளுமையா.

பட்டணந்தன்னிலே வீற்றிருக்கும் பல
சாதியிலேயொரு வண்ணாத்தி
கட்டியுருண்டவர் மாமி மருமகள்
கைகலந்து சண்டை செய்துகொண்டார்.

மாமி மருமகள்மேற் பகைத்துப் பொல்லா
முடிபிடிசண்டை தான்கொடுத்து
பூமிதனிலே நச்சுமாங்கனியை
பொங்கமுடனவள் தானெடுத்து

திறமுடன் தின்னவளு மப்போது
அக்ஷணத்தி லுருவந் தான்மாறி
அறுபதுவயதுள்ள மாங்கனி
நாற்பதினாறு வயதானாள்.

வேறுபட்டு ரூபமானதைக் கண்டவள்
வெட்கமாய் மாவின் கீழிருந்து
தேறும் பரமனைச் சிந்திந்து சிந்தையிற்
தியானம் பண்ணியு மக்கிழவி

மாவி னிழலி லவளிருக்க விந்த
மாமியைத்தேடி மருமகளும்
கோபமாய்ப்போனவள் நச்சுமாங்கனி
கொன்றுதோவென்று கிழவிதனை

என்னிட மாமியாள் சண்டையிட்டா ளவள்
இவ்வழிகாணவோ வென்றுரைத்தா
சொன்னமருமகள் தன்னையேநோக்கித்
தோரணையெல்லா முரைத்தாளே.

உந்தனிட சண்டை யிட்டதுவும் நான்
உயிர்விடுவோமென்று வந்ததுவும்
இந்த மாங்கனியைத் தின்றதுவு மிப்போது
இனிதாக வயது வளர்ந்ததுவும்

வார்த்தைகள் சொல்லியே மாமியைக்கூட்டி
வாவென்று வீட்டிலழைக்கையிலே
சாத்தினா விந்த நடத்தை ஞாயமுந்
தானறிந்து ராஜன் கேட்டதுவும்

கேட்டு வண்ணாத்தியைக் கூட்டிவந்து ராஜன்
கிட்டநிறுத்தி உரையுமென்றார்
நாட்டுக் காகாம லிருந்தேனையா நச்சு
மாங்கனியி லொன்று தானெடுத்து

என்னை மருமகள் சொன்னதற்காக
இறந்திடுவோமென்று தானினைந்து
தின்னேன் பழனிறம் போய் வசிக்காத
தேமலுங் கண்டேனென வுரைத்தாள்.

மாங்கனிதின்றதைச் சொல்லிடராஜனும்
மாங்கனியிலொன்று கொண்டுவந்து
சாகநிறமான பேருந்தின்ன நல்லச்
சடலமும் பதினாறு தானாச்சு.

கண்டு வரசன் மகிழ்ந்துகொண்டு முன்னே
கண்ணைக்கெடுத்த மறையோனைக்
கொண்டுவருகவுஞ் சொல்லியே ராஜனும்
கூறினான்வேதியனைப் பார்த்து

பார்த்துசெய்யாத முறையாலே செய்த
பாவம்பெரியோர் பொறுக்கவேணும்
சேர்த்துகொள்ளுமென்று தானுரைத்து வெகு
செம்பொன்னை வாரிக் கொடுத்தாராம்.

வேதியன் செம்பொன்னைத்தான் வாங்க அவன்
வீட்டுக்குவந்து மனையாளுடன்
பாதி மதியணிபவர் செயலாற் கிளி
பரமனை வந்தங்கே தேடையிலே

என்று மறையோ னிறந்தாண்டி யதை
கண்டுமனைவி மடிந்தாளே
நன்றுதானாச்சுதா என்றுசொல்லி யந்த
ராஜனுங்கூட மடிந்தாராம்.

இராஜ னிறந்திடத் தேவியும் பின்னுள்ள
நற்றுணையாகிய பேர்களெல்லாம்
இராஜனுக்குப்பின் னிறந்து முயிர்போ
வென்றுவிட்டார்க ளனேகமையா.

பச்சைக்கிளி தனைவளர்க்கவே
பாம்பாலேதீமை விளைந்திடவே
வைச்சுப்பின்னேது மறியாமற்பின்
பாதைவழிபோலே வந்துவிடும்

என்றுமனுநீதி மந்திரிசொல்லவே
இன்பமாய்ராஜனுந் தான்கேட்டு
நன்றுநன்று சபைதனிலே நாலுபேர்
மந்திரிமாரையுந் தான்கேட்டு.

### (போதவாதித்தன் வேதியன் கதைக் கூறுதல்)

சோதனைசெய்த போதவாதித்தனைச்
சொல்லுவான் ராஜ னழகேசன்
நீசெய்த ஞாயங்கள் தன்னையே ராஜனும்
நிச்சயமாக வடிபணிந்து

பாரில் பசித்தார் முகம்பார்த்துப் பசி
யாற்றப் பசிவந்து நேர்ந்தாற்போல்
வீரத்துடனேதான் கேளுமென்று போத
வாதித்தனும்கதை சொல்வானாம்.

தாபமுடன் விஜயாபுரிபட்டணம்
தானிருந்து வொரு வேதியனும்
தாபமொழியவே காவேரிதானங்கள்
பண்ணுவோமென்று மனமகிழ்ந்து

ஆச்சியிடத்திலே சொல்லிக்கொண்டு அப்
பாதையிலே தான்கூடி
காட்சியில்லாமல் நடந்தாண்டி கட்டுச்
சாதத்தைத் தோளிலே போட்டாண்டி.

பாய்ச்சலூர்பட்டணம் போய்ச்சேர்ந்து வட
பத்திரகாளி ஒருகோயில்
ஆச்சியிருக்கு மந்தக்கரையில் ஒரு
ஆலவிருட்சத்தின் கீழாக

வேதியனுஞ் சுமை தானிறக்கி
மீதில் ஸ்நானங்கள் செய்தாண்டி
சாதம்பொசிக்க வருகையிலே
சற்பனை வந்ததைக் கேளுங்கடி.

சோமன் மயிலாடு மா மதுரைப்பட்டணம்
தேசத்திருந்தொரு வேதியனும்
எழுபதுவயதுள்ள வேதியனும் ஒரு
ஏகிஆலமரத்தின் கீழ்வந்தான்.

வந்தவன்ஆலமரத்தின்கீழே அன்ன
மயக்கமாகவே தான்படுத்தான்
இந்தப்பிராமண னென்ன வென்றான்
அன்னமில்லாத மயக்கமென்றான்.

அன்ன மயக்கமென்றே யுரைக்கப் புத்தி
யாகவேகட்டுச் சாதமவிழ்த்து
ஒன்றுக்குளொன்று தெரியாமல் வந்த
ஊழ்வினை வந்ததைக் கேளுமையா.

சாதமுடன் கெருடாழ்வாரும் ஒரு
சர்ப்பத்தைக் காலிலே தான்பிடித்து
வேகமுடன்தான் கொத்திடவே அது
வேதனையாற் பாம்பு நஞ்சுவிழ

சர்ப்பமும் நஞ்சைக் கக்கிடவே கட்டுச்
சாதத்தின்மேலே பட்டிடவே
உற்பனமானமை யவ னறியாமல்
உண்டு மறையோனைத் தானெழுப்பி

கையிலே சாதத்தைப் போட்டானாம் அந்த
ஐயனும் வாங்கி வயிற்றிலிட்டான்
மெய்யெல்லாம் நஞ்சு பறந்திடவே உயிர்
மேவியே எமனிடம்போக

பாம்பு விஷமென்றறியாம லந்தப்
பாய்ச்சலூர் பட்டணத்தாரிடம் போய்
வீம்பு பெறுமையோனிடத்தில் ஒரு
விண்ணப்பஞ்செய்ததைக் கேளுமையா.

வயதுசென்ற பிராமணனும் அன்ன
மயக்கமாகவே தான்படுத்தான்
தயிருடன்விட்டுக் கட்டுசாதத்தைத்
தான்யொசித்தான் விதி தானிறந்தான்.

நல்லடக்கம்செய்ய வேணுமென்று அந்த
நாட்டிலுள்ளோரைத் தானழைத்து
எல்லோரும்ஆல மரத்தடியின்கீழ்
இறந்துகிடக்கிற வேதியனை

பார்த்து இவன் பழிசெய்தா னென்று
பாரிநகர் கையி லொப்பு வித்தான்
சேர்த்து வடபத்திர காளியின்கோயில்
திறமுட னிவனை அடைத்ததுவே.

பத்திரகாளியின் கோயிலிலே இந்தப்
பார்ப்பானும்ஆறுநாள் பட்டினியே
வித்தாரமாகவே பத்துக் கவிதை
விளம்பினான் பத்திரகாளியின்மேல்.

பார்ப்பானுங் கவிதை படித்திடவே அந்தப்
பாய்ச்சலூர்பட்டணம் வந்ததுவே
பாம்பளிக்கும்வட பத்திரகாளியின்
சந்நிதிவேதியன் பிள்ளையின்மேல்.

ஆவேசமாகவே வந்துசொல் லுமையன்
ஆலமரத்திலே வந்ததுவும்
தாவிகெருடன் வந்ததுவும்அந்தச்
சாதந்தனில் விஷம் பட்டதுவும்.

பத்திரகாளி யுரைத்திடவே அந்தப்
பாய்ச்சலூர்பட்டண மனைவோரும்
சித்திரமாகப் பிராமணன்காலிலே
தெண்டன் சமர்பித் தனுப்பிவைத்தார்.

பார்த்துப் பசித்தோர் முகம்பார்த்துப்பசி
யாற்றப் பழிவந்து சேர்ந்தாற்போல்
நேசித்தோ ரொருவருடைய கூலிஅது
நிச்சயமாகப் போதவாதித்தனும்.

(போதவாதித்தன் நடந்த உண்மை கூறல்)

எந்தன் தலையில் விதித்தானையா வென்று
எழுந்திருந்தான் போதவாதித்தனும்
சந்தைக்கடையிலே கன்னமிட்டு கள
வாண்டதோர் கள்ளனைத் தான்பிடித்து

கொண்டுவரச் சொல்லித் தானிருத்தி முன்
கொலுவில் முடிந்திடுஞ் சாதமதை
உண்டவுடனே விஷமேறிஅவன்
ஒன்றுஞ் சொல்லாமல் மடிந்தானாம்.

பின்னை யொருவனைக் கூட்டிவரஅப்போ
பொரியம்வெடுக்க அவன்சாக
அன்னை படுத்திடும் பஞ்சணை மெத்தைமேல்
ஆங்காரமாய்ப் போதவாதித்தனும்

பள்ளியறைக்காலில் மேற்போட்ட நல்ல
பாம்பையும் சுண்டுவிரல்தனையும்
அள்ளியவன் ராஜன் முன்னேவைத்து அந்த
அஸ்திகளெல்லாங் கண்டபின்பு

பார்த்து அரசன் மகிழ்ந்திருக்க முன்னால்
பாவனையெல்லாம் பணிந்துரைப்பான்
நேற்றுராத்திரி பட்டணம் என்முறை
நேர்ப்பாய் பார்த்து வரும்வேளை

பத்திரகாளி அழுததுவும்அவள்
பாதம்பணிந்துநான் கேட்டதுவும்
உத்திரவுமிந்த காரணமெல்லாம்
உரைத்திடதீர்த்திட தீர்ந்ததுவும்

### (மன்னன் உண்மை அறிதல்)

இந்தப்படியாய் வேறொரு புத்தியாய்
யோசித்து நானொன்றுஞ் செய்யவில்லை
அந்தப்படி யெல்லாந் தான்கேட்டு
அழகேசனுமெத்த மனமகிழ்ந்து

பெண்ணாய் பிறந்தவள் பேச்சைக்கேட்டுநானும்
பேதமையாக நினைத்தோமே
திண்ணமாய்ச் சின்ன பட்டோமே யென்று
செப்புவான் ராஜ னழகேசன்.

### (மன்னன் அழகேசன் நீதிக் கதைக் கூறுதல்)

ஆழியுஞ் சூழ்ந்தப் புவியிற்குள்ளே ரட்சத்
தாரையும் பட்சித்தா ரந்நாளில்
கேளுங்காண் மந்திரிமார்களேயென றழ
கேஸ்பரனுங் கதை சொல்வாண்டி.

காவேரி யென்றொரு பட்டணமா மந்தக்
காசியிலே யொரு மாமறையோன்
தேவாதி தேவனை வேண்டித் தவஞ்செய்தான்
தேவரதி யென்றொரு பிள்ளை யீன்றான்.

பிள்ளைபிறந்து வளர்ந்துவரு நாளில்
பெற்றத் தாயவளும் போய்விடவே
உள்ளங் கலங்கி வேதியனு மப்போ
ஊரினில் பிச்சைகள் தானெடுத்து

பிள்ளைக ளாறையுங் காப்பாற்றி யிவன்
கிள்ளைமொழியால் மனந்தேற்றி
தெள்ள வையாத வருகையிலே வினை
சேர்ந்த வகைதனைக் கேளுமையா.

பட்டணத்திற் பிச்சை போடாமல் நித்தம்
பார வனந்தனில் தானேகி
சட்டமுடனவன் மூங்கிலரிசியைத்
தானெடுத்து வீட்டிற் கொண்டுவந்தான்.

அங்கையினாலே சமைப்பான் குழந்தைகள்
அன்னமுண்டபின் பவன் புசிப்பான்
எங்கேயிவன் போனாலும்பிள்ளை
எட்டியெட்டி நித்தந்தான் பார்க்கும்

அங்கியெனு மக்கினி மூங்கிற் பதற்
ஆனதுவும் பற்றி வேகையிலே
செங்கனிபோலவே நல்லபாம்பானது
தீப்பிடித்ததில் வேகையிலே

பக்கத்திலேபோன வேதியனும் நல்ல
பாம்புபடுகிற துன்பங் கண்டு
பொக்கெனக் கொம்பினால் தூக்கியே கீழாகப்
போட்டான் குளிர்ந்த மணல்தனிலே.

பாம்பைப் பார்ப்பானும் ரட்சிக்கவே நல்ல
பாம்புஅவனை வழிமறுத்து
வீம்பாகப்போறீர் மறையோனே நானும்
வேணப்பசியா யிருக்கையிலே

முன்னே தடிகொண்ட பாம்புசொல்ல அவன்
முக்கணன்தன்செயலென்றுசொல்லி
அன்னையில்லாதக் குழந்தைக்கு வேறொரு
ஆதாரமில்லை யென்றே நினைத்து

நிற்கிற வேதியனைப்பார்த்து வெகு
நேரமாய்நல்லபாம்பானது மென்
பற்களுக்கிறையாக வேணுமையா நீயும்
பார்ப்பானே கிட்டே வாருமென

பாம்புவுரைத்த மொழிகேட்டு அந்தப்
பார்ப்பானுமெத்த மனங்கலங்கி
வீம்புவுரைக்கும் நாகேந்திரனே ஒரு
விண்ணப்பஞ் சொல்கிறேன் கேளுமையா.

புத்திரராறுபே ருண்டெனக்குப் பிள்ளை
பெற்றவ ளொமனிடத்திற்சென்றாள்
சித்தியாய் மூங்கிலரிசிகொண்டு அவர்கள்
சீவனைக் காப்பாற்ற நான்போயி

அன்னஞ் சமைத்துக் கொடுப்பேனையா பிள்ளைப்பேறு
ஆசையொன்றே யெனக் கல்லாமல்
பின்னை யெனக்கொன்று மில்லையையாவென்று
பேதமையாய் மறையோனுரைக்க

சர்ப்பமுங்கேட்டு மனமகிழ்ந்து மறையோன்
தன்கையின்நாக மணிகொடுத்து
கற்ப காலமெல்லாந் தான்புசிக்கபிள்ளை
கையிற் கொடுத்துவா வென்றுரைத்து

சத்தியம்பண்ணியே சர்ப்பம்விட ஐயன்
தான்கடந்து பிள்ளைக் கையிலிட
இத்தனை தாமதமென்ன காணையனே
எங்களுக்கு வகை சொல்லுமென்றார்.

காட்டில் நடந்ததோர் சேதியெல்லாம்
காம்பீரியமாகவே தானுரைத்து
நாட்டிலே நீங்களும் வாழ்ந்திருங்க ளென்று
நாகமிருக்கு மிடத்தில் வந்தான்.

பெற்றபிள்ளைக்குப் புத்திசொல்லி யெந்தன்
பேரான சத்தியமே காக்குமென்று
அத்தன்கழுத்தினில் பரணாவுந்தன்
சித்தப்படியே முடியுமென்றார்.

நீதிநெறியுள்ள வேதியன் சொன்னதை
நிண்ணயமாகவே தான்கேட்டு
பாதிமதியோன் செய்வதினால் வெகு
பாவமுடிவதைக் கேளுமையா.

சீவனைரட்சித்த வேதியனேஉன்னைத்
தீண்டுவேனென்று சொன்னதில்லை
ஆவியைவைப்பது மில்லையென்று நாகம்
ஐயன்முன்பாகவே தானிறக்க

பாம்புமடிந்ததை வேதியன்கண்டங்கே
பாவம்நமக்குப் பலிக்குமென்று
தீம்புகள் கண்ணாலே கண்டோமென்றுசொல்லி
செத்தான் நாக்கைப் பிடுங்கியங்கே

அன்னஞ் சமைக்கத் தெரியாமல் மைந்தருக்
காருமுதவி யில்லாமல்
சின்னஞ்சிறுவர்க ளாறு குழந்தையும்
சேர்ந்தது யெமனிடமாக

## (ஊழ்வினை உருத்து வந்தூட்டும்)

ஊழ்வினைகளு மிப்படிவந்திடு
முற்றபிரதானி மந்திரிகளே
காளியருள்பெற்ற போதவாதித்தனைக்
காரணமாக நினைத்தோமே

## (போதவாதித்தனை அனைவரும் புகழுதல்)

முந்தப்பிறப்பிலே தேவாதிதேவரும்
மூவருந் தாயுந் தகப்பனுமாய்
இந்தப் பிறப்பிலே போதவாதித்தனை
யல்லாமல் வேறே யொருவரில்லை.

என்றுவாசான் மொழிந்திடவே யங்கே
ஏற்ற சபையோர்க ளெல்லாவரும்
நன்றுமயிலோன் செயலாலே மந்திரி
நான்முகனுக்குச் சரியிடலாம்.

அப்படியாரு மொழிந்திடவேஅதில்
ஆதி வேதகிரி சொல்வார் நீதியுடன்
இப்படி ராஜாதிராஜனு மந்திரியு
மெப்போதும் வாழ்ந்து வளர்ந்திருக்க

செப்பமதாக மொழிந்திடவே அப்போ
தேசத்தி லெல்லாவருங் கூடி

மெய்ப்படியாக விளங்கியதைக் கண்டு
மெத்தவே லோக மெல்லா மகிழ்ந்து

பூவுலகத்திலே யாவருங் கூடியே
பூமலராலே யனேகமையா
தாவிய தங்கம் பொன் வெள்ளி மலருடன்
சாற்றுமலர்க ளனேகமையா.

(வாழி)

மாரி பொழிந்திடும் போலே பொழிந்திட
வாழிகள் சொல்வார்கள் கேள்வியுடன்
காரியமாகிய சங்கர னைங்கரர்
கந்த ரிருபதந் தான்வாழி.

கூறியமாலயன் தான்வாழி பொதிகைக்
கும்பமுனி பதந்தான்வாழி
சூரியர் சந்திரர் தான்வாழி மகத்
தோன்றிய தேவர் பதம் வாழி.

சுந்தரிகாளியும் ராஜனும்மந்திரியுஞ்
சொல்லியமூவருந் தான்வாழி
செந்தமிழ்தந்திடுஞ் சின்னதம்பிஐயர்
செப்புங்கும்மிநாளும் வாழியவே.

(சுபம்)

**(நாலு மந்திரி கும்மியை இயற்றிய புலவர்**
**சின்னதம்பி ஐயர்.)**

# 6

# வள்ளித் திருமணம் கதை

## (தாள் சுவடி பதிப்பு)

(சிவசுப்பிரமணியபுரம்
அ. அப்பாவு நாடாரிடமிருந்து
தாள் சுவடி பெறப்பட்டது.)

## (காப்பு)

அண்ட பகிரண்டமும் ஈரேழு புவனமும்
ஆதியாய் நின்ற வேலவா இந்த
மண்டலந் தன்னிலே கண்கண்ட தெய்வம் நீ
மாய ப்ரபஞ்ச மூலா.

சூலாயுதங் கொண்டு யெமதூதர் வந்தென்னைச்
சூழுமுன் வடிவேலவா
வேலாயுதங் கொண்டு அடிமையைக் காத்திட
வரவேணுங் கதிர் வேலவா.

## (கதை)

கானக் குறத்தியைத் திருமணஞ் சூட்டிய
கதையை நான் பாடிடவே
ஞானக் குமரேசா உன்பாதம் சிரசினில்
நலமாகச் சூட்டினேன்னான்.

நடைநொடி பாவினை தேசிக வர்ணமாய்
தற்கால வில்லுப் பாட்டாய்
திடமுடன் பாடினார் மாரிமுத்து
கிருஷ்ணதாஸ் சங்கீதப் பாக்கள் மெட்டாய்.

சிற்றூரு மாநகர் வளமதைச் சொல்வேன்
சிறப்பை நீர்கேட்டு மகிழ்வீர்
என் குற்றங் குறையதை நீர் பொறுத்தாண்டு
என் குணமதை யாதரிப்பீர்.

## (பாட்டு)

மாது வாழ்ந்திலங்கும்
சிற்றூர் மாநகரமதில்
மாதம் மூன்று மாரிபெய்யும்
வருடம் மூன்று பூவிளையும்
மதுரங் கிளிதான் முழங்கும்
தேன்பொழிந்து கதிர் விளையுந்
தென்னை பலா பூச்சொரியும்

**கட்டுக்கலன் ஹெல்காய்க்கும்**
**கதிருழக்கு ஹெற்காணும்**
**ஆனைகட்டிப் போரடிக்கும்**
**அருமையுள்ள சிற்றூராம்**
**வீதிதோறும் மேடைகளாம்**
**வெள்ளிமலை போலவேதான்**
**சந்திரமுஞ் சாவடியும்**
**தரும மடம் பள்ளிக்கூடம்**

**(வசனம்)**

அதாவது, சிற்றூர் மாநகரத்தில், பொன்னினால் செய்யப் பட்டகோட்டைகளும், ஆகாயத்ததை அளாவிய மாட மாளிகை, கூட கோபுரங்களும், ஆங்காங்கு மேடைகள் தோறுங் கட்டியிருக்கின்ற கொடிகளைக் கண்டு, சூரிய பகவான் ரதத்தில் பூட்டியிருக்கின்ற பச்சைப் புரவிகள் ஏழும் விலகிச் செல்லுமாம். மேலும் அந்நாட்டின் வளம் எப்படி என்றால்,

**(பாட்டு)**

**தேன்பொழிந்து கதிர் விளையுந்**
**தென்னைப்பலா வாழும் – நல்ல**
**புன்னை மரம் நீளும் – அங்கு**
**தேக்கு மரத்தோ டுயர்ந்த**
**பாக்கு மர மென்னாளும்.**

**மான் சிறந்து மயிலாடும்**
**மாங்குயில்கள் பாடும் – இளம்**
**பூங்கிளிகள் நாடும் – நல்ல**
**மதுர மரச் சோலைகளில்**
**வண்டினங்கள் கூடும்.**

**காட்டுப்புலி பசுவின் கன்றுங்**
**கலந்து ஒன்றாய் வாழும் – அது**
**நலம் பெறவே நாளும் – நல்ல**
**வீட்டுப் புலியோடு**
**கிளிப் பிள்ளை யுறவாடும்.**

**சர்ப்பத்துடன் கீரிப்பிள்ளை**
**சார்ந்து ஒன்றாய் கூடும் – நல்ல**

**பந்தத்துடன் நாடும் – எங்கள்**
**தாசன் முத்துகிருஷ்ணன்**
**பாட்டைக் கேட்டுறவுகளாடும்.**

**(வசனம்)**

இவ்வளவு, நீதி பொருந்திய சிற்றூர் மாநகரத்தில், ஆயிரம் வேடர்களுக்குத் தலைவனாகிய, நம்பி யென்னும் வேடத் தலைவன், சிறப்பைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

**(கதை)**

**நம்பி யென்னும் வேட்டுவனாம்**
**நங்கை மோகினியா மவன் தேவி**
**வேடனுக்குத் தலைவ னவன்**
**வில் லேந்தும் வீரனவன்**

**பெற்ற மக்கள் எழுவரோடு**
**பேருலகை யாண்டு வாரான்**
**செந்தி நகர் வேலவனை**
**சிந்தையிலே துதித்திடுவான்**

**கழுகுமலை வேலவனைக்**
**கனவிலுமேதான் மறவான்**
**குமரனுக்குக் கோவில்கட்டி**
**கொடிமரமும் நாட்டி வைத்தான்**

**ஆண்டுதோறுந் திருநாளும்**
**அருமையுடன் நடத்திவாரான்**
**பாலாபிசேகம் செய்து**
**பக்தியுடன் பணிந்திடுவான்**

**தேனபிசேகம் செய்து**
**சிறப்புமிகச் செய்திடுவான்.**

**(வசனம்)**

இத்தகையச் சிறப்புடன், நம்பிராசன் வாழும் நாளில், அன்னவன் அரண்மனையின் சிறப்புகள் எப்படியிருக்கிற தென்றால்,

(பாட்டு)

புதுமை சித்திரம் அரண்மனைச் சிறப்பு மிக விஸ்த்தாரம்
பொன்னலங் கிருதம் மிகவது சிறப்பு – நல்ல
பூங் கொத்துகளில் வான் பக்ஷி மயில்
தேனருந்தியேதான் கெர்சித்திடும்
பூரணச் சந்திர காந்தக் கல்விரிப்பு – மணி
பரப்பிய புகழும் மேடையில் பார் தங்க முகப்பு.

செம்பு வெங்கலத்தால் கதவுகளாம் வயிரமிழைத்த
செம்பவளக் கலர் மிக அழகுகளாம் – அங்கு
செம் பொன்னமுத்திய உத்திரத் தூண்களும்
பைம் பொன் மணிமேடை சித்திரச்சாவடி
தேவ யிந்திரன் அரண்மனை நிகரோ – நல்ல
புவியிலிதற்கு யா ருவமையுஞ் சொல்ல வல்லவரோ.

தரைக ளெங்கினும் பளிங்குக் கல்வேலை
சுவர்ண சித்திரந்தான் வரைந்திடும் பிர்மா கைவேலை–நல்ல
ஜாலக் கண்ணாடிகள் நீலப் பச்சைக்கலர்
பாலீஸ் கொடுத்தது கண்ணைப் பகட்டுது
ஜாய்ந்திடு மெத்தைச் சுவரப் பொன்னாலே – அதைக்
கண்டபேர்கள் பலருமெச்சுவார் பார்த்து கண்ணாலே.

(வசனம்)

இவ்வளவு, அலங்கார மணி மண்டபங்களும் சுவர்ண கச்சிதமான அரண்மனையுங்கட்டி, வாழ்ந்து வருகின்ற நம்பிராசன், அவன் இனத்தோடுங்கூடி முருகக் கடவுளைத் துதிக்கின்றான்.

---

(பாட்டு)

பாடிப் படித்திடுவோம் சரவண முருகனைக்
கூடித் துதித்திடுவோம்
தேடியே மலரதை எடுப்போம் – அவன்
திருவடிக் கபிசேகந் தொடுப்போம் – நம்மள்
குமரனை யெப்போதுந் துதிப்போம்; மதிப்போம் (பாடி...)

நம் ஜாதிக்குக் குல தெய்வ மிவரே
எங்கும் ஜாக்ஷாத் கடவுளென்பவரே
நம்மை ஜோதிக்குந் திருப்பர னிவரே
வருந் துன்பத்தைத் தீர்ப்பது மிவரே; அவரே (பாடி...)

செந்தூர் பதியில் தேரோட்டம்
அந்த தென் பழனியிலே கண்ணோட்டம் – நம்மள்
பந்துக்கள்மேல் வருந்தேட்டம் – திருப்
பஞ்சாக்ஷரத்தால் வினை ஓட்டம்; நாட்டம் (பாடி...)

புகழ் மணி முத்துக் கிருஷ்ணன் கீதம் வில்லுப்
புல்வராம் பொன்னுசாமி நீதம் – நல்ல
துகளிலா வேலவனின் பாதம் – நாம்
துதித்திடுவோம் மறைவேதம்; கீதம் (பாடி...)

## (வசனம்)

இந்தவிதமாக, வேடுவர்கள் ஆடிப், பாடித், துதித்துக், கும்மியடித்துக், குமரனைக் கொண்டாடி, அவன் சன்னி தானத்தில் மன்றாடி, பக்தி பூண்டு வருவார்கள். இப்படி யிருக்கையில்...

## (கதை)

நம்பியவன் தேவியவள்
நங்கை மோகினியு மேது சொல்வாள்
பெண் மக வொன்றில்லாமல்
பேதலித்து வாடுகிறாள்
என் கணவா மன்னவரே
எனக்கு வாய்த்த ராசமன்னா
என் கைவேலை மாற்றுதற்கு
எனக்குக் கன்னியரும் பிறக்கவில்லை
மகவாசை தீர்ப்பதற்கு எனக்கோர்
மங்கையரும் பிறக்கவில்லை
என் தலைமாட்டிலே யிருந்து
எனக்குத் தண்ணீர் தர நாதியில்லை
ஏழு பிள்ளை நானும் பெற்றேன்
இனிய மங்கை பிறக்கவில்லை
என்றவளும் புலம்பிடவே
ஏது சொல்வான் வேடனவன்

## (வசனம்)

"அடி என் கண்ணிறைந்த காதலி! நீ கவலைப்படாதே! உனக்கென்ன வயதாகி விட்டதா? இல்லை. பிள்ளைகளைச் சாஸ்தியாகப் பெறுகிறதினாலே சங்கடம் என்று தெரிய வில்லை. இருக்கட்டும் முருகப் பெருமான் உனக்குப் பெண்

மகவளிப்பார். நீ கவலைப்படாதே! நாங்கள் வேட்டைக்குச் சென்று வருகின்றோம்."

(கதை)

காட்டுக் கவர் தானேகி
கரடி புல்வாய் கொல்கிறதும்
வலையை யவர் தானுங் கட்டி
வரிவேங்கைப் பிடிக்கிறதும்
காட்டிலுள்ள பக்ஷிகளைக்
கண்ணி வைத்துப் பிடிக்கிறதும்
வேடன் மக்கள் ஏழுபேரும்
வில்வித்தையில் கெட்டிக்காரர்
யானைகளை எய்தாரானால்
அடியெடுத்து வையாது
கரடிகளை எய்தாரானால்
காலெடுத்து வையாது
காட்டு நல்ல புலிகளையே
காலை வாரிப் பிடித்திடுவார்
வேட்டையாடி வருகிறதும்
வேட்டைக்கறி தின்கிறதும்
பந்து நல்ல ஜனங்களுக்கு
பங்கு வைத்துக் கொடுக்கிறதும்

(வசனம்)

இவ்விதமாக, அந்த வேடர்கள்; ஜாதி ஆசாரப்படி வேட்டையாடி வருகிறதும், வேட்டைக்கறி தின்பதுமாக யிருந்து வந்தார்கள். ஒருநாள், வேட்டையாடிக் களைத்து வருகின்ற சமயத்தில்,

(கதை)

அங்கே வொரு புள்ளிமானும்
அவசரமாய்தான் வரவே
ஊணுறக்க மில்லாமல்
ஊமை முனி தவசிருக்க
கண்விழித்துதான் பார்த்தார்
காட்டு மானை யன்னேரம்
மானதையே நோக்கியேதான்
மாய்கை யது தானுங்கொண்டார்
காட்டுமான் தா னிணங்க

கருத்தரித்தது அன்னேரம்
வள்ளிக் கிழங்கெடுத்த
வண்மையுள்ள குழிதனிலே
பெண் மகவைத் தானுமீன்று
பிரியமுடன் பார்த்திடவே - அது
தன்சாதிப் பிள்ளை யில்லை என்று
தானும் வெட்கி ஓடியதே
'குவா குவா என்று மந்தக்
குழந்தையதும் அழுதிடவே
அப்போது நம்பியவன்
அவசரமாய் ஓடி வாரான்.

## (வசனம்)

அதாவது, கண்ணுப ரிஷி ஜாபத்தால், மகாவிஷ்ணு ஊமை முனியாகி, வனத்தில் தவமியற்ற, மகாலஷ்மியானவள், நாயகன் மேல் காதல்கொண்டு, மாறுருவடைந்து, அம்முனிவர் முன்பு உலாவ, விதிவசத்தால் முனிவர் அம்மானை நோக்கினார். அம்மான் கெர்ப்பந்தரித்து, வள்ளிக்கிழங்கை எடுத்த குழியில், ஓர் பெண் மகவை ஈன்று பார்க்க, அது தன் சாதிப்பிள்ளை யில்லை என்று கண்டு, அம்மான் வெட்கித் தலை குனிந்து ஓடி விட்டது. அக்குழந்தையானது, "கூவா கூவா" என்று அழ, அதையறிந்த நம்பி யென்னும் வேடத் தலைவன், ஓடோடி வந்து பார்த்தான். அந்தக் குழந்தை எப்படி இருந்ததென்றால்,

## (கதை)

தங்கமதைதான் வார்த்து
தரை யதிலே விட்டதுபோல்
பொன்னதையே தானுருக்கிப்
பூமியிலே வார்த்தது போல்
சூரியப்பிரகாசம் போலே
தோன்றுதையா குழந்தையது
பார்த்தானே வேடனவன்
பாவினையா யன்னேரம்
கந்தன் தந்த பிச்சையென்று
கையாலே தானெடுத்து
வெண்பட்டால் மூடியேதான்
வேகமுடன் கொடுவாரான்
தன்னுடைய மனைவியிடம்

**தான் கொடுத்தான் பெண்மகவை**
**ஏந்திழையும் மன்னேரம்**
**இருகையால்தான் வாங்க**

**(வசனம்)**

இந்தக் குழந்தையை, அவள் வாங்கின மாத்திரத்தில், பச்சை நரம்போடி பால் முகில் சுரந்து, அமிர்தங்கொடுத்து, தன் நாயகனிடத்தில் என்ன தெரிவிக்கின்றாளென்றால்,

**(பாட்டு)**

**தேவாதிப் பிண்டமோ**
**தெய்வ ப்ரசாதமோ**
**யார்பெற்ற கண்ணோ யிது – ஏ மன்னவா!**
**பேர் பெற்ற பொன்னோ யிது.**

**(வசனம்)**

"எனதருமை நாயகா! இது யார் பெற்ற பிள்ளையோ? தெரியவில்லை. இந்தக் குழந்தையைத் தேடி யாரவாது வருவார்களா? வென்று சந்தேகப்படுகிறேன். ஆனால், இந்தக் குழந்தையை நானெடுத்தணைக்கவும் எனக்குப் பால் சுரந்ததும், இதுவொரு ஆச்சரியத்தைக் கொடுக்கிறது. நாதா! இதன் விபரம் என்ன? கூறுங்கள்." அப்போது, நம்பி தெரிவிக்கின்றான்.

**(பாட்டு)**

**வள்ளிக் கிழங்கை எடுத்த குழிதனில்**
**புள்ளி மானீன்றதடி –அம்மானது**
**எனைக் கண் டோடிற்றடி.**

**(வசனம்)**

"என் அபரஞ்சிதப் பொன்னே! எனக்கு வாய்ந்த கண்ணே! நான் சொல்வதைக் கேள். நாங்கள் வேட்டையாடி வேகமாய் வரும் சமயத்தில், ஓர் புள்ளிமான் வள்ளிக் கிழங்கை எடுத்த குழியில், இந்தக் குழந்தையை ஈன்று, அது தன் சாதிப் பிள்ளையில்லை என்று கண்டு, வெட்கித் தலை குனிந்து ஓடி விட்டது. அதன்பின் நானெடுத்து வந்தேனடி" என்று சொல்ல வும், நங்கை மோகினி என்ன தெரிவிக்கின்றாளென்றால்,

(பாட்டு)

செந்தில் பதி வேலன் தந்த பிச்சையென
சிந்தை மகிழ்ந்தேனையா - ஏ மன்னவா
சந்தோசமானே னையா.

(வசனம்)

"எனது அன்பிற்கிசைந்த காதலா!எனக்கு இந்தக் குழந்தையை, முருகப்பெருமான் தந்த பிச்சையென்று நம்பி ஆனந்தமுற்றேன். என் போன்ற பாக்கியசாலிகள் யாரிருக்கின்றார்கள்" என்று சந்தோஷப்பட்டு, அந்தக் குழந்தையை, நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமு மாக வளர்த்து, 21வது நாளையில் வள்ளிக் கிழங்கை எடுத்த குழியில் கண்டெடுத்தபடியால், வள்ளி நாயகி என்று நாமகரணஞ் சூட்டி, பின்னும் அந்தக் குழந்தைக்கு எத்தனை வயதாகிற தென்றால்,

(கதை)

ஒரு வயது யிரு வயது
உயர் மூன்று வயதிலே
மூன்று நல்ல வயதிலே
மொட்டை யிட்டுக் காதுகுத்தி
பழனிநாதன் கோவிலுக்குப்
பாற்குடங்கள் நேருவாளாம்
நாலு நல்ல வயதிலே
நடந்தோடும் பிராயத்திலே
கர்ணப்பூவாம் அலுக்குத்தட்டாம்
காதுகளில் வயிரக்கம்மல்
தண்டையிட்டுச் சதங்கையிட்டு
தங்கமுத்து மாலையிட்டார்
வில்வெட்டு ரவிக்கைகளாம்
விளையாடப் பொம்மைகளாம்
கண்ணேறு தைக்குமென்று
கறுத்தப் பொட்டும் வைத்திடுவாள்
வேடருட தெருவதிலே
விளையாடி வந்திடுவாள்.

(வசனம்)

இந்த விதமாக, வள்ளி நாயகியை, அந்த வேடப் பெண்கள் எடுத்துக் கொஞ்சிக்குலாவி முத்தமிடுவதும்,

அவளை வைத்து விளையாடுவதுமாக இருந்து வருகிறார்கள். அப்போது, வள்ளி நாயகிக்கு ஐந்து வயதாகி விட்டது. அப்போ பார்த்தானே நம்பியவன்.

**(கதை)**

**பாவினையா யன்னேரம்**
**ஐந்து நல்ல வயததிலே**
**அண்ணாவியிடம் படிக்க வைத்தார்**
**வாரிப் பொன்னைத் தானும் வைத்தார்**
**வாத்தியார்க்குத் தெச்சணையாய் – அவர்**
**இளநல்ல பனையோலை**
**இருபக்கமும்தான் வாரி**
**முத்துப் பதித்தது போல்**
**மூன்றுவரி தானெழுதி**
**ஏட்டையவர்தான் துடங்கி**
**ஏந்திழையாள் கைக் கொடுத்தார்.**

**(வசனம்)**

அப்போது, அந்த வள்ளி நாயகியானவள் என்ன விதமான நூல்களெல்லாம் கற்று வருகின்றாளென்றால்,

**(பாட்டு)**

**சங்கர சங்கர சம்பு**
**சிவ சங்கர சங்கர சங்கர சம்பு** **(சங்கர...)**

**அன்னை பிதாவைத் துதித்து – நல்ல**
**அரிச்சுவடி யேட்டைத் தானும் படித்தாள்**
**நன்னெறி நூல்க ளுணர்ந்தாள் – பின்னும்**
**நாலடியாருடன் தேவாரம் கற்றாள்** **(சங்கர...)**

**கந்தரனுபூதி கற்றாள் – நல்ல**
**கதிர்காம மாலையுந்தானே படித்தாள்**
**சந்தத் திருப்புகழ் கற்றாள் – நல்ல**
**சைவ புராணங்கள் யாவையும் பெற்றாள்** **(சங்கர...)**

**கந்த புராணத்தைப் பாடி – செந்தூர்**
**கடற்கரை யாண்டியை நித்தமுந் தேடிச்**
**சந்தக் கலித்துறைப்பாடி – அவள்**
**தானே படித்து வாராளே ஓடி.** **(சங்கர...)**

(வசனம்)

இப்படி விவேகமான நீதி நூல்களைக் கற்று, பெண் களுக்குரிய நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு எனும் நான்கு வகைக் குணங்களும் ஒருங்கே அமையப்பெற்று, குருபக்தி, பெரியோர் வணக்கம், தெய்வந்தொழல், பொறுமை என்னும் குணங்கள் பொருந்தியவளாய், கலா சாலை விட்டெழுந்து, 13 வயதில் புஸ்வதியானாள். அப்போ,

(கதை)

**வேடுவர்கள் தான் திரண்டு**
**விமரிசயைா யன் னாளில்**
**ஜாதி யாசாரப்படி**
**சடங்கு வகைதான் முடித்தார்**
**பார்க்க முடி கூடாது**
**பால் மொழியாள் தன்னழகை**
**தங்கமதைதான் வார்த்து**
**தரையதிலே விட்டதுபோல்**
**கொல்லருட உலையதிலே**
**கொழுக்காச்சி விட்டதுபோல்**
**ஆவரையின் பூவதுபோல்**
**அவளுடைய திருமேனி**
**சாலை வழி போனாளானால்**
**சரஸ்வதிக்கு ஒப்பிடலாம்**
**பாதைவழி போனாளானால்**
**பார்வதிக்கு ஒப்பிடலாம்**
**இருட்டு வழி போனாளானால்**
**இலட்சுமிக்கு ஒப்பிடலாம்**
**சந்திரனுக்கு கானாலும்**
**சற்றே வொரு கறுப்பு முண்டு**
**சூரியனுக் கானாலும்**
**சுற்றிவர கறுப்பு முண்டு**
**குன்றி முத்துக் கானாலும்**
**கொஞ்சம் கறுப்பு முண்டு**
**புருவமே கறுப்புப் பொழிய**
**பின்னை யொரு கறுப்புமில்லை.**

(வசனம்)

இப்படி தெய்வ லக்ஷணத்தோடும், வானத்தில் நட்ஷேத்திரமும் பூத்ததுபோலும், மயானத்தில் வில்வக்கண்

முளைத்தது போலும், தன் தோழிகளோடு கூடி, முருகப் பெருமானைதத் துதிக்கிறாள்.

### (பாட்டு)

கண்டா லானந்தமே
கந்தனுக்கு பாலாபிஷேகமே
சுகந்த பரிமள வாசனையோடு
ரோஜா பேஜா (கண்டா...)

கொண்டாடி விண்ணவரும்
குவலயத்தோரும் புகழ
சென்டாடியே நடித்த
சிரி யரி மருமகன் முருகனின் பெருமையைக் (கண்டா...)

சங்கு ஜேகண்டியோடு
தவில் முரசு முழங்க
எங்கே பார்த்தாலும்
வெகு ஏக போகமாய் விளங்கும் (கண்டா...)

பம்பம் பம் பாபப் பம்ப பாபப் பம்
பபப் பபம்ம ததத் திமி திமி திமி
தக திமி திமியென ததிங் கிணதோம்
ததிங் கிணதோம் தக ததிங் கிணதோம்.
(கண்டா..)

### (வசனம்)

"தேவர் சேனாதிபதி! செந்திலம்பதி நாயகா! ஏக கருணாகர மூர்த்தி! ஞான பண்டிதா! நின் சேவடி யடைக் கலம். அடியவள் மீது கருணை கூர்ந்து, எனை ஆட்கொள்ள வேண்டும் முருகா" என்று, அந்த வள்ளியானவள்,

### (கதை)

முருகனைப் போல் உருவஞ்செய்து
முன்னே வைத்து பார்க்கிறதும்
வெள்ளி நல்ல கிழமைதோறும்
விரதமது யிருக்கிறதும்
மாமிசங்கள் தா னருந்தாள்
மான் வயிற்றில் பிறந்த வள்ளி.

(வசனம்)

இந்த விதமான தீவிர பக்தியோடு, வள்ளி நாயகி இருந்து வருகின்றாள். அப்படி இருக்க, நம்பி என்னும் வேடத் தலைவன், வேள்வி மலைச்சாரலின் பக்கத்தில், தினை விதைத்துக் கதிராகி, மணி பிடிக்குஞ் சமயத்தில், வானத் திலுள்ள பறவையினங்கள், வந்து தின்றழித்துப் போவதைக் கண்ட ஊர் சனங்கள், நம்பிராஜனிடத்தில் வந்து, என்னை தெரிவிக்கின்றார்களென்றால், "ஐயா வேடுவ திலகமே!. . .

(பாட்டு)

**காட்டுக்குள் தினையை விதைத்து வளர்த்து**
**கலந்த மணியாச்சே – அதைக்**
**கானகம் வாழ்ந்திடும் பக்ஷிகள்**
**கூடியே தின்றிடவு மாச்சே**
**பாடு பட்டதுவும் போச்சே.**

(வசனம்)

"மகராஜா! வெள்ளாண்மையை விதைத்து, இப்படி அழியக் கொடுக்கலாமா? சிந்துவார் வீட்டிலே சீதேவி தங்காது என்ற பழமொழிப்படி, யாரையாவது ஒருவரைக் காவல் வைக்கலாகாதா" என்று குட்டிகள் சொல்லவும், நம்பிராஜன் தன் மூத்த குமாரனிடத்தில் தெரிவிக்கின்றார்.

(பாட்டு)

**நமது செந்தினைப் புனத்தில்**
**கதிர் விளைந்துமே சிந்து மணியாச்சாம்**
**அதைச் சேர்ந்த வனத்துப் பக்ஷிகள்**
**வந்துமே கூடித்தின்று போச்சாம்**
**இது யாருக் கிந்த ஏச்சாம்.**

(வசனம்)

"அடா, என் தலைமகனே! நம்மள் வீட்டுக் காரியங்க ளெல்லாம் நீயே பார்த்துக் கொள்வாயென்று நம்பியிருந்தேன். நீயும் அந்தச் சின்னப் பயல்களோடு சேர்ந்து ஊரைச் சுற்றிக் கொண்டுதான் வருகிறாய். வம்பாக வெள்ளாண்மைக ளெல்லாம் பக்ஷி, பட்டுக் குருவிகள் தின்று அழித்து விட்ட தாமே" என்று சொல்லவும், முத்துக்குமாரு தெரிவிக்கின்றான். "அப்படியானால்,

## (கதை)

சின்னச் சின்னப் பெண்களோடு
வள்ளிக் கண்ணை யனுப்பினால்
தினைப் புனம் காவல் செய்குவாள்
வரும் பறவையைக் கவணாலே தானெறிகுவாள்
வண்ணப் பூவெடுத்து மாலை கட்டிச் சூடுவாள்
சங்கீதந் தானும் பாடுவாள்
அரி மருமகனை நித்தந் துதித்துத் தேடுவாள்
பிதா என் யோசனை யெப்படி.

## (வசனம்)

"நல்ல யோசனைதான். வள்ளி நாயகியை அழைத்து வா." முத்துக்குமாரு வள்ளி நாயகியை அழைத்து வருகிறான். வள்ளி நாயகியானவள் தன் தந்தையை வணங்குகிறாள். "எனைக். . .

## (கதை)

கண்ணுக்குக் கண்ணாய் வளர்த்த
கானக் குர ராஜாவே
உமது செந்தாமரைப் பாதம்
திருவடியை நமஸ்கரித்தேன்
என்னையுமே அழைத்ததென்ன
இச்சமயம் கூறுமென்றாள்
அப்போது நம்பியவன்
அருமையுடன் ஏதுசொல்வான்
மா தவத்திலே கிடைத்த
மதுர மொழி வாசகமே
வளர்பிறையே வள்ளிக்கண்ணு
வார்த்தை யொன்று சொல்லக் கேளு
வெள்ளி மலைச் சாரலிலே
விதைத்த தினைக் கதிர் விளைந்து
மணி பிடித்து மடல் சாய்ந்து
மா வனத்தில் தானிருக்க
வனத்திலுள்ள பக்ஷியெல்லாம்
வந்து கூடித் தின்றதுவாம்
சேடிகளைக் கூடிக்கொண்டு
தினைப் புனத்தைக் காவல் செய்வாய்
என்று மந்த நம்பியவன்
இன்பமுடன் கூறிடவே

அப்போது வள்ளிக்கண்ணு
அருமையுடன் ஏது சொல்வாள்
நான் தலைவாசல் கடந்தறியேன்
சந்திகளை நானறியேன்
தெருவீதி பார்த்தறியேன்
சென்னெல் விளை நானறியேன்
பருவமுள்ள பெண்கொடி நான்
பார வனம் போகலாமோ
பார்த்தோர்கள் நகைத்திடுவார்
பாரிலுள்ளோர் ரேசிடுவார்.

(வசனம்)

"பிதா! நான் எப்படி என் சேடிகளோடு வனத்திற்குச் செல்வது; இன்னமொன்று,

(பாட்டு)

சேடிகளோடிருந்து தினைப் புனங்காவல் செய்ய
சிறியா ளெனது மனங் கலங்குதய்யா.

(வசனம்)

"தந்தையே! காட்டில் பயங்கரமான மிருக ஜாதிகள் வசிக்கும் இடமாதலால், எனக்குப் பயமாயிருக்கிறதே; நானெப்படி துணிந்து காவல்புரிவேன்." "பிதா குழந்தையாய் பயப்படாதே."

(பாட்டு)

உனது சகோதரர்கள் உருக்கத்துடனே வந்து
உன்னையே அடிக்கடி பார்த்துக் கொள்வார்

(வசனம்)

"கண்மணி! ஏழு அண்ணன்மார்கள் இருக்க, உனக்கு என்ன பயம். வேறே மாற்றானால், ஏதேனும் விபரீதம் நடந்துவிடு மென்று ஒருக்காலும் நினைக்காதே யம்மா' என்று நம்பி சொல்லவும், வள்ளி நாயகி தெரிவிக்கின்றாள்.

(பாட்டு)

பருவ காலம் நிறைந்த பரிமளமான என்னை
படர் வனம் அனுப்பிட நலமிதுவோ.

(வசனம்)

*"பிதா! வேறொன்றுமில்லை யாரும் விரும்பக்கூடிய கனியாகி விட்டதே! என்று தான் யோசனை." "குழந்தாய் பயப்படாதே! இருந்தாலும்,*

(பாட்டு)

**ஜாதி யாசாரத் தொழில்தான் வெறுப்பார்களுண்டோ**
**தகப்பனுடனே வாதும் ஏதுக்கடி.**

(வசனம்)

*"அம்மா வள்ளி! ஏனிந்தப் பிடிவாதம். நீ போகத்தான் வேண்டும்" என்று சொன்ன மாத்திரத்தில், 'தந்தை சொல்மிக்க மந்திரமில்லை' என்பதற்கிணங்க, உடனே எழுந்து,*

(கதை)

**சேடிமாரைத் தானும் கூடி**
**தினைப் புனமே ஏகிவாராள்**
**வள்ளியுட திரு வழகை**
**வனப் பக்ஷிகள் தானும் கண்டு**
**வெட்கமுற்றுத் தலை கவிழ்ந்து**
**வேகத்துடன் பறந்திடுமாம்.**

(வசனம்)

*அதாவது, அன்னப் பக்ஷிகள் அவள் நடையைக் கண்டு நாணுமாம். மயில் அவள் சாயலைக் கண்டு கோணுமாம். குயில் அவள் மொழியைக் கண்டு வெட்குமாம். இத்தகைய, வனப் புயர்ந்த வள்ளிநாயகி, தன் சேடிகளை அழைத்துச் சொல்லுகிறாள். "அடி!...*

(பாட்டு)

**வாரும் என் ஆசை சகிகாள்**
**வளமுறுந் தினைப்புனம் அதற்கினி ஏகுவோம்** (வாரும்...)

**மூக்கு நீண்ட மரங்கொத்தி வான் கழுகு**
**காக்கையொடு சிறு காடையொடு மயினா**
**சேர்க்கையொடு வரும் சிறந்த படை குருவி**
**செங்கால் நாரை பக்ஷி பேடையுடன் மருவி**
**பாட்டம் பாட்டமாகப் பறக்குது பறவைகள்**
**பார்க்கலாம் அதிசயம் பாவையே விரைவினில்** (வாரும்...)

(வசனம்)

"அடி என் தோழிகாள்! பார்த்தீர்களா! என்னென்ன விதமான பக்ஷிகளெல்லாம் பறந்து போகின்றது; பாருங்கள். எவ்வளவு அழகாயிருக்கின்றது; நடந்து வாருங்கள்."

(கதை)

தினைப் புனத்தைப் பாருங்கடி
செந்தினையும் விளைந்திருக்கு
மணிபிடித்து மடல் சாய்ந்து
மண் மீதில் சாய்திருக்கும்
குருவிகளுங் கொக்குந் தின்று
குருட்டுச் சக்கையா யிருக்கு.

(வசனம்)

"ஏண்டி! நீல பக்ஷி, பக்ஷிபட குருவிகள் கதிரைத் தின்று, சக்கைச் சக்கையாய்க் கிடக்குதடி. இதோ பார்! எங்கள் அப்பா, நமக்காகப் போட்டு வைத்திருக்கும் பரண்; என்ன அழகு! இந்தப் பரண்மீதில் நின்று, பாட்டம் பாட்டமாய் வருகிய பக்ஷி ஜாதிகளைத் துரத்துவோம்; வாருங்கடி."

(பாட்டு)

பாருங்கள் கூட்டமாய் வருகிற பறவையைப்
பண்பா யோட்டிடுவோம். (பாருங்...)

அதோ பாட்டமாகப் பறக்கு
அதில் பாருங்கள் பச்சைக்கிளி சிறக்கு

வெகு கூட்டமானக் கொக்குச் செறுக்கு
வர்ண கோகிலப் பக்ஷிகளு மிருக்கு

காடை கௌதாரி களுக்கு
கவண் கல்லை வைத்து முடுக்கு

மாடப் புறாக்க ளது துடுக்கு
மணியத்தைக் கொத்திக் கொத்தி எடுக்கு; முடுக்கு. (பாருங்...)

(வசனம்)

"அடிசேடிகாள்! நீங்கள் விரட்டினாலும் போகாது போலிருக்குதடி; பாருங்கள் இதோ! கவணில் கல்லை வைத்து அடிக்கிறேன்" என்று பக்ஷிகளை விரட்டுகிறாள்.

**(பாட்டு)**

ஆலோலம் ஆலோலம் ஆலோலமே
ஆலோலம் ஆலோலம் ஆலோலமே (ஆலோலம்...)

அன்னங்களே கொக்குத் தாராக்களே
அழகான புள்ளி மயிலினங்காள்

கன்னங் கருங் காகங் கோழிகளே
கௌதாரி காடை மைனாக்களே

கொக்குகளே நாரை புள்ளினங்காள்
கோகிலமே வர்ண சிட்டினங்காள்

வக்கணாத்தியொடு பூவினங்காள்
வம்பாக நீங்கள் மடியாதீர்கள். (ஆலோலம்...)

**(வசனம்)**

"நான் கவண் வைத்து வீசியபோது, கூட்டங் கூட்டமாய் வந்த பறவைகளெல்லாம், ஓட்டம் ஓட்டமாய் பறந்து போய்விட்டது. இன்னும் இதோ ஒரு பாட்டம் வருகிறது பார். அதை விரட்ட, பரணை விட்டிறங்கி, எல்லோரும் ஒன்று போல் ஆலோலம் பாடுவோம் வாருங்கடி."

**(பாட்டு)**

ஆலோலம் என்று பாடுங்கோ
சேடிகாள் நீங்கள்
ஆளுக்கோர் பக்கம் நில்லுங்கோ (ஆலோலம்...)

வால் நீண்ட கோகிலங்கள்
வனக்கிளி பூவினங்கள்
கோல மயிலினங்களைக்
கூடியே விரைவினில் (ஆலோலம்...)

மீன்துள்ளி மாட்டான் சிட்டு
மேக வர்ணக் குருவி
வான் பக்ஷி செங்கெருடனை
வனமதில் விரைவாய். (ஆலோலம்...)

(வசனம்)

இந்த விதமாக வள்ளியும் சேடிகளுமாக நின்று, தினைப் புனங் காவல் செய்வதும், முருகன் பெயரிலே கியானமாய் பாடுவதும், ஆடலும் பாடலுமாக யிருந்து வரும்போது,

(கதை)

திரிலோக சஞ்சாரி
சிவமுனிவர் ஏது செய்தார்
கலகப் பரியரான
கடுந்தவசி நாரதரும்
என்ன என்ன கலகமது
இப்போ விளைத்திடுவோம்
கையில் வீணை தானெடுத்து
கந்தன்பேரில் இசைபாடி

(வசனம்)

இப்படி, நாரத பகவான், இன்று வோர் கலகம் விளைவிக்க வேண்டுமென்று, என்ன விதமாக வருகிறாரென்றால்...

(பாட்டு)

காவியுடை யணிந்தார் – திருக்
கழுத்தி லுத்திராட்ச மிட்டார்
மேதாவியான முனி – அவர்
மேனியில் வெண்ணீ ரணிந்தார் (காவியுடை...)

கையில் செப மாலையாம் – திருக்
கால்களில் பாதக் குறடாம்
வையம் புகழும் – வீணை
வாத்தியந்தான் முழங்க. (காவியுடை...)

(வசனம்)

இந்த விதமாக நாரத பகவான் காவிதரித்து, உத்திராக்ஷ மாலை பூண்டு, வெண்ணீரணிந்து, புலித்தோலாடை தரித்து, கையில் வீணையை வைத்து மீட்டிக் கொண்டு வருகின்றார்.

ஆனால், நாரத முனிவரைப் புரணி பேசுகிறவரென்றும், கோள்ச் சொல்லாது போனால் வயிறு வெடித்துவிடு மென்றும்

சொல்வது அறியாமையே. அந்த, நாரதர் இல்லாது போனால், பிரபஞ்சம் விருத்தி இல்லாது போய்விடும்.

ஆனால், அவர் சமய சஞ்சீவி; பரோபகாரி. அவரைப் போல் புண்ணிய ஆத்மா யாரையுங் கூறமுடியாது. அப்படிப் பட்ட நாரத மகாமுனிவர் வேள்விமலைப் பக்கத்தில் போய்ச் சேர்ந்தார். "ஆகா! இங்குவோர் சப்தம் கேட்கிறதே, என்ன அற்புதம்."

## (கதை)

**வீணை நல்ல தொனியோ யிது**
**வேத வாத்தியத்தின் நல் ரசமோ**
**புல்லாங் குழலோசை யிதோ**
**பொற்குயிலின் இசை மொழியோ**
**என்று சொல்லி நாரதரும்**
**ஏகினார் தினைப்புனமே**
**பார்த்தாரே குறக்கொடியை**
**பரண்மேலே நின்றவளும்**
**ஆலோலம் பாடுவதை**
**அறிந்தாரே நாரதரும்.**

## (வசனம்)

"ஆகா! இங்கு ஓர் பெண் நின்று உலாவுகின்றதே. என்ன அழகு! இவளைப் பார்த்தால் தேவ கன்னிகைபோல் இருக்கிறாள். இன்னும் நன்றாய் பார்த்துவிடுவோம்.

## (பாட்டு)

**யார் இவள் வாலை மோகினியா – எவளோ**
**பாரோர் புகழ் சிறு பருவக் கெம்பீரி**
**பரிமள மணங்கமழ் பசுந்துள நாரியவள் (யார்...)**

**காசினி தனி லிவள் கலைமதி வாணி**
**கவர்ந்திடுந் திரு மணம் இவள் சிருப்பாணி (யார்...)**

**புரந்தர னுலகினில் பொருந்து மொய்யாரி**
**புலவர்கள் போற்றிடும் தனசிங்காரி. (யார்...)**

(வசனம்)

"காதளவோடிய கண்ணும், முல்லை யரும்பை ஒத்த பல்லும், அமிர்தம் போன்ற சொல்லும், இத்தனை வனப்புயர்ந்த பெண்ணை அடையவேண்டியவன், சாக்ஷாத் முருகப் பெருமானே யன்றி வேறல்ல. ஆனால், இவள் சமீபத்தில் செல்லுகின்றேன்." இவளருகில் வருவதைக் கண்டு கொண்டு சேடிகள், வள்ளி நாயகியாரிடத்தில் தெரிவிக் கின்றார்கள்.

(கதை)

அம்மா அம்மா வள்ளிக்கண்ணு
அருந்தவசி தானும் வந்தார்
பிர்மாவின் புத்திரராம்
பெரியமுனி நாரதரும்
நம்முடைய வனமதிலே
நாயகியே வந்தாரம்மா
என்றவர்கள் தானுஞ்சொல்ல
ஏது சொல்வாள் வள்ளியவள்.

(வசனம்)

"என்னடியம்மா! நாரமுனிவரா வந்திருக்கிறார். அன்னவரைப் பற்றி, நான் கேள்விப்பட்டிருக்கிறேண்டி. அவர் மகா ஞானியாமே; பெரிய வேதாந்தியாமே. வாங்கடியம்மா அனனவரைத் தெரிசிப்போம்" என்று ஓடோடி வந்து முனிவரை நமஸ்கரிக்கிறார்கள்.

(பாட்டு)

மாதவா தோத்திரம் – திரு
மா மறையோர் புகழ் நாரத மாமுனி (மாதவா...)

வேத புராணம் விரித்துரை நீதா
வேண்டியவர்க் கருள்தான் தரும் போதா
ஜாதகக் கியான சதுர்மறை வேதா
தாளடியைத் தினம் பூசித்தேன் யோகா (மாதவா...)

பாவ விமோஷண பக்தானுகூலா
பாவைக் கருள் தர வந்திடு மூலா
தெய்வானு போகஞ் சிறந்திடுங் கோலா
ஜென்ம ஷாபல்யத்தை நீக்கிடுஞ்சீலா. (மாதவா...)

(வசனம்)

"மாதவம் சிறந்த பிர்ம புத்திரா! நமஸ்காரம். தங்களின் பாத(த்)துளிக் காலடி, அடியாள் தினைப் புனத்தில் பட்ட போது, நான் செய்த தீவினைகளெல்லாம் அகன்றுவிட்டது."

"அம்மா! மங்கள முண்டாகுக. நீ யார்? உன் நாம மென்ன? மாத பிதாவின் பெயரென்ன? எந்த ஊர்? விபரந் தெரிவிப்பாயம்மா" என்ற நாதரர், பின்னுஞ் சொல்லுகிறார்.

(பாட்டு)

**அம்மா நீங்கள் யாரோ யெவரோ**
**அருமைத் தாய்மாரே**
**மன தன்பா யென்னிடம்**
**பண்பாய்ச் சொல்லுங்கள்**
**உரிமைத் தாய்மாரே**
**எனதருமைத் தாய்மாரே**

**ஐயா நாங்கள் வேடுவர் குலத்தி லவதரித்தோமே – இதில்**
**அமைந்து காணுங் கனியுந்தின்று அனுபவிப்போமே**
**அதையுண்டு நாள் கழிப்போமே.**

(வசனம்)

"ஐயா! சிற்றூரை யாளப்பட்ட நம்பிராசன் மகள் நான். என் பெயர் வள்ளி நாயகி யென்பார்கள். நான் வேடுவர் குலத்தில் ஏழு அண்ணன்மாரோடு பிறந்தவள்" என்றாள் வள்ளி.

(பாட்டு)

**முத்தே உனக்குத் திருக்கல்யாணம்**
**முடிந்ததா இல்லையா**
**உங்கள் ஜாதி முறைப்படி சடங்கு சாஸ்திரம்**
**நடந்ததா யில்லையா – அதை**
**உரைத்திடத் தொல்லையா**

**ஆடிப் பாடித் தேடி வந்தீர்**
**அறிவு கெட்டவரே**
**உம தருமை வாக்கியம் போதும் போதும்**
**பரிசு கெட்டவரே மிக வரிசை கெட்டவரே.**

(வசனம்)

"ஐயா! நாரத முனிவரே! ஏன் இப்படிப் பேசுகின்றீர்? அடா அறிவு கெட்டவரே! பேச்சை நிறுத்தும்."

(பாட்டு)

பத்தாவோடு கூடிக் கலந்து
பவுசடைந்தாயோ – திரு
பார்வதியை போல நீயும்
பலனடைந்தாயோ– மிக
நலமடைந்தாயோ.

இல்லந் துறந்த சன்யாசிகளுக்கு
இந்தத் தொழில் வேண்டாம் – அந்தச்
தொல்லையை யிழுத்துத்
தோளிலே போட்டு நீர் சுமக்கவும் வேண்டாம்
அதைப் பற்றி பேசவும் வேண்டாம்.

பொற் றாமரையில் முத்தா யுதித்த
புனிதச் செந்தேனே – எங்கள்
விஸ்தாரக் கவி மாரிமுத்து கிருஷ்ணன்
வாக்கியந்தானே உனக்கினி
சிலாக்கியந் தானே.

மெத்தப் படித்த மேதாவியோ – நீர்
மழுங்கச் சன்யாசி – எங்கள்
வித்வமணி முத்துக்கிருஷ்ணன் நீயுமே நேசி
பிச்சை ஏற்கும் பரதேசி.

(வசனம்)

"நாரத மகா முனிவரே! நீர் மகா பெரியவராச்சே. நீர் எனக்குச் சொல்ல வேண்டியவைகளையெல்லாம் விட்டு விட்டு, ஏதேதோ உழறுகின்றீர். பேரின்பமானவை களைச் சொல்லும் கேள்க்கின்றேன்" என்று சொல்லவும், நாரதர் தெரிவிக்கின்றார்...

(கதை)

ஏழு அண்ணன் தா னிருக்க
இத் தினைப் புனத்துக் கேகலாமோ

**பருவ காலந்தா னிறைந்த**
**பக்குவமான பெண்ணை**
**ஜாதிக்குத் தக்கபடி**
**தார் வனமே போகச் சொன்னார்**
**பக்குவ நற் காலமதை**
**பாழாக்கில் என்ன பலன்**
**பூவாசம் போகு முன்னே**
**பூவதையே சூட வேணும்.**

**(வசனம்)**

"அம்மா வள்ளிநாயகி! நீ பாக்கியசாலிதான். 'குலதத் தளவே யாகுமாங் குணம்' என்றபடி, அந்த வேடர்கள் உனக்குத் திருப்பூட்டி, உன் பெருமையைக் கண்ணால் பாராமல், தினைப் புனைத்துக் காவலுக்கு அனுப்பி வைத் தார்கள் போலும். அதனால்தான், வருத்தப்படுகிறேனம்மா" என்று சொல்லவும்.

வள்ளி நாயகி தெரிவிக்கின்றாள்....

**(கதை)**

**மாதவசி யென்று சொல்லி**
**மனம் பொறுத்தேன் மாமுனியே**
**ஜாதி நல்ல முறைப்படியே**
**தார் வனத்தில் காவலுற்றேன்**
**என்னுடைய கவலையது**
**இருதயத்தில் வேண்டாமையா**
**உற்றாரும் பெற்றாரும்**
**உறவு முறையார் தானிருக்க.**

**(வசனம்)**

"ஐயா மாத முனியே! உமக் கேனிந்தக் கவலை. எனக்கு ஒருவருந் துணையில்லையா. அதைப்பற்றி நீரேதொன்றும் பேச வேண்டியதில்லையே." "வள்ளி நாயகி! நீ கூறுவது உண்மைதான். என் போன்ற தவசிகளுக்கு இந்தச் சோலி வேண்டியதில்லை. ஆனால், நீ நன்றாயிருந்தால் எல்லாருக்கும் பெருமைதான். நீ இந்த வாலிப காலத்தில், உனக்கேற்ற புருஷனையடைந்து, உலக யின்பத்தை அடைய வேண்டியது தான் முக்கியமான கடமை. மேலும், உனக்கேற்ற புருஷன் ஒருவருண்டு. அவர் யாரென்றால்...

(பாட்டு)

கந்தனுக்கும் உந்தனுக்கும் பொருத்தமடி
கல்யாணம் செய்யாவிடில் வருத்தமடி
கானக் குற மானே கழறிடுவே நானே
ஞானக் குமரேச நலந்தரு முல்லாசன்
தேவாதி தேவனடி குறத்தங்கமே
தேமலுக்கு யேற்றவன்டி யிளஞ் சிங்கமே
நாளும் நல்ல நாளே
நலந் தருங் கண்ணாளே
வேளை நல்ல வேளை அடி
வேடர் குலத்தாளே
சூரசங்காரனடி குறத்தங்கமே
சுப்பிரமணிய வேலனடி கட்டித் தங்கமே.

(வசனம்)

*"அம்மா வள்ளி நாயகி! உனக்கிசைந்த கணவனைத் தீர்மானித்து விட்டேன். அவன் பெருமையப் பற்றி கொஞ்சம் சொல்லுகின்றேன் கேள்."*

(பாட்டு)

கலிகாலத் தெய்வமடி கதிர் வடிவேலன் – திருக்
கலிகாலத் தெய்வமடி. (கலிகாலத்...)

அழியாதப் பழனிமலை
அபிஷேகக் கழுகுமலை
எழி லோங்குஞ் சுருளி மலை – இன்ப
சுகந்தருந் திருவண்ணாமலை. (கலிகாலத்...)

(வசனம்)

*"வள்ளி நாயகி! அவன் யாரென்றால், கலியுகவரதன்; கார்த்திகேயன்; கடம்பவன மூர்த்தி; கழுகாசலன்; பழனிமலை வேலன்; சுருளிமலைக் கந்தன்; திருவண்ணாமலைக் கிசைந்த கலிகாலத் தெய்வமடி."*

(பாட்டு)

திருப்பரங் குன்ற மலை
தென் பொதிகை விராலி மலை
கருவில்லா வளர்ந்த மலை
கண்டி கதிர் காம மலை. (கலிகாலத்...)

(வசனம்)

"அம்மா! திருப்பரங்குன்றம், திருவேோரகம், குன்று தோராடல், சோலை மலை, பொதிகைமலை, கண்டி, கதிர்காமம் இப்படிப்பட்ட ஸ்தலங்களில் வாசம் பண்ணப் பட்டவன். மேலும், நீ பூசித்து வருகிற...

(பாட்டு)

சூரசங்கராரனடி
சுப்பிரமண்ய வேலனடி
வீராதி வீரர் புகழும்
வெற்றி மயூர சரவண பவன். (கலிகாலத்...)

(வசனம்)

"குற நங்காய்! இன்னமுங் கேள். 1008 அண்டத்தையும் ஏகச்சக்கராதிபதியாய் அரசுபுரிந்து வந்த, சூரபத்மனைச் சங்காரஞ் செய்த ஆறுமுகக் கடவுள். பல்லாயிரங் கோடி ஆன்மாக்களையுங் காத்து ரட்சித்து வருகின்ற கலிகாலத் தெய்வமடி."

(பாட்டு)

சதுர்முகனைச் சிறையிலிட்டோன்
தந்தைக் கவன் உபதேசித்தோன்
அதி வீர சுகுண வரதன்
ஆதி பராசக்திக் கருமைக் குமரன். (கலிகாலத்...)

(வசனம்)

"தேவர் புகழும் வனப்புயர்ந்த வள்ளி! இன்னும் அவன் யாரென்றால் பிர்மதேவனைச் சிறையிலிட்டவன், தந்தைக்கு உபதேசித்தவன், திருமால் மருமகன், பரத பண்டித ஜோதிடன், செந்திலம்பதிவாசன், பார்வதி புத்திரன் என்னுந் திருநாமங்களைக் கொண்ட கலிகாலத் தெய்வமடி."

இந்த வசனத்தைக் காதிலே கேட்டதும், வள்ளி நாயகிக் காதிலே நராசதத்தைப்போலும் ஈரமரத்திலே வயிரஆணி கடாவினார் போலும் கேட்டு,இந்த நாரத முனியாலே என்ன நடக்கும் என்று லேசாக நினைத்து, என்ன தெரிவிக்கின்றா ளென்றால்...

(பாட்டு)

கூட்டிக் கொடுக்குமிந்த டாப்பர் தொழில் படித்து
குறழி சொல் நாரதனே (கூட்டி...)

காதல் கோட்டி கொண்ட முனியே – இந்தக்
காட்டை விட்டகன்றிடுமினியே – நெடும்
பூமியில் நீயொரு சனியே – இப்போ
புறப்படும் இதைவிட்டு வெளியே
போம்போம் வழியதைக் கூடியே முனியே; தனியே (கூட்டி...)

(வசனம்)

“பிர்ம புத்திரா! ‘படிக்கிறது வேதம் அறுக்கிறது தாலி’ என்பது போல் டாப்பர் வேலையா பார்க்கத் துணிந்தீர், நன்றாயிருக்கிறது.”

“அடி அம்மா! ஒரு பெண்ணை ஒருவனுக்குக் கையைப் பிடித்துக் கொடுப்பது உலக சகசந்தானே. அதுபோல், உங்க ளப்பாவும், உன்னை ஒருவனுக்குக் கையைப் பிடித்துக் கொடுக்கத்தானே போகிறான். நன்றாய் யோசித்துப் பார்” என்று சொல்லவும்,

வள்ளி நாயகிக்குக் கோபம் பிறந்து, என்ன சொல்லு கின்றாளென்றால்...

(சொற்கட்டு)

பூனூலை நீ தரித்துப்
பிழைப்பு நீயும் பிழைக்கலாமா
உத்திராச்ச மாலை போட்டு
ஊர் வழியும் திரியலாமா
காவியுடையும் நீயும் தானணிந்து
காசினியில் நீயும் திரியலாமா
தடியது பிஞ்சு போகும்
தலை மொட்டையு மாகிவிடும்
கப்பறையுஞ் சோழியலும்
கனமுடனே யிழுந்திடுவாய்
பூனூலையும் நீயும் பறிகொடுத்து
போவா யின்று நீயும் நாரதனே.

(வசனம்)

“ஏ நாரத முனி! மரியாதையாய் சென்றுவிடும். பொய் வேசமிட்டுப் பெண்களையே மாற்றவா வந்தாய். சீ... !

அடி தோழிகாள்! இவனைப் பிடித்து பரண்காலில் கட்டி, சௌக்கினால் ஒரு டஜன் அடி கொடுங்கள் பார்க்கலாம்.”

அப்போதுதான், நாரதருக்கே கோபம் பிறந்து சொல்கிறார்...

**(சொற்கட்டு)**

**மந்தைக் காட்டுக் குறத்தி என்னை**
**மனித னென்று மதிக்கவில்லை**
**கழுதைக் குபதேசித்தாலும்**
**காளு காளென் றபையமிடும்**
**ஆக்கங்கெட்ட யிந்த நாய்க்குத் தானும்**
**அரிசிப் பானையது தெரியுமோதான்**

**(வசனம்)**

“வள்ளி! என்னை சற்றேனும் எண்ணிப் பாராது, அவமரியாதையாய் பேசி விட்டாயல்லவா. உன்னை நான் சொன்ன பிரகாரம் செந்திலம்பதி வாசனுக்கே திருமணம் செய்து வைக்காவிட்டால், என் பெயர் திரிலோக சஞ்சாரியல்ல” என்று சபர்தம் வைத்து, நாரதப் பிர்மம், கேசரி மார்க்கமாகக் கிளம்பி திருச்செந்திலம்பதி வந்துசேர்ந்தார். ஆங்கு திருச்சன்னி தானத்தில், மேளதாளத்துடன் என்ன விதமாக அபிஷேகம் நடக்கிறதென்றால்...

**(பாட்டு)**

**சிங்கார மா மயில் ஆடுது பாடுது**
**திருச் செந்தூரதிலே** **(சிங்கார...)**

**தேனாபிசேகக் கொண்டாட்டம்**
**தேவதாசி சதுராட்டம்**
**மான்விழி மாதர்கள் நடமாட்டம்**
**மாதாந்தச் சேர்வை மன்றாட்டம்**
**மச்சக்காவடி வெகுக்கூட்டம்**
**மாதவ முனிவரே தேஸ்டம்**
**வேல் வேலெனச் சொல்லுங் கோஷ்டம்**
**வேதாந்தம் படிப்பவர் ஆட்டம் பாட்டம்** **(சிங்கார...)**

**(வசனம்)**

இந்தப் பிரகாரம் முருகப் பெருமானுக்கு அபிஷேகம் நடந்து கொண்டிருக்கும் சமயத்தில், நாரத பகவான் முருகப் பெருமானைத் துதிக்கின்றார்.

**(பாட்டு)**

**எங்கும் நிறையுங் கமழ் பைங்கடம் பணி மார்பா**
**ஏழைக் கிரங்கும் வடிவேல் வேல் வேல் முருகா (எங்கு...)**

**மங்கள நித்திய கல்யாண குண வலங்காரா**
**மானிலத்தை யளந்த மால் மால் மால் மருகா (எங்கு...)**

**ஈராறு கண்ணிருந்தும் பாரா திருப்பதென்ன**
**என்ன குறைகள் செய்தேன் வேல்வேல் வேல்முருகா (எங்கு...)**

**சங்கு சேகண்டியோடு தவில் முரசு முழங்க**
**மங்களமாக யிங்கு வா வா முருகா. (எங்கு...)**

**(வசனம்)**

"ஓம் சரவண முருகா! சண்முக சடாக்ஷா! சூரசங்காரா ! சுகிர்த குண வடிவேலவா!" என்று துதிக்கின்ற போது, செந்திலம்பதிவாசன் எழுந்தருளி, "பிரம்ம புத்திரா அமருவீர். ஏது வெகுநாளாய்க் காணவில்லையே." "ஏதாவது காரணார்த்தம் இருந்தால் சமூகம் வருவேன்." "இப்போ, ஏதேனும் விஷய முண்டோ?" "ஆம்." "அப்படியானால் தெரிவியும் பார்ப்போம்.

**(பாட்டு)**

**நான் வரு மார்க்கத்தில் கண்ட கனியொன்று**
**நாடி யுமக் காகுமென்று – அதை**
**நான் கண்டு வந்தேனே யின்று – இந்த**
**நானில் மீதினில் யாருக்குங்கிட்டாது**
**நாதா உமக்கது நன்று.**

**கண்ட கனியின் விசேட மெல்லாஞ் சொல்லி**
**காட்டிடுவீரே யின்னேரம்**
**அதை நாட்டிடுவீரே மண்ணோரம்**
**அதைக் கானகம் வாழ்ந்திடும்**
**பக்ஷிகள் தின்று பறந்திடும் யிது நேரம்.**

அண்டர் முனிவருக் கெட்டாத அக்கினி
அப்பனே நீர் சென்று பாரும்
அதற்கப்புறம் என்னிடம் கூறும் –நல்ல
ஆனந்த மாகவே நீரு மருந்தியே
அன்புடனே மனந்தேறும்.

எட்டாதக் கொம்பிலிருக்கின்ற கனியை
எப்படி நான் பறிப்பேனா
அதை மெய்ப்புடன் கூறுவீர்தானே
அதில் எத்தனை பேரங்குக் காவலிருக்கிறார்
என்னிடம் கூறுவீர் கோனே.

**(வசனம்)**

"நாரத்ரே! தாம் வருகின்ற வழியில் ஒரு கனி யொன்று யிருக்கிறதாகவும், அக்கனியைப் பறிக்க வசமில்லை யென்றும் கூறுகின்றீரே! அப்படியானால், அந்தக் கனியைப் பறிக்கும் விதமெப்படி." "முருகா! அதற்கு, விபரம் கூறுகின்றேன் கேளும்."

**(கதை)**

பச்சை நல்ல மர மதற்கு
பக்கக் கிளை யிரண்டு உண்டு –அந்தக்
கிளைகளையே தான் பிடித்து
கருவமுடன் பறித்திடலாம் –அது
கானகத்திலிருக்கும் மரம்
காவலுக்கு ஒருவரில்லை
என்று முனி கூறிடவே
ஏது கேட்பார் முருகனவன்
அந்த நல்ல கனியதற்கு
அடையாளங்கள் தானுமுண்டோ
என்றவருந் தானுங் கேட்க
ஏது சொல்வார் நாரதரும் –அதற்கு
வாய் மூக்குக் கண்ணு முண்டு
வடிவங்களும் தானுமுண்டு –அந்தக்
கனியினுட திருவழகைக்
கண்டவர்கள் மெச்சிடுவார்

**(வசனம்)**

"செந்திலம்பதிவாசா! அந்த கனிக்கு எல்லா அவய வங்களு முண்டு. அது வா(ய்) திறந்து பேசுமானால்

முத்துக்கள் உதிரும். அந்த கனியினது வடிவை, ஆயிரம் நாவைப் படைத்த ஆதிசேடனாலுங் கூட கூற முடியாது என்றால், நான் என்னென்றுரைப்பேன்." "நாரதரே! எனக்கு எல்லாம் புரிந்து விட்டது. ஆனால்,

**(கதை)**

பெண்ணை யொரு கனிதா னென்று
பேதகமாய் சொன்ன தென்ன
அந்த நல்ல மர்மமதை
அருமையுடன் கூறுமென்றார்.

**(வசனம்)**

"பரத பண்டித ஜோதிடா! கன்னி யென்பதும் கனி யென்பதும் பதம் ஒன்றுதானே." "எல்லாம் உன் தெரிசனத் தாலன்றோ உற்பத்தியானது" என்று சொல்ல, முருகன் கேட்கின்றார்...

**(சொற்கட்டு)**

ஊர் தா னென்ன பேர் தா னென்ன
உற்ற தந்தை நாமமென்ன
காட்டிலவள் தனித்திருக்கக்
காரணமும் வந்த தென்ன
நாரதரே நீரும் நன்றாய் கூறும்
நலமுடனே நானும் பார்த்து வாரேன்
நல்லதொரு சிற்றூராம்
நம்பியென்னும் வேடன் மகள்
வள்ளி யென்னும் பெயருள்ளாள்
வனப் புயர்ந்த பெண்கொடியாள்
சாதி நல்ல முறைப்படியே
தார் வனத்திலவள் காவல் செய்தாள்.

**(வசனம்)**

"கார்த்திகேயா! அவள் பருவம் நிறைந்த மங்கை. சாதியாராசப்படி தினைப்புனக் காவல் புரிகின்றாள். அன்னவளிடத்தில் போக வேண்டுமானால், அவள் வேடக் குலமாக யிருப்பதால், தாமுங் வேட ரூபம் கொண்டுதான் போக வேண்டும். அப்படியானால்தான், அவளை ஏமாற்றலாம்."

"ஆகா! நாரதப் பிர்மம் உம்மை மெச்சினேன். எனக்காக இவ்வளவு பிரயாசை எடுத்து, ஓர் பெண்ணைத் தீர்மானித்து வந்ததற்கு, நான் என்ன பிரதி யுபகாரம் செய்யப் போகின்றேன். சரி, இதோ, வேடரூபம் எடுக்கின்றேன் பாரும்."

**(தெம்மாங்குப் பாட்டு)**

**சீவி நல்ல கொண்டையிட்டு செந்தூரப் பொட்டும் வைத்து**
**காவிக் கரை சல்லடமாஞ் சரவண முருகன்**
**கையிலொரு வில்லெடுத்தார் அறிவுத் திருமகன்**
**காட்டு முயல் பிடிக்கக் கண்ணி வலை தானெடுத்தார்**
**வேட்டைக்குப் போறவர் போல் சரவண முருகன்**
**வேலுக் கம்பைத் தானெடுத்தார் அரிதிருமருகன்**
**புள்ளி மயிலைவிட்டு பொன் மேவுங் கோவில் விட்டு**
**வள்ளி மானைப் பிடிக்கவே சரவண முருகன்**
**வாராரே குரவனைப் போல் அரிதிருமருகன்.**

**(வசனம்)**

"நாரத மகாமுனிவரே! வேட ரூபம் சரியா யிருக்கிறதா பாரும்." "பேஸ்! வள்ளி நாயகி அப்படியே சொக்கி விடுவாள். முருகா! வள்ளி சமேதராக! எனக்குக் காக்ஷி தந்தருள வேண்டும்." "அவ்விதம் செய்கின்றேன். சென்று வாரும்." நாரதர் போகின்றார். அப்போது, வேல்முருகன்...

**(கதை)**

**வனமான வனங் கடந்து**
**வாராரே வேல்முருகன்**
**காடை பிடிக்கும் கண்ணி**
**கட்கத்திலே வைத்துக் கொண்டார்**
**உள்ளான் பிடிக்கும் கண்ணி**
**உள்மடியில் வைத்துக் கொண்டார்**
**இடையிலே பற் காவி**
**இரு காதிற் பச்சைக் கல்லாம்**
**வேட்டையாடி வாரவர்போல்**
**வேகமுடன் ஓடி வாரார்**
**வேள்வி மலைப் பக்கத்திலே**
**விளை புனங்கள் மும்மரமாம்**
**பார்த்தாரே தினைப் புனத்தை**
**பாவினையா அன்னேரம்.**

(வசனம்)

"அதோ! ஆலோலம் பாடிக் கொண்டிருப்பவள்தான் வள்ளி நாயகி. இவள் பாடுகின்ற தொனியானது, காதிற்கு எவ்வளவு இன்பத்தைக் கொடுக்கின்றது. என்ன அழகு? என்ன சுதந்திரம்? இவள் யார் செய்த அருந்தவத்தி லுற்பவித்த வளோ!" அறியேன். ஆயினும் இவளது அழகை என்னவென்று ரைப்பேன்.

(வண்ணம்)

**மேரு வெற்படுத்தச் சப்த சாகர பரப்பிலுள்ள**
**பூதலத்தில் இப்படிப் பெண்ணேது தெய்வமாது (பெண்ணேது...)**

**பூருவத்தின் சாதகத்தை மேவி யிங்கு யாரிடத்தில்**
**கூவி யிவள் கோத்திரத்தை நானே அறிவேனே நானே...)**

**உன்னதப் பரண் மீதேறி நின்றுலவும் உத்தமியும்**
**சப்த கன்னிமாரை யொற்ற தேவி என தாவி (யொற்ற...)**

**முப்புரம் எரித்த சிவன் மெய்ப்புடனே வைத்திருக்கும்**
**முத்தனப் பிராட்டி யிவள்தானோ கலை மானோ (யிவள்...)**

**நித்திய கல்யாணி யிவள் சத்திய லோகத்திலிருந்து**
**நிர்த்தனஞ் செய்கின்ற சரஸ்வதியோ கலைமதியோ (சரஸ்வதியோ...)**

**ஆதி யந்த நாராயணன் பக்தியுடன் வைத்திடும்**
**பக்ஷமுள்ள லச்சுமியிவளோ அல்ல தெவளோ (இவளோ...)**

**தேவ யிந்திரன் தனக்குப் பாவை யிந்திராணியைப் போல்**
**மேவி யிங்கு வந்த மகராசி விசுவாசி (மகராசி...)**

**அங்க மில்லா மன்மதனும் தன் கைவசம் வைத்திருக்கும்**
**பங்க மில்லாச் சித்திரப் பொன் ரதியோ கலைமதியோ (பொன்...)**

(வசனம்)

"ஆனால், இப்படிப்பட்ட பெண்ணை இப்பூலகத்தில் கண்டதில்லை. ஆனாலும், நாம் இந்த இடத்தில் நின்று பிதற்றிக் கொண்டிருப்பதில் பயனில்லை. ஒரு மானைத் தேடிச் செல்வது போல், அன்னவளிடத்தில் செல்வோம்"

என்று, வேட ரூபத்தோடு அன்னவளிடத்தில் போய் நின்று கேட்கின்றார்.

(பாட்டு)

ஒரு மானிங்கு வந்ததுண்டோ வள்ளி
குறக்கள்ளி (ஒரு...)

மாயமாகவே புள்ளிமானது
வேகமாகவே தானு மோடியே (ஒரு...)

மோகமாகவே பெண்கள் மீதினில்
தாகமாகவே யிங்கு மேவியே. (ஒரு...)

(வசனம்)

"அடி குறக்கொடியாள்! என் வேட்டையில் முறிபட்டு, என் வலையை மீறி, ஓர் புள்ளி மான், இந்த தினைப் புனத்தை நாடி வந்ததைப் பார்த்தீர்களா!" "என்ன மானா? என்ன மான்?"

(பாட்டு)

அந்த மானுக் கடையாளங்க ளுண்டா
திண்டு முண்டா
மாவனக் குறவேடுவா வலை மீறி
என்னிடம் நாடியா வரும்
நீ வனத்தினில் கண்ட
மானதுக் கேற்படுங் குறி யாதெனக் குரை.

(வசனம்)

"ஏ வேடுவா! நீ தேடி வந்த மானிங்கு வரவில்லை. வேறு ஏதேனும் அடையாளம் இருந்தால் சொல் பார்க்கலாம்." அப்போது, முருகன் சொல்லுகின்றார்.

(பாட்டு)

செக்கச் சிவந்த மான் திருமேனி யுற்ற மான்
சீருள்ள மான் மைக் கண் கருத்த மான்
மாவனத் துற்ற மான் நல்ல குலமான்
அக்கம் பக்கம் பாராத மான் இளமான்
புல் மேயாத மான் அன்புள்ள மான் -என்
பக்கத்தில் நிற்குமான் பருவமுள்ள மான்
நம்பி தந்த மான் எனக்குச் சொந்த மான்.

ஏ வேடுவா நீ தேடி வந்த மானிங்கில்லை – இது
தென் மலைக் குரவர் வளர்த்தமான் சீர்பெற்ற மான்
நாடித் தினைப்புனங் காத்த மான் நம்பி பெற்ற மான்
நல்ல குலமான் நலம் பெறுமான்
பாடிப் படித்து பழனி யாண்டவனைத் துதிக்கு(ம்)மான்
பண்புள்ள மான் ஓடித்திரிந்து – உன்
மானைத் தேடிப் பிடிக்கச் சென்றிடுவா யதி சீக்கிரமே.

**(வசனம்)**

*"ஏ வேடுவா! நீ தேடி வந்த மான் இங்கு வரவில்லை. நீ தெரிவிக்கும் அடையாளமுள்ள புள்ளிமானும் நாங்கள் பார்க்கவில்லை. மரியாதையாய் சென்றுவிடு. நான் நம்பி பெற்ற மகள். என் பெயர் வள்ளி. இங்கு நில்லாதே, போய் விடு" என்றாள் வள்ளி. அப்போது, முருகன் தெரிவிக்கின்றார்...*

**(பாட்டு)**

தேடி வந்தேனே வள்ளிமானே – என் மேல்
மோடி செய்யாதே செழுந்தேனே மானே (தேடி...)

திரேகம் மெலிந்து மதன் வாதையாலே
தளர்ந்தேன் ஜீவ ரற்றின மா மயிலே – எனை
ஆவலோடு நீ அணைகுவாய் மனமொடு (தேடி...)

**(வசனம்)**

*"அடி! நம்பிக்குக் கிடைத்த தங்கக் கம்பி. நான் உன்னை நம்பி, இந்த வனத்தில் வந்தேன் அம்பி. தானாய் கிடைத்த தங்கத்தை விட்டு விடாதே வள்ளி'' என்றார் முருகன். அப்போது, வள்ளி தெரிவிக்கின்றாள்...*

**(பாட்டு)**

காதல் மிஞ்சிய வனவேடா
காட்டில் திரியும் முழுமூடா; போடா (காதல்...)

எமனோலை கிழித்து யிடுகாடடையும் நாளோ
சாமலைக் குறவேடுவனே உனைச்
சாம்பலாக்கிகய தூற்றிடுவேண்டா. (காதல்...)

**(வசனம்)**

*"அடே வனவேடா! இந்த வேடகுலத்தில் நீயொரு நிர்மூடன்; மதமேறிய தடிமாடன்; முழுக்குடிகேடன்;*

மானாபிமானமில்லாத மடையன்; எவரும் இகழ்ந்து தள்ளும் கடையன். இன்னும் சில நேரத்திற்குள் என்ன நடக்கின்றது என்று பார். நீ யொரு வீரனாயிருந்தால் நில் பார்க்கலாம்" என்று, அண்ணன்மார்களை அழைக்கின்றாள்.

(தெம்மாங்கு பாட்டு)

அண்ணா அண்ணா சோதரரே
அவசரமாய் ஓடி வாங்கோ
தங்கையவள் நானழைத்தேன்
தாஷ்டீகமாய் ஓடி வாங்கோ.

(வசனம்)

உடனே அங்கு வேட்டையாடிக் கொண்டிருந்த வேடுவர்கள், தங்கையின் சத்தத்தைக் கேட்டு ஓடோடி வருகின்றார்கள். அவர்(கள்) வருவதைக் கண்ட முருகன் தினைப்புனத்தில் ஒரு வேங்கை மரமாக நிற்கின்றார். அப்போது, வள்ளியைப் பார்த்து வேடர்கள் கேட்கின்றார்கள்...

(கதை)

அம்மா அம்மா வள்ளிக்கண்ணு
அவசரமாய் அழைத்த தென்ன
இந்த வனமதில் யாருமுன்னை
ஏளனங்கள் செய்த துண்டோ
அழைத்த தொரு விபரமதை
அருமையுடன் கூறிடுவாய்
என்று மவர்தான் கேட்க
ஏது சொல்வாள் வள்ளிக்கண்ணு.

(வசனம்)

"என்னை அருமையாய் வளர்த்த அண்ணன்மார்களே! வேறொன்றுமில்லை. தினைக் கதிர்கள் நன்றாய் விளைந்து விட்டதா இல்லையா? என்று அதைப் பார்க்கத் தான் அழைத்தேன தவிர, வேறொன்றுமில்லை." அப்போது, வனத்தைச் சுற்றிப் பார்க்கின்றார்கள்.

(கதை)

தினைப் புனத்தைச் சுற்றியவர்
திரண்டு மிகப் பார்த்து வாரார்

**வேலி யோரமாகவே தான்**
**வேங்கை மரந்தான் முளைத்து**
**பூவோடு பிஞ்சொடு**
**பொய் மரத்தைத் தானுங்கண்டார்.**

**(வசனம்)**

"தம்பிமார்களே! ஈதேது. இந்த வேங்கைமரம் புதிதாக முளைத்திருக்கிறதே! இந்த மரத்திலே பக்ஷி சாதிகள் வந்தடையுமல்லவா! ஆகையினால், இதை வெட்டிவிட்டால் மிகவும் நல்லதென்று நினைக்கிறேன்."

**(கதை)**

**என்று சொல்லி வேடர்களும்**
**எடுத்தாரே ஆயுதத்தை**
**அப்போது கெவுளி யொன்று**
**அடித்துதையா அம்மரத்தில்**
**பார்த்தாளே வள்ளியவள்**
**பாவினையா யேது சொல்வாள்**
**வேங்கை மரமானது தான்**
**வேலவற்குச் சொந்த மண்ணா**
**இந்த நல்ல வேங்கை மரம்**
**இருக்கட்டும் தினைப் புனத்தில்.**

**(வசனம்)**

என்று, வள்ளி நாயகி சொல்லவும், வேடர்கள் நல்ல தென்று, "அம்மா வள்ளி! இதற்கு எட்டாம் பக்கம் தினைக் கதிரைப் பொறுக்கிவிடுவோம். அதுவரையும், பந்தோ பஸ்த்தாய் காவல் புரிவாய்'' என்று சொல்லிப் போய்வி ட்டார்கள். அதன் பிறகு, வேங்கை மரமாகி நின்ற முருகப் பெருமான், வளையல் செட்டி வேடங்கொண்டு, வளையல் கொண்டு வருகின்றார்.

**(பாட்டு)**

**வளையல் வாங்கலையோ அம்மம்மா**
**வளையல் வாங்கலையோ** **(வளையல்...)**
**பச்சை வளையல்கள் லக்ஷம் பவுன்பெறும்**
**பர்மா தேசத்து லேடி வளையல்**

பருவப் பெண்களுக்கேற்ற வளையல்
பார்த்தபேர்களை மயக்கும் வளையல்
சிங்கப்பூர் கங்கணம் தங்கப்பூ வளையல்
சேலஞ் சில்லாவிலே வார்த்திட்ட வளையல். (வளையல்...)

## (வசனம்)

இவ்விதமாக செட்டியார், வளையலைக் கொண்டு தினைப் புனத்திற்குள் இறக்கினார். அதைக் கண்ட வள்ளி நாயகி, சேடிகளோடு வந்து செட்டியாரை விசாரணை செய்கின்றாள்.

## (பாட்டு)

எந்த ஊரு எந்த தேசம்
வளையல் செட்டியாரே
உம்மை யீன்றவர்கள் பேரே
இங்கு எடுத்துரைத்து
எங்களுக்கு வளையல் போடுவீரே.

கயிலாசம் செட்டி பெற்ற
கந்தன் செட்டி யென் பேரே –எனக்குக்
கழுகு மலையாம் ஊரே – நல்ல
காந்திமதி தாய் என்று சொல்லுவார்
என்னைப் பெற்றவள் பேரே.

சொந்தமுள்ள அண்ணன் தம்பி
துணைவர்களும் இருக்கா –நல்ல
இன சனங்கள் பெருக்கா –அதைச்
சுகிர்தமுடன் எனக்கெடுத்துச்
சொல்வீரே சுருக்கா.

எனக்கு மூத்த தொந்தி செட்டி
எனது அண்ணனம்மா – மாமன்
கண்ணன் செட்டியம்மா –எல்லாம்
உங்கள் கிருபையாலே
குறை ஒன்றுமில்லையம்மா.

வளையல் என்ன தினுசு வகை
வந்திருக்குதையா – அதை
வகை விபரமையா –இப்போ
வாங்கி யெங்கள் கரத்திலிட தாகமாகுதையா.

பச்சை வளையல் லக்ஷம் பொன் வெறும்
பளிங்குக் கங்கணக் காப்பு – இது
சிங்கப்பூரு சிகப்பு – இது
பார்வதியா ளணியும் வளையல்
பார்த்தோர் கண்ணைப் பசப்பும்.

(வசனம்)

"இந்தா பார் வள்ளி! உனது மனதுக்கேற்றாப் போல் பற்பல தினுசாக வைத்திருக்கிறேன். உனக்கு எந்த வளையல் வேண்டும் என்றாலும் எடுத்துப்பார்."

(கதை)

என்று சொல்லி வளையல் செட்டி
எடுத்து வைத்தார் விதவிதமாய்
வர்ண நிற வளையல்களை
வள்ளி நாயகியுந் தானெடுத்து
சிங்கப்பூர் கங்கணத்தை
சேடியர்கள் தா னெடுத்தார்
கந்தன் செட்டியாரே யிந்தக்
கங்கணந்தான் விலையுமென்ன
பணத்திற்குப் பத்து வளை –உன்
குணத்திற்கு ஓசியம்மா
வர்ணப் பூ வளையல்களை
வள்ளி நாயகிக்குப் போடலுற்றார்.

(வசனம்)

"அம்மா வள்ளி! சும்மாகிட்ட வா; வெட்கப்படாதே யம்மா. உன் கையை நீட்டுப் பார்க்கலாம்." அப்போது, வள்ளி கையை நீட்டுகிறாள். கையைப் பலமாய் பிடித்துக் கொண்டு, முருகன் என்ன செய்கிறான் என்றால்...

(கதை)

கையை நன்றாய்தான் பிடித்து
கனிவாயில் முத்தமிட்டார்
முகத்தோடு முகத்தை வைத்து
முத்தமதுங் கொஞ்சுகிறார்
பார்த்தாளே வள்ளியவள்
பாவிளையா யேது செய்தாள்

கையை அவள் தான் பிடிங்கி
கன்னத்திலே தா னடித்தாள்
முருகனென்றும் பாராமல்
மூர்க்கமுடன் தா னடித்தாள்
அப்போது முருகனவர்
ஆவலுடன் ஏது செய்தார்
சோழியலைக் கீழிறக்கி
ஜோக்கு மிகச் செய்யலுற்றார்.

(வசனம்)

அப்போது முருகன், வள்ளி நாயகியைப் பார்த்து என்ன சொல்லுகிறாரென்றால்...

(பாட்டு)

மோக மதுர மயிலே– ஒரு
முத்தங்கொடடி குயிலே தேனே (மோக...)

மோடியால் வாடினேன்
கோடிக் கம்பாடி யென் (மோக...)

சாகத் துணிந்த செட்டி – இது
சரியாய் நரகிலடைவாய் மட்டி (மோக...)

தாதிகளா லுன்னை
வாதிக்க மாட்டுவேன். (மோக...)

(வசனம்)

"ஏது இவன்? ரொம்ப வம்பான பேச்சுகளைப் பேச ஆரம்பித்து விட்டான். ஏ! வம்புகாரச் செட்டி! மரியாதையுடன் நடந்துவிடு; இல்லாவிட்டால் உன் நெட்டியை நொறுக்கி விடுவேன்."

(பாட்டு)

பருவ ரஞ்சித உருவ சுந்தரமே
பவளம் போன்ற பல்லொளிவைக் கொண்ட தந்திரமே (பருவ...)

பால் மலர்க் கணையால் மெலிந்துடல்
வாழ்வு தப்பியே நான் கழிக்கிறேன். (பருவ...)

(வசனம்)

"அடி பெண் பாவாய்! மன்மத பாணத்தால் என் சரீரம் மெலிந்து, நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வ்ருகிறது. உனக்குக் கொஞ்சமாவது இரக்கமில்லையா வள்ளி!" "என்ன இரக்கமா? என்னடா இரக்கம்."

(பாட்டு)

கெருவ மிஞ்சிய கோமாட்டி மடையா உனக்கிப்போது
கொழுத்துப் போச்சோ காமட்டித் தடியா (கெருவ...)

அடாகெடுவாய் நில்லடா படுவா யிப்போது
அடைவா அண்ணன்ரை நானுமழைக்கிறேன். (கெருவ...)

(வசனம்)

"அடா வளையல் செட்டி! உன் உயிரைத் தப்பித்துக் கொண்டு ஓடிவிடு; இல்லையேல், வீணாய் ம்டிந்து போவாய். இதோ! என தண்ணன்மாரை அழைக்கின்றேன் பார்" என்று சொல்லவும், வளையல் செட்டியாயிருந்த முருகன், உடனே மறைந்துவிட்டார்.

பின்னுமந்த முருகன் இவளை எந்தவிதத்திலும், நாம் நினைத்த காரியஞ் சாதிக்க வேண்டுமே. இதற்கென்ன உபாயம் என்று சாம, பேத, தான, தண்டம் எனும் உபாயங்களை முறையே ஜோதிப்போம் என்று ஒரு கிழவனாக வேடங் கொண்டு வருகின்றார்.

(கதை)

கண்டார்கள் வேடுவர்கள்
காட்டுக்குள் ளோர் கிழவனைத்தான்
ஏ தாத்தா ஏ கிழவா
எங்கிருந்து எங்கு வந்தீர்
தாடியதும் நரைத்துப்போச்சே
உமக்குத் தாள்ளாடும் காலமாச்சே
தொண்ணூறும் பத்துஞ் சென்ற
துவண்ட நல்ல கிழவனல்லோ
என்று சொல்லி வேடுவர்கள்
ஏகி வாரா ரன்னேரம்
தாத்தாவைத் தானுங் கண்டு
சந்தோசமா யேது சொல்வார்.

### (வசனம்)

"தாத்தா வாங்கோ! ஐயா! எங்கிருந்து வருகிறீர் தாத்தா. பழுத்த பழமாகி விட்டதே. இந்தக் காட்டுக்குள்ளே எதுக்காக வந்தீர் தாத்தா?" "நமஸ்காரம் நமஸ்காரம்." "நீங்கள் யார் தெரியவில்லையே!" தாத்தா! நாங்கள் நம்பிராசன் மக்கள். இந்த வனத்தில் வேட்டையாட வந்தோம் தாத்தா."

"ஆகா! நம்பிராசன் மக்களா! ஆனந்தம் ஆனந்தம்; மங்கள முண்டாகுக. பேரப் பிள்ளைகாள், நான் குமரிதீர்த்தம் ஆடப் போகிறேன். வழிதெரியாமல் இங்கு வந்து விட்டேன்பா" என்று சொல்லவும்? வேடர்கள் சொல்லுகின்றார்கள்...

### (கதை)

**வாங்க தாத்தா வாங்க தாத்தா**
**வள்ளியிடம் போவோ மென்றார்**
**கொடுங்கையால் தானணைத்து**
**கூட்டி மிகத் தானும் வாரார்**
**வள்ளியிடங் கூட்டி வந்து**
**வண்மையுட னேது சொல்வார்**
**தங்கையரே வள்ளிக் கண்ணு**
**நம்மள் தாத்தாவைப் பாருமம்மா.**

### (வசனம்)

"அம்மா வள்ளி! இவர் கன்னியாகுமரி தீர்த்தமாட வந்தவர். வழி தெரியாமல் இப்படியே வந்துவிட்டார். நாங்கள் உன்னிடங் கூட்டிக் கொண்டு வந்தோம். ஆனால், தாத்தாவிடத்திலே சரக்கு வண்டி வண்டியாயிருக்கும். நல்ல நல்ல விளையாட்டுக் கதைகளெல்லாம் போடுவார். தாத்தாவை உன்கிட்டத்திலே வச்சுக்கோ. நாங்கள் போய் வருகின்றோம்" என்று வேடன் மக்கள் போய்விட்டார்கள்.

### (கதை)

**தாத்தாவைத் தானிருத்தி**
**தானுமவள் ஏது செய்தாள்**
**முந்தானைச் சேலையினால்**
**முகமதையேதான் துடைத்தாள்**
**பரணடியில் தானிருத்தி**
**பாவினையா யேது சொல்வாள்.**

**(வசனம்)**

"தாத்தா! நீங்கள் வசிப்பது எந்த இடம்? உங்கள் நாமமென்ன? சிறு வயதிலேயே துறவியாகி விட்டீர்களா? இடையில் தான் துறவியானீர்களா?"

"அதைக் கேட்டாயா வள்ளி! 'நரை வருமென்றெண்ணி நல்லறிவாளர் குழவியிடத்தே துறந்தார்' என்பது போல், நான் சிறுவயதிலேயே துறந்து விட்டேனம்மா. எனக்கு ஊருமில்லை பேருமில்லை. என்னமோ நினைத்தாப் போல் இப்படியே வந்து விட்டேன். நீ என்னை அருமையாக வைத்துக் கொண்டால் இருப்பேன். இல்லாவிட்டால் போய் விடுவேன்."

"தாத்தா! என்னுயிர் போனாலும் உம்மை விட மாட்டேன்" என்று தன் பக்கத்திலே வைத்திருந்தாள்.

**(கதை)**

**தாத்தாவும் வள்ளிக்கண்ணும்**
**தனித்து விளையாடிடுவார்**
**சிறுவீடு தானும் கட்டி**
**சிரித்து விளையாடிடுவார்**
**பாண்டியது விளையாடி**
**பாவினையா யிருந்திடுவார்**
**இப்படியா யிருக்கையிலே**
**ஏது சொல்வார் கிழவனவன்.**

**(வசனம்)**

"வள்ளி நாயகி! நான் சாப்பிட்டு ஒரு வாரமாகிறது. இப்போ எனக்கு,

**(பாட்டு)**

**பசிக்குதே வயற் பசிக்குதே**
**பசிக்குதே வள்ளி கொதிக்குதே** **(பசிக்...)**

**கும்பி மசக்குதே**
**கண்ணைச் சொருகுதே யடி.** **(பசிக்...)**

**(வசனம்)**

"பேத்தி! பசியது கோரமாயிருக்கிறது. காதுகள் கப்கப் பென்று அடைக்கிறது. எனக்கு, ஏதாகிலும் ஆகாரம் இருந்தால் கொஞ்சங் கொடு பார்ப்போம்."

(பாட்டு)

பாட்டையா செய்தி கேட்டையா
பாழும் வனமதில் கேள்க்கும் உணவது
நாளும் கிடைப்பது பாரு மரிதது. (பாட்டை...)

(வசனம்)

"தாத்தா! இல்லாததைக் கேட்டால் எப்படிக் கிடைக்கும். சரி. கொஞ்சம் பொறுங்கள்" என்று, வள்ளி நாயகியானவள், கொஞ்சம் தினைமாவையுங் கொடுக்க, அதை வாங்கித்தின்ற கிழவன் ஜாலம் செய்கின்றார்.

(பாட்டு)

தவிக்குதே தண்ணீர் தவிக்குதே
தவிக்குதே தண்ணீர்
புவிக்குள் சுனையதும்
இவைக்குள்ளில்லையோ ஈரலுணர்த்துமே (தவிக்குதே...)

(வசனம்)

என்று சொல்லிக் கொண்டு, கண்ணைச் சொருகுகிறார். முகத்தைச் சுழிக்கிறார். வாயில் நுரை தள்ளுகிறார். அந்தச் சமயம் வள்ளி நாயகி, நெஞ்சைத் தடவுகிறாள். "ஐயோ! இதென்ன? கிணறு வெட்ட போய் பூதம் புறப்பட்டது போல் இந்தச் சனியன் பழியைப் போட்டு விட்டாலும் போட்டு விடுவான் போலிருக்கிறதே. பாவம் என்று மெதுவாய்த் தூக்கித் தண்ணீர்க்கரையில் வைத்து தண்ணீர் அருந்தச் சொன்னாள்." கிழவன் மடுக்கரையில் இருந்து கொண்டு ஜாலம் செய்கின்றார்.

(கதை)

இந்த நல்ல கிழவனுன்னை
என்ன செய்தேன் பாதகத்தி
குளக்கரையி லென்னைத் தள்ளி
குறச்சாலஞ் செய்து நிற்காய்
என்னுயிரும் போகுதடி
இன்னு மனமிரங்கலையோ
அப்போது வள்ளியவள்
அன்புடனே ஏது செய்தாள்

முந்திச் சேலைதான் வீசி
முருகனையே யிழுக்கலுற்றாள்
கையாலே தான் தூக்கி
கரையதிலே தானும் விட்டாள்
காவியுடைதனைப் பிழிந்து
காயவைத்தாள் வெயிலிலே
சருகை யிட்ட முந்தியாலே
தலை தனையேதான் துவட்டி
மத்தியான வெயிலிலே
மணவாளனையே காய வைத்தாள்
அப்போது கிழவனவர்
அன்புடனே யேது சொல்வார்.

(வசனம்)

*"அம்மா வள்ளி! நீ செய்த உபகாரம், எனக்கு வெகு ஆனந்தத்தைத் தருகின்றது."*

(பாட்டு)

தாகமுந் தீர்ந்தது பேத்தியே – எனக்கு
மோக மேலாகுது பேத்தியே
எனக்கொரு பெண்டாட்டி நீயடி – இப்போ
உனக்கொரு புருஷனும் நானடி.

(வசனம்)

*"அடிவள்ளி! நீ எனக்குப் பெண்டாட்டியாயும், நானுனக்குப் புருஷனுமாயு மிருந்தாலென்ன? அதனா லென்ன கெட்டுப் போகும்? என்ன நினைக்கின்றாய்?" "கெட்டுப் போவதொன்று மில்லை, ஆனால்,*

(கதை)

தாடியதும் நரைத்துப் போச்சே
தாள்ளாடுங் காலமாச்சே
வீசை யதும் நரைத்துப் போச்சே
சாகப் போகும் நாளையிலே
சம்போகம் வேணுமோதான்
காடு வாவென்று சொல்லி
கருதியே அழைக்குங் காலம்
வீடு போவென்று சொல்லி
விரட்டுகிற காலமாச்சே

**ஏ தாத்தா ஏ கிழவா உம்மை**
**இருந்த யிடம் ஏவுறதா**

**(வசனம்)**

"அட கிழட்டுப் பிணமே!நீ இதற்குள் செத்து,காடு புல் முளைத்திருக்கும். ஐயோ! பாவமென்று தூக்கிவிட்டதற்காக இந்த வார்த்தை; எச்சரிக்கை."

உடனே கிழவன் பயந்து, "அடியம்மா வள்ளி! உன்னைப் பேத்தி என்றுதான் கேலி செய்தேன். என்னைக் காடு வா வா வென்கிறது வீடு போ போ வென்கிறது. இதிலே சம்போகம் வேறே லக்ஷணமா. வா! போகலாம்."

**(கதை)**

**என்று மந்த யிருபேரும்**
**ஏகி வாரார் பரணோரம்**
**தாத்தாவைத் தான் பார்த்து**
**தார் குழலுமேது சொல்வாள்**
**வாருந் தாத்தா வாருந் தாத்தா**
**வார்த்ததை யொன்று நீர் கேளும்**
**கைரேகை நீர் பார்த்து**
**காரணத்தைக் கூறுமென்றாள்.**

**(வசனம்)**

"ஆம் தாத்தா! உமக்குக் கைரேகை பார்க்கத் தெரியுமா?" கிழவனும், "அடி பேத்திப்பொண்ணு! ரேகை சாஸ்திரத்திலே நான் மகாகெட்டிக்காரன். கை நீட்டு பார்க்கலாம்." உடனே வள்ளி கை நீட்டினாள். கையைப் பிடித்துக் கொண்டு கிழவன் சொல்லுகின்றார்.

**(பாட்டு)**

**ஆயலோட்டும் பெண்ணே – நல்ல**
**அதிஷ்டம் வருகுதடி**
**பதஷ்டங் கொள்ளாதே வள்ளி.** (ஆயலோ...)

**(வசனம்)**

"வள்ளி! ஒரு நட்சத்திரம் சொல்லு பார்க்கலாம்." "கார்த்திகை நட்சத்திரம்."

(பாட்டு)

**காாத்திகை நட்சேத்திரம் சொன்னதால்**
**கார்த்திகேயனான கந்தசாமியை மணந்திடுவாய். (ஆயலோ...)**

(வசனம்)

"போதும், தாத்தா, இதுதான் உமக்குத் தெரியும்."

"அப்படிப் சொல்லாதே யம்மா. இன்னும் எவ்வளவோ எனக்குத் தெரியும்."

"அப்படியானால், 12 ராசியில் ஒரு ராசி சொல் பார்க்கலாம்."

"ஆறாவது ராசி."

(பாட்டு)

**ஆறாவது ராசி சொன்னதால் அந்த**
**ஆறுமுக வேலவனைக் கீனரில் கல்யாணம் செய்வாய்.**
**(ஆயலோ...)**

(வசனம்)

"என்ன தாத்தா! நீங்கள் எனக்குக் கைரேகை பார்க்க வேண்டாம்."

"இல்லையடிம்மா, ஏதாகிலும் உனக்கொரு பலன் சொல்ல வேண்டுமென்பதுதான் எனது விருப்பம்."
"அப்படியானால், ஒரு எண்ணம் சொல் பார்க்கலாம்."

"எட்டாவது லக்கம்."

(பாட்டு)

**எட்டாவது லக்கம் சொன்னதால்**
**உன்கிட்ட வந்து நிற்கிறாண்டி**
**கிழுட்டு மாப்பிள்ளை யடி. (ஆயலோ...)**

(வசனம்)

"தாத்தா! உம்முடைய ஜோசியம் போதும்; நிறுத்தும்; ஜோலியைப் பாரும்."

"இல்லையடியம்மா, இங்கே வா! இன்னம் ஒன்று கேட்கின்றேன். அதாவது, இந்த...

**(சொற்கட்டு)**

காட்டுக்குள்ளேதான் வசிக்கும்
கரடி வந்தா லென்ன செய்வாய்
சீறியது பாயும் புலி
சிங்கம் வந்தா லென்ன செய்வாய்

சிங்கமதையே தாத்தா கண்டேனானால்
சில்வாயை நானும் கிழித்திடுவேன்

முள்ளம்பன்றி கரடி புல்வாய்
மோதி வந்தா லென்ன செய்வாய்
பதினாறடி வேங்கையது
பாய்ந்து வந்தாலென்ன செய்வாய்
ஈ(ன)ப்புலியுமது வந்து தானால் உன்னை
இழுத்துக் கொண்டு தானும் போய்விடுமே.

**(வசனம்)**

*"ஏ தாத்தா! அந்த மிருகங்களையெல்லாம் வாலை பிடித்துவிளையாடுவேன். என்ன தாத்தா! இன்னும் ஒன்று சொன்னீர்களே. என்ன ஈனப்புலியா? நீர் யாருகிட்ட ஏய்க்கிறீர். 'பனங்காட்டு நரி சலசலப்புக்கஞ்சுமோ', போரும் தாத்தா."*

*"ஏ பேத்திப் பொண்ணு! நீ தைரியசாலிதான். அப்படி யானால்,*

**(கதை)**

காட்டிலது மேய்ந் தடையும்
கறுப்பு நிறமாயிருக்கும்
பருவதத்தைப் போலவேதான்
பாரமுள்ள மிருகமது
காது பெரியதா யிருக்கும்
கண்கள் சிறியதா யிருக்கும்
அந்த மிருகமது தானும் வந்தால் என்
அருமைத் தங்கம் நீயும் என்ன செய்வாய்.

**(வசனம்)**

*"தாத்தா! அது என்ன மிருகம்? எப்படியிருக்கும்? அது பெயரென்ன? சொல்லுந் தாதத்தா."*

"சொல்கிறேன் கேள். அது யானை. அந்த மிருகம் வந்தாலென்ன செய்வாய்."

"தாத்தா! நீங்கள் சொல்வது எனக்கு ஒன்றும் புரியவில்லையே."

(கதை)

சொல்லுகிறேன் வாய்திறந்து
தோகையரே கேட்டிடுவாய்
யானைதும் வந்துதானால் – என்
அருமைத் தங்கம் என்ன செய்வாய்.

(வசனம்)

"தாத்தா! தாத்தா! அந்த ஒரு மிருகத்தை மாத்திரம் என்னிடம் சொல்லவே வேண்டாம்; என்னுயிரே போய்விடும் தாத்தா."

அப்போது முருகப் பெருமான் ஆற்றைக் கடந்து போக மாட்டாமல் தடுமாறுகின்றவனுக்கு, ஒரு தடத்தைக் கண்டால் எவ்வளவு சந்தோஷமோ அவ்வளவு ஆறாத மகிழ்ச்சி கொண்டு, முருகப்பெருமான் என்ன சொல்லுகின்றா ரென்றால்,

(பாட்டு)

வேள்வி மலை யோரத்திலே –ஒரு
வேங்கைக்குக் கண்ணி வைத்தேன்
வேங்கை படுங் கண்ணியிலே ஒரு
வேடக்குட்டி பட்டுக் கொண்டாள்

சுருளி மலையோரத்திலே – ஒரு
சிறுத்தைக்குக் கண்ணி வைத்தேன்
சிறுத்தை படுங் கண்ணியிலே ஒரு
சிவத்தக் குட்டி பட்டுக் கொண்டாள்

கழுமலை யோரத்திலே – ஒரு
காடைக்குக் கண்ணி வைத்தேன்
காடை படுங் கண்ணியிலே – ஒரு
கறுத்தக் குட்டி பட்டுக் கொண்டாள்.

(வசனம்)

"சரி! இவள் யானைக்கு மாத்திரம் பயப்படுவாள் போலிருக்கிறது. இதற்கு, நமது அண்ணாவை நினைத்

தால்தான் முடியும். அண்ணாவை நினைப்போம்'' என்று முருகப் பெருமான் விநாயகனைத் துதிக்கின்றார்.

(பாட்டு)

ஓடி வாரும் சகோதரா
உத்தம குண வசீகரா
வாடியே வருத்தமுற்றேன்
வள்ளியினால் கவலையுற்றேன்
தேடியே உனை யழைத்தேன்
திருமணமது யான் முடித்திட. (ஓடி...)

(வசனம்)

என்று அண்ணனை அழைக்கவும், விநாயகன் யானை ரூபத்தோடு தும்பிக்கையை நீட்டிக் கொண்டு வருகிறார். உடனே வள்ளியானவள், யானையைக் கண்டு பயந்து, "தாத்தா தாத்தா! இந்த யானையைக் கண்டு,என் மனம் பதறுகின்றது. இந்த யானையைப் போகச் சொல்லும்."

(பாட்டு)

யானை யதைப் போகச் சொலலுந் தாத்தா
உம தடியிணையைத் தொழுதேன் தாத்தா

எனக்கே பயமாயருக்கே பேத்தி – நான்
சொன்னாலும் போகாதடி பேத்தி

உள்ளம் நடுங்குறதே தாத்தா – நீங்கள்
சொன்னபடி கேள்ப்பேன் தாத்தா

என்னைக் கல்யாணம் செய்வாயோ பேத்தி
இந்தக் காட்டானை போகுமடி பேத்தி
ஆகட்டும் ஆகட்டும் தாத்தா – இந்த
யானையைப் போகச் சொல்லுந் தாத்தா.

(வசனம்)

"அண்ணா! கொஞ்சம் மறைவா இருந்து வாருங்கள்." உடனே, யானை மறைந்து விட்டது. "அடி பேத்திப்

பொண்ணு, யானை போய்விட்டது. என்ன கல்யாணத்திற்கு தாலி செய்ய வேண்டாமா?"

(பாட்டு)

**ஏச்சுப் புட்டேன் தாத்தா**
**ஏச்சுப் புட்டேனே (ஏச்சுப்...)**

**யானை வராதோ வள்ளி**
**யானை வராதோ (யானை...)**

(வசனம்)

உடனே, முருகப்பெருமான் மறுபடியும் அண்ணனை அழைக்கிறார். பழையபடி யானையும் வருகிறது. யானையைக் கண்டு, வள்ளி பயந்து, கிழவன் இடுப்பைச் சேர்த்துப் பிடித்துக் கொண்டு,

(பாட்டு)

**யானை யதைப் போகச் சொல்லுந் தாத்தா**
**உமதடியிணையைத் தொழுதேன் தாத்தா**
**உமதாணைப்படி நடப்பேன் தாத்தா**
**என துளமது பதறுது தாத்தா (யானை...)**

**எத்து வித்தை பண்ணாதடி பேத்தி**
**உன திஷ்டகுல தேவதைமேல் பேத்தி**
**சத்தியமும் செய்வாயானால் பேத்தி இந்த**
**சங்கடத்தைத் தீர்த்திடுவேன் பேத்தி. (எத்து...)**

(வசனம்)

"அப்படியே செய்கிறேன் தாத்தா. என் இஷ்ட குல தெய்வமாகிய, முருகக் கடவுள் மேலாணைப்படி, உம்மை விவாகஞ் செய்து கொள்கிறேன்" என்று வள்ளி நாயகி சத்தியஞ் செய்யவும், யானையும் கிழவனும் மறைந்து விட்டார்கள்.

அப்போதுதான் வள்ளி நாயகியானவள், "ஆகா! இங்கு வந்தவர் ஸ்ரீ முருகப் பெருமானாக வல்லவோயிருந்திருக் கிறார். இது தெரியாமல் வாயில் வந்தபடியெல்லாம் உளறி விட்டோமே" என்று அழுது, கண்ணீர் வடித்து, ஞான பண்டி தனைத் துதிக்கிறாள்.

**(பாட்டு)**

திருச்செந்தூர் வேலவனே
ஆதி சிவகாமி பாலகனே – நான்
அருந்தவஞ் செய்தும் பலனடையாது – இன்று
அரும்பாவியாகி நொந்தேன்

கருணை யில்லாது நெஞ்சம் யிப்போ
கரையாதது என்ன வஞ்சம்
முருகா முருகா வென் றுன்னைத் துதித்து
நான் முக்தி பெறவில்லையே

பழனி மலை முருகா – திருப்
பாரளந்தோன் மருகா –உன்
அழகு திருமேனி ஐயா உன் பாதத்தை
அடைவதிங் கென் னாளோ.

**(வசனம்)**

என்று முருகனைத் துதித்து, முத்து முத்தாய்க் கண்ணீரை வடித்து, அழுது பரிதவித்து, இரு கையையும் சிரசின்மேல்க் குவித்து, மறுபடியும் துதித்துப் புலம்புகின்றாள்.

**(பாட்டு)**

செந்தில் பதி வேல் முருகா
தேவர் புகழ் மால் மருகா
பச்சை மயில் வாகனனே
பார்வதியாள் திருக்குமரா
உன்னையே நான் மணம் புரிந்து
உலகமதில் வாழவென்று
எண்ணியே நான் தவமிருந்து
இதுவரையுங் காத்திருந்தேன்
இருந்த பலன் வீணாச்சே
இரக்கமற்ற வேல்முருகா.

**(வசனம்)**

இப்படியாக வள்ளி நாயகி, புலம்புவதைக் கண்ட முருகப் பெருமான், வள்ளி நாயகியாருக்குக் காக்ஷி யளிக்கின்றார்.

(பாட்டு)

ஆனந்தத் தாண்டவம் ஆடினார் செந்தூர்
ஆண்டி வேல்முருகன் (ஆனந்த...)

தங்கக் கிரீடம் பளீர் பளீரென
தாளிற் சதங்கை கணீர் கணீரென
அங்கையில் வேல்கள் தக தகவென
அக்கண மயில் மிசை ஆரோகணித்தவர் (ஆனந்த...)

கின்னரர் வாத்தியந் தாம் தாமென
பண்ணிசை முனிவர்கள் தோம் தோ மென
விண்ணவர் கைத்தாளம் தீம் தீமென
வெண் சாமரைக் கொடிவீசி ரம்பையர். (ஆனந்த...)

(வசனம்)

ஆறுமுகம், பன்னிரு கையுமிலங்க, மயில் வாகனத் திலாரோ கணித்து, முருகப் பெருமான், வள்ளி நாயகி யிடத்தில், "வள்ளி அஞ்சேல்! அஞ்சேலெ"ன்று பிராப்த மாயினார். தேவர்கள் புஸ்பமாரி பெய்தார்கள். வள்ளி நாயகி முருகப் பெருமானை வணங்குகின்றாள்.

(பாட்டு)

நமஸ்காரம் நமஸ்காரம் அரி மருகா
உந்தன் நளின மலர்ப்பாதம் (நமஸ்காரம்...)

அமரர் துதி புகழும் அருந்தவ பாதா
அடியாள் செய்குறை யதை தவிர்த்திடும் போதா
சமணரைக் கழுவேற்றும் சதுர்மறை வேதா
சமூக மதை யடைய பிராத்தித்தேன் நீதா. (நமஸ்காரம்)

(வசனம்)

"செந்திலம்பதி நாயகா! அடியாள் செய்குற்றத்தை மன்னித்து, என்னை யாதரிக்க வேண்டும் முருகா" என்று வணங்கி நின்றாள்.

உடனே முருகப் பெருமான், வள்ளியின் முன்பிலே வந்து, "வள்ளி நாயகி! பயப்படாதே! நீ தெரியாது செய்த குற்றத்தை மன்னித்தேன். உன்னிடம் தினைப் புனத்தில் வந்து, விளையாடிய தெல்லாம், நானே என்றறியக் கடவாய். ஆகாயவாணி, பூமாதேவி யறிய உன்னை இதோ காந்தர்வ

விவாகம் புனைந்து கொண்டேன்" என்று வள்ளி சமேதராக யிருக்கையில், திரிலோக சஞ்சாரியாகிய நாரதப்பிர்மா வருகின்றார்.

(கதை)

**சீமைக் கெல்லாம் அதிபதியே**
**செந்தில் நகர் வேலவனே**
**ஐக்கோட்டு முதலாளி**
**அறுபடை வீட்டுக்காரா**
**நமஸ்காரம் நமஸ்காரம்**
**நாரதனும் நமஸ்காரம்**
**திரிலோக சஞ்சாரி அவர்**
**திருவடியை நமஸ்கரித்தார்.**

(வசனம்)

"வாரும்! வாரும்! பிரம்ம புத்திரா! 'தூண்டில்காரனுக்கு மிதப்பு கட்டையின் மேல் கண்' என்பது போல் சரியான நேரம் பார்த்து வந்துவிட்டீரே; சந்தோசம்."

"ஞான பண்டிதா! வள்ளியானவள், என்னை ரொம்ப அலங்கழித்த வார்த்தை பேசியிருக்கின்றாள்."

(கதை)

**நம்பி யென்னும் வேடன் மகள்**
**நலம் பொருந்தும் வள்ளியவள்**
**அவமானமாய்ப் பேசி என்னை**
**அலக்கழிவு செய்து விட்டாள்**
**டாப்பர் வேலை பார்க்க வந்த**
**போக்கிரி நீ யென்றுரைத்தாள் – இதைக்**
**கேட்டுத் தரவேணுமையா கெம்பீரவேல்முருகா.**

(வசனம்)

"சண்முக சடாக்ஷரா! இந்த விபகாரத்தைக் கேட்டுத் தரவேண்டும். இல்லாவிட்டால், இந்த வள்ளியின் மீதுண்டாகிய கோபம், எனக்கு ஒரு போதும் தீராது."

அப்போது, முருகன் வள்ளியைப் பார்த்துக் கேள்க்கின்றார்.

(கதை)

**நம்பியவன் வெற்றெடுத்த**
**நாயகி வள்ளிக் கண்ணு**

மாமுனி நாரதரை
வசை வார்த்தைப் பேசலாமா
அவர் கோபமது கொண்டாரானால்
உன் குலமதுவும் நாசமடி
சாது தவயோகியை நீ
சாமாதானம் செய்திடுவாய்
அவர் செல்வாக்கு நீயும் பெற்று
நாயகியே வந்திடுவாய்.

## (வசனம்)

என்று, முருகப் பெருமான் சொல்லவும், வள்ளிநாயகி யானவள், நாரத மகா முனிவரிடத்திலே வந்து, "மாதவம் சிறந்த பிர்மாபுத்திரா! சிறியவள் தெரிந்து தெரியாமல் செய்த குற்றத்தை மன்னித்து, என்னை யாட்கொள்ள வேண்டும்" என்று வணங்கினாள்.

அப்போது, நாரத பகவான், "வள்ளி நாயகி! உன் குற்றத்தை மன்னித்தேன். நீ சாக்ஷாத் முருகப் பெரு மானோடு, திருச் செந்திலம்பதியில் நீடூழி வாழக்கடவாய். பன்னிருகையா! பழனிமலை யாண்டி! முருகையா! பக்தன் சென்று வருகின்றேன்."

"நமஸ்காரம். பிர்மபுத்திரா! நீர் செய்த நன்றியை நான் என்றும் மறவேன். சென்று வாரும்; ஆசிர்வாதம்."

நாரதர் போகின்றார்.

இப்படியிருக்க, சேடிகள் மூலமாய் வேடர்களுக்குத் தெரிந்து, அன்னவர்கள் திரண்டு வந்து, முருகனை வளைந்து கொண்டார்கள்.

## (கதை)

ஆரடா நீ யொருவன்
அதிகச் சிறைபிடிக்க வந்தாய்
உன்னை யினி விடுவதில்லை
உன்னுயிரை வாங்கிடுவோம்
என்று மந்த வேடுவர்கள்
ஏக போகமாய்த் திரண்டு
வில்லை யவர்தான் வளைத்து
வேகத்துடன் சுற்றி நின்றார்.

### (வசனம்)

பார்த்தார் முருகப் பெருமான். "அடா! வேடுவர்காள், எனக்குச் சொந்தமான பொருளை, நானெடுத்துக் கொண்டு போகின்றேன். உங்களுக்கு இதைப் பற்றிப் பாத்தியதை யில்லை. வீணாய் மடிந்து போகாதீர்கள். வந்த வழியைப் பார்த்துச் செல்லுங்கள்' என்று சொல்லவும் வேடர்களுக்கு அடங்காதக் கோபம் பிறந்து, முருகப் பெருமானென்று தெரியாமல், அவரோடு சண்டை செய்ய எத்தனித்தார்கள்.

### (பாட்டு)

**வேல்க் கம்பைக் கொண்டு எறிந்தார் சிலபேர்**
**வில் கம்பு கொண்டு எறிந்தார் சிலபேர்**
**கோடாரியைக் கொண்டெறிந்தார் சிலபேர்**
**குத்துக் கம்பு கொண்டெறிந்தார் சிலபேர்**
**கவண் கல்லை வைத்து எறிந்தார் சிலபேர்**
**காட்டாரியைக் கொண்டெறிந்தார் சிலபேர்.**

### (வசனம்)

இந்த விதமாக அந்த வேடர்கள்,சாங்கோப சாங்கமாக ஆயுதங்களை வீசினார்கள். முருகப் பெருமான் புன்சிரிப்பு கொண்டு, அன்னவர்கள், எறிந்த ஆயுதங்களைத் தடுத்துத் தன் வேலாயுதத்தைப் பிரயோகமம் செய்தார். அந்த ஆயுதத்தால்,

### (கதை)

**காலொடி பட்டு இறந்தார் சிலபேர்**
**கைகள் ஒடிந்துமே மாண்டார் சிலபேர்**
**தோள்களொடிந்து விழுவார்கள் சிலபேர்**
**தொங்கல் நடையாய் நடந்தார் சிலபேர்**
**அசகாயம்பட்டு விழுவார் சிலபேர்**
**ஐயோ வென்றலறி விழுவார் சிலபேர்.**

### (வசனம்)

இவ்வண்ணமாக வேடுவர்கள், கால் மாடு, தலை மாடாக உருண்டு மடிந்தார். அதைக் கண்ட வள்ளி நாயகி, "ஐயோ!" வென்றலறிப் புலம்புகின்றாள். என்னை,

### (கதை)

**வளர்த் தெடுத்த அருமை யென்ன**
**வைத்திருந்த நேர்த்தி யென்ன**

பெற்றெடுத்த அருமை யென்ன
பேருமிட்ட நேர்த்தி யென்ன
என்னாலே உங்களுயிர்
இரணக் களத்தில்தான் மடிய
பெண்ணாக நான் பிறந்து
பிழை கேட்டேன் வையகத்தில்
நாட்டவர்கள் மதியார்கள்
நல்வார்த்தைப் பேசார்கள்

**(வசனம்)**

"சுவாமி! என்னாலே இந்த வேடர்குலங்கள் யாவும் மடிந்துவிட்டது. நான் இந்த உலகத்தில் பெரிய பாவத்தைச் சுமந்து கொண்டேன். ஆகையால், தாங்கள் செய் குற்றத்தை மன்னித்து, பிராண பிச்சைக் கொடுக்க வேண்டும்" என்று, அவருடைய திருவடிகளைப் பற்றிக் கொண்டாள்.

முருகப் பெருமான், தன்னுடைய மகிமை தெரியும் பொருட்டு, இறந்த வேடர்களைத், தன் கையால் தட்டி எழுந்திருக்கச் செய்தார். உடனே முருகப் பெருமான் மயில் வாகனரூபராய் விளங்கினார். அப்போது, வேடர்கள் சுவாமியைத் துதிக்கின்றார்கள்.

**(பாட்டு)**

மயில் வாகனத் துரையே
குறமகள்தோள் மணிவறையே – எங்கள்
வம்பவிழ் கடம்பனடி
நம்பென நடம்புரியும் (மயில்...)

அயிலார் திருக்கரனே – எங்கள்
அரனார் திருமகனே – உமை
அந்தியினும் சந்தியினும்
சிந்தனை செய் மைந்தனை யாள் (மயில்...)

நெடுவான் றுதி யமராபதி
நிருபன் பணிக்குமரா – இந்த
நீண்ட கடல் சூழுலகைத் தாண்டி
இமைப் போதில் வாரும் (மயில்...)

**(வசனம்)**

'ஏ சூரசங்காரா! சுப்பிரமண்யா! சேவல் கொடியாய்! செந்தூர் கருணாகர மூர்த்தி! ஞானபண்டிதா! செந்திலம்பதி

வாசா! காட்டிலே வாழும் வேடர்களையா சோதிக்க வேண்டும். இந்த வள்ளி நாயகியானவள், உனக்குகந்த வளென்றறியோம்; உன் மகிமை தெரியோம்; சுவாமி எங்கள் வேடர் குலங்களுக்கு இந்த உலகுள்ளளவும் அழியாப் புகழ் கிடைத்தது; கோடி நமஸ்காரம்; சென்று வாருங்கள்."

"பிதாக்களே! அண்ணன்மார்களே! சுற்றத்தார்களே! நான் போய் வர வேண்டும். விடை தாருங்கள்" என்று வேண்டிக் கொள்ளவும்,

முருகப் பெருமானும் அவர்களைப் பார்த்து, "வேடர் களே! உங்களுக்கு ஏற்படுங் கஷ்ட நஷ்டங்களைத் தீர்த்து, 'நோயற்ற வாழ்வும் குறைவற்ற செல்வமுங்' கொடுத்திருக் கின்றோம். சென்று வாருங்கள்" என்று, வள்ளி சமேதரராக மயில் வாகனத் தாரோகணித்து, திருச்செந்திலம்பதியடைந் தார்கள்.

**தெய்வானை :** ஆரடி சிருச்சி யெந்தன்
நாயகன் பின்னால் வந்தவள்
அப்புறத்திலே விலகி நில்லடி
வெகு மெப்புடன் வந்தேற வந்தாய்
சொல்லடி ஆறு மாமுக வெல னென்றவர்
பாரு முந்தனை கூடினா லிதில்
ஆகுவாயோ நீயுயர்ந்த சாதியே
வீட்டினுள்ளே நுழையாதே
குறப்பேதையே!

**வள்ளி :** ஜாதியை யிழுந்தே யிங்கு
பேதையே நீ பேசுவது
தானுனக்கு நல்லதல்ல பாரடி
இனி நானுனை மதிப்பதெங்கே கூரடி
நீ சண்முகத்தோடு வந்த யெந்தனை
உண்மை சொல்லி புணர்ந்தக் கந்தனைத்
தள்ளிவிடு யழைத்துப் போகிறேன்
எந்தன் செல்வத்தைத் தாயார் வீடு சேர்க்கிறேன்.

**தெய்வானை :** யானழைத்துப் போவேனென்று
தானுரைத்த சின்ன ஜாதி நங்கையே
உன் நாவை யறுப்பேனடி
திருச்செங்கை வேலனுக்குப் பெண்டு நானடி

நாளிகையோடு வேளை லக்ணம் ராசியும்
தேதி நாள் நச்சத்திரம்
நாள் முகூர்த்தம் பார்த்து யொரி சிந்தினேன்
நானல்லோ கிழக்கு முகம் குந்தினேன்.

வள்ளி : கொட்டு முழக்கோடு
தாலிக் கட்டிக்கொண்டு வந்திருக்கும்
பட்ட பஸ்திரி கெட்ட கேடு பாரடி
தந்தை கட்டிக்கொடுத்தான் வலிய தேரடி
கொச்சை யென்பதும் லச்சை என்பதும்
சீச் சீ கொஞ்சமும் வைத்திலாதவோர் கொம்பனையே
வார்த்தை யென்ன ராங்கி நீ
இங்கு கூற வந்தாய்
மெத்த மெத்த வோங்கி நீ.

தெய்வானை : வார்த்தை யென்ன ராங்கி யென்று
பார்த்து மிக பேசாதடி
வைத்திடுவேன் கன்னமதில் முந்தியே
உந்தன் மானம் வெட்கம் இரண்டும் விட்டு
வந்தாயே வாக்கியமும் கன யோக்கியமும்
உந்தன் பாக்கியமும் சிலாக்கியமும்
இந்த வையகத்தோர் கண்டு சிரிப்பாரடி
குறத் தையலே பலரும் நகைப்பாரடி.

வள்ளி : கண்டு சிரிப்பாரெனவே
ஒண்தொடியே சொல்ல வந்தாய்
விண்டத்தில் வாழ்ந்ததைக் கேளடி ஐயோ
பண்டு சூரபத்தமனாபன்தானடி
கனகப் பொற்கிரி யதனை விட்டுமே
தமணியக் கரி குழையி லூற்றுமே
கண்ணீர் விட்டழுததுண்டோ
மெள்ளவர நீங்கள்
தண்ணீர்க் கென்றலைந்த நாளைச் சொல்லவா.

தெய்வானை : தண்ணீர்க் கென்றலைந்தோ மென்று
சொன்ன குற பேதையே கேள்
தஞ்சமென்று வாசலில் நின்ற வஞ்சியே
பழங் கஞ்சி கூழ்வார் ஆச்சியென்று
கெஞ்சியே சாப்பிடுங்கறி போட்டிடு மிலை
தோட் படுஞ்சுரைக் கூட்டில் ரொப்பியே

தானே திங்கும் அற்ப ஜாதியல்லடி
காட்டுப் பூனை திங்கும் சேதி
பொய்யா சொல்லடி.

வள்ளி : சூரனோடு சிங்க முகன்
தாருக னுன்தந்தை தன்னைத்
தோகையே விரட்டிவிட வில்லையா
உந்தன் சொந்தத்தார்
மீன் சுமந்து வரவில்லையோ
தொட்டதுஞ் சிறைப்பட்டதும்
அடிபட்டதும் உதைபட்டதும்
வாயாற் சொல்லுவதற்கும்
வெட்கமாகத் தோணுதே
எந்தனுள்ள முரைக்க மின நாணுதே.

தெய்வானை : வெட்கமாகத் தோணு தென்று
பக்குவமாய்ச் சொல்ல வந்தாய்
வேறே கதி உங்களுக் கேதடி
எங்குந் தேர் திருவிழாவில் வந்து பாரடி
மொத்தமுஞ் ஜனமுற்ற கும்பலில்
வைத்திருக்குமோர் கத்திரிக் கோலில்
மேலுமே மணியறுப்பீர் பாரடி
அங்கே போலிசார் பிடித்துதைப்பார் தேறடி.

வள்ளி : போலீசார் பிடித்துதைக்கும் ஜாதி
என்றிகழ்ச்சி பேசும்
வேலையற்றச் சக்களத்தி போடி போ
பெருஞ் ஜாலமுற்ற விட்டிலைச்சி வாடி வா
வன கடைப் புழு மஞ்சி
தற்குற வஞ்சி யென்று
நீ நெஞ்சுராயடி
குஞ்சர மழித்த பெண் நீ யல்லவா
நானும் பஞ்சரக்கிளி யென்பது மெய்யல்லவா.

தெய்வானை : மஞ்சரக் கிளியென்பதாய்
மிஞ்சிமிஞ்சிப் பேசாதடி
பட்டியே யுன் மானவெட்கம் போகுமடி
நீங்கள் கட்டுவது கூடைமுறமாமடி
பானைச் சட்டியைக் கூடை மீதினிலே
எடுத்து எல்லோருமாய் திரியும்

பானல் விழி பைங்குறத்தி நீயடி
ஒரு மான் வயிற்றிலே யுதித்த சேயடி.

வள்ளி : பைங் குறத்தி என்று என்னை
லோங்க லோங்கப் பேசாதடி
அங்கு வந்தே உன் புருஷன் தாழ்ந்தனர்
எந்தன் பங்கயப் பாதத்தில் வேண்டி வீழ்ந்தனர்
உலகி லுனக்கு நான் சளைச்ச குடியோ
அண்டையிலே வந்து வந்து வோடுகிறாய்
என் கொண்டை மயிர் மீது கையைப் போடுகிறாய்.

தெய்வானை : கொண்டை மயிர் மீது
கையைக் கொண்டு வந்து போட்டேனிதோ
கூப்பிடடி நின் சலுகைக் காரனை
அந்த கோழியங்கொடி தரித்த வீரனை
கொண்டவன் மனைக் கின்று நீ வரக்
கூத்தியாளுக் கவ்வளவு செல்லுமா
வெகு நேர்த்தி யுந்தன் ஞாயம் வெல்லுமா.

வள்ளி : கூத்தியாளுக்கு அவ்வளவா வார்த்தை யென்று
எந்தனுட கொண்டையிற் கைபோடும்படி யாச்சுதா
மலை குன்றில் வாழ் குறவர்க்கும் புகழ் போச்சுதா
குகனே வோய் சண்முகனே
உமையவள் மகனே சரவண பவனே
இந்த கோல மென்னை செய்ய எண்ணங் கொண்டீரோ
அந்த நீலமயிலேறி வந்து நின்றீரோ

தெய்வானை : நீல மயிலேறும் வடிவேலனை யழைக்கிறாய்
உன் நெஞ்செலும்பை வைத்து சூடுவே னடியார்க்கு
மஞ்சிடாப் பெரியசாமி தானடி
நில்லு யெதிர் வரச் சொல்லு
எனனைப் பேசச் சொல்
நின் மொழி சொல்லு
சொல்லும் ஞாய மென்ன
சாட்சி யென்ன வைக்கிறாய்
எந்த நாச்சியார் வீட்டினில் வந்துநிற்கிறாய்.

சுப்பிரமணியர் : தேவராஜன் பெற்றெடுத்த
கோவை யிதழ் பைங்கிளியே
சித்தத்திற் றயவு வைத்து கேளடி

எந்தன் புத்தி கெட்டலைந்திட்டாலும் பாரடி
சேலை தப்பவும் வேலை செய்யவும்
மாலை கட்டவும் ஆளொருத்தியைச்
சேர்த்து வந்தாரென்று யெண்ணிக் கொள்ளடி
எனை பார்த்தவர் சிரிப்பா ரிதைத் தள்ளடி.

தெய்வானை : பார்த்தவர் சிரிப்பா ரென்று
வார்த்தைச் சொல்ல வந்தீரின்று
பானைச் சட்டியை தொடவும் யோக்கியமா
மிக்க நாணயமாய் பேச வந்தீர் சிலாகியமாய் ஓய்
பரனே பன்னிருகரனே குதகிட
தீரனே சரவண பவனே இவள்
பட்டிணத்தி லெச்சில் நக்கும் ஜாதியே
நாமுந் தொட்டுக்கொள்ள வென்ன வுண்டு நீதியே.

சுப்பிரமணியர் : தொட்டுக் கொள்ள நீதியில்லா விட்டாலும்
நானென்ன செய்வேன் பட்டுக் கொண்டேன்
எங்கே யினி போகுவேன் அவளை
விரட்டி விட்டாலிப் பொழுதே சாகுவேன்
சொல்லு மென்னுட வார்த்தை நம்பிடு
தோகையே வொரு கோடி கும்பிடு
துன்பத்திலே யென்னைவிட்டு பாராதடி
குறக் கும்பு வந்தா லேசிலே போகாதடி.

சுப்பிரமணியர் : செந்தினைப் புனத்து வேடர்
சுந்திரத்துடன் வளர்ந்த தேன்மொழியே
கேளாயொரு வாக்கியம் எல்லாந்
தானேயவள் கொண்டு வந்த பாக்கியம்
தேவராஜ னென் மாமானா ரிதையே
தெரிந்திடில் கோபமாகுவார்
செப்புகிறேன் என்னாலொன்று மாகாது
அவள்சேவடிக் கும்பிடு வீண் போகாது.

வள்ளி : இப்படிக் கொத்தவர்தன்
தப்பிலிதனத்தைக் கண்டால்
யானுமுந்தன் பின்னே வரமாட்டேனே
இவளால் மானம் போகும்
வார்த்தையெல்லாம் கேட்டேனே
என்ன செய்வேன் அண்ணன்மார்கள்
நீ சொன்ன சொல்லை உண்மை கொண்டிட

ஏதேனுந்தான் மந்தரித்து போட்டீரோ
வந்தால் காதறுத்து கூத்துப் பார்க்க மாட்டாரோ.

சுப்பிரமணியர் : காதறுத்து கூத்து பார்க்கும்
ஜாதியில் வந்து பிறந்த கண்மணியே
கோபம் வைத்திடாதடி
நானும் என்ன செய்வேன்
இந்த வேளை யோசிடி
உன் காலிலாகிலும் நானும் விழுகிறேன்
பாரு அவள் பணக்காரன் மகளடி
காரியத்தை நீ முடித்துக் கொள்ளடி
வீட்டில் ஏறிக் கொண்டவளைத் தள்ளடி.

பொது : கந்த நாதன் இந்தவிதம் வந்து சொல்ல
தேவயானை காலிலே விழுந்தாள் குறவள்ளியும்
கண்டு மேலும் மேலும்
வாழ்த்தினாளாம் மெல்லியலாளும்
கார்த்திகேயனும் நேர்த்தியா யினதைப் பார்த்து
சந்தோச வார்த்தைப் பேசியே
கைக் கொட்டி சிரித்து நின்றார் கேளுமே
மெய்யுடனுரைக்க வந்தார் மேலுமே.

(முற்றியது.)

(கதைப் பாடலை இயற்றிய புலவர் மாரிமுத்துக் கிருஷ்ணன்.)

7

# கோவலன் கதை

(ஓலைச்சுவடி பதிப்பு)

(சிவசுப்பிரமணியபுரம்
அ. அப்பாவு நாடார் அவர்களிடமிருந்து
ஓலைச்சுவடி பெறப்பட்டது.)

## (விநாயகர் துதி)

முந்தி முந்தி விநாயகனே முக்கண்ணார் தம்மகனே
ஐந்து கரத்தோனே அரு ளுமையாள் புத்திரனே
விக்கின விநாயாகனே வெண்ணை யுண்டோன் தன்மருகா
முக்கண்ணார் பெற்றெடுத்த மூஷிக வாகனனே
வெட்பாலைக் குள்ளிருக்குஞ் சப்பாணிப் பிள்ளையாரே
சப்பாணிப்பிள்ளையாரே பொற்பாதம் நான்மறவேன்
கோவலனார் தன் கதையைக் குவலயத்தில் நான் பாட
விக்கினங்கள் வாராமல் விநாயகனே முன்னடவாய்.

## (ஆறுமுகன் துதி)

அவனிமிசை பவனிவரும் ஆறுமுகத்தோனே
சிவகாமிபுத்திரனே தெய்வானை நாயகனே
வள்ளியை மணம் புணர்ந்த வடிவேற் கரத்தோனே
புள்ளி மயிலேறும் புண்ணியனே காசினியில்
இக்கதையை நான் பாட இன்பமா யென் னாவில்
ஒக்கவே நீயிருந்து உகந் தருள்வாய் சேவகனே.

## (சிவபெருமான் துதி)

சோலை வயல் சூழ்ந்துவர சோம சுந்தரேஸ்பரரே
ஆல விடமுண்ட ஆலவாய்ச் சொக்கேசா
அந்தமா யிக்கதையை அன்பாகப் பாடுதற்கு
எந்தனுட நாவி லினிதாய் குடியிருந்து
தப்புகள் வாராமல் தாயாரென்மீனாட்சி
ஒப்பும்படியாக உத்தமரே காத்தருளும்.

## (திருமால் துதி)

ஆலிலை மேற் பள்ளிகொண்ட ஆதிநாராயணரே
பால்வெண்ணெய் தயிருடனே பரிவாக வுண்டவரே
பாற்கடலிற் பள்ளிகொண்ட பஞ்சாயுதத்தோரே
தீர்க்கமா யென் னாவில் தீவிரமாய் வந்திருந்து
குற்றங்கள் வாராமல் கோவலனார் தன் கதையை
சுத்தமாய் பாடுதற்குத் துழாய் மௌலி காத்தருளும்.

## (கலைமகள் துதி)

வாணி சரஸ்வதியே மறையவனார் தேவியரே
காணிக்கையாகவேதான் களிப்பாக வுன்றனக்கு
பால்பழம் சர்க்கரையும் பரு விளாம் பழத்துடனே
கால்கண்ட நாழிகைக்கு கடுகப் படைத்திடுவேன்
பாலன் கோவலன் கதையைப் பாரில் யான் பாடுதற்கு
கால னணுகாமல் கதையொன்றுஞ் சோராமல்
பத்தினியாள் தன்கதையில் பழுதொன்றும் நேராமல்
உத்தமியாள் தன் கதையி லொன்றுங் குறையாமல்
பாடவே யென் னாவில் பாரதியே இப்போது
கூடவே நீயிருந்து கொண்டஉணக்க வேணுமம்மா.

## (மாநாகன் செட்டியும் மாச்சோட்டன் செட்டியும் வணிகம் செய்தல்)

பட்டணமாம் பட்டணமாம் காவிரிப்பூம்பட்டணமாம்
கஞ்சிகொண்டு மதவடைக்குங் காவிரிப் பூம்பட்டணமாம்
காவிரிப்பூம்பட்டணத்தில் கனக மணி வர்த்தகர்கள்
மாநாகன்செட்டி என்றும் மாச்சோட்டான் செட்டி என்றும்
அத்தானும் அத்தானும் அழகு கப்பலோட்டி வந்தார்
மைத்துனனும் மைத்துனனும் வர்ணக் கப்பலோட்டி வந்தார்
இரவோடி ராத் திரும்பும் ஏழுலட்சம் சோங்குக் கப்பல்
பகலோடிப் பகல் திரும்பும் பத்து லட்சச் சோங்குக் கப்பல்
படவி லரிசிவரும் பட்டணத்து மாலை வரும்
சோங்கு மிளகு வருஞ் சொர்ணக் கப்ப லேறிவரும்
இப்படிக்குத் தாமிருந்தார் இன்பமுடன் வர்த்தகர்கள்

## (முத்துச் செட்டி பிள்ளைவேண்டி தவமிருத்தல்)

இவர்கள் மாபத னிலங்கு மொரு முத்துச்செட்டி
பிள்ளையில்லை யென்று சொல்லி பேருலகிற் றவ ரிருந்தார்
நந்தவன பூந்தோட்டம் நதிக்கரையிற் றானும் வைத்தான்
பொய்கைக் கரைகளின் மேல் புஷ்பவனந்தா னும்வைத்தான்

## (காமதேனு நந்தவனத்தில் மேய்தல்)

கைலை தனிலிருந்து காமதேனு அங்குவரும்
நூலேணி கீழ்போட்டு நொடிக்குமுன் தானிறங்கி
புல்லுகள் மேய்ந்து பொய்கையிற் றானிறங்கி
தாமரைப்பொய்கையிலே தாகமது தானருந்தி
மன்னன் முத்துசெட்டிதனை வாழ்த்தி கயிலாயம்
நூலேணி மேலேறி நொடிக்குட் போய்ச்சேர்ந்திடுமாம்

## (முத்துச்செட்டி காமதேனுவின் கன்றைக் கொல்லுதல்)

அன்று போய் மற்ற நாள் அன்பாய் வரும்பொழுது
காமதேனு போகிறதைக் கண்டது கன்றதுவும்
அம்மா நீபோகுமிடம் அழைத்துப்போ வென்று சொல்லி
கன்றது பின் தொடரக் காமதேனுவுந் தானழைத்து
பூங்காவனந் தேடிப் பாங்காய் வந்ததுவே
புல்லுகளைத்தான்மேய்ந்து பொய்கை ஜலந்தானருந்தி
நூலேணி மேலேற நோக்கு மந்த வேளையிலே
பசு மேய்ந்து போகிறதைப் பார்த்துவிட்டான் முத்துசெட்டி
பட்டி மாடிங்கே வந்து பயிரெல்லாம் மேயுதென்று
கவுண்டுக் கல்கொண்டு மல்லோ கனமா யடிக்கையிலே
காமதேனுக்குத் தப்பி கன்றுக்குப் பட்டதங்கே
கன்றுக்குப் பட்டவுடன் கடுகவிழுந்ததுகாண்
அம்மாடியென்று சொல்லி அலறி யிறந்த தங்கே

## (காமதேனு பசு சாபமிடல்)

காமதேனு கண்டலறி கடுகவே ஓடிவந்து
அழுத கண்ணுஞ் சிந்தையுமா யடித்துப் புரண் டெழுந்து
ஆகொடுவா யெந்தனுட அருமை மகவதனை
பதினாறு வயதளவும் பால்கொடுத்து நான் வளர்த்தேன்
பெற்று வளர்த்ததொரு பெருமை யறியாமல்
கவுண்டு கல்லாலெறிந்து கன்றதனைக் கொன்றாயே
ஆனபடியாலே யான்பெற்ற பாலகன்போல்
உந்தன் வயிற்றிலே உதிக்கின்ற மைந்தனுக்கு
பதினாறுவயதினிலே பாலனிறப்பானென்று
காமதேனு சாபமிட்டு கைலைக்குச் சேர்ந்ததுகாண்

## (மணியரசன் மைந்தர்களுக்குச் சொத்தைப் பங்கிட்டுக் கொடுத்தல்)

பட்டணமாம் பட்டணமாம் மதுராபுரிபட்டணமாம்
ஆயிரம்பாண்டியர்கள் அணிதிரளாய் மன்னவர்கள்
மதுரை யறுகாதம் வாழ் மதுரை முக்காதம்
தேனார்மதுரையது தென்மதுரை யாண்டிருந்தார்
மதுராபுரிபட்டணத்தில் மணியரசன் வாணியரும்
மணியரசன் வாணியர்க்கு மைந்தர்களும் நாலுபேராம்
முதற் றார மங்கையர்க்கு மூன்றுபேர் மைந்தர்களாம்
மறுதாரம் மங்கையர்க்கு மைந்தனொருவ னுண்டாம்
இப்படிக்குத் தானிருக்க இன்பமுள்ள வாணியனும்
சாகிற நாளையிலே தன் மைந்தர் நால்வருக்கும்

உண்டான திரவியத்தை இரண்டாய் பகுத்தானாம்.
முதற் றாரம் பெற்ற மைந்தர் மூவருக் கொரு பாகம்
மறு தார மீன்றதொரு மைந்தனுக்கொரு பாகம்
பாகங்கள் வாணியனும் பகுந்துக்கொடுத்தானாம்
மைந்தரும் மக்களுடன் வாழ்ந்திருக்கும் நாளையிலே
வாழ்ந்திருக்கும் நாளையிலே மறு தார மைந்தனவன்
எண்ணைக்குட மெடுத்து இன்பமுடன் வாரானே
மதுரை யறுகாதம் வகையாகச் சுற்றிவந்தான்
எண்ணெய் விலையாகாமல் எங்குமவன் சுற்றிவந்தான்
மதுரையைக் காக்கின்ற வடபத்திரகாளி கோவில்
முடிசூடும் பாண்டியர்கள் முற்பிறப்பில் செய் வினையால்
இப்பிறப்பிற் குழந்தை யில்லாததைக் கருதி
காளியம்மன் சன்னதியைக் கதவடைத்தார் பாண்டியர்கள்
சாத்திக் கதவடைத்துத் தாள்பூட்டி மண்ணறைந்தார்
தேடியொரு வரங்கு திருவிளக் கேற்றினாரை
காளியம்மன் கோவிலுக்கு கனவிளக்கு வைத்தவரை
ஆர்விளக்கேற்றினும் ஆக்கினைகள் செய்திடுவோம்
எவர்விளக்கேற்றினும் இரண்டு துண்டாக்கிடுவோம்
இப்படிக்குச்சொல்லியவர் எங்கும் பறை யறைந்தார்
தேசத்தில் யாவருக்குந் தெரிவிக்கும் நாளையிலே
அந்நேர வேளையிலே அன்பான வாணியனும்
காளியம்மன் கோவில் முன்னே கடுகெனவே ஓடிவந்து
எண்ணெய் விற்றுவந்தாலே ஏந்திழையே யுந்தனுக்கு
ஆயிரந் தேர்விளக்கு அன்பாக வைப்போமென்று
பிரார்த்தனைச் செய்துகொண்டு பிரியமுடன் போனானே
அப்படியே எண்ணெய்யெல்லாம் அன்பாகவிற்று விட்டு
மாகாளி கோயிலின்முன் வாணியனும்வந்து நின்று
பூட்டியிருக்கும் கதவை வாண்ணியனுந் தான்திறந்து
ஆராயிரம் திருவிளக்கு அன்றிரவி லேற்றிவைத்து
அடி பணிந்து வாணியனும் அரண்மனைக் கேகிவிட்டான்
ஆறாயிரம் பாண்டியர்கள் அந்நேரவேளையிலே
உப்பரிகைமேலேறி உலாவித் திரிகையிலே
காளியுட சந்நிதியில் கண்டார் திருவிளக்கை

## (விளக்கிட்ட வாணியனைப் பாண்டியர் பிடித்துவரச் சொல்லுதல்)

அப்போது பாண்டியர்கள் அருகே இருந்ததொரு
சேவகரைத் தானழைத்து சேதியொன்ன சொல்லுகிறார்

உத்தரவை தான்கடந்து வைத்தார் திருவிளக்கு
கண்டுபிடித் தவனைக் கடுகெனவே கொண்டுவாரும்
திருவளக்கு வைத்தவனைத் தேடிப் பிடித்து வாரும்
என்ன அப்போது சேவகர்கள் ஆள்தேடி வாரார்கள்
வீதிகள் தோறும் விசாரித்து வாரார்கள்
வாணியர் தெருவதனில் வந்த விசாரிக்கையிலே
கூடப்பிறந்த தொரு கொற்றவர்கள் தம்பியரை
காட்டிக் கொடுத்தார்கள் கனமான அண்ணர்களும்
அபபோது சேவகர்கள் அக்கணமே ஏதுசெய்தார்
கட்டிப்பிடித்துக் கடுகவே கொண்டுவந்தார்
பாண்டியன் முன்பாக படைவீரர்கொண்டு வந்தார்
கட்டிய கட்டோடே கச்சேரிக்குக்கொண்டு வந்தார்
ஆறாயிரம் பாண்டியர்கள் அந்நேரமேது செய்தார்
எங்கள் உத்தரவுதான் மீறி வைத்ததினால் திருவிளக்கை
காளிக்கு முன்பாக கண்டதுண்டஞ் செய்யுமென்றார்.
அப்படியே காவலர்கள் அங்கவனைக் கொண்டுவந்தார்

## (வாணியன் கொல்லப்படுதல்)

காளிகோவில் முன்பாகக் கடுகவே கொண்டுவந்தார்
திருபரங்குன்றக்காடு தெய்வ காளிகோவில் முன்னே வந்தார்
அகல கல் சகடபாறை அம்மனுட பலிபீடம்
வெண்கலப் பாறைமுன்னெ விரைவாகக் கொண்டு
வீசினார் வாளாலே வெட்டினா ரிரண்டு துண்டாய்
அந்நேர வேளையிலே அவன் சிரசுதான் கீறி
காளிமடி மேலே கடுகனவேதான் வீழ்ந்து
கதறியழுகிறானே கட்டழக னப்போது
உபகாரம் செய்தேனம்மா அபகாரம் நேர்ந்ததுவே
என்ன அப்போது காளியம்மன் அஞ்சாதே மகனேயென்று
ஆதரவு சொல்லியல்லோ அடைவாக ஏது சொல்வான்
ஒருவன் பழிக்கு நாளை உலகம் பழிவாங்கி வைப்பேன்
என்று சொல்லி காளியவ ளிருக்கின்ற வேளையிலே

## (வாணிச்சியும் உயிர்விடுதல்)

அப்போதுதானிருந்து அவ் வாணியன்தேவி
வாணியன் தேவியவள் மயிலனையா ளோடி வந்து
மோதி யறைந்து கொண்டு மொய்குழாள் தானிறந்தாள்
சோலை மலருடைய சொக்க ரது வறிந்து
வாணியன் தன் னுயிரும் வாணிச்சி தன் னுயிரும்
தங்கச் சிமிழ்தனிலே தானடைத்தார் சொக்கலிங்கம்

## (பாண்டியர் குலம் அழிக்க காளி சபதம் செய்தல்)

கடவுள் முகம் நோக்கி காளியம்மை யேது சொல்வாள்
வரனே இப்பிறப்பு நீங்கி மறு பிறப்பு யான் பிறந்து
வணிகச்செட்டி கோவலர்க்கு மனையாட்டியாக வந்து
விளக் கவித்த பாண்டியரை வெட்டித் தலை சாய்த்து
மணிக்குடலை தான் பிடுங்கி வந்திடுவேன் கோயிலுக்கு
என்றுமவ ளுரைத்து இருந்தாளே காளியரும்
சோலை மலருடைய சொக்க ரதுவறிந்து
காளியின் தன்னுயிரும் கடுகவேதான் பிடித்து
தங்கச் சிமிழதிலே தானடைத்தார் சொக்கலிங்கம்
மூவ ருயிர்தனை முக்கண்ண ரடைத்து வைத்தார்
இந்த விதமாக எங்கள் சொக்கர் தாமிருக்க

## (முத்துச் செட்டியின் மனைவிக்கு சிவன் குழந்தைவரம் நல்குதல்)

முக்கண்ணனைக் கருதி முத்துச் செட்டி மனைவியோடு
பிளளையுமில்லை யென்று பெரும்தவசு தாம் செய்தார்
மைந்தனுமில்லை யென்று மகா தவசுதாம் செய்தார்
அப்போது சொக்கலிங்கம் ஆண்டவரேது சொல்வார்
முத்துச்செட்டியின் தேவி மெய்குழலாள் வர்ணமாலை
வர்ணமாலை மயிலணைக்கு மைந்தன் வரந்தான் கொடுத்தார்

## (கோவலன் பிறப்பும் அழகியத் தோற்றமும்)

வர்ணமாலை கர்ப்பமதில் மைந்தனா யுண்டுபண்ணினார்
பத்துமாதம் சென்ற பின்பு பாலகனுந்தான் பிறந்தான்
கோவல னென்றவர்க்குக் கொடுத்தார்கள் பேருமப்போ
அட்டாளுஞ் சொக்கரைப்போல் அழகுடைய மன்னவனும்
தேமல் பிறையழகன் தெள்ளு மணிவாசகனார்
உருமாலை கட்டழகன் உத்தமனார் கோவலனும்
அள்ளித் தெளித்ததுபோல் அழகு சிறு தேமல்
மங்கா முடியழகன் மாதுளம் பூமோனியனாம்
செக்கச் சிவந்தவன்காண் செங்கீரைத் தண்டழகன்
அட்டாளுஞ் சொக்கரைப்போல் அழகுடைய மன்னவன்
சோமன்கட்டி வீதிவந்தால் சுவாமி சொக்கேச ரென்பார்
மண்டை கட்டி வீதிவந்தால் மதுரைவாழ் சொக்கரென்பார்
பார்த்தால் முதலியென்பார் பார்ப்பார சாதி யென்பார்
கண்டால் முதலி யென்பார் கன்னடியசாதி யென்பார்
இப்படிக்குக் கோவலனும் இருந்து வளரும் நாளையிலே

### (பாண்டிய மன்னன் மனைவி கோவிலிங்கி பிள்ளைவேண்டி தவமிருத்தல்)

அப்போது பாண்டியர்கள் அன்பாக ஏது செய்தார்
மைந்தன்வரம் வேண்டுமென்று மலைமேல் தவமிருந்தார்
பிள்ளைவரம் வேண்டுமென்று பெருந்தவமிருந்தாள்
ராஜ கன்னி கோவிலிங்கி நலமாகத் தவமிருந்தாள்
அப்போது சொக்கலிங்கம் ஆண்டவனா ரேதுசெய்தார்
காளியுட தன்னுயிரைக் கடுகனவேதான் பிடித்து
எலுமிச்சங் கனியாக்கி யீந்தாராம் சொக்கலிங்கம்

### (கண்ணகி பிறத்தல்)

கோவிலிங்கி கன்னியார்க்குக் கொடுத்தார் நலமாக
வாங்கி யதை யுண்டாளாம் மன மகிழ்ந்து கோவிலிங்கி
அதுவேதான் கர்ப்பமாய் அரிவை யந்த மாதினுக்கு
பத்துமாதஞ் சென்றதுகாண் பைங்கொடியாள் மங்கையர்க்கு
வலதுகால் செஞ்சிலம்பு இடது கைசெப்பேடு
கழுத்திலே பூமாலை கன்னவழியாக
கன்னத்து வழியாக கட்டழகி பெண் பிறந்தாள்
அப்போது பாண்டியர்கள் அனைவோரு மென்ன சொல்வார்
பஞ்சாங்கந்தான் பார்க்கும் பார்ப்பார்தனை யழைத்து
சீக்கிரமாய் வாருமென்று சேவகரைத் தாமனுப்பி
ஓடியழைத்து ஒருநொடிக்குள் வந்தார்கள்
நாழிகை பொருத்தமது நலமாகப் பாருமென்றார்

### (சோதிடன் குழந்தையை ஆற்றில்விடக் கூறுதல்)

அப்போது சோதிடத்தை ஆராய்ந்து சொல்வார்கள்
மாலையிட்டுப்பெண் பிறந்தால் மதுரைதனக் காகாது
கொடியிட்டுப் பெண் பிறந்தால் கொற்றவருக் காகாது
வாய்விட்டழுதாலே வடமதுரை வெந்துவிடும்
தேம்பி யழுதாலே தென்மதுரை வெந்துவிடும்
மரப்பெட்டிதனி லடக்கி வைகையிலே தள்ளு மென்றார்

### (குழந்தையை ஆற்றில்விடல்)

அப்போது பாண்டியர்கள் அந்தக் குழந்தைதனை
கையி லெடுத்துவரக் கட்டளையு மிட்டார்கள்
அப்போது கோவிலங்கி அழுது புலம்புகிறாள்
குழந்தையைத்தான் பார்த்து கோவிலங்கி புலம்புகிறாள்
தங்கத் தாம்பாளத்தில் தையலரைத்தான் வளர்த்தி

பாலைக் கறந்து பக்கத்தில் தானும் வைத்தாள்
தாதிமார் கைதனில்தான் கொடுத்தாள் மகவதனை
தாதியர்கள் பாலகியைத் தா னெடுத்துக்கொண்டு வந்து
பாண்டியர்கள் முன்பாகப் பக்குவமாய் வைத்தார்கள்
பாண்டியர்கள் மகவதனைப் பார்த்து மிக வழுதார்
இதற்கோ தவமிருந்து ஏந்திழையைப் பெற்றெடுத்தோம்
பெற்ற மகவதனைப் பெட்டியிலே வையுமென்றார்
பொட்டியிலே பக்குவமாய் பிறந்த பெண்ணை வைத்தார்கள்
எட்டு கட்டு கட்டியவர் இயலாகச் சீலுமிட்டார்
வைகையிலே தள்ளுமென்று வகையுடனே சொன்னார்கள்
அந்நேர வேளையிலெ ஆரணங்கைக் கொண்டுவர
வைகைக் கரைபுரண்டு வருகுது வெள்ளமது
ஓடுகிறவெள்ளத்திலே உத்தமியைத் தள்ளிவிட்டார்

## (ஐந்து தலை நாகம் கண்ணகி என்று பெயரிடுதல்)

வைகை தனில் மிதந்து வாராளே கண்ணகியாள்
சுற்றிவந்து மீன்க ளாடச் சுழல்வண்டு கீதம்பாட
கரைபுரண்டு வெள்ளமது காவேரிபோல் வருகுதங்கே
ஐந்து தலை நாகம் அலைந்து கெட்டு வருகு தங்கே
வெள்ளமதில் மிதந்து விரைவாய் வரும் பெட்டிகண்டு
மரப்பெட்டி மேலேறி வருகுது நாகமது
வைகை மணற் றிடலோரம் வந்து ஒதுங்கிடவே
அப்போ குவ்வா குவ்வா வென்று குழந்தை யழுகுது காண்
பெட்டியைதான் திறந்து பொட்டெனப் பார்க்கையிலே
கோடிச்சூரியன் போலக் குழந்தையைக் கண்டது
இந்தக் குழந்தை தனக்கேது நாம் செய்வோ மென்று
நாக ரத்தினத்தைக் கக்கி நலமாக வைக்கயிலே
எங்கும் பொருந்தவில்லை இல்லை குழந்தைத் தேகமதில்
வலது காற்சிலம்பு தனில் வைத்து ரத்தினத்தை
அதிலே பொருந்திடவே அன்பான ரத்தினமும்
நாக ரத்தினச் சிலம்பெனவே நலமாகப் பெயர்கொடுத்து
ஐந்து தலை நாகமது அந்தக் குழந்தைதனை
காளியென்று தானறிந்து கனமாக வேது செய்யும்
கன்ன வழியாய் பிறந்த கட்டழகியாகுமென
கண்ணகியா ளென்று சொல்லிக் கன்னிக்குப் பெயர்கொடுத்து
பெட்டியை வைகையிலே கட்டியல்லோ தள்ளியது

## (மாநாய்கன் கண்டெடுத்து வளர்த்தல்)

வைகை பெருகி யங்கு மண்ணும் திரண்டோட
காவிரிப்பூம்பட்டணமாம் கரையிலே வருகுதங்கே
மைத்துனனும் அத்தானும் வர்ண கப்பலோட்டி வைத்தார்
அத்தானும் மைத்துனனும் அழகு கப்பலோட்டி வைத்தார்
வருகிற பொட்டியதை மாநாய்கன் கண்டானே
கட்டுமரங் கட்டியல்லோ கடுகெனவே தானேறி
பிரியமுடனே அந்தப் பெட்டியைத் தானெடுத்து
சித்திரமுகச் சாவடியில் சீராக் கொண்டுவந்தான்
மரப்பெட்டி என்னதென்றான் மாச்சோட்டா னப்போது
மாநாயக னுள்ளிருக்கும் வஸ்துவுமென்ன தென்றான்
அப்படியே நல்லதென்று அன்பாகக் கொண்டுவந்து
திறந்தார்கள் பெட்டியைத்தான் திட்டமா யந்நேரம்
சூரியனைப்போலத் துலங்குது குழந்தையது
அந்தக் குழந்தையை அன்பாகக் கொண்டுவந்து
வைத்து வளர்த்தானே வகையுடனே மாநாய்கன்
வளர்பிறைச் சந்திரனைப்போல் வளருகிறாள் கண்ணகியும்

## (மாதகி பிறப்பும் சிறப்பும்)

இப்படியாக இருக்கின்ற வேளையிலே
கடையூர் வசந்தமாலை கன்னியொரு தேவதாசி
அவள் பிள்ளை யில்லையென்று பெருந்தபசு தானிருந்தாள்
வாணிச்சி தன்னுயிரை மகாதேவர் தாமெடுத்து
எலுமிச்சங் கனியாக்கி இன்பமுடன்தான் கொடுத்தார்
அதுவே தான் மாதமாக ஆரணங்கு கர்ப்பமாதாய்
பத்து மாதஞ் சென்று பைங்கொடியும் பெற்றெடுத்தாள்
அழகு துலங்கிறது ஆனந்தங் கொஞ்சுறது
வடிவுகுலுங்கிறது வடிவழகு கொஞ்சுறது
அழகில் மிகுந்தவள் காண் ஆரணங்குக் கப்போது
சாஸ்திரியைத் தானழைத்துச் சாதகங் குறியு மென்றாள்
சோதிட சாஸ்திரங்கள் சொல்லுகிறா ரப்போது
சாஸ்திரத்தைத்தான் பார்த்து சாதகங்கள் தா முரைப்பார்
அஞ்சு வயதில் அரிய சிலம்பெடுத்து
நாட்டியங்கள் கற்று நலமுடன் மாதகியும்
ஆனையின் மேல் கம்பம் நட்டு ஆடுவாள் மாதகியாள்
தித்தி யென்பாள் மத்தளங்கள் திமிதி யென்பாள் காற் சிலம்பு
ஒத்தி வைப்பாள் ஓரடியை ஓலமிடும் பொற்சிலம்பு

பத்தாம் பிராயத்திலே பைங்கொடியாள் மாதகியாள்
அம்பலமேறி ஆடுவாள் மாதகியாள்
மன்மதனைப் போலழகு வாய்த்ததொரு வணிகன்
செப்புச் சிலையழகன் செங்கீரைத் தண்டழகன்
அப்பெரிய கொற்றவனை அழைத்து வருவாள் காண்
பன்னிரண்டு தன்வருஷம் பைங்கிளியாள் வைத்திருப்பான்
பதிமூன்றாம் வருஷத்திலே பைங்கொடி மாண்டிடுவாள்
இப்படிக்குச் சாதகம் எழுதினார் சோதிடர்கள்
பூரணச்சந்திரன்போற் பொற்கொடி வளருகிறாள்

## (கண்ணகி சீரும் சிறப்புடன் வளர்தல்)

காவிரிப் பூம்பட்டணத்தில் கனகநிதி மன்னவர்கள்
மாநாய்கன்செட்டியும் மாச்சோட்டான் செட்டியும்
பேருலகி லிருவருமே பெரிய தனவர்த்தகர்கள்
ஆயிரந் தலைக்கட்டு அதிகாரி மன்னவர்கள்
மாநாய்கன் செட்டியும் வீட்டில் மயிலனையாள் பெண்ணரசி
நாளொரு மேனியாக நட்சத்திரம் போல் வளர்ந்தாள்
பொழுதொரு மேனியாகப் பூவையருந்தான் வளர்ந்து
நித்தமொரு பட்டுடுத்தி சேர மொரு பூச்சூட்டி
கண்ணை நிமைகாப்பது போல் காத்து வளர்த்தார்கள்

## (முத்துச் செட்டி தன்மகனுக்கு கண்ணகியைப் பெண் கேட்டல்)

இப்படியாகவே தா னிவரிருக்கும் வேளையிலே
காவிரிப்பூம்பட்டணத்தில் கனத்த நல்ல வர்த்தகர்கள்
அன்றையப்போதையிலே அடைவாக முத்துச்செட்டி
மாநாய்கன் வீட்டிற்கு வந்து நின்றார் முத்துச் செட்டி
அப்போது பெண்குழந்தை அங்கு வருகையிலே
இந்தப் பெண் ணாருடைய தென் றவனுங் கேட்கையிலே
மாநாய்க னெந்தனுட மகளென் றுரைத்திடவே
எந்தனுட மைந்தனுக்கு இன்பமுடன் தாரீரோ
அப்படியே தாரோமென்று அன்பாக வாக்களித்தான்
பரியங்க ளென்னவென்று பண்பாக கேட்கலுற்றான்
ஆயிரம் பொன் கொடுத்தால் அரிவைதனை நான் தருவேன்
இன்றைக் குபாயம் இயலாகச் செய்யுமென்றார்
இன்றெட்டாம் நாளையிலே இசைந்த முகூர்த்தமென்று
நாளிட்டுக் கொண்டாரே நலமுடனே முத்துச்செட்டி

### (மாநாய்கன் பலரிடம் பெண்தருவதாகப் பரியம் பெறுதல்)

அவர்போன மற்றநாள் அப்புச்செட்டிவந்தாராம்
அன்னநடை மின்போல அரிவையரைக் கண்டாராம்
ஆருக் குழந்தையென அன்பாகக் கேட்டாராம்
என்னுடைய பெண்ணென் றெடுத்துரைத்தா னப்போது
எந்தனுட மைந்தனுக்கு உன் பெண்ணைத் தாரீரோ
தருகிறே னென்றவர்க்குச் சம்மதித்தான் மாநாய்கன்
பரியமென்ன கொண்டு வாரீர் பண்பாய்ச் சொல்லுமென்றார்
ஆயிரம் பொன் பரியமென்று அன்பாய்தான் கொடுத்தார்
பரியங் கொடுத்து விட்டுப் பண்பாகப் போய் நடந்தார்
அவர் போன மற்றநாள் சுவுங்குலிங்க செட்டி வந்தார்
கண்ணகியைத்தான் பார்த்துக் கன்னி யிவ ளாரெனவே
என்னது குழந்தை யென்று எடுத்துரைத்தான் மாநாய்கன்
எந்தனுட மைந்தனுக்கு உந்தன் பெண்ணைத் தாரீரோ
ஆயிரம் பொன் பரியமென அன்பாகத் தான் கொடுத்தார்
இன் றெட்டாம் நாளையிலே இசைந்த முகூர்த்தமென்று
நாளிட்டுக் கொண்டு மவர் நலமுடனே போய் நடந்தார்
மாணிக்கஞ் செட்டியவர் மன்னவனும் அங்குவந்தார்
இவர் அரண் மனைக்குள்ளாக அன்பாக வந்தாரே
மாணிக்கம்போல் அங்கு மயிலணையைக் கண்டாரே
இது ஆருடையபெண்ணென்று அன்பாகக்கேட்டாரே
என்னுடைய பெண்ணென்று எடுத்துரைத்தான் மாநாய்கன்
என்னுடைய பிள்ளைக்கி ஏந்திழையைத் தாரீரோ
அப்படியே தாரேனென்றான் அழகான மாநாய்கன்
என்ன பரிய மெடுத்துரையு மென்று சொன்னார்
இரண்டாயிரம் பொன் ஏந்திழைக்குத் தாறோ மென்றார்
அப்படியே தாம் கொடுத்தார் அழகான செட்டியவர்
அவர்போன மற்றநாள் அநேகம்பேர் வந்தார்கள்
இப்படியாகவேதான் இவரிருக்கும் நாளையிலே

### (முத்துச்செட்டி தாம்பூலத்தை மாச்சோட்டான் செட்டிக்குக் கொடுத்தல்)

அன்றையவேளையிலே ஆனதொரு முத்துச்செட்டி
தாம்பூலங் கொண்டுவந்து தன வணிகனோடி வந்தான்
மாச்சோட்டான்செட்டியிடம் வாரார் காண்முத்துச்செட்டி
தாம்பூலங் கொண்டுவந்து தன வணிகன் முன்பு வைத்தான்
கலியாண மென்று கட்டழகன் கூறிடவே

### (மாச்சோட்டான் செட்டி கண்ணகி என்மகள் எனல்)

ஆர்கலியாணமென்று அன்பாகக் கேட்கலுற்றார்
என் மைந்தன் கோவலனுக் கென்று மொழிந்திடவே
ஆருடைய பெண்ணதுகாண் அது விபரம் சொல்லுமென
மாநாய்கன் பெண்ணென்று வகையுடனே தா முரைத்தார்
மாச்சோட்டான் செட்டியார்க்கு வருகுது வெகுகோபம்
கோபம் பெருகுது கொள்ளிக் கொண்டு வீசுகுது
என்னுடைய பெண்ணை யவன் எப்படிக்குத்தான் கொடுப்பான்

### (மாநாய்கனிடம் பெண்கேட்ட அனைவரும் வந்து சண்டையிடல்)

இந்தப்பெண் உன்னதென்று எனக்குத் தெரியாதென
மாச்சோட்டான் செட்டியாரும் மன முத்துச்செட்டியாரும்
வந்தார்க ளிருவருமாய் மாநாய்கன் முன்பாக
மாநாய்கன் முன்பு வந்து மன்னவர்க ளேது சொல்வார்
என்னுடைய பெண்ணதனை எப்படிக்கு நீர் கொடுப்பீர்
நேற் றென்றன் பிள்ளைக்கென்று நேமகஞ் செய்திருக்க
நீதியுண்டோ ஒருவருக்கு நீர்கொடுக்க மன்னவரே
என்று ஒருத்தர்க் கொருத்த ருகந்து சண்டை செய்தார்கள்

### (திருவுளச் சீட்டெழுதிப் போடச் சொல்லுதலும் கோவலன் பெயர் வருதலும்)

பஞ்சாயத்தார்கள் முன்பாய் பகர்ந்தார்க ளிவ்வழக்கை
திருவுளச்சீட்டு சிறப்புட னே போடுமென்றார்
ஆருக் கமைப்போ அவர்க் காகுமென்றார்
அப்போது பஞ்சாயத்தார் அனைவோருங் கூடினார்கள்
திருவுளச் சீட்டெழுதிச் சீராகப் போட்டார்கள்
கோவலன் பேர்வழிக்கு வந்தது சீட்டதுவும்
அவனுடைய பாரியென்று அனைவோருந் தாமுரைத்தார்

### (கோவலன் கண்ணகிக்குத் திருமணம் நடத்த ஏற்பாடுகள் செய்தல்)

அப்படியே சம்மதித்தார் அன்பான செட்டிமார்கள்
அப்போதே கலியாணம் அன்பாகச் செய்யவென்று
பந்த லலங்கரித்தார் பாங்காக அப்போது
முத்தாலே கால் நிறுத்தி முக்காதம் பந்தலிட்டார்
பவளத்தால் கால் நிறுத்தி பதின் காதம் பந்தலிட்டார்

எங்கு மலங்கரித்தார் எத்திசையும் நீர்தெளித்தார்
கண்ணாடி சல்லிக்கட்டிக் கவரிமான் குச்சுவிட்டார்

### (கோவலன் கண்ணகி கழுத்தில் தாலிகட்டுதல்)

மணப்பந்தல் முன்பாக ஓதுவாரைக் கொண்டு வந்தார்
சீக்கி கழித்தார்கள் சீராக இருவருக்கும்
பெண்ணையும் மாப்பிள்ளையும் பிரியா தலங்கரித்து
மண வறையின் மேலாக வைத்தா ரிருவரையும்
தாலி தரித்தானே தனஞ்சயன் கோவலனும்
அம்மி மிதித்தார்கள் அருந்ததி கண்டார்கள்
சாலுங் கரகமுஞ் சந்திரனைத்தான் தொழுதார்
மாலை தரிக்கையிலே வாய்விட்டுத் தானழுதாள்
மாங்கனியைக் கொடுத்து மாலையிட்டார் கோவலனார்
இப்படியாகவே தானிருக்குமந்த வேளையிலே

### (மாதகியைத் திருமணத்தில் நடனமாட அழைத்து வருமாறு கோவலன் கூறுதல்)

மாலை கொண்டு வந்ததொரு மடத்தாண்டி போகவில்லை
கூடை கொண்டு வந்ததொரு கோலியனும் போகவில்லை
சாலுகொண்டு வந்ததொரு சாலியனும் போகவில்லை
உற்றார்க்குச் சோறிடலை உறன்முறைக்குப் பாக்கிடலை
பந்தி வழங்கவில்லை வந்த ஜனம் போகவில்லை
உற்றா ருறன்முறையா ரொருவரும் போகவில்லை
இப்படிக்குத் தானிருக்க இன்பமுட னந்நேரம்
வடிவழகிலே சிறந்த மன்மதனைப் போலழகன்
செக்கச் சிவந்தழகன் செங்கீரைத் தண்டழகன்
மாகா முடியழகன் மாதுளம்பூமேனியனாம்
சிலைபோல் வடிவழகன் செட்டி மகனேது சொல்வான்
கலியாண பந்தலிலே கச்சேரி வேண்டுமென்றான்
தாலிகட்டும் பந்தலிலே சதிர் வைக்க வேண்டுமென்றான்
ஆரை நாம் வைப்போமென்றார் ரங்குள்ள வர்த்தகர்கள்

### (முத்துச் செட்டி விதியை நினைத்துக் கலங்குதல்)

திருக்கடையூர்பட்டணத்தில் தெய்வ ரம்பை மாதகியாள்
அவளை யழைத்து வந்து ஆடவைக்க வேண்டு மென்றார்
அஞ்சாம் பிராயத்திலே அழகு சிலம்பெடுத்து
அழகு சிலம்புகட்டி ஆடுவாள் மாதகியாள்

என்றுமே கோவலனா ரெடுத் துரைக்க வப்போது
அப்படியே யாகுதென அனைவோருந் தாமுரைத்தார்
அப்போது முத்துச்செட்டி அழகு துரை மன்னவனும்
எண்ணாதது மெண்ணுகிறான் எண்ணி மனங் குன்றுகிறான்
சாதகமும் பொய்க்காது தலை விதியுந் தப்பாது
பன்னிரண்டு பிராயத்தில் பைங்கொடி மாதகியாள்
மாதகி யண்டை யிந்த மன்னவன் போவா னென்று
சாதமுரைத்து சரியாக ஆச்சுதுகாண்
எப்படி யழைத் தவளை இங்கே சதிராட வைப்போம்
மகனுக் கிதைச்சொல்ல வருத்தமுற்றான் முத்துச்செட்டி

**(மாதகியை அழைத்துவரச் சேவகர்களை அனுப்புதல்)**

அப்போது கோவலனும் ஐயாவுக் கேது சொல்வான்
மங்கை யிளங்கொடியாள் மாதகியாள் வந்தாலே
வந்தாலே யல்லாது வல்லுயிரைப் போக்கிடுவேன்
அப்படியே அழையுமென்று ஆணழகர் சொன்னாரே
சேமக் குருத்தோலை சிறப்பாகத் தான்வாரி
ஈழப் பனையோலை இருபக்கந்தான் வாரி
தாளிப் பனை யோலை தலைப் பக்கங் காம்பரிந்து
கணபதி முன்பாகக் காப்பிட்டுக் கொண்டாரே
முத்துப் பதிந்தது போல் மூன்று வரி தானெழுதி
பவளம் புதைந்தது போல் பத்துவரி தானெழுதி
திருக்கடையூர்பட்டணம் வாழ் தேவதாசி மாதருக்கு
வக்கணையும் மொப்பனையும் வைத்து எழுதுகிறார்
கலியாணப் பந்தலிலே கச்சேரி வைக்க வேண்டும்
ஓலை கண்ட நாளிகைக்கே ஓடிவந்து சேரவேணும்
என்று எழுதினார் இன்பமுள்ள மன்னவர்கள்
ஓலைச்சுருள் மடித்து உயர் செந்திரிகை யிட்டு
காவலர்கள் சேவகரைக் கட்டழகர் தாமழைத்து
செந்திரிக்கை ஓலைதனைச் சேவகர்தன் கைகொடுத்தார்
ஓலையைத்தான் வாங்கி ஓடினா ருத்தமர்கள்

**(வசந்தமாலை மகள் மாதகியிடம் செய்திக் கூறுதல்)**

பட்டணமாம் பட்டணமாம் திருக்கடையூர் பட்டணமாம்
திருக்கடையூர் பட்டணத்தைத் தேடியே வாரார்கள்
வசந்தமாலை முன்பாக வந்து நின்றார் சேவர்கள்
வட்ட வோலைச் சுருளை வசந்தமாலை கைக் கொடுத்தார்

வாங்கியே ஓலைதனை வாசித்தா ளப்போது
அதிலிருந்த மர்மமெல்லாம் அறிந்தாள் வசந்தமாலை
இருதயங் குளிர்ந்து இருதோளும் பூரித்து
சரீரங் குளிர்ந்து சர்வாங்கம் பூரித்து
அம்மாடி யென்மகளே அரிவையரே மாதகியே
வாருமென்று தானழைத்து பங்கையவ ளேது சொல்வாள்
கஞ்சிகொண்டு களைபறிக்குங் காவிரிப்பூம்பட்டணத்தில்
சேறுகொண்டு மதவடைக்குஞ் சொர்ணகிரி நன்னாடு
காவிரிப்பூம்பட்டணத்தில் கப்பலோட்டும் வர்த்தகர்கள்
மாநாய்கன்செட்டியார் மாச்சோட்டான் செட்டியார்
வரவேண்டுமென்று சொல்லி வரவோலை யனுப்பி வைத்தார்
இக்ஷணமே போய் வாரு மேந்திழையே மாதகியே
என்ன அப்படியே நல்லதென்றா ளரணங்கு மாதகியாள்

## (மாதகி நடனமாட புறப்படுதல்)

கச்சை வரிந்துகட்டிக் கருங்கச்சை சுருங்குவிட்டு
தட்டி வரிந்துகட்டித் தானணிந்தாள் பொற்சரிகை
இழை யாயிரம் விலைபொன் இந்திர வர்ணப் பட்டாடை
பாவாடை யுள்ளாடை பட்டாடை மேலாடை
குத்தினி ரவிக்கைகளாம் குசும்பாவாம் பொற்சிலை
பிறகுவெடுத்தா ளொட்டியாணம் பின்பு இளங்கொடியாள்
ஆடைகள் ஆபரணம் அடங்கலுந் தானணிந்து
ஆனையின் மேலகம் புது அடைவாகத் தானிறுத்தி
நட்டுவனைத் தா னழைத்தாள் நலமான மாதகியாள்
மத்தளமுஞ் சுத்திகளும் வகையாகத் தானெடுத்து
தாயா ரருகில் வந்து தான்பணிந்து தெண்டனிட்டு
போய்வர எந்தனுக்குப் புகழ்ந்து விடைதாருமென்றாள்

## (வசந்தமாலை கோவலனை வசியம் செய்து அழைத்து வருமாறு கூறுதல்)

அப்போது வசந்தமாலை அரிவை யவட் கேதுரைத்தாள்
இளநீரி லூறவைத்த இன்பக் களிப்பாக்கும்
தங்கச் சிமிளிதனில்தான் கொடுத்தா ளம்மையு மொன்று
மாது இளங்கொடியாள் மாதகியாளேது சொல்வாள்
என்னமாய் நான்கொடுப்பே னேந்திழையே தாயாரே
வெற்றிலையில் மை தடவி மெல்லியரே நீ கொடுத்தால்
தொடர்ந்து வருவான் காண் தோகையரே யுன்பிறகே
என்று வாழ்த்தி வரங்கொடுத்து மகளை யனுப்பிவிட்டாள்

### (வீசும் பொன்மாலை யார் கழுத்தில் விழுகிறதோ அவரை பரிசாகத் தரவேண்டும் எனல்)

ஏறினா ளானையின் மே லிளங்கொடி மாதகியாள்
ஆனையைத்தான் துரத்தி அன்பாக வாராளே
காவிரிப்பூம்பட்டணத்தில் கணிகையவள் வாராளே
கலியாணப் பந்தலிலே கட்டழகி வந்து நின்றாள்
அங்கிருக்கும் வர்த்தகரை அனைவரையுந்தான் பார்த்தும்
கைகூப்பித் தொண்டனிட்டுக் கட்டழகி நின்றிடவே
மாநாய்கன் செட்டியாரும் மாச்சோட்டான் செட்டியாரும்
உனக்கென்ன வேண்டுமென்று ஒண்டொடியைக் கேட்டார்கள்
என்னுடன் கூடப்பிறந்த பொன்னுரு மாலைதனை
கழற்றி யெறிவேன் காண் கடடழகர் வர்த்தகர்மேல்
ஆர் கழுத்திற் போய்விழுமோ அவரை யழைத்திடுவேன்
அதற்குச் சம்மதித்தேனென்று தாம்பூலந் தாருமென்றாள்
சம்மந்தப்பட்டார்கள் தாம்பூலந் தந்தார்கள்

### (கோவலனை ஒளித்து வைத்தல்)

சிலைபோல் வடிவழகன் செட்டிபிள்ளை கோவலனை
அந்தப்புரந்தனிலே ஆணழகனை யொளித்து
தாயார் வாணமாலைதனை தனையனுக்கு காவல் வைத்து
வெளியி லனுப்பாதே மெல்லி யிளங்கொடியே
வாசலி லிருந்துகொண்டு மன்னவனைக் காருமென்றான்

### (மாதகி நடனமாடிய பின் மாலையை வீசுதல்)

அப்போ தனைவோரும் அச்சபையில் வந்து நின்றார்
ஆடுமென்று மங்கையர்க்கு அனைவோரும் விடை கொடுத்தார்
தித்தியென்று மத்தளம் திமிர்த மென்று காற்சிலம்பை
ஒத்திவைத்தா ளோரடியை ஓலமிட்டாள் பொற்சிலம்பை
மத்தளமும் மணிக்குரலும் வர்த்தகர்கள் கேட்டார்கள்
சங்கீத வாத்தியத்தைச் சகலமான வர்த்தகர்கள்
சந்தோஷப்பட்டார்கள் சகலமான வர்த்தகர்கள்
ஆடையோ டாபரணம் அன்பாகத் தாம் கொடுத்தார்
மாளாதசொர்ணமதை மங்கையர்க்குத்தான் கொடுத்தார்
ஆனைமேல் பொதிபோட்டா ளானதொரு மாதகியாள்
வர்த்தகரைத்தான் பார்த்து மயிலனையா ளேது சொல்வாள்
என்னுடன் கூடப்பிறந்த பொன்னுருவி மாலைதனை
கழற்றி யெறிவேனான் கட்டழகர் வர்த்தகர்மேல்

என்றுசொல்லி மாதகியாள் இயலான மாலைதனை
கையி லெடுத்துக்கொண்டு கட்டழகி யேது சொல்வாள்
அட்டாளுஞ் சொக்கரை அழகாகத் தானினைந்து
மாயாண்டி சொக்கரை மகாதேவரை நினைந்து
மாலையைத்தான் பார்த்து மயிலனையாள் மாதகியும்
எனக்கேற்ற நாயகனை ஏந்திழையே நீ பார்த்து
மனதுக் கியைந்ததொரு மனைவனைத்தான் பார்த்து
அவர் கழுத்திலே மாலை அன்பாய் விழுகவென்று
மாலை கழற்றியே மாதகி யெறியலுற்றாள்
அப்போது பொன் மாலை அங்ஙனமே யேது செய்யும்
மாதகிக் கேற்றதொரு மணவளர்தம் கழுத்தில்
வந்து விழுக வென்று மன்னவரைத் தேடுகிறது

## (கோவலன் காவலை மீறி வெளியே வருதல்)

அந்த சமயத்தில் அழகான கோவலனும்
மாளிகைக் குள்ளேயிருக்கும் மன்னவனார்கோவலற்கு
மத்தள மணிக் குரலும் மன்னன் காதிற்கேட்டிடவே
பெண் குரலுஞ் சத்தமும் பிரியமாய்க்கேட்டிடவே
கூத்துப் பார்க்கவேணுமென கோவலனுந் தானெழுந்தான்
தாயா ரந்த வர்ணமாலை தையலருந்தான் தடுத்தாள்
கதவைத் திறந்துவிடு கட்டழகி மாதவே
அல்லாமற்போனாலே என்னுயிரை மாய்ப்பே னென
கதவைத் திறந்து விட்டாள் கட்டழகி தாயாரும்
அப்போது கோவலனும் ஆணழகன் தானெழுந்து
சேலத்துரு மாலை ஜெமுதாடு பொன்சரிகை
காங்கு உருமாலை கள்ளர்கட்டும் முண்டாசு
ஒரு பொன்னொரு முழமாம் ஒன்றைக் கம்பி சோமனது
திருநெல்வேலிச் சோமன் சேர்ந்திருக கட்டினானே
தங்க மிதியடியாம் தனிக்குமிள் ரத்தினமாம்
முத்து மிதியடியாம் முழுக் குமிள் ரத்தினாமாம்
முத்து மிதியடியைத் தொட்டு நடந்துவாரான்
ஆலமரப் பிள்ளையார் கோவிலண்டை தேடிவாரான்
தங்க நாற்காலிமேல் தனஞ்செயனும் உட்கார்ந்து
தாம்பூலம்போட்டுக் கொண்டு தனஞ்சயனு மங்கிருந்தான்
அவனழைகைப் பார்த்தாலே அட்டாளுஞ் சொக்க ரென்பார்
அட்டாளுஞ் சொக்கலிங்கம் ஐவரென்று சொல்வாரே
மதுரை வாழ் சொக்கலிங்கம் மகாதேவ ரென்பார்கள்
இப்படியாகவேதா னிவரிருக்கும் வேளையிலே

## (பொன்மாலை கோவலன் கழுத்தில் விழுதல்)

அப்போது மாதகியாள் அரிவையருந்தான் பார்த்து
பொன்னுருவி மாலையதைப் பொற்கொடி விட்டெறிந்தாள்
ஆர்கழுத்திலும் விழாமல் அட்சணமே வருதுபார்
கோவலனைத்தேடி வருகுதுபார் பொன்மாலை
கண்ணுக்குத் தெரியாமல் கழுத்தில் விழுந்ததப்போ
அப்போது மாதகியா ளாரணங்குதான் பார்த்து
ஆனையை விட்டிறங்கி ஆரணங்கு மாதகியாள்
மாலையைத் தேடிக்கொண்டு வாராளே மாதகியாள்
கோவல னண்டையிலே கொம்பனையாள் வந்து நின்றாள்

## (கோவலனிடம் வந்து மாலை கேட்டலும் மாலையை கழற்ற முடியாமையும்)

வர்த்தகனைப் பார்த்து மயிலணையா ளென்ன சொல்வாள்
எனக்கென்ன தியாகம் நீ ரின்பமுடன் தாருமென்றாள்
அளவற்ற சொர்ணமதை ஆணழகர்தான் கொடுத்தார்
மாதகியாள் வாங்கிக்கொண்டு மயிலனையா ளேதுசெய்தாள்
பொன்னுருவி மாலையதைப் புண்ணியரே தாருமென்றாள்
ஏதடி பெண்ணேயென்று இன்பமுடன் கேட்கலுற்றான்
உன் கழுத்திலிருக்குது கட்டழகர் தாருமென்றாள்
பாராது போலே யவன் பார்த்துவிட்டான் கோவலனும்
கழற்றிக் கொடுப்போமென்று கட்டழகன் கைபோட்டான்
கழற்ற முடியவில்லை கட்டழகன் கோவலர்க்கு
ரம்பத்தைக் கொண்டு வந்துபலமா யறுக்கச் சொன்னான்
வாளும் மழுங்கினது மாலை கழலவில்லை
என்னசெய்வேன் மாதகியே ஏந்திழையே பெண்கொடியே
வாங்கியே கொண்டுபோடி மயிலணையே நான்தாரேன்

## (தாம்பூலம் தின்ற கோவலன் மதிமயங்கி மாதகியுடன் செல்லுதல்)

மாலை கொடாமலே போனாலும் மன்னவரே
தாம்பூலம் நான் தாறேன் தனஞ்சயனே போட்டுக் கொள்ளும்
அப்படியே தாருமென்றான் ஆணழகன் கோவலனும்
வேற்றிலையில் மைதடவி விதமாய்ச் சுருள் கொடுத்தாள்
தாம்பூல மருந்தின பின் தனஞ்சயனாங் கோவலர்க்கு
மருந்து மயக்க மதி மயக்க மாகுது காண்
உண்ட மருந்தாலே உளறி தவிக்கிறானே

மருந்து மயக்கத்தாலே மதிமயங்கி யென்னசொல்வான்
ஆசை தந்த மாதகியே அரிவையரே யுனைப் பிரியேன்
சுகந்த மாதகியே தோகையரே யுனைப் பிரியேன்
நான் கூட வாரேனென்று நலமாகத் தானெழுந்தான்
மாநாய்கன்செட்டியாரும் மன்னன் முத்துச்செட்டியாரும்
ஓட்டம் பெருநடையா யோடிவந்தா ரிருவருமாய்
அப்பா மகனேயென்று அழுது கொண்டு வருகிறார்கள்
எங்களைவிட்டு மல்லோ எவ்விடத்தில் நீ போறாய்
மாலையிட்ட தேவி மயிலனையாள் தானிருக்க
கூறைவிட்ட தேவியுந்தன் கொம்பனையா ளிங் கிருக்க
எங்களைவிட்டுமே யெவ்விடத்தில் நீ போறாய்
வாருமென்று சொல்லி வழி மறித்து தானழுதார்
அப்போது கோவலனா ராணழுக ரேதுசொல்வார்
தாயேது தந்தையேது தையல் பெண்சாதி யேது
ஆசை தந்த மாதகியா ளரிவையரு மிங்கிருக்க
சுகந்தந்த மாதகியாள் சுந்தரியா ளிங்கிருக்க
இவளைவிடப் பெண்சாதி யெந்தனுக்கு யாருமில்லை
அவளுடனே செல்வே னென் றாணழுகன் சொல்லலுற்றான்
அப்படியாவென்று அனைவோரும் பின்னடைந்தார்
அப்போது கோவலனா ரானையின் மேலேறி
மாதகியுங் கோவலனும் வாரார் திருக்கடையூர்

## (திருக்கடையூர் அமிர்தகாண்டீசர் கோவிலில் சத்தியபிராமாணம் செய்தல்)

திருக்கடையூ ரிருவருமாய் தெருவில் வந்து நின்றார்கள்
ஆனையை விட்டு மவ ரன்பாகத் தாமிறங்கி
அமிர்த கண்டீசர் கோவிலின் பாக வாரார்கள்
பலிபீட முன்பாக பாவையரும் வந்து நின்றாள்
பலிபீடந் தானடித்துப் பைங்கிளியுமேது சொல்வாள்
உன்னைவிட்டு நான் பிரியேன் உத்தமரே யென்றுரைத்தாள்
அமிர்த கண்டீசுவரர் மேலணையிட்டுதான் கொடுத்தாள்
முந்தானை போட்டு மந்த மொய்குழலுந் தாண்டினாளே
உன்னைவிட வேறெயொரு மன்னவனை நான் பாரேன்
எந்தனுக்குப் பிரமாணம் இன்பமுடன் செய்யுமென்றாள்
அப்போது கோவலனா ராணழுக ரேது சொல்வார்
உன்னைவிட்டு நான்பிரியேன் உத்தமியே யென்றுரைத்தார்
தாயும் தந்தையும் சகலமும் நீயே யென்றார்
உன்னைவிட்டுநானும் ஒருவர்முகம் பாரே னென்றார்

## (அந்தப்புர கட்டில் உடைதலும் வேறு கட்டில் வாங்கித் தருமாறு கோவலனை மாதகி வேண்டுதலும்)

அந்தப்புரந்தேடி அரிவை யவள் வாராளே
அரண்மனைக் குள்ளாக ஆணழகன் வந்து நின்றான்
தோம்புத் திரைக்கட்டி லந்த சுந்தரியாள்தான் போட்டாள்
சல சலப்பா யொன்று தையலருந்தான் போட்டாள்
அதின் மேலுட்காருமென்றா ளாரணங்கு மாதகியாள்
அப்படியே யுட்கார்ந்தா ராணழகர் கோவலனார்
கட்டிலின் காலொடிந்து கட்டழகர்தாம் விழுந்தார்
என்னடி மாதகியே இப்படிக்கு நான் விழுந்தேன்
என்ன ஆசை தந்த மாதகியா ளரிவை யவள் ஓடிவந்து
என்னதான் செய்வேன் னென்னுடைய புண்ணியரே
இந்த நல்ல கட்டில் விட்டா எந்னுக்குவேறே யில்லை
உன்னாலே யெந்தனுக்கு உண்டாகவேணுமென்றாள்
அப்படியே நல்லதென்றா ராணழகர் கோவலனார்

## (மாதகி உணவு சமைத்தல்)

அந்நேர வேளையிலே அரிவை யந்த மாதகியாள்
பானையைத்தான் கழுவிப் பனி நீருலை வார்த்து
சின்ன சம்பாவரிசி தீட்டி யுலையி லிட்டாள்
முத்துப்போல் சாதம் வடித்தாளே மொய்குழலாள்
நல்ல வெல்லம் பூசணிக்காய் நாலுவிதஞ் சமைத்தாள்
கத்தரிக்காய் கொய்திடுவாள் தாளை புளியிடுவாள்
வாழைக்காய் கொய்திடுவாள் வாழைத்தண்டு நாரிழுப்பாள்
ஈழப் பலாக்காயை இளமுள்ளுப் போக்கிடுவாள்
சோலைப் பலாக்காய்கள் சுளைதிருத்தி யாங்கிடுவாள்
காயுங் கறிவகையுங் கனமாகத்தான் சமைத்து
வாழையிலை பட்டுவட்டித் தாள்சாதமது
அப்போது கோவலனார் அன்னமது தான் புசித்து
சாப்பிட் டிளைப்பாறத் தாம்பூலந்தான் தரித்து

## (மாநாய்கன் செட்டிக்கு கோவலன் ஓலை விடுதல்)

முடி மன்னர் போலழகன் முத்துவிற்கும் வியாபாரி
சேடிக்குருத்தோலை செம்பொன் னெழுத்தாணி
தாளிப் பனையோலை தலைப்பக்கங் காம்பரிந்து
முத்துப் புதைத்ததுபோல் மூன்றுவரி தானெழுதி
மாநாய்கன் செட்டியார்க்கு மன்ன னெழுதுகிறார்

வக்கணையு மொப்பனையும் வைத்து எழுதுகிறான்
திருக்கடையூர் பட்டணத்தில் தெய்வாரம்பை மாதகியாள்
தெய்வ ரம்பை மாதகியாள் தேன் மொழியாள் தன்னிடத்தில்
வருத்தப்படுகிறேன் மயிலனையாள் தன்னிடத்தில்
சித்ரமுகச் சாவடியில் தேடி வைத்த திரவியங்கள்
பன்னிரண்டு கப்பல்பணம் பாங்காய் வேண்டும்
வாரா திருந்தால் நான் மாண்டு மடிந்திடுவேன்
ஓலைக்கண்ட நாழிகையி லுடனே அனுப்பவேண்டும்
என்று சொல்லை ஓலையிலே எழுதினா ரப்போது

## (சேவகன் ஓலையை எடுத்துச் செல்லுதல்)

செதிரிக்கந்தான் போட்டுச் சேவகனைத்தா னழைத்து
காற்றிலும் வேகமுள்ளோன் கையி லோலையைக் கொடுத்து
காவிரிப்பூம்பட்டணத்தின் கரைத்துறைக்கு போகவென்றான்
அப்போது சேவகனும் அடைவுடனே ஓடிவந்து
காடுமலைதாண்டி கடுகனவே ஓடிவாரான்
சில்லென்ற காடுவிட்டுச் செடியும் வனந் தாண்டி
ஓட்டம் பெருநடையா யோடிவருகிறானே
தண்ணீர் கண்டால்குடியானே தூவுகண்டால் தங்கானே
பிணையோடு மாடுகண்டாற் போனவழி பின் விலகான்
கஞ்சிகொண்டு களை பறிக்குங் காவிரிப்பூ நன்னாடு
சோறு கொண்டு மதவடைக்கும் சொர்ணகிரி தேடி வாரான்
மாநாய்கன் செட்டி முன்னே வந்து நின்றார் மன்னவனும்
தூதுவனும் அப்போது சுருளோலைதான் கொடுத்தான்
செப்புவா னோர்வாசகம் சீராக காவலனும்
எங்கிருந்து வந்தவன்காண் எனக்கறியச் சொல்லுமென
அப்போது தூதுவனும் ஆணழகனென்ன சொல்வான்
திருக்கடையூர்பட்டணத்தில் தெய்வரம்பை மாதகியாள்
அவளிடத்தில தானிருக்கும் அழகான கோவலனார்
கோவலனார் தம்முடைய குணமுள்ள தூதனையா
அவ்விடத்தில் நானிருந்து இவ்விடம் வந்தேனையா
ஓலையைக் கை கொடுத்து உத்தமனும் விலகி நின்றான்

## (மாநாய்கன் ஓலையை படித்து விட்டு வேண்டிய பொன் பொருள் கப்பலில் அனுப்புதல்)

மாநாய்கன் வாங்கி வகையுடனே வாசித்தான்
அவ்வோலை தன்னிலுள்ள அதிசயத்தைத்தான் பார்த்து

கோவலனார் கை நாட்டைக் கொற்றவனுந்தான் பார்த்து
கண்ணிலே லொற்றிக்கொண்ட கட்டழகனேது சொல்வான்
மாதகி தன்னிடத்தில் வருத்தம் வந்து நேர்ந்ததென்று
வந்ததொரு ஓலைதன்னை மன்னவனார் தாம்பார்த்து
அப்போது கப்பலில் மாலுமியைக் கடிக வரவழைத்து
பன்னிரண்டு கப்பல்பணம் பாங்காய் பயணமென்று
படவி லரிசியென்ன பட்டணத்து மாலையென்ன
சோங்குமிளகு என்ன சொர்ண கப்ப லேலமது
இத்தனையுந்தான் கூட்டி இன்பமுட னனுப்ப
கப்பலுக்குப் பாய்கட்டிக் கடுக வருகுது பார்
திருக்கடையூர் தேடியே தீவிரமா வருகுதங்கே
அங்கே நங்கூரந்தான்போட்டு நலமாய் திருக்கடையூர்
நாங்குபடவேறி நலமாகவந்த தங்கே
மன்மத வடிவுடைய வர்த்தகனார் முன்னே வந்து
சீலைபோல் வடிவுடைய செட்டியார் முன்னே வந்து
அழகுடைய வர்த்தகனை ஆணழகன் கோவலனை
கண்டு மல்லோ தெண்டனிட்டுக் கட்டழகன் கோவலனை
பன்னிரண்டு கப்பல்பணம் பாங்காக வந்ததையா
படவிலரிசிகளும் பட்டணத்து மாலைகளும்
சோங்கு மிளகுமது சொர்ண கப்ப லேலமது
இத்தனையும் வந்ததென்று எடுத்துரைத்தான் மாலுமியும்
அப்போது கோவலனும் ஆணழகன்தான் மகிழ்ந்து

## (கோவலன் பொன் பணத்தை எல்லாம் மாதகிக்கு வழங்குதல்)

தங்க மிதியடியாந் தனிக்குமிழ் ரத்தினமாம்
மிதியடியின் மேலேறி மிக்க முத்துக் குடைபிடித்து
ரேவுத் துறை தனக்கு நேராக வந்து நின்று
படவு பணத்தை யவர் பாங்கா யிறக்குமென்றார்
மாலுமியும் அப்படியே வந்து இறக்கினான்
கப்பலி லேற்ற பணம் கையிருப்புதா னிருத்தி
இறக்கின பணமெடுத்து ஏந்திழையாள் வீடுவந்து
மாதகியைத் தானழைத்து வடிவழக னேது சொல்வான்
ஆசை தந்த மாதகியே அன்புள்ள கண்மணியே
உனக் கென்ன வேண்டுமென்று உத்தமனார் கேட்கலுற்றார்
அப்போது மாதகியாள் ளரிவை யவளேது சொல்வாள்
பன்னிரண்டு காணிநிலம் பர்த்தா வேண்டுமென்றாள்

அப்படியே நல்லதென்று ஆணழகன் கோவலனும்
அந்த வூரிலே யிருக்கும் அழகான முனிசீப்பை
வாருமென்று தானழைத்து வர்த்தகரு மேது சொல்வார்
பன்னிரண்டு காணி நிலம் பாங்காக வேண்டுமென்றார்
அப்படியேதான் கொடுத்தா ரானதொரு முனிசீப்பும்
மாதகிக்கு வேண்டு மென்று மன்னனந்தக் கோவலனும்
ஏழடுக்கு மாளிகைதான் இன்பமுடன் கட்டுகிறான்
அரண்மனைகளானது தான் அன்பாகக் கட்டுகிறான்
பூசைபண்ணும் மண்டபமும் பொற்கொடிக்குக் கட்டினான்
பற்றி யுலாவுவதற்குப் பன்னக சாலைகளாம்
சன்னலெல்லாம் பொன்னாலே தையலும் மாளிகைக்கு
காலெல்லாம் வயிரத்தூண் கதவெல்லாங் கண்ணாடி
வீதிதிறந்து மவள் வீட்டுக்கு வந்தாலே
கை கால் கழுவுமிடம் கணக்கிடப்போகாது
சாளர வாசலுக்குச் சலவைக்கல் தான் புதைத்தார்
இத்தனையும் கட்டிவைத்தா ரிளங்கொடியாள் மாதகிக்கு
மாதகியைத் தானழைத்து வடிவழகனேது சொல்வான்
என்னென்னவேண்டும் இளங்கொடியே கேளுமென்றார்
வாய்திறந்தேது சொல்வாள் மாதகியா ளப்போது
கணக்கு வழக்கு முண்டோ கணவருக்கும் நமக்கும்
என்ன கணக்கு இளங்கொடியே சொல்லுமென்றார்
காலை கடைச் செலவுகொள்ள கால்மரக்கால் பொன்
உச்சிகடைச் செலவுகொள்ள ஒருமரக்கால் பொன்வேணும்
அந்திகடைச் செலவுகொள்ள அரைமரக்கால் பொன் வேணும்
பாக்குகொள்ள வெந்தனுக்குப் பத்துலட்சம் பொன்வேணும்
வெற்றிலை வாங்குதற்கு வேணு லட்சம் பொன்வேணும்
புகையிலை வாங்குதற்குப் பொன் கப்பல் பொன்வேணும்
சுண்ணாம்பு வாங்குதற்குச் சொர்ணகப்பல் பொன்வேணும்
நித்தமொரு ஆயிரம் பொன் சத்தியமாய்த் தரவேணும்
பொழுதைக்கு ஆயிரம்பொன் சத்தியமாய்த் தரவேணும்
இப்படிக்குத் தரவேணும் இன்பமுள்ள நாயகரே
இன்மென்ன வேணுமடி இளங்கொடியே சொல்லுமென
நட்டுவர்க்கு ஆயிரம் பொன் நலமாகத் தரவேணும்
மத்தளக்காரனுக்கு வளமாகத் தரவேணும்
சுதிகாரப் பையனுக்குச் சொர்ணங் கொடுக்கவேணும்
எந்தனுட மாதாவுக்குக் கேழுலட்சம் தரவேணும்
இப்படிக்குச் சத்தியமா யெனக்குமே நீர்தாரும்

இன்னமென்ன வேணுமடி இளங்கொடியே கேளுமென
குத்துணி ரவிக்கைகளும் குசும்பாவின் சேலைகளும்
பட்டு ரவிக்கைகளும் பசுப்பொன்னாற் சேலைகளும்
இரத்தினச் சடை பிர்லையும் இப்போது வேணுமென்றாள்
அப்படியேதான் கொடுத்தா னாணழகன் கோவலனும்
கல்லிழைத்தக் கம்மலது கட்டழகன் செய்தான்காண்
கொப்புடனே வாளிகளும் கோர்வை மணித் தாழ்வடமும்
முத்திழைத்த மூக்குத்தி மொகன மாலைகளும்
எட்டு விரலுக்கு மிசைந்த கணையாழி
சுண்டு விரலுக்குச் சுழற்ற கணையாழி
வாங்கிச் செய்தார் மயிலனையாள் மாதகிக்கு
காலாழி பீலாழி கண்டசரமார் பதக்கம்
சவுளிப் பதக்கங்களும் ஏந்திழைக்குச் செய்தார் காண்
இத்தனை யாபரணம் ஏந்திழைக்குச் செய்தார்காண்
இப்படிக்கு கோவலனா ரிருக்கின்ற வேளையிலே
பன்னிரண்டுவருஷம் பைங்கிளியாள் வீடுதனில்
பட்டணத்தான் கோவலனும் பாங்குடனே வீற்றிருந்தான்

## (கோவலன் மாதவியுடன் இன்பமாக வாழ்தல்)

ஆட்டமாடி வீடுவந்தால் அவளடியைத் தான்பிடிப்பான்
பாடுட்டுப் பாடி வீடுவந்தால் பக்கமெல்லாந் தான் பிடிப்பான்
வைத்த சாத முண்ணுவான் வழி நடந்த கால்பிடிப்பான்
தலை மாட்டில்வந்து நின்று தாழம்பூச் சூடுவான்
இப்படிக்குத் தானிருந்தான் ஏந்திழையாள் தன்னிடத்தில்
அவட்குத் தம்பலக் காளாஞ்சி தலை மேல் சுமந்திருப்பான்
அமரர்கள் கோவிலுக்கு ஆட யிவள் போனாக்கால்
அவள் பின்னிவன் போவான் ஆணழகன் கோவலனும்
இப்படிக்கு இஷ்டமா யிருந்தானே கோவலனும்
பன்னிரண்டு வருஷம் பைங்கொடியாள் தன்னிடத்தில்
இன்பமுடனாக இருந்தானே கோவலனும்
பன்னிரண்டு தன்வருஷம் பக்ஷமுடன் தானிருந்தான்
அன்னிய பெண்ணிடத்தில் அன்புடனே தானிருந்தான்
மானுங் கலை போல் கூடி விளையாடிடுவார்
குயிலு மயில்போல் கூடி விளையாடிடுவார்
சாரையும் சார்ப்பமும்போல் சேர்ந்து விளையாடிடுவார்
இஷ்டமுடன் தானிருந்தான் ஏந்திழையாள் தன்தனிடத்தில்
இப்படிக்கு அங்கிருந்தான் இன்பமுடன் கோவலனும்

## (கண்ணகி தன்நிலை உணர்ந்து கணவனெங்கே எனக் கேட்டல்)

பட்டணமாம் பட்டணமாம் காவிரிப்பூம்பட்டணமாம்
கஞ்சிகொண்டு களை பறிக்கும் காவிரிப்பூம்பட்டணமாம்
சோறு கொண்டு மதவடைக்கும் சொர்ணகிரி பட்டணத்தில்
காவிரிப்பூம்பட்டணத்தில் கண்ணகியாள் மாதினுக்கு
பன்னிரண்டு வயதாச்சு பைங்கொடியாள் கண்ணகிக்கு
நாளொருமேனியாக நட்சத்திரம்போல் வளர்ந்தாள்
பொழுதெரு மேனியாகப் பொன்வண்டு போல் வளர்ந்தாள்
இப்படிக்குத்தான் வளர்ந்தாள் ஏந்திழை கண்ணகியும்
வளர்பிறைச் சந்திரன்போல் மங்கையருந்தான் வளர்ந்தாள்
தன்புத்தி தனக்குமே தையலாட்கு நேர்ந்ததுகாண்
அப்போது தாதியரை ஆரணங்குதான் அழைத்து
கண்ணாடி கொண்டுவந்து கட்டழகி நாயகியாள்
தன்னழகைத் தான் பார்த்தாள் தாமக்குழலாள்
கொண்டையிலே பூவும் குவளையிலே மையழகும்
கையிலே கங்கணமும் கழுத்திலே தாலியதும்
இடையிலே கூறையும் இலங்கு முகம் மஞ்சளுமாய்
கண்ணின் திருவழகுங் கஸ்தூரிப்பொட்டழகும்
கஸ்தூரிப்பொட்டழகைக் கண்டுவிட்டாள் கண்ணகியாள்
எந்தனுக்குத் தாலியாக வந்தவகை சொல்லுமென்றாள்
ஆர் செய்தவேலையிது அரிவையரேசொல்லுமென்றாள்
கலியாணப் பந்தலிலே கட்டின தாலியது
இப்படிக்குக் கட்டினவ ரெங்கேயடி தாதியரே
மாமியார் வர்ணமாலை மயிலணையைக் கேட்டாக்கால்
அந்த வரலாற்றை அடியோடே தானுரைப்பாள்

## (கண்ணகிதன் மாமியாரிடம் கணவனெங்கே என்று கேட்டல்)

ஏறினாள் பல்லக்கு எடுத்தார்கள் தாதியர்கள்
மாமியார் வீடுதேடி வாராளே மயிலணையாள்
மருமகள் வருகிறதை மாமியார்தான் பார்த்து
பகடையைத்தானும் விட்டுப் பைங்கொடி யெழுந்திருந்து
எதிர்கொண்டுவாராளே ஏந்திழை வர்ணமாலை
மாமியைக் கண்டவுடன் மயிலணையுந் தொண்டனிட்டாள்
வாழ்த்தி யெடுத் தணைத்தாள் மருமகளை யப்பொழுது
ஆசனமுந்தான் போட்டா ளானதொரு மருமகட்கு
ஆசனத்தின்மேலே அமர்ந்தாளே கண்ணகியும்

எங்கே நீ வந்தா யென்று இளங்கொடியும் கேட்டாளே
மாமி முகம்பார்த்து மயிலனையு மேதுசொல்வாள்
மாலை தரித்ததொரு மணவாள னெங்கே யென்றாள்
தாலிதரித்ததொரு தனஞ்செயனாரெங்கே யென்றாள்
காசுக்கடை விற்கின்ற கட்டழக ரெங்கே யென்றாள்
எவ்விடத்தில் காசுக்கடை எனக்கறியச் சொல்லுமென்றாள்
காசுக்கடை பக்கத்திலே வேசிக்கடையு மென்று
எததனை நாளாச்சு என் புருஷன் வீடு வந்து

### (வர்ணமாலை கோவலன் மாதகியுடன் இருப்பதைக் கூறுதல்)

பன்னிரண்டு வருஷமாச்சு பைங்கிளியே வீடுவந்து
திருக்கைடயூர்ப்பட்டணத்தில் தெய்வ ரம்பை மாதகியாள்
அவள் வசத்தி லிருக்கின்றா ராணழக ருன் புருஷன்
அவரை யழையாமல் போனதென்ன அத்தையரே
வேசியுடன்போனவரை வீட்டுக்கு நாமழைத்தால்
நம்மொத்த வர்த்தகர்கள் நம்மை மதியார்கள்
ஆகையினாலே நாங்கள் அழைக்கவில்லை மங்கையரே
உன்னாலே யானாக்கா லழையு மென்றா ளுத்தமியும்
அப்படியே நல்லதென்று அரிவையவள் தானெழுந்தாள்
தன்னுடைய மாளிகைக்குத் தையலவள் வந்து நின்று

### (கண்ணகி கோவலனுக்கு ஒலை அனுப்புதல்)

தாளிப் பனையோலை தலைப்பக்கங் காம்பரிந்து
ஈழுப்பனையோலை இருபக்கங் காம் பரிந்து
கணபதியைத் தானினைந்து கையி லெழுத்தாணி கொண்டு
ஐந்து வயதினி லறியாத நாளிலே
மாலையிட்டு மூலை வைத்து மாதகியாள் வீடுசேர்ந்து
தாலி கட்டி மூலை வைத்து தாசிவீடு போய் நுழைந்து
பன்னிரண்டுதன் வருஷம் பரத்தையர் வீடமர்ந்து
மாலையிட்ட தேவிநான் மாண்டு மடிகிறேனே
தொண்டையிலே சீவன் தொடுக்குட்டுப் போகுது காண்
உற்றார் பெற்றோர்களும் பொன்னுரைத்துமே நாவிலிட்டார்
அப்படியும் போகவில்லை அடியாளின் இன்னுயிர்தான்
கல்லென்றாலுங் கணவன் புல்லென்றாலும் புருஷன்
உம்முடைய கையாலே துளசிதீர்த்தம் விட்டாலே
என்னுடைய சீவனது இறந்து மடிந்து விடும்
கட்டின தாலியதைக் கையாலே வாங்கிக்கொண்டு

உற்றொருமை செய்துவிட்டு உத்தமரே போய்வாரும்
நீர் வருமளவு மெந்தனுயிர் மன்னவரே போகாது
ஓலை கண்ட நாளிகைக்கு வரவேண்டு முத்தமரே
என்று சொல்லி யோலை எழுதினாள் கண்ணகியும்
செந்திரிக்கைதான் போட்டுத் தலைபுறத்தில் சுட்டாளாம்
தாதிகளைத் தானழைத்து ஓலையைக் கைகொடுத்தாள்
திருக்கடையூர்பட்டணத்தில் தீவிரமாய் நீங்களும்போய்
மாதகியை யறியாமல் வடிவழகர் தம் கையில்
ஓலையைக்கொடுத்து உத்தமனார் கோவலரை
பல்லக்கி லேற்றிக்கொண்டு பாங்கியரே வாருமென்றாள்
காடு செடிதாண்டி கடுகவே வாரார்கள்
சில்லென்ற காடுஞ் செடியும் வனந் தாண்டி
புல்லென்ற காடும் புலிகள் வனந் தாண்டி
வனமாய் வனந்தாண்டி வாரார்கள் தாதியர்கள்
சித்திரமுகச் சாவடியில் தேன் மொழியார் வந்திறங்கி
பல்லக்கை விட்டிறங்கிப் பாங்கியர்கள் தாமிருந்தார்

## (கோவலன் பூசை செய்ய வருதல்)

அந்நேர வேளையிலே ஆணழகர் கோவலரும்
சித்திரமுகச் சாவடிக்குக் கோவலரும் வாராரே
பூசைகள் தாமுடிக்கப் புண்ணியரும் வாராரே
எதாஸ்தானந்தேடி யிருந்தாரே கோவலனார்
ஆற்று மணலெடுத்து ஆவிடையா ருண்டு பண்ணி
சேற்று மணலெடுத்து சிவலிங்க முண்டுபண்ணி
தோட்டமது திறந்து பொன்னைத் தைத்துப் பூவெடுத்து
வாசற்படித் திறந்து வண்ண லட்சம் பூவெடுத்து
கொண்டு வந்த புட்பமதை குபுகுபென்றுதான் சொரிந்தும்
வாரிவந்த நல்லபுட்பம் மலைப்போலேதான் சொரிந்து
அட்டாளுஞ் சொக்கரையும் அங்கயற் கண்ணம்மனையும் கொண்டு
அன்பாகவே மனதில் ஆணழகர் தாம் நினைத்து
கண்ணிரண்டு மூடிக்கொண்டு கையிரண்டுமேந்திக்
சிவசிவாவென்று சொல்லி செயகண்டி தானடித்தார்

## (கண்ணகியின் ஓலையைக் கோவலன் வாசித்தல்)

செயகண்டி தானடிக்கத் தேன்மொழியா ளோடி வந்து
பூசையில் தானிருக்கும் புண்ணியனார் கைதனிலே
ஓலைச்சுருளை யந்த உத்தமியாள்தான் கொடுத்தாள்

ஓலையைத்தான் வாங்கி யுத்தமரும் வாசித்தார்
கண்ணகி கைநாட்டைக் கட்டழகர் கண்டாரே
கொம்பனையாள் கை நாட்டைக் கோவலருங் கண்டாரே

## (கோவலன் அழுது புலம்புதல்)

வரைந் திருந்த ஓலையிலே வக்கணைகள் தானறிந்து
சிவ சிவா வென்று சொல்லி திருச்செவியில் கையைவைத்து
அரகரா வென்று சொல்லி அவர்செவியில் கையை வைத்து
இப்படிக்கு நேரிட்டதே ஏந்திழையே யுந்தனுக்கு
ஈஸ்வரனார் தன்செயலுக் கென்னதான் செய்வேனென்று
தாதிகளைத் தாமிருத்தி தனஞ்செயனார் கோவலரும்
மாதகியாள் தன்னிடத்தில் விடைபெற்று வாரேனென்று
தலைமேலே கையைவைத்துத் தானழுது வாராராம்
என்ன சொல்லி யழுது வாரா ரின்பமுள்ள கோவலரும்
ஐந்து வயதிலே அறியாத நாளையிலே
மூன்று பிராயத்திலே முலைகுடிக்கும் நளையிலே
மடிமே லெடுத்து வைத்து மாங்கனியைக் கைக் கொடுத்து
மாலையிட்டு வைத்து நான் மாதகியாள் வீடுவந்தேன்
கூரையிட்டுத் தனியே வைத்து கூத்தியார் வீடுவந்தேன்
மாலையிட்டத் தேவியாள் மாண்டு மடியலாச்சே
உன்னாலே என்ன சுகம் உத்தமியே நான் கண்டேன்
மாலை யிட்ட தல்லாது மற்றொரு சுகமறியேன்
வீணுக்குத் தாலிகட்டி விருதாவாய் விட்டுவந்தேன்
ஆரைச் சத மென்பேன் அன்னியரைத் தஞ்ச மென்பேன்
நம்பி யிருந்தேன் நாட்டாற்றில் விட்டாளே
என்று தலைமேலே கையை வைத்துத் தனஞ்செயரும் வாராரே
மாதகியாள் வீடுதேடி வாராரே கோவலனார்
கூட்டமாய்க் காற்றடித்தால் கொம்போடே கொம்பசையும்
தனிப் புறமாய்க் காற்றடித்துத் தயங்கிப் புலம்பறேனே
என்று முத்துபோல கண்ணீரைப் முகமெல்லாஞ் சோரவிட்டார்
பவளம்போல் கண்ணீரைப் பக்கமெல்லாம் சோரவிட்டார்

## (மாதகி கோவலனிடம் அழுவதற்கான காரணம் கேட்டல்)

இப்படிக்குத் தானழுது ஏந்திழையாள் முன்னே வந்து
முன்கட்டு வாசலிலே முடிமன்னர் வந்து நின்று
அழுத கண்ணுஞ் சிந்தையுமா யாணழகன் நிற்கலுமே
அப்போது மாதகியா என்பாகத் தான் பார்த்து
ஆரடித்தார் ஏனழுதாய் அழுதகண்ணும் நீர் தளும்ப
அடித்தவரைச் சொல்லுமென்று ஆரணங்குதான் கேட்க

## (கோவலன் மாதகியிடம் கண்ணகியைக் காண அனுமதி கேட்குதல்)

அப்போது கோவலனும் அரிவை யவட் கேது சொல்வார்
ஆரு மடிக்கவில்லை அன்னியருந் தீண்டவில்லை
ஐந்து பிராயத்தாலே அறியாத நாளையிலே
கொஞ்ச வயதிலே கொடிதான நாளையிலே தான்
மடிமே லெடுத்துவைத்து மாங்கனியைக் கொடுத்து
மாலை தரித்ததேவி கொம்பனையு மாண்டாளென்று
கூறை தரித்த தேவி கொம்பனையு மாண்டாளென்று
பத்தினியு மாண்டாளென்று பட்டணத்து தாதியர்கள்
உத்தமி மாண்டா ளென்று ஓலைக்கொண்டு தாதிவந்தாள்
மாண்டுபோன கண்ணகியாள் மதிமுகத்தைப் பார்க்க வேண்டும்
செத்துப்போன கண்ணகியாள் திருமுகத்தைப் பார்க்க வேண்டும்
வாழ்வுக் குதவாவிட்டால் சாவுக் குதவ வேண்டும்
நன்மைக் குதவாவிட்டால் தின்மைக் குதவவேண்டும்
இன்றேல் என் னொத்தவர் என்னை மதியார்கள்
சரி யொத்த வர்த்தகர்கள் சற்றும் மதியார்கள்
ஊருமட்டும் போய்வாரேன் ஒருவார்த்தைச் சொல்லுமென்றார்
நாடு மட்டும் போய்வாரேன் நல்ல வாக்குச் சொல்லவேணும்
மூத்தான வாய்திறந்து உத்தாரஞ்சொல்லும் பெண்ணே

## (மாதகி அழுது புலம்புதல்)

என்ன அப்போது மாதகியா ளாரணங்கு மேது சொல்வாள்
என்னிலும் தானழகோ ஏதுங்கெட்ட கண்ணகியாள்
க்ஷத்தியாள் நானிருக்க கொண்டவள்மேலாசை யென்ன
வேசியாள் நானிருக்க விரல் கொடுத்தா ளாசை யென்ன
தாசியவள் நானிருக்க தாலியுள்ளா ளாசை யென்ன
என்னிலும் தானழகோ ஏதுங்கெட்ட கண்ணகியாள்
கறந்துவிடு மறந்துவிடு பொற்கொடியாள் தன்னாசை
பன்னிரண்டு தன்வருஷம் பஞ்சணைமேல் நாமிருந்தோம்
கூடிக் குலாவிக்கொண்டு கொற்றவனே நாமிருந்தோம்
சாரையுஞ் சர்ப்பமும்போல் சீராய் விளையாடிருந்தோம்
குயிலும் மயிலும் போலக் களித்து விளையாடிருந்தோம்
மானு கலை போல மகிழ்ந்து விளையாடிருந்தோம்
எள்ளுக்கு ளெண்ணெய் போல் பரவியே நாமிருந்தோம்
விட்டுக்கோ வுன்னாசை விளாம்பழத்து ஓடதுபோல்
வேண்டு மன்ற நாளையிலே வேப்பங் கசப்பானேன்
சட்டி சுட்டதென்று கையை விட்டு நீர் போறேனென்றீர்

ஆரைச் சதமென்பேன் அன்னியரைத் தஞ்சமென்பேன்
நம்பிவிருந்தேனே நட்டாற்றில் விட்டீரே
இப்போ ஊருக்குப் போறேனென் றுத்தமரே சொன்னீரே
வாய் கூசாதெனைக் கேட்க வந்ததே வுந்தன் மனம்
என்னதான் குற்றஞ்செய்தேன் என்னை விட்டு நீர்போறீர்
என்னைவிட்டு நீர்போக என்மனம் தோன்றுதுகாண்
ஆசையைத் தீர்த்துவிட்டு அம்பலத்தில் விட்டீரே
என்று முத்துப்போல் கண்ணீரை முகமெல்லாஞ் சோரவிட்டாள்
தாரை தாரையாகவேதான் சோரவிட்டுத் தானழுதாள்
மானழுத பாவனைப்போல் தானழுது வாடுகிறாள்

### (கோவலன் ஆறுதல் கூறுதல்)

முந்தானை கொண்டு முகமெல்லாந்தான் துடைத்து
உன்னை விட்டு நான் பிரியே னொருநாழி யானாலும்
கொண்டவளை நான்பார்த்துக் கொம்பனையே வாரேனடி
உற்றொருமை செய்து விட்டு ஒரு நொடியில் வாரேனடி
கட்டிய தாலிதன்னைக் கைமேலே வாங்கிக் கொண்டு
வைகையிலே ஸ்நானம் பண்ணி வருவேனடி உன்மனைக்கு
ஒன்றுக்கு மஞ்சாதே ஒளியுள்ள கண்மணியே
சந்தோஷமாகவே தான் தையலே அனுப்பி வைத்தால்
காவிரிப்பூம்பட்டணத்தில் கரை துறைக்குப் போய்வாரேன்
என்று சொல்லிக் கோவலனார் ரெடுத்துரைத்தா ரந்நேரம்

### (கோவலன் போல் பதுமை செய்து வைத்து விட்டுப் போகச் சொல்லுதல்)

அப்போது மாதகியாள் அரிவை யவளேது சொல்வாள்
உன்னைப்போலே பதுமை யொன்று நீர் செய்து விட்டு
சிறுபதுமை செய்து வைத்து செட்டிப்பிள்ளைப் போய்வாரும்
மணிப் பதுமை செய்துவைத்து மன்னவரே போய்வாரும்

### (கோவலன் பதுமை செய்யப் புறப்படுதல்)

என்ன அப்போது கோவலனார் ஆணழகரேது சொல்வார்
சித்திரமுகச் சாவடியில் தேன்மொழியே நானும் போய்
களஞ்சியத்துத் திரவியத்தைக் கடுகெனவே நானறிந்து
பதுமையொன்று செய்து வைத்துப் பாவையே போய்வாரேன்
என்று களஞ்சியத்தைத் தேடியே கட்டழகர் வாராரே
பொன்னு மிதியடியைப் போட்டு மிகநடந்து
திருநெல்வேலிச் சோமன் சீராகத்தா முடுத்தி
கங்கு உருமாலை கள்ளர்கட்டு முண்டாசி

சேலத் துருமாலை சேர்ந்திருக்கிக் கட்டினாரே
சவுளிக் கடுக்கனது சன்னல்பின்னல் தாழ்வடமும்
ஒண்டிக்கால் முருகதுவும் ஒரு காதிற் சோதிமின்ன
முப்புரிநூலுமது மூன்று லட்சம் பொன் பெறுமே
செக்கச்சிவந்தவர்காண் செங்கீரைத் தண்டழகர்
மாங்காய் முடியழகர் மாதுளம்பூ மேனியனார்
தானு மழகுகுடையார் தக்கோலந் தின்றவர்காண்
ஆணாலழகானவர் அன்புள்ள வர்த்தகர் காண்
அட்டாளுஞ் சொக்கரைப்போ லாணழகர் வாராரே
மாதகிக்கு பதுமைசெய்ய வாராராங் கோவலனார்
பஞ்சாயத்தார் வீடுதேடிப் பட்டணத்தார் வாராராம்

## (கம்மாளர்கள் கோவலரிடம் விசாரித்தல்)

சுட்டியென்ற ஆசாரி குருபுத்திரர் கம்மாளர்
சுப்பனென்னு மாசாரி சொகுசுள்ள கம்மாளர்
அண்ணன் தம்பி யேழுபேரானதொரு கம்மாளர்
பஞ்சாளத்தார் வீடுதேடிப் பட்டணத்தார் வாராராம்
அப்போது பஞ்சாளத்தார் ரண்ணன் தம்பி யேழுபேரும்
மதுரைவாழ் சொக்கரைப்போல் மகாதேவர் வருகிறதை
பார்த்தவர்க ளேழுபேரும் பண்பாக அப்போது
நாம்கேட்ட வரந்தருவார் கீர்த்தியுள்ள சொக்கரென்று
தோட்டமது திறந்து தொன்னை தைத்துப் பூவெடுத்து
வாசற்படி திறந்து வண்ண லட்சம் பூவெடுத்து
ஓடுகிற கங்கையிலே ஒரு சொம்பு ஜலமெடுத்து
பாதமது துடைக்கப் பட்டாடைதாமெடுத்து
ஓட்டம் பெருநாடையா யோடி வந்தார் பஞ்சாளத்தார்
கொண்டுவந்த சொம்பு ஜலம் கோவலனர் தானூற்றி
பாதமது துலங்கப் பட்டா லடி துவட்டி
கொண்டு வந்த புடபமதைக் குபுகுபென்றுதான் செரிந்து
வாரிவந்த புட்பமெல்லாம் மலரடிற் றான்சொரிந்து
முக்காலடிவணங்கி மூவொருகால் தெண்டனிட்டு
தெண்டனிட்ட பஞ்சாளரைக் கண்டந்த கோவலனார்
சிவசிவாவென்று சொல்லி திருச்செவியில் கையைவைத்து
அரகராவென்று சொல்லி அருஞ்செவியில் கையைவைத்து
என்னப் பணிந்தவகை ஏதுவகை சொல்லுமென்றார்
அட்டாளுஞ்சொக்கரென்று அடிபணிந்தோம் நாங்களும்
கேட்ட வரந் தருவீரென்று கீர்த்தியுடன் பணிந்தோம்
சொக்கரல்ல சொக்கரல்ல சொர்ணகிரி செட்டிப்பிள்ளை
பதுமையு மெந்தனைப்போற் பண்ணவந்தே னுங்களிடம்

மாதகிக்குப் பதுமைசெய்ய வடிவழகர் வந்தேனென்றார்
அது உங்களா லாகுமோ உத்தமரே சொல்லுமென்றார்
ஆகுமையா எங்களா லென்றழைத்து வந்தாரரண்மனைக்கு
வட்டமணை போட்டார்கள் வடிவழகர் கோவலர்க்கு

## (கோவலன் கம்மாளர்களிடம் தம்மைப்போல் பதுமைசெய்யச் சொல்லுதல்)

என்னைப்போற் பதுமை யொன்றிப்போது செய்யவேண்டும்
எத்தனை நாளையிலே செய்து கொடுப்பீ ரென்றார்
எட்டு நா ளொருவாரம் இருந்திரேயா மானால்
உம்மைப்போலே பதுமை உத்தமரே செய்வோ மென்றார்
ஒரு நாழிக்குள்ளாக செய்யவேணு மென்றுரைத்தார்
எங்களா லாகா தென் றியம்பினார் பஞ்சாளர்
என்னைப்போல் கருவுகட்டித் தாரீரோ என்று கேட்டார்
மெழுகாற் கருவுகட்டி வேந்தனே செய்யவேண்டும்
அதிலே பழுதானா லாகாது கோவலரே
மறுபடியு முருக்கியல்லோ மன்னவரே செய்ய வேண்டும்
அவ்வளவு வேலைகொள்ளு மெங்களுக்கென்று சொன்னார்
அரை நாழிக்குள்ளே செய்ய ஆகாது மன்னவரே
அப்போது கோவலனா ராணழ ரேது சொல்வார்
பொன்னை யுருக்கில்லோ புண்ணியரே தாருமென்றார்
அப்படியே நல்லதென்று அவர்களுஞ் சம்மதித்தார்

## (கோவலர்க்குப் பொன்னால் உருவம் சமைத்தல்)

மூசையிலேபோட்டு உருக்கினார் பொன்தனையும்
அப்போது கோவலனா ராணழக ரென்ன செய்தார்
புத்துமண்ணும் கொண்டுவந்து புண்ணியனா ரன்னேரம்
அதைக் கருக்கல்போலே ஆணழகர் செய்தாராம்
சுற்றித் திரைவளைத்தார் சொர்ணங்கொண்டு வாருமென்றார்
அப்போது ஆரை நினைக்கிறா ரளவற்ற சிந்தையிலே
பத்தா பத்தினியே பழுதுபடா ரத்தினமே
குற்றமற்ற ரத்தினமே கோவிலிங்க சீர்மகளே
நீ பத்தினியு மெய்யானால் பதுமை யமைய வேண்டும்
பத்தினியைத் தா நினைத்து பஞ்சலோகந்தான் கவிழ்த்தார்
ஒடி யுருகுதங்கே உள்ளுருகுப் பாயுதப்பார்
ஐந்தெழுத்தும் பாவனையும் ஆணழகன் கோவலன்போல்
பட்டணத்தார்போலாகப் பதுமை யமைந் தங்கே
பஞ்சாளரை யழைத்துப் பட்டணத்தா ரேது சொல்வார்
கருவுகொண்டு வாங்க ளென்று கட்டழகர் தாமுரைத்தார்

ரவை சல்லாதான் முடி நலமாகக் கொண்டு வந்தார்
குளத்தங்கரைக் கதனை கொண்டு வந்தார் பஞ்சாளர்
கருவதனைத் தட்டினார்கள் கம்மாள ரப்பொழுது
அழகு துலங்குறது ஆனந்தங் கொஞ்சுறது
கண்ணழகுங் கையழகுங் கண்டார்கள் பஞ்சாளர்
நம்மாலே யாகுமோ நலமாகச்செய்வதற்கு
என்று சொல்லிப் பஞ்சாளர்ஏழுபேரு மொன்றாக
பதுமையைக் கொண்டு வந்து பட்டணத்தார் கைகொடுத்தார்
பதுமைதனை யெடுத்துப் பட்டணத்தார் வாராரே
மாதகியாள் அந்தப்புரம் வாராரே கோவலனார்
தலைக் கடைவாசலிலே தனஞ்சயனார் வந்து நின்றார்
பதுமையை யங்கு வைத்துப் பட்டணத்தா ருள் நுழைந்தார்
மாதகியாள் முன்னே வந்து வடிவழகனேது சொல்வான்
பொழுதேறிப் போகுதடி போகவேணுங் கண்மணியே
நாளேறிப்போகுதடி நடக்கவேணும் பெண்ணணங்கே
பொற்கொடியே மாதகியே போக விடைதா வென்றார்
அப்போது மாதகியா ளாரணங் கென்ன சொல்வாள்
பதுமை கொண்டு வந்தீரானால் பட்டணம்போய் வரலாம்
உம் பதுமை செய்து வைத்தா லூருக் கனுப்பி வைப்பேன்
என்ன அப்போது கோவலனார் ஆணழக ரேது சொல்வார்
தலைக் கடையில் வைத்தேனடி தையலரே பாருமென்றார்
ஓட்டம் பெருநடையா யோடிவந்து பாருமென்றார்
தலைக் கடையி லோடி வந்து தையலவள் பார்க்கலுற்றாள்
மாணிக்கம் போலாக மணிப்பதுமை தான் துலங்க
பதுமையின் றன் னழகைப் பார்த்தா ளிளங் கொடியாள்
சந்தோஷமாகவேதான் சரீரங்கள் பூரித்தாள்
கோவலனார் முன்னே வந்து கொம்பனையு மேது சொல்வாள்
பேசாத பொற்பதுமை பெண்ணரசி யேதுக்கென்றாள்
பதுமையைப் பேசவைத்தால் பட்டணமே போய்வரலாம்

## (கோவலன் பதுமையைப் பேச வைத்தல்)

அப்போது கோவலனா ராணழக ரேது செய்தார்
புறக்கடைக்கோடி வந்தார் புண்ணியனார் கோவலரும்
பச்சிலையைதான் கசக்கிப் பாங்காகத் தானெடுத்து
நெற்றிக்குத் திலகமிட்டு நேர் விழிக்கு மையெழுதி
கண்ணகியைத் தானினைந்தார் கட்டழகரப்போது
கண்ணைத் திறக்குது பார் கலகலென்று பேசுதுபார்
பொற்பதுமை சொல்லுகிறது பூவையரைத்தான் பார்த்து
ஆசை தந்த மாதகியே அன்புக் கிசைந்தவளே

அடி ஓட்டிவிடு ஓட்டிவிடு ஊரைவிட்டு காதவழி
இஞ்சிவிற்குஞ் செட்டிமகன் இனிதாய் நடப்பானோ
மஞ்சள்விற்குஞ் செட்டிமகன் மனது போல் நடப்பானோ
அண்ணன் வருமளவும் ஆளடிமை யுந்தனுக்கு
தமையன் வருமளவுந் தானடிமை யுந்தனக்கு
என்று சொல்லிப் பொற்பதுமை யிருக்கிற வேளையிலே

### (பொற்பதுமை மாதகியை அடித்தல்)

வேந்த னந்த கோவலர்க்கு விடைகொடுத் தனுப்பாததால்
வாய்திறந்து மாதகியும் வார்த்தையொன்றுஞ் சொல்லாததால்
அப்போது பொற்பதுமை ஆங்காரக் கோபமுடன்
ஜவளிப்பிரம்பெடுத்து ஜாடுதுபார் மாதகியை
கொத்துப் பிரம்பெடுத்து மாறி மாறி யடிக்குதுபார்
எழுந்தாலொரு குத்தும் விழுந்தா லோருதையும்
குத்துக் குழக்கு ரத்தம் கொப்பளித்துத் தா னுமிழ்ந்தாள்

### (கோவலரை ஊருக்கு அனுப்புதல்)

வர்த்தகனைத்தான் பார்த்து வடிவழகா போய்வாரும்
ஊருக்குப் போய்வாரும் உத்தமரே கோவலரே
என்ன அப்போது கோவலனார் அந்தப்புரந்தாண்டி
அந்தப்புரந் தாண்டி ஆணழகர் வாராரே
சித்தமுகச் சாவடிக்குச் சீராக வாராரே
தாதியரைத் தாம்பார்த்து தனஞ்சயனார் கோவலரும்
நித்திரை போறாரே நேரானகோவலரும்
அப்போ தரிவையரும் அன்ன மருந்தவென்று
போசன மண்டபத்தே போய்ப் புகுந்தான் மாதகியும்
போற்றளிகை யுற்றனரும் புசித்து இருந்தாளே

### (கண்ணகி சாபமிடலும் பதுமை இறத்தலும்)

அப்போது கண்ணகியா ளாரணங் கேது செய்தாள்
அஞ்சனத்தைப் போட்டு மவ ளாராய்ந்து பார்க்கலுற்றாள்
மையுருக மையுருக மையழகு தோணுகுது
அனுமாரு மங்கதரும் ஆரணங்கு முன்னே வந்தார்
மாதகிக்குப் பதுமைசெய்து வாரார்காண் கோவலனார்
என்று சொல்லி அஞ்சனத்தி லின்பமுடன் தோற்றுகுது
அப்போது கண்ணகியா ளாணரங்கு என்ன செய்தார்
கைமுறித்துச் சாபமிட்டாள் கட்டழகி மங்கையரும்
பத்தினியாள் சாபமிடப் பதுமை வாயடைத் தங்கே
செத்து மடிந்தது சிவலோகஞ்சேர்ந்தது காண்

அப்போது மாதகியா ளாரணங்கு மோடி வந்து
பதுமையைத் தான் பார்த்து பாவை யிளங்கொடியாள்
செத்துக்கிடக்கிறதை தேன்மொழியாள் கண்டு விட்டாள்
கோபம் பிறந்துமேதான் கொம்பனையாள் தானெழுந்து
கரகரவென்றுதான் சுழற்றிக் பூமியின் மேலே யடித்தாள்
அதுபொடியாகப் போச்சுது பொற்கொடியாள் முன்பாக
அப்போது மாதகியா ளாரணங்கு தானெழுந்தாள்
தாயா ரந்த வசந்தமாலை தையலருகில் வந்து
என்னடி மகளே யென்று இளங்கொடியைக் கேட்கலுற்றாள்
பதுமையைச் செய்து வைத்துப் பட்டணத்தார் போனார் காண்
அவர் போனதின் பிற்பாடு பொற்பதுமை யிறந்ததுகாண்
என்னை மோசம் பண்ணி யவ ரேகினா ரென்ன செய்வேன்
என்று அழுகையிலே ஏது சொல்வாள் மாதாவும்
அஞ்சாதே மகளே யென்று ஆரணங்கைத் தேற்றியபின்

## (மாதகி இறந்ததாக வசந்த மாலை ஓலையெழுதி கோவலரை அழைத்துவரச் சொல்லுதல்)

தாளிப் பனையோலை தலைப்புறங் காம்பறிந்து
ஈழத்து ஓலையிலே இருபுறங் காம்பரிந்து
முத்துப்பதிந்தது போல் மூன்றுவரி யெழுதுகிறாள்
என்னென்று ஓலையிலே எழுதுகிறாள் வசந்தமாலை
பதுமையும் மாதகியாள் பஞ்சாணை மேலிருந்தார்
சங்கிலி வழியாகச் சர்ப்ப மிரங்கிவந்து
பதுமையை விட்டு வீட்டுப் பாவையைக் கடித்தது காண்
மாண்டுமடிந்தாளே மாதகியாள் பாம்பாலே
எடுப்பாருமில்லை கா ணேந்திழையாள் மாதகியை
ஓலைக் கண்ட நாழிகைக்கு உத்தமரே வரவேண்டும்
கடுகவரவேண்டும் கட்டழகர் கோவலரே
காணாப் பிணமாகக் கட்டழகிதா னிருக்க
என்னாலே யாகுமோ ஏந்திழையைத் தானெடுக்க
நீறு நெருப்பாகி நீர்போக வேண்டுமையா
என்று சொல்லை ஓலையிலே எழுதினாள் வசந்தமாலை
தாதியர்க்குப் பல்லக்குத் தான் கொடுத்து ஏது சொல்வாள்
கோவலர்க்கு ஓலைச்சுருள் கொடுத்தழைத்து வாங்களென்றார்
வாயுவேக மனோவேகமாய் வாரார்கள் தாதியர்கள்
சித்திர முகச் சாவடியிற் சேடியரும் வந்து நின்றார்
அப்போது கோவலனா ராணழகரேது செய்வார்
பல்லக்கின் மேலேறிப் பயணமிட்டுப் போகையிலே
அந்நேர வேளையிலே அரிவையவர்கள் தாம் சூழ்ந்தார்

### (கோவலன் மாதகி இறந்தாளென்று அறிந்து அழுது புலம்பி திரும்புதல்)

பல்லக்கைதான் மறித்துப் பாவையர்க ளோலை தந்தார்
ஓலைச் சுருளை யந்த உத்தமருந் தாம் பார்த்து
கதறி விழுந்தாரே கட்டழகர் கோவலன்
அடி பெண்ணே மாதகியே அரிவையே நீ மாண்டாயோ
சுகந் தந்த மாதகியே தோகையரே மாண்டாயோ
ஆரைச்சதமென்பேன் அன்னியரைத் தஞ்சமென்பேன்
எவரைச் சதமென்பேன் இனியாரைத் தஞ்சமென்பேன்
உன்னை நம்பியிருந்தேன் நட்டாற்றில் விட்டாயே
ஒருவரைப் பறிகொடுப்பா ருலகத்தி லுள்ளபடி
இருவரையும் பறிகொடுத்து ஏனாதியானேனே
கூட்டமரமாய்க் காற்றடித்தால் கொத்தோடே கொம்பசையும்
தனிமரமாய்க் காற்றடித்துத் தவித்துப் புலம்புறேனே
கண்ணகியாள் மாண்டு நீ கணிகையிருக் கொணாதோ
பத்தினியாள் மாண்டு நீ பரஸ்திரி யிருக்கொணாதோ
உத்தமியாள்மாண்டு நீ ஒருத்தி யிருக்கொணாதோ
பரஸ்திரிமாண்டாலும் மெந்தன் பத்தினி யிருக் கொணாதோ
இருவரையும் பறிகொடுத்து இலவுகாத்த கிளியாகி
தலைமேலே கையைவைத்துத் தானழுதுகோவலரும்
கண்ணகியாள் தாதியரைக் கட்டழகர்தானழைத்து
ஐம்பது பொன்னையும் அடைவாகத்தாம் கொடுத்து
பத்தா பத்தினியே பழுது பாட ரத்தினமே
குற்றமற்ற பெண்மயிலே கோவிலிங்கி சீர்மகளே
உற்றுரிமை செய்யவென்று உத்தமன் நானும்வந்தேன்
வந்த விடத்தினிலே வழக்கொன்று உண்டாச்சு
வழக்குகளைப் பற்றறுத்து வருவே னா னுன்னிடத்தில்
என்று தாதிகளைத் தாமனுப்பித் தனஞ்சயனார் வாராரே
தாதியர்கள்போன பின்பு தையலரைத் தாம்தேடி
தலைமேலே கையை வைத்துத் தனஞ்சயனார் வாராரே
ஆசை தந்த மாதகியே அரிவையரே மாண்டாயோ
சுகந் தந்த மாதகியே தோகையரே மாண்டாயோ
என்றைக்குக் காணுவே னான் ஏந்திழையே உன் முகத்தை
என்று சொல்லி கோவலரும் ஏங்கி யழுதுவாரார்
மாதகியாள் அந்தப்புரம் வந்து நின்றார் கோவலரும்

### (வசந்தமாலை கோவலனைக் கொலை செய்யுமாறு கூறுதல்)

அப்போது மாதகியா ளாரணங்கேது செய்தாள்
உண்டு பசியாறி ஒரு சொம்புநீர்குடித்து

தாம்பூலந் தானருந்தி தைய லிளங் கொடியாள்
கூடமஞ்சத்திலே தானிருந்தாள் மாதகியும்
அந்தநேர வேளையிலே ஆணழகர் முன்னே வந்து
கானகத்திலே யனுப்பிக் கழுத்தறுக்க ஆளையிட்டாய்
கறியுஞ் சாத யிலைபோட்டு கழுத்தறுக்க எண்ணங்கொண்டாய்
என்றுசொல்லி கோவலரும் எந்திழையைக் கேட்கலுற்றார்
அப்போது மாதகியாள் அன்பா யெழுந்திருந்து
வசந்தமாலை முன்பாக மயிலனையாள் வந்து நின்று
கோவலன் செட்டியார் கொழுநரும் வந்தாரம்மா
என்ன அப்போது வசந்தமாலை அரிவையருக்கென்ன சொல்வாள்
தாசிவீடு வந்தோர்கள் தலை தப்பி போகிறதோ
வேசி வீடு வந்தவரை வீட்டுக் கனுப்புவதோ
பாதாளக் குழிதோண்டி பக்குவப்படுத்த வேண்டும்
ஈரமண்வெட்டி யிறுகப் புதைக்கவேண்டும்
என்றந்த வசந்தமாலை யெடுத்துரைக்க மாதகியும்
என்னதான் செய்கிறது இப்போது சொல்லு மென்றாள்
அப்போது வசந்தமாலை அரிவை யுவட் கேதுரைப்பாள்
ஆபரணங்க ளுண்டோ அரிவையரே சொல்லுமென்றாள்
ஆரம் மா ஆபரணம் அவரிட மிருக்குதென்றாள்
தட்டிப் பறியுமென்றாள் தையலந்த வசந்தமாலை

## (மாதவி கோவலனிடமிருந்து அனைத்தையும் பறித்துக் கொடுமைப்படுத்துதல்)

அவ்வார்த்தைத் தான் கேட்டு ஆரணங்கு ஒடி வந்து
செட்டியார் முன்பாகத் தேன்மொழியாள் வந்து நின்று
என் கணவர் வர்த்தகரே யெனக் கிசைந்த புண்ணியரே
பார்த்தாப்போல் பார்த்திருக்க பாக்குப்பை தாருமென்றாள்
இந்தாடியென்று சொல்லி எடுத்து மெல்லக் கைகொடுத்தார்
கண்டாப்போல் கண்டிருக்கக் காண்டகத்தைத் தாருமென்றாள்
இதுவோ வெகுபாரமென எடுத்து மெள்ளக் கைகொடுத்தார்
கணவரைபோற் பார்த்திருக்கக் கணையாழி தாருமென்றாள்
உம்மைப்போல் பார்த்திருக்க உருமாலை தாருமென்றாள்
அப்படியேதாம் கொடுத்தா ராணழகர் கோவலனார்
மேலிருக்கும் அங்கவஸ்திரம் மெல்லியர்க்குத் தாருமென்றாள்
கையிலுள்ள குட்டைதனைக் கட்டழகா தாருமென்றாள்
அத்தனையுந்தான் கழற்றி ஆணழகர் கைகொடுத்தார்
உம்மைப்போல பார்த்திருக்க உத்தமரேயெந்தனுக்கு
தாடியும் மீசையுந் தரவேண்டுமென்று சொன்னாள்
கத்தரிக்கோல் கொண்டுவந்து கத்தரித்துக் கைகொடுத்தார்

அத்தையும் வாங்கினா ளரிவை யந்த மாதகியாள்
தலையிலுள்ள குடுமியைத்தர வேண்டுமென்று சொன்னாள்
அதனையுங் கத்தரித்து ஆணழகர்தாம் கொடுத்தார்
அரைஞாண் நீர்ச் சீலை ஆணழகர் தாருமென்றாள்
அத்தையும் வாங்கினா ளரிவை யந்த மாதகியாள்
உந்தன் வடிவழகை எந்தனுக்குத் தாருமென்றாள்
எப்படிக்கு நான்கொடுப்பே னிளங்கொடியே என்னழகை
சூரிகத்திகொண்டு வந்து சுரண்டினாள் பலமாக
பாறையின்மேல் படுக்கவைத்துப் பட்டணத்தார் கோவலரை
கம்பளியால் மூடினாள் கட்டழகி மாதகியாள்
பிடரியிற் கைகொடுத்துப் பிடித்திழுத் தழுத்தினாளே
நாவற் பழம்போலே நலமாய் கறுத்தங்கே
அங்கமது துடித்து ஆவியெல்லாந்தான் பதறி
வேர்வை வழிந்தது மேனியெல்லாம் வர்த்தகர்க்கு
அத்தான் தீர்த்தமென்று அன்பாகத் தானெடுத்து
கெண்டியிலே வைத்தாளாங் கிளிமொழியாள் மாதகியும்
அப்போது கோவலர்க்கு அழகுமிகச் சிந்திடுமாம்
திருப்பதி திம்மனைப்போல் நின்னாராங் கோவலனார்

## (கோவலனைக் கிணற்றில் தள்ளி கொல்லச் சொல்லுதல்)

அப்போது மாதகியா ளாரணங்கு வாராளே
வசந்தமாலை முன்பாக வந்து நின்றாள் மாதகியாள்
எல்லாம் பறித்துக் கொண்டே னிளங்கொடியே தாயாரே
திருப்பதி திம்மனைப்போல் நின்றாண்டி கோவலனும்
அவனை இனியென்ன செய்கிறது ஏந்திழையோ தாயாரே
சிங்கமுகக் கேணியிலே தேன்மொழியே தள்ளுமென்றாள்
அப்படியே நல்லதென்று அரிவையருஞ் சம்மதித்து
கோவலனார் முன்பாக கொம்பனையு மோடிவந்து
முடிமன்னா வடிவழகா முத்துவிற்கும் வர்த்தகரே
கலைமான் சிலையழகா கப்பலோட்டும் வியாபாரி
எக்காலஞ்செல்லுமோ என் கணவா யுனைக் காண
என்னை விட்டு நீ பிரிய எப்படிக்குத்தான் துணிந்தீர்
சிங்கமுகக் கேணியிலேசென்று ஜலம்கொண்டு வந்தால்
அத்தானுட தீர்த்தமென்று அரிவை நான் பார்த்திருப்பேன்
ஆணழகர்கோவலரும் அப்படியே யாகுதென
தாம்புக்கயிறுஞ் சொம்புந் தையலவள் தானெடுத்து
சிங்கமுகக்கேணி யரு கங்கு அவள் கொண்டுவந்தாள்
அறுபது பாகமெனும் ஆழமுள்ள கிணறதர்க்

முப்பதுபாகக் கயிறு மொய்குழலாள் தான் கொடுத்தாள்
ஜலந் தன்னை மொள்ளுமென தையலவள் கைகொடுத்தாள்

## (மாதகி கோவலனைக் கிணற்றில் தள்ளுதல்)

அப்போது கோவலரும் அந்தச் சொம்பில் கயிறணிந்து
கயிறை நழுகவிட்டார் கட்டழகர் கோவலரும்
எட்டவில்லையே கயிறு என்னசெய்வேன் மாதகியே
இறங்கி மொள்ளு மென்கணவா எனக் கிசைந்த புண்ணியரே
நாலுபடி கீழிறங்கி நலமாக் கொள்ளுமென்றாள்
அவர் பிடாரியில் கைகொடுத்து பின்னாலே தள்ளிவிட்டாள்
சிங்கமுகக்கேணியிலே திட்டென்று விழுந்துவிட்டார்
பாறையதன்மேல் மூடிப் பாவையரும் வந்து விட்டாள்
அப்போது கோவலரும் ஆணழகரேது சொல்வார்
பெண்ணே கண்ணே மாதகியே பெண்ணரசே நாயகமே
ஆசை தந்த மாதகியே அரிவையரே மாண்டாயோ
செத்தாலுஞ் சேதமில்லை தேன்மொழியே மாண்டாயோ
மாதகியைத் தானினைந்து வாடிப் புலம்புகிறார்

## (கோவலர் பிழைத்து மறுபடியும் மாதகியிடம் வருதல்)

அப்போது கங்கை அமிழ்ந்ததே பூமியிலே
அவர் ஆவிபோகும் வேளையிலே யாரை நினைக்கலுற்றார்
பத்தா பத்தினியே பழுதபடா ரத்தினமே
குற்றமற்ற மேல் ரதியே கோவிலிங்கி சீர்மகளே
பத்தா நான் மாளுகிறேன் பைங்கொடிக்கு யாருரைப்பார்
உன் புருஷன் மாளுகிறே னுந்தனுக்கு யாருரைப்பார்
நீ பத்தினியு மெய்யானால் பக்கந் துணை வாருமென்றார்
பத்தினியைத் தானினைக்க பார்த்துவிட்டாள் கங்கை யவள்
அரைக் கிணறா யிருந்த ஜலம் முழுக்கிணறாய் பொங்கினதே
அப்போது கோவலரும் ஆணழகர்தாமெழுந்து
மாதகியாள் காலடியை மன்னவனும் கண்டு விட்டான்
காலடியின் சேறதனைக் கட்டழகன் தான்குழைத்து
நெற்றியில் திலகமாக இட்டாரே புண்ணியனும்
மாதகியாள் வீடுதேடி வாராரே கோவலரும்
மாதகியாள் முன்னே வந்து வடிவழக ரென்ன சொல்வார்
சிங்கமுகக் கேணியிலே தேன்மொழியே யெனைத்தள்ளி
மணந் துணிந்து வந்தாயே மாதகியே யென்றுரைத்தார்
அவ் வார்த்தைத்தான்கேட்டு ஆரணங்கு யேதுரைப்பாள்
பணிக்கரை நான் தேடிப் பார்த் தழைக்கப் போனேன்
அவர் நாளைக்கு வாரோமென்று நலமாகத் தானுரைத்தார்

இதுக்குள்ளே வந்தீரே என்னுடைய பாக்கியந்தான்
பஞ்சணைமேலாகப் பாங்குடனே குந்துமென்றாள்
அப்போது கோவலனா ராணழக ரென்ன சொல்வார்
பொழுதேறிப் போகுதே போக வேண்டுஞ் சொர்ணகிரி
நாளேறிப் போகுதடி நடக்கவேண்டும் நாயகியே
வாழ்வுக் குதவாவிட்டால் சாவுக்குதவவேண்டும்
என்று சொல்லிக் கோவலரு மிளங்கொடியைக் கேட்கலுற்றார்
அப்போது மாதகியா ளாரணங்கு நாயகியாள்
தாயார் வசந்தமாலை தையல் முன்னேயோடி வந்து
செத்து மடியவில்லை செட்டிபிள்ளையென்று சொன்னாள்
அப்போது வசந்தமாலை ஆரணங்கேது சொல்வாள்
ஆற்றுவெள்ளம் நேற்றுவந்த தாகையால் தள்ளுமென்றாள்
அப்படியே சம்மதித்து ஆரணங்கு மாதகியாள்

## (கோவலனை மாதகி ஆற்றில் தள்ளிவிடுதல்)

செட்டியார் முன்னேவந்து தேவடியாளேது சொல்வாள்
எக்காலஞ் செல்லுமோ என்முகத்தை நீர்பார்க்க
என் கையாலே ஸ்நானமது கட்டழகா செய்யவேண்டும்
வாருமென்றுசொல்லி வைகைக்குக் கூட்டிவந்தாள்
வைகைக் கரைதனிலே வடிவழகன் றனையிருத்தி
எண்ணெயைக் கொண்டு வந் தின்பமுடன் தான் தேய்த்து
அரைப்புகள் கொண்டு வந்து அன்பாகத் தான் தேய்த்து
ஆற்றிலே முழுகச் சொன்னா ளாரணங்கு மாதகியாள்
இருகரையுஞ் ஜலம்பெருகி ஏகமாய்ப்போகிறதே
எப்படிக்கு நானிறங்கி முழுகுவே னேந்திழையே
ஊனாங் கொடிகொண்டு வந்து உத்தமனைக் கட்டியவள்
ஆற்றி லிறங்குமென்றாள் அரிவை யந்த மாதகியாள்
ஆற்றி லிறங்கினா ராணழகர் கோவலரும்
சுழலி லகப்பட்டார் சுந்தரனா ரப்பொழுது
அடித்துக்கொண்டு போகிறதே ஆற்றிலே கோவலரை
அப்போது மாதகியா ளரண்மனைக்கு வந்து விட்டாள்
ஓரலைக்கு முங்கியே மற்றோரலைக் கெழும்புறதும்
இப்படியே வரும்போது இன்பமாய் கோவலரும்
பெண்ணே கண்ணே மாதகியே பெண்ணரசே மாண்டாயோ
நான்மாண்டால் சேதமில்லை நாயகமே மாண்டாயோ
ஆரணங்கைத் தானினைக்க அழுத்துகிறாள் கங்கையவள்
கட்டுவிட்டு மெய்மறந்து கலகலத்து மேனியெல்லாம்
கூண்டுவிட்டு இவருயிரும் குதிக்குதுபார் ஆறுதனில்
ஆவிபோகும் வேளையிலே யாரை நினைக்கலுற்றார்

பத்தாபத்தினியே பழுதுபடா ரத்தினமே
மாலை பறிபோகுதடி மணவாளன் மாளுகிறேன்
தாலிபறிபோகுதடி தலைவனிங்கே மாளுகிறேன்
கூரைபறிபோகுதடி கொற்றவனார் மாளுகிறேன்
பத்தினியு மெய்யானால் பக்கத்துணை வந்திடுவாய்
கண்ணகியு மெய்யானால் காக்க நீ வாருமென்றார்
அப்போது கங்கை யரிவை யவள் தான்பார்த்து
பத்தினியாள் புருஷன்தன்னைக் கொன்றாலே பாவம்வரும்
என்று ஆற்றி லொதிக்கிவிட்டு அக்கரையில் தள்ளினாளே

## (கோவலன் கண்ணகியிடம் வந்துசேருதல்)

காவிரிப்பூம்பட்டணத்தில் கரையி லொதுக்கிவிட்டாள்
அப்போ கோவலனார் ராணழக ரேதுசெய்தார்
காதடைப்புக்கொண்டு களைப்பாகி விழுந்துவிட்டார்
கண்ணகியைத்தான் னினைக்க காதடைப்பு தீர்ந்ததங்கே
களைசோபந்தான் தெளிந்து எழுந்திருந்தார் கட்டழகர்
கற்கட்டுத் திருக்குளத்தில் கரையருகி லத்திமரம்
அத்திமரத் தோரத்திலே ஆணழகர் வந்திருந்தார்
பூவாத அத்திமரம் பூவாய்ச் சொரியுதங்கே
காயாத மரங்களுமே காய்த்துச் சொரியுதங்கே
பூக்காத மரங்களுமே பூத்துச் சொரியுதங்கே
அத்திமரத்திலே யாணழகன் தானிருந்து
அத்திப்பழந்தான் புசித்து ஆணழகர் வீற்றிருந்தார்
கண்ணகியின் தாதியர்கள் கன்னியர்க ளேழுபேரும்
செப்புக்குடங்கொண்டு ஜலமொள்ள வாரார்கள்
அத்தி மரத்தினுட அதிசயத்தைக் கண்டார்கள்
பூவாத அத்திமரம் பூத்துச் சொரியுதடி
பழமே மிகப் பழுத்து பழமா யுதிருதடி
பாரி மரமேறிப் பழம்பறிப்போ மென்றுசொல்லி
அண்ணாந்து பார்த்தார்கள் அரிவையருட தாதியர்கள்
திருப்பதி திம்மனைப்போல் திசைத் தப்பிவந்ததடி
இந்த மர மதனில் இருக்குதடி திம்மனது
என்ன எல்லாரும் பார்க்கலுற்றார் இன்பமுடன் திம்மனைத்தான்
தலையிறங்கிக் கொண்டு நின்றார் தனஞ்சயரு மப்போது
அதிலே யொரு தாதியவ ளன்பாகத் தான்பார்த்து
குரங்கல்ல குரங்கல்ல கோவலனா ரென்பார்கள்
கண்ணகியாள் தன்னுடைய கணவ னிவ னென்பார்கள்
பத்தினியாள் தன்னுடைய உத்தம புருஷனடி
முடியரசன் வடிவழகன் முத்துவிற்கும் வர்த்தகன்டி

கலைமான் சிலையழகன் கப்பலோட்டும் வர்த்தகண்டி
என்று சொல்லித் தாதியர்க ளேந்திழையா ரோடிவந்தார்
கண்ணகியாள் முன்னேவந்து கைகூப்பித் தெண்டனிட்டார்
மாலையிட்ட வுன்கணவர் மங்கையரே வந்தார்காண்
தாலி தரித்த வுன்றன் தனஞ்சயனார் வந்தார் காண்
கூறை தரித்த நல்ல கோவலனார் வந்தார் காண்
என்றுமிகச் சொல்லையிலே ஏந்திழையாள் தான்கேட்டு
பல்லக்கு தான் கொடுத்தாள் பைங்கொடியா ளப்போது
கட்டுவர் கம்பூஷணமும் கண்ணகியாள்தான் கொடுத்தாள்
அலங்காரஞ் செய்தவரை அழைத்துமே வாருமென்றாள்
அப்போது தாதியர்கள் அன்பாக ஓடிவந்து
அத்தி மரத்திற்கும் ஆணழகர் கோவலரை
தாழ இறங்குமென்றார் தைய லந்தத் தாதியர்கள்
இதனை விட் டம்மணமாய் எப்படி இறங்குவேன்
அங்க வஸ்திரத்தி லொன்று இங்கெடுத்துப் போடுமென்றார்
ஏந்திழையார் வஸ்திரத்தை யெடுத்துமே போட்டார்கள்
அவர் தம்மேலே போட்டுத் தாழஇறங்கிவந்தார்
அந்தக் குளத்திலே அன்பாகத்தாம் முழுகி
ஈரத்துகில் களைந்து இந்திர வர்ணப் பட்டுடுத்தி
நனைந்த துகில் களைந்து நாகரிகப் பட்டுடுத்தி
சிவசிவாவென்றுமே திருநீற்றுக் காப்பணிந்து
அரகராவென்றுமே ஆண்டவனைத் தோத்தரித்தார்
ஆடை யாபரணங்களும் அடங்கலுந் தாமணிந்து
பல்லக்கின் மேலாகப் பட்டணத்தா ரேறினாரே
பல்லக்குத் தானெடுத்துப் பாங்கியர்கள் வாராரே
காவிரிப்பூம்பட்டணத்தில் கண்ணகியா ளந்தப்புரம்
அரண்மனைக் குள்ளாக அவர்க ளிறங்கிவிட்டார்
கோவலனாரு மங்கே கொப்பெனவே தாமிறங்கி
தலைக்கடை திண்ணையிலே தனஞ்சயரு முட்கார்ந்தார்
தாதிக ளோடிவந்து தையலுக்குத் தெண்டனிட்டு
மணவாளர் வந்தாரென்று மங்கையர்கள் தாமுரைத்தார்

## (கண்ணகி கோவலனைக் காணுதல்)

அவ் வார்த்தைதான் கேட்டு ஆரணங்கு கண்ணகியாள்
அவ ரழகைப் பார்போமென்று ஆரணங்கு வாராளே
அலர் தலைக்கூந்தல் அறுபத்து மூன்று முழம்
கண்ணகியாள் கூந்தலது கணக்கு மிதங்களில்லை
கூந்தல் விரித்தாளே கொடியிடையாள் கண்ணகியும்
தேகமெல்லாந்தான் மறைத்து தேன்மொழியும் வாராளே

தலைக்கடை திண்ணை யண்டை தையலவள் வந்து நின்றாள்
கோவலனார் தம்மழகைக் கொடியிடையுந் தான்பார்த்து
என்னை விட்டுப் போனீரே என்ன வரம் பெற்றுவந்தீர்
மாதகியாள் செய்ததெல்லாம் கொற்றவரே செப்புமென்றாள்
கூத்தியார் செய்ததெல்லாம் கொற்றவரே செப்புமென்றாள்
வேசியவள் செய்ததெல்லாம் வேந்தரே செப்புமென்றாள்
வைப்பாட்டி செய்ததெல்லாம் வர்த்தகரே சொல்லுமென்றாள்
தீயா யெரித்திடுவேன் தேன்மொழியாள் கண்ணகி நான்
கல்லாக மண்ணாகக் கரியாகச் செய்திடுவேன்
புல்லாகப் பூண்டாகப் புழுவாகச் செய்திடுவேன்
அவள் செய்த அக்ரமத்தை அரிவையவள் செப்புமென்றாள்

## (கண்ணகி கோவலனுக்காகச் சமைத்தல்)

அப்போது கோவலனா ராணழகர் தாம்பார்த்து
காதை யடைக்குதடி களையாய் வருகுதடி
பசியாடி யெந்தனுக்குப் பற்றிப் பிடுங்குதடி
இளைப்புங் களைப்புந் தீர்ந்தா லெல்லா மெடுத்துரைப்பேன்
தாதியைத் தானழைத்துச் சமையல் செய்யவேண்டு மென்றாள்
அவ் வசனங்கேட்டு ஆணழக ரேது சொல்வார்
தாதி கையாற் சமைத்தால் சாதமுண்ண மாட்டே னென்றார்
பத்தினியாள் நீ சமைத்தால் பட்சணஞ் செய்வே னென்றார்
அப்போது கண்ணகியா ளாரணங் கேதுசொல்வாள்
சுட்டசட்டி தொட்டறியேன் சோற்றுபதந் தானறியேன்
ஆக்க வகை யறியேன் ஆளனுக்குப் போட்டறியேன்
எப்படி சாதந்தா னிதமாகச் சமைத்திடுவேன்
என்று தாதிதனைத் தானழைத்து தையலந்த கண்ணகியாள்
செப்புக்குடமெடுத்து ஜலத்துக்கு வாருமென்றாள்
பத்தினியும் முன்னாலே பாவையரும் பின்னாலே
பவளக்கட்டுத் திருக்குளத்தில் பாவையர்கள் வாராரே
கணைக்கால் ஜலத்திலே கன்னியவள் வந்து நின்றாள்
முழங்கால் ஜலத்திலே மெய்குழலும் வந்து நின்றாள்
அட்டாளுஞ் சொக்கலிங்கம் ஆண்டவரைத் தானழைத்து
மதுரையில் வாழ் சொக்கலிங்கம் மகாதேவரை நினைத்து
அங்கயற்கண் மீனாட்சி அம்மனைத் தானினைத்து
பத்தினியாள் மெய்யானால் பலிக்கவேணு மென் சாபம்
என்று தன் கைப்பெருவிரலால் தண்ணீரைச் சுழற்றிடவே
கட்டை விரல் கொண்டு கங்கையைச் சுழற்றிடவே
செப்புக்குடம் போலே திரண்டது கங்கையது
மாளிகைக் குள்ளாக மங்கையவள் வந்தாளே

சின்ன சம்பாவரிசி தீட்டி யுலையி லிட்டாள்
முத்துப்போல சாதத்தை மொய்குழலாள் தான்வடித்தாள்
நந்தியென்னும் பூசனிக்காய் நாலு விதந்தான் சமைத்தாள்
வாழைக்காய் பொரியலிட்டு வழுதலங்காய்தான் சமைத்தாள்
புடலங்காய்தான் சமைத்தாள் பீர்க்கங்காய் பொரியலிட்டாள்
பத்துவிதக் கறியும் பதினெட்டு பச்சடியும்
எட்டுவிதக்கறியும் இயலான போஜனமும்
அவியல் துவட்டல்களு மானதொரு கூட்டமுதும்
சுற்றமுதுங் கட்டமுதும் சரி கூறாய் தான் சமைத்தாள்
அழகாகத் தான்சமைத்து அடுக்கிட்டு மூடிவைத்தாள்
ஆணழகன் முன்பாக அரிவையவள் ஓடிவந்து
தென்னம்பாளை ஒலைக்கொண்டு தேவியுங் கை கொடுத்தாள்
பாளைகொண்டு பல்விளக்கி ஓலைகொண்டு நா வழித்தார்
தீர்த்தநீர் தான்கொண்டு திருவாயுங் கொப்பளித்து
வசந்த நீர்தான் கொண்டு மதிமுஞ் சுத்திசெய்து
பூசைபண்ணு மண்டபத்தில் புண்ணியனார் வந்து நின்றார்
நாலிரண்டு மந்திமமாய் நடத்தினார் பூசைதன்னை
பூசைமுடிந்தது புண்ணியனார் கோவலர்க்கு

## (கண்ணகி கோவலனுக்கு அன்னமிடுதல்)

வாழை யிலைபோட்டு வட்டித்தாள் சாதந்தன்னை
எட்டுவிதக்கறிகள் இருபத்தோர் பச்சடியாம்
பத்துவிதக்கறிகள் பாங்கான பச்சடியும்
அவிட்டல் துவட்டலது ஆனதெல்லாந் தான்படைத்தார்
வெந்நீரும் நீர்மோரும் விதமாக வைத்தார்கள்
தாதியர்க ளோடிவந்து தனஞ்செயரைதா னழைத்தார்
போசன முண்ணுமென்றார் பொற்கொடிமார் தாதியர்
கூட்டிக் குழப்பியே கொற்றவர் தாமு மப்போ
ஒருவுருண்டைதான் வைத்தா ருத்தமனார் வாய்தனிலே
அப்போது கோவலர்க்கு யார் நினைவு வந்ததுபார்
ஆசை தந்த மாதகியை அரிவையரைத் தாம் நினைத்து
போசன முண்ணாமற் புண்ணியருந் தாமெழுந்து
ஆணையை நான்மறந்து அறியாமல் சாதமுண்டேன்
என்று சொல்லி கோவலரும் மிருந்துவிட்டார் மர்மமாக
அப்போது கண்ணகியா ளாரணங்குதான் பார்த்து
கண்ணகி நான் வேம்பானேன் கைசாதம் வேம்பாச்சோ
பத்தினி நான் வேம்பானேன் பகிர்ந்தசாதம் வேம்பாச்சோ
எடுத்துப் புசியுமென்று இயம்பினாள் கண்ணகியாள்
பத்தினியும் வேம்பல்ல பகிர்ந்த அன்னம் வேம்பல்ல

உத்தமியும் வேம்பல்ல உற்ற அன்னம் வேம்பல்ல
எனக்காசை தந்த மாதகிக்கி அரிவையர்க்குத் தானுமிப்போ
மாதகியாள் தனக்கு மரக்காற் பொன் கொடுக்கவேணும்
கடனுக்கு வழிசொன்னாற் கை சாதமுண்பே னென்றார்
கையிலே காசுமில்லை வர்த்தகஞ் செய்வோமென்றால்
நீ வேசி கடன் கொடுப்பதெப்போ வீட்டுக்கு வாரதெப்போ
பாக்கி பணங் கொடுப்பதெப்போ பஞ்சணை சேர்வதெப்போ
என் கையி லொன்றுமில்லை என்னுடைய புண்ணியரே

## (கோவலன் கண்ணகியின் சிலம்பினைக் கேட்டல்)

உன் காற்சிலம்பு தந்தாயானால் கண்மணியே விற்று வாரேன்
மணிச்சிலம்பு தந்தாயானால் மதுரையிலே விற்று வாரேன்
பொற்சிலம் புகந்தாயானால் பொன்மதுரையிலே விற்றுவாரேன்
செஞ்சிலம்பு விற்றுமே தேவடியாள் கடன்கொடுப்பேன்
காற் சிலம்பைத் தாருமென்று கட்டழகர் கேட்கலுற்றார்
கூடப் பிறந்த தொரு கொடியிடையாள் காற் சிலம்பு
கன்னா னறிந்ததில்லை கடைதெருவிற் போனதில்லை
செட்டி யறிந்ததில்லை தராசில் வைத்து நிறுத்தவில்லை
கொல்லனறிந்ததில்லை குண்டு வைத்து நிறுத்தவில்லை
ஓடாணிதானுமில்லை தேன்மொழியாள் காற்சிலம்பு
திருகாணி தானுமில்லை தேன்மொழியாள் காற்சிலம்பு
எப்படிக்குத் தான்கழற்றி இதமாய்க் கொடுப்பேனென்று
அட்டாளும் சொக்கரையும் அம்மனையுந்தா னினைத்தாள்
மதுரை வாழ் சொக்கர்தனை மனதிலே தானினைத்தாள்
சொக்கர் கிருபையாலே திருகாணி யுண்டாச்சு
ஓடாணி யுண்டாச்சு உத்தமனார் கிருபையாலே

## (கண்ணகியின் சிலம்பு புலம்புதல்)

திருகாணியில் கைபோட்டு தேன்மொழி வாங்கையிலே
வாயைத்திறந்து தான் மணிச்சிலம்பு என்னசொல்லும்
கழற்றாதே கண்ணகியே கணவனுக்குத் தீங்குவரும்
தென்மதுரை போனாரானால் செத்துமடிந்திடுவார்
வடமதுரை போனாலே மாண்டு மடிந்திடுவார்
இந்தப் பயணமது இனி திரும்ப போறதில்லை
மதுரைக்குச் சென்றாலே மறுத்துவரப் போறதில்லை
என்று சொல்லி செஞ்சிலம்பு ஏங்கிப் புலம்புறது
காணாது போலேயல்லோ கண்டுவிட்டாள் கண்ணகியும்
மணிச்சிலம்பு அழுகிறதை மயிலனையாள்தான் பார்த்து

மதுரைக்குப்போனாலே மாண்டு மடிவீரென்று
மாண்டு மடிவீரென்று மணிச்சிலம்பு சொல்ல

### (கோவலனை கண்ணகி மதுரைக்குப் போகவேண்டாம் எனலும் கோவலன் மீறலும்)

கண்ணகி ஆகையால் தென்மதுரை ஆணழகா போகாதீர்
குற்றாலங் குறநாடு கொற்றவரே போய்வாரும்
கும்பகோணம் மாயூரம் குறதேசம்போய்வாரும்
மதுரைக்குப்போகாதீர் மன்னவரே யென்றுரைத்தாள்
அப்போது கோவலனார் ரவளுக் கெடுத்துரைப்பார்
செத்தாலுந் தென்மதுரை சிலம்புவிற்றால் தென்மதுரை
அள்ளவேணுந் திருட வேணு மணிமதுரை சீமையிலே
என் சிலம்பை விற்றாலே யெனுக்குப் பகைவருமோ

### (கோவலன் சிலம்பு விற்கச் செல்லுதலும் கண்ணகி பின்தொடர்ந்து போதலும்)

சிலம்பை மெள்ளவேயெடுத்து செட்டியார் தாமெழுந்தார்
மதுரைக்குப் போவேனென்று வர்த்தகருந் தானெழுந்தார்
நான் கூட வாரேனென்று நாயகியும் பின்தொடர்ந்தாள்
உன் கூடவாரேனென்று உத்தமியுங் கூறலுற்றாள்
தனந்தேடிப் போமிடத்தே தார்குழலே வரலாமோ
புகழ்மதுரை போய்ச்சேர்ந்து பொழுதிருக்க வாரேன்டி
நீ இங்கே இருவென்று யெழுந்தாரே கோவலரும்
அப்போது கண்ணகியா ளழகுபெண்ணா ளேதுசொல்வாள்
நீ போறவிடத்துக்கு நான் கூட வாரேனென்றாள்
நான்கூடவா றேனென்று நலமாக வெழுந்திருந்தாள்
மாளிகைக் குட்புகுந்து மங்கையர்க்குச் சொல்லிவிட்டு
தீவிரமாய் வாரோமென்று தெருத் திண்ணை வந்து நின்றார்
இனி யிருந்தால் வருவாளென்று எழுந்து நடக்கலுற்றார்
பையெடுத்துத் தோளில்வைத்து பட்டணத்தார் வாராரே
காதவழிதூரங் கட்டழகர் வாராரே
அந்தப்புரம்போன ஆரணங்கு கண்ணகியும்
தாதியர்க்குச் சொல்லிவிட்டு தையலரும் வந்து நின்றாள்
வர்த்தகனைக் காணாமல் மங்கையவ ளென்னசொல்வாள்

### (கண்ணகி மாதவி உருவை தோற்றுவித்தல்)

காதவழிதூரம் கடுகெனவே போறாளே
அவ்வழியிற் குத்துக்கல் லங்கென்று நின்றிடவே
என் கணவன் போறவழி ஏதென்று குத்துக் கல்லை

இந்தக்கல் மாதகி போ லிருக்க வேணுமென்று
ஐந்தெழுத்தும் பாவனையும்அரிவைபோல் தோணவேணும்
பத்தெழுத்து பாவனையும் பாதைபோல் தோணவேணும்
திருக்கடையூர்பட்டணத்தில் தெய்வ ரம்பை மாதகிபோல்
அழகு துலங்கவேணும் ஆனந்தங் கொஞ்சவேணும்
வடிவு துலங்கவேணும் வடிவழகு கொஞ்சவேணும்
என்றுமிகக் கண்ணகியா ளிட்டாள் பெருஞ்சாபம்
பத்தினியாள் சாபமிடப் பாவையர்போல் தோணுதங்கே
இதைக் காணாதது போலக் கண்டுவிட்டார் கோவலரும்
அடி ஆசைதந்த மாதகியே அரிவையரே எங்குவந்தாய்
சுகந்தந்த மாதகியே சுந்தரியே எங்கு வந்தாய்
திருக்கடையூர்தானிருந்து தேன்மொழியே வந்ததென்ன
உன்னுடைய கடனுக்காக உத்தமியாள் சிலம்பெடுத்து
காற்சிலம்பைத் தானெடுத்து கனமதுரை விற்கபோறேன்
வழிமறிக்க வந்ததென்ன மங்கை யிளங்கொடியே
காலுமிகக் கடுக்க குறுவடியும் கொப்பளிக்க
வெயிலிலுங் கானலிலும் மெல்லியரே வந்ததென்ன
வெயிலிலுங் கானலிலும் மெல்லியரே வந்ததென்ன
முத்தான வாய்திறந்து உத்தரவு சொல்லும் பெண்ணே
வாயைத் திறக்கவில்லை மணிப்பதுமை யப்போது
தாளைத் திறக்கவில்லை தனிவார்த்தைப் பேசவில்லை
ஏண்டி பெண்ணே பெண்மயிலே இத்தனைக் கோபமென்ன
என்று கட்டித் தழுவினார் கனிவாயை முத்தமிட்டார்
கட்டி அணைக்கையிலே கன்னியுடதேகமது
சேர்ந்து அணைக்கையிலே தேன்மொழியாள் தேகமது
வெய்யிலிலே வந்ததினால் மெல்லியுட தேகமது
கறுத்து உடல்வெதும்பிக் கல்லா வுறுத்துதென்று
சொல்லியே கோவலருந் தோகையைப் பாத்தாரே
கண்ணகி சாபமிடக் கல்லாகத்தோணுது

## (கண்ணகியை கண்டு உடன் அழைத்துச் செல்லுதல்)

முடிவேந்தர் போலழகன் முத்துவிற்கும் வியாபாரி
கண்ணகியைப் பார்த்துவிட்டார் கட்டழகர் கோவலரும்
பேரஞ்செய்யப் போமிடத்தே பெண்ணாள் வரலாமோ
வீட்டிலே உன்னைவிட்டு மெல்லியரே வந்தேனே
வீட்டைவிட்டு ஏன் வந்தாய் மெல்லி யிளங்கொடியே
என்னொத்த வர்த்தகர்க ளென்னை மதியார்கள்
ஒத்த வர்த்தகர்கள் சற்று மதியார்கள்
ஆனாலும் வாடியென்று ஆணழகர் முன் னடந்தார்

ஆணழகர் முன்னடக்க அரிவை யவள் பின் னடக்க
காடு மலைகளெல்லாங் கடுகனவேதான் நடந்து
சில்லென்ற காடுஞ் செடியும் வனந் தாண்டி
வாரா ரிருவர்களும் வனமாய் வனந் தாண்டி
மதுரைக்குச் சேர்ந்திருவர் வருகின்ற வேளையிலே

## (கண்ணகிக்குத் தண்ணீர் தாகமெடுத்தலும் கோவலன் தண்ணீர் எடுக்கச் செல்லுதலும்)

பத்தாபத்தினியும் பழுதுபடா ரத்தினமும்
குற்றமற்ற மேல் ரதியாள் கோவிலிங்கி சீர்மகளும்
வர்த்தகரைப் பார்த்து மயிலணையா ளேதுசொல்வாள்
செட்டியாரைப் பார்த்து தேன்மொழியா ளேதுசொல்வாள்
காதவழி நடந்து கால்களெல்லாம் நோகுதையா
தூரவழி நடந்து தொடைகளெல்லாம் நோகுதென்றாள்
எடுத்தடி வைப்போ மென்றால் இனிநடக்கக் கூடவில்லை
தண்ணீரது தாகம் தாங்க முடியவில்லை
நீரின் மேல் தாகம் நிற்கக் கூட முடியவில்லை
தண்ணீரைக் கொண்டு வந்தால் தையல் பிழைத்திடுவேன்
என்று சொல்லிக் கண்ணகியா ளேந்திழையுங் கேட்கையிலே
பெண்சாதி கால்விலங்கு பிள்ளை யொரு சுள்ளாணி
கட்டுச்சாத மூட்டையுங் கைக் கன மென்பார்கள்
அப்படியே யாச்சுது ஆரணங்கே யிப்பொழுது
இந்த வனததிலே நீரெங்குண்டு உண்டிடுவோம்
என்று சொல்லி கோவலனார் இட்டுக் கொண்டு வாராராம்
எட்டி வனச்சோலையிலே ஏந்திழையைக் குந்தவைத்தார்
தன் கையிற் செம்பெடுத்துத் தண்ணீர் மொள்ள வாராரே

## (கள்வர்கள் கண்ணகியை மடக்குதல்)

அந்நேர வேளையிலே அவ் வனத்தில் வாழுகின்ற
எதிர் காட்டுக் கள்ளரவ ரேழுபேர் வாரார்கள்
வெட்டிக்களைப் பறிக்கும் குல வேடர் வாரார்கள்
குத்திக் களைபறிக்கும் குலவேடர் வாரார்கள்
இருண் டெழுந்த சோலையில் திரண்டெழுந்த சூரியன் போல்
பச்சை மலை தனிலே பவளம் முளைத்ததுபோல்
கண்ணகியாள் தன்னிடத்தில் கள்ளர்கள் வாரார்கள்
ஆறுபேர்வந்து நின்றார் ஆரணங்கு முன்பாக
ஆறுபேருக் கிளையோனான தொருக் கள்ளனவன்
அத்திமரமேறி ஆள்வரவைப் பார்க்கலுற்றான்
அப்போது கள்ளர்கள் ஆரணங்கைத் தான்பார்த்து

ஆபரணந் தாருமென்று அங்கவளைக் கேட்கலுற்றார்
என்னவென்று கேட்கலுற்றா ரேழுபேர் கள்ளர்களும்
உன்னைக் குத்தி யெறிந்திடுவோங் கோடாலிக்கம்பாலே
வெட்டி யெறிந்திடுவோம் வீரமணி வாளாலே
என்று சொல்லிக் கள்ளரவ ரெதிராக வந்து நின்றார்

## (கண்ணகி ஆபரணங்களைக் கழற்றிக் கொடுத்தல்)

அப்போது கண்ணகியா ளாரணங்கு தான் பார்த்து
உச்சியிலே தானிருந்து உள்ளங்கால் தான்தொடங்கி
பூண்டிருந்த ஆபரணம் பொட்டெனவேதான் கழற்றி
தாலி தவிர எல்லாந் தான் கழற்றி யொன்றாக
கள்ளருக்கு முன்னே வைத்தாள் கண்ணகியாள் பத்தினியும்
எடுத்துக்கொண்டு போங்க ளென்றா ளேந்திழையு மப்போது

## (தாலியைக் கள்வர் கேட்டல்)

மரத்தின் மேல் நின்றவனும் மற்றவரைத் தான் பார்த்து
செட்டியுடை மையிலே சேர்ந்த பொன்மெத்த வுண்டு
வர்த்தகனுடை மையிலே மாற்று குறைச்சலுண்டு
பத்தரைமாற்றுப் பசும் பொன்னாந் தங்கமது
சூரியன்போலாகத் துலங்குது மங்கிலியம்
மங்கிலியந் தன்னை நீங்கள் வாங்கிவர வேண்டுமென்றான்
அவ்வார்த்தைதான் கேட்டு ஆறுபேரோடி வந்து
மாங்கிலியந் தாருமென்று கள்ளர்கள் கேட்கலுற்றார்

## (கண்ணகி கள்ளர்களுக்குச் சாபம் கொடுத்தல்)

அப்போது கோபம் பிறந்தது கொம்பே ரிடையாட்கு
ஆறுபேர் கள்ளர்களை அரிவையுந்தான் பார்த்து
இவர்கள் குத்துகல்லாகப்போகக் கொடுத்தாளே சாபமது
பத்தினியாள் சாபம் பலித்ததுகா ணப்பொழுது
உத்தமியாள் சாபம் உடனேபலித்தது காண்
கட்டாக நின்றார்கள் கள்ளர்க ளாறுபேரும்
மரத்தில் மேல் நின்றவனும் வெளவாலாய் தொங்கவென்று
வெளவாலாய் தொங்கவென்று மயிலனையாள் சாபமிட்டாள்
அப்படியே தொங்குகிறான் அத்திமரந்தனிலே

## (கோவலர் கண்டு விபரம் கேட்டல்)

அந்த சமயத்திலே ஆணழகர் வாராரே
செம்பு ஜலங்கொண்டு தீவிரமாய் வாரார்காண்
அண்மையிலே வந்து நின்றா ராணழகர் கோவலனார்

ஆறுபேர்கள் அருகிருக்கக் கண்டாரே
இவர்கள் ஆரடிபெண்ணே யென்று அரிவையரைக் கேட்க
இந் நாட்டுக் கள்ள ரிவ ரேழுபேர் வந்தார்கள்
ஆபரணங் கோட்டாரந்த ஆறுபேர் கள்ளர்களும்
வெட்டி யெறிவோமென்றார் வேடர்க ளாறுபேரும்
அஞ்சி பயந்து நான் ஆபரணந்தான் கொடுத்தேன்
தாலியைவேண்டு மென்று தனஞ்சயரே தாம்கேட்டார்
கள்ளர்க ளாறு பேரைக் கல்லாய்ச் சமைத்துவிட்டேன்
என்று சொல்லிக் கண்ணகியும் எடுத்துரைத்தாள் கோவலர்க்கு

### (கோவலன் கல்லாய் சமைத்தக் கள்வர்களை எழுப்பக் கூறுதல்)

அப்போது கோவலனார் அரிவைதனைப் பார்த்து
எழுப்பிவிடச் சொன்னாராம் இன்பமுள்ள வர்த்தகரும்
அப்போது கண்ணகியா ளரிவையவள் ஏது செய்தாள்
கல்லாய் சமைத்தவரைக் கடுகெழுப்பிவிட்டாள்
வௌவாலய் தொங்குவோனை மாது எழுப்பிவிட்டாள்
எப்போதும் போல் எழுந்தார்கள் கள்ளரெல்லாம்
கண்ணகியாள் முன்னே வந்து கட்டழகர் தெண்டனிட்டு
ஆறுதப்பு நூறுபிழை அடியார்கள் செய்ததெல்லாம்
கோடிப் பிழைசெய்தாலுங் கொண்டணைக்க வேண்டுமம்மா
என்ன இப்போது கண்ணகியா ளாரணங் கேதுசெய்தாள்
உப்பாவ வொட்டாக உத்தமரே போங்களென்றாள்
அப்படியே யாகுறோ மென்றவர்களும் போனார்கள்
இப்படிக்குச் சாபமது தந்தாளாங் கண்ணகியாள்
மதுரைக்கு வாரார்கள் மன மகிழுந் திருவருமாய்

### (சொக்கநாதர் ஆலயத்தைக் காணுதல்)

மதுரைக்குச் சமீபமது வருகிற வேளையிலே
நாலு புறக் கோபுரமும் நன்றாகத் தோற்றுகுது
அருமையாய் தோற்றுகுது ஆருடைய கோவிலென்றாள்
அடி பிட்டுக்கு மண் சுமக்கும் பேயாண்டி சொக்கரடி
சொக்கரது ஆலயம் தோகையரே யென்றுரைத்தார்
அங்கயற் கண் மீனாட்சி அம்மனுட ஆலயந்தான்

### (காளி கோவிலைக் காணுதல்)

அப்பாலே தோற்றுவது யாருடைய ஆலயங்காண்
கூடலழகி பெருங்காளி கோவிலடி மாதரசே
அப்பாலே தோற்றுவது அங்கொரு குன்றதுபோல்

இம்மையிலே நன்மை தரு மீசருடைய கோவிலடி
அப்பாலே தோற்றுவது அங்கொரு குன்றதுபோல்
அக் குன்று ஆருடைய ஆலயங்காண் சொல்லுமென்றாள்
அப்போது கோவலரும் அன்பாக ஏதுரைப்பார்
திருப்பரங் குன்ற மென்னும் சிக்கந்த மலை யென்றும்
சொல்லுவார் கண்ணகியே சுப்ரமணியர் கோவிலடி

## (பாண்டியர் அரண்மனையைக் காணுதல்)

முன்புறம் ஆலயம் போல் பின்புறம் அரண்மனைபோல்
காணுதிது ஆருடைய கட்டங் காண் சொல்லுமென
அப்போது கோவலரும் அன்பாக ஏதுரைப்பார்
ஆறாயிரம் பாண்டியர்கள் அணிந்திரளார் மன்னவர்கள்
பாண்டியர்க ளாலயங்கள் பைங்கிளியே யென்றுரைத்தார்
இப்படிக்குத் தான் பேசி இருவரும் வரும்பொழுது

## (கண்ணகி விநாயகரிடம் ஆருடங்கேட்டல்)

கள்ள விநாயகர் முன் கண்ணகியா ளோடி வந்து
கை கூப்பித் தெண்டனிட்டுக் கண்ணகியாள் கேட்கலுற்றாள்
சிலம்பு கொண்டு வாராரே செட்டிபிள்ளைக் கோவலனார்
அவர் சிக்கு சிலுவில்லமல் திரும்பி வருவாரோ
அழும்புக ளில்லாமல் அவர் வந்து சேர்வாரோ
என்று சொல்லி ஆருடம் ஏகதந்தரைக் கேட்க

## (விநாயகர் மௌனமாக இருத்தல்)

வாயைத் திறக்கவில்லை மறுவார்த்தைப் பேசவில்லை
தாளைத் திறக்கவில்லை தனி வார்த்தைப் பேசவில்லை
மௌனமாய் தானிருந்தார் மங்கையர்க்கு முன்பாக
கோபம் வருகுதங்கே கொடியிடையாள் கண்ணகிக்கு
அடிமடியில் கைபோட்டு அம்பலத்தி லிழுக்கலுற்றாள்
சொல்லுகிறோமென்று மவர் சொல்லுவார் விநாயகரும்
இந்தப்பயணம் எழில் மதுரை போவாரானால்
மாண்டு மடிந்திடுவார் வரப்போற தில்லை யென்றார்
துரும்பெடுத்து மேற்போடுந் துன்மார்க்க மதுரையது

## (விநாயகர் வரப்போகும் ஆபத்தைக் கூறுதல்)

கொடியெடுத்து மேற்போடுங் கொடிதான தென்மதுரை
நிந்தை யிட்டுத் தலையைவெட்டும் நீதியிலாதென்மதுரை
இந்த மதுரை தமக் கிவர் போனால் பெண்ணரசே
திரும்பி வரப்போறதில்லை தேன்மொழியே உன் புருஷன்

பாவி தட்டான் தாயாதி பாண்டியனோ பங்காளி
மூத்த தமயனவன் முதற் றமயன் பிள்ளையென்று
ஒப்பாரிக்கொண்டு உறவுசொல்லித் தானழைப்பான்
வாத்தியா ரடித்தனால் வனம்போன பிள்ளையென்று
செப்பி யழைத்துச் சிலம்புதனைப் பறித்து
கட்டின கட்டோடே கச்சேரிகொண்டு போவான்
நீதிகேளாப் பாண்டியர்கள் நிற்கத் தலைவெட்டி வைப்பார்
பழிகார மதுரைத்தேடி பட்டணத்தார் போனாலே
இறந்து மடிந்திடுவார் இனி திரும்பப் போறதில்லை
பின்னே வரும் காரியத்தை முன்னே நான் சொல்லிவிட்டேன்
என்று விநாயகரும் எடுத்துரைத்தார் கண்ணகிக்கு

## (கண்ணகியின் வாக்கை மீறி கோவலன் வண்டியூர்பட்டணம் செல்லுதல்)

அவ் வசனந்தான்கேட்டு ஆரணங்கு வாராளே
கோவலனார் முன்பாகக் கொம்பனையாள் வந்து நின்று
விநாயகர் சொன்னதெல்லாம் விபரம் விபரமதாய்
கட்டழகர் கோவலற்கு கண்ணகியாள் தானுரைத்தாள்
கண்ணகியாள் சொன்னசொல்லு காதுவழி கொள்ளாமல்
எழுந்து நடந்தாராம் இன்பமுள்ள கோவலனார்
மதுரையைத் தாண்டி தேடி வாராரே கோவலனார்
வண்டியூர்பட்டணமே வந்தார்க ளப்போது

## (கண்ணகி அடைக்கலப்படுத்துமாறு கூறுதலும் கோவலனின் பதிலுரையும்)

கண்ணகியு மேதுரைப்பாள் கணவரைத்தான் பார்த்து
இப் பெரிய பட்டணத்தில் என்னை யடைக்கலமாய்
மதுரைப் போய் வருமளவும் வைப்பீரென வுரைத்தாள்
கோவலனு மப்போது கொம்பனைக்கு ஏதுரைப்பான்
யார்வீடு தேடி யுன்னை அடைக்கலமாய் வைப்பேண்டி
வேளாளர்வீட்டில் வைத்தால் வேலைகள் மெத்தவுண்டு
முப்போகம் விளைந்தாலும் உப்புக்கு நெல்லில்லை யென்பார்
இன்னம் யார் வீடுதேடி வைப்பே னரிவையே யுந்தனையும்
பள்ளர்கள் வீடுதேடிப் பாவையரே வைப்பேனோ
ஏருழும் வேளையிலே நாற்று நட வாருமென்பார்
யார் வீடுதேடி யுன்னை அடைக்கலமாய் வைப்பேன்டி
கோமுட்டி வீடுதேடி கொம்பனையே வைப்பேனோ
கடைவிற்கும் வேளையிலே கடைபெருக்க வாடி யென்பார்

சேணியர் வீடுதேடி தேன்மொழியே வைக்கட்டுமா
பசியார் யிருக்குதடி பாவை யிளங்கொடியே
தறிபோடும் வேளையிலே நூலிழைக்க வாடி யென்பார்
செட்டியார் வீடுதேடி தேன்மொழியே வைக்கட்டுமா
அரைக்க மிளகிடுவார் கால்கணக் கெழுதி வைப்பார்
கறிக்கு மிளகிடுவார் கால் கணக்கெழுதி வைப்பார்
விருந்தாளி வந்தாலே வருந்தி யுலை வைக்க வொட்டார்
யார் வீடு தேடியுன்னை அடைக்கலமாய் வைப்பேன்
இப்பெரிய பட்டணத்தில் இடைச்சி பாருமென்றாள்
இடைச்சி வீட்டில் வைத்தாலே இளைப்பானால் மோர் குடிப்பாய்
இளைப்பானால் மோர்குடிப்பாய் பசியானால் மோர் குடிப்பாய்
என்று மிகவுரைத்து இருவரும் வாராரே

## (ஆச்சி அங்கு வருதல்)

வைகைக் கரையோரம் வந்து நின்றா ரிருவருமாய்
அந்த சமயத்தில் ஆச்சியவள் சிற்றிடைச்சி
தயிர் பானை தானெடுத்துத் தையலவள் வாராளே
அட்டாளுஞ் சொக்க ரென்று ஆச்சி மனதி லெண்ணி
அடிவணங்கி தெண்டனிட்டாள் அப்போது கோவலரை

## (கோவலன் ஆச்சியிடம் தன் விபரம் கூறுதல்)

தெண்டனிட்ட ஆச்சிதனைக் கண்டந்தக் கோவலனார்
சிவ சிவா என்று திருச் செவியில் கையை வைத்தார்
அரகரா வென்று அருஞ்செவியில் கையை வைத்தார்
யாரென்று நீ பணிந்தாய் அரிவை யிளங் கொடியே
சொக்கரல்ல சொக்கரல்ல சொர்ணகிரி செட்டிப் பிள்ளை
சுூத்தியார் கடனுக்காகக் கொண்டவள் சிலம்பெடுத்து
கொண்டவள் சிலம்பெடுத்துக் கூடலிலே விற்க வந்தேன்
என்பேரு கோவலனார் என் சுூத்தி மாதகியாள்
சுூத்தியார் மாதகியாள் கொண்டவள் கண்ணகியாள்
சுூத்தியார் கடனுக்காகக் கொண்டு வந்தேன் சிலம்பை
இந்த மதுரையிலே இன்பமுடன் விற்க வந்தேன்
என்று மிகச் சொல்லையிலே எழுந்தாளே ஆச்சியம்மாள்

## (கோவலன் கண்ணகி இருவரும் ஆச்சி வீட்டிற்கு வருதல்)

அந்தப்புரத்துக்கு அரிவை யவள் வாராளே
ஆச்சிக்கு முன்பாக அழகுள்ள கோவலரும்
கண்ணகி பின்பாகக் கடுக னெவே வாரார்கள்
ஆச்சியம்மாள் தன் மனைக்குள் அன்பாகத்தாம் நுழைந்து

தலைக் கடைத் தின்னையிலே தனஞ்செயனா ருட்கார்ந்தார்

## (கோவலன் பசியாற கண்ணகி உணவு சமைத்தல்)

கண்ணகியாளைப் பார்த்துக் கட்டழகரேது சொல்வார்
பசி யிளப்பைத் தீர்த்துவிட்டால் பட்டணம் போய்வாரேன்
செஞ்சிலம்பு விற்று நான் தேன்மொழியே வாரே னென்றான்
அவ்வார்த்தை தான் கேட்டு ஆரணங்கேது சொல்வாள்
கையிலே காசுமில்லை கடன் தொடுப்பா ராருமில்லை
எப்படிக்குச் சாதம் நான் இதமாக்ச் செய்வே னென்றாள்
ஆச்சியிடத்தில் வாங்கி அரிவையரே சமையல் செய்யும்
மதுரைக்குப் போய்த் திரும்பி வந்தவுடனே கொடுப்பேன்
என்றவுடனே கண்ணகியும் இடைச்சியிடம் ஏதுரைப்பாள்
என் கணவர் கோவலரும் இளைப்பா யிருப்பதினால்
அமுதுபடி தந்தாலே ஆணழகர் கோவலர்க்கு
சமையல் செய்து போடுகிறேன் தையலரே ஆச்சியென்றாள்
அப்படியே நல்லதென ஆச்சியவள் தானெழுந்து
அமுதுபடி காய்கறிகள் அத்தனையுந்தான் கொடுத்தாள்
பானை கழுவி பனி நீருலை வார்த்து
முத்துப்போல் சாதம் வடித்தாள் மொய் குழலும்
நந்தி யென்னும் பூசனிக்காய் நாலுவிதக் கறி சமைத்தாள்
வாழக்காய் பொரியலிட்டு வழுதலங்காய் தான் குழம்பு
பீர்க்கங்காய் பொரியலிட்டாள் புடலங்காய்தான் குழம்பு
பத்து விதக் கறியும் பதினெட்டுப் பச்சடியும்
எட்டு விதக் கறியும் இருபத்தோர் பச்சடியும்
புத்துருக்கு நல்ல செய்யும் பொன் போல் சிறுபருப்பும்
அத்தி விறகொடித்து தித்திக்கப் பால் காய்ச்சி
இத்தனையுஞ் செய்து வைத்தாள் ஏலக் கருங் குழலாள்

## (கோவலன் உணவு உண்டு உறங்குதல்)

பாளை கொண்டு கை கொடுத்தாள் பைங்கிளியா ளப்போது
பாளை கொண்டு பல் விளக்கி ஓலை கொண்டு நாவழித்து
தீர்த்த நீர் வாங்கியவர் திருமுகஞ் சுத்தி செய்து
பூசை பண்ணு மண்டபத்தில் புண்ணியனார் வந்திடவே
வாழை யிலை போட்டு வடித்தாள் சாதமது
அருங்கறியும் போஜனமும் அன்பாகத்தான் படைத்தாள்
வெந்நீரும் நீர்மோரும் விதமாக வைத்தாள் காண்
போஜனங்க ளுண்டு பொடி யிட்டுக் கைத் திமிறி
தாம்பூலமுங் கொடுக்கத் தான் தரித்தார் கோவலரும்
கல்யாணப் பாய்போட்டாள் கண்ணகியாள் பெண்ணரசி

பட்டுப் பாய்போட்டாள் படுத்தாரே பட்டணத்தார்
ஆச்சியம்மையருகாக அருங்கிளியும் போய்ப்படுத்தாள்

## (கண்ணகியை ஆச்சியிடம் அடைக்கலம் கொடுத்தல்)

அந்தநேர வேளையிலே எந்நேர மாகுதப்போ
வெள்ளி முளைக்குது விடி கோழி கூவுறது
அந்நேர வேளையிலே ஆணழகர் தாமெழுந்து
கண்ணகியைத்தான் பார்த்துக் கட்டழக ரேதுரைப்பார்
மதுரைக்குப் போய் வாரேன் மங்கையரே விடை கொடடி
ஆச்சி வசத்தி லென்னை அடைக்கலமாய் வையுமென்றாள்
கண்ணகியைக் கை பிடித்துக் கட்டழகரேது சொல்வார்
ஆச்சியரைத் தானழைத்து அன்பாக ஏது சொல்வார்
மாட்டுப்பால் பாக்கியத்தை வைத்திருக்கும் மாதாவே
ஆட்டுப்பால் பாக்கியத்தை ஆண்டிருக்கும் மாதாவே
மதுரைக்கு யான் போய் வருமளவுந் தாயாரே
பெற்றபிள்ளைப் போலாகப் பேணி வளர்த்திடுவாய்
கண்ணகியாள் மகள் போல் காத்து வளர்த்திடுவாய்
பத்தினியை உன் மகள்போல் பார்த்தே யிருந்திடுவாய்
உத்தமியை உன்மகள் போல் உகந்து நீ காத்திடுவாய்
ஆயனைக் காத்தது போல் ஆச்சி நீ காத்திடுவாய்
மாயனைக் காத்ததுபோல் மாதாவே காத்திடுவாய்
நான் தென்மதுரை நா னேகித் திரும்பி வருமளவும்
அடைக்கல மென் மனைவி ஆச்சியே உன்னிடத்தில்
முக்கா லடைக்கலங் காண் மொய்குழலு மென்றுசொல்லி
கண்ணகியைக் கைபிடித்துக் காரிகையின் கைகொடுத்தார்
நல் வாக்கு நீ கொடடி நாயகமே எந்தனுக்கு
போய் வாரு மென்றாளே பொற்கொடியாள் கண்ணகியும்
ஆச்சியரைத் தா[illegible]ர்த்து ஆணழகர் கேட்டலுற்றார்
போய்வாரேனெ[illegible] சொல்லிப் புண்ணியருங் கேட்கலுமே
போய் வாருமெ[illegible]ளே பொற்கொடியா ளப்போது

## (கோவலர் கண்ணகிக்கு அடையாளஞ் செய்து வைத்தல்)

கண்ணகியு மோடிவந்து கட்டழகர் முன்னே நின்று
உனக்கோ ரடையாள மின்பமுடன் செய்யுமென்றாள்
மரப்பெட்டி கொண்டுவந்து மன்னவனாரேது செய்தார்
திரு விளக்கேற்றி வைத்தார் சீரான பெட்டியிலே
மாங்கனியும் மல்லிகைப்பூ வைத்தாராம் பெட்டியிலே
தேங்கனியுங் கொண்டுவந்து சீராக வைத்தாராம்
சந்தனத்தை வைத்தாராம் தானுரைத்துப் பெட்டியிலே

நான் மதுரைக்கு நான் சென்று வருமளவும் மங்கயரே
தேங்கா யுடையாது சொம்புஜலம் குறையாது
மல்லிகைப்பூ வாடாது மாங்கனியு மழுகாது
சந்தன முலராது தைய லிளங் கொடியே
மதுரைக்கு நான் சென்று வருமளவும மங்கையரே
சுகமாய் வருவேனானால் தோகை யிளங்கொடியே
வைத்த அடையாளம் மாறாமல் தானிருக்கும்
மாண்டு மடிவேனானால் மங்கையரே நீர்கேளும்
திருவிளக்கு நின்றுவிடுந் தீர்ந்துவிடுஞ் சந்தனமும்
தேங்கா யுடைந்துவிடும் செம்புஜலந்தான் குறையும்
மாங்கனி யழுகிவிடும் மல்லிகைப்பூ வாடிவிடும்
பிளந்து இருபிளவாய் பெட்டி யுடைந்துவிடும்
இதுதா னடையாளம் ஏந்திழையே யுந்தனுக்கு

## (வீட்டை விட்டு வெளியில் வரும்போது தீய சகுனம் தென்படல்)

மதுரைக்கு நான்போக மனதில்லை என்று சொல்லி
சிலம்பெடுத்து தோளில்வைத்து செட்டிபிள்ளை கோவலனார்
அப்போ பல்லி பலபல வென்னும் பனைமரத்தி லாந்தை சீறும்
மனையைவிட்டு வெளியில் வர வாசற்படி தலையிற் றட்ட
தலைவாசல் வருகையிலே தலைப்பாகை தவறிவிழும்
அந்தச் சகுனம் விட்டு ஆணழகர்வெளியில் வந்தார்
குட்டியிட்ட கறும்பூனை குறுக்காக வந்ததங்கே
அந்தச் சகுணந் தப்பி அப்பாலே வாராரே
எரி முட்டை தலைமொட்டை யெதிரில் வரக் கண்டாராம்
ஓரிகுறுக்காச்சு ஒற்றைப் பார்பா னெதிரானான்
வாழாக் குமரியவள் மீளா நெருப்பெடுத்தாள்
எண்ணெய்க் குடமெடுத்து யொதிரில் வரக்கண்டாராம்
ஏணியுஞ் சாணானும் எதிரில்வரக் கண்டாராம்
கட்டோலை கைபிடித்துக் கணக்கன் வரக் கண்டாராம்
ஆண்கோட்டான் பெண் கோட்டா னலறி யழக்கண்டாராம்
அசரீரி வாக்காக ஆரணங்கு புலம்புகிறாள்
கைம்பெண் பறைச்சியவள் கதறி யழக் கண்டாராம்
மதுரைக்குப் போகாதே மாண்டு மடியாதே
தென்மதுரை போகாதே செத்துமடியாதே
என்று சொல்லி அப்பறைச்சி நின்று புலம்புகிறாள்
ஒற்றைக் குரலிட்டு ஓங்கி யழுகிறாளே
அத்தனையுந் தள்ளிவிட்டு ஆணழகர் வாராரே

## (மதுரையில் சிந்தாமணி தாசி வீதிக்கு வருதல்)

மதுரையைத்தான் தேடி வருகின்றவேளையிலே
மதுராபுரிபட்டணத்தை மன்னவருங் கண்டுவிட்டார்
இப்பெரிய மதுரையிலே யென் சிலம்பை விற்க வேண்டும்
என்று மதுரைக்குள்ளாகவேதான் வடிவழகன் போய் நுழைந்தார்
அரண்மனைக ளாஸ்தான மானழகர் கண்டு விட்டார்
கோட்டைகளும் கொத்தளமுங் கோவலனார் கண்டு விட்டார்
நாலுபக்கந் தென்மதுரை நடுவில் பிள்ளையார்கோவில்
கோயிலின்முன்பாகக் கோவலனார் வந்து நின்றார்
மாது காற்சிலம்பதனை மதுரையிலே விற்றாலே
தேரடியுந் தூணுந் தங்கத்தேர் கவசந்தானுந் தங்கம்
வண்டி யுருளை தங்கம் தான் வாகனமுந் தங்கம்
செங்கல்லால் கோவில்தனை கருங்கல்லால் கட்டி வைப்பேன்
நெருங்குகின்ற வீதியிலே நெடுங்காத மோட்டி வைப்பேன்
அபிஷேகஞ் செய்வதற்கு அபரஞ்சி தானளிப்பேன்
இப்படிக்குப் பிராத்தனைகள் செய்தாரே கோவலனார்
சிந்தாமணித் தாசிவீதி செட்டிபிள்ளை வாராரே

## (கோவலன் சிலம்பினை விற்க வீதிதோறும் செல்லுதல்)

சிலம்போ சிலம்பென்று தெருவீதி சுற்றிவாரார்
தென்மதுரை வீதியெங்கும் சிலம்புவிலை கூறுகிறார்
ஏற்றவிலை கொடுத்து இச்சிலம்பைக் கொள்ளுவா ருண்டோ
பச்சை சிலம்புதனைப் பாருலகிற் கொள்வாருண்டோ
மெச்சும்பசும்பொன் சிலம்பை விலைகொடுத்து வாங்குவீரோ
உத்தமியாள் காற்சிலம்பை ஒண்டொடியீர் வாங்குவீரோ
பத்தினியாள் காற்சிலம்பை பாவையரே வாங்குவீரோ
தென்மதுரைப் பெண்காள் விலை தெரிந்து வாங்குவீரோ
மேல் மதுரைப் பெண்காள் விலை தெரிந்து வாங்குவீரோ
வில்லாச் சிலம்பதைதனை விலைகூறி வந்தேனென்று
வீசி நடந்தாரே வீதி வழி கோவலரும்
மனையில் வெள்ளானைகட்டி வாழ்ந்தது போதும்
வேசி மருந்தாலே வெந்து நொந்ததும் போதும்
தாசி மருந்தாலே தான் வாழ்ந்ததும் போதும்
மூவாயிரங் கப்பல் முழுகியே போனதினால்
கப்பல் மூவாயிரமுங் கரைதட்டிப் போனதினால்
வர்த்தகந் தட்டினதால் மதுரையில் சிலம்பு கொண்டு
தெருவில் விலை கூறி வந்தேன் சிலம்புதனைக் கொள்வீரோ

என்று இப்படியாகக் கோவலரும் இன்பமுடன் கூறிவாரார்
கூறியே வாராரே கோவலச் செட்டியாரும்

**(சிந்தாமணி தாசி சிலம்பு கேட்டலும் சிலம்பு புலம்புதலும்)**

சிந்தாமணி தாசியவள் தேன்மொழியா ளோடிவந்து
வர்த்தகரை யவள் பார்த்து வாருமென்று தானழைத்தாள்
மாளிகைக் குள்ளாக வந்து நின்றார் கோவலரும்
சிலம்புதான் தாருமென்று தேன்மொழியாள் கேட்டாளே
எடுத்துக்கொடுக்கவே எடுத்தாராங் கோவலரும்
வாய்விட் டழுகுதங்கே மயிலனையாள் பொற் சிலம்பு
பத்தினியாள் காற்சிலம்பு பரஸ்திரிக் கேற்காது
உத்தமியாள் காற்சிலம்பு உந்தனுக்கு ஏறாது
வாய்விட் டழுகு தங்கே மயிலனையாள் காற்சிலம்பு

**(சிந்தாமணி தாசி சிலம்பு வேண்டாம் எனல்)**

உடுத்துநீர் கட்டுமென்றாள் ஏந்திழையாள் சிந்தாமணி
இந்தச் சிலம்புமே எந்தனுக்கு ஏற்காது
ஆரார்போடவேணும் ஆரணங்கு காற் சிலம்பை
மீனாட்சி போடவேணும் மிக்க சொக்கர் பார்க்கவேணும்
வள்ளியவள் போடவேணும் வடிவேலர் பார்க்கவேணும்
பார்வதிபோடவேணும் பரமசிவன் பார்ககவேணும்
திருமாதுபோடவேணும் திருமாலும் பார்க்கவேணும்
இந்தச் சிலம்புமே எந்தனுக்கு ஏற்காது
எடுத்துமெள்ள கட்டு மென்றா ளேந்திழையா ளப்போது
ஆனைமேற் பணம்போட்டு அனுப்புவே னுந்தனுக்கு
இந்தச் சிலம்பெடுத்து ஏகுவீ ரரண்மனைக்கு
என்றந்த சிந்தாமணி யெடுத்துரைக்கக் கோவலரும்
தாதியவள் நீ கொடுக்க தன வாணிகன் வாங்குவானோ
ஆர்போட வேணுமோ அவர்களதைப் பார்க்க வேணும்
அவ ளரண்மனையைவிட்டு ஆணழகர் வாராரே
கோவிலிங்கி வீதிதனில் கோவலனார் வாராரே
சிலம்போ சிலம்பென்று செட்டிபிள்ளை வாராரே

**(கோவிலிங்கி சிலம்பினைச் சரிசெய்ய தட்டானிடத்தில் கொடுத்தல்)**

ராஜகன்னிதன் சிலம்பை நாயகியாள் முன்பொழுது
வஞ்சிபத்தன் கைதனில் மயிலனையாள் தான் கொடுத்தாள்
சொட்டை நிமிர்த்திக் கொண்டு வாவென்று சொன்னாளே
அவனெடுத்துக் கொண்டு போ யரிவையுட காற்சிலம்பை

சொட்டை நிமிர்த்தியவன் வெண்காரந்தான் பூசி
ஆரைச் சுவர்மீதில் வைத்தானே வஞ்சிபத்தன்

## (கருடனின் குஞ்சுகளை தட்டானின் மனைவி கொல்லுதல்)

வஞ்சிபத்தன் புறக்கடையில் புளியமரத்தடியில்
கூண்டுகட்டிக் கருடனுமே குஞ்சுகள் தான்பொரித்து
குஞ்சுக் கிரைதேடப் போச்சுது கருடனது
அந்தச் சமயத்திலே ஆரணங்கு முத்துமாலை
அரைக்கீரை தானரிய வந்தாள் புறக்கடையில்
அதிலே யொருமுள்ளு அன்பாகத் தைத்து தங்கே
ஐயோ சிவனேயென்று அழுது கொண்டு வீடுவந்தாள்
கருடனுக் கிடங் கொடுத்துக் காலுக் கிடராச்சு
என்று சொல்லி அழுதுகொண்டு இருந்தாளே வீட்டினிலே
பள்ளிக்கூடம் படித்துப் பாலகர்கள் வீடுவந்தார்
அப்போது முத்துமாலை அழுதுகொண்டு தானிருந்தாள்
அழுதுகொண் டிருக்கிறதை அவர்களும் பார்த்தார்கள்
ஏனம்மா அழுகிறா யென்று சொல்லி கேட்டார்கள்
கீரை யரியப்போனேன் காரைமுள்ளு தைத்தப்பா
வேதனைகளாச்சு தென்று விளம்பினாள் முத்துமாலை
அந்த விசேஷமது ஆணழகர் தாம்கேட்டு
அந்த மரத்திலே ஆணழகர்தானேறி
கருடனுட கூண்டைக் கலைத்துவிட்டார் பிள்ளைகளும்
கருடன் குஞ்சுமுட்டைகளைக் கடுகவே தாமெடுத்து
கழுத்தை முறித்ததனை கடக்கவே விட்டெறிந்தார்
முட்டைதனை யெடுத்து பொட்டனவே தாமுடைத்தார்

## (கருடன் சிலம்பினைத் தூக்கிச் செல்லுதல்)

அந்த சமயத்தில் அன்பான கருட னது
குஞ்சுக் கிரைதேடிக் கொப்பெனவே வந்ததங்கே
ஆரெடுத்தார்க ளென்று அழுது கொண்டு பார்க்கையிலே
வஞ்சிபத்தன் தன்னுடைய மைந்தர் செய்த வேலையென்று
பழிக்குப்பழி வாங்கப் பார்த்தது கருடனது
காத்துக்கொண்டிருந்த தங்கே கனமாக கருடனது
அப்போது வஞ்சி பத்தன் அவளுடைய செஞ்சிலம்பை
ராசகன்னி செஞ்சிலம்பை நலமாகக் காயவைத்தார்
இதுதான் சமயமென்று இன்பமுடன் கருடனது
காலாலே கவ்விக் கொண்டு கடுக வருகுதங்கே
ஏழுகடலுக் கப்பால் இருக்கு மொரு நாகமது
ஆயிரங்கண்ணி புத்து ஐந்து தலை நாகமது

ஐந்து தலை நாகமிடம் அவள் சிலம்பை ஒப்புவிக்க
பாம்பதுவும் பத்திரமாய் பாங்காக வைத்தங்கே

### (தட்டானிடம் கோவிலிங்கி சிலம்பைக் கேட்டல்)

இப்படிக்குத் தானிருக்க இன்பமுட னந்நேரம்
ராசகன்னி கோவிலிங்கி நற்சிலம்பைக் கேட்கலுற்றாள்
வஞ்சிபத்தனை யழைத்து மணிச்சிலம்பைக் கேட்கலுற்றாள்
தாறேனென்று தாறேனென்று தட்டானுஞ் சொல்லறுற்றான்

### (பாண்டியர்கள் தட்டான் வஞ்சிபத்தனைத் தண்டிக்கத் தீர்ப்புச் சொல்லுதல்)

அந்தநேரவேளையிலே ஆறாயிரம் பாண்டியர்கள்
வஞ்சி நல்லபத்தன் தன்னை வரவழைத்தா ரப்போது
சீக்கிரமா யித்தினத்திற் சிலம்பு தந்தா லாச்சுதுகாண்
எங்கே யிருந்தாலு மதை யெடுத்து வராவிடிலோ
நாளைய தினத்திலே நலமாக வுன்னைத்தான்
ஆனையின் காலாலே அஞ்சா திடறிடுவோம்
என்று மிகத் தீர்ப்பு இன்பமுடன் கொடுத்தார்
அப்போது வஞ்சிபத்தன் ஆணழகன்தானும் வந்து
மனையாளைத் தானழைத்து வஞ்சிபத்த னேதுரைப்பான்
என்னடி பெண்ணே நீ யிளங்கொடியே முத்துமாலை
அந்த செஞ்சிலம்பு தன்னாலே தீங்குவந்து நேர்ந்ததடி
நாளயதினத்திலே நலமாக பாண்டியர்கள்
ஆனையின் காலிலே ஆணழகன் கொல்வோ மென்றார்
நீ மஞ்சளிழுந்தாய் மண மிழுந்தாய் பூவிழுந்தாய்
இனி என்ன சுகமென்று ஏந்திழையாளுக் குரைத்தான்
தாலியறுத்து மந்தத் தையலவள் விட்டெறிந்தாள்
இப்படிக்கு தானிருக்க இன்பமுட னந்தி நேரம்

### (கோவிலிங்கி வீதிக்குக் கோவலனார் சிலம்பு விற்க வருதல்)

அந்தசமயத்தில் ஆணழகர் கோவலனார்
சிலம்பு விற்றுவாராரே தென்மதுரை கோவலரும்
ராஜகன்னி வீதியிலே நலமாகக் கூறிவாரார்
சிலம்பென்று சொல்லி மணியழகர் கூறிவாரார்
மணிச் சிலம்பென்று சொல்லி மணியழகர் கூறிவாரார்
பத்தினி காற்சிலம்பைப் பார்த் திதைக் கொள்வாருண்டோ
என்றுமவர் கூறையிலே ஏந்திழையாள் தான்கேட்டாள்
குரலோசை இவ்வழகு கொற்றவனா ரெவ்வழகோ
மணிக்குரலே யிவ்வோசை மணீயழக னெவ்வழகோ

சிலம்பு விற்குன்னவனைத் தேடி யழையு மென்றாள்
தாதிமா ரோடிவந்து தனஞ்செயரைத் தானழைத்தார்

### (கோவிலிங்கி கோவலனிடம் விபரம் கேட்டல்)

அழைத்த குரல்கேட்டு ஆணழுகர் வாராரே
மூன்றாம் படிதளத்தில் வந்து நின்றார் கோவலரும்
முத்துமனை தான்கொடுத்தார் மெத்தனவே தாதியர்கள்
ராஜகன்னி கோவிலிங்கி நலமா யெழுந்திருந்தாள்
முத்துத் திரை வளைந்து மெல்லி யிளங்கொடியாள்
வர்ததகனைத்தான் பார்த்து மயிலனையாள் கேட்கலுற்றாள்
எந்தவூ ரெந்தநாடு எனக்கறியச் சொல்லுமென்றாள்
அப்போது கோவலனா ராணழகரேது சொல்வார்
கஞ்சிகொண்டு மதவடைக்குங் காவிரிப்பூம் நன்னாடு
காவிரிப்பூம்பட்டணத்துக் கரை துறைக்கு வந்தார்கள்
மாநாய்கன் செட்டியென்றும் மாச்சோட்டான் செட்டியென்றும்
முத்துச் செட்டி பெற்றெடுத்த முடியரசன் கோவலனும்
என்பேரோ கோவலனாம் என் கூத்தி மாதகியாள்
கூத்தியார் மாதகியாள் கொண்டவள் பேர் கண்ணகியாள்
தாசிக் கடனுக்காகத் தனிச் சிலம்பு நானெடுத்தேன்
மெல்லி சிலம்பெடுத்து மேன்மையுடன் விற்கவந்தேன்
என்று சிலம்பெடுத்து ராசருட தேவி கையிற்றான் கொடுத்தார்

### (கோவிலிங்கி தன் மகளின் கால்சிலம்பு என்பதை அடையாளங் காணுதலும் சிலம்பு வேண்டாமெனலும்)

ராஜகன்னி வாங்கையிலே நலமாகப் பொற்சிலம்பு
அமிர்தஞ் சொரிகிறது ஆரணங்கு நாயகிக்கு
கண்ணீரைச் சோரவிட்டுக் கதறி யழுகிறாளே
தவமாய் தவமிருந்து தையலரைப் பெற்றெடுத்தேன்
வரமாய் வரமிருந்து வைகையிலே ஒப்படைத்தேன்
அன்று கண்டேன் மகளை இன்று கண்டேன்சிலம்பை
என்று அழுதுபுலம்புகிறா ளாரணங்கு ராசகன்னி
கோவலரைத் தான் பார்த்து கொப்பனையா ளேது சொல்வாள்
பாம்பெடுத்து மேற்போடும் பழிகார தென்மதுரை
இந்த மதுரையிலே இறந்துபோக நாளாச்சோ
ஆனையின்மேல் திரவியத்தை அனுப்புகிறே னும் மனைக்கு
அத்தையெடுத்து முந்த நரண்மனைக்குப் போய் சேரும்
இந்தச் சிலம்பிதுதா னேற்காது எந்தனுக்கு
நாகரத்னச் சிலம்பிதுதான் நாயகிக் கேற்காது
எடுத்து மெள்ளக் கட்டுமென்று ஏந்திழை தானுரைத்தாள்

அப்போது கோவலனார் ஆணழகர் வாராரே
ராஜகன்னி வீடுவிட்டு நலமாக வாராரே

## (கோவலர் வாத்தியாரைக் காணுதலும் வாத்தியார் பசியாற்றலும்)

வேத வாத்தி பள்ளிக்கூடம் விதமாகத்தேடிவாரார்
அவரழகைத் தான்பார்த்து அந்த வாத்தியா ரெழுந்தார்
அட்டாளுஞ் சொக்கரென் றடியணிந்து தெண்டனிட்டார்
சொக்கரல்ல சொக்கரல்ல சாதியிலே செட்டிப்பிள்ளை
சூத்திக் கடனுக்காகச் சிலம்பெடுத்து விற்கவந்தேன்
என்று மவர்சொல்லையிலே இயலான வாத்தியாரும்
பள்ளிக்கூடத்திலே பாங்காகக் குந்த வைத்தார்
பாலும் பழமு மவர் பாங்காகத்தான் கொடுத்து
பசியாறுமென்று சொல்லி பசி யிளைப்பைத் தீர்த்துவிட்டார்
தாம்பூலந்தான் கொடுத்தார் தனஞ்செயனார் கோவலர்க்கு
தாம்பூலந் தரித்துக்கொண்டு தானிருந்தார் கோவலரும்

## (வாத்தியார் அறிவுரையும் கோவலன் மீறுதலும்)

அப்போது வாத்தியார் ஆணழக ரென்னசொல்வார்
பழிகார மதுரையிலே பட்டணத்தா ரேன் வந்தீர்
கொடும்பாவி மதுரையிலே கோவலரே யேன் வந்தீர்
நிந்தை யிட்டுத் தலைவாங்கும் நீதியில்லா மதுரையிலே
அநீதமாய் மாள வந்தீ ராணழகர் கோவலரே
காராம்பசுவை விற்றுக் கட்டழகா வுந்தனுக்கு
சூத்தியார் கடனடைக்கக் கொற்றவரே நான் தாரேன்
அத்தை யெடுத்து முந்த னரண்மனைக்குப் போய்வாரும்
என்று இவ்வார்த்தை தாம்கேட்டு எழுந்தாரே புண்ணியரும்
பள்ளிக்கூடத்தைவிட்டு பாங்காகத் தாமெழுந்தார்

## (வஞ்சிபத்தன் பிள்ளைகள் சதி செய்தல்)

வஞ்சிப்பத்தன் பிள்ளைகள் வகையாகத் தாமெழுந்து
வாத்தியாரைப் பார்த்து வகையுடனே சொல்வார்
ஒன்றுக்குப்போறோ மென்று கேட்டார்கள் பசங்க ளங்கே
போங்களென்று அனுப்பிவிட்டார் புழுகான வாத்தியாரும்
அரண்மனையைத்தேடி ஆணழகர்வாரார்கள்
தாயுந் தகப்பனையுந் தாம்பார்த்து என்னசொல்வார்
சிலம்பெடுத்தொருவன் தென்மதுரை விற்கவந்தான்
கன்னல் வில் மாறனவன் காவிரிப்பூம் வர்த்தகனாம்
சிலைபோல் வடிவழகன் செட்டிபிள்ளை கோவலனும்

சிலம்புகொண்டு வாரானே செட்டி பிள்ளை கோவலனும்
அவனை யனுப்புகிறேன் ஆணழகா வுன்னிடத்தில்
மூத்த தமையனவன் முதற்றமையன் பிள்ளையென்று
ஒப்பாரிகொண்டு உறவு கொண்டு நீயழைத்து
செஞ்சிலம்பைதான் பறித்துத் திருடனென் றிறுககட்டி
ராஜர்முன்னே கொண்டுவந்தால் நலமாக வெட்டிவிடுவார்
நீ தப்பிப் பிழைத்திடுவாய் தந்தையே யென்று சொன்னார்
என்றவர்க்குச் சொல்லிவிட்டு இன்பமுடன் ஓடிவாரார்
கோவலரைக் கண்டு குழந்தைக ளென்ன சொல்வார்
வஞ்சிபத்தன் வீதிக்கு மன்னவரே போவீரானால்
சீக்கரமா யுந்தனுக்குச் சிலம்பு விற்றுப்போகுமென்றார்
என்று மவர்சொல்லி இன்பமுடன் போனார்கள்

## (கோவலன் வஞ்சிபத்தன் வீதிக்கு சிலம்புவிற்க வருதலும் வஞ்சிபத்தனின் நயவஞ்சகமும்)

அப்போது கோவலனார் அவ் வீதிவாராராம்
மன்னன் சிலம்பென்ற சத்தம் வஞ்சிபத்தன் செவிகேட்டு
திண்ணையை விட்டுமவன் திட்டென்று ஓடிவந்தான்
கட்டியமுகிறானே கட்டழகன் கோவலரை
மூத்த தமையனவன் முதற் றமயன் பிள்ளையப்பா
வாத்தியார் தாமடித்து வனவாசம்போன பிள்ளை
காடுபோன பிள்ளையப்பா வீடு வந்துசேர்ந்தாயென்று
ஒப்பாரி கொண்டுமே உறவுகொண்டு தானழைத்தான்
அவனுடைய மாளிகைக்கு அழைத்துபோனான் வாஞ்சிபத்தன்
வட்டமனை போட்டு வர்த்தகரை குந்த வைத்தான்
இளைப்பா யிருக்கிறீரே இளம்நீர் புசியுமென்றான்
பசியா யிருக்கிறீரே பாலமிர்தம் புசியுமென்றான்
போஜனஞ் சமையுமென்றான் புண்ணியனார் கோவலர்க்கு
அப்போது கோவலனா ராணழக ரேதுசொல்வார்
சைவமடி மங்கையரே தைய லிளங் கொடியே
உன்னுடைய மாளிகையி லுண்ணே னென்றார் கோவலரும்
பத்தன் தவலை செம்புதான் கொடுத்துத் தனஞ்சயனார் கோவலர்க்கு
அமுதுபடி காய் கறிக ளன்பாக வையுமென்றான்
அப்படியே நல்லதென்று ஆணழகர் தாமெழுந்து
புறக்கடையில் நீரேகிப் புண்ணியரே கோவலரே
சமையல்செய்து நீர் யொசித்து தனஞ்செயரே வாருமென்றான்
அப்படியே நல்ல தென்று ஆணழகர் தாமெழுந்து
காற்சிலம் வெடுக்கையிலே கண்டுவிட்டான் வஞ்சிபத்தன்
இந்தச் சிலம்பிதுதா னிங்கே வைத்து போமென்றான்

## (கோவலர் வஞ்சிபத்தன் வீட்டில் உணவு உண்ணுதல்)

சிலம்பை யவன் கைகொடுத்து செட்டி பிள்ளை வாராரே
போசனமும் காய்கறிகள் பொங்கிவைத்துக் கோவலரும்
பூசைமுடித்துக் கொண்டார் புண்ணியனார் கோவலனார்
வாழை யிலைபோட்டு வட்டித்துகொண்டாராம்
காய்கறி பதார்த்தங்கள் கட்டழகர் வைத்துக்கொண்டு
போசனமுண்டு பின்பு போகிறார் தாமெழுந்து
வஞ்சிபத்தன் முன்னாக வந்து நின்றார் கோவலரும்
சிலம் பெனக்குத் தாருமெனக் செட்டிபிள்ளைக்கேட்கலுற்றார்

## (வஞ்சிபத்தன் கோவலரை கயிற்றால் கட்டி பாண்டியன் முன் கொண்டு நிறுத்துதல்)

கம்பளி கயிறு தேடி கட்டியுருட்டுமென்றார்
பலத்தக் கயிறு தேடிப் பக்குவமாய் கட்டினாராம்
மலட் டுலக்கைக் கொண்டுவந்து மண்டைமேலே தானடித்தார்
உதிரம் பெருகுது பா ருத்தமனார் கோவலருக்கு
சிலம்பை யவனெடுத்துச் செட்டியாரைக் கொண்டு வாரான்
ராஜருட கச்சேரிக்கு நலமாக கொண்டுவந்தான்
சொக்கா ரென் றெல்லவரும் சொல்லியே தென்னிட்டார்
அட்டாளுஞ் சொக்கரென அடிபணிந்து தெண்டனிட்டார்

## (வஞ்சிபத்தன் பொய்மொழி)

அப்போ வஞ்சிபத்தன் ஆணழுக னேது சோல்வான்
சிலம்பெடுத்து போனதொரு திருடனைக் கொண்டுவந்தேன்
அவன் காலில் விழுந்தீர்களோ கனங்குலைந்த ராஜர்களே
என்ற கம்மாளன் சொற்கேட்டு கலங்குகிறார் பாண்டியர்கள்
அப்போது சொக்கலிங்கம் ஆண்டவரேது செய்வார்
வெண்ணீறு தானெடுத்து விமலருந் தூவி விட்டார்
வஞ்சிபத்தன் சொற்கேட்டு மதிமயங்க வேண்டுமென்று
அட்டாளுஞ் சொக்கலிங்கம் ஐயரவர் தூவி விட்டார்
அறிவுகெட்டு மதிகுலைந்து ஆணழகர் பாண்டியர்கள்
வஞ்சிபத்தன் சொல்லதனை மன்னவர்கள் கேட்கலுற்றார்
சிலம்புகொண்டு போனதொரு திருடனகப்பட்டான்
எட்டுநாள்முன்பாக எடுத்துக்கொண்டு போனவன் தான்
ஆரைச்சுவர்மேலே காயவைத்த பொற்சிலம்பை
ஒட்டுப் பார்த் துளவிருந்து உங்கள் சிலம்பெடுத்து
கம்மாளன் வீதியிலே ஊசி விற்க வந்தான் காண்
என்று இவன் சொல்லையிலே இயலான பாண்டியர்கள்

## (காளிக் கோவிலில் கோவலனை பலி கொடுக்கச் சொல்லுதல்)

இக்கணமே அக்கரையாய் இழுத்துக்கொண்டு போய்நீங்கள்
காளியம்மன் கோவிலிலே கடுகப் பலிவாங்கி விடுங்கள்
என்று சொல்லப் பாண்டியர்கள் எல்லோருங் கேட்டிருக்க
அருகிருந்த மந்திரிகள் அப்போது தாம்கேட்டு
சபையைவிட்டு தாமெழுந்தார் சற்குண மந்திரிகள்
உத்தியோகம் வேண்டாமென்று உத்தமர்கள் தாமெழுந்தார்
தேசத்தி லில்லாத தீர்ப்பது செய்தீரே
ஞாயத்தைக் கேட்டு நலமாகத் தீர்ப்பு செய்யும்
ஆக்கிசினைகள் செய்ய வேண்டாம் அழகான புண்ணியரே
இத்தீர்ப்பு ஏற்காது எங்களுக் கென்று சொல்ல
அப்போது பாண்யடியர்க ளமைச்சருக் கேதுரைப்பார்
திருடிய கோவலர்க்கு தீர்ப்பு கொடுங்களென்றார்

## (பாண்டியனின் மந்திரிகள் கோவலரை விசாரித்தல்)

அப்போது கோவலரை அமைச்சருந் தாமழைத்து
ஆருடைய திச் சிலம்பு ஆணழகா சொல்லுமென்றார்
என்னுடைய பொற்சிலம்பு என்றாராங் கோவலரும்
சூத்திக் கடனுக்காக கொடி மதுரை விற்கவந்தேன்
கள்ளன் திருட னென்று கட்டிக் கொண்டுவந்தானே
என்றுமே சொல்லி எடுத்துரைத்தார் கோவலரும்
அப்போது வஞ்சிபத்த னமைச்சரைப் பார்த் தேதுரைப்பான்
ராஜகன்னிதான் கொடுத்த நற்சிலம்பென்று சொன்னான்
அப்போது மந்திரிக ளாலோசனைகள் பண்ணி
சேவகரைத் தாமழைத்து செஞ்சிலம்பு கை கொடுத்தார்
கோவிலிங்கி தன்னிடத்திற் கொண்டுபோய் நீங்களுந்தாம்
இச்சிலம்பு தன்னதென்றும் இல்லையென் றுரைப்பதுவும்
சேதி யிரண்டிலொன்று தெரிந்துவாருஞ் சேவகரே
என்ன அப்படியே கொண்டு வந்தா ராணழகர் சேவகர்கள்
ராஜகன்னி தைதனிலே நலமாகத் தந்தார்கள்
அப்போது ராஜகன்னி அச்சிலம்பைப் பார்த்துரைத்தார்
இது ஆருடைய பொற்சிலம்போ அறியேனான் காவலரே
என்னதல்ல வென்று சொல்லி எறிந்துவிட்டாள் ராஜகன்னி
அப்போது காவலர்கள் அக்கணமே கொண்டு வந்து
மந்திரிகள் முன்பாக வைத்தார்கள் சேவகர்கள்
அவள் சிலம்பல்லவென்று ஆரணங்கு தானுரைத்தாள்
மாதுசிலம்பை யொளித்த வஞ்சிபத்தனுக்கு

ஆக்கினைசெய்து அன்னை யனுப்பச் சொன்னாள்
என்று இப்படிக்குச் சொன்னார்க ளியலான சேவகர்கள்
அப்போது மந்திரிக ளாணழகர் கோவலரை
சிலம்பை யவர் கை கொடுத்துச் சீக்கிரம் யேகுமென்றார்
வஞ்சி பத்தனைக் கொண்டுபோய் வதைசெய்து போடு மென்றார்
அப்போது வஞ்சிபத்தன் ஆணழகனேது சொல்வான்
சத்தியஞ்செய்ய வேண்டுந் தனஞ்செயனே என்றானாம்
அப்போது மந்திரிகள் ஆலோசனைகள் செய்து
பாம்புப் பிடாரனையும் பாம்பெடுத்து வாருமென்றார்
அப்போ பிடாரர்களும் அரவுகளைக் கொண்டு வந்தார்
புதுக்குடத்தில் போட்டடைத்தார் வொட்டென்வே பாம்புகளை
மஞ்சள் சீலைகட்டினார்கள் மன்னவர்கள் பொற்குடத்தை
பொன்னரிசி போட்டார்கள் பொட்டனவே பொற்குடத்தில்
அந்தக்குடத்திலே ஆணழகர் கோவலரை
கையிட் டெடுமென்றார் கட்டழகர் மந்திரியார்
அப்போது கோவலனார் ஆரை நினைக்கலுற்றார்
பத்தாபத்தினியே பழுதுபடா ரத்தினமே
காற்பதுவும் மெய்யானால் காக்க வரவேண்டுமென்று
கண்ணகியைத் தானழைத்துக் கட்டழகர் கைபோட்டார்
பத்தினியைத் தானினைக்கப் பாம்புகளும் பார்த்து
கொன்றாலே தோஷமெனக் குடத்துள் விலகி நிற்க
பொன்னரிசி தானெடுத்து புண்ணியனார் கைகொடுத்து
கழுத்தின்மேலே பத்தை கௌவுதுபார் சர்ப்பமெல்லாம்
பொன்னரிசி யள்ளி யந்தப் புண்ணியனார் சபையில் வைத்தார்
அப்போது மந்திரிக ளாணழகரேது சொல்வார்
இவன்பேரில் குற்றமில்லை என்றார்கள் மந்திரிகள்
அப்போது பாண்டியர்க ளன்பாக ஏதுசொல்வார்
இன்னமொரு சத்தியந்தா னின்பமுடன் செய்யச் சொன்னார்
வேங்கை சந்தியஞ் செய்யவேண்டு மென்று சொன்னார்கள்
வேங்கைக்காரரை யழைத்து வேங்கை கொண்டுவாருமென
அப்படியே வேங்கை யவ ரன்பாக கொண்டு வந்தார்
போனிலேதானடைத்துப் புண்ணியனார் முன்னே வைத்தார்
கோவலரைத் தானழைத்து கொற்றவர்க ளேது சொல்வார்
உள்ளேபோவென்று சொல்லி தள்ளிவிட்டார் கோவலரை
கண்ணகியைத் தானினைத்துக் கதறி யழுகையிலே
பார்த்து போலாகப் பார்த்ததுகாண் வேங்கையது
கோவலரை அப்போது கொடிவேங்கைத் தள்ளிவிடும்
நெய்யிலே சத்தியந்தான் நேராகச்செய்யுமென்றார்

கொப்பரையில் நெய்காச்சிக் கோவலரைத் தள்ளிவிட்டார்
அதுக்கும் பிழைத்தெழுந்தா ராணழகர் கோவலனார்
மழுவுகொண்டு காய்ச்சியல்லோ மன்னவனார் கைகொடுத்தார்
என்னது சிலம்பென்று ஏந்தினார் மழுவதனை
மழுவுகொண்டு தானேந்தி வாராராங் கோவலரும்
மதுரை சொக்கர் கோவிலிலே வாசற்படி மீதில் வைத்தார்
மழுவுமது தானுருகி வாசற்படி யாச்சுதங்கே
அந்நேரவேளையிலே ஆணழகர் கோவலரும்
ராஜசபைக்கு முன்னே நலமாக வந்து நின்றார்
அப்போது பாண்டியர்க ளாக்கினைக ளேது சொல்வார்
யானை நல்ல சத்தியந்தா னடைவாகச் செய்யுமென்றார்
மாரளவு பள்ளம்வெட்டி மன்னவரைத் தாமழைத்து
செவ்விளநீர் நாட்டிவைத்தார் செட்டி பிள்ளை சுத்திவர
பள்ளத்தில் குந்தவைத்துச் சாலெடுத்து மூடிவிட்டார்
ஆனையைத் துரத்தினார்க ளாணழகர் கோவலர்மேல்
அப்போது கோவலரு மழுது புலம்புகிறார்
ஆனையது கிட்டேவந்து ஆணழகர் கோவலரை
மண்ணைப் பரித்துமது மன்னவனைத் தானெடுத்து
மஸ்தகந்தனில் வைத்துக் கூத்துக்க ளாடுதங்கே
இவர் ஆனையின் மேலேறி அங்குசக்கோல் கைபிடித்து
கோலம் வருகிறாரே கோவலச்செட்டியாரும்
ராஜகன்னி வீதியிலே நலமாய் வரும்பொழுது
அப்போதும் கோவிலிங்கி ஆரணங்கு தானெழுந்து
உப்பரிகைமெலேறி உத்தமியும் பாக்கலுற்றாள்
பார்த்து அழுகலுற்றாள் பைங்கொடியாள் ராஜகன்னி
அந்தச் சமயத்தில்லே ஆறாயிரம் பாண்டியர்கள்
மேடைமேல் நின்றவர்கள் மெல்லியைக் கண்டுவிட்டார்
கோபம் வருகுதங்கே கொற்றவர்கள் பாண்டியர்க்கு
ஆனையின்மேல் வாரவனை அக்ஷணமே தானிறக்கி
பாசக்கயிற்றாலே பக்குவமாய் கட்டுமென்றார்
மழுவரசரை யழைத்து மன்னவனை வெட்டு மென்றார்
அப்போது கோவலனார் ஆணழகரேது சொல்வார்
அநீதமாய் வெட்டச்சொன்னீர் அழகான பாண்டியரே
ஒருவன் பழிக்கு நாளை உலகம் பழிவாங்கி வைப்பாள்
மன்னன் பழிக்கு நாளை மதுரைப் பழிவாங்கி வைப்பாள்
மதுரையைக் கொழுத்திடுவாள் மன்னவரைக் கொன்றிடுவாள்
கண்ணகியாள் வந்தாலே கண்டதுண்டஞ் செய்திடுவாள்
என்றுமந்த கோவலனா ரெடுத்துரைத்தா ரந்நேரம்

## (கோவலரை வெட்ட மழுவரசர் வருதல்)

அப்போது மழுவரசர் அன்பாக கொண்டு வாரார்
காளியம்மன் கோவில்முன்பே கடுகவேகொண்டு வந்தார்
கொண்டு வரும் மழுவரசர் கோவலருக் கேதுசொல்வார்
வெட்ட மனமுமில்லை வீரியரே போய்விடுங் காண்
கொல்ல மனமும்மில்லை கோவலரே போய்விடுங் காண்
என்ன அப்போது கோவலரும் ஆணழக ரேதுசொல்வார்
செஞ்சிலம்பு கொண்டுவந்த திருடனென்று பெயராச்சு
என்னைக் கொன்றுவிடு மென்றாராங் கோவலரு மப்போது
மாட்டோமென்று பின்னிடைந்தார் மழுவரச ரேழுபேரும்
அந்தக் குளத்திலே ஆணழகர்போய் மூழ்கி
சொக்கரையும் அம்மனையும் தோத்தரித்தா ரப்பொழுது

## (கோவலர்க்கு மீனாட்சி வந்து பூர்வக்கியானஞ் சொல்லுதல்)

அங்கயற்கண் மீனாட்சி ஆரணங்கு மப்போது
கோவிலர்முன்பாக கொடியிடையும் வந்து நின்றாள்
மீனாட்சித் தன்னைக் கண்டு மெத்தவு மழுதாராம்
ஏனப்பா நீயழைத்தாய் என்மகனே கோவலனே
சாதகமும் பொய்க்காது தலைவிதியுந் தப்பாது
என்னவரம் வேண்டும் என்னை நீ கேளுமென்றான்
மாலையிட்டு மூலைவைத்தேன் மறுறென்றும் நானறியேன்
கூறையிட்டு மூலைவைத்தேன் குறையொன்றும் நானறியேன்
வீணுக்கு மாலையிட்டு விருதாவாய் அறுக்கலானாள்
தாலி பறிபோகுதம்மா தலைவனிங்கே மாளுகிறேன்
என்ற இந்த வசனமே ஏந்திழையாள் தான்கேட்டு
அவளுனக்குத் தாயலவோ நீ அவட்குப் பிள்ளையல்லோ
வயது பதினாறுதன்னில் மாளவே நீ பிறந்தாய்
காற்பாரைக் கென்று சொல்லிக் கட்டழகா நீ வளர்ந்தாய்
சாதகமும் தப்பாது தலைவிதியும் பொய்யாது
வாணியன் நீ முன்பிறப்பில் மாதகி யுன் பெண்சாதி
கண்ணகி காளியப்பா கட்டழகா யழுகாதே
ஒருவன் பழிக்குமவ ளுலகம் பழிவாங்க வந்தாள்
மைந்தன் பழிக்கு மவள் மதுரை பழிவாங்க வந்தாள்
இப்படிக்கிச் சொல்லையிலே ஏதுரைப்பார் கோவலரும்
கயற்கண் அம்பிகையே கண்ணகி மே லாணையிட்டே
ஆணைவிடுதல் பண்ணும் ஆணழகி மீனாட்சி
ஆணையிட்டேன் தோஷமில்லை யென்றாளே மீனாட்சி
செத்தாலுங் கயிலாயஞ் சிவன்பாதம் சேரவேண்டும்

உமையவளே மாதகியை உடன்கட்டை சேர்க்கவேண்டும்
நாயகி மாதவிக்கும் நற்பதவி கொடுக்கவேண்டும்
எனக்கு மவளுக்கும் இன்பமோட்சந் தரவேண்டும்
அப்படியே தந்தேனென்றா ளருங் கிளியாள் மீனாட்சி
அப்போது மீனாட்சி யம்மனுந்தான் மறைந்தாள்

## (மழுவரசன் கோவலரை வெட்டுதல்)

காளிகோயில் முன்பாகக் கட்டழகர் வந்து நின்று
மழுவரசனைப் பார்த்து வாருமென்று தானழைத்தார்
தன்னை வெட்டுமென்று சொன்னார் தயவுடனே கோவலரும்
வாளெடுத்து வீசினார் மழுவரசரப்போது
மாலையாய் விழுந்தது வர்த்தகன் கழுத்திலேதான்
வாளையுங் கீழ்போட்டு மன்னர்க ளோடிவிட்டார்
அப்போது கோவலனார் ஆணழக ரேதுசெய்தார்
கண்ணகி வருமளவுங் காத்திருங்க ளென்னுடலை
கற்பாறை தன்னை நீங்கள் கட்டழகா காத்திருங்கள்
இந்தச் சகாயமது எந்தனுக்குச் செய்யுமென்று
பத்தினியைத் தானினைந்து பாலாவுந் தானெடுத்தார்
அதை உச்சிவழியிலே உத்தமன் தானும் வைத்தான்
பத்தினி நீ மெய்யானால் பாலா ஊடுருகவேணும்
பத்தினியாள் பேரைச்சொல்ல பக்குவமாய் உருகுதங்கே
ஒன்றா யிருந்த வுடலிரண்டாய் பிளந்து கொண்டார்
வாழைவெட்டி சாய்ந்தது போல் பாறைமேலிருந்தார்
சிறுகுடலும் பெருங்குடலும் சிதைந்தது பாறையின் மேல்
மாண்டு மடிந்தாரே வடிவழகர் கோவலரும்
அஞ்சு பஞ்ச பூதங்களும் ஆரண்டை வருகுதங்கே
சொக்கரிடத்திலேதான் பக்குவமாய்ச் சேர்ந்ததுகாண்
தங்கச் சிமிழ்தனிலே தானடைத்தார் சொக்கலிங்கம்
அப்போது மழுவரசர் ஆணழகரேது செய்தார்
காகம் பறவாமல் கழுகுகள் தீண்டாமல்
கல்லாற் பரணைகட்டிக் கார்த்திருந்தா ரேழுபேரும்

## (கோவலன் உதிரத்தைச் சபையில் யாவரும் பொட்டிடுதல்)

அதிலே யொருவ னவன் ஆணழக னோடிவந்தான்
பாண்டியர்கள் முன்னேவந்து பாங்காக ஏதுரைப்பான்
வாளும் உதிரங்களும் மன்னவர்க்குக் காட்டினானே
ஆளுக்கொரு திலகம் அரசர்களுமிட்டுக் கொண்டார்
வஞ்சிபத்த னோடிவந்து வாரிவாரித் தான்குடித்தான்

குடித்துத் தியாகம் கொடுமென்றான் பாண்டியரை
வஞ்சிபத்தா நீ நாளை வாவென்றார் மன்னவர்கள்

### (மதுரையில் பாண்டியர்கள் தீய சகுணம் காணுதல்)

அப்படியே சம்மதித்து அரண்மனைக்குப் போனார்காண்
வஞ்சிபத்தன் போன பின்பு மன்னவருந் தாமிருந்தார்
அப்போது மதுரையிலே அவ சகுணங் காணுதங்கே
கல்மழை பெய்யுதங்கே கனத்த மதுரையிலே
கோட்டை யிடியுதங்கே கொடிமரமுஞ் சாயுதங்கே
எட்டுசுத்து கோட்டைகளும் இடியுதுபார் மதுரையிலே
கழுதைக ளோலமிட்டுக் கதறி யழுகுதங்கே
அப்படி மதுரையிலே அவசகுனங் காணுதங்கே

### (பாண்டியர்கள் பயந்து மதுரையில் திட்டஞ்செய்தல்)

அந்தச் சமயத்திலே ஆணழகர் பாண்டியர்கள்
நாலுகோட்டை வாசல்களும் நலமுடனே சாத்துமென்றார்
சாத்திக் கதவடைத்து தாள் பூட்டி வையுமென்றார்
அப்படியே செய்தார்க ளந்த மதுரையிலே
தாண்டோரா போட்டாரே தனிமதுரைப் பட்டணத்தில்
என்னவென்று தாண்டோரா போடுமென்றார் பாண்டியர்கள்
கோவலனைக் கொன்றோமென கொற்றவர்கள் சொன்னாலும்
கொன்றோமென்று யாராகிலுங் கூட்டமாய் பேசினாலும்
கைச்சாடை காட்டினாலும் கையைத் துணித்திடுவோம்
வாயாலே சொன்னாலும் வாயை கிழித்திடுவோம்
அண்டை வீடு அசல்வீடு யாரொருவர் போனாலும்
அவர்கள் தலை துணிப்போ மென்று தமுக்கறையும்
இப்படிக்கே சொல்லி தமுக்கறைந்தார் பட்டணத்தில்
மதுராபுரி பட்டணத்துத் தாள்பூட்டி மன்ன ருறைந்தார்
தங்கள் தங்கள் மாளிகையைச் சாத்தி யவரிருந்தார்
இப்படியாக இருக்கு மந்த வேளையிலே
வண்டியூர் பட்டணத்தில் வா ழிடைச்சி தன்மனையில்
ஆச்சி யரண்மனையில் ஆரணங்கு கண்ணகியும்
பஞ்சணை மெத்தையிலே படுத்திருக்கும் வேளையிலே

### (கண்ணகி கனவு காணுதல்)

அவள் கண்ணயர்ந்த பிற்பாடு காணுகிறாள் சொப்பனங்கள்
மரப்பெட்டி யுடையக்கண்டாள் மல்லகைப்பூ வாடக்கண்டாள்
ஏற்றிவைத்த திருவிளக்கு இருளடைந்து போகக்கண்டாள்
தேங்கா யுடையக் கண்டாள் செம்புஜலங் குறையக்கண்டாள்

அட்டாளுஞ் சொர்க்கர்செயல் அம்மதுரை யிடியக்கண்டாள்
வாழ் மதுரைப்பட்டணத்து மதிலிடியக் கண்டாளே
உள்ளூரிற் றேரதுதான் உடையக் கண்டாள் கண்ணகியும்
அசலூர்தேரதுதா னச்சு முறியக் கண்டாள்
கொண்டை கலைத்து மவள் கொண்டைப்பூ வாடக்கண்டாள்
மாலை கசங்கியேதான் மணவாளன் மாளக்கண்டாள்
முந்நூறு வேதியர்கள் முகூர்த்தமிட்ட மங்கிலியம்
நானூறு வேதியர்கள் நாளிட்ட மங்கிலியம்
கடகங் கழன்று விழக் கண்டாளே கண்ணகியும்
கோத்த முத்துதாழ்வடமுங் கொலுசு முதிரக்கண்டாள்
வயிரமணி தானறுந்து வல்லூர் பொறுக்கக் கண்டாள்
உட்கழுத்து வயிரமணி உருவிவிழக் கண்டாளே
மஞ்ச ளழியக்கண்டாள் மணமழிந்து போகக்கண்டாள்
தாலி பறிபோகக் கண்டாள் தலைவ னங்கே மாளக்கண்டாள்
காளியம்மன் கோயிலில் கண்ட துண்டஞ் செய்யக்கண்டாள்
மரம் வெட்டிச்சாய்ந்தது போல் கோவலரும் சாயக்கண்டாள்
பாதியுடலாக வெட்டிப் பாறைமேற் சாயக்கண்டாள்
அவர் உதிரம் பலபலென்ன இரத்தமாய்ப் பூச்சொரிய
இரத்தம் பலபலென்ன உதிரமாய்ப் பூச்சொரிய
சிறுகுடலும் பெருங்குடலும் சிதறிவிழக் கண்டாளே
மணிக்குடலும் பெருங்குடலும் மண்மேல் விழக்கண்டாள்
இப்படியாய்ச் சொப்பனங்கள் ஏந்திழையுங் கண்டாளே
சொப்பனங் கண்டுமவள் துடித் துடித்துத் தானெழுந்தாள்
ஆச்சி முகம்பார்த்து பேரழகி ஏதுசொல்வாள்
மதுரைக்குப் போமிடத்தே மாண்டாரே என்கணவர்
சிலம்பு விற்கப் போகுமிடத்தே செத்து மடிந்துவிட்டார்
போன விடத்திலேதான் புருஷிறந்தாரே
மாண்ட படுகளத்தில் மயிலனையாள் போகவேணும்
செத்த படுகளத்தைச் சீக்கிரம்போய் காணவேண்டும்
கொன்றவனைக் காணவேணும் கொடிய பழிதீர்க்கவேணும்
மாண்டவரைக் காணவேணும் மன்னவரைக் கொல்ல வேணும்
ஒருவன் பழிக்காக உலகம் பழிவாங்கவேணும்
மன்னன் பழிக்காக மதுரை பழிவாங்கவேணும்
மார்க் கண்டம் துடிக்குதிங்கே மணவாளன் மாண்டிருக்க
அவருட படுகளத்துக் காய்ச்சியரே போய்வாரேன்
செத்த படுகளம் பார்க்கத் தேவிநான் போய்வாரேன்
போக விடை கொடம்மா போய்வாரேன் தென்மதுரை
என்று எழுந்திருந்தா ளேந்திழையாள் கண்ணகியும்
ஆச்சியம்மா தான்பார்த்து அரிவையருக் கேதுரைப்பாள்

அடைக்கலமா யுன்னை வைத்து அணிமதுரை போனாரே
செஞ்சிலம்பை விற்பதற்குத் தென்மதுரை போனாரே
செஞ்சிலம்பை விற்றுக்கொண்டு செட்டியா ரிங்கேவந்து
கண்ணகியா ளெங்கேயென்று கட்டழகர் கேட்டாலே
அதற்கென்ன நானுரைப்பேன் ஆரணங்கு கண்ணகியே
நீ போற காரியத்தை நான் போ யறிந்து வாரேன்
மதுரைக்குப் போ யறிந்து வாரேனென்றாள் வாழிடைச்சி
அவருடைய சேதிகளை அறிந்து கொண்டு வாரேனென்றாள்
புருஷனுடசேதிகளை அறிந்து கொண்டு வாரேனென்றாள்
வீட்டி லிருமென்றாள் மெல் லிடைச்சியவள்
படடணத்துச் செட்டியாரைப் பார்த்துவருகிறேன் நான்
சீக்கிரம்போய் மதுரைதனிற் சேதி யறிந்துவாரேன்
என்றந்த ஆச்சிசொல்ல ஏதுசொல்வாள் கண்ணகியும்
அப்படியே போவாயானா லருஞ்சோதி சொல்லுகிறேன்
வெறும்பானை வெறுங்கூடை மெல்லியரே நீ எடுத்து
ஆற்றிலேதான் முழுகி அரிவையரே நீ நினைத்தால்
நாலு அறையாகும் நலமான பானையிலே
நாலு அறைதனிலே நாலுவித முண்டாகும்
அதரவிலை கூறி அநீதமாய் விற்றாயானால்
அவர் சேதிதான் தெரியும் ஆரணங்கே யுந்தனுக்கு
என்றந்த கண்ணகியும் எடுததுரைத்தா ளாச்சி யவட்கு
நல்லதென்று ஆச்சியவள் நலமாகச் சம்மதித்து
தயிர்ப் பானை தானெடுத்துத் தையலரும் வாராளே
ஆற்றில் முழுகினாளே ஆரணங்கு வாழிடைச்சி
பானை கழுவியவள் பக்குவமாய் காயவைத்து
நாலு கை ஜலமெடுத்து நங்கையரும் விட்டாளே
நாலு வித மாச்சு நங்கையுட கிருபையினால்
பால் மோர் தயிர் வெண்ணெய் பக்குவமாய் கைகுவித்து
பத்தினியா ளென்று சொல்லிப் பக்குவமாய் கைகுவித்து
சிட்டுச் சிமிளெடுத்து சிம்மாடுகோலி வைத்தாள்
பால்கூடை தானெடுத்துப் பட்டணத்தே வாராளே
மதுரைக்குள்ளாக வல்லோ மயிலனையாள் வாராளே
நாலுகோட்டை வாசல்களும் நலமாகச் சாத்தியிருக்க
தெற்கு நல்ல வாசலிலே தேன்மொழியும் வந்து நின்றாள்
அங்கிருக்கும் சேவகர்கள் ஆணழகர்தான் பார்த்து
போகிறவழி மறைத்துப் போகாதே யென்று சொன்னார்
அப்போ தவள் சந்துசொல்லி ஆரணங் குள் நுழைந்தாள்
ஆதியந்தமும் மதுரை அடைபட்டிருக்குது காண்

கண்ணகியுஞ் சொன்னது மெய்யென்றுமே யெண்ணியவள்
என்னவென்று கூவுகின்றா ளேந்திழையாள் மதுரையிலே
ஒருபடி முத்தளந்தால் ஆறுழக்கு வெண்ணெ யீவேன்
இரண்டு படி முத்தளந்தா லிரண் டுழக்கு பால் வார்ப்பேன்
மூன்று படி முத்தளந்தால் மூன்றுழக்கு பால்வார்ப்பேன்
நாலுபடி முத்தளந்தால் நாலுழக்கு தயிர்வார்ப்பேன்
கோனிச்சியதா விலை கூறியவள் வாராளே

## (இடைச்சி மதுரைக்கு வந்து கோவலன் இறந்த செய்தியறிதல்)

மதுரையிலுள்ள பெண்கள் வாரார்களெல்ல வரும்
தயிர் பாலும் மோருங்கொள்ளத் தையலர்கள் வாரார்கள்
ஆச்சிமுன்னே வந்துமவ ரனைவோரும் நின்றார்கள்
அவரவர்கள் மனதின்படி யனைவோருங் கொண்டார்கள்
அதிலே யொருத்தி தன்னை அன்பாகத் தானழைத்து
மதுரையிலுள்ள சேதி மர்மமெல்லாஞ் சொல்லுமென்றாள்
ஆரோ ஒருவனவன் அணிமதுரைத் தேடி வந்தான்
சிலம்புகொண்டு வந்தானாம் செட்டிபிள்ளை கோவலனாம்
சிலம்பை பறித்தவனைத் திருடனென்று கொன்றுவிட்டார்
மாண்டு மடிந்தானாம் வடிவழகன் கோவலனும்
மாண்டதின் பிற்பாடு மதுரைதனைச் சாத்திவிட்டார்
என்றுமவள் சேதிதனை எடுத்துரைத்தா ளாச்சியர்க்கு
அவ்வார்த்தைதான் கேட்டு அழுதுவாரா ளாட் டிடைச்சி
மதுரையை விட்டந்த மாட்டிடைச்சி வாராளே

## (இடைச்சி கோவலனின் படுகளத்தைக் கண்டு புலம்புதல்)

மாட்டுக்காரப் பிள்ளைகளை மயிலனையாள் தான்பார்த்து
செட்டியார் படுகளந்தா னெங்கே யென்றுதான்கேட்டாள்
காளியம்மன் கோவிலண்டை கண்டதுண்டஞ் செய்தார்
திருப்பரங்குன்றங்காடு தெய்வகாளி கோவிலம்மா
வெங்கலப்பாறையிலே வெட்டி வைத்தார்கோவலரை
அவ்வசனந்தான் கேட்டு அழுதுகொண்டு வாராளே
படுகளத்தைத் தேடியல்லோ பாவையவள் வாராளே
மாண்டிருக்கும் படுகளத்தை மாதவளும் தான்பார்த்து
செத்திருக்கும் படுகளத்தைத் தேன்மொழியும் தான்பார்த்து
தலைமாட்டில் வந்துநின்று தயிர்ப்பானைப் போட்டுடைத்தாள்
தயிர்ப்பானை போட்டுடைத்துத் தாவி யழுகலுற்றாள்
ஏண்டா வந்த யென் மகனே ஈடழிவான் மதுரையிலே
அப்போதே சொன்னாள் ஆரணங்கு வந்தனுக்கு

போகாதே யென்றாளே பூவை பேச்சைத் தள்ளி வந்தாய்
பேச்சைத்தள்ளி வந்திடத்தில் பிழைமோசம் வந்ததே
வார்த்தைத்தள்ளி வந்திடத்தில் வகைமோசம் வந்ததே

### (இடைச்சி அழுததால் அவளை பாண்டியர்முன் கொண்டுவருதல்)

என்று சொல்லி தானழுதாள் ஏந்திழையாள் வாள் யிடைச்சி
அழுதக் குரல்கேட்டு மழுவரச ரோடிவந்து
கட்டிக்கொண்டு வாரார்கள் கனிவான ராசர்முன்னே
பாண்டியர்கள் தாம்பார்த்து பாவையருக் கேது சொல்வார்
ஏண்டியழுதா யென்று இனிதாகக் கேட்டார்கள்
கைபதறி பானைதனைக் கடுக வுடைத்துவிட்டேன்
பாலுக்கழுகவில்லை பாண்டியரே யென்றுரைத்தாள்
தயிருக் கழுகவில்லை தயிர்பானைத் தனக்கழுதேன்
மோருக் கழுகவில்லை மோர் பானைத் தனக்கழுதேன்
என்று மவள் சொல்லையிலே ஏதுசொல்வார் பாண்டியர்கள்
வையகங்க ளத்தனையும் மண்பானை விலை பெறுமா
மூவுலக மத்தனையும் மோர்பானை விலைபொறுமா
ஏதுக் கழுதாயடி யிடைச்சி நீ யென்று சொன்னார்
அப்போது வாழ்விடைச்சி அரசர்களுக்கேது சொல்வாள்
மண்டைதுள்ளிப் பேசாதே மட்டடக்க வருவாள் நாளை
ஆண்மை கொண்டு துள்ளாதே அகமடக்க வருவாள்நாளை
என்று மிகச் சொன்னாளே ஏந்திழையாள் வாழ்விடைச்சி

### (இடைச்சி கண்ணகிக்கு விருப்பமான பொருள் வாங்கி வருதல்)

மண்ணை வாரித் தூற்றிவிட்டு வாராளே வாழ்விடைச்சி
சின்னக்கடை பாதைதேடி தேன்மொழியாள் வாராளே
கண்ணகிக்கு வேணுமென்று என்னென்ன வாங்கலுற்றாள்
கோடி புடவையொன்று கொம்பனையாள் வாங்கலுற்றாள்
கம்பியுடன் கொடிச்சீலை கண்ணகிக்கு வாங்கலுற்றாள்
பாக்குப்பை மஞ்சள்களும் பத்தினிக்கு வாங்கலுற்றாள்
சீப்பு சிக்கங்கோலும் தேன்மொழிக்கு வாங்கலுற்றாள்
மல்லிகைப் புஷ்பமது மயிலனைக்கு வாங்கலுற்றாள்
மாங்கனியும் தேங்கனியும் மயிலனைக்கு வாங்கலுற்றாள்
நல்லெண்ணெய் சீக்காயும் மயிலனைக்கு வாங்கலுற்றாள்
மஞ்சள் மருக்கொழுந்து மாதினுக்கு வாங்கலுற்றாள்
இத்தனையும் வாங்கிக்கொண்டு ஏந்திழையும் வாராளே

## (இடைச்சி கண்ணகியிடம் பொய் சொல்லுதல்)

வண்டியூர்தான்தேடி வாழ்விடைச்சி வாராளே
அந்தசமயத்திலே அருங்கிளியாள் கண்ணகியும்
அடுக்காய் சமையல்செய்து ஆரணங்கு மூடி வைத்து
வருவழியைப் பாத்திருந்தாள் மயிலனையாள் கண்ணகியும்
அந்த சமயத்திலே ஆச்சியம்மை வந்து விட்டாள்
தலைக்கடையில் உட்கார்ந்தாள் தைய லிடைச்சியவள்
கண்ணகியாள் முன்னேவந்த காரிகையா ளேதுரைப்பாள்
மதுரைக்குப் பேனாயே வர்த்தகர் சேதி என்ன
தென்மதுரை போனதொரு சேதி என்ன செப்புமென்றாள்
வடிவழகர் சேதியென்ன மடிந்தாரோ என்கணவன்
தெரியவே சொல்லுமென்றாள் தேன்மொழிக் கண்ணகியும்
அப்போது வாழ்விடைச்சி அருங்கிளிக் கேது சொல்வாள்
மதுரைக்குப் போனதொரு வர்த்தகனைக் கண்டுவந்தேன்
தென்மதுரைக்குப் போனபின்பு செட்டியாரைக் கண்டுவந்தேன்
கண்டுவத்தே னென்று மந்தக் கட்டழகி தானுரைத்தாள்
என்ன சொன்னா ரென் கணவ ரெனக்கறியக் கூறுமென்றாள்
கோடிப் புடவையது கொற்றவரைக் கேட்டாயாம் நீ
வாங்கிக் கொடுத்தாரே வடிவழகர் கோவலரும்
பாக்கு மஞ்சள் வெற்றிலையும் பாவையரே கேட்டாயாம் நீ
அதுவுங் கொடுத்தார்காண் ஆணழகர் கோவலரும்
நல்லெண்ணெய் சீக்காயம் தான்கொடுததார்
இந்தனையுங் கொடுத்தா ரென்றுரைத்தா ளாச்சியம்மாள்
கண்டஉடனே யவள் கதறி யழுகிறாளே
மாலையிட்ட நாள் முதலாய் வாங்கிக்கொடுத்ததில்லை
செத்ததின் பிற்பாடு சீரனுப்பி வைத்தாரோ
மாண்டது மெய்தான்காண் வடமதுரைப் பட்டணத்தில்
என்றுயிவள் சொல்ல ஏந்திழையா ளென்னசொல்வாள்
பாலாகாரங் குடித்துப் பசியாறு மென்று சொல்லி
செம்பிலேபாலும் சேயிழைக்குத் தான்கொடுத்தாள்
செம்பிலே வைத்த நற்பாலுஞ் சீழுமதாச்சுதப்போ

## (கண்ணகி இடைச்சியின் வீட்டை கோபத்தில் கொழுத்துதல்)

கண்ணகியுந்தான் பார்த்துக் கன்னிமனமும்நொந்து
அப்போது கண்ணகியா ளாரணங்குதான் பார்த்து
எனக்குப் பொய் சொன்ன விந்த இடைச்சி வீடு வேகவேண்டும்
என்று கைமுறித்துச் சாபமிட்டாள் கட்டழகி கண்ணழகியாள்
கலந்துபற்றி யெரியுதங்கே கட்டழகி வீடதுதான்

வெந்து தணிகிறது வாழ்விடைச்சி வீடுமங்கே
அப்போது வாழ்விடைச்சி அலறிக் கொண்டு ஓடிவந்தாள்
கண்ணகி காலிலே கடுகனெவே போய்விழுந்தாள்
பாத்தா பத்தினியே பழுதுபடா ரத்தினமே
குடியிருந்த வீட்டிலே கொள்ளிவைக்க ஞாயமுண்டோ
உண்மையைச் சொல்லுகிறே னுத்தமியே யுந்தனுக்கு
செத்தழிந்து போனாரே செட்டிபிள்ளை கோவலனார்
மாண்டது மெய்தான் காண் மயிலணையே கண்ணகியே
ஆறுதப்பு நூறுபிழை அடியாள் செய்த அபசாரம்
கோடி தப்பு மனம் பொறுத்து கொண்டணைக்க வேண்டும்மா

## (கண்ணகி இடைச்சி வீட்டை மறுபடியும் உண்டு பண்ணி விட்டு மதுரைக்கு வருதல்)

என்ன அப்போது கண்ணகியாள்அவள் மேல் மனதிரங்கி
எப்போதும் போலே யுந்த இடைச்சிவீடு வுண்டாச்சு
கூந்தல் விரித்தாளே கொம்பனையாள் கண்ணகியும்
எல்லோருக்கும் கூந்தலது இருபாக மொரு பாகம்
ஆரணங்கு கண்ணகிக்கு அறுபத்து மூன்றுபாகம்
அறுபத்து மூன்று பாகம் அழகுள்ள பொற் கூந்தல்
கூந்தல்விரித்துக் கொடியிடையாள் வாராளே
கணவன் படுகளத்தே கண்ணகியும்வாராளே
காடுசெடிதாண்டி கடுகெனவே வாராளே
சில்லென்ற காடுஞ் செடியும் வானந் தாண்டி
காரைமுள்ளுஞ் சூரைமுள்ளுங் கடுகனவே தைக்குதுபார்
சூரை முள்ளுங் கரைமுள்ளுந் தொடை யுருகப் பாயுதுபார்
துரட்டி முள்ளு தைக்குது பார் துணியை கிழிக்குதுபார்
செடிக் கொரு மயிரதுதான் சிக்குப் பட்டு வாராளே
ஐயோ சிவனேயென்று அழுது கொண்டு வாராளே
கொக்குக் குருவிகளா கண்டதுண்டோ கோவலரை
காட்டானை புலியினமே கண்டதுண்டோ கோவலரை
சிங்கங் கரடிகளா செட்டியாரைக் கண்டதுண்டோ
செக்கச் சிவந்தழகர் செங்கீரைத் தண்டழகர்
பார்க்க வழகுடையார் பாக்குமிகத் தின்பவர்காண்
செஞ்சிலம்பு கொண்டு வந்த செட்டியாரைக் கண்டதுண்டோ
என்ன அங்கிருக்கு மிருகமெல்லாம் அரிவையருக் கேதுரைக்கும்
போறபோது கண்டதுண்டு வரும்போது கண்டதில்லை
என்றுசொல்லக் கண்ணகியும் ஏதுரைப்பா ளப்போது
போம் போது நான் சொன்னேன் போகேல் மதுரையென
வார்த்தைத் தள்ளிப் போனதினால் வகை மோசம் வந்தது

பேச்சி தள்ளிப்போனதினால் பிழைமோசம் வந்ததுவோ
செத்தப் படுகளந்தான் தேன்மொழியாள் நானறியேன்
நீர் மாண்ட படுகளந்தான் மயிலனையாள் நானறியேன்
மாட்டுக்காரப் பிள்ளைகளை மாது நல்லாள் கண்டு விட்டாள்
மாடுமேய்க்கும் பிள்ளைகளா மாட்டாதங்கோல் தம்பிமாரே
ஆளன் படுகளத்தை அரிவையர்க்குச் சொல்லுமென்றாள்
புருஷன் படுகளத்தைப் பொற்கொடிக்குச் சொல்லுமென
என்னத்துக்காகக் கேட்டீர் இளங்கொடியே தானுரையும்
மதுரையைத்தான் கொளுத்த மயிலனையாள் போறேனென்ன
நெருப்புக்கொண்டு போறீரோ நேரான தென்மதுரை
வாயாலே சொன்னாலே மதுரையது வெந்துவிடும்
என்ன அப்போது பிளளைகளும் அருங்கிளிக் கேதுசொல்வார்
இளைப்பா யிருக்குது எங்களுக்கு ஏந்திழையே
பசியிளைப்பைத் தீர்த்தாலே படுகளத்தைச் சொல்லுகிறோம்
என்ன அப்போது கண்ணகியா ளரிவையவளேது சொல்வாள்
எப்படிக்குத் தென்மதுரை இனிதாய் கொளுத்துவாயோ
எப்படிக்குச் சாதமது அடைவாய்ச் சமையுமென்றார்
அப்படிக்குச் சாதமது அடைவாய்ச் சமையுமென்றார்
அப்போது கண்ணகியா ளாரணங்குதான் பார்த்து

## (கண்ணகி மாடு மேய்க்கும் பிள்ளைகளுக்கு உணவு சமைத்தல்)

பத்தினி சொருபத்தைப் பசங்களுக்குக் காட்டவென்று
ஆற்று மணலெடுத்து அரிசியை யுண்டுபண்ணி
காய்கறிக ளுண்டுபண்ணினாள் பாவையா ளப்போது
காய்கறி பதார்த்தங்கள் கட்டழகி தான் சமைத்தாள்
இலை பறித்து வாங்களென் றேந்திழையாள் சொன்னாளே
வடதாரி தானுருவி மடிதனிலே கட்டிக்கொண்டு
ஆளுக்கொருகலப்பை அவர்க ளெடுத்து வந்து
மாது கன்னிகை பின் முன்னே வைத்தார்கள் பாலரெல்லாம்
இதுதானோ இலையென்று ஏந்திழையாள் கேட்கலுற்றாள்
இதைவிட வேறே யிலை யில்லை யென்று தானுரைத்தார்
ஈர்க்கு எங்கேயென்று இளங்கொடியாள் கேட்கலுற்றாள்
கலப்பையை முன்னே வைத்தார் கட்டழக ரப்போது
மடி யிலைகளெல்லாம் வகையாய் பரப்பிக்கொள்ளும்
அப்படியே பரப்பிகொண்டா ரந்த நல்ல பிள்ளைகள்தாம்
உத்தமியு மெய்யானா ளொன்றா யிலையாக வேண்டும்
என்று கண்ணகியாள் சொல்லையிலே கலந்தத் தழைகளெல்லாம்
சாதம் கறிவகைகள் சட்டமாய்வடித்தாளே

போஜனமுண்டு மவர் புண்ணியனார் தானெழுந்தார்
இப்போவாகிலுஞ் சொல்லு மென்கணவன் படுகளத்தை
பலகாரந் தந்தாலே பக்குவமாய் சொல்வோ மென்றார்
ஆற்றுமண லெடுத்து ஆளுக்கொரு பிடிகொடுத்தாள்
அவளுடைய சத்தியத்தால் அதுவுங் கடலையாச்சு
அப்போது பிள்ளைகளும் அன்பாகத் தாம்பயந்து
செம்பருந்துங் கரும்பருந்துஞ் சேர்ந்து பறக்குதங்கே
மாமரச் சோலைகளும் வட பத்திரகாளி கோயிலண்டை
திருப்பரங் குன்றக்காடு தெய்வ காளி கோயிலண்டை
அகடக்கல் சகடப்பாறை அச்சமில்லா தச்ச கொம்பு
உய்யகொண்டாள் பாதையது உயர்ந்த மலைக ளவை
இராணிபுத்து பரணயின் மேலிரு பிளவாய்ச் செய்தார்கள்
இருபிளவாய்ச் செய்திடத்தில் மறு பிளவாய்ச் செய்தார்கள்
தோற்றுது படுகளம் தோகையரே பாருமென்றார்
அவ் வார்த்தைதான் கேட்டு அலறிக் கொண்டு வாராளே
காட்டேரி துர்க்கையைப்போல் கன்னியவள் வாராளே
தலைவிரித்துக் கொண்டுமவள் தார்குழலாள்வாராளே
கண்ணகி வருகிறதைக் கண்டார் மழுவரசர்
பரணைவிட்டுக் கீழிறங்கிப் பக்குவமா யோடிவாரார்

## (கண்ணகி கோவலனை படுகளத்தில் கண்டு புலம்புதல்)

அந்தச்சமயத்திலே அருங்கிளியாள் வந்து விட்டாள்
கண்ணாலே கண்டாளே கண்ணகியாள் கோவலரை
ஐயோ சிவனேயென்று அறைந்தாளே மார்தனிலே
தக்கோலந் தின்றதொரு கனிவாயை முத்தமிட்டாள்
கற்பூரந் தின்றதொரு கனிவாயை முத்தமிட்டாள்
வெற்றிலை போட்டதொரு வெள் வாயை முத்தமிட்டாள்
முத்தங் கொடுத்து இவள் மோதி யழுவாளாம்
சுத்தி வருவாளாம் சுழன்று வருவாளாம்
மடிந்தீரோ மன்னாவென்று மாரடித்துக் கொள்வாளாம்
செத்து மடிந்தீரோவென்று மாரடித்துக் கொள்வாளாம்
பக்கத்தில் நின்றுமவள் சேர்ந்து முத்தமிடுவாளாம்
இப்படியாக இளங்கொடியாள் தானழுதாள்
பாறைக் கிரையென்று சொல்லிப் பட்டணத்தில் நீர் வளர்ந்தீர்
கற்பாரைக் கென்று சொல்லியா கட்டழகா நீர் வளர்ந்தீர்
பாறை யுறுத்தலையோ பட்டணத்தார் கோவலரே
கற்பாறை யுறுத்தலையோ கட்டழகா வுந்தனுக்கு
மாதகியாள் பஞ்சணையில் மயிரிருந்து வுறுத்து தென்று
கட்டிவைத்துத் தானடித்தீர் கன வாணிக வர்த்தகரே

பொற் பாறை யுறுத்தலையோ புண்ணியரே யுந்தனுக்கு
சின்ன வயதிலே செத்திறக்க நாளலவே
பார்த்தாற் பிராயமது பதினாறுக் குள்ளாகும்
எண்ணாப் பிராயமது இருபதுக் குள்ளாகும்
இந்த வயதுதனி லினி மாள நீதியுண்டோ
அஞ்சு வயதுதனி லறியாத நாளையிலே
மாலையிட்டு மூலைவைத்து மாதகியாள் வீடுவந்தீர்
கூறையிட்டு மூலை வைத்து கூத்தியிடம் போய் சேர்ந்தீர்
பன்னிரெண்டுதன் வருஷம் பரஸ்திரி வீடிருந்தீர்
அவளிடத்திருந்தது போ லென்னிடத் திருப்பீரானால்
கொள்ளிவைக்க பிள்ளையுண்டு குடமுடைக்க மைந்தனுண்டு
ஆழியிடுங் கையாலே அரிசியிட மைந்தனுண்டாம்
உற்றுரிமை செய்வதற்குப் புத்திரானு மீன்றெடுப்பீர்
வேம்புக் கிறைத்தீரே விருதாவாய் நின்றீரே
எவருக்கு நீர் சொரிந்து எத்தனைப் பூத்தாலும்
மருக் கொழுந்துபோல் வருமோ மாதகியாள் நேசமெல்லாம்
என்றுமவ ளழுதாள் ஏந்திழையா ளப்போது

## (கண்ணகி இறந்த தன் கணவனை உயிரெழுப்பி செய்தியறிதல்)

மாண்டவரைத்தா னெழுப்பி வாய் பிறப்புக்கேட்கவேண்டும்
செத்வரைத் தானெழுப்பி சேதியறிய வேண்டும்
சொக்கரை மனதுதனிலே தோகையவள் தானினைத்து
ஆளனுட தன்னுயிரை அனுப்பவேண்டுமென
அப்போது சொக்கலிங்கம் ஆண்டவனார்தாம் பார்த்து
தங்கச் சிமிழ்தனில் தனஞ்சயனார் தன்னுயிரும்
தங்கச் சரடுகளும் தங்கத்தினா லூசியும்
பொற் பிரம்பு போலதுவும் பூநீறு செம்பழமும்
அந்தரத்தில் விட்டெறிந்தார் ஆணழகர் சொக்கலிங்கம்
அது கண்ணகியாள் தன்னிடத்தில் கடுகெனவே வந்ததப்போ
அப்போது கண்ணகியா ளாரணங்கு தானெடுத்து
மாண்ட கற்பாறையின்மேல் மன்னவரைத்தான் சேர்ந்து
மணிக்குடலும் சிறுகுடலும் மாது ஒன்றாக வைத்தாள்
ஈர லிறைச்சிதனை யெதாஸ்தானமாக வைத்தாள்
இரண்டா யிருந்தவரை யொன்றாய்த் திரட்டி வைத்தாள்
தங்க நல்ல ஊசியிலே தகுந்த வொரு நூல்கோர்த்து
உச்சியிலே தானிருந்து ஒட்டிவிட்டாள் பொற்சரடு
இரண்டு விரற்கடைதான் மீந்தது பொற்சரடு
பெருவிரற்குச் சரடு விட்டாள் பெண்ணரசி கண்ணகியும்

தங்கச் சிமிழ்தனைத் தையலரும் தான் திறந்தாள்
அவருடைய பஞ்ச வுயிர் பொந்தியி லடைத்ததுவே
வெண்ணீறுதான் தூவி மெல்லி யிளங்கொடியாள்
பொற்பிரப்பங் கோலாலே பொற்கொடியாள் தட்டினாளே

**(இறந்த கோவலன் பிழைத்து தன் மனைவியிடம் வருத்தங் கூறல்)**

தூங்கி விழித்தவர்போல் திடுக்கிட்டுத் தானெழுந்தார்
வேங்கை மரமருகில் மெல்லியவள் போயொளிந்தாள்
அப்போது கோவலரும் அலண்டு யெழுந்திருந்து
மாதகியோ கண்ணகியோ வந்தவர்கள் படுகளத்திலே
மாதகியாள் வந்தாலே வாடியென் மடிமேலே
கண்ணகியாள் வந்தாலே கடக்கப்போய் நில்லுமென்றார்
இந்த விசேஷமதை ஏந்திழையாள் தான் கேட்டு
கூத்தியா ளேன் வருவாள் கொண்டவள் வந்தேனென்றாள்
என்று மவள்சொல்லி எதிரில் வந்து நின்றாளே
ஆனையைதான் கொண்டேன் ஏற்றினாள் மாதகியும்
ஆனை கொண்டவள் வந்தேனே ஏறியவளேன் வருவாள்
தோட்டமும் நான் கொண்டேன் பூ முடித்த மாதகியாள்
தோட்டாங் கொண்டாள் வந்தேன் பூமுடித்தாளேன் வருவாள்
கண்ணியும் தான் கொண்டேன் கீறியுண்டாள் மாதகியாள்
கிண்ணி கொண்டாள் வந்தேனே கீறியுண்டாளேன் வருவாள்
பட்டையும் நான் கொண்டேன் பாவித்தாள் மாதகியாள்
பட்டுக் கொண்டால் வந்தேனே பாவித்தாளேன் வருவாள்
மாலையிட்டா ளிங்கே வந்தேன் பாவித்தாளேன் வருவாள்
கொண்டவள் இங்கே வந்தேன் கூத்தியாளேன் வருவாள்
மன்மத வடிவழகர் வர்த்தகரு மேது சொல்வார்
சிலம்பு விற்க வந்திடத்தில் தேன்மொழியே ஏன் வந்தாய்
மணிமாற வந்திடத்தே மாதரசே வரலாமோ
பொருள் தேட வந்திடத்தே பொற்கொடியே வரலாமோ
என் குலத்தார் கண்டாலே என்னை மதியார்கள்
ஏனங்கள் தேடி வைத்தா யேந்திழையே யெந்தனுக்கு
என்ன அப்போது கண்ணகியும் ஆணழகர்க் கேதுசொல்வாள்
சிலம்புகொண்டு வந்தீரே தென்மதுரைப் பட்டணத்தில்
பாறைமேல் படுத்ததென்ன பாவையர்க்குச் சொல்லுமென்றாள்
சிலம்பது எங்கேயென்று தேன்மொழியுங் கேட்கையிலே
அப்போது கோவலரும் அரிவையவட்கேது சொல்வார்
சிலம்பு கொண்டுவந் திடத்தே ஜன்மபகை நேர்ந்ததடி
கள்ளனென்று சொல்லிக் கட்டி பிடித்தார்கள்

ஐந்து நல்ல சத்தியங்க ளடைவாகச் செய்தேன் நான்
ஐந்தாவது சத்தியத்தில் யானைமேல் கோலம்வந்தேன்
ராஜகன்னி பார்த்தாளென்று நலமாகவெட்டச் சொன்னார்
காளியம்மன் கோவில்முன்னே கண்டதுண்டஞ் செய்தார்கள்
இவ்வளவு தான் சேதி யென்றுரைத்தார் கோவலரும்
நல்லாரார் பொல்லாரார் நாயகிக்குச் சொல்லுமென்றாள்
உன்னாலே யாவதென்ன உத்தமியே சொல்லுமென்றார்
என்னாலே யாகுங் கா ணெனக்கறியச் சொல்லுமென்றாள்

## (கோவலன் தன்னைச் சதித்தவர்களைக் கண்ணகிக்குச் சொல்லுதல்)

மாபாவி யானதொரு வஞ்சிபத்தன் பிள்ளைகள் தாம்
சுந்தரலிங்கமென்றும் சோமலிங்கமென் றிருவர்
இருவரும் பொல்லாதா ரென்னை யவர்காட்டிவிட்டார்
அப்போது வஞ்சிபத்தன் ஆணழக னோடிவந்து
ஒப்பாரிகொண்டு மவ னுறவு கொண் டெனையழைத்து
அண்ணனுட பிள்ளையென்று அன்பா யெனை யழைத்து
கலத்திலே சாதமிட்டு கழுத்தறுக்க எண்ணங் கொண்டு
செஞ்சிலம்பைப் பறித்து திருடனென்று கட்டிவைத்தான்
மூதேவி யவன் தேவி முத்துமாலை யோடிவந்து
மலட் டுலக்கைக் கொண்டுவந்து மண்டைமேல் தானடித்தாள்
நீதிகெட்ட பாண்டியர்கள் நிற்க தலைவெட்டச் சொன்னார்
மந்திரிகள் தாம்பார்த்து மன்னவர்களேது சொன்னார்
ஞாயத்தைக்கேட்டு நலமாக வெட்டவேண்டும்
என்றுமே மந்திரிக ளெடுத்துரைத்தா ரந்நேரம்
அப்போது தீர்ப்புகள் தா மடைவாகச் செய்யச்சொன்னார்
அப்படிக்குச் செய்தேனடி ஆரணங்கு மங்கையரே
பாம்பொரு சத்தியந்தான் வேங்கையொரு சத்தியந்தான்
நெய் யொரு சத்தியந்தான் மழுவொரு சத்தியந்தான்
ஆனை யொரு சத்தியந்தா னன்பாகச் செய்யச்சொன்னார்
குஞ்சரத்தின் மேலேறிக் கோலம்வரும் பொழுது
அப்போது கோவிலிங்கி அரிவையவள் தான்பார்த்து
மெத்தையேறிப் பார்த்தாளென்று வெட்டவே சொன்னார்கள்
மழுவரசர் நல்லவர்கள் வாளுமது பொல்லாது
யானையது நல்லது தான் மாவெட்டி பொல்லாதவன்
வேங்கையது நல்லதுதான் வேங்கைக்காரன் பொல்லாதவன்
பாம்புமது நல்லது தான் ஜோகியவன் பொல்லாதவன்
நெய்யு மெத்தநல்லதுதான் காய்ச்சினவன் பொல்லாதவன்
மந்திரிகள் நல்லவர்கள் தான் கன்னவரும் பொல்லாதவர்

ராஜகன்னிபொல்லாதவள் நாயகியே யெந்தனுக்கு
அவளாலே யென்னை யவர் அநீதமாய் வெட்டிவிட்டார்
என்று மிவர் கண்ணகிக்கு எடுத்துரைத்தா ரந்நேரம்
அப்போது கண்ணகியும் அருங்கிளியா ளேது சொல்வாள்
ஒருவன் பழிக்கு நாளை உலகம் பழிவாங்கிடுவேன்
சிறுகுடலும் பெருங்குடலும் சேர்த்துப் பிடுங்கிடுவேன்
மணிக்குடலைத் தான் பிடுங்கி மாலையாய் நான் தரிப்பேன்
இப்படி நான் செய்யாவிட்டா லென்பேரு கண்ணகியோ
மார்பு தட்டி சபதஞ்செய்தாள் வர்த்தகனார் முன்னாலே
அப்போது கண்ணகியும் அருங்கிளியா ளேதுசொல்வாள்
வர்த்தகரைப்பார்த்து மயிலனையா ளேதுசொல்வாள்
என்னவரம் வேண்டும் மென்னை நீ கேளுமென்றாள்
பாண்டியர்கள் தம்குடலைப் பாவையே நீ கொண்டு வந்து
கூடமைத்து என்னோடு கொழுத்தி விட்டால் வெந்துவிடும்
அப்படியே நீ செய்யவேண்டும் ஆரணங்கே யென்றுசொன்னார்
நான் செத்தாலுங் கைலாசஞ் சிவன்பாதஞ் சேரவேண்டும்
என்னோடு மாதகியும் உடன்கட்டைசேர்க்க வேண்டும்
இருவருக்குங் காட்சி ஏந்திழையே கொடுக்கவேண்டும்
அப்படியே தாரேனென்று ஆரணங்கு கைகொடுத்தாள்

## (கண்ணகி மறுபடியும் கோவலன் உயிர் நீங்குதல்)

மன்னவரே எந்தனுக்கு மாமரத்திலே யிப்போ
கனிபறித்துத் தாருமென்று கட்டழகி கேட்கலுற்றாள்
அப்போது மரமேறி ஆணழகர் கோவலரும்
சொத்தைக் கனியொன்றைத் தோகையற்குத் தான்போட்டு
நல்லகனிகளை நலமாகத் தான்பறித்து
மாதகிக்கு வேண்டுமென்று மடியிலே கட்டியபின்
மரத்தைவிட்டு இறங்கினாரே மணியரசர் கோவலரும்
எந்தனுக்குச் சொத்தைக்கனி இனிதாக நீர்போட்டீர்
நல்லகனி யாருக்கு நாயகரே மடியில் வைத்தீர்
ஆசைதந்த மாதகிக்கு அருங்கிளிக்கு வேண்டுமென்றார்
நீர் செத்தும் மறக்கவில்லை தேன்மொழியாள் தன்னாசை
என்று வர்த்தகரைக் குந்தவைத்து மயிலனையா ளேது சொல்வாள்
தலைபார்க்கும் பாவனைபோல் தார்குழலாள் கண்ணகியும்
உச்சி சரட்டை உருவிவிட்டா ளப்போது
ஒன்றா யிருந்தவர் தா மிரண்டாய் விழுந்து விட்டார்
குலை வெட்டி சாய்ந்ததுபோல் கோவலர் விழுந்துவிட்டார்
வாழைவெட்டி சாய்த்ததுபோல் வர்த்தகர் விழுந்துவிட்டார்

அப்போது கண்ணகியா ளாரை நினைக்கலுற்றாள்
கொக்கினத்தைத் தானழைத்து கோவலர்க்குக் காவலென்றாள்
கண்க ளிரண்டுக்கும் கட்டெறும்பு காவலென்றாள்
செவிகளிரண்டுக்குஞ் சிற்றெறும்பு காவலென்றாள்
காவலில்லாக் கோவலர்க்குக் காவல் வைத்தாள் கண்ணகியும்

## (கண்ணகி கோபத்துடன் மதுரைக்கு வருதல்)

மதுரை தனைத்தேடி வாராளே கண்ணகியாள்
கோவலர்க்குக் காவல்வைத்து கொம்பனையாள் வாராளங்கே
அறிவுகெட்ட பாண்டியர்க ளரண்மனை யெங்கேயென்று
ஆறாயிரம் பாண்டியரை அருங்கிளியாள் தேடி வாராள்
நாலுகோட்டை வாசல்களும் நலமாக சாத்தியிருக்க
தெற்கு நல்ல வாசலிலே தேன்மொழியாள் வந்து நின்று
கதவைத் திறவென்று சொல்லி கன்னியவள் சத்தமிட
ஆரென்று கேட்டார்கள் அங்கிருக்கும் சேவகர்கள்
திருடனுட தேவிநான் தேன்மொழியாள் வந்தேனப்பா
ராஜாக்கள் பேட்டி காண நாயகியாள் வந்தேனப்பா
கதவைத் திறவென்றாளே கண்ணகி யிளங்கொடியாள்
சேவகர்கள் தாம்பார்த்துத் திடுக்கிட்டு மெய்மறந்து
திறந்திருந்த பொற்கதவைத் திட்டென்று மூடிக்கொண்டார்
கண்ணகியுந்தான் பார்த்துக் காத்தாளாம் பொங்கியவள்
எட்டியுதைத்தாளே ஏந்திழையாள் பொற்கதவை
தாண்டி யுதைக்கையிலே தவிடுபொடி யாச்சுதப்பா
பொடியாகப் போச்சுதங்கே பொற்கொடி தன்னுதையால்
அப்போது உள் நுழைந்தா ளரிவையந்த கண்ணகியும்
அதிலே யொருவனையும் அருங்கிளியாள் தான் பிடித்து
முன்பின்னாய் திருப்பிவிட்டு மூதேவி கேளுமென்று
திருடனுடதேவி நான் தேன்மொழியாள் வந்தேன் காண்
என்னைவந்து காணச்சொல்லு இரண்டுங்கெட்ட ராசர்களை
என்ன அப்போது தூதனவன் அங்கிருந்து ஒடிவந்து
பாண்டியர் பதம் பணிந்து பத்தினியாள் சேதிசொல்ல
இப்படிக்குச் செய்தவரார் எமக்கறியச் சொல்லுமென்றார்
அப்போது சேவகனு மரசர்களுக் கேது சொல்வான்
திருடனுட தேவி தேன்மொழியாள் செய்தாளென்றான்
என்று சொல்லித் தூதனவ னெடுத்துரைத்தா னந்நேரம்
திருடனுடதேவி தேன்மொழியாள் மங்கையவள்
வந்து காணச்சொன்னாளே மன்னவரே யுங்களைத்தான்

### (கண்ணகி பாண்டியர்களைக் கண்டு நீதி கேட்டல்)

அப்போது பாண்டியர்க ளருங்கிளியாள் முன்னே வந்து
பாண்டியருள் தலைவரிடம் பாவையவ ளேதுசொல்வாள்
பழிகொடடா பழிகொடடா பத்தாவைக் கொன்றபழி
ஆளனைக் கொன்றபழி அரிவையர்க்கு நீ கொடடா
ஏதுக்கடா வெட்டிவைத்தாய் ஏதுங்கெட்ட பாண்டியனே
அள்ளினாரோ திருடினாரோ அணி மதுரைபட்டணத்தில்
அள்ளினாரோ திருடினாரோ அணிமதுரை பட்டணத்தில்
இப்படி வெட்டலாமோ ஏதுங்கெட்ட பாண்டியரே
கோட்டையேறி குதித்தாரோ கொலைக்களவு செய்தாரோ
அகழேறிக் குதித்தாரோ ஆட்டை மாட்டை சாய்த்தாரோ
சுவரேறிக் குதித்தாரோ தொந்தரவு செய்தாரோ
வழிபோவார் வருவாரை வழிமறித்து அடித்தாரோ
அவர் ஈனாத வாழை இளவாழைத் தண்டல்லவோ
குலைதள்ளாத வாழையவர் கோவலரைக் கொன்றாயடா
என்னகுற்றஞ் செய்தாரென் றிருதுண்டமாக்கி வைத்தாய்
சாக வயதலவே தனஞ்செயனார் கோவலரும்
மாள வயதலவே மன்னரந்த கோவலரும்
காய்க்கும் பிராயமவர் கன்னிகட்கு நற்காலம்
அழகுள்ளகோவலரை அநீதமாய் வெட்டிவைத்தாய்
ஆர்பழி வீண்போனால் மெந்தன்பழி வீண்போமோ
பழிக்குப்பழி கொடடா பாதச்சிலம்பு தாடா
என்றந்த கண்ணகியா ளேந்திழையுங் கேட்கலுற்றாள்

### (கண்ணகிக்குப் பாண்டியன் மறுமொழி கூறுதல்)

அப்போது பாண்டியர்கள் ஆணழகரேது சொல்வார்
காற்சிலம்பு கொண்டுபோன கள்ளனை வெட்டிவைத்தோம்
செஞ்சிலம்பு கொண்டுபோன திருடனை வெட்டிவைத்தோம்
செஞ்சிலம்பு கொண்டு போன திருடனை வெட்டிவைத்தோம்
காற் சிலம்பைத் தானழைத்தால் கள்ளன் பழி தாரோம்
செஞ்சிலம்பைத் தானழைத்தால் திருடன் பழி தாரோமென்றார்

### (கண்ணகி தன் சிலம்பை வரவழைத்தல்)

அப்போதுகண்ணகியும் அருங்கிளியாளேது சொல்வாள்
அந்தச்சபையில் நின்று அழைக்கிறாள் காற்சிலம்பை
ராஜசபையில் நின்று நலமா யழைக்கலுற்றாள்
என்ன செப்பியவ ளழைத்தா ளேந்திழையாள் காற்சிலம்பை
சுவடப் பிறக்கலையோ சுவட்டுப்பா லுண்ணலையோ

ஒக்க பிறக்கலையோ ஊட்டமுது முண்ணலையோ
எங்கேயிருந்தாலும் இப்போதே வாருமென்றாள்
வாருமென்று சொல்லியந்த மங்கையருந் தானழைத்தாள்
அப்போது பாண்டியர்கள் அவருடைய பொக்கிஷத்தில்
பெட்டிக்குள்ளே தானிருந்த பொற்சிலம்பு கேட்டதப்பா
பத்துக்கட்டு தானுடைத்துப் பறந்ததே பொற்சிலம்பு
அங்கிருந்த காவலர்கள் ஆயிரம்பேர் தலையுடைத்து
ஆவென்ற சத்தத்துடன் அண்டரண்டந் தானதிர
சக்கரம் போலே சுழன்று தனிமதுரை பாண்டியர்முன்
கண்ணகிக்கு முன்னே வந்து காற்சிலம்பு நின்றதங்கே
பத்தினியாள் தான்பார்த்து பாவையவள் ஏதுசொல்வாள்
அடி கிட்டி வரவேண்டா மெட்ட நில்லு செஞ்சிலம்பே
அண்டை வரவேண்டாம் அப்புறத்தே ஒதுங்கி நில்லு
என் தாலி பறிக்கவந்தத் தனிச்சிலம்பே ஒதுங்கி நில்லு
மாலை பறிக்கவந்த மாபாவி ஒதுங்கி நில்லு
கூறைபறிக்க வந்தக் கொடும்பாவி ஒதுங்கி நில்லு
வேசி யுன்னைப் பார்த்தாளோ தகாதவள் தொட்டாளோ
மஞ்சள் பறிக்க வந்த மாபாவி ஒதுங்கி நில்லு
என்று சொல்லி கண்ணகியும் ஏதுரைப்பாள் பாண்டியர்க்கு
பொற்சிலம்பு வந்ததுவே புத்தி கெட்ட பாண்டியரே
காற்சிலம்பு வந்ததுவே கண்ணகியாள் பழிகொடென்றாள்

## (பாண்டியர்கள் கண்ணகியைத் தங்கள் சிலம்பினை வரவழைக்குமாறு கூறுதல்)

அப்போது பாண்டியர்க ளாணழகரேதுசொல்வார்
உன் சிலம்புவந்ததிங்கே உத்தமியேபத்தினியோ
என் சிலம்பு வரவழைத்தா லுன்பழியைத் தாறோமென்றார்
அப்போது கண்ணகியா ளரிவையவ ளேதுசொல்வாள்
வட்டமிடு கருடனைத்தான் வாவென்றுதா னழைத்தாள்

## (பாண்டியர்கள் சிலம்பைக் கண்ணகி வரவழைத்தல்)

அப்போது கருடனும் அரிவை முன்னே வந்ததங்கே
உன்பழியை வாங்கித்தாரே னென் சிலம்பெடுத்து வாரும்
மைந்தன்பழி வாங்கித்தாரேன் மணிச்சிலம் பெடுத்துவாரும்
என்னஅப்போது கருடனது அந்தரமாய்த்தான் பறந்து
ஏழுகடலுக்கப்பா லேகி திருப்பாற்கடலில்
கன்னிபுற்றைத்தான் தேடிக் கருடனு மங்கேவந்து
நான்வைத்தபொற்சிலம்பை நலமாகத்தாருமென்ன
ஐந்து தலை நாகமது அன்பாகக் கருடன் கையிலே

அப்போது கருடன்கையில் அழகாய்க் கொடுத்ததங்கே
அப்போது கருடனுமே அவசரமாயோடி வந்து
பாண்டியர்கள் தம் கொழுவில் பக்குவமாய் வந்து நின்று
அந்தச் சிலம்பு வந்ததிங்கே யென் பழியை நீ கொடடா
பழிக்குப் பழி கொட்டா பாண்டியனே யெந்தனுக்கு
அறிவு கெட்டபாண்டியனே ஆளன்பழிகொடடா
புத்தி கெட்ட பாண்டியனே புருஷன்பழி நீ கொடடா
விவரங்கெட்டபாண்டியனே வேந்தன் பழி நீ கொடடா
என் கணவன் பழி கொடடா சுழிவுகெட்ட பாண்டியனே
புருஷனை ஏண்டா கொன்றாய் புத்திகெட்ட பாண்டியனே
ஆளனை ஏண்டாகொன்றாய் அறிவுகெட்ட பாண்டியனே
எவர்பழி வீண்போனாலு மென்பழி வீண்போகாது
கணவனைக் கொன்றபழி கன்னியர்க்குத்தாடா வென்றாள்
என்றவள்கேட்டாளே ஏந்திழையாள் கண்ணகியும்
அப்போது பாண்டியர்கள் ஆலோசனையேது செய்தார்
இரண்டு சிலம்புகளை யின்பமாய்த்தான்கொடுத்து
சேவகரிடங்கொடுத்து செப்புவா ரோர்வசனம்
கோவிலிங்கி தன்னிடத்திற் கொண்டுபோய் நீங்களுமே
செஞ்சிலம்பின் தன் செயலைத் தெரிந்தறிந்து வாங்களென்றும்
சிலம்பை யவரெடுத்துத் தீவிரமாயோடிவந்து
ராஜகன்னிமுன்னே நலமாகக் கொண்டுவந்தார்
கொண்டுவந்தச் செஞ்சலம்பை கோவிலிங்கி கைகொடுத்தார்
அப்போது ராஜகன்னி ஆரணங்கு மேதுசொல்வாள்
நாகரத்தினச்சிலம்பு நம்மதல்ல வென்றுரைத்தாள்
தன் சிலம்பை தானெடுத்துத் தன்காலிலே பூட்டி
என்சிலம்பல்ல வென்று எறிந்துவிட்டா ளப்போது
நாகரத்தினச்சிலம்பு நம்மதல்லவென் றுரைத்தாள்
தன்சிலம்பை தானெடுத்துத் தன்காலிலே பூட்டி
அந்தச் சிலம்பெடுத்து ஆணழகர்வாறாரே
ராஜாக்கள்முன்னெ வந்து நலமாக ஏதுசொல்வார்
கோவிலிங்கி தன்மொழியை கொற்றவர்கள் தாமுரைத்தார்
நாகரத்தினச்சிலம்பு நமதல்ல வென்றுரைத்தார்
ஆறாயிரம் பாண்டியர்கள் அப்போது விழுந்தார்கள்
கண்ணகியுந் தலைமாறன் தன்னிடத்தே யேதுசொல்வாள்
உன்சிலம்பும் என் சிலம்பும் உன் சபையில் வந்ததோடா
உன் பழியை நீ கொட்டா ஏதுங்கெட்ட பாண்டியனே
அப்போது பாண்டியர்கள் ஆணழகரேது சொல்வார்
சிட்டுப் போல் கத்துகிறாள் தேன்மொழியைத் தள்ளுமென்றார்
சிட்டென்றால் வீண்போமோ தண்ணீர் பழிவாங்கலையோ

கீரியைப் போல் கத்துகிறாள் கிளி மொழியைத் தள்ளுமென்றார்
கீரியென்றால் வீண்போமோ நாலுபழி வாங்கலையோ
நாயைப்போல கத்துகிறாள் நங்கைதனை தள்ளுமென்றார்
நாய்யென்றால் வீண்போமோ நாலுபழி வாங்கலையோ
எவர்பழி வீண்போனாலும் எந்தன் பழி வீண்போமோ
ஆளன் பழிகொடடா அறிவுகெட்ட பாண்டியனே
பர்த்தா பழிகொடடா பாரங்கெட்ட பாண்டியனே
என்றுமவள் கேட்க ஏதுசொல்வார் பாண்டியர்கள்
மாதரைப்போல் கூவுகிறாள் மங்கைதனை தள்ளுமென்றார்
பெற்றமகள் மாதரென்றால் பூமியிடங் கொள்ளுமோடா
வளர்த்தமகள் மாதரென்றால் வையகங்கள் கொள்ளுமோடா
பத்துக்கு அர்த்த சொன்னால் பர்த்தா பழி தாரோமென்றார்
அப்படியே அர்த்தங் சொல்லி அரிவையந்த கண்ணகியாள்
புருஷன் பழிகொடடா புத்திகெட்ட பாண்டியனே
அப்போது பாண்டியர்கள் அரிவையவட்கேது சொல்வார்
அறியாமற் கொன்றுவிட்டோம் அறிவையே என் செய்வோம்
தெரியாமற் கொன்றுவிட்டோம் தேவியே ஏதுசெய்வோம்
அப்போது கண்ணகியாள் ஆரணங் கேதுசொல்வாள்
முற்பழிப் பிற்பழிதா னிப்பழி தாருமென்றார்
இப்படிக்குத் சொன்னாலே ஏந்திழைநான் விட்டிடுவேன்
என்ன அப்படியே சொல்லுகிறோம் ஆரணங்கே விட்டுவிடு

## (கண்ணகி மதுரைப் பாண்டியர்களைக் கொல்லுதல்)

கோட்டைவெளிதனிலே கொற்றவர்கள்வாருமென்றார்
அப்படியே நல்லதென்று அனை வோரும் வந்தார்கள்
ஆறாயிரம் பாண்டியர்கள் ஆணழகர்வந்துநின்றார்
தாழ்வுவந்து சேர்ந்திருக்கத் தலையில் கிரீட மன்னன்
அபகீர்த்தி வந்திருக்க புஜகீர்த்திதானுமென்ன
தலையில் கீரீடத்தைத் தாழவையு மென்றுரைத்தாள்
புஜகீர்த்திதான் கழற்றிப் பூமிதனில்லை வையுமென்றாள்
பூணூல் கழற்றி வையும் புத்திகெட்ட பாண்டியரே
கணையாழி மோதிரத்தைக் கழற்றிவையு மென்றுரைத்தாள்
அத்தனையுந்தான் கழற்றி ஆணழகர் தாழவைத்தார்
மந்தைவெளி மாடது போல் மன்னர்களை நிற்கவைத்தாள்
முற்பழி யிற்பழிதான் இப்பழி மூன்றுபழி
சொல்லிவாய் மூடுமுன்னே தோகை யிளங்கொடியும்
வாவென்று தானழைத்தாள் வருகிறது மறுரூபம்
காளியென்றரூபமதைக் கண்ணகியும் தானெடுத்தாள்
சிங்கபல்லுஞ் செஞ்சடையுஞ் சிவனுடைய ரூபமுந்தான்

கோடாலிப் பல்லழகும் கோழிமுட்டைக் கண்ணழகும்
இரண்டுகரந்தனிலே எடுத்தாள்திரிசூலம்
சூலமொருகையில் சுக்குமாந்தடி யொருகை
பாசமொருகையில் பன்னிருவேல் தானெருகை
மாடறுக்குஞ்சூரி மடியிரண்டு பாங்குடனே
ஆறாயிரம் பாண்டியரைக் குத்தினாள் பாண்டியரை
சிறுகுடலும் பெருங்குடலுஞ் சேர்த்து பிடுங்கினாளே
பாண்டியரைக் கொன்றுவிட்டுப் பாவையவ ளெங்கேவாறாள்

## (கண்ணகி பாதகர்களை யெல்லாங் கொல்லுதல்)

வஞ்சிபத்தன் வீடுதேடி வாறாள் மயிலனையாள்
முத்துமாலை தன்னையப்போ மூடிவைத்தார் பழங்கலத்தால்
பரணைமே லொளிந்திருந்தான் பாதகன்வஞ்சிபத்தன்
ஆரடா வென்று சொல்லி அதட்டினாள் கண்ணகியாள்
அதட்டினசத்தத்திலே அக்கலங்கள் தானுடைந்து
பழங்கலங்கள் தானுடைந்து பாவையிளங்கொடியாள்
அப்போது முத்துமாலை ஆரணங்குவெளிப்பட்டாள்
எட்டி சிகைப்பிடித்து இரண்டு உதையுதைத்து
பரணையி லிருந்தவனைப் பற்றியேதானிழுத்து
குத்திச்சரித்துமவன் குடலைப் பிடுங்கிக்கொண்டாள்
தோள்மாலை தானணிந்தாள் தோகை மயிலனையாள்
ஐந்து மாதங் கர்ப்பமாய் அரிவையந்த முத்துமாலை
வஞ்சிபத்தன் பிள்ளைகளும் வாரா ரிருவருந்தான்
அப்போ கருடனவன் இவர்களைத்தான்பார்த்து
மைந்தனைக் கொன்றவர்கள் வாரார்களிருவருமாய்
என்பிள்ளையைக்கொன்றப் பழி வாங்க வேண்டுமென
சொன்னவுடனே யந்தத் தோகை மயிலனையும்
வாவென்று சொல்லியே மைந்தர்களைத்தா னழைத்து
எழுத்தாணிகொண்டு ஏந்தினழயாள்குத்தியவள்
சிறுகுடலும் பெருங்குடலுஞ் சேர்த்துமேதான் பிடுங்கி
ஆகாசமாவேதான் அந்தரத்திற் விட்டெறிந்தாள்
காலாலே கவ்விகொண்டு கடுகெனவே போச்சுதுகாண்
பகடையாடிக்கொண்டிருந்தாள் பாவையந்த கோவிலிங்கி
சிறுகுடலும் பெருங்குடலுஞ் சேர்த்துப் பிடுங்கிக்கொண்டு
வேதவாத்திபள்ளிக்கூடம் மெல்லியவள் வந்து நின்றாள்
மதுரைவிட்டு அப்பாலே மன்னவனே விலகுமென்றாள்
சிந்தாமணிதாசி தன்னைச் சீக்கிரம்போய்விடென்றாள்
பன்னிரண்டமைச்சர்களைப் பத்தினியாள் போங்களென்று

அங்கிருந்து கண்ணகியாள் ஆரணங்கு எங்கேவாறாள்
நாலுமதுரையது நடுமதுரை வந்துநின்றாள்

## (கண்ணகி மதுரையைக் கொளுத்துதல்)

தன்சிலம்பை தானெடுத்து தனிமதுரை விட்டெறிந்தாள்
அதுபட்ட இடங்களெல்லாம் அக்கினியாய் பற்றுதங்கே
தாயார் சிலம்பெடுத்துத் தனிமதுரை விட்டெறிந்தாள்
அரும்பு பட்ட இடமெல்லாம் குபுகுபென்று பற்றுதுபார்
தென்மதுரை வடமதுரை தேன்மொழியாள் தான்பார்த்து
வலது மார் திருகி வடமதுரை விட்டெறிந்தாள்
பால்பட்ட விடங்களெல்லாம் பற்றியெரியுதுபார்
நாலுமதுரையெல்லாம் நன்றாயெரியுதுபார்
நடுமத்தி நின்று கொண்டு நாரி யுக்ரமாயிருந்தாள்
கறுத்தபுகை சிவந்தபுகை கண்டுவிட்டாள் கண்ணகியும்
இப்படியாக இருக்குமந்த வேளையிலே
வெண்ணெய் குடமெடுத்து வாறாள் தயிரிடைச்சி
அங்கே வரவொட்டாமல் அக்கினியாய் பற்றுதங்கே
தன் முன் தானை கிழித்து மார்பில் வரிந்துகட்டி
முழந்தால் விசிறினாளே மெல்லியந்த சீர் பறைச்சி
தேகங்குளிர்ந்தவுடன் திரும்பியேதான் பார்த்தாள்
இடைச்சி பறைச்சியற்கு என்ன வரங்கொடுப்பாள்
எந்தத்தெரு வெந்தாலும் இடைச்சிதெருவேகாது
பார்மதுரை வெந்தாலும் பறத்தெருவேகாது
என்று வாழ்த்தி வரங்கொடுத்து மாதர்களைப் போங்களென்று
படுகளத்தைத்தான்தேடி பத்தினியாள் வாறாளங்கே

## (கண்ணகி மாதகிக்கு ஓலையெழுதி அனுப்புதல்)

ஒலை யெழுதுகிறாள் உறவுள்ள மாதகிக்கு
என் சக்களத்தி மாதிகியே சங்கதியும் நீ கேளு
உன் கடனுக்காகவே தான் உத்தமனார் கோவலனார்
செஞ்சிலம்பு விற்க வந்த செட்டியார்தாம் மடிந்தார்
மாண்டு மடிந்துவிட்டார் வடிவழகர் கோவலரும்
என்று இப்படிக்குச்சொல்லி எழுதினாளோலைதனை
காகத்தைத் தானழைத்துக் காலிலதைக் கட்டிவிட்டாள்
ஓலைச்சுருளெடுத்து ஓடிவந்து காகமது
மாதகிக்குமுன்னே வந்து மடக்கோலை போட்டதங்கே
ஓலைச்சுருள் பார்த்தாள் ஒளியுள்ளமாதகியும்
ஓலையின் மர்மமெல்லாம் ஒக்கவேதான் பார்த்து

துக்கப் பெருகியவள் தூரிதாய்யுள் நுழைந்து
செட்டியார்தான் கொடுத் திரவியங்க ளத்தனையும்
நலமுடனே மாதகியும் நாலு பங்குதான் பகுந்தாள்
கோவிலுக்கோர் பங்கு குருக்கள் தமக்கோர் பங்கு
தாயாருக்கோர் பங்கு தருமத்துக்கோர் பங்கு
கோடாலிமுடிபோட்டு மஞ்சள் துகிலுடுத்தி
மாதகியாள் வடிவுகண்டு மயிலணையாள் போயொளித்தாள்

## (மாதகி கோவலரைக் கண்டு அழுது புலம்புதல்)

ஆளனைக்கண்டுவிட்டா ளாரணங்கு மாதகியாள்
அழுது புலம்பலுற்றாள் அந்த நலலமாதகியாள்
வந்தாள் படுகளத்தில் விழுந்தாள் புரண்டழுதாள்
ஐயோ சிவனேயென் றலறிப் புரண்டழுதாள்
மடிந்தீரோ மன்னாவென்று மாரடித்துக்கொண் டழுதாள்
செத்தீரோமன்னா வென்று சேர்த்து முத்தமிட் டழுதாள்
வெற்றிலைபோட்டதொரு வெள்வாயை முத்தமிட்டாள்
தக்கோலந் தின்றதொரு தனிவாயை முத்தமிட்டாள்
முத்தம்கொடுத்துமவள் மோதி யழுவாளாம்
பக்கத்தில் நின்றுமவள் பறந்து மாரடிப்பாளாம்
சூத்தியாள் வந்தேன்காண் மெல்லியவ ளேன் வருவாள்
தாசிநான் வந்தேன்காண் தையலவளேன்வருவாள்
என்று சொல்லிமாதகிதா னெழுந்தழவே யப்போது
நான் கூடவந்தே னென்று நாயகியாளோடிவந்து
எதிரில் நின்று மாரடித்தா ளேந்திழையாள் கண்ணகியும்
இருவருமாய் மாரடித்தார் இறந்ததொரு கோவலர்க்கு
மாதுகண்ணகிபார்த்து மாதகிக்கேது சொல்வாள்
செட்டியார் தன்னுடனே தேவிநான் மாழுகிறேன்
எங்களிருவரையும எடுத்துத்தகனஞ்செய்யும்
என்ன அப்போதுமாதகியாள் ஆரணங்கேது சொல்வாள்
பலன் கண்டமாதகியாள் பதினியு மேதுசொல்வாள்
பலன்கண்டாள் நானிருக்க பாத்தினியாள் மாளுவானேன்
சுகங்கண்டாள் நானிருக்க தோகைநீ மாளுவானேன்
நீ என்ன சுகமறிவா யென்றன் தமக்கையரே
நான் கூடமாழுகிறேன் தூயகர் தம்முடனே
எங்களிருவரையும் எடுத்துத் தகனஞ்செய்யும்
உனக்குச் சம்மதியாவென்றுரைத்தாள் தையலந்த மாதகியும்
அப்படியே சம்மதித்தாள் ஆரணங்கு கண்ணகியாள்

## (கண்ணகி கோவலரையும் மாதகியையும் தகனஞ்செய்தல்)

வாழைமரத்தை வெட்டி மகாகாஷ்டந்தானடுக்கி
கோவலரைத்தானெடுத்துக் கொம்பினை மாரிருவர்களும்
கழுவிக் குளிப்பாட்டிக் கால்கட்டு கட்டலுற்றார்
காஷ்டத்தின் மேலே வைத்தார் கட்டழகர்கோவலரை
மாதகியாளப்பொழுது மன்னருடன் தான்படுத்தாள்
இவள் கைமேலாவர் சிரசும் அவர்ளை மேலிவள் சிரசும்
கட்டியணைத்துக்கொண்டு கட்டழகிதான்படுத்தாள்
கொள்ளிவையென்று சொன்னாள் கோலவிழிமாதகியும்
கொள்ளிகட்டை தானெடுத்துக் குடமொன்றுகைபிடித்து
கொள்ளிக்குப் பிள்ளையானேன் குடமுடைக்க மைந்தனானேன்
என்றுசொல்ல கண்ணகியா ளெடுத்தாளே வாய்க்கரிசி
அழியிடு கையாலே அள்ளியிட்டாள்வாய்க்கரிசி
கொள்ளியிடப் பிள்ளையில்லை குடமுடைக்கமைந்தனில்லை
என்றந்தகண்ணகியு மெடுத்தாளே பச்சைவாழை
ஈணாதாவாழை இளவாழைத்தண்டெடுத்து
அட்டாளுஞ்சொக்கர்தமை ஆண்டவரை மனதிலெண்ணி
இதுதான் காண் கொள்ளியென இருவருக்குந்தான் சொருகி
கண்ணகியுமெய்யானால் கலந்துபற்றி வேகுவென்றாள்
என்று பத்தினியாள் சொல்லையிலே பற்றிதீயெரிகுதுபார்
கலந்துபற்றி வேகையிலே கண்ணகியாளேது சொல்வாள்
மாதகியென்று சொல்லி மயிலனையாள் தானழைத்தாள்
ஏனம்மாவென்றுசொல்லி யெடுத்துரைத்தாள் மாதகியும்
மூன்று தரமழைத்தாள் மூன்று குரல்கொடுத்தாள்
சந்தோஷப்பட்டாளே தையலந்த கண்ணகியும்
காஷ்டந்தணிந்தபின்பு கண்டாளேகண்ணகியும்
சுட்டதொரு அஸ்திகட்குச் சோறிட்டுநீர்தெளித்து

## (கண்ணகி இருவருடைய அஸ்திகளைக் காசி கங்கையில் விடுதல்)

இருவருட அஸ்திகளை ஏந்தழையா ளெடுக்கையிலே
மாதகியாள் மடிதனிலே வைத்திருந்த புஷ்பமுதல்
வைத்தா[illegible]யிருக்கக் கண்டாளே கண்ணகியும்
பத்தினி[illegible]ளென்று சொல்லி பாவை மனதிலெண்ணி
இருவருட அஸ்திகளை ஏந்திழையாள் தானெடுத்து
காசி நதிதேடிக் கண்ணகியாள் வாறாளே
அப்போது சொக்கலிங்கம் ஆண்டவனா ரேதுசெய்தார்
அவ்விடத்தி லாலயங்கள் அற்புதமா யுண்டுபண்ணார்

அங்கேயொரு வேதியர்போல் ஆண்டவனார் வீற்றிருந்தார்
வேதியரைத்தான்பார்த்து மெல்லியவ ளேதுசொல்வாள்
காசி நதியெங்கேயென்று கண்ணகியாள் கேட்கலுற்றாள்
இதுதான் காசிநதி யென்றுரைத்தார் வேதியரும்
கோவலனார் அஸ்தியெலலாம் மல்லிகைப் புஷ்பமாச்சு
மாதகியா எஸ்தியெல்லாம் பூதொடுக்கநாராச்சு
நாருநல்லபூவதுவும் ஜலத்தில் மிதக்குதுபார்
என்ன கண்ணகியாளப்போது கண்டுமனமகிழ்ந்து
பத்தினியாளென்று செல்லிப் பாவை மனதிலெண்ணி
அப்போது கண்ணகியாள் ஆரணங்கு எங்கேவாறாள்
வேம்பூரு எல்லைதாண்டி விரைவாக வாராளே
மலையாளத் தெல்லையிலே மயிலணையாள் வந்திருந்து
பகவதியாளென்று சொல்லிப் பட்சமுடன் பேருபெற்று
இங்கேசிலகாலம் அரிவையவள் தானிருந்தாள்
இருக்கப்பொருந்தாமல் இயலான கண்ணகியும்

## (கண்ணகி திருவெற்றியூர்க்கு வருதல்)

கடலோரம் நல்வழியாய்க் கண்ணகியும் வாறாளே
ஒற்றி நகர்தேடி யுத்தமியாள் வந்து நின்றாள்
திருவெற்றியூர் தனிலே தியாகரும்அம்மனுமாய்
சொக்கட்டானாடிருந்தார் சுந்தரர்க்குக் தூதுவந்தோர்
பகடைகளாடிருந்தார் பரவையவர்க்குத் தூதுவந்தோர்
சதுரங்க ளாடிருந்தார் சங்கிலிக்குத் தூதுவந்தோர்
அந்தச் சமயத்தில் கண்ணகியாளங்கு வந்தாள்
கண்ணகியைக் கண்டவுடன் கடுகதியாகர்தேவி
அந்தப் புரந்தனிலே அம்மாளவள் போயெளிந்தாள்
தேடியச்சமயத்திலே தியாக ரண்டைவந்து நிற்க
கையிலேதானிருந்தப் பகடைகளை விட்டெறிந்து
எங்கே வந்திரென்றுசொல்லி ஏந்திழையைக் கேட்கலுற்றார்
தாகமுண்ணத் தாருமென்றாள் தயவுடனே கண்ணகியும்
அப்போது தியாகரவர் ஆண்டவனாரேது சொல்வார்
ஆழச்சுனையிறங்கி அள்ளிப் புசியுமென்று
பாசியதைத் தள்ளியே பாவை ஜல முண்ணுமென்றார்
அப்படியே நல்லதென்று ஆரணங்குதானிறங்க
இறங்கின சாட்டைகண்டு ஏதுசெய்தார்தியாகரவர்
பாறையைக் கொண்டு மவர் கடுகெனவேமூடிவிட்டார்
கண்ணகியுந்தான் பார்த்துக் கனமோசம் வந்ததென்று
அதுவறிந்து தியாகரவர் அங்கொருகல் மூடிவிட்டார்
பூந்தோட்டமுன்பாகப் பூவையவள்தானெழுந்தாள்

அதுவறிந்துசுவாமியவர் அங்கொருகல் மூடிவிட்டார்
காசிகுளம் மேடருகே கண்ணகியாள் தானெழுந்தாள்
அதுவறிந்து ஆண்டவனார் அங்கொருகல்முடிவிட்டார்
கண்ணகியாள் பார்த்துக் கன்றிக்கலக்கமுற்றாள்
தேவி கலக்கந்தெரிந்து தியாகரவர் ஏதுசொல்வார்
இன்றுமுதற்கொண்டு இங்கேயிருந்துவிடு
சித்திரைமாதத்திலே சிறப்பானநாளையிலே
முதற்பூசையுந்தனுக்கு மேலாகத் தாரோமென்றார்
இன்னமும்வேண்டியதை எனக்கறியச் சொல்லுமென்றார்
கண்மூன்றுடையவர்க்குக் கண்ணகியா ளேதுசொல்வாள்
எட்டு குட்டி எட்டுபொட்டை எட்டுமுட்டைஎட்டுசட்டி
கம்மாளர் பலியெனக்குக் கடவுளே தரவேண்டும்
வருஷத்துக்கோர் பலிதான் வகையாய்க் கொடுக்கவேண்டும்
என்ன அப்போது தியாகரவர்அப்படியே தாரோமென்றார்
வட்டபுரியம்மனென்று வகையாகப்பேருபெற்று
ஆண்டுக்கொருதரந்தான் அழகுள்ள கம்மாளனைப்
பலிவாங்கிக் கொண்டிருந்தாள் பூவையந்தக் கண்ணகியும்
அப்போதொருவருடம் ஆனதொரு கம்மாளன்
பத்துப்பதிகமது பாவையர்க்கு முன்படித்தான்
கங்கையாய் பாலதுதான் கண்ணகிக்குதான்சுரக்க
வட்டபுரியம்மனவள் மனமகிழ்ந்துதேதுசொல்வாள்
இன்று முதலெந்தனுக்கு இந்தபலிவேண்டாமென்று
எருமைக்கடாகாவு தந்தால் இன்பமாய் நான்கொள்வேன்
என்ன அப்படியேசம்மதித்தார் ஆதிபுரீசுஸ்வரனார்
கனவில்வந்து தானுரைத்தார் கலியுகத்துமானிடர்க்கு
ஆண்டவனார் சொற்படியே அன்புள்ள காவலர்கள்
பூசைதவறாமல் புண்ணியர்கள் செய்திடுவார்
செவ்வாய் புதன்கிழமை திருவாட்சிமேல் வருவாள்
வந்தவர்க்கு வரந்தருவாள் வட்டபுரிநாச்சியம்மன்
வட்டபுரியம்மன்கதை வகையுடனேவையகத்தில்
கற்றவர்கள்கேட்டவர்கள் கலியுகத்திற்சொன்னவர்கள்
மூங்கில்போல்சுற்றும் முசியாமல் வாழ்ந்திருப்பார்
வாழிவாழி யென்று சொல்லி வரமளித்தா ரீஸ்வரனார்.

(முற்றும்)

(கதைப்பாடலை சின்னத்தம்பி ஐயர் பாடியிருக்கலாம் எனத் தோன்றுகிறது.)

## (காப்பு)

வருபகமெல்லாம் மெந்தம் மனதில் வட்டஞ்செய்து
உறுவிதம் பணிந்து நிற்க வுகந்திட கருணை தந்தாய்
பருபதம் யேடாய் கெட்டி பாரதம் யெழுதிச்சேர்த்த
குருபரன் மூர்த்தி யீன்ற குழந்தையைப் போற்றினேனே.

போற்றினேன் பிறந்தோர் பாதம் புகழ்ந்தோர் மெய்க்க
சேற்றிலே முளைத்தெழுந்த செல்லலைக் காற்றுபோலே
ஆற்றிய முன்னோர் பேரு மரும் பொருட்டனத்திற் கொப்பாய்
மூர்த்தியாய் கைலை மீதில் மூவரு மரசிருந்தார்.

இருந்தனர் கையிலை மீதி லியல்புடன் பரதர்க்காக
வருந்திய சிவனார்தாமு மங்கையைப்பிறவி செய்து
திருத்தவே யுமையா ளந்தச் சிவன் கைலாசம் விட்டு
கருங்கடல் மீதிலுற்ற காவியம் பாடலுற்றேன்.

## (கயிலைச் சிறப்பு)

வீரலட்சிமி பிறந்த வெள்ளிக் கைலாசம்
விஷ்ணுபகவான் வலஞ்செய் வெள்ளிக் கயிலாசம்
பார்வதியாள் நானென்று பரந்த கயிலாசம்
பங்கு தப்பிலொன்றுபோலே பார்த்த கயிலாசம்
அடியவர்க ளிருதயத்தி லாடுங் கயிலாசம்
அன்று முதலரசிருப்பாய் நின்ற கயிலாசம்
கடிவரக்க னொடி கண்ட கயிலாசம்
காவலுக்கு மூத்த நந்தி காணிக் கயிலாசம்
ஆசனத்தின் வடிவாக வமர்ந்தக் கயிலாசம்
போசன முட்டா துலக பூதங்களை யீன்று
பூரணமாய் சிவனைப் பொதிந்தக் கயிலாசம்
எட்டுமலை யேழுகடல் யீரேழு புவனம்
இத்தனைக்கு மச்சாணி போற்ற கயிலாசம்
பச்சமுள்ள கயிலாச பருவத்தின் மேலே
பார்வதியு மீஸ்பரனும் பரவித் திருந்தனராம்.

## (அதியரசன் பிள்ளை வேண்டி தவமிருத்தல்)

## (வேறு)

ஈஸ்பரன் வெள்ளிக் கயிலை யிடமிருக்க
ஈண்டிய செல்வத்து பாண்டிய வளநாடுதன்னில்

வாசம் பொருந்திய மங்கைபதி யிடமாய்
உத்திரகோசத் ததியரசனுள்ள யோகம்
உள்ளதே யல்லது பொய் யொரு நாளு முரையான்
கர்த்தாவுக்கேற்க அடைந்து கொள்வா னிந்த முகம்
கடல்மீன் பிடித்தவன் பூசைக் கடன்கள் கழிப்பான்
வீச்சுவலைக்குள் எகப்பட்டமீன் கொல்லாமல்விட்டு
மீண்டு படுகின்ற மீனைப் பணத்திற்கு விற்பவன்
பூச்சியமுள்ள பொருளைச் சிவனுக்குப்போட்டு
புண்ணியவான்கள் புசித்திட மிச்சம் புசிப்பான்
மங்கைப்பதியி லருணவல்லி யெனுமாது
வாழ்மனையாட்டிக்குப் பிள்ளையில்லாமல் மலைந்தான்
சங்கு சரத்திலே யிருக்குந் தவசு
தள்ளும்படிக்கு நான் மெள்ளப்புரிவோந் தவசு
சாக்கால மில்லாத மார்க்கண்டன் போல் பிள்ளைத் தந்தால்
சம்பத்துபேறுங் கயிலாசத் தெய்வந்தருமே
வாங்கு சகாயங் குறையாமல் பிள்ளையை வாங்கி
வந்தாக்கால் நம்முடவாழ்வுக்கு மேலுண்டோ வாழ்வு
கோவிலுப் பூசை விசாரிக்க வேணுங் குழந்தை
கொஞ்ச புத்திக்குப்பிள்ளை வேண்டாமோ யிந்தக் குடிக்கு
சேவித்து நல்வரம் வாங்கச் சொன்னாளாந் தேவி
தேவாதி தேவனார் கோவிலிடமாகச் சென்று
பூசைதேவாரத்தின் கட்டளைக் காலத்தைப் போக்கி
புண்ணிய காலமிதுவென்று தேவனைப்போற்றி
புண்ணிய காலமிதுவென்று தேவனைப்போற்றி
ஆசைக்குத்தக்க அறிவுள்ள பிள்ளை யருளென்றே
அரனாரிடத்தி லதியரசன் தபசானான்.

## (பார்வதிக்கு சிவன் மறைபொருள் ஓதுதல்)

## (வேறு)

அப்படியே தவசுபண்ணி யக்கரையி லவணிருக்க
செப்பமுள்ள கயிலாச சிவனிடத்தில் பார்வதியாள்
சமயமிதுவென்று சொல்லி சங்கரனார்க் கெடுத்துரைப்பாள்
அமயகிரி கலியாண மெனை முடிக்க வரும்போது
குடையுமில்லை பாம்புமில்லை தலையோடு கையுமில்லை
புடையுருண்ட யானையின் றோல் புலித்தோலு முடுக்கவில்லை
சுடலையிலே பாடாமல் சூரியன்போல வந்தீரே
பிடிசாம்ப லணிவானேன் பேயோடே குதிப்பானேன்
பிரமனுட மூட்டெலும்பு பிடரியிலே கிடப்பானேன்
துரிதமுட னுமக்குச் சோறூட்ட மாட்டேனோ
மிச்சமுண்டா பிச்சையென்று வீட்டுவழி திரிவானேன்
இச்சையுள்ள கோலமதை யெனக்கறியச் சொல்லுமென்றார்
பார்வதியாள் செவிகேட்கப் பரமசிவ னெடுத்துரைப்பார்

தூரமெத்தவா யிருக்கும் சொல்வதற்கு பக்கத்து
ஒருவருக்கும் தெரியாத வுபதேசமாயிருக்கும்
நிறையுறைக ளாவதற்கு நெடுங்காலமா யிருக்கும்
கயிலாசந்தனிலிருந்து கட்டுரைக்கப் போகாது
குயிற்போல்மொழி யுமையை கொண்டு போனார் வெகுதூரம்
கடலினுட நடுத்தானங் கரைகாணா மசகுதனில்
வடவை யொருபுரமாக வந்திருந்து பரமசிவன்
பார்வதியாள் பிறப்பையெல்லாம் படத்திலெழுதுவாராம்
நாராயணர் தன் பிறப்பை நடுப்படத்தி லெழுதுவாராம்
பரமனுட பிறப்பதையு மிறப்பதையு மெழுதுவாராம்
வரியெழுத்தை யுமையவட்கு மகாதேவ ரறிவிப்பாராம்
சமர்த்தையெல்லாம் மறிந்துமையாள் சங்கரனோ டேதுரைப்பாள்
உமக்கொப்பாய் யரசிருந்தா லுயிர்சேதம் வருவானேன்
மனதிலே நினைத்தபடி வையகத்தைப் படைப்பானேன்

## (பார்வதியின் அறியாமை)

எனக் கேட்ட பார்வதிக்கு யெடுத்துரைத்தா ரீஸ்பரனார்
தக்கன் மகளாய் பிறந்து சாக்காலமுண்டாச்சு
தொக்கிலே தான் போவார்களே சொன்னபடிகேளாமல்
ஆசை வந்து பிரிந்துதென்றா லறிவுவந்து பிடியாதோ
பேசுவதா லாவதுண்டோ பிரமைதனை யொடிக்காமல்
அம்பலத்தி லாடாமல் முக்குண முண்டாமோ
கொம்பனையே சுடுகாட்டில் குதிப்பதுவே சங்காரம்
முன்னொருநாள் மலையரசன் முதல் மகளாய் பிறந்தாய்
இன்னுமொரு பிறவிவந்து யிழுக்குதுன்னை யென்றுரைத்தார்
சாகாத சிவனோடே சங்கரித் தாயாருக்கு
போகாம லிருப்பதற்கு புத்தி சொல்லக் கூடாதோ
உம்மோடே யிருப்பானே னுயிர்சேதம் வருவானேன்
சம்மதியாப் போரோடே தபசுபண்ணக் கூடாதோ
இப்படித்தா னம்மை சொல்ல ஈஸ்பரனா ரெழுதுகிறார்
பொற்படத்தைக் கடல்மேலே போட்டாரே புண்ணியனார்
என்னைப் போற் சாகாமலிருப்பதற்குப் புத்தி சொன்னேன்
உன்னுடைய வறியாமை யொருக்காலே தீருதில்லை
அறியாமை யிருந்ததுண்டோ வழிவழக்குத் தீராது.

## (முருகப் பெருமானும் பார்வதியும் சாபம் பெறல்)

உறுதியா யின்னமொரு வுபதேசங் கேளுமென்றார்
ஒன்றாக யித்தனையு மூடுகின்றதனை
கண்டுகொள்வீரென்று சொல்லிக் காண்பித்தார் பார்வதிக்கு
தண்டமிழ்சேரு வேலர்தன் தாயார்தன் கூந்தலிலே
வண்டு ரூபமாயிருந்து மறைந்திருந்துகேட்டனரே
ஒளித்திருந்து குருவினிட வுபதேசங் கேட்டதினால்
வளர்கடலிற் குமரேசர் மகரமதாய் போவா யென்றார்

பிள்ளையாயிருந்து தென்றால் பிதாவின் முன்னே வராதோ
கள்ளனை வைத்திருந்த துண்டால் கடல்மகரமாய் போவாயென்றார்
இப்படிக்குச் சாபமிட்டு மீஸ்பரிக்கு புன்னுரைத்தார்
தப்பான வினை போகத் தள்ளினால் போகாது
அதியரசன் மகளாகி அவதரித்தக் காலமதில்
பருகடலில் மகரமதைப் பிடிப்பதற்கு வருவேனான்
என்றுசொல்லி பார்வதியை யிளங் குளவியாக்கி வைத்து
குன்றுவெள்ளிக் கையிலாச கோட்டையிலே சிவன்போனார்.

## (அதியரசன் பார்வதியாகிய குழந்தையைக் கண்டெடுத்து மனைவியிடம் கொடுத்தல்)
## (வேறு)

அப்பனார் சொல்லைத் தப்பாமல் வேலவர்
அலை கடலில் மகர மீனாகினார்
செப்பமாயொரு பொட்டகத்துள்ளே
சிவகாமி சிறு பிள்ளையாகினாள்
மகரமீனின் முதுகிலே பொட்டகம்
வைத்துக் கொண்டு தெற்குமுகம் வைக்குதாம்
சகல மீன்களும் கூடத் துடருதாம்
தாயைப் பிள்ளைச் சுமக்கின்ற தன்மையாய்
முத்துச் சிப்பிகள் முன்னே துடருதாம்
மோதிச் சங்குகள் முன்னே முழுங்குதாம்
கொத்துக் கொத்தாய் பவளக்கொடிகள்தான்
கொழுந்துவிட்டு படருது கூடவே
இலங்கைதேசத்து கிட்டே திருவணை
இலக்குப்பார்த்துத் தனிக்கொடி நோக்குதாம்
வட்டம் சுத்தி மகரம்வருகுதாம்
தோணிக்காரர்தன் கண்ணுக்குத் தோன்றாமல்
சூளை யதியரசன் கண்ணுக்குத் தோன்றுதாம்
மாணிக்கப் பெட்டகந் தன்னைக் கண்டவன்
வந்த செல்வத்தைச் சந்திக்கப் போவென்றான்
எந்த நாட்டிலிருந்து வருகுதோ
இலக்குத் தப்பாமல் கப்பல் கவிழ்ந்ததோ
கப்பல்காரர் கடத்தும் சரக்கிதோ
கடலில் முட்டையுட வரு மாமையோ
சிப்பர் கூடியே சேத்துறு சமைக்கின்ற
செப்பவளப்பெட்டகம் போலே வருகுது
எப்படியோ தெரியாது என்றெண்ணியே
எழுந்திருந்து வருவதைப் பார்த்திட்டான்
செப்பமுள்ள சிவகாமிப் பொட்டகம்
திண்ணமா வருவதைக் கண்டிட்டான்
தங்கப் பெட்டகத்துள்ளே யிருந்தவள்

தம்பிராட்டியென பார்வதி யம்மைதான்
தண்டைக்காலும் சதங்கையும் காட்டினாள்
பங்கமில்லா சிவன் கையினா லிட்ட
பட்டுமெத்தைத் தலகாணி தெரிசித்தார்
சின்னக் காப்பிட்ட கையைக் குலுக்கியே
சிவந்தவாயில் சிரிப்பாணி தெரிசித்தார்
மண்ணின் மேலக்கரைக்கிட்டச் செல்லவே
மகர மீனது வைத்துப் பின்வாங்குதாம்
கண்ணிற் காணாது மீன் கடலில்போக
கருவிலப் பொட்டகத்தைப் பிடிப்பானாம்
எண்ணிக்கொள்ளப்படாதச் சந்தோஷமாய்
எடுத் தணைத்துக் கரைதனி லேத்தினார்
கேட்டபோருக்கு வாய்பிளக்கப் போமோ
கிடங்குபார்த்து நடந்திடக் கூடுமோ
தாட்டீகமுள்ள பார்வதியைக் கண்டால்
சன்னதமாகாதோ சந்தோஷத் தெய்வம்
அருணவல்லி மனையா ளிடத்திலே
அவன் கொடுக்க அவள்வாங்கி யென்சொல்வாள்
எவனுக்கும் பிச்சைபோட்டிருந்தா னென்றே
எனக்குப் பிச்சை பரமசிவ னிட்டார்
அவரவர் பிள்ளைக் காசை வையாமலே
அறம் வளத்தவள் தன்பிள்ளை யாகினாள்
எந்தன்வீடு கைலாச மாச்சுதே
இங்கு வந்தாயென முத்தமிட்டனள்
சங்கு மாமுலை பாலூட்டி தொட்டில்மேல்
சகலபேர்களும் கேட்கத் தாலாட்டினார்கள்

## (அதியரசன் மனைவி அருணவல்லி குழந்தையைத் தாலாட்டுதல்)

## (வேறு)

ராரிரோ ராரிரோ ராரிரோ ராரிவரோ
மாணிக்கமோ மரகதமோ வளந்தன்னில் விழுந்தமுத்தோ
ஈனாது ஈன்றெடுத்த இளவாழைத் தண்டோ
விண்ணி லுள்ளோர் காணாத வேதப் பரஞ்சுடரோ
தண்ணீரதே விளைத்த தளரா மணிவிளக்கோ
பார்வதியே நீயெனக்கு பாற்குடமாய் வந்தவளோ
சார்புடைய நாரணர்க்குத் தங்கையரும் நீதானா
பாதகருட குடியிருப்பைப் பார்க்கவந்த பார்வதியோ
உரைசிறந்த பொருளையெல்லா மோதிவைக்க வந்தவளோ
தணல்வேள்விதனை யிழுந்தத் தக்கன்மகள் நீதானோ

அழுதபிள்ளைப் பசியமத்த வமுதங் கொண்டுவந்தவளோ
இலட்சிமியாள் முறைமதினி யென்பதுவு முனைத்தானோ
மிச்சமுள்ள சிறுத்தொண்டர் வீட்டி லமுதுண்டவளோ
சங்கரனை வீட்டில் வைத்து தனி வழியே நின்றவளோ
எங்களுடசிறுகுடியை யீடேற வந்தவளோ
மங்கைபதி தழைக்க வந்தவளே ஆராரோ.

## (பார்வதி பருவமடைதலும் அழகில் சிறந்து விளங்கலும்)

## (வேறு)

சட்டமாய்த் தொட்டில் கிடந் துருண்டுருண்டு
தள்ளி நடையிட்டு வாசகம் சொல்லச் சமைந்தாள்
பட்டுக் கண்டாங்கியைக் கட்டி யுடுக்கப் படித்தாள்
பந்து விளையாட ஐந்து வயதுப் பிராயம்
தோடுங் குழையு மிரண்டு புறமுந் துலங்க
தொண்டர்சனங்களை யீடேற்றவென்று துணிந்தாய்
வீடு விளக்கமுண்டாகிட வந்த விமலை
வீடு விளையாட்டைச் சொல்லப்படா தினிமேலும்
தெய்வலோகப் பெண்கள் பார்க்கவருவார் சிலநாள்
தேவேந்திரன் தேவி பார்க்கவருவாள் சிலநாள்
ஒய்யார லட்சுமி பார்க்க வருவா ளொருநாள்
உத்த பத்திரகாளி பார்க்க வருவா ளொருநாள்
மந்திரகன்னிமார் பார்க்க வருவார் சிலநாள்
வால சரஸ்வதியம்மனைப் பார்க்கவருவார்
சந்திர லோகத்தார் மஞ்சனைக் கட்டித்தருவார்
சப்த மாதர்கள் கொண்டைக்கு மாலை சமைப்பார்
அரம்பையர் கூடவந்து அங்காளம்மை கூடப் பந்தடிப்பார்
அபிராமிவந்து பொற்பாடகந் தண்டை யணிவாள்
திருந்து மருத்தியே விந்தையா யுடுப்பாள் சேலை
தெய்வானை வந்து கொண்டையைக் கோதுவாள் சீப்பால்
குன்றிக் குறவள்ளி வெத்திலை பாக்குக் கொடுப்பாள்
குன்றாத வைகுண்ட கன்னிமா ரிட்டகுரவை
மென்றாத பார்வதி பத்துவயசு புகுந்தாள்
பூணு மகரமீன் செய்கையை யிங்கே புகல்வாய்.

## (முருகப்பெருமான் மகரமீனாகி மீனவர்களுக்குத் தொல்லை தருதல்)

## (வேறு)

தாயைச் சுமந் திந்த கரையேந்திய மகரமீன்
சண்டைபிடியாமல் கலியாணம்முடியாது

துய்ய பார்வதி தன்னைக் கும்பிட்டுக் கொண்டு
துள்ளிக் கடல்தன்னைச் சூழக் கலக்கிடுமாம்
கப்பல்தன்னை யந்த வாலாலே தட்டி விட்டால்
கடலைவிட்டு மணற்கரை மேலேசெல்லுமாம்
சிப்பிக் குளிக்கின்ற மண்டச் சமரர்தன்னை
சென்ற திசையெங்கும் தெரியாமல் கொண்டு போக
தூண்டிலிடுகின்ற சங்கிலியை யரிக்குதாம்
சுமக்கும் பரிவெட்டி தும்பு தும்பாகப் போகவே
கட்டைமண்ட வலை கயிறுகள் பொடிபட
கொம்பு மரங்களைக் கம்பு கம்பாய்க் கழற்றுதாம்
கூனில் முளைக்கின்ற வல்லயம்போல் பீலிகொண்டு
கோடுகோடென்று குலுக்குதாம் தோணிதன்னை
ஆனைமீன்கள் கப்பலிலே தெரியுதாம்
ஆலைவாய்க்கரை கிட்டே ஆள்மேலே சீறுதாம்
மீனைத் தண்ணீரோடே வெளியிலே எறியுதாம்
வெட்டுவே னென்று சொப்புசுத்தி வீசுதாம்
காஞ்சக் கருவாட்டைக் கடல்கொண்டு போகவே
கடலுக்குள்ளே நின்று கடல்மேலே குதிக்குதாம்

### (மீனவ மக்கள் வாழ வழியின்றி தவித்தல்)

வீசுவலைக்காரர் தாம் பூச்சியமுந் துலைந்து
துங்கமுரு நந்தி யானையாகப் பரஞ்சோதி
வீரக்கடலிலே யாறுமாத மிறங்காமல்
கஞ்சிக்கில்லை யென்று கெஞ்சிக் கெஞ்சித் திரிவாரும்
காட்டுக்கீரையை வாட்டிவாயில் புசிப்பாரும்

### (மகர மீனை பிடிப்பவர்க்குப் பார்வதியை மணமுடித்துச் தருவதாகக் கூறுதல்)

வஞ்சக மகரத்தைப் பிடிக்கின்றபேர்களுக்கு
மகளை மாலையிட்டு தருகிறோமென்று சொல்லி
மந்திரம் படிக்கின்றப் பண்டிதரைக் கொண்டுவந்து
மகரமீன் பிடிக்க மரங்களி லேற்றுவாராம்
மந்திக் குல்களைச் சந்துசந்தாய் பிச்சுப்போட்டு
கண்டுவிழிக்கத் திரையோடே யெட்டிப்பார்க்க
எங்கள் பார்வதிமே லாணையிட்டு தந்தாக்கால்
இடிக ளெட்டினாப்போல் கடலேழு முழங்குதாம்

### (மீனவர் அதியரசனிடம் முறையிடல்)

தங்க ளினத்தார்கள் கூட்டத்தோடே
தம்பிரானுடகோவிலிடமாகச் செல்லுவாராம்

சென்றுவலஞ்சுத்திக் கோவிலென்று பூஜைபண்ணி
தீபங்களு மெண்ணிறந்த தூபங்களு மாற
வென்றியா யதியரசன் முன்னே போய்ச் சேர்ந்து
மேல்கரை விட்டு நாங்கள் கீழ்க்கரைப் போவோம்
கடலை நம்பிக் கொண்டிருந்து குடி பிழைத்தோமையா
கண்டமீனுஞ் சோறு மற்று குண்டி தேய்ந்துபோச்சி
பிடியானைப்போல் நடக்கும் துடியிடைப் பார்வதியால்
பிள்ளைதந்தச் சமுத்திரமும் பெரும் பகையாய்ப் போச்சு
உன்னுதவி யில்லையென்றால் பின்னுதவி யுண்டோ
ஓட்டையுமே யெடுத்துக்கொண்டு நாட்டுவழியே போறோம்
பூச்சியந் தப்பாமற் குடிபோகப்போறோம் நாங்கள்
பார்வதியை யெங்களுக்குப் பிள்ளையாகத் தந்து
பரதருடைய பாக்கியத்தைப் பரிக்கக் கொடுத்தாயே
ஆருடனேசொல்லி யழுதுகொண்டு நிற்போம்
பிள்ளைக்கு மாப்பிள்ளை மீன்பிடித்தவரே யென்று
பேசிக்கொண்டதுண்டு மீன்பிடிப்பதற்கு ஆளில்லை
துள்ளித்துள்ளி யோடிப்போன தோணிக்கார ரெல்லாம்
தோண்டிப் போட் டிறைக்கிறார்கள் மீண்டுவரக் காணோம்
எங்களுட வீரமெல்லா மீன்விழுங்கிச்சென்றே

## (மீனவர் அபயக்குரலைச் சிவன் கேட்டு பண்டார வேசமிட்டு மகர மீனைப் பிடிக்கவருதல்)

இட்ட குரலோசை யந்த யீசனும் கேட்டாராம்
தொண்டர் கவ்வை தீர பாண்டி மண்டபத்தில் வந்தார்
பத்திரமாய் காதிலிட்ட முத்தினங்க ளிலங்க
பட்டு நூலாற்செய்த முத்தக்கட்டியு மிலங்க
உத்திராட்சத் தாவடத்தின் கொத்துக்க ளிலங்க
ஒக்கரைக்குமேலே தூக்கிப் பொக்கண மிலங்க
சூத்திர தெலுங்குபேசும் சாத்திர மிலங்க
தொட்டுப் பூசுந்திருநீற்று பொட்டுக ளிலங்க
மாத்திரக் கோல்சுவட கரை பாத்திர மிலங்க
மாசனங்கள்போற்றும் புலியாசன மிலங்க
சித்திரைத்தெருவில் வைத்த சத்திரத்தில் வந்தார்

## (அதியரசன் மகர மீனைப் பிடித்தால் பார்வதியை மணமுடித்து தருகிறேன் எனல்)

சிந்தனையா யதிராஜன் வந்து சந்தித்தானே
சற்றே திருநீற்றைத் தொட்டு நெற்றியிலே வைத்து
தாஸடீக பத்தனே யுன் கோஷ்டஞ்சொல்லென்றார்
மீன்பிடித்துத் தின்றவரைத் தான்பிடித் தின்றதால்

வெள்ளைமீன் வடிவுகொண்ட ராட்சதர்போ லானோம்
பேன்பிடித்து மேற்சிரங்கு தான் பிடித்ததையோ
பிச்சை யள்ளிப் போடுதற்கு மிச்சை யொன்றுமில்லை
மகரமீன் பிடித்தவரை மருமகனாய் வைப்பேன்
வாடிபோச்சு தூர்சனங்கள் வோடிப்போச்சுதென்றே

### (சிவன் அறிவுரை கூறுதல்)

பக்குவ வார்த்தைக்கேட்டிருந்தப் பண்டாரஞ் சிரித்து
படுத்தமீன்போட் டுளவு பண்ணவும் படாதோ
பருத்திவிளை யொன்றுபோட்டால் கிறுத்துவக்கேடுண்டோ
பத்துக்கொன்று காணம்வாங்கி விற்கவும்படாதோ
நிறுவைக்கு வியாபாரம் பண்ணவும்படாதோ
நீங்களிந்தப் பாடுபட்டு தூக்கித் திரிவானேன்

### (அறிவுரைக் கேட்டு அதியரசன் கோபம் கொள்ளுதல்)

செத்துப்போற மக்களுக்குப் புத்தியொன்று மில்லை
சீரைத்தேடிக் கொள்ளலாமோ கீரைத்தோட்டம்போல்
கொத்துக்குசேவித்தா லுரை கொள்ளையிடப் போமோ
குட்டி யம்பலங்கள் பண்ணி பட்டுக்கொண்டீர் நீங்கள்

### (திருமணம் முடித்துத்தந்த மறுநாள் மகரமீனை பிடிப்பேன் என்று சிவன் கூறுதல்)

மின்னிடையைக் கலியாணம் பண்ணித்தந்த மறுநாள்
மீன்பிடித்துத் தருவதற்கு நான் துணிவே னென்றான்
பின்னுமந்த யதியரசன் பேச்சுக்கொடுத்தானே
மகரமீன் பிடிக்கும்முன்னே மகளைக் கட்டித் தந்தால்
மட்டுத் தப்பி மாட்டோமென்றால் வெட்டிக்கொல்லப் போமோ
பகுத்தியான வெங்களிலு மிகுதியானவேலை
பண்ணிவருகின்றபேரே திண்ணமுள்ள தெய்வம்

### (அதியரசன் சத்தியம் செய்து தருகிறோம் எனல்)

வீட்டுக்குள் ளிருந்தவரைக் காட்டுவேலைகொண்டு
விட்டுத்தள்ளினால் நகரம் வீடுதள்ளப் போமோ
மாட்டோமென்றால் வலக்கை போட்டுத் தாறோமையா
மத்தியமுஞ்சொல்லித் தாரோஞ் சித்த மிரங்கென்றார்

### (சிவன் கோபப்படுதலும் மணப்பெண் குறித்து விசாரித்தலும்)

வார்த்தைகேட்டு நந்தி முகம் பார்த்துரைப்பா ரீசன்
மழுப்புகின்ற வார்த்தையிலே பிழைப்பு நமக்கில்லை

பெரு மீன் நம்மை பிடித்துக்கொண்டு வருவதானால்
பெண்ணின்பிள்ளை யோடிவந்து கண்ணில் முழிப்பாளோ
மாப்பிள்ளைக் கிடைத்திடாமல் வைத்திருந்தப்பெண்ணோ
மற்றுமந்தப் பெண்ணுக்கொரு குத்தங்குறை யுண்டோ
காப்புகட்டி வைத்த பெண்ணைக் கூப்பிடுங்கள் பார்க்க
பேய்ப்புத்தியினாற் கடலில் போய் கனைந்து போனால்
பெண்ணின்பிள்ளைக் கூடவந்து கட்டையேறுவாளோ
கோப்புக்கேடு வந்திடாமல் போய்பிழைப்போம் நந்தி
கூத்திமக்கள் வார்த்தையிலே சீத்துவத்தைக் காணோம்
சொல்லிப் பத்துக்காசி யுண்டால் செல்லக் கலியாணம்
தோணியேறியோ நமக்கு காணி தேடவேணும்
மல்லுக்கட்டு வந்திடுமே சொல்லுத் தப்பும்போது
வைத்து வாங்கிடுவோம் நாமும் பிச்சைவாங்க வென்றார்
இந்த வார்தை யீசர் சொல்ல நந்திதேவர் சொல்வார்
இட்ட லாபமுண்டுவேறே நாட்ட மொன்றுமில்லை

## (திருமணத்திற்குச் சம்மதம் தெரிவித்தல்)

வந்து நாமெழுந்திருந்து சந்திவிட்டுப்போனால்
மகரமீனுக் கரையேற மாட்டாதே சாமி
அப்பனுக் கிப்படி கடுப்பு வந்துதானால்
அம்மைக்குத் திருமனது சம்மத முண்டானால்
ஒப்பிணையா யிப்படி யுரைத்தத் தாதியோடே
உடையவனா ரருகே வந்தாராம்.

## (மகர மீன் பிடிக்கச் சிவன் உபகரணம் கேட்டல்)

## (வேறு)

மகரமீன் கிடக்குமந்த மசகு தன்னைக் காட்டுமென்றார்
தொகுதியுடன் திசைகாட்டிற் றுடர்ந்துவர மனிதருண்டோ
உரத்த மீனிழுப்பதற்கு அஞ்சாறுார் ஜனங்கள்வேண்டாமோ
அருகிலுள்ள செக்குலக்கை யளவடையில் தூண்டிலுண்டோ
திருத்தமுடன் நீங்களுந்தான் சேகரித்துத் தாருமென்றார்
தந்திரமா யித்தனையுஞ் சம்பாதிக்க வேண்டாமோ
சித்திரமா யதியரசன் செப்புவான் பின்னாக நின்று
தோணியெல்லாம் விறகெரித்தோந் துாட்டிலெல்லாங் கதிரடித்தோம்
காணா வலைகளெல்லாங் கரையானுக் கிரையாச்சு
தொட்ட மரங்களெல்லாம் தோட்டத்துக்குக் கவட்டையாச்சு
உடுப்பதற்கு முண்பதற்கு மொன்றுமில்லை யென்றுசொல்லி
மீன்சுமந்தப் பணக்காரர் விறகுசுமந்தே திரிந்தார்

### (அதியரசன், சிவனைப் பார்த்து முடிந்தால் மகர மீன் பிடி இல்லை என்றால் ஓடிவிடு எனல்)

ஊன்கறி மீன்கிடையாம லுடம்புகளில் வீக்கமெத்த
மகரமீன்பிடிப்பீரோ மகளைக் கைப்பிடிப்பீரோ
கடுந்தவசி யாண்டவரே நமக் கொன்றுந் தெரியாது
பிடிப்பதற்குச் செல்லுமென்றால் பெருங்கடலி லேறிடுவாய்
பரப்பதற்குச் செல்லாட்டால் புகட்டுவது நீதியல்ல
வார்த்தைத் தவறாதபடி மகளைத் தந்தனுப்பிடுவேன்
ஊரது தானறியாம லோடிப்போய் பிழைத்திடுவீர்

### (சிவன் மகரமீனைப் பிடிக்கக் கடலினுள் செல்லுதல்)

கையதிலே பிரம்புகொண்டு கடுந்தவசி யேதுசொலீவார்
எத்தனை நாளைப் பயண மிதற்காக நடந்துவந்தேன்
மண்டு கடலேறுதற்கு மருமகனா யிருப்பதற்கும்
உண்டென்று பேராசை யொளித் தோடிப்போவேனோ
வறுமைகொண்டபடி தானே வயிற்றெரிச்சல் காட்டுகிறாய்
எரிமகரம் பிடிப்பதற்கு யிவன் போதாதெனவே
தொடுகடலி லெங்களுட தோணிதன்னைப் பாருமென்றார்
வடுவரவே திரைமடங்கி வருகுது தோணியங்கே
படர்ந்து வரும்தோணியிலே பரமசிவ னேறுவாராம்
துடர்ந்துவரும் நந்திதேவர் சுக்கானைப் பிடித்திருந்தார்

### (சிவன் மகர மீனைப் பிடித்துத் திரும்புதல்)

### (வேறு)

வாயு பகவான் சிறுதென்றல் வீசிவர
வருண பகவான் தண்டுவலிக்க
துய்ய பாய்மரமாக சேட னிமிரவே
சூரியனைக் கண்ணாடி யாக்கினார்
சடைப் பாம்பை கயிறாக்கி சந்திரனை வலையாக்கி
சத்திமுனிவரை முதற்பலகை யாக்கினார்
கடிய வயிரவர்நாதன் வீரசங்கிலியாக
கணபதியை நங்கூரக் கல்லாக்கினார்
பொற்புடைய பிரமனையும் வாயுபகவான் றன்னையும்
பொருந்துகின்ற யிரும்பாணி யாக்கினார்
பார்வதிக்குக் கலியாண முடிகுதென்று
பத்திரகாளி குரவை பாடினாள்
அதியரசன் முதலான பக்கத்தவர்கள் கரையில்
நின்று ஐயனடிதன்னைக் காணுதில்லையே
மதியறியாப் பண்டாரம் பெண்ணுக்காய்

ஆசைபட்டு மாண்டுப் போவதுதானோ தெய்வமே
மின்னாரும் விளையாட்டை யுலக மறியும் படிக்கு
வீச்சுவலை தன்னாலே வீசினார்
தகப்பனுட கண்ணியிலே மகன் வந்து
தலைகொடுக்கத் தாயார்க்குச் சந்தோஷ மாச்சுதே
சுக்கானைத் திருப்பி நந்தி யேலேலப் பாட்டுப்பாடி
துணைப் பாட்டுங் கெந்திருவர் பாடினார்.

(சிவன் மகரமீனைக் கொணர்தலும்
மீனவர்களின் மகிழ்ச்சியும்)

(வேறு)

மகரமீனைப் பிடித்துத் திரும்பினார்
மழை முழக்கங்களும் பீரங்கிக் கேட்குதாம்
சிகர கோபுர மேத்தவே மகரமீன்
தெய்வப் பீலியு மேலே தெரியுதாம்
சிவந்த மிடைக் கயறு மாடுதாம்
செம்பிராந்து நின்றாடு தென்பார் சிலர்
குவிந்து நிற்கின்ற பாய்மரந்தனைக் கண்டார்
குலவைச் சத்தமுங் கூடவேகேட்குதாம்
நந்திதேவர் படிக்கின்ற ராகமும்
நாரதர் வீணை ராகமும் கேட்குதாம்
வந்தத்தோணிக்கு மேலேமலைபோலே
மகரமீனின் முதுகு தெரியுதாம்
பாரப் பூதங்கள் தண்டு வலிக்குதாம்
வாரக்கப்பலுக்குள் ளொரு பூரிமை
மாப்பிள்ளை வாரானென்றே முழங்குதாம்
அதியரசனுக்கு வந்த சந்தோஷம்
அலைகடலிலும் அதிக சந்தோஷமாம்
பாரிலுள்ள ஜனங்களெல்லாம் கண்டார்
படவு தானும்கரைவந்து தடுத்துதாம்
கரையில்நின்று ஜனங்கள் பயப்பட
கொப்பைக் காட்டி மகரங் குதிக்குதாம்
மேலேயீட்டிபோல் பீலியைக்காட்டுதாம்
ஈரிரண்டு குறுக்கத்திற் கப்புறம்
உதட்டுநாக்கை பொருக்காலே காட்டுதாம்
வண்டிறாலுள்ள மீனின் முதுகிலே
வலைக்கயிறு துருப்புபோல றோணுதாம்
தொப்பிப்போட்டு படிக்கின்ற பண்டாரம்
தோணிதனை நிறுத்திக் கைகொண்டார்

தப்பிப்போனால் பிடிக்கப்படா திது
சம்பிரதாயத்தினாலே கட்டிக்கொண்டுவந்தேன்

### (சிவன் மீனை கரைக்கு இழுக்குமாறு கூறுதல்)

மந்திரத்தினாலே கட்டி கொண்டுவந்தேன்
வலைக் கயிற்றைக் கரைமேல் வாங்குங்கள்
திருச்செந்தூர் கருங்கடல் மீனிது
திசைமயங்கித் திரிகின்ற மீ னென்றார்
என்றுசொல்ல ஜனங்கள் ஒன்றாய்க்கூடி

### (மீனவர் மீனை கரைக்கு இழுத்தல்)

இன்றைக்கு வேளை வாய்த்ததுவேட்டைதான்
அன்றைக்குச் செய்த வருமத்தைத் தீர்க்கவே
அடித்துக் கொல்ல உலக்கைகள் தேடுவார்
குத்திக் கொன்றிட கத்திகள் தேடுவார்
கொழுப்பு மெத்தக்கிடக்கு தென்பார் சிலர்
வெற்றிக்கொட்டும் பறையனுக் காள் விட்டார்
வெள்ளிக்கோலுஞ் சாட்டுக்கு மாள் விட்டார்
வாங்கி பார்க்குமனிதருக்கு மாள் விட்டார்
வட்டிப்பெட்டிக்குஞ் சட்டிக்கு மாள் விட்டார்
நாங்கட்டி கன்னிதானம் பண்ணுகிறோம்
நடுக்கயிற்றைப் பிடித்திற்கோ பண்டாரம்
தூங்கிப் பெண்களும் பாங்கிக் கிழவரும்
சூழவந்து கயிற்றைத் தொட்டனர்
கரைக் கிழுத்த ஜனங்க ளெல்லோரையும்
கடலுக்குள்ளே யிழுக்குது பீலிமீன்
அதியரசன் கொடுத்தானே யென்பாரும்
ஆண்டி கூடிக் கொடுத்தானே யென்பாரும்
விதனத்தோடே யிருக்கின்ற யெங்களை
மீனைக்கூட்டியே வந்து கொல்கிறாய்
கொள்ளைக்காரரைப் போலே கடல்தண்ணீர்
கொண்டுப்போச்சுதே யென்றார் சிலபேர்
வெள்ளைத் தண்ணீருக்கு எகப்பட்டதென்று
விக்கி விக்கித் தண்ணீரைக் குடித்தனர்
மீண்டுமீண்டு திரிந் தலைந்தார்களே
கடல்தண்ணீரை நில சல மாடியே
கலக்கிப்போட்டு கரை யேறினார்கள்
படுத்த மீனைக் கரைதனிலே திருப்பி
படகைவிட்டு கரைதனி லேறுவாறாம்.

## (சிவன் மணக்கோலம் பூண்டு ஊராருடன் அதியரசனிடம் வருதல்)
## (வேறு)

மீனுடனே கப்பலை தண்ணீரிலே நிறுத்தி
மேற்கரையேறி மணக்கோலத்தைக் காட்டினார்
மேனியிலே போட்டக் காவி வேஷ்டிதனைத் தள்ளி
வெள்ளைவேஷ்டிகட்டி மேலே புள்ளிச்சட்டைபோட்டார்
மாமன்மாரும் வூர்ச்சனமும் வந்துநின்று பார்க்க
மஞ்சட் பொட்டின்மேற் சவ்வாதுகொஞ்சப் பொட்டுப் போட்டு
சோமனுக்கு மேலே யொரு துப்பட்டி வுடுத்து
தூக்கிக் காலே வகுத்து சூழசூழ வந்தார்
சிக்குப்பிடித்த சடையைப் பக்கத்தில் திரட்டி
சிலுக் குறுமால் சலவைபண்ணிச் சிங்கிபொட்டு போட்டு
நிற்குமந்த வூர்சனங்கள் வொக்க வந்துபார்க்க
நெத்தியில் மஞ்சணப் பொடியை தீற்றினார் மணக்க
கன்னத்துள்ளே பாக்கது கடுஞ் சிகப்புக்காட்டி
கடற்கரை மண்போட்டுத் தீட்டி குடக் கடுக்கன் மினுக்கி
உன்னிச் சன்னைச் சத்தம் போட்டு சன்னைப் பாட்டுப்பாடி
உங்களூரில் பெண்ணிருக்க தெந்த வீடென்பாரும்
ஆடலுள்ள வீட்டிற் பந்தல்போடலையோ வென்பாரும்
அத்தைமாரைக் காணும்போது சற்றே நாணிக்கொள்வான்
துடர்ந்துவந்து அவ்வூர் ஜனங்களோடே கேட்டார்
கொஞ்சப்பெண்ணோ நால்வயசு மிஞ்சுப்போன பெண்ணோ
கொத்துக்காரன் வீட்டுப்பொண்ணோ சொத்துக்காரன் பெண்ணோ
கஞ்சக்காரனோ வெறுமைக் கொஞ்சக்காரன் பொண்ணோ
காதலாகச் சீதனங்கள் போதத் தருவானோ
பெற்றெடுத்தப் பெண்பிள்ளையோ தெத்தெடுத்தப் பெண்ணோ
பிழைக வொன்றுமில்லாமல் வகையா யிருப்பாளோ
மற்றுமந்த வூர்ச்சனத்தோடு அத்தனையுங் கேட்டு
மாமனோ முகூர்த்தந் தப்பிபோனதே வென்பார்

## (அதியரசன் பெண்தரமறுத்தல்)

அப்பொழுது யதியரசன் செப்பத் தொடுத்தானே
ஆத்திலுள்ளபேரைக் கரையேத்தி போவோமென்றால்
வெப்பமுள்ள மகரமீன்னக் கரையேத்திப் போவோமென்றால்
வேளையில்லை கன்னியதானம் நாளை யாகட்டென்பார்
தும்மலாச்சு கொம்புப் பல்லி சொல்கிறதென்பார்
சோதிடத்து நாள் சுணங்கி போச்சுதென்பார்
அம்மையார்க ளாண்டியென்று சம்மதிக்கமாட்டார்
அள்ளி பணத்தைக் கொடுத்துத் தள்ளு தள்ளென்பாராம்

## (சிவன் மகர மீனைத் தரமறுத்தலும் அதியரசன் மீண்டும் பெண் தருகிறேன் எனலும்)

வேலை குறையா திருந்தால் கூலிக்குறைத் தீரும்
வீட்டுப்பெண்ணைத் தந்தபோது மீனைத்தருவே னான்
சோலிதீரப் பண்டாரஞ் சொன்ன வார்த்தைக்கேட்டு
துடியிடையை மாலையிட கடிது வாருமென்றார்
இஷ்டமாகத் தம்பிரானைக் கூட்டிப்போகுமுன்னே
ஈன்ற சுற்றத்தார்க ளெல்லாம் கூடினார்க ளொன்றாய்
கோட்டிக்காரஅதியரசன் மோட்டிப் பண்டாரத்தை
கூட்டிவாரான் பார்வதியைக் கொண்டுபோகச் சொல்லி
மானிடரைத் தலைசாய்க்க மீனுக்கிட்ட மருந்து
மாமனுக்குப் போட்டு கூட்டிவருகிறான் பண்டாரம்
ஞானத்திலே மறிகடல் மீனைப் பிடித்தாச்சு
நாணக்கேடில்லாமல் கன்னியதானத்துக்கு வாராய்

## (பார்வதி பண்டாரச் சிவனை மணக்க மறுத்தல்)

திரையில் வந்தப் பார்வதியாள் திருத்தாயார் முன்பு
செங்கை ஹொந் தேதுசொல்வார் மங்கையூர் பெண்கள்
ஆரு மிகழ் பிச்சையென்று வொருவருக்குங் கொடுக்காமல்
உண்ணக்கிடையாது போவான் கண்ணில் முழிப்பாயோ
போதங்கெட்ட வாண்டி யெந்தசாதி யென்றறியோம்
வொட்டகத்து நாச்சியாரை வெற்றிக்கொண்டல் மோசம்
தாதருக்கு மாட்டியர்க்கும் நீதிமுறையுண்டோ
தள்ளிவிடும்போது தலைக் கிள்ளிப் போடுவேனோ
நோன்புக்காரனானால் தூண்டல்மீன் பிடிக்கமாட்டான்
நூற்றுக்குமேலே வயசு யேற்றமா யிருக்கும்
நோன்புடைய பெண்பிள்ளையை நாங்கள் கூட்டிப்போறோம்
மாதவிடை யானாளென்று தாதனோடேசொல்லும்
அல்லவென்றால் வெள்ளலிபோல் தல்லுதலே நன்று
அழி வழக்கு பேசுதற்கு ஆளிலையோ நமக்கு
துல்லியமா பில்லியிட்டு கொல்லுவானே யானால்
தொங்கல்பேச்சு வேண்டா மினியங்கே வைத்துமுடு
வாக்குப்பிறட்டாவது நாக்குபிறட்டாகும்
மச்சுவீடுகொடுப்பாயோ பிச்சைக் காரனுக்கு
சாக்குசாக்காய் கொண்டுவந்து பாக்கியத்தைத் தந்தால்
தள்ளாட்ட மேதுனக்கு வெள்ளாட்டி யென்றார்
காணிக்குள்ள சாதியர்க்கு நாணக்கேடுசெய்தால்
காய்ந்துகொள்ளுந் தீங்குழியில் மாய்ந்திடுதல் நன்று
பூணப்பட்ட செம்புக்குள்ளே பொன்னைப் போடுவாயோ
பூச்சியக் கேடாச்சுதடி பேச்சி யென்றுரைத்தார்

## (திருமணம் வேண்டாமென்றதைக் கேட்டு தாயார் அருணவல்லி உயிரைவிடுதல்)

அருணவல்லி கேட்டிருந்து அழுதழுது சொல்வாள்
அன்றுசொன்ன வார்த்தைக்குள்ளே நின்றுகொள்ள வேண்டும்
மருவி யந்த வூர்ஜனங்கள் பிரியமுறவேணும்
வாழ்ந்துபோகக் கண்டதில்லை தேய்ந்தக் குடிவாழ்க்கை
மூதிக்கேடு பூதிக்கேடு சுத்திக்கொண்டுதானால்
செத்துப்போனா லிந்த பழி பத்தித் துடராதோ
நெஞ்சிலே நினைத்தபடி நஞ்சினைக் குடித்து
நேரிருந்தத் தோழிக்குங் காரணமுரைத்தீர்
கஞ்சிகுடித்ததுவும் நாலைந்து நாளைக்குமுன்னே
களைப்பதா யிருக்குதடி மணக்கத் தக்கதில்லை
புத்தியுள்ள பார்வதிக்குப் புத்தியாகச்சொல்லி
பண்புடைய கணவனுக்குப் புண்படாமல்சொல்லி
மற்றுமந்தக் காரியத்திற்குக் குற்ற மிருந்தாலும்
வாக்குமட்டுந் தப்பிடாமல் பார்த்துக் கொள்ளச்சொல்லு
திண்ணமுள்ள பார்வதியைத் தாலிகட்டும்பேரை
திருத்த முள்ள வீட்டிலே யிருத்திக்கொள்ளச் சொல்லு
விண்ணவர்கள் தன்பதியை மேவுகின்ற படியால்
வீட்டுக் கென்னைப்போ லொரு பெண் கூட்டிக்கொள்ளச் சொல்லு
புண்ணியத்தைத் திண்ணமாகப் பண்ணச்சொல்லுவாயென
பூவை யந்த அருணவல்லி பாவையரும் மாண்டாள்

## (பார்வதியும் உயிரைவிடுதல்)

கண்ணனைய பார்வதியாள் தாயா ரருகேச்சென்று
கருங்கடலில் மீனைப்பார்க்க யெழுந்திரம்மா யென்றாள்
துஞ்சுகிறாள் தாயெனவே நெஞ்சிலே கைவைத்து
தோற்றி நின்றசைந்தச் சீவனொன்று காணலையே
வஞ்சத்தினா லிவளை நஞ்சுகொன்றுதையோ
மாப்பிள்ளையாய் வந்தவர்தன் கோப்புக்கெடுத்தாரே
ஆண்டிதான் மகளைவந்து தீண்டிக் கொள்வானென்று
அழுத்த மதை மனதில்வைத்து கொழுத்துச் செத்தாளம்மை
மாண்டுபோன பேரோடே வழக் குரைக்கப்போமோ
மருமகனுக்காகவே மனச்சடவு உண்டாச்சு
பிச்சைக்காரனானாலும் வைத்துக்கொள்ள வேணும்
பிடித்தமீன் வேண்டாமென்றால் லடித்துத் தள்ளப்போமோ
மச்சுவீட்டுக்காரி யொரு குச்சுவீட்டிற்போனால்
மண்டையுள்ள நாள்வரையுந் தொண்டு செய்யவேணும்
லெச்சகெட்ட சாக்கால மீன்ற தாய்க்குண்டாச்சு

இன்னமொரு மாப்பிள்ளை எனக்குவருவானோ
செத்துப்போவதற்கு நல்லபுத்தி சொல்லித்தந்தால்
தெய்வத்தோடே நாமுமினிமேல் என்ன சொல்லப் போறோம்
தாயைக்கொன்றத் தெய்வத்துக்குத் தானும் பழியென்றே
தன்னுயிரைவாங்கி யுச்சி முன்னிலையில் வைத்தாள்
பாய்மேல் சரிந்தவள் படுத்துறங்குவர்போல்
பச்சைக்கிளிபோலவே படுத்துவிட்டாள் தாய்மேல்

## (அதியரசன் மண அலங்காரம் செய்யச் சொல்லுதல்)

ஆண்டிக்காக ரெண்டுபேரு மாண்டுதான்கிடக்க
ஆதியரச ரறியாம லம்பலத்தில் வந்தார்
ஈட்டிவைத்தப் பொன்மணியைப் பூண்டுகொள்ளச்சொன்னார்
இந்தமுகூர்த்தந்தனிலே பந்தற்போடச்சொன்னார்
கண்டதெருக்கள்தோறுங் கரும்புநாட்டச்சொன்னார்
காக்குந் தங்கள் சாதிக்கெல்லாம் பாக்குவைக்கச் சொன்னார்
பண்டாரம் பாதத்திலே தெண்டம் பண்ணச்சொன்னார்
பண்புடைய வான்கட்டு கம்பம் நட்டச்சொன்னார்
முன்னமே பிராமணர்க்கு அன்னமிடச் சொன்னார்
முத்தாலே மேய்ந்திடும் பல்லாக்கை வரச்சொன்னார்
கன்னிமார் குரவையோட காலுநாட்டச் சொன்னார்
கண்டிதேசத்து ஜவுளி கொண்டுவரச் சொன்னார்
சீட்டுவிட்டுத் தட்டாரைக் கூட்டிவரச் சொன்னார்
செப்புக ளுடமையெல்லா முப்புக்காச்சச் சொன்னார்
வீட்டரிசிதன்னைப் பத்துக் கோட்டைவரச்சொன்னார்
மேலுமுள்ள வீடுவாசல் கோலமிடச் சொன்னார்
துப்பட்டியும் பொற்சரிகை சோமன்வரச் சொன்னார்
தூவட்டமும் பத்து நூறு தீவெட்டிக்குஞ் சொன்னார்
சப்பரத்து தேரதுதன்னை வொப்புவிக்கவே சொன்னார்
சங்குத்தாலிக்கொரு தங்கம் வரச்சொன்னார்
சங்குநாதத் தோடே சின்னத்தாரை வரச்சொன்னார்
சிங்காரித் ததியரச னங்கே நிற்கும்போது
செவிக்குள் ளொரு தோழிவந்து சொல்லுவாளாம்

## (தாயும் மகளும் இறந்ததை அறிந்து அதியரசன் அழுது புலம்புதல்)

## (வேறு)

சொன்ன பொழுதிலே கண்ணீர் மடமடடென்றோட
தூக்கியகாலை மிதித்திட மாட்டாமல் சோர்ந்தான்
மாறாசன்னாசி தன்னையிருத்தி மனதுசடைத்து

சுருக்காகப்புலி போலே சுருக்காகவீட்டிலே சேர்ந்தான்
பட்டுக்கிடக்கு மிருவர் முகத்தையும் பார்த்து
பண்டாரத்திற்கென்ன செய்வேன் கெடுத்தாயே பாவி
கொட்டுமுழங்கி கன்னிய தான மின்றைக்குக் கூட்டி
பெத்திடுந் தாயவள் செத்ததினாலே பிள்ளையும்
பிள்ளையுங்கூட மடிந்ததாலல்லவோ மனப்பீடை
மற்றுமகள் தன்னை வாரியெடுத்து மடிமேலே
வாய்முத்தந் தாறாமல் மச்சுக்குள்ளங்கே மடிந்தாய்
இத்தனை நாளாக தேடுந் திரவியமெல்லாம்
ஏற்றுக்கொள்வாய் கரையேலாதெனவே யிருந்தேன்
அத்தனை யித்தனைச்சோறு தருவதற் காரோ
அம்மனையக் கூட்டிக்கொண் டப்பனைத் தள்ளினால் ஞாயமோ
மாப்பிள்ளைப் பாதத்துக்குள்ளாக வந்தான்
மகளே வலக்கை கொடாமலிருப்ப துனக்கு மனமோ
பேய்ப்பிள்ளை மாப்பிள்ளையைக் கழித்தா ளெனவே
பெண்டுகள்கூடிச் சிரிக்கவல்லோ பேறுபெற்றேன்
என்னை யொருவனைக் கட்டாம லோடமெடுத்தாய்
என்றைக்கும் பெண்ணாகி பாடத்திலோ போயிருப்பாய்
சொன்னசொல் தப்பினா லென்றைக்குப் பாவந் துலைப்பேன்
தோற்றுப்போய் னானுங்களைப்போலே துணியேன்
பண்டாரத்தெய்வத்தை மீன்பிடிக்கவே சொன்னபாவம்
பார்வதிபிள்ளையால் தீர்ந்ததன்றல்லோ போனேன்

### (அதியரசன் நடந்ததைச் சிவனிடம் கூறுதல்)

இன்றுகடலில் மகரத்தைப்பிடித்த மருமகன்
நாடியே கோலத்தைப் பார்த்திடவோ பெண்ணை வைத்தாய்
இன்றைக்குச் சாகாமல் நேற்றைக்கு நீதா னிறந்தால்
இத்தனைக் கவலை எனக்கு வருவதே யில்லை
வெங்கடலிலே மீனைப் பிடிக்கின்ற வீரன்
வீட்டுப்பெண்ணைப் பிடியாம லென்னை விடானே
குருக்களை மீன்பிடிக்கச் சொல்லி வேலை யுமக்கென்று
கொடுத்தே யனுப்பி வீட்டுக்குள் ளில்லையே கூலி
உள்ளபடியென்று தெரிய கவலை யொளித்தான்
வாய்வெளிகொண்டு பண்டாரமூர்த்தி தன்பாதம்
பணிந்து துணிந்து முகங்கோடி விம்மி பகர்ந்தான்

### (சிவன் அதியரசனிடம் சினம்கொள்ளுதல்)

துய்யதோர் சன்னாசி கேட்டுச்சினந்தேது சொல்வார்
தூருவருமென்று தாலிகட்டித் தரச்சொன்னேன்

தூரத்திவிட்டாயே கடலினிடபோகச்சொல்லி
தோணி மீனையும் பார்க்கவந்தத் தோகை
பரத்தி தன் மகளார்க்கு வஞ்சகப்புத்தியும் பாடம்
வாவென்றுவீட்டிலேயேறி நின் றெட்டியும் பார்த்தாள்
கடலில் மகரம்வருவதைத் தோழிமார்காட்ட
கைகட்டிக்கொண்டுத் தலையைக் குலுக்குதல் கண்டேன்
மடவா ளொருநொடிக்குள்ளா யுரைத்திட்ட வார்த்தை
மாமனாரைச் சிலபெண்கள் மருட்டிய மாயம்
இந்தப்படிச்சொல்லி யாயிரம் பேர் வைதிட்டாலும்
உந்தன்மகளுக்கு நோக்காடு யேலவேயுண்டா
ஊரெல்லாங்கூடி யடிக்கலா மென்றல்லோ யுரைத்தாய்
பேய்கொண்ட மாமனே யிப்போது செத்தபிணத்தை
பிடரியில்கட்டிச் சுமந்தாகிலும்போவேன்
வாய்கொண்டுசொல்லாமல் நெஞ்சில்புழுக்கரம் வைத்தாய்
வண்டத்தனத்துக்குச் செத்தார்கள் தாயும்மகளும்
மூப்புக்கிருக்கின்ற வூர்பெண்கள்செய்தக் கபடோ
நொண்டிச் சப்பாணியே பெண்களுக் கிந்த முறுக்கோ
மாப்பிள்ளைச் சீரில்லை யென்று புத்தியில்லாமல் மடிந்தாள்
மணக்கோலம்பண்ண வரமாட்டோமென்றால் வழக்கோ
ஏழைதவசிக்குப் பெண்டிருக்கப் போறாளென்றே
இவர்கள்கொன்றது மாமனாரல்லாம லில்லை
மீளப்போகவொட்டா லென்னைக் கடலில் விரட்டி
வீட்டுப்பெண்டாட்டியைக் கொல்லுவது மாமனார்வீரம்
ஆண்டிதனக்குக்கொடுக்க மனமில்லையானால்
ஐயா பண்டாரமலைந்தானே யென்பதற் கரிதோ
தீண்டா மகரம் பிடித்து கரைவந்து சேர்ந்தேன்
செத்தா னில்லையென்று திட்டிமுடிக்கின்றாரே
அந்த மகரத்தைத் தூரத்திற் போகச்சொல்லட்டோ
அசதியாய்நின்றது வுமக்கு திருவிளையாட்டோ
இன்றைக்குக் கலியாணம் வீட்டுக்குமுண்டோ இழவு
இப்படி தோகைமாளுதல் தொண்டர்க் கியல்போ
இறந்து விட்டாளென்று ஆண்டியைத் தள்ள மனசோ
வலக்கைக் கொடாம லிருப்பதுனக் கழகோ
வேண்டிக் கலியாணம் பண்ணிக்கொடு வாவெளியே
வீட்டில் கிடக்கதைப் போட்டிருந்தா லுண்டோ மிச்சம்
என்னுட லாபத்தை வுனக் கென்றிருப்பானேன்
இறங்கியழுது சம்மதமில்லை யெனக்கு
முன்னவ னிப்படிச்சொல்ல வரசன்மொழிவான்
மொழிந்திடும் வாக்கு தவமேல் தீர்ந்திட்டால் முத்தி

## (சிவன் மணவறையில் அமர்ந்து பார்வதிக்குத் தாலிகட்டுதல்)

பந்தலுக்குள் ளொரு பட்டுபொதிந்தப்பலகை
பண்டார சன்னாசி போய் யிருந்தாரே பகட்டாய்
சந்தன மஞ்சளைபூசியே பார்வதி தன்னை
சாத்தினார் குங்கும் மீள சவ்வாது புனுகு
பையப்பிடித்து தலையை குலையாமல் பண்ணி
பாக்கொடு வெத்திலை வாய்க்குள் கொடுத்திட்டாரே பண்பாய்
அம்மையழுகுக்கு பாதியழு குண்டோ வாண்டி
தொடுத்திடுந் திருப்பூவைக் கொண்டைத்தெரியாமற்சூடி
சொல்லுவார் நந்தி திருத்தாலி கட்டென்றுசொன்னார்
கடல் பொட்டகத்தில் சிறுபிள்ளையாய் விட்டகாலம்
கட்டியதாலியை யெல்லாரு மின்றைக்குக் கண்டார்
சுருட்டியவெத்திலை தன்னை வலக்கையில் தொட்டு
தும்பையும் பிச்சிச்சரத்தையுங் கொண்டையில்சூடி
திரட்டிச் சமைக்கின்ற கொங்கையைக் கைக்குள்ளேயடக்கி
செவ்வே யிருத்தினார் தோழிமார் திரண்டு
ஈசன்றுடையிலே யம்மை திருநாந்துயிலேற
எந்தன் பெருமாள் விலாவில் முழங்கை யிடிக்க
வாசக் குழலிடைகிட்ட நெருங்கி யிணங்க
வாசம் புனுகு கமகமவென்று சுத்திமணக்க

## (சிவனைக் கேலி செய்தல்)

பேத்தி கிழவியொருத்தி தடியைப் பிடித்து
பெண்ணுக்குச் சீவன்கொடுத்து வலக்கை பிடிப்பார்
கூத்துசமைத்து கொண்டுவந்தப் பிச்சைக் குருவே
குமரியி லஞ்சாறு பேர்க ளென்னமும்கொல்லும்
பூச்சியுந் தப்பாமல் செம்புக்கடுக்கனும் போட்டு
வாய்த்த மருமகனாகவேதான் பந்தலில்
மகளைக் கைப்பிடித் திந்தப் பந்தலை வலம் சுத்திவாரும்
சுளுக்கொன்றில்லாமல் பலகையி லேறத்துணிந்து
தொத்துதானால் நம்மை நாணங்கெடுக்கத் துணிந்தாய்
செழித்திடும் பார்வதி தன்னையே கொன்றிடுந் தெய்வம்
கிழட்டுச் சீமானைக் கொல்லத் திறங்கெட்டுபோச்சேசிவனே
பிடிக்கின்றப் பெண்கள் பிடியாம லப்புறம் போங்கள்
பெண்ணையும் கொண்டிந்த மாப்பிள்ளை வீட்டுக்குப் போக
கொடுக்க ஒட்டாளென்றே மாமியைப்போய் வீட்டிற்கொன்றே
கூச்சமில்லாமல் யிருக்கிறான் பாரடி கூத்தை
பேத்திக்கு மாப்பிள்ளை நானென்றிருகிற பேறாய்
பேசாத மூங்கில் மரத்திற்கோ நீயும் பிறந்தாய்

சத்தமா பேத்தி மாரிப்படி சொல்லிச் சிரித்தார்
தெய்வப்பெருமானும் நாணாமற் கூடச்சிரித்தார்.

## (சிவபெருமான் சீதனம் கேட்டல்)
## (வேறு)

அப்போதுபண்டாரம் மதியரசன்முகம் நோக்கித்
தப்பாமற் கைப்பிடித்துத் தாருமென்றே தலையசைதார்
எண்ணமுள்ள யதியரச னிருவரையும் கைபிடித்து
தண்ணீரும் கண்ணீருந் தான் கலந்து வார்த்தனரே
மீனைப்பிடித்த மருமகன்நான் வீணிலேபோவேனோ
ஒப்பனைக்குள்ளச் சீதனங்கள் தாருமென்றார்
வெட்டிமக ளொரு கிழவி யருகே நின்றங்கேது சொல்வாள்
வீட்டில் சோறுண்பதற்கு மழுப்புகின்றார் பண்டாரம்
கூசாமல் பேசுகிறான் கூத்தாடித் திரிந்தவனோ
பாசாங்குக்காரனிவன் பந்தல்விட்டுப் போகான்
பரக்குடியி னெளிமைகண்டு பகட்டாதே என்னை
இருக்கிறவ னெழுந்திருந்தா லிறுமாப்புக் குன்றாது
அல்லவென்றால் பண்டாரம் மனதோடே போகமாட்டான்
இல்லையென்று சொல்லாமலே தானிலுந்தான் கொடுங்கள்
பருங்கப் பல்லாயிரம் பங்கு ஒரு நூற்றிலொன்று
வருந் துரை கப்பலிலே வாங்குவது ஆறிலொன்று
ஏழுமுழ யானையது யித்துறையில் வந்துண்டால்
ஊழி ஊழி தலைமுறைக் குண்டான வூதியமும்
கொம்பு மரமொன்று வந்தால் கொடுத்திடுங்கோ கால்பணம்
வம்புசேர்பந்தலிலே வாங்குவது ரெண்டு பணம்
பாக்கு நானுறுங்கட்டி பதக்கரிசியுங் கொடுப்போம்
பாகர்வீடொன்றுக்கு மாதாந்தங் கால்பணமும்
இப்படிக்குச்சீதனங்கள் இல்லையென்று சொன்னவரை
தப்பாது வாயளவு தண்ணீரிலே நிறுத்தி
வாங்குதற் குத்தமில்லையென்று நீர்வார்த்தனர்
ஆங்குநின்ற நந்திமுகம் பார்த்துரைத்தார் பண்டாரம்
கறைகண்டன்கோவிலிற்போய் கல்த்தூணி லெழுதுமென்றார்
இறையவனார் சொற்படிக்கு யெழுதிவைத்தார் தூணதிலே
பார்வதியைக் கைபிடித்து பலகையிலே யிருந்தவர்தான்
ஊரவர்கள் யேசியதை வுற்ற நந்திக்கு யேதுசொல்வார்.

## (பார்வதியை சிவன் உயிர்ப்பித்தல்)
## (வேறு)

நாட்டமுள்ள பெண்களெல்லாம் கூட்டமிட்டுச்சொல்வார்
நாணக்கேடு கேட்டிருக்கப்போமோ
கேட்டசீதனமுந் தந்து வீட்டுப்பெண்ணைத் தந்தவர்க்கு
கேட்ட வரமுங் கொடுக்கவேணும்

பலகையிலே தானிருந்து காலு கை யசைக்குதுகாண்
பைக்குள்ளே திருநீறிருந்தாற் பாரும்
உலகமெல்லா மீன்றெடுத்தப் பார்வதி யுறங்கும்போது
ஒருவரு முழித்திருக்க மாட்டார்
ஐயர்சொல்லத் திருநீற்றுப் பையெடுத்து நந்திதேவர்
ஆண்டவனார் கையிற்கொடுத்தார்
கையாற் திருநீறெடுத்து பார்வதியாள் தன்னைத்தொட்டு
கத்திக்கொண்டுச் செத்துப்போனாது கண்டாய்
உன்னைத்தொட்டு வூரவர்கள் யென்னை வைததெல்லாம்
உனக்கு நன்றா யிருப்பதில்லைக் கண்டாய்
இன்னுமுள்ள வரமெல்லாம் மார்க்கமில்லை யென்று
வண்ணத் திருநீற்றை யள்ளி வைத்தார்
உச்சியின்மேலே வைத்திருந்த வுயிரைகீழேயிறக்கி
எழுப்பி வெது வெதுப்புக் காட்ட
பச்சைநிறமும் பறந்து நரம்பும் பதைபதைத்து
பந்தலெல்லாம் பூமழை கழற
நந்திதேவர் தான்பிடித்த வலம்பிரி நாதத்தோடே
நாகலோகத்தார் குரவைபாட
அந்தரத்துதேவரெல்லாந் துந்துமிமுழக்கமிட
அரகராவென்ற சத்தம் மாற
இந்திராணி பத்திரகாளி சரஸ்வதியோடும்
இலட்சுமிதன் சப்பரத்தேர் கண்டார்
முகங்கள் கழுத்து விம்மித் தலைக்குள் நடுக்கமுண்டாக
மூச்சிவந்து நாசியில்முளைக்க
அன்னவள்தளதளென கன்னிமகளுந் துடிக்க
அன்னயுட பார்வையிலே பாம்பு சடையு பிறையும்
அழகுள்ள சூரியன் போலானாள்
செம்மையுடன்வெத்திலை பிடித்த கைகளால்முகத்தை
திரும்பவும் பொத்திக்கொண்டா ளம்மை
மணக்கோலம் பார்வதிக்கு நந்தியெந்தன் மாமியாரை
வரச்சொல்லிக் கூப்பிடு மென்றாரே
இணக்கமுடனே திருநீறெடுத்து நெத்தியிலிட்டு
என்றன் தம்பிரான் பந்தலைப் பாரென்றார்
மகளையும் மீன்பிடித்த மாப்பிளையும் பாரெனவே
வந்துநின்று நந்திதேவர்சொன்னார்
மிகவும்படுக்கையிலே வெகுநேரமா யுறங்கி
விழித்தவர்போல முழித்தெழுந்தார்
அதியரசன் மகிழ்ந்துதேவி தன்னைத்தூக்கிவிட்டு
ஆண்டவனே சரணமென்று வீழ்ந்தான்
பதியிலிருந்தவர்கள் வகைசொல்லி யேசிடாமல்

பட்டமரத்தைத் தளிர்க்கப் பார்த்தாய்
நஞ்சினைக் குடிக்கச்சொல்லி நாக்கைநீட்டும் பெண்கள்முன்
நாட்டிவைத்தாய் வீட்டுக்காரனென்றே
செஞ்சொல் வளர் பார்வதிக்குச் சீவனை யெழுப்பித்தர
திருநீற்றுக் கென்னவேலை செய்வேன்
செள்ளு முள்ளுமாய்கிடந்தத் தெருவில்தானும்
சீர்பாதம்போற்றி போற்றியென்பார்
வல்ல வெள்ளித்தட்டிலே மாணிக்கத்தைக் காணிக்கையாய்
மாப்பிள்ளை முன்கொண்டு போய்வைத்தார்
சொன்னவேலை செய்வதற்கு யென்னையுங் கணவனையும்
குலஞ்சாத்திக் கொள்ளவேணுமென்றார்

## (முருகனுக்குச் சாப விமோசனம் தருதல்)

சன்னை சன்னையாகப் பெண்கள் சாடை சொல்லி வைத்ததெல்லாம்
தம்பிரான் பொறுக்க வேணுமென்றார்
முகூர்த்தக்காலை வலமாய் மூன்றுதரஞ் சுத்திவந்து
மூர்த்திவேள்வி சாஸ்திர முகித்தார்
முத்தி கணபதியாய் தாய்தகப்பனை வணங்கி
தம்பி யிங்கே வரவேணுமென்றார்
மகரமதாய் கிடந்த சரவணநாயகனை
வந்தருளவே மனம் வைத்தார்
மிகுதியான மகரமீனின் வடிவுதன்னை விட்டு
வேலுமயில் பாகரை கைக்கொண்டார்
குண்டலங்கள் பன்னிரண்டு கூட்டமாய் நின்றாடிவர
கோழிக் கொடிமேலே நின்றுகூவ
மண்டலந் திடுக்கமுற யேறி மயில் வாகனனும்
வய்யாளி வட்டமிட்டு விளையாட
பந்தலின்கீ ழுடிபணிந்து வள்ளியம்மையுடன்
பார்வதியாள் தன்மகனைப்பார்த்தாள்
சிந்தையாய்ச் சாபமதை நீக்கியருள் பாக்கியத்தை
நீயருள்வா யென்றுரைத்தார்.

## (வேறு)

வந்தவேலவர்க்கு வார்த்தைச் சொல்வா ரீஸ்பரனார்
இந்த வுமையாளறிய யெழுதுகின்றக் கோசமதை
புதியவடவா முகத்தில் போட்டுவந்தேன் நடுக்கடலில்
விதியுண்டய கோசமதை மீண்டெடுத்து வாருமென்றார்
வடிவேலர் மீண்டுசென்று வளர்கடலில்கோசமதை
கடிந்தெடுத்து பார்வதியாள் கைதனிலே தான்கொடுத்தார்
சடையா லெழுதிவைத்த அந்தமந்திரத்தை
உடையவள் வாசித் தறிந்தா ளந்த மந்திரத்தை

## (அதியரசனுக்குச் சிவன் முக்தி வழங்குதல்)

சித்திரமா வடதிசையிலெல்லாம் வந்ததினால்
சந்திரமோக மங்கை ரசித்துவர அந்நேரம்
ஆதியரசன் றனை யழைத்து ஆண்டவனா ரேதுரைப்பார்
விதித்த நாளொடுக்கமதில் விட்ணு பதம் சேர்த்துவைப்பேன்
அதுவரைக்கும் மங்கைதனில் யசையாம லிருந்திடுங்கள்
என்றுசொல்லி யந்தரத்தில் ரிஷப வாகனத்தைக் கண்டார்
உத்திரகோசமங்கையென திருநாமம்பெற்றிடுவோம்
அன்றிடப வாகனத்தி லம்மை யிடமேற்கொண்டார்.

## (சிவனும் பார்வதியும் காட்சி தருதல்)

## (வேறு)

உனக்கு நாலுண்டென வலக்கையா லஞ்சலிப்பில்லா
தன்னுதவினா ரத்ததியால் வருகை கற்பூரமென கனக சமுத்திரங்களுடனே
தலைகளுதீபர்கள் திருச்சுறாதிமசாசர்கள் தளமாட
உடனேயந்த மாயவரும் விடைத்த வாகனத்தின் மேற்கொண்டார்
கன்னியர்கள் பாடல்புரிய கெட்டியாய் வட்டமிட்டு
கண்ட கையில் கெற்பகோபுரத்தில் தெரிசித்தார்
நில்லக்குள்ளே பார்வதி சம்பிரகாசசண்டமதாய்
சித்திரவில்லடக்கத்தைக் கையிலையில் திரும்பவே அரசிருந்தார்.

## (வாழி - விருத்தம்)

உத்திரகோசமங்கைய ருரைத்ததேவன் வாழி
சித்திரமுனிவர்வாழி புகழ்கொண்டோர் தானும்வாழி
சுத்தப்பார்வதியைப் பாடித்துதிப்பவர் தானும் வாழி
வித்தையையோதித்தந்த வீரவான் ஞானியர்வாழி.

## (முற்றும்)

9

# அபிமன்னன் போர்க் கதை

(தாள் சுவடி பதிப்பு)

(சிவசுப்பிரமணியபுரம்
அ. அப்பாவு நாடாரிடமிருந்து
தாள் சுவடி பெறப்பட்டது.)

## (காப்பு)

நீடாழி யுலகத்து மறை நாலோ டைந் தென்று நிலை நிற்கவே
வாடாத தவ வாய்மை முனிராஜன் மாபாரதம் சொன்ன நாள்
ஏடாக வடமேரு வெர்ப் பாகனவன் கூர் எழுத்தாணி தனில்
கோடா வெழுதும்படி பிரானைப்பணிந் தன்பு கூர்வாய் அமரரே.

## (வருபொருள்)

## (செய்யுள்)

பேர் படைத்த விசயனிலும் உம்மை
நெடும் பிறவியோனும் பிரியனாகி
பார் படைத்தச் சுயோதனர்க்காய்
படையெடெல் என அமரில் பணித்தக் கோவே
சீர் படைத்தக் கேண்மையினால்
கோளுர் கிசைந்திடும் செங்கண்மா
கார் படைத்த நிறத்தோனைக் கை தொழுது
பிறை வாணிகண் நான் பாடுறேன்.

## (பாடல்)

நாடான நல்ல நாடதிலே
நலம் பொருந்துகின்ற நகர்தனிலே
தேசமான நல்ல தேசத்திலே
சென்னல் விளைகின்ற நகர்தனிலே
அஸ்தினாபுரம் என்னும் நகர்தனிலே
ஆண்டிருந்தான் மன்னன் திரியோதனன்
திரியோதனனோடு துர்ச்சாதனன்
திடம் பெரிய சகுனி சல்லியனும்
தாஷ்டிகன் நல்ல துரோணோச்சாரியனும்
துருதவர் மாநல்ல கிருபாச்சாரி
கீர்த்திப் பெற்ற புகழ் அஸ்வத்தாமன்
சேனாதி படைகளும் புடைசூழ
துரியோதன ராசன் அரசிருந்தான்
இந்திர பிரஷ்தம் ஆனதிலே
இனிதிருந்தார் பஞ்ச பாண்டவர்கள்
பஞ்ச பாண்டவர் ஐவர்களும்
பத்தினியாகிய துரோபதையும்

**அஞ்சா யிருக்கின்ற காலமதில்**
**அருநாகக் கொடிவேந்தன்**
**சூதாடி ஐவரை நகர்பறித்தான்**
**துரத்திவிட்டான் காட்டில் பாண்டவரை**
**பன்னிரெண்டு நல்ல வருட மட்டும்**
**பார வனத்திலே தானலைந்தார்**
**மச்ச நாவடென்னும் நகரத்திலே**
**மறைந்திருப்பார் பஞ்ச பாண்டவர்கள்**
**உபலாவியம் என்னும் நகர்தனிலே**
**மானாகக்கொடி வேந்தனிடம்**
**மாயோனை அங்கு தூதனுப்பி**
**பாரதப் போர் ஒன்று ஏற்படுத்தி**
**பரத சமர்க்களம் நடந்திடுமாம்**
**பன்னிரெண்டு நல்ல நாள் வரையும்**
**பாரத யுத்தங்கள் நடந்திடுமாம்.**

**(வசனம்)**

ஆனால், நீர்வளம், நிலவளம், கார்வளம், குடிவளம் என்று எவ்வளவோ வளங்கள் பொருத்தப்பட நின்ற அஸ்தினாபுரம் என்னும் பட்டணத்தில் துரியோதன மகராசன் கொலுவாக யிருந்தான். அவனை யார் எல்லாம் புடைசூழ்ந்து இருக்கிறார் என்றால் துர்ச்சாதனன், கர்ணன், சகுனி, துன்முகன், துரோணர், அஸ்வத்தாமன் என்னும் படை வீரர்கள் அமர்ந்திருக்கிறார்கள். ஆனால் இந்திர பிரஸ்தம் என்னும் நகரில் பஞ்சபாண்டவர்கள் திரபதாதேவியோடு அரசிருந்தார்கள். ஆனால் துரியோதனன் பாண்டவர்களைக் கெடுத்துப்போட வேண்டும் என்று சூதாடி, நாடு நகரங்கள் எல்லாம் தனக்கு வரும்படியாகத் தெளித்து, அவர்களை ஓட்டாண்டியாக்கிப் பன்னிரெண்டு வருடம் வனமும் ஒரு வருடம் அக்கியாச வாசமும் கழித்து வந்தால் நாடு தருவேன் என்று ஆக்கியாபித்தான். பாண்டவர்கள் பன்னிரெண்டு வருடமும் கழித்து ஒரு வருசம் அக்கியாச வாசமும் கழித்து உபலாவியத்தில் போய் அமர்ந்தார்கள்.

உடனே தருமராசன் கண்ணனை நாடு வாங்கும் பொருட்டு தூது அனுப்பினார். கண்ணன் போய் நாடு கேட்டார். நாடு கொடேன் என்று மறுத்தான். உடனே வாசுதேவன் போர் ஒன்று ஏற்படுத்தினார். பாரதம் ஒன்று தொட்டு பன்னிரெண்டு நாள் வரையும் யுத்தம் ஆரம்பித்தது.

ஆனால் பன்னிரெண்டாம் நாள் இரவில் தருமராசனோடு வில்லாசிரியன் போரிட்டுத் தோற்றுப் பிறமுதுகு போட்டு ஓடியிருக்கிறார். திரியோதனன் சபையில் நாளை பதின் மூன்றாவது நாள் தருமராசனைக் கைப்பிடியோடு பிடித்துத் தருகிறேன் என்று சபதம் பேசியிருக்கிறார். பன்னிரண்டாவது தினம் பொழுது விடிந்ததேயானால், தினம் என்ன பிறக்கும் என்றால்...

**(பாடல்)**

**பதின்மூன்றாம் தினமதிலே**
**பானுவந்து உதயமானான்**
**உதயகிரி மலைகளிலே**
**உதயமானான் பகவானும்**
**ஏழு பச்சை மா பூட்டி**
**எரிகதிரோன் உதயமானான்**
**பானு வந்து உதயமாக**
**படைவீரர் எல்லாம் எழுந்திருந்து**
**அவரவர் பாசறையில்**
**ஆக்கமுடன் போய் அமர்ந்திருந்தார்.**

**(வசனம்)**

ஆனால் பதின்மூன்றாம் நாள் பொழுது விடிந்ததும் இருதிறப் படைவீரர்களும் எழுந்து சந்தியாவதன செபங் களை முடித்து, அவரவர் பாசறையில் போய் அமர்ந்தார்கள்.

மேலும் திரியோதனன் பாசறையில் திரியோதனன் எழுந்து அண்ணாவியாகிய துரோணரைப் பார்த்து "இன்று தருமராசனைக் கைப்பற்றிப் பிடிப்பேன் என்று சபதம் பேசி னீர்களே" என்றான். உடனே அண்ணாவி "திரியோதனா உன் சொல்லைத்தான் எதிர்பார்த்து இருக்கிறேன்" என்றார். "உடனே சென்று தருமராசனைக் கைப்பிடியோடு பிடித்து வாருங்கள்" என்றான். உடனே துரோணாச்சாரி...

**(பாடல்)**

**சேனைப்படை புடை சூழ**
**சிலைக்குருவும் எழுந்திருந்தார்**
**அமர்க்களம் தனை நோக்கி**
**அண்ணாவி அவர் வாரார்**

**படைக்களம் ஆனதிலே**
**பாப்பானும் வந்து சேர்ந்தார்**
**படைகளையும் கையமர்த்தி**
**பாப்பான் யூகம் கட்டுகிறார்.**

**(வசனம்)**

ஆனால் அண்ணாவி எப்படிப்பட்ட யூகம் கட்டுகிறார் என்றால்...

**(செய்யுள்)**

**அக்கரம் யாவும் உணர்ந்தச் சிலைக்குரு அசுர சேனை நடுச்**
**சுக்கிரனார் நிகர் என்ன வகைப்படு தூசியின் மாமுறையே**
**எக்கரமும் படை கொண்டுஎழு சேனையை எயில்கள் வளைப்பன போல்**
**சக்கர யூகம் வகுத்து இரதத்திடை சயமுற நின்றனனே.**

**(வசனம்)**

அதாவது, அண்ணாவி என்னும் துரோணர் இவ்வுலகில் சகல கலைகளும் கற்றவராம். அசுரகுருவாகிய சுக்கிராச்சாரியும் இவருக்கு இணை இல்லை என்று சொல்லலாம். ஆனால் இவர் படைகளைக் கொண்டு நிறுவி அந்தச் சேனைகள் தாமரை மலரில் இருக்கும் கணிகைபோல் அடர்வுற்று நின்றதாம். அவர்கள் யூகம் எப்படி அமைந்தது என்றால் சக்கரம் போல் வட்ட வடிவமாக அமைந்தது. அவர்கள் வில்லை கரத்தில் பிடித்து அமர்களத்தில் பாண்டவர்கள் படை வருகிறதா? என்று எதிர்பார்த்து நின்றார்கள். அப்படி இருக்க, பாண்டவர் பாசறையில் தருமராசன் எழுந்து, முகில்வண்ணனாகிய வாசுதேவன் இடத்தில் சென்று, “இன்று பதிமூன்றாம் தினம், என்னை அண்ணாவி என்னும் துரோணர் கைப்பிடியோடு பிடிப்பேன் என்று சபர்தம் வைத்து இருக்கிறார். ஏன் ஏதும் தெரியாதவர் போல் இருக்கிறீர். ஏ யாதகுல திலகனாகிய மாதவா!”

**(பாடல்)**

**பாண்டவரை கார்க்க வேணும்**
**பரந்தாமா கோபாலா**
**ஐவர்களைக் காக்க வேண்டும்**
**ஆயோனே அச்சுதனே**
**குருசேத்திர பூமியிலே**

**குந்தி மக்களைக் கார்க்கவேணும்**
**தருமர் இந்த வார்த்தைச் சொல்ல**
**சாரங்கன் ஏது சொல்வார்.**

**(வசனம்)**

ஆனால் தருமராசர், "கண்ணா எங்களை காக்கும் கடமை உங்களைச் சேர்ந்ததுதான்" என்றார்.

உடனே கோபாலன், "உங்கள் தம்பியாகிய அருச்சுனனுக்குத் தேர் நடத்திக் கொண்டு இருக்கிறேன். நான் அவனை மட்டும் நல்ல முறையில் காப்பாற்ற முடியும். மாற்றவர்களை நான் எப்படி காப்பாற்ற முடியும்" என்றார். ஆயினும் அவர் எண்ணம் எப்படி என்றால் 'சுபத்திரை பெற்ற மகனாகிய அபிமன்னனை இன்று கொன்றால், பாண்டவர்களைக் காப்பாற்ற முடியும். நாம் பரமசிவன் இடத்தில் அடகாக வைத்துயிருக்கும் சக்கரத்தைக் கையில் எடுக்க முடியும். சக்கரம் கைப்பற்றினால்தான் நாளை செய்த்தரசனைக் கொல்ல முடியும்' என்று யாருக்கும் தெரியாமல் அவர் மனதில் ஒரு திட்டமிடுகிறார். எப்படி என்றால்...

**(பாடல்)**

**சுபத்திரையாள் திருமகனை**
**துடிதுடிக்கக் கொல்ல வேணும்**
**அருச்சுனன் தன் பாலகனை**
**அமர்களத்தில் கொல்ல வேணும்**
**அபிமன்னனைக் கொல்ல வேணும்**
**ஐவர்களைக் கார்க்க வேணும்**
**அரிநெடுமால் கோபாலன்**
**அவர் மனதில் எண்ணுகிறார்.**

**(வசனம்)**

ஆனால் நாம் மருமகனை இன்று கொன்றால்தான் பாண்டவர்களைக் காப்பாற்ற முடியும் என்று நினைத்து, தருமராசனைப் பார்த்து, "மைத்துனா! நான் இன்று சொல்கிற மாதிரி கேட்டால் வெற்றி பெறலாம். இல்லை தோல்விதான் கிடைக்கும். எப்படி என்றால், இன்று தருமராசன் பாசறையை விட்டு எங்கும் போகக் கூடாது. பாசறை யிலேயே இருக்க வேண்டும். இன்று முழுவதும் அபிமன்னன் உங்களுக்குக்

காவல் செய்ய வேண்டும். மேலும் வீமசேனன் வடதிசை செல்ல வேண்டும். அருச்சுனன் தென்திசையில் செல்ல வேண்டும். சகாதேவன் கீழ்த்திசைச் செல்ல வேண்டும். உங்கள் சேனாதிபதியாகிய திருஷ்டதூய்மன் அண்ணாவி யோடு சென்று அமர் பொருத வேண்டும் என்றார். இப்படி சென்றால் வெற்றி பெறலாம். இல்லை முடியாது" என்றார். கண்ணன் வாக்கியத்துப்படி, தருமராசன் படைகளை எல்லாம் அமர்க்களம் அனுப்பிவிட்டு, தானும் பாசறையில் போய் அமர்ந்தார். அதே சமயம் பாஞ்சாலன் மகனாகிய திருஷ்டதூய்மன் அவன் படைகளைத் திரட்டி தேரில் ஆரோகனமாகி அண்ணாவியை வெல்ல வேண்டும் என்று வருகிறான். ஆனால் துரோணாச்சாரி கட்டியிருக்கும் யூகத்தைக் கண்ணில் கண்டு இவன் அதற்குப் பதில் யூகம் கட்ட ஆரம்பித்தான். எப்பேர்ப்பட்ட யூகம் கட்டுகிறான் என்றால்..

### (செய்யுள்)

வருபடை தன்னை நிறுத்தி விதம்பட மகர வியூகம் வகுத்து
ஒருபகல் யூகமும் இப்பகலுக்கு இனி ஒப்பு அல என்றிடவே
குருபதி யும் திருமாலும் மதிக்க அணிந்து அடு கோள்அரி போல்
துருபதன் மைந்தனும் நின்றனன் அந்தரத் துந்துமி மீதெழவே.

### (வசனம்)

ஆனால், திருஷ்டதூய்மன் அண்ணாவியின் சக்கர யூகத்தை உடைப்பதற்கு இவன் படைகளை நிறுவி, மகரமீன் எப்படி இருக்குமோ அப்படியே ஒரு யூகம் கட்டினான். ஆனால் இவனுக்கு இன்னைக்கு அமைந்துயிருக்கிற யூகம் எந்த நாளினும் அமைந்ததுமில்லை. இனிமேல் ஒரு நாள் அமையப் போகிறதுமில்லை. அந்த யூகத்தின் மதிப்பை ஒப்பிட வேண்டு மானால், குருபதியாகிய சிவபெருமானைச் சொல்லலாம். இல்லையே திருமாலாகிய கண்ணன் என்றும் மதிப்பிடலாம். மற்றவர் சென்று மதிப்பிட முடியாது. ஆனால் அந்த யூகத்தை அந்தரவாசிகளாகிய தேவர்கள் கண்ணில் கண்டு இன்று அமர்க்களத்தில் பாஞ்சாலன் மகனாகிய திருஷ்டதூய்மனுக்கு வெற்றி. அண்ணாவிக்கு அவசெயம் என்று பேசிக் கொண் டிருந்தார்கள். ஆனால் பாசறையில் கண்ணன் அருச்சுனன் தேரை அலங்காரம் செய்து, "மைத்துனா சஞ்சத்கார் தென்

சமுத்திரக் கரையில் நின்று அரைகூவி அழைக்கிறார். தேரில் போய் அமரு. போகிற பாதையில் உன் மைத்துனன் கட்டி யிருக்கும் யூகத்தைக் கண்டுகழித்துவிட்டு போவோம்'' என்றார். உடனே காண்டாவன தகனன் காண்டிரீப வில்லையும் எடுத்துக் கொண்டு தேரில் போய் அமர்ந்தான். அதே ரதத்தைத் தூண்டுவதற்காகக் குன்றைக் குடையாய் பிடித்தக் கோபாலனே போய் சாரதியாய் அமர்ந்தார்...

**(பாடல்)**

**குந்திமகன் தேறோ**
**கோபாலன் தேர்நடத்த**
**அருச்சுனனும் ரதம்மேற**
**அச்சுதனும் ரதம் நடத்த**
**படைகளும் தனை நோக்கி**
**பார்த்தன் ரதம் வருகுதையா**
**அமர்க்களம் ஆனதிலே**
**அரிநெடுமால் ரதம் திருத்துகிறார்.**

**(வசனம்)**

ஆனால் அகில புவன ரச்சகனாகிய நாராயணன், அருச்சுனன் ரதத்தைக் கொண்டு திருஷ்டதூய்மன் யூகத்தில் கொண்டு நிறுத்தி, யூகத்தின் சிறப்பைப் பார்த்து, ''உன் மைத்துனன் இன்றைக்கு அற்புதமாகிய யூகம் கட்டி யிருக்கிறான். அண்ணாவியுடைய யூகத்தை இதழ்யிதழாக உடைத்து வீசுவான். இனி நமக்குச் சந்தேகம் வேண்டாம்'' என்று அருச்சுனனைத் தென் சமுத்திரக்கரைக் கொண்டுச் சென்றார். அவர்கள் சென்றதும் அண்ணாவியாகிய துரோணர் திருஷ்டதூய்மனைப் பார்த்து பாஞ்சாலன் பெற்ற மகனே! என் சபர்தம் தெரிந்தும், நீயே வந்து என்னுடன் அமர் பொருத வந்து இருக்கிறாய். மேலும் அண்ணாவி சொல்கிறார்...

**(பாடல்)**

**பாஞ்சாலன் திருமகனே**
**படையை விட்டு ஓடிடுவாய்**
**இல்லை என்றால் விடமாட்டேன்**
**வீரரான யிருபேரும்**
**எமலோகம் அனுப்பிடுவேனென**
**வில்வளைத்து அமர் பொருதார்.**

**(வசனம்)**

உடனே அண்ணாவி பாஞ்சாலன் மகனைப் பார்த்து, “உனக்கு உயிர் மேல் ஆசை வேண்டுமானால், இப்போதே பாசறைக்குச் சென்றுவிடு. இல்லையென்றால் வில்லை யெடுத்து என்னோடு யுத்தம்செய்” என்றார். உடனே திருஷ்டதூய்மனும் வில்லையெடுத்து யுத்தம் செய்ய ஆரம்பித்தான். இரண்டு பேர்களுடைய யுத்தம் எப்படி இருக்கிறது என்றால்...

**(பாடல்)**

**மழைமாரி போலாக**
**மாரிக்கணைப் போடுகிறார்**
**சரமாறிப் போடுகிறார்**
**சமர்த்தரான யிரு பேரும்**
**ஒருவர் போடும் அஸ்த்திரத்தை**
**ஒருவருமே அறுத்தெரிந்தார்**
**ஏழரை நாழிகையாய்**
**இடைவிடாமல் யுத்தம் செய்தார்.**

**(வசனம்)**

இந்த விதமாக துரோணாச்சாரியாரும் திருஷ்ட தூய்மனும் வில்லை வளைத்து ஒருவர் போடு அஸ்திரத்தை ஒருவர் அறுத்து ஏழரை நாழிகையாக நின்று யுத்தம் செய்தார். அதே சமயம் அண்ணாவி கோபம் உண்டாகி பிறைமுகா அஸ்திரம் ஒன்றை தொடுத்து திருஷ்டதூய்மன் கையில் இருந்த வில்நாணை அறுத்தார். வில்நாண் அறுபட்டதும் வில் நிமிர்ந்து விட்டது. மேலும் அவன் சாரதியைக் கொன்றார். குதிரையைக் கொன்றார். தேரை உடைத்தார். அவன் உடலை சல்லடைக் கண்களாகத் துளைத்தார். திருஷ்ட தூய்மன் தேர், சாரதி, குதிரை, வில் அத்தனையும் இழந்து உடலிலும் காயம் அடைந்து உயிர் மேல் ஆசை கொண்டு பாசறைக்கு ஓடினான். பாசறையில் தன் மைத்துனன் வெற்றியோடு வருவான் என்று எதிர்பார்த்துயிருக்கும் தருமராசன் முன்பில் தலைவிரிகோலமாக போய் நின்றான். இவனைக் கண்ணில் கண்ட தருமராசன், “மைத்துனா! அண்ணாவியை வென்று விட்டாயா?” என்று கேட்டார். திருஷ்டதூய்மன் பதில் கொடுக்கச் சக்தி இல்லாமல் நின்றான். உடனே தருமராசன், “ஏ! என் அருமை மைத்துனா..

(பாடல்)

அண்ணாவியைக் கொன்றாயா
ஆசையுள்ள மைத்துனனே
வேதியனை வென்றாயா
வேந்தனான மைத்துனனே
பதில் கொடுக்க முடியாமல்
பாலகனும் நின்று விட்டான்.

(வசனம்)

அதாவது, தருமராசன் திருஷ்டதூய்மனைப் பார்த்து, "மைத்துனா! அண்ணாவியாகிய வேதியனை வென்று விட்டாயா?" என்று கேட்டனர். பாஞ்சாலன் மைந்தன் பதில் கொடுக்கச் சக்தி இல்லாமல் நின்றான். உடனே தருமராசன், "உன்னை ஒரு பொருட்டாக எண்ணியல்லவோ என் சகோதரர்கள் நாலுபேரும் நாலு திசையில் சென்றனர். இன்னும் சற்று நேரத்தில் அண்ணாவியாகிய துரோணர் என்னை பாசறையில் வந்து கைப்பற்றிப் பிடிக்கிறது நிச்சயம்" என்று, மேலும் சொல்கிறார்...

(பாடல்)

என் தம்பியர்கள் இருந்தாரானால்
சமர்க்களத்தில் கார்த்திடுவார்
வீமசேனனா இருந்தானானால்
வினைமுகத்தில் கார்த்திடுவான்
அருச்சுனன்தான் இருந்தானானால்
அமர்க்களத்தில் கார்த்திடுவான்
தம்பியர்கள் இல்லாமல்
தருமராசன் புலம்புகிறார்.

(வசனம்)

"என் அருமை மைத்துனா! என் தம்பியர்களில் வீமசேனன் இங்கு இருந்தாலும் என்னைக் காப்பாற்றுவான். அல்லது அருச்சுனன் இருந்தாலும் என்னைக் காப்பாற்றுவான். நான் இருசிறகு இழந்த பச்சிபோல் ஆகிவிட்டேன்" என்று, மேலும் சுகசாரணரைப் பார்த்து, "என் மைத்துனனை எண்துவாலைக்குக் கொண்டுச் செல்லுங்கள்" என்றார். மேலும் தருமராசன் கவலை கொண்டு பாசறையில் கவந்த முகத்தோடு இருந்தார். அதே சமயம் பெரிய தந்தைக்குக்

காவலாக நின்றவன் அங்கு வருகிறான். தருமராசன் கவலை கொண்டு முகவாட்டத்தோடு இருப்பதைக் கண்ணில் கண்டு "அப்பா பெரிய தந்தையே! ஏன் இப்படி இருக்கிறீர்கள்?" என்றான். அதே சமயம் தருமராசன் அவனை ஏறிட்டு பார்க்கும்போது, அவன் தோற்றம் தருமராசன் கண்களுக்கு எப்படித் தெரிகிறதென்றால்...

## (செய்யுள்)

**தன்னெதிர் மாமயிலோன் நின்ற தனஞ்சயன் மாமகவை**
**பொன்னெதிர் பேரொளி அருள் வடிவாகிய பூபதி வருதியெனா**
**நின்னெதிர் போரினில் நிற்பவர் வேறிலர் நேமி வியூகமும் நீ**
**முன்னெதிரா அமர் புரி பொழுதன்றி முரண் குலை யாதினியே.**

## (வசனம்)

ஆனால் தருமராசன் தன் எதிரில் நிற்கும் அபிமன்னனை ஏறிட்டு பார்க்கும்போது, அவன் தோற்றம் தருமன் கண்களுக்கு எப்படித் தெரிகிறதென்றால், மயிலோன் என்று சொல்லும் பாலசுப்பிரமணியகடவுளைப் பார்த்ததுபோல் இருந்ததாம். மேலும், "பொன் நாட்டிற்கு இறைவன் என்றும் தெய்வ இந்திரன் பேரப் பிள்ளையாகிய என் மகனே வருக" என்றார். "என் மகனாகிய அபிமன்னா! இன்றைய அமரில் அண்ணாவியோடு எதிர்த்து யுத்தம் செய்ய இங்கு யாரும் இல்லை. ஆகையால், நேமி என்னும் வில்லை கையிலெடுத்து அண்ணாவியின் முன்பு சென்று அவர் முரணாக கட்டி யிருக்கும் யூகத்தை உடைத்து வருவாய்" என்றார். உடனே அபிமன்னன், "தந்தையே! எனக்கு விடை கொடுங்கள்" என்றான். மேலும் தருமராசன் அபிமன்னனைக் கட்டித் தழுவி, மடியில் தூக்கி வைத்து முத்தமிட்டு, "நான் பெற்ற மகனே! அண்ணாவியோடு எதிர்த்து யுத்தம் செய்வதற்கு அமர்க்களம் போ" என்றார்.

'கேடுவரும்போது மதி கெட்டு விடும்' தன்மை போல் தருமராசன் வாக்கியம் நழுவிவிட்டது. வாசுதேவன் மருமகனாகிய அபிமன்னன் உடனே முகவாட்டமுற்று, "பெரிய தந்தையின் வாக்கியம் தேவர்க்கு நிகர் என்பார்களே. அப்பேர்பட்ட அப்பா வாக்கியம் அமர்க்களம் போ என்று தானே பிறந்தது. வா வென்று சொல்லவில்லையே" என்று

மனது சோர்ந்த மைந்தனைக் கட்டித் தழுவி, "என் அருமை செல்வ மகனே! அண்ணாவியை வென்று வெற்றி பெற்று வருவாய் என் வீர மகனே" என்றார்.

ஆனால், 'கல் விழுந்தால் எடுக்கலாம், சொல் விழுந்தால் எடுக்க முடியுமா?' முடியாது. மேலும் அபிமன்னன் திடம் பெற்றவனாகி, "அப்பா எனக்கு விடை கொடுங்கள். நான் போய் வருகிறேன்" என்று சுமந்திரனாகிய சாரதியைப் பார்த்து "சுமந்திரா தேரை அலங்காரம் செய்து கொண்டு வா" என்றான். உடனே சுமந்திரன், "அரசே இந்த யுத்தத்தை இன்று நிறுத்தி நாளை போலாம்" என்றான். உடனே அபிமன்னன், "சுமந்திரா அபசகுணம் போல் பேசாதே. இரதத்தைப் போய் கொண்டு வா" என்றான். சுமந்திரன் தேரை அலங்காரம் செய்து நான்கு புரவிகளைத் தேரில் பூட்டி பாசறை வாசலில் கொண்டு நிறுத்தினான்.

அபிமன்னன் பெரிய தந்தையிடத்தில் விடைபெற்று எங்கே வருகிறான் என்றால்...

**(பாடல்)**

**தைலகிணற்றில் தானம் செய்தான்**
**தாகவே சாந்தி தானே முடித்தான்**
**ஆபரண சாலை வந்தான்**
**ஆபரணம் எடுத்தணிந்தான்**
**தலையிலே தங்க கிரீடம் வைத்தான்**
**தாவட மாலை கழுத்திலேயிட்டான்**
**மார்பிலே மோகன மாலையிட்டான்**
**வச்சிரகாந்தக் கவச மிட்டான்**
**ஆயுத சாலை வந்தான்**
**ஆயுதம் தெரிந்தெடுத்தான்**
**பனங்கல் பால் வார்த்தான்**
**பாணம் உரை சேர்த்தான்**
**அம்புரா பொதியடைத்தான்**
**அவனுடதோளிலே கட்டியே கொண்டான்**
**இடது கையில் வில் எடுத்தான்**
**வலது கையில் வாள் எடுத்தான்**
**ஆரபாரமாகொரு விதமாய்**
**அபிமன்னனும் அவன் வாரான்**
**தந்தையுட பாத மதில்**
**தலை சாய்ந்து வணங்குகிறான்.**

**(வசனம்)**

ஆனால், அபிமன்னன் ஸ்னானகிரிகையை முடித்து, தாக சாந்தியளித்து, ஆபரண சாலையில் வந்து ஆபரணம் எடுத்து அணிந்தான். எப்படி ஆபரணம் என்றால், மகுடகிரீடம், மகப்புரி பதக்கம், ஆரம், அரை, அங்கதம், வர்க்குவலயம், வச்சீர நவரத்தினை, தொங்கல், முத்துச்சரம், முன்கை சிவிகை, அஸ்த்தகடகம், விரலாளி, புஷ்ப நாகவத்தின் கவசம், பாத தண்டை, வீரகண்டாமணி, விரல் மோதிரம் என்னும் ஆபரணங்களை எடுத்து அணிந்து, ஆயுத சாலையில் சென்று ஆயுதம் தெரிந்து எடுத்தான். எப்பேர்பட்ட ஆயுதங்கள் என்றால் வாய்வா அஸ்த்திரம், வருணா அஸ்த்திரம், இந்திராஅஸ்த்திரம், சந்திரா அஸ்திரம், இடியாஸ்த்திரம், மின்னலாஸ்திரம், வருணாஸ்த்திரம், சூரியாஸ்திரம், மோகனாஸ்த்திரம், திரை முகாஸ்த்திரம், திரை முகாஸ்த்திரம், ஒருமுக பகளி, இருமுக பகளி, வேலாயுதம், சூலாயுதம் குந்தம், தந்தம், மகதம், ஈட்டி, வாள், கெதை, பிண்டிபாலம், தொடுகணை, சுடுகணை என்னும் அஸ்த்திரத்தைச் சேர்த் தெடுத்து பால்வார்த்து, உரை பிடித்து அம்புரா பொதியில் அடைத்து, இடது புஷத்தில் கட்டினான். இடது கையில் வில்லை எடுத்தான். வலது கையில் வேலாயுதம் எடுத்து பெரிய தந்தையாகிய தருமராசன் முன்பில் வந்து நின்றான். தருமராசன் அவனைக் கண்ணில் கண்டு, "போரில் வெற்றி பெற்று வருவாய் மகனே!" என்றார். உடனே அபிமன்னன் தேரை மூன்று தடவை சுமந்திரனாகிய சாரதியும் பிரதஷனம் வந்து தேரில் போய் அமர்ந்தான். உடனே போய், தேரின் முன்னணியில் அமர்ந்து தேரை தூண்ட ஆரம்பித்தான். ஆனால் அந்த ரதம் எப்படி வருகிறதென்றால்...

**(பாடல்)**

**அண்டமெல்லாம் கிடுகிடென்ன**
**ஆதிஷேடன் முடியதிர**
**சேடனுட முடியதிர**
**தேருரதம் வருகுதையா**
**அமர்க்களம் தனை நோக்கி**
**அபிமன்னன் ரதம் வருகுதையா**
**படைக் களம் ஆனதிலே**
**பாலன் ரதம் நிறுத்துகிறான்.**

(வசனம்)

ஆனால், அபிமன்னன் ரதம் வருகிற வேகம், ஆயிரம் சிரங்களையுடைய ஆதிஷேடன் முடிகளும் அதிர்ந்ததாம். இந்த பாவினையோடு சுமந்திரன் தேரை நடத்தி, அமர்க்களத்தில் கொண்டு நிறுத்தினான். துரோணாச்சாரி அபிமன்னனைக் கண்டு, "அருச்சுனன் மகனாகிய அபிமன்னா! ஏன் இந்த அமர்க்களம் வந்தாய்?" என்றார். அபிமன்னன், "அண்ணாவியாகிய துரோணாச்சாரியை வெல்கிறதற்காக நான் இங்கு வந்தேன்" என்றான். "அப்படியானால் வில்லை எடுத்து, யுத்தம் செய்ய வா" என்றார்.

உடனே இரண்டு பேர்களும் போர் செய்ய ஆரம்பித் தார்கள். எப்படியென்றால்...

(பாடல்)

**வாய்வா அஸ்த்திரம் அவர்தொடுக்க**
**வர்ணா அஸ்த்திரம் போட்டு எடுத்தார்**
**இந்திரா அஸ்த்திரம் இவன் தொடுக்க**
**சந்திரா அஸ்த்திரம் போட்டு எடுத்தார்**
**யானைமுகக் கணை அவர்தொடுக்க**
**சிங்கமுகக் கணை போட்டறுத்தார்**
**வேலாயுதக் கணை இவன் தொடுக்க**
**சூலாயுதக் கணை போட்டறுத்தார்**
**ஆகயிரு பேரும் ஒன்று போல**
**எதிர்த்துப் போர் செய்தார்கள்.**

(வசனம்)

ஆனால், இரண்டு பேர்களும் ஒருவரையொருவர் வெல்ல வேண்டுமென்றும் பலபல அஸ்த்திரங்களைப் போட்டு யுத்தம் செய்தார். அப்படி நேரம் இருதிறத்தாருடைய படைகளும் எக்கெதி அடைகிறதென்றால்...

(பாடல்)

**காலறுவார் சிலர் கரம் அறுவார் சிலர்**
**வேரறுவார் சிலர் வினையறுவார் சிலர்**
**தோளறுவார் சிலர் துடையறுவார் சிலர்**
**மனைவி மக்களென்று மாண்டு மடிவார் சிலர்**
**அய்யோ சிவனேயென்று அலறி விழுவார் சிலர்**
**தண்ணீர் தண்ணீர் என்று சாய்ந்து விழுவார் சிலர்.**

(வசனம்)

அந்நேரம், இருதிறப் படைகளும் கால் இழந்த பேர் களும், கையறுந்தப் பேர்களும், தலையறுந்தப் பேர்களும், உடல் அறுந்தப் பேர்களுமாக மாண்டு மடிந்தனர். இதை யறிந்த அண்ணாவி, "பார்த்தன் பெற்ற மகனாகிய அபிமன்னா! உன்னை சிறுவன் என்று பார்க்கிறேன். இல்லை யென்றால் இதுவரையும் என்ன செய்திருப்பேன் தெரியுமா?" என்றார். "சுபத்திரைப் பெற்ற மகனாகிய சிறுவனே!...

(பாடல்)

**உயிர் மேலாசை வேண்டுமானால்**
**ஓடிடுவாய் பாசறைக்கு**
**இல்லை என்றால் விடமாட்டேன்**
**இளவிசயன் திருமகனே**
**பீலிமுக கணை எடுத்து**
**பிரபலமாய் தொடுத்து விட்டார்**
**சீலி முக கணையாலே**
**செருக்களத்தில் அறுத்தெரிந்தான்.**

(வசனம்)

அதாவது அண்ணாவியும் அபிமன்னனும் சகல உபாயங் களினால் ஏழரை நாழிகைவரையும் நின்று யுத்தம் செய் தார்கள். அப்படி நேரம் அபிமன்னன் அண்ணாவியை எளிதில் விடப்படாதென்று, பஞ்சமுக பாணம் தன்னைக் கையிலெ டுத்து வில் நாண் வாயில் கொடுத்து காத்தளவு வரையும் இழுத்து, தொடுத்து விட்டார். அந்த அஸ்த்திரம் வில்லில் இருந்து விடுபட்டு வரும்போது சண்டைப் பிரசண்டகார் நாகம் வந்தது. உடனே அண்ணாவி அதற்கு மாறுதலாக அஸ்திரம் எடுத்தார். மேலும் வர்ணா அஸ்த்திரம் வந்தது. அண்ணாவி அதை ஏறிட்டுப் பார்க்கும் முன் பாலன் கையிலிருந்து இருளாஸ்த்திரம் வந்தது. அதற்கு மாறுதலாகிய அஸ்திரம் அண்ணாவி கையில் எடுக்கும்முன், மின்னலாஸ்திரம் வந்தது. மின்னலாஸ்திரம் வருகிறதே என்று யோசித்தார்கள். அதற்குள் ஒரு இடியாஸ்திரம் போய் அண்ணாவியின் ரதத்தில் திண்ணென விழுந்தது. உடனே அண்ணாவியின் இரதம் சுக்கல் சுக்கலாக ஒடிந்தது. இன்னும் ஒரு பாணம் சென்று சாரதியைக் கொன்றது. அந்நேரம் துரோணாச்சாரி வெறுங்கை

வீணனாக நின்று, இனி இந்தயிடத்தில் நின்றால் நம்மைக் கொல்வது நிச்சம் என்று அண்ணாவியாகிய துரோணாச்சாரி பாசறைக்கு ஓடினார். ஆனால், என்ன சொல்லி ஓடுகிறார் என்றால்...

**(பாடல்)**

**அப்பாவும் பிள்ளையுமாய்**
**அமருக்கென்றோ இவர் பிறந்தார்**
**தகப்பனும் பிள்ளையுமாய்**
**சண்டைக் கென்றோ இவர் பிறந்தார்**
**உயிர்பிழைத்தால்போதும் என்று**
**ஓடுகிறார் துரோணரவர்**
**அண்ணாவி ஓடுவதை**
**அஸ்வத்தாமான் கண்ணில் கண்டான்.**

**(வசனம்)**

ஆனால், அண்ணாவி, “ஏ கருணாகரனாகிய மகாதேவா! பிள்ளைப் பெற்றால் இப்படிப் பிள்ளைப் பெற வேண்டும். தகப்பனையும் மகனையும் சண்டைக்கென்றோ இவ்வுலகில் பிறவி செய்தீர்” என்று ஓடுகிறார். அந்நேரம் அண்ணாவி பெற்ற மகனாகிய அஸ்வத்தாமன் தந்தை பிறமுதுகு போட்டு ஓடுவதைக் கண்ணில் கண்டான். உடனே அவன் தேரை நடத்தி அபிமன்னனை நோக்கி வருகிறான். “அடே! அபிமன்னா இதோ வருகிறேன். நில்” என்று, அபிமன்னனோடு அண்ணாவி பெற்ற மகன்போய் எதிர்த்தான். உடனே இரண்டு பேர்களுக்கும் யுத்தம் ஆரம்பித்தது எப்படி யென்றால்...

**(பாடல்)**

**சிலை விசயன் திருமகனே**
**சீலிமுக பாணம் வருகுதடா**
**பீலிமுக கணையாலே**
**பிரபலமாய் அறுத்தெறிந்தான்**
**வில்விஷயன் திருமகனே**
**வினைமுக பாணம் வருகுதடா**
**வேலாயுத கணையாலே**
**விஷயன் மகன் அறுத்தெறிந்தான்.**

(வசனம்)

ஆனால், சிவபெருமான் அம்சையில் பிறந்த பால சுப்பிரமணிய கடவுள் போன்ற அஸ்வத்தாமன், கார்மேக வண்ணன் மருமகனாகிய அபிமன்னனுடன் வந்து நின்று, சில அஸ்திரங்களை எடுத்து மழை மாரி போலாக வீசினான். தனஞ்சன் சேயாகிய அபிமன்னன், எத்தனை அஸ்த்திரம் வந்தாலும் அவைகளையெல்லாம் விலக்கி நாராயண அஸ்திரத்தை எடுத்து வேதியன்பெற்ற மகனாகிய அஸ்வத் தாமன் வில்லை அறுத்து, சாரதியைக் கொன்று, தேரை அழித்து, அவன் உடலையும் சல்லடைத் தூண்களாகத் துளைத்து, மேலும் ஒரு துரிதகணையைப் போட்டு ஓட ஓட வெரட்டினான். அபிமன்னனுக்கு ஆற்றாமல் அண்ணாவியின் மகன் ஓடினான். அன்னேரம் இரண்டாவது ஆறலில் நிற்கும் அங்கர்கோமானாகிய கர்ணன் கண்டு அவன் தேரை நடத்தி பாலகன் முன்பில் சென்றான். “அடே அபிமன்னா! கர்ணன் வந்து இருக்கிறேன்; எடுவில்லை” என்றான். உடனே இரண்டு பேர்களும் யுத்தம் செய்ய ஆரம்பித்தார்கள். எப்படி என்றால்...

(பாடல்)

**காண்டீபன் திருமகனே**
**உன்னைக் கரமதிலே கொன்றிடுவேன்**
**வில்விஷயன் பாலகனே**
**வினைமுகத்தில் கொன்றிடுவேன்**
**பாணமதை கையிலெடுத்தான்**
**பருதி பெற்ற திருமகனும்.**

(வசனம்)

இந்த விதமாக இரண்டு பேர்களும், ஒருவரை ஒருவர் வேல்ல வேண்டும் என்று வீராவேசம் பெருகி அமர்க்களத்தில் நின்று யுத்தம் செய்தார்கள். அவர் யுத்தத்தைப் பார்த்து தேவர்களும் வியந்து நின்றனர். அதே சமயம் துளபமாலிகா பரணனாகிய, கபட நாடகன் என்னும் பரந்தாமனுக்கு மருமகனாகிய அபிமன்யு, “அடே! தினகரன் அளித்த சேயா...

(பாடல்)

**பருதி பெற்றத் திருமகனே**
**உன்னை படைக்களத்தில் விடுவதில்லை**
**கர்ணனே நான் உன்னை இந்த**

**களத்தில் உன்னை விடுவதில்லை**
**வேலாயுதக் கணை எடுத்து**
**விசயன்மகன் தொடுத்து விட்டான்**
**எங்கள் கோமான் பிடித்த வில்லை**
**அமர்களத்தில் அறுத்து விட்டான்.**

**(வசனம்)**

ஆனால் இரண்டு பேர்களும் திடசாலி. ஆகையால் வெகுநேரம் வசையும் நின்று யுத்தம் செய்து வெற்றி தோல்வி இல்லாமல் நிற்கும்போது அபிமன்யு சொல்கிறான். "கொடையில் சிறந்தவனாகிய கர்ணா, உம்மை கொல்ல வேண்டும் என்றாலும் எனக்கு திடம் உண்டு. ஆனா என் தந்தையின் சபர்தம் முடிப்பதற்காக உன்னை உயிரோடு விடுகிறேன்" என்று அவன் கையில் இருந்த வில் நாணை அறுத்து, சாரதியை அலைக்கழித்து, தேரை உடைத்து அவன் மார்பில் இருந்து ரத்தம் ஓடும்படியாக அடித்து விரட்டினான். கர்ணமகராசன் போரில் பிறமுதுகு போட்டு ஓடுவதை காந்தாரி பெற்ற மகனாகிய துரியோதனன் கண்டு, பாசறையில் இருந்து காந்தாரதேச தலைவனாகிய சகுனி மாமாவை பார்த்து, "மாமா! என் படைகள் அத்தனையும் சிறுவனாகிய அபிமன்னன் எவ்வளவோ அலைக்கழித்து அனுப்புகின்றானே. என்னால் பார்த்துச் சகிக்க முடியவில்லையே" என்றான். உடனே சகுனி மாமன் "என் ஆசை மருமகனாகிய துரியோதனா!...

**(பாடல்)**

**உன் ஆசை மாமன் சென்றேனானால்**
**அபிமன்னனும் பிழைப்பானோ**
**பார்த்தன் பெற்றத் திருமகனை**
**படைக்களத்தில் வென்று வாரேன்**
**மாமன் இந்த வார்த்தைச் சொல்ல**
**மானாகன் மனமகிழ்ந்தான்.**

**(வசனம்)**

"என் அருமை மருமகனாகிய துரியோதனா! எனக்கு விடைகொடு. நானே சென்று அந்த அபிமன்னனை வென்று வருகிறேன்" என்றார். உடனே துரியோதனன் சந்தோசம் அடைந்து "தம்பி துச்சாதனா! நமது ஆசை மாமனுக்கு நல்ல ரதம் கொண்டு கொடு" என்றான். உடனே சகுனி மன்னனுக்கு

நல்ல ரதம் ஒன்று கொடுத்தார். மேலும் துரியோதனன், "மாமா !எப்படியாவது சிறுவனைக் கொன்று வர வேண்டும்." "நான் சென்றால் வெற்றிக் காணாமல் திரும்ப மாட்டேன்" என்று, கோப ஆரோகனமாகி சகுனி வருகிறான். அவன் பாசறையை விட்டு வரும்போது சகுனி பெற்றப் பிள்ளைகள் ஏழுபேர் தந்தைக்கு எதிராக வந்தார்கள்.

"அப்பா! அந்த அபிமன்னனைக் கொல்ல நாங்களும் வருகிறோம்" என்று சகுனி மகராசனைப் பின்பற்றி வரு கிறார்கள். இந்த விதமாக சமர்க்களத்தைக் கிட்டி வரும்போது அபிமன்னன் இவர்கள் எட்டு ரதத்தையும் கண்ணில் கண்டான்.

சுமந்திரனைப் பார்த்து, "சுமந்திரா! நம்மை வெல்ல வேண்டும் என்று பகடையான சகுனி அவன் மக்களையும் கூட்டிக் கொண்டு வருகிறான். அவர்கள் சமர்களம் வரும் முன்னால் சகுனி பெற்ற மகனாகிய காளிகேயனைக் கொல்ல வேண்டும்.நீ செம்மையோடு தேரை நடத்து!" என்று அவன் வில்லை வளைத்து ஒரு இலைமுகா அஸத்திரம் ஒன்று தொடுத்து விட்டான். அதே சமயம் சகுனி மைந்தர்களைப் பார்த்து, "அதோ! அபிமன்னன் நிற்கிறான். அவனை எந்த விதத்தாலும் கொல்லுங்கள்; வெல்லுங்கள்" என்று மைந்தர்களுக்கும் திடம் ஊட்டிக் கொண்டு வந்தான். அதே சமயம் அபிமன்னன் கையில் இருந்து வருகிற அஸ்திரம் சகுனி பெற்ற மகனாகிய காளிகேயன் தலையை அரிந்து தள்ளி விட்டது. உடனே சகுனி கண்ணில் கண்டு, தேரை விட்டு கீழே குதித்து, காளிகேயனைத் தூக்கி மடியில் போட்டுப் புலம்பினான்.

**(பாடல்)**

**அப்பா என் கண்மணி**
**ஆராது என் துயர்**
**ஆரிடம் சொல்வேனடா** **(அப்பா..)**

**கையில் கிளி வளர்த்து**
**பூனைக் கிரை கொடுத்த**
**கதை போலே ஆச்சுதடா** **(அப்பா..)**
**பாலன் கரத்தாலே**

**பட்டு மடிவாய் என்று**
**பரமன் வகுத்தானோ** **(அப்பா...)**

**உன்னைப் பறிகொடுத்து**
**உலகில் உயிர் வாழ**
**உண்ணவு(ம்) வேணுமோடா (அப்பா..)**

**(வசனம்)**

ஆனால், இந்த விதமான சகுனி மகாராசன காளிகேயன் காஷ்டத்தை எடுத்து மடியில் போட்டு அழுது புலம்பினான். "என் அருமை மகனாகிய உலூகா! உன்னை இழந்து போட்டு, இனிமேல் நான் இந்த உலகத்தில் உயிர் வாழ வேண்டுமா? சிறுவனாகிய அபிமன்னன் கரத்தால் மடிய வேண்டும் என்றா உன்னைப் பரமேஸ்வரன் வகுத்து விட்டான். நான் எப்படியடா உன்னை இழந்து விட்டு உயிர் வாழ்வேன்?" என்று புலம்பினான்.

அதே சமயம் அபிமன்னன் கண்ணில் கண்டு சண்டாளனாகிய சகுனி மைந்தனை வைத்துப் புலம்புகிறான் என்று வில்லை வளைத்து மேலும் ஒரு அஸ்திரத்தைத் தொடுத்தான். அந்த அஸ்திரம் சகுனியின் வலது புஜத்தில் தைத்தது. உடனே சகுனி மடியில் இருந்த மைந்தனைக் கீழே போட்டு விட்டு, அவன் வில்லை எடுத்துத் தேரில் ஆரகணமாகி அபிமன்னன் முன்பில் வந்து நின்று சொல்கிறான், "அடே அபிமன்னா!...

**(பாடல்)**

**மைந்தனைத் தான் கொன்றாய்**
**மாபாவி அபிமன்னனே**
**பாலகனைக் கொன்றாயே**
**படுபாவி அபிமன்னனே**
**மைந்தன் பலி வாங்காமல்**
**மாமன் சகுனி போறதில்லை**
**சகுனியிந்த வார்த்தைச் சொல்ல**
**சாற்றுகிறான் பாலகனும்.**

**(வசனம்)**

ஆனால் சகுனி மன்னன் பாலகன் முன்பில் சென்று, "அடே அபிமன்னா! என் மகனாகிய காளிகேயனைக் கொன்று விட்டாயே. நான் உன்னைக் கொல்லாமல் விட மாட்டேன்!" என்று போய் எதிர்த்தான். மேலும் இரண்டு பேர்களும் வில்லை வளைத்து கணப் பிரயோகம் செய்யும்

போது, அபிமன்னன் சற்று நேரத்தில் சகுனி வில்லை ஒடித்து, தேரை உடைத்து, சாரதியைக் கொன்று, அவன் மார்பிலும் காயம் படத்தக்கதாக அடித்தான். சகுனி யுத்தம் செய்ய திறமை கெட்டு உயிர்மேல் ஆசையைக் கருதி அருநாகக் கொடிக்கு அதிபனாகிய திரியோதனன் பாசறைக்கு ஓடி வந்தான். ஆனால் திரியோதனன் மாமாவைக் கண்ணில் கண்டு, "என் ஆசை மாமா! அபிமன்னன் இறந்து விட்டானா?" என்றான். உடனே சகுனி சொல்கிறான்.

"அருநாகக் கொடிக்கு அதிபனாகிய மருமகன் என்னும் திரியோதனா!" ...

**(பாடல்)**

**பாலனென்றல்லோ நானிருந்தேன்**
**படுபாவியாக இருந்திருக்கான்**
**சிறுவனென் றல்லோ நானிருந்தேன்**
**சீர்கேடனாக இருந்திருக்கான்**
**படைத்தப் பரமனே வந்தாலும்**
**பாலகனைக் கொல்லொண்ணாது**
**ஆதி சிவன் வந்தாலும்**
**அபிமன்னனை வெல்லொண்ணாது.**

**(வசனம்)**

அதாவது, சகுனி மகாராசன் திரியோதனன் இடத்தில், "ஆசை மருமகனே! பாலகனாகிய அபிமன்னனைக் கொல்ல வேண்டுமானால் மும்மூர்த்தியில் ஒருவனாகிய சிவன் வந்தாலும் முடியாது" என்றான்.

"மருமகனாகிய திரியோதனா நான் பெற்ற மகனாகிய உலூரகனைக் கொன்று விட்டானே" என்றான். இந்த வார்த்தை யைக் கேட்டதும் திரியோதனன் துக்கம் பெறுகிறான். "அடே! என் உண்மை மைத்துனனாகிய உலூாகா'' என்று சோகம் பெருகி, பாசறையில் ஒரு பாகத்தில் போய் அமர்ந்தான். அதே சமயம் யார் வருகிறான் என்றால் மானாகன் மைந்தனாகிய லக்கண குமாரன் தந்தையின் முன்பில் போய் வணங்கி நின்றான். ''தந்தையே! ஏன் இப்படி முக வாட்டமுற்று இருக்கிறீர்?'' என்றான். உடனே பன்னகதுவசன் என்ன சொல்கிறார் என்றால். . .

**(செய்யுள்)**

**வில்மைந்து கொண்டு தகுவோர் தமை வென்ற வீரன்**
**நல்மைந்தனுக்கு முதுகிட்டனர் என்று நாணி**
**மன்மைந்தர் எண்ணில் பதினாயிரர் வந்து சூழ்க**
**தன்மைந்தனையும் உடன் ஏவினன் சர்ப்பக்கேது.**

**(வசனம்)**

"நான் பெற்ற மகனாகிய லக்கணகுமாரா வில்விசயன் மகனாகிய அபிமன்னன் ஒரே ரதம், ஒரே சாரதி, ஒரே வில். இப்படியாக வந்து நின்று எத்தனையோ சுத்த வீரர்களைப் புறமுதுகு போட்டு ஓடும்படியாக அடித்து இருக்கிறான். ஆகையால் உன் வயதளவு போன்ற அரசிளங்குமாரர்களைப் பதினாயிரம் பேர்களை அழைத்து, பார்த்தன்பெற்ற மகனாகிய அபிமன்னனைக் கொன்று வா" என்றான்.

லக்கணகுமாரன் ஐம்பது அரசிளங்குமாரர்களை அழைத்து,தானும் ஓடு தேரில் ஆரோகணமாகி தந்தையிடத்தில் விடைபெற்று, ஆக ரதம் ஐம்பத்தி ஒன்று ரணகளகத்தை நாடி வருகின்றது. அவன் இப்படி வரும்போது, காண்டா வனதகனன் மைந்தன் கண்ணில் கண்டு, "சுமந்திரா அதோ எருமைக் கூட்டம். லக்கணகுமாரன் தேச ராசாக்களை அழைத்து நம்மைக் கொல்லும் நோக்கத்தோடு வருகிறான். நீ சாகசமாக தேரைத் தூண்டித் தந்தால், நான் முதலில் ஐம்பது அரசிளங்குமாரர்களைக் கொன்று, அதற்கு அப்புறம்தான் லக்கணனைக் கொல்ல வேண்டும்" என்றான்.

சுமந்திரன், "அபிமன்னா! எதற்கும் அஞ்ச வேண்டாம். நான் கெட்டியோட ரதம் நடத்தித் தருகிறேன்" என்றான். லக்கணகுமாரன் ரதம் அபிமன்னனை மத்தியில் விட்டு நாலுபுறமும் வளை பூண்டு வந்தது. அப்படி நேரம், சுமந்திரன் தேரை எப்படி நடத்துகிறான் என்றால்...

**(பாடல்)**

**சுழல் காற்று போலாக**
**சுழற்றுகிறான் ரதமதைத்தான்**
**ஆறிரெண்டு சுழல் சுழண்டு**
**அழகு ரதம் வருகுதையா**
**பன்னிரெண்டு சுழல் சுழண்டு**
**பாதியில் ரதம் வருகுதையா**

**பன்னிரெண்டு சுழல் சுழல**
**பார(ர)சர் உயிர் திறந்தார்.**

**(வசனம்)**

உடனே சுமந்திரனாகிய சாரதி, அவன் ரதத்தைச் சூறாவளி காற்று போல் ரணகளத்தில் பன்னிரெண்டு சுற்று சுற்றினான். அதற்குள்ளாக அபிமன்னன் ஐம்பது அரச குமாரரையும் கொன்று வீழ்த்தினான். லக்கணகுமாரன் ஐம்பது அரச குமாரரையும் இழந்து போட்டு, அவக் கவலை உண்டாக அவன் பக்கத்தில் திரைச் சீலை மறைவில் முகத்தை வைத்து, தலை கவிழ்ந்த வண்ணமாக இருந்தான். அதைக் கண்ணில் கண்ட அபிமன்னன், அவன் இரதத்தில் இருந்து லக்கணக் குமாரன் இரதத்தில் பாய்ந்து மந்திரவாளைக் கையில் எடுத்து லக்கண சிகையைப் பற்றிப் பிடித்துச் சொல்கிறான்.

"அடே லக்கணா! யாரைக் கொல்ல வேண்டும் என்று இங்குப் படை திரட்டி வந்தாய். அன்னையாகிய திரபதா தேவியை, நடு சபையில் நிறுத்தி, தாசி. வேசி என்று சொல்லாத வார்த்தை எல்லாம் சொல்லி பாண்டவர் நாட்டையும் அபகரித்து, 12 வருடம் வனம் அனுப்பியது உன் தந்தைதானா? இனிமேல் வரும் காலத்தில் இந்த நாட்டைக் காக்க வேண்டியது நீதானா?" என்று அவன் மந்திரவாளைக் கையிலெடுத்து, லக்கணன் தலையை வெட்டி வீழ்த்தினான். லக்கணன் இந்த உலகுக்கு ஆற்றாமல் எம உலகு போய் புகுந்தான். சுகசாரணர் துரியோதனன் இடத்தில் வந்து "அரசே! உங்கள் மகனாகிய லக்கணகுமாரன் அபிமன்னால் உயிர் துறந்தான்" என்றனர்.

உடனே பன்னகதுவசன் காதில் கேட்டு, "நான் பெற்ற மகனாகிய லக்கணகுமாரா!" என்று சிங்காதனத்தில் இருந்த மன்னன் திண்ணென பூமியில் விழுந்து பாசறை முழுவதும் புரண்டு சோகத்தில் மைந்தனை நினைத்துப் புலம்பினான்.

**(பாடல்)**

**பெற்றெடுத்த அருமை என்ன**
**பேர் கொடுத்த நேர்த்தி என்ன**
**வளர்த்ததொரு அருமை என்ன**
**வைத்திருந்த நேர்த்தி என்ன**
**தரை தனிலே நடந்தாயானால் .**

**தண்டைக் கால் நோகுமென்று**
**உருளை வண்டி நான் சமைத்து**
**உருட்டியலோ உனைவளர்த்தேன்.**

**(வசனம்)**

"நான் பெற்ற மகனாகிய லக்கணகுமாரா! நான்உன்னை எவ்வளவு செல்வமாகப் பெற்று, சீராட்டி, தாலாட்டி, செல்வமணி தொட்டிலிட்டு வளர்த்தி, நீ தரையில் நடந்தால் உன் செவ்விய பாதங்கள் நோகும் என்று, உனக்கு பவளத்தேர் அமைத்து, அந்தத் தேரில் வைத்து உருட்டியல்லவோ உன்னை வளர்த்தேன். நான் வளர்த்தப் பலன் இல்லாமல், சண்டாள னான அபிமன்னன் கரத்தால் உயிர் விட்டாயே" என்று மேலும் புலம்பினான்.

"என் லக்கணகுமாரா! வரும் காலத்தில் இந்த உலகத்தை ஒரு குடையின் கீழ் ஆள்வாய் என்று எவ்வளவு பேராசை யோடு இருந்தேன்.நான் எண்ணிய எண்ணத்தில் மண்ணை வாரிப் போட்டு விட்டு எங்கே சென்றாய்?" என்று இரண்டு புஜம் கொண்டு மார்பில் அடித்துப் புலம்பினான்.

**(பாடல்)**

**உன்னைப் பெற்றெடுத்த பானுமதி**
**பேதை நல்லாள் கேட்டாளானால்**
**மைந்தன் எங்கே என்று சொல்லி**
**மங்கை நல்லாள் கேட்டாளானால்**
**என்னவென்று சொல்லிடுவேன்**
**எனதருமை பாலகனே!**

**(வசனம்)**

மேலும், துரியோதனன், "என் அருமை செல்வமகனே! உன் அன்னையாகிய பானுமதி, நான் பெற்ற மகன் எங்கே? என்று கேட்டால் என்னடா பதில் சொல்வேன்?'' என்று பலவிதமாக மைந்தனை நினைத்து, புலம்பி பாசறையில் திண்ணென போய் விழுந்தான். அதே சமயம் நகுல தேசத்து வேந்தர்களும் துரியோதனன் இடத்தில் வந்து, "அரசே! நமக்கு ஏற்பட்டிருப்பது யுத்தம். இந்த நேரத்தில் யார் இறப்பார்? யார் பிழைப்பார்? என்று சொல்ல முடியுமா? நீங்களே இப்படி இருந்து விட்டால், இன்று யுத்தத்தைப் பற்றி

யார் யோசிப்பார்!" என்றார்கள் பல வேந்தர்கள். இந்த வார்த்தையை மனதில் கேட்டு, மலர்மாலை தாங்கிய மானாக் கொடியோன் சொல்கிறது எப்படி என்றால்...

(செய்யுள்)

**மன்னவர் மைந்தரோடு என் மைந்தனைக் கொன்ற மைந்தன்**
**தன்னையும் இமைப்பில் சென்று சயமுறச்செகுத்தி லீரேல்**
**பின்னை இவ்அரசும் வேண்டேன் பெருமிதவாழ்வும் வேண்டேன்**
**என்னுயிர் தானும் வேண்டேன் என்றனன் இராச ராசன்.**

(வசனம்)

ஆனால் , துரியோதனன் என்ன சொல்கிறான் என்றால், "பலதேச ராசகுமாரர்களோடு, என் மைந்தன் அமர்களம் சென்றான். அப்படிச்சென்ற மைந்தனைக் கொன்றவன், அவன் ஒரு மைந்தன். அந்த மைந்தனை இமை விளிக்குமுன் கொன்று செயப்பேரிகைக் கொட்ட வேண்டும். இல்லை யென்றால் எனக்கு இந்த அரசு வேண்டாம்; என் வாழ்வு வேண்டாம். என் உயிர் வேண்டாம்" என்றான் மன்னனுக்கு மன்னனாகிய துரியோதன மகாராசன். மேலும் பல வேந்தர்களும் துரியோதனனிடத்தில் என்ன சொல்கிறார்கள் என்றால்...

(செய்யுள்)

**தனித்தனி அரசர் எல்லாம் தாள் இணை பணிந்துப் போற்றிப்**
**பனித்துஉயிர் பொன்றி வீழ பார்த்தன் மாமகனை இன்னே**
**குனித்தவில் நிமிராவண்ணம் கொடுஞ்சமர்க் கொன்றிலே மேல்**
**இனித்தனு என்று போரில் எடுக்கிலேம் இறைவா என்றார்.**

(வசனம்)

துரியோதனன் இடத்தில் ஒவ்வொரு அரசர்கள்வந்து, அவன் பாதத்தில் பணிந்து வணங்கி, "சூரியனைக் கண்டதும் பனி எப்படி அகன்று போகிறதோ, அதே போல பார்த்தன் மகனாகிய அபிமன்னனோடு, வளைந்த வில் நிமிராதபடி யுத்தம் செய்து அவனை வெல்வோம். அப்படி நாங்கள் கொல்லவில்லையேல் இன்னையிலிருந்து தனுவாகிய வில்லை எடுத்து யுத்தம் செய்கிறது இல்லை" என்றார்கள். அப்படி நேரம் யார் வருகிறார் என்றால்...

(பாடல்)

**சிந்துதேசம் அரசரும்**
**செயித்தரசன் அவன் வாரான்**
**பன்றி கொடி தரித்த மன்னன்**
**படுபாவி அவன் வாரான்**
**திரியோதனன் பாதமதில்**
**திடமுடனே போய் பணிந்தான்.**

(வசனம்)

ஆனால், சிந்து தேசத் தலைவனாகிய செயித்தரசன், திரியோதனன் இடத்தில் வந்து, ''மைத்துனா! உங்கள் மகனாகிய லக்கணகுமாரனை அபிமன்னன் கொன்று விட்டான். ஆனால் நான் என் மருமகனைக் கொன்ற அவனை எப்படியும் கொன்று வருகிறேன்'' என்றான். உடனே துரியோதனன் எப்படி அவனைக் கொல்வீர்கள் என்றான்.

''ஒரு சமயம் வீமசேனனை கொல்லவென்று, சிகர தொண்டமும், கொன்றவன மாலையும் பெற்றேன். இன்று கொன்றவன மாலையால் வளைந்து, சிகர தெண்டத்தால் அடித்து நிச்சயம் கொல்வேன்'' என்றான். உடனே துரியோதனன், "எப்படியும் அவனைக் கொன்று வாருங்கள்" என்று அனுப்பினான்.

செயித்தரசன் வருகிறான். அமர்களத்தை நோக்கி வரும்போது, அபிமன்னனோடு மேலும் சண்டையிட்டு, துரோணர் அஸ்வத்தாமா, கர்ணன், துண்முகன் இவர்கள் எல்லாம் புறமுதுகுப் போட்டு ஓடி வருகிறார்கள். அப்படி நேரம், செயித்தரசன் கண்ணில் கண்டு, அவர்களை நிறுத்தி, "இனிமேல் அபிமன்னனோடு மோசப்போர் செய்து அவனைக் கொல்ல வேண்டும்" என்றான். மோசப்போர் எப்படி என்றால், அபிமன்னனோடு முதலில் கர்ணன் போய் யுத்தம் செய்ய வேண்டும். கொஞ்ச நேர யுத்தம் செய்து தோற்று ஓடும் பாவினையாகத் தேரின் மறைவு வழியாக வந்து நாகாஸ்திரம் போல் ஒளிந்து, அபிமன்னன் பின்புறத்தில் வந்து நிற்க வேண்டும். உடனே அண்ணவியாகிய துரோணர் அவனோடு யுத்தம் செய்ய வேண்டும். அப்படி நேரம் நான் கொன்றவன மாலையால் வளைந்துக் கொள்வேன். சமயம் பார்த்து கர்ணன் அவன் வில் நாணைஅறுக்க வேண்டும். உடனே துரோணர் "அவனைக் கொல்வார்களோ, வெல்வார்களோ அது அவர்கள்

கடமை. இப்படி அவனைக் கொல்லவில்லையேல் அவனைக் கொல்ல முடியாது" என்றான்.

இப்படியாக திட்டம் வகுத்து அபிமன்னனை நோக்கி வருகிறார்கள். அதே சமயம் சுமந்திரன் அபிமன்னனைப் பார்த்து, "அபிமன்னா! நம்மோடு எதிர்ப்பதற்கு இப்போது படைகள் இல்லை. ஆகையால் நாம் பாசறைக்குப் போய் வருவோம்!" என்றான்.

அபிமன்னன், "நாம் இப்போது பாசறைக்குச் சென்றால் பயந்து ஓடி விட்டான் என்று சொல்வார்கள். ஆகையால் நான் இப்போது வரமாட்டேன்!" என்றான்.

உடனே சுமந்திரன், "அபிமன்னா! இப்போது நமக்கு ரணகளத்தில் ஆகாதசகுனம் நடக்கிறது; பாசறை போவோம்" என்றான். "அப்படி என்ன சகுனம் நடக்கிறது?" என்றான் அபிமன்னன். உடனே சுமந்திரன் சொல்கிறான்...

**(பாடல்)**

**கழுகுவட்டம் போடுதையா**
**காண்டிபன் திருமகனே**
**பேய்கள் பந்தம் பிடிக்குதையா**
**பார்த்தனுட திருமகனே**
**ரத்தவாடை வீசுதையா**
**நாரணனார் மருமகனே.**

**(வசனம்)**

"இப்போது நடக்கிற சகுனம், கழுகுகள் வட்டமிடுகிறது. பேய்கள் தாண்டவம் போட்டு ஆடுகிறது. நாய், நரி ஊளையிடுகிறது. ரத்தவாடை வீசுகிறது. நம் குதிரைகள் கண்ணில் கண்ணீர் வடிக்கிறது. ஆகையால் நாம் பாசறைக்குப் போய் வருவோம்" என்றான்.

அபிமன்னன் சொல்கிறான். "யுத்தகளத்தில் யாக்கைகளுக்குச் செம்பருந்து பறக்கிறது வழக்கம். இதுவெல்லாம் சகுனத்திற்கு ஆகாது. நான் பாசறைக்கு வர மாட்டேன்" என்றான். அதே சமயம், செயித்தரசன் படைகளோடு வருகிறான்.

அபிமன்னன் கண்ணில் கண்டு, "நம்மோடு எதிர்ப்பதற்குப் படையில்லை என்று சொன்னாய். இப்போது

எவ்வளவு படை வருகுது பார்!" என்றான். மேலும் வருகிற படைகளோடு அபிமன்னன் போய் எதிர்த்தான் முதலில் அபிமன்னனுக்கும் கர்ணனுக்கும் போர் ஏற்பட்டது.

உடனே கர்ணன் சொல்கிறான்...

**(பாடல்)**

**பார்த்தனுட திருமகனே**
**படைக்களத்தில் விடுவதில்லை**
**உயிர்மேலாசை வேண்டுமானால்**
**ஓடிடுவாய் பாசறைக்கு**
**இல்லையென்றால் விடமாட்டேன்**
**எமலோகம் அனுப்பி விடுவேன்**
**இருபேரும் வில் வளைத்து**
**எதிர்த்துப் போர் செய்கிறார்.**

**(வசனம்)**

கர்ணமகராசனும், அபிமன்னனும் எதிர்த்து யுத்தம் செய்கிறார்கள். ஒருவர் போடும் பாணத்தை ஒருவர் துண்டித்து அமோகப் போர் செய்தார்கள். அதே சமயம் அண்ணாவி, அஸ்வத்தாமா, துண்முகன் இவர்கள் பால கனாகிய அபிமன்னனைச் சுற்றிலும் வளைத்தார்கள். அதே சமயம் கர்ணன் தோற்று ஓடும் பாவினையாக நாகசர்ப்பம் போல் நெளிந்து தேர் மறைவில் மறைந்து அபிமன்னன் பின்புறத்தில் வந்து நின்றான்.

உடனே அண்ணாவியாகிய துரோணர் பாலகனோடு போய் அமர்செய்தார்கள். ஆனால் சுமந்திரனாகிய சாரதி நாலுபுறமும் சுற்றித் தேரை நடத்தி வருகிறவன், விதியின் பயனால் ஒரு முகமாய் நின்று தேர் நடத்தினான். அதே சமயம் செயத்தரசன் கொன்றமாலையை எடுத்து வீசினான். ஆதி பரமசிவன் கொன்றமாலை அரணாக போய் வளைத்தது. அதே மாலையை அபிமன்னன் கண்ணில் கண்டு என்ன நினைக்கிறான் என்றால்....

**(பாடல்)**

**பரமசிவன் கொன்ற மாலை**
**படைகளத்தில் வருவதென்ன**
**ஆதி சிவன் கொன்ற மாலை**

**அமர்களத்தில் வருவதென்ன**
**குருபரன் கொன்ற மாலை**
**குருஷேத்திரத்தில் வருவதென்ன.**

**(வசனம்)**

அதாவது, அபிமன்னன் கொன்றமாலையைக் கண்ணில் கண்டு, "மகாதேவர் மாலையிங்கு வரக் காரணம் என்ன?" வென்று நினைத்தான். "அந்த மாலையைத் தாண்டி ஓடி விட வேண்டும்; ஓடிவிடலாம். ஆனால் பரமசிவன் மாலை யாச்சுதே" என்று, அவனோடு எதிர்த்து நிற்கும் படைகளோடு கடும் போர் புரிந்து கொண்டு நின்றான்.

அதே சமயம் வீமசேனன் யுத்தம் செய்து வெற்றி பெற்று பாசறைக்குத் திரும்பி வந்தான். தருமராசனைப் பார்த்து, "அண்ணா அபிமன்னன் எங்கே?" என்றான்.

"அவனை அமர்க்களம் அனுப்பியிருக்கிறேன்," என்றான். உடனே வீமசேனன் "அண்ணா! இரண்டு மூன்று தினங்களாக அமர்க்களத்தில் மோசப்போரல்லவா நடக்கிறது. முன்பின் தெரியாதச் சிறுவனை அனுப்பலாமா? நான் போய் அவனைக் காப்பாற்றி வருகிறேன்" என்று மதகனாகிய வீமசேனன் வருகிறான். எப்படி என்றால்...

**(பாடல்)**

**காற்றினும் வேகமாக**
**கதாயுதபாணி அவன்வாரான்**
**மடமடென்று ஓடிவாரான்**
**மதகரியான் வருகிறதை**
**மானாகன் கண்ணில் கண்டான்**
**துர்ச்சாதனன் முகம் பார்த்து**
**சொல்லுகிறான் ஒரு வசனம்.**

**(வசனம்)**

வீமசேனன் வருகிறதைத் துரியோதனன் கண்ணில் கண்டு, "தம்பி துர்ச்சாதனா! அங்கே நின்று யுத்தம் செய்பவன் ஒரு அக்கினியன். போகிறவன் ஒரு காற்று. அக்கினியும் காற்றும் ஒன்று சேர்ந்தால் செங்காடு தீப்பட்டது போல் இருக்கும். ஆகையால் பீமனை அவனோடு சேர விடப்படாது" என்றான்.

உடனே துர்ச்சாதனன் படையைக் கொண்டு நிறுத்தினான். வீமசேனன் ஓடோடியும் வந்து பாலகனைப் பார்க்கும் போது, பாலகன் கொன்றை மாலையால் வளையுண்டு நின்றான். வீமசேனன் யோசிக்கின்றான், "இன்றைய அமரில் யார் யார் உயிர் போயினும், நான் இந்தக் கொன்றை மாலையைக் கடவேன்" என்று எண்ணினான். கொன்றை மாலையைத் தாண்டி அவனைக் காப்பாற்ற வேண்டுமானாலும் முடியும். ஆதிசிவன் மாலையாச்சுதே என்றுதான் அகன்றான்.

உடனே துர்ச்சாதனன் நிறுத்தியிருந்த யானைப் படையோடு போய் யுத்தம் செய்தான். இங்கே இவர்கள் சரித்திரம் இப்படி இருக்க, அபிமன்னனும் துரோணரும் கடும்போர் புரிந்து நிற்கும்போது, பின்புறத்தில் நிற்கும் கர்ணன் சமயம் பார்த்து, அபிமன்னன் கையிலிருக்கும் வில் நாணை அறுத்து விட்டான். வில் நாண் அறுபட்டதும் வில் நிமிர்ந்தது.

உடனே சாரதியைப் பார்த்து, "சுமந்திரா ஷேம வில்லை எடு!" என்றான். "அரசே! ஷேமவில்லை எடுக்க மறந்து விட்டேன்" என்றான். அந்த ஷேமவில் இருந்தாலும் போதும் அவனை வெல்ல முடியாது. விதி வலியால் சாரதி ஷேமவில் எடுக்க மறந்தான். அதே நேரத்தில் அண்ணாவியாகிய துரோணர் இலைமுகா அஸ்த்திரம் ஒன்றைத் தொடுத்து பாலகன் இடது கரத்தை அறுத்தார். இன்னொரு அஸ்த்திரம் சென்று சுமந்திரனாகிய சாரதியைக் கொன்றது. இன்னொரு அஸ்த்திரம் இரதத்தை உடைத்துக் குதிரையையும் கொன்றது.

அபிமன்னன், சாரதி, குதிரை, ஒரு கரம் அத்தனையும் இழந்து யோசிக்கிறான். "இந்த சண்டாளர்கள் நம்மை மோசம் செய்து கொன்று விடுவார்கள். நமது தந்தை தென் சமுத்திரக் கரையில் நின்று யுத்தம் செய்கிறார். அவர்கள் வந்தால் நம்மை நிச்சயம் காப்பாற்றுவார்" என்று அவன் சங்கதை எடுத்து ஊதினான். சங்கத்தொனியைக் கேட்டு வரட்டும் என்று,

**(பாடல்)**

**வெற்றி சங்குகையிலெடுத்து**
**விசையன் மகன் ஊதுகிறான்**
**சங்கத்தொனி கேட்டிடவே**

சாரங்கன் எண்ணுகிறார்
பன்றியிப்போ பட்டதென்று
பரந்தாமன் எண்ணுகிறான்.

(வசனம்)

ஆனால், பாலகனாகிய அபிமன்னன் நமது தந்தை வரட்டும் என்று அவன் சங்கை எடுத்து ஊதினான். இந்த சங்குத் தொனியைக் கண்ணன் காதில் கேட்டு, நமது மருமகனுக்கு விதி கிழியப் போகிறது. அருச்சுனன் சென்றால் அவனைக் காப்பாற்றி விடுவான் என்றும், நாம் பரமசிவன் இடத்தில் அடகு வைத்திருக்கும் சக்கரத்தைக் கைக்கு எடுக்க முடியாது என்றும் பாலகன் தொனித்த சங்கு ஓசையை அர்ச்சுனன் காதில் விழ விடாமல், அவர் சங்கதைக் கையிலெடுத்து ஊதினார்.

(பாடல்)

பாஞ்ச சன்யம் கையிலெடுத்து
பரந்தாமன் ஊதுகிறார்
வெண்ணையுண்டோன் தொனித்தச் சங்கு
விசையன் மகன் காதில் கேட்பான்
அப்பா இப்போ வருவாரென்று
அபிமன்னன் போர் தொடுத்தான்.

(வசனம்)

ஆனால், கண்ணன், பாலகன் தொனித்தச் சங்குத் தொனியைப் பார்த்தன் காதில் கேட்க விடாமல் அவர் பாஞ்ச சன்யமாகிய சங்கை ஊதி மறைத்து விட்டார். கண்ணன் தொனித்தச் சங்கு ஓசையை அபிமன்னன் காதில் கேட்டு, நமது தந்தை எப்படியும் வந்து விடுவார்கள் என்று கேடயத் தைக் கையிலே எடுத்து மேலும் அண்ணாவியோடு யுத்தம் செய்தான். மேலும் அருச்சுனன், கண்ணனிடம், "சங்கு தொனிக்கக் காரணம் என்ன?" என்றான். "அருச்சுனன் உன் அண்ணனாகிய தருமர் வெற்றியோ, தோல்வியோ என்று எண்ணியிருப்பார்கள். வெற்றியோடு நிற்கிறோம் என்றுதான் சங்கு தொனித்தேன்" என்று பார்த்தனை ஏமாற்றி விட்டார். அபிமன்னன் கேடய யுத்தம் செய்யும்போது ஒரு கரத்தோடு நின்றாலும் அண்ணாவியின் சேனையைச் சிதற அடித்து நின்றான். அதே சமயம் வில்லாசிரியனாகிய துரோணன்-

சீலிமுக கணை ஒன்று தொடுத்து கேடயத்தையும் உடைத்து விட்டார். கேடயம் பலிபோனதும் அபிமன்னன் தெண்டா யுதத்தைக் கையில் எடுத்தான்.

**(பாடல்)**

**தெண்டாயுதம் கையிலெடுத்து**
**சிலைவிஷயன் திருமகனும்**
**வந்தவந்தப் படைகளெல்லாம்**
**வாணால் வதை செய்கிறான்**
**துரியோதனன் படைகளைத்தான்**
**சின்னாபின்னம் செய்கிறான்.**

**(வசனம்)**

அரி பரந்தாமன் மருகேசனாகிய அபிமன்னன் தெண்டா யுதத்தினால் எவ்வளவோ படைகளைக் கொன்று வீழ்த் தினான். அண்ணாவி மகனாகிய அஸ்வத்தாமா ஒரு அஸ்திரம் போட்டுத் தெண்டாயுதத்தையும் உடைத்து வீசினான். ஒரு கரத்தோடு நிற்கும் பாலகனை எத்தனையோ சுத்த வீரர்கள் எல்லாம் சேர்ந்து மோசப் போர் செய்து கொல்லத் திட்ட மிடுகிறார்கள். ஆயினும் அபிமன்னன், திடத்தை விடாமல் அப்பா கூடிய சீக்கிரத்தில் வந்து விடுவார்கள் என்று வாளாயுதத்தைக் கையிலெடுத்து வாளை அடர்ந்தத் தோப்பில் வாள் கொண்டு வெட்டினால் எப்படியோ, அந்தப் பாவினையோடு திரியோதன சேனையைச் சிதறச் சிதற வெட்டினான். கர்ண மகாராசன் ஒரு பாணத்தைப் போட்டு அந்த வாளாயுதத்தையும் உடைத்து வீசினான். வாளாயுதம் பறிபோனதும் அபிமன்னன் தேர்சகடையைக் கையில் எடுத்து எரிசக்கர மந்திரத்தைச் செபித்து அவன் வலது கையில் போட்டு சுழற்றி வணங்காமுடி வேந்தன் படைகளை இலவம்பஞ்சு போல் அடித்தான். வில்லாசிரியராகிய துரோணர் தேர் சகடையை உடைத்து வீசினார்.

அபிமன்னன் வேறு எந்த ஆயுதமும் இல்லாமல் வருகிற பாணங்களைத் தன் பேரில் படவொட்டாமல் கைலாகு கொடுத்து நின்றான். அப்படி நேரம் துர்ச்சாதனன் மகனாகிய துர்சனி வருகிறான். அபிமன்னன் ஆயுதம் இல்லாமல் நின்று யுத்தம் செய்வதைப் பார்த்து துரோணர், கர்ணன், துண்முகன் இவர்களைப் பார்த்து, "ஆயுதம் இல்லாதவனோடு, ஆயுதம் வைத்துச் சண்டை செய்கிறீர்களே! நீங்கள் ஒரு வில் வீரர்தானா?" என அத்தனை பேரையும் விலக்கி, "அபிமன்னா!

இனி நீயும் நானும் அஸ்த்திரம் இல்லாமல் மல்யுத்தம் செய்வோம்" என்று இரண்டு பேர்களும் மல்யுத்தம் செய்ய ஆரம்பித்தார்கள். எப்படி என்றால்....

(பாடல்)

**மலையும் அலையும் பொருவது போலே**
**மகிழ்ந்திரு பேர்களும் போரது செய்தார்**
**கடலும் மலையும் பொருவது போலே**
**களமதில் சண்டை நடக்கு பாராய்**
**அவனுட செவிட்டிலே இவனடி போட்டான்**
**இவனுட செவிட்டிலே அவனடி போட்டான்**
**கோழிப் போரது பொருவது போலே**
**கொக்கரித் திருபேரும் போரது செய்தார்**
**ஓடாத ஓடாத நில்லடா என்றான்**
**ஓட ஓட முதுகிலே போட்டான்**
**அவன் ஓர் அடி அடித்தான்**
**இவன் ஓர் அடி அடித்தான்**
**ஆக இருபேரும் ஒன்று போலே**
**எதிர்த்து போர் செய்யுகிறார்.**

(வசனம்)

ஏழரை நாழிகையாய் இடைவிடா போர் செய்தான். ஆனால் அபிமன்னனும் துர்சினியும் ஒருவரை யொருவர் வெல்ல வேண்டும் என்னும் ஆசையால் முட்டியும், தட்டியும், அடித்தும், கடித்தும், உருட்டியும், புரட்டியும் மேலாள் கீழாள், ஓடல், ஓதுங்கல், தத்தல், பதுங்கல் இந்த விதமாக ஏழரை நாழிகை வரையும் மல்யுத்தம் செய்தார்கள். அபிமன்னன் ஒரு கரத்தே நின்றாலும் கொஞ்ச மேனும் அஞ்சாமல் துர்சினியின் மார்பில் ஒரு உதை கொடுத்தான். அவன் மார்பு கலங்கி கீழே விழுந்தான். அந்நேரம் அபிமன்னன் ஒரு கரம் கொண்டு அவன் பாதத்தைப் பிடித்துக் கரகரவென சுழற்றினான். அது எப்படியென்றால் . . .

(பாடல்)

**கார்வண்ணா உண்டு மென்று**
**கால் வாரிகையில் பிடித்தான்**
**கால் வாரி கையில் பிடித்து**
**களமதிலே கொண்டடித்தான்**
**பட்டிறந்து துர்சினியும்**
**பரலோகக் கெதியானான்.**

**(வசனம்)**

அபிமன்னன் துர்சினியின் பாதத்தைப் பிடித்து யுத்தகளத்தில் அடித்துக் கொன்றான். துர்ச்சாதனன் பெற்ற மகன் எமலோகம் போய்ச்சேர்ந்தான். ஆனால் அபிமன்னன் சோர்வு உண்டாகி நிற்க முடியாமல், சோகித்து யுத்தக் களத்தில் ஒரு பாகத்தில் மூர்ச்சித்து விழுந்தான். ஆனால் இவன் உயிரும் இப்பவோ என்னும் சற்று நேரத்தில் போய்விடும் போல் இருந்தது. அதே சமயம் சிந்து தேசத் தலைவன் செயித்தரசன் வருகிறான். அபிமன்னன் குற்றுயிராகச் சாய்ந்து இருக்கிறதைக் கண்டு, இதே சமயம் இவனைக் கொல்ல வேண்டும் என்று சிகரதெண்டத்தை எடுத்துக் கிட்டே வருவான். அவன் நம்மைக் கொன்று விடுவானோ என்று தூரத்தில் ஒதுங்குவான். இப்படி சில நேரம் வரையும் நின்று, எப்படியும் இவனைக் கொல்ல வேண்டும் என்று திடத்தோடு பாலகன் அருகில் வருகிறான். எப்படி என்றால்...

**(பாடல்)**

**சிவபெருமானே உண்டுமென்று**<br>
**சிகரதெண்டம் கையிலெடுத்தான்**<br>
**சிகரதெண்டம் கையிலெடுத்து**<br>
**சிறுவன் மேலே கொண்டடித்தான்**<br>
**சிகரதெண்டம் பட்டிடவே**<br>
**சிறுவன் உயிர் பிரிந்திடுமாம்**<br>
**அமரநாடு ஆனதிலே**<br>
**அபிமன்னன் போய் அமர்ந்தான்.**

**(வசனம்)**

ஆனால், சண்டாளனாகிய செயித்தரசன் மைந்தன் என்று பாராமல், மாபாவி சிவபெருமான் இடத்தில் பெற்ற சிகரதெண்டத்தை எடுத்து சிறுவனாகிய அபிமன்னன் சிரசில் ஓங்கி அடித்தான். சிகரதெண்டம் அடிபட்டதும் சிறுவன் உயிர் பிரிந்து அமர நாடாகிய தேவ நாட்டில் கார்ப்பகத்தரு நிழலில் போய் அமர்ந்தான். இதையறிந்தச் சுகசாரணர் தருமராசனுக்குச் சொல்ல வேண்டும் என்று வருகிறார். அதே சமயம் அந்தரவாசிகளாகிய தேவர்கள் இந்த யுத்தத்தைப் பார்த்துக் கொண்டு இருந்தவர்கள், "இவ்வளவு வீரப்பிரதாப னாகிய சிறுவன் என்னும் அபிமன்னன் அமர்களத்தில் இறக்க வேண்டும் என்றா பரமசிவன் வகுத்து விட்டார்'' என்று

தேவர்கள் கண்ணில் இருந்து கண்ணீர் விட்டு, மேலும் சொல்கிறார்கள்...

## (செய்யுள்)

மாயனாம் திருமாமன் தனஞ்சயனாம் திருத்தாதை வானோர்க்கெல்லாம்
நாயனாம் பிதாமகன் மற்றொருகோடி நராதிபராம் நண்பாய் வந்தோர்
சேயனாம் அபிமனுவாம் செயத்திரதன் கைப்படுவான் செயற்கை வெவ்வேறு
ஆயநாள் அவனிதலத்து அவ்விதியை வெல்லும் விரகு ஆர்வல்லாரே?

## (வசனம்)

ஆனால், தேவர்கள் என்ன சொல்கிறார்கள் என்றால் "மாயாவியாகிய கண்ணன் தாய்மாமனாக இருக்கிறார். யுத்த வீரப்பிரதாபனாகிய தனஞ்சயன் அவனைப் பெற்றத் தந்தையாக இருக்கிறான். வானவர்களாகிய தேவர்களுக் கெல்லாம் தலைவனாக அவன் பாட்டன் என்னும் இந்திரன் இருக்கிறான். இவன் பிதாவழி கிளையில் திரியோதனனுக் காக, நண்பனாக வந்த செயித்தரசன் கையால் மடியவா கடவுள் வகுத்தார். இல்லையேல் இந்த நூறு பேரில் ஒருவரால் இவர் மடியப் படாதா?" என்றனர்.

"சிறுவனாகிய அபிமன்னனை இந்தச் சண்டாளனாகிய செயித்தரசன் கொல்ல வேண்டியவனா, இவன் கரத்தால் அவன் மடிய வேண்டும் என்று பரமசிவன் வகுத்து விட்டிருக்கிறார். இல்லையேல் இவனை அவன் கொல்ல முடியுமா?" என்று மேலும் கண்ணீர் விட்டுச் சொல்கிறார்கள்.

## (செய்யுள்)

சேடன் முடி நெளிய வருசெம்பொன்தேர் அழிவதோ அந்தோ அந்தோ!
கேடக வாள் அணிவலயக் கிளர்புயத்தோள் அறுவதோ அந்தோ அந்தோ!
கூடகவெங் கதையொன்றால் சிந்து பதி கொல்வதோ அந்தோ அந்தோ!
ஆடு அமரில் ஒருவரும் வந்து உதவாமல் இருப்பதோ அந்தோ அந்தோ!.

## (வசனம்)

மேலும், அந்தரவார்களாகிய தேவர்கள், "சிறுவனாகிய அபிமன்னன் தேர் ஊர்ந்து வரும்போது இந்தப் புவனத்தைத் தாங்கி வருகிறான். ஆகாய சிகரங்களெல்லாம் அதிரத்தக்கதாக அந்தச் செம்பொன் முடித்தேர் வந்ததே. அதே செம்பொன் தேர், இவ்வுலகத்தில் அழிந்தா போக வேண்டும் என்று தானா அய்யோ! அய்யோ!" என்று புலம்பினார்.

மேலும், "கேடயம் தெண்டாயுதம், வாளாயுதம் அணிந்திருந்த அவன் புஜம் அறுபட்டா போக வேண்டும் என்றனர். சிந்து பதுகையிலிருக்கும் கெதை வெறுங்கெதை தானே. இந்த வெறுங்கதைபட்டா சுத்த வீரனான அபிமன்னன் இறக்க வேண்டும். மகாதேவர் ஐந்து பேரில் ஒருவர் அவனுக்கு உதவியாக நின்றால் அவனைக் கொல்ல முடியுமா? வெல்ல முடியுமா? அவன் விதிப்படியானால் சண்டாளன் கொன்றான்" என்று தேவர்கள் புலம்பி அய்யோ அய்யோ என்றனர்.

இப்படி தேவர்கள் புலம்பி பரிதவித்து இருக்க சுகசாரணர் தருமராசனிடத்தில் வந்து, "அரசே! உங்கள் மைந்தனாகிய அபிமன்னன். சிந்துதேச தலைவன் செயித்தரசன் சிகர தெண்டத்தால் அடித்துக்கொன்று விட்டான்" என்றனர். இந்த வார்த்தையைக் காதில் கேட்ட தருமராசன் சிங்க தானத்தில் இருந்த மன்னன் திண்ணென பூமியில் விழுந்து, சோகித்து திரண்ட புஜம் கொண்டு அகண்ட மார்பில் அடித்து "நான் பெத்த மகனாகிய அபிமன்னா!" என்று மேலும் மூர்ச்சித்து பாசறை எல்லாம் புரண்டு, மேலும் புலம்பினார். "என் மகனாகிய அபிமன்னனான குழந்தாய், நான் எப்போதுடா உன்னைக் காண்பேன்" என்று புலம்பினார்.

**(பாடல்)**

**போ வென்றதோர் வாயாலே**
**வா வென்று சொன்னேன் இல்லை**
**வா வென்று நான் சொன்னேன் ஆனால்**
**வந்திருப்பாய் என் மகனே**
**அழகு எழும் பிரம்ம தேவன்**
**ஆயுள் எழுத மறந்தாரோ**
**இன்று கண்ட திருமுகத்தை**
**என்று காணப் போறேனடா.**

**(வசனம்)**

ஆனால், முரசுக் கொடிக்கு அதிபனாகிய தருமராசன் மைந்தனாகிய அபிமன்னனை நினைத்து, "என் மகனாகிய குழந்தாய் நான் உன்னை அமர்க்களம் அனுப்பும்போது, என் வாக்கியமே உனக்குத் தீவினை வசமானது. உன்னை போ என்ற வாயால் வா என்று சொல்ல மதியிழந்து விட்டேன். நான் வா என்று சொல்லியிருந்தால் வந்திருப்பாய். என்

மகனே உன்னைப் படமாக எழுதியாகிலும் வைத்திருந்தால் உன் முகத்தைப் பார்த்தாகிலும் சற்றே மனம் தேறுவேன். உன் தந்தையாகிய அருச்சுனனுக்கு என்னடா பதில் சொல்வேன். நான் உன்னைக் கொண்டு இந்த உலகத்தில் என்னவெல்லாம் செய்ய நினைத்தேன். அவ்வளவு எண்ணத்திலும் மண்ணை வாரிப் போட்டு விட்டு, எங்கே சென்றாய் என் மகனே?" என்று மேலும் புலம்புவார்.

### (செய்யுள்)

**பிறந்ததினம் முதலாகப் பெற்றெடுத்த**
**விடலையினும் பீடும் தேசும்**
**சிறந்தனையென்று உனைக் கொண்டே தெவ்வரைவென்று**
**உலகாளச் சிந்தித் தேன்யான்**
**மறந்தனையோ எங்களையும்? மாலையினால்**
**வளைப்புண்டு மருவார் போரில்**
**இறந்தனையோ? என்கண்ணே! என்னுயிரே!**
**அபிமா! இன்று என்செய் தாயே!.**

### (வசனம்)

"என்மகனாகிய அபிமன்னா! நீ பிறந்த அந்நாளில் இருந்து இந்நாள் வரையும் எத்தனை குழந்தை இருந்தாலும், அவர்களைப் பற்றி பிரயோசனம் கிடையாது என்று எண்ணி, உன்னைக் கொண்டு இந்த உலகத்தை ஆளலாம் என்று எவ்வளவு பேராசையோடு இருந்தேன். அப்படி எண்ணிய எண்ணத்தில் மண்ணை வாரிப் போட்டுவிட்டு எங்கேடா சென்று விட்டாய். சண்டாளனாகிய செயித்தரசன் கொன்ற மாலையால் வளைபூண்டு, எங்களை அடியோடு மறந்து விட்டாய் போலும். தேவர்கள் ஆனாலும் உன்னைக் கொண்டு வெற்றி பெற்று உலகை ஆளலாம் என்று எண்ணினேன். மேலும் நீ செய்த யுத்த வீரப்பிரதாபங்களை என்னிடம் வந்து சொல்லப்படாதென்று அமரநாட்டில் போய் அமர்ந்து கொண்டாயோ மகனே!" என்று புலம்பினார். தருமராச பூபதி இன்னும் என்ன சொல்கிறார் என்றால்...

### (செய்யுள்)

**நின்றனையே எனைக்காத்து நீயேகு என்று**
**யான் உரைப்ப நெடுந்தேர் ஊர்ந்து**

**சென்றனையே இமைப்பொழுதில் திகிரியையும்**
**உடைத்தனையே தெவ்வர் ஓட,**
**வென்றனையே சுயோதனன்தன் மகவுடனே**
**மகவனைத்தும் விடம்கால் அம்பின்**
**கொன்றனையேநின் ஆண்மை மீண்டுரைக்கக்**
**கூசினையோ? குமரர் ஏறே!**

"மாமாயன் மருமகனாகிய என் மகனே! என்னைப் பாசறையில் எவ்வளவு திடத்தோடு காவல் செய்து கொண்டு நின்றாய். என் சொல்லைக் கேட்டுத் தானே ரணகளம் சென்றாய். என் மகனே! அப்படிச் சென்று இமை தட்டி விளிக்குமுன் அண்ணாவி கட்டியிருந்த யூகத்தை இதழ் இதழாக உடைத்து வீசிவிட்டாய். இன்னும் கண நேரத்தில் துரியோதனன் மகன் லக்கணனையும் அவன் நண்பர்களையும் எவ்வளவு சீக்கிரமாய் கொன்று இருக்கிறாய். நான் இவ்வளவு வெற்றி பெற்று விட்டேன் என்று என்னிடம் சொல்லப் படாததென்று அங்கேயே உயிர் மடிந்து விட்டாயே என் மகனே!" என்று புலம்பினான். பாசறையில் ஒரு பாகத்தில் போய் திண்ணென விழுந்தார் தருமராசன். அப்படி நேரம் வீமசேனன் மகன் இறந்ததைப் பற்றிச் சோதித்துப் புலம்ப ஆரம்பித்தான். "என் மகனாகிய அபிமன்னா...

**(பாடல்)**

**மைந்தா உன்னை பார்க்கவென்று**
**மதகரியான் ஓடி வந்தேன்**
**அமர்களத்தில் உனைக் காண**
**அடல்வீமன் ஓடி வந்தேன்**
**சடையரசன் மாலை தன்னை**
**தாண்டவொண்ணா தென்று யெண்ணி**
**ஆதிபரன் மாலைக் காக**
**அடல்வீமன் நின்று விட்டேன்.**

**(வசனம்)**

"ஆசை மகனாகிய அபிமன்னா! உன்னைக் காப்பாற்ற வேண்டும் என்று எவ்வளவு பேராசையோடு ஓடி வந்தேன். நான் வரும்போது கொன்றவன மாலைக்குள் நின்று யுத்தம் செய்தாய். ஆதிபரனுடைய மாலையாச்சுதே என்று

மாலையைத் தாண்டாமல், வேறு எந்த அரசன் வந்தாலும் வென்று உன்னைக் காப்பாற்ற வேண்டும் என்று எண்ணி னேன். அங்கிருந்த மதிமோசமாகிய சூதை நான் அறிந்தேன் இல்லை மகனாகிய குழந்தாய்."

**(செய்யுள்)**

**சங்கலார் இடைவளைத்தச் சக்கரத்தை**
**உடைப்பதற்குத் தமியேன் எய்தி**
**அங்கு உலாவரும் இரதத்து அரசரையும்**
**தொலைத்துன்னை அடுப்பான் வந்தேன்**
**பங்கெலாம்மரகதமாம் பவளநிறப்**
**பொருப்புதவு பைம்பொற் கொன்றைத்**
**தொங்கலால் உனை வளைத்த சூழ்ச்சியை இன்று**
**அறிந்திலனே தோன்றலே! நான்.**

"என் அருமை மகனாகிய அபிமன்னனும் குழந்தாய், உன்னைக் காப்பாற்ற வேண்டும் என்று அமர்களத்திற்கு ஓடோடி வந்தேன். நான் அப்படி வந்து உன்னைப் பார்க்கிற போது குருபரன் அளித்தக் கொன்றவன மாலையால் வளை பூண்டு நின்று மகேஸ்வரன் மாலையைத் தாண்டப்படாது என்று மேலும் மேலும் உன்னோடு வரும் யுத்தத்திற்கு வருகிற சத்தவீரர்களை எல்லாம் உன்னோடு யுத்தத்திற்கு வரவொட்டாமல் அவர்களோடு நான் போர் பொருதினேன். சண்டாளர்கள் உன்னைக் கொல்வதற்காக வேண்டி சூழ்ச்சியாகிய மோசப் போர் செய்தார்கள் என்று யான் அறிகிலேன் குழந்தாய். அப்படி அறிந்து இருந்தேனானால், அத்தனைப் பேர்களையும் அமர்களம் செய்து, உன்னை நிச்சயமாகக் காப்பாற்றி இருப்பேன். மகனே உன்னைக் காப்பாற்றச் சக்தி இல்லாத பாவியாகி விட்டேன்" என்று புலம்பி பாசறையில் மலை போல் விழுந்தான் மதகரியானாகிய வீமன். அதே சமயம் நகுல சகாதேவர்களும் புலம்பி பாசறையில் போய் அமர்ந்தார்கள். இப்படி இருக்க விராடன் பெற்ற மகளாகிய உத்தரை குமாரத்தி தலைவிரி கோலமாக வந்து பாசறையில் திண்ணென விழுந்து, மன்னனான அபி மன்னனை நினைத்துப் புலம்பினாள். "என் ஆசை மன்னா. நான் உங்களை இழந்ததோடு இந்த உலகில் எப்பேர்பட்ட வஸ்துவை எல்லாம் இழக்கலானேன்."

(பாடல்)

**பொட்டிழந்தேன் பூ விழுந்தேன்**
**புருசனையும் நானிழந்தேன்**
**பட்டுக்கடை தான் மறந்தேன்**
**பகழுக்கடை நான் மறந்தேன்**
**மூலையிலே படுத்திருந்து**
**முக்காடிட்டு புலம்பலானேன்**
**மஞ்சன் நல்லை புடவைதனை**
**மடித்து உடுக்கும் நாளையிலே**
**கஞ்சி இட்ட வெள்ளச் சேலை**
**கெட்டுதற்கு நாளாச்சே.**

(வசனம்)

*“என் ஆசை மணாளா! நான் உன்னை இழந்தபின் பொட்டு வைக்க முடியுமா? கொண்டை கோதி முடிக்கத்தான் முடியுமா? கையில் வளையிட முடியுமா? நல்ல பட்டு வஸ்திரம் கட்ட முடியுமா? பட்டு கண்டாங்கியைப் பகர்ந்து உடுக்கும் நாளையில் வெள்ளைச் சேலையைக் கட்டி வீதியில் வந்தால் என்னை உலகத்தவர் என்ன பேசுவார்கள். அங்கத்திற்குத் தங்கம் பூணுவார்களே! அடியாள் நீங்கள் இல்லாத குறையால் என் தங்க ஆபரணங்களைக் கழட்டி வைக்க நாளாச்சே.”*

*இந்தப் பாவனையோடு உத்தரை குமாரத்தி புலம்பி பாசறையில் போய் சாய்ந்தாள். இப்படி இருக்க பாசறை மாசடைந்து இருக்கிறது. ஆனால் தென் சமுத்திர கரையில் சாரங்கனாகிய கண்ணனும் தனஞ்செய மகாராசனும், யுத்தத்தை வெற்றிபெற முடித்து பாசறை போக வேண்டும் என்று திரும்பினார்கள். அவர்கள் எப்படி வருகிறார்கள் என்றால்...*

(பாடல்)

**பாசறை தனைநோக்கி**
**பரந்தாமன் ரதம் கொடுவாய்**
**அருச்சுனனைத் தானழைத்து**
**அரிநெடுமால் வரும்போது**
**சாரங்கன் எம் பெருமாள்**
**தன் மனதில் எண்ணுகிறார்**
**பார்த்தனுட தன் உயிரை**
**பரந்தாமன் காக்க வேண்டும்.**

(வசனம்)

ஆனால், கண்ணன் தேர் நடத்தி வரும்போது, "அருச்சுனன் பெற்ற மகனாகிய அபிமன்னன் இறந்து விட்டான். மகன் இறந்த புத்திர தோஷத்தினால் அருச்சு னனும் இறந்து விடுவான். இவனை எப்படியும் காப்பாற்ற வேண்டும்" என்று மாயாவியாகிய கண்ணன் எண்ணுகிறார். தேர் நடத்தி வரும்போதே, இவனுக்கு ஒருவலவனாக இருந்தாலும், இன்னொரு பாகத்தில் மாய கிருஷ்ணன் போய் நின்று அருச்சுனனைக் காப்பாற்ற வேண்டுமானால், தேவர்க்கு அரசனாகிய இந்திரனால் தான் முடியும் என்று இந்திரனை மனதில் நினைத்தார். மாயாவியாகிய கண்ணன் தேவராசனை மனதில் நினைக்க, மகவான் வந்து உதயமாகினான் ...

(பாடல்)

**தேவநாடு அரசாளும்**
**தேவ இந்திரர் வருக வென்றார்**
**அமர நாடு அரசாளும்**
**அமரேசா வருக வென்றார்**
**மாயவன் மனம் நினைக்க**
**மகாவான் பிரசன்ன மானான்.**

(வசனம்)

அதாவது கண்ணன் இந்திரனைக் கண்டதும், "இந்திரா உன் பேரப்பிள்ளையாகிய அபிமன்னன் அமரநாடு வந்து இருப்பானே! புத்திரன் இறந்ததுத் தெரிந்ததானால் உன் மகனாகிய அருச்சுனன் இறந்து விடுவான். அவனை இரண்டு பேர்களுமாகக் காப்பாற்ற வேண்டும். எப்படியென்றால், நான் தேரை நடத்திக் கொண்டே வருவேன். நாங்கள் வருகிற பாதையில், நீ ஒரு கிழப்பிராமண ரூபம் கொண்டு, ஒரு வேள்வியை வளர்த்து, வேள்வியில் விழுந்து இறக்கும் தன்மை போல் வேள்வியைச் சுற்றிச் சுற்றி வர வேண்டும் . அருச்சுனன் கண்ணில் கண்டு, ஏழை பிராமணா இறந்து விடாதே! என்று ஓடோடி வந்து உன்னைத் தடுப்பான். உன்னுடைய பெயர் என்னவென்று கேட்பான். ஆகண்டல ஐயர் என்று சொல் எதற்கு விழுந்து இறக்கப் போகிறாய் என்று கேட்பான். எனக்கு ஒரு மகன் இருந்தான். அவன் திடீரென இறந்து விட்டான். என் மகனை இழந்து போட்டு

நான் இந்த உலகத்தில் வாழ வேண்டுமா? என்னைத் தடுக்காதே நான் இந்த அக்னிக்கு இரையாகப் போகிறேன், என்று சொல்லு. ஆனால் அருச்சுனன் உன்னை இறக்க விடமாட்டான். அப்படி நேரம் அவனிடத்தில் ஒரு சத்தியம் கேள்" என்றார்.

அதன்படி இந்திரன், "எனக்கு ஒரு மகன் இருந்தான். அவன் இறந்து விட்டான். அதற்கு என்னை இறக்க விடமாட்டேன் என்று தடுக்கிறீர். உம்முடைய மகன் ஒருவன் இறந்து விட்டால் நீர் அக்னியில் விழுந்து இறக்க மாட்டேன் என்று எனக்கு ஒரு சத்தியம் செய்துக் கொடு" என்றான்.

உடனே அருச்சுனன், "அடே ஏழை பிராமணா! என் மகன் ஒருவன் இறந்து விட்டான் என்றால் உன்னைப் போல் கோழைத்தனமாக அக்னியில் விழுந்து இறக்க மாட்டேன்" என்று சத்தியம் செய்து கொடுத்தான். உடனே கண்ணன், "அடே அருச்சுனா! இலையும் பழுப்பும் எல்லோருக்கும் உண்டு" என்றார்.

உடனே பிராமணனும் அகன்றான், உடனே மாயாவி யாகிய கண்ணன் தேரைத் தூண்டி வருகிறார். ஆனால் அருச்சுனன் சொல்கிறான், "கண்ணா எனக்கு இந்த நேரத்தில் பொல்லாதச் சகுனம் காணுகிறதே!" என்றான். "என்னடா சகுனம் தோன்றுகிறது" என்றார். கண்ணன்.

"ஏ! வாசுதேவனாகிய கண்ணா...

**(பாடல்)**

**என் புசங்கள் ரெண்டும் துடிக்குதையா**
**பரந்தாமா என் செய்வேன்**
**ஆடாதத் துடைகள் ரெண்டும்**
**அதிருதையா மாயோனே**
**இருகண்களில் தானிருந்து**
**கண்ணீராய் சோருதையா**
**ரத்தவாடை வீசுதையா**
**நாரணனே என்ன செய்வேன்.**

**(வசனம்)**

மைத்துனனாகிய கண்ணா! என் புசங்கள் இரண்டும் துடிக்கிறது. என்னை அறியாமலே என் துடைகள் அதிருகிறது. என் கண்களில் எப்பொழுதும் சோகக் கண்ணீரில் வடிகிறது. இரத்த வாடையும் வீசுகிறது. இதுவெல்லாம் ஒரு துர்க்குறி

அல்லவா!'' என்றான். உடனே கண்ணன், "அருச்சுனா இடக்கை, வலக்கை என்று மழை மாரியாக ஓயாத அஸ்திரம் போட்டபடியினால் உன் புஜங்கள் துடிக்கலாம். எப்பொழு தும் ரதத்தில் மண்டியிட்டு யுத்தம் செய்தபடியால் உன் துடை வலிக்கலாம். விழித்தக் கண் சிமிட்டாமல் இருந்து யுத்தம் செய்தபடியினால் கண்களில் நீர்த்தும், பலமா எதிராளியின் திரேகத்தில் இருந்து பாய்கிற இரத்தம், நம் திரேகத்தில் பட்டு இருக்கலாம், ஆகையினால் இரத்த வாடை வீசலாம். இதிலெல்லாம் ஒரு சகுனம் இல்லை அருச்சுனா!'' என்று தேரை நடத்தி வருகிறார். பாசறைக்கு அருகே இரதம் வருகிற போது என்றைக்கும் எதிராக ஓடி வருகிற அபிமன்னனைக் காணாமல், பார்த்தனாகிய தனஞ்செயன் மனம் கலங்கினான். எப்படியென்றால்...

**(பாடல்)**

**மைந்தனைத்தான் காணாமல்**
**மனதில் மெத்த கவலை கொண்டான்**
**அபிமன்னனைக் காணாமல்**
**அருச்சுனனும் சோர்கிறான்**
**தேரை விட்டு கீழ் குதித்தான்**
**திடம்பெரிய அருச்சுனனும்**
**பார்த்தனுக்கு முன்பாகவே**
**பரந்தாமன் அவர் வாரார்.**

**(வசனம்)**

என்றைக்கும் எதிரே வரக்கூடிய மகனை இன்றைக்கு காணாமல், பார்த்தன் இரதத்தை விட்டு கீழே குதித்து பாசறைக்கு வருகிறான். கபடநாடக சூத்திர அவதாரியாகிய மாயா ஸ்ரீ கண்ணன், அருச்சுனனுக்கு முன்னதாகவே சென்று, பாசறையில் நகுல சகாதேவரைப் பார்த்து, "நகுல, சகாதேவர்கள் ஆயுதங்களை எடுத்து பத்திரப்படுத்துங்கள்'' என்றார் கண்ணன்.

அருச்சுனனும் பாசறையில் வந்தான். அத்தனை பேரும் கவலையோடு இருக்கக் கண்டு "அண்ணா! தருமண்ணா ஏன் இப்படி இருக்கிறீர்?" என்றான். மரலி மைந்தனாகிய தரும ராசன் காண்டாவனதகனனை ஏறிட்டுப் பார்த்து, "என் உடன்பிறந்த சகோதரனாகிய அருச்சுனனுக்கு மைந்தனாகிய அபிமன்னனை இன்று அமர்க்களத்தில் செயத்தரசனால்

இழந்து விட்டோம்" என்றார். இந்த வார்த்தையைக் காதில் கேட்டு அருச்சுனன் அடியற்ற மரம் போல் மண்ணில் திண்ணென விழுந்தான். மேலும் மகனாகிய அபிமன்னனை நினைத்து புலம்புகிறான். எப்படி என்றால், "ஏ! என் மகனாகிய அபிமனுவென்னும் குழந்தாய்.

**(பாடல்)**

**மைந்தனென்று உன்னைப் பாராமல்**
**மா பாவிக் கொன்றானோ**
**சிறுவனென்று பாராமல்**
**செயித்தரசன் கொன்றானோ**
**அம்மா வென்று உயிர் மடிந்தாயோ**
**அப்பா வென்று மடிந்தாயோ**
**என்ன சொல்லி நீ மடிந்தாய்**
**என் மகனே கண்மணியே.**

**(வசனம்)**

என்று அருச்சுன மகாராசன் தன் மகனாகிய அபிமன்னனை, பலவாறாக நினைத்து, புலம்பி பரிதவித்து, மேலும் சொல்கிறான்.

**(செய்யுள்)**

**போரினில் துணைவ ரோடும் புயங்ககே தனனை வென்று**
**பார்எனக்கு அளித்தி நீயே என்றுஉளம் பரிவு சுர்ந்தேன்**
**நேர் உனக்கு ஒருவர் இல்லாய்! நீகளம் பட்டா யாகில்**
**ஆர்இனிச் செயிக்க வல்லார்! ஐவருக்கு உரிய கோவே!.**

**(வசனம்)**

"என் மகனாகிய அபிமன்னா! என்னாலும் வெல்ல முடியாத அண்ணாவியாகிய துரோணரை வென்று இருக்கின்றாய். அசுவத்தாமனை வென்று இருக்கின்றாய். மேலும் கர்ணனை வென்று இருக்கின்றாய். அமர்களத்திலே நீயும் மடிந்து இருக்கின்றாய். இந்தப் போரை வென்றுதான் என்ன? வெல்லாமல் இருந்துதான் என்ன?" என்று புலம்பினான். மேலும் நகுல சகாதேவர்களைப் பார்த்து சொல்கின்றான்....

**(பாடல்)**

**செந்தனலை மூட்டிடுங்கோ**
**சிலை விசையன்மாமுளுதற்கு**

**அக்கினியை மூட்டிடுங்கோ**
**அருச்சுனன் தான் மடிவதற்கு**
**அண்ணன் இந்த வார்த்தைச் சொல்ல**
**அருமை தம்பியர் எழுந்திருந்தார்**
**அக்கினியைத் தான் வளர்த்தார்**
**ஆசையுள்ள தம்பியர்கள்.**

**(வசனம்)**

அண்ணன் சொல்லைக் கேட்டு நகுலர், சகாதேவர்கள் அக்கினியை வளர்த்தார்கள். அக்கினியைச் சுற்றி வருகிறான் அருச்சுனன். உடனே கண்ணன் "இந்திரா வருக" என்றார். கிழப்பிராமண ரூபத்தோடு இந்திரன் வந்து தோன்றினான். "ஒய் அருச்சுன மகாராசன். என்னைப் பார். எனக்குத் தந்த வாக்கை நிறைவேற்றிவிட்டு இறக்கலாமே" என்றார். ஆயினும் இந்திரன் சொல்கிறான்.

**(பாடல்)**

**சத்திரியர் குலம் பிறந்தோம்**
**சொன்ன சத்தியத்தை மறக்கலாமா**
**அரச குலம் பிறந்தோர்**
**ஆணைதான் மறக்கலாமா**
**தேவராசன் இவையுரைக்க**
**சிலை விசையன் ஏது சொல்வான்.**

**(வசனம்)**

ஆனால், "வேதியரே நான் உமக்கு சொன்ன வாக்கு தத்தத்தின்படி இன்று இறக்கவே இல்லை" என்று மேலும் சொல்கிறான்.

**(செய்யுள்)**

**வினையில் என் மகன்தான் உயிர் வேறு செய்வித் தோனைக்**
**குனிசிலையின் நாளை உயிர் கோறல் புரியேனேல்**
**மனைவி அயலான் மருவல் கண்டும் அவள் கையால்**
**தினை யளவும் ஓர்பொழுது தின்றவனும் ஆவேன்.**

**(வசனம்)**

"அதாவது நல்ல அரச பரம்பரையில் பிறந்தவன். தன் தாரம் தவறி இருக்க, தன் மகனுக்குத் திருமணம் செய்து, தன் மகனையும் பறிகொடுத்து, சுபமாங்கல்ய வாட்டியாக

இருக்கின்ற மருமகளோடு சாப்பிட்டு வரும்போது, அந்த மருமகள் அயலான் ஒருவனை மருவக் கண்டு, மேலும் அந்த மருமகளோடு சாப்பிடும் மாமன் ஒருவன் எவனோ? அவன் விழ வேண்டிய நரகத்தில், என் மகனைக் கொன்ற செயித்தரசனை நாளை அந்தி படும் அளவில் ஆவி கவரேனல், யானும் அத்தீயில் போய் விழுவேன். இந்த செயித்தரசனைக் கொல்லா விட்டால் இதே அக்கினியை வளர்த்து அக்கினி பிரவேச மாக்குவேன். இது சத்தியம்'' என்று பாசறையில் அர்ச்சுனன் போய் அமர்ந்தான்.

**(முற்றும்)**

# 10

# காலசுவாமி கதை

## (தாள் சுவடி பதிப்பு)

(சிவசுப்பிரமணியபுரம்
த.பொன்னையா நாடார் அவர்களிடமிருந்து
தாள் சுவடி பெறப்பட்டது.)

## (காப்பு)

மான்மழு அணிந்த ஈசன் மகிமைகொண் டுலகர் போற்ற
கான்வளர் கலையி லேறும் கரந்தைப் பத்திரமா காளி
மான்முதல் சுரர்கள் வாழ்த்த மஞ்சள் நீர்க்கிடாரம் பொங்க
வான்தரை புகழும் ஏமன் வளர்காலன் தூதன் என்ன.

என்னவே மூன்று பேரும் எழிலுடன் தோன்றி நின்று
பன்னகா பரணன் பாதம் பணிந்திடப் பரமன் மெச்சி
உன்னிய படைகளோடு உலகாள வரமும் தந்து
மண்ணுல கனுப்ப வந்து மகிழ்ந்தவர் கொலுவில் வந்தார்.

வந்தவர் இருக்கும்போது வளர்திருக் கடவூர் வாழ்ந்து
பந்தமும் அகன்று நின்ற பக்தன் மா மிருகண்டன்தன்
மைந்தன் மார்க்கண்டன் தன்னை மறலியும் சீற ஈசன்
நொந் தடித் துதைத்தக் கதை கூறிடவே கணேசன் காப்பாம்.

## மிருகண்டன் மருத்வதி குழந்தையின்றி வாடுதல்

கொலுவிருக்க இயமராசன் கோடிபடை களோடே
குவலயத்தை அரசாண்டு கொண்டிருக்கும் நாளில்
வலுவுடைய கடவூரில் வாழும் மிருகண்டன்
மங்கை நல்லாள் மருத்வதியை மணமுகித்து இருந்தார்
கணவனுடன் காதலியும் கலந்துறவு செய்து
காசினியை அரசாள கைக் குழவிக்காக
நெடுநாளாய் மடலாக நேரிழையாள் இருக்க
நித்தம் நித்தம் காதலியும் புத்தி தடுமாறியே
கைக்குழவி இல்லாமல் கன துயரமாகி
கணவனுட முகம்பார்த்து கன்னியர் சொல்வாள்
பொருத்தம்வைத்து ஆண்சரடும் பெண்சரடும் பார்த்து
பேருடனே ராசிகளும் பூத்தப்பல நாளும்
பார்த்துக் கலியாணம்செய்து பட்சமுடன் இருந்தோம்
பாலக னில்லாத பலன் பாராதிருந்தீரே
ஆதரவாய்க் கணவனையும் அடிதொழுது உரைக்க
அந்நேரம் மிருகண்டனும் ஆயிளையைப் பார்த்து

பாவைய ரென் தேவியரே பவள நிறத்தாளே
பாதைமடம் சுமை தாங்கிப் பலகிணறும் குளமும்
நீதியுள்ள திருப்பதிகள் நிழலிருக்கும் சாலை
நிட்டூரமா கவெட்டி நிரத்தி யழித்தோமோ
முன்பிலுள்ளோர் செய்குறையோ முறையோ விதிப் படியோ
முகவாசை மகவாசை முத்தமிடும் ஆசை
கைக்குழவி இல்லாமல் கலங்காதே இளங்கொடியே
கருத்துடனே ஆண்மதலை கறைக்கண்டரே தருவாய்
ஆணவமாய் மா பாதகங்கள் அநியாயம் செய்து
அடைக்கலமென் றிருந்தபேரை அடித்துப் பறித்தோமோ
காணாமல் குளங்கரையைக் கருதி வெட்டி முறித்து
காராவைக் கொன்று கன்றைக் கதறஅடித்தோமோ
சிறந்த இடைவழியில் சினத்துக் கொள்ளையிட்டு
சிறைபிடித்து தீக்கொழுத்தி சேதங்கள் செய்தோமோ
பாதகங்கள் செய்து உயிரை பதற அடித்தோமோ
பரிவுடைய பெரியவரை பழிப்பினைச் சொன்னோமோ
மாதாவை அடித்துபுறங் காலால் மிதித்தோமோ
மனதறிய விசுவாசப் பாதகஞ் செய்தோமோ
என்றுரைத்த மிருகண்டனை ஏந்திழையும் பார்த்து
ஏங்கிஆண் மதலைக்காக எண்ணியே புலம்பலுற்றார்.

## (மருத்வதி குழந்தையின்றி புலம்புதல்)

## (இரட்டைச் சீர்)

புலம்பி மிகப் பரிதவித்து பூவை தேன்மொழியாள்
போற்றிமிரு கண்டனுடன் சொல்வாள் (போற்றி...)

மலங்காப் பருவமதில் மாநிலத்தோர் மிகக்கூடி
மலடியென்று சொல்லப் பொறுப்பேனோ (மலடி...)

பொறுத்திருக்க உலகமதில் பிள்ளை யில்லாப் பாவி யென்பர்
பிரமன் விதியோ குறைகள் தானோ (பிரமன்...)

கறுத்தமிடற்றோ னாருளால் கண்ணு மகனைப் பெறுகில்
காளையுரு வாகனம்பொன்னாலே (காளை...)

பொன்னாலே சப்பரமும் பூவும் பந்தல் வாகனமும்
புகழும் சிவ நாதருக்கு வைப்பேன் (புகழும்...)

வண்ணமுள்ள மாயவர்க்கு வளர்கருடன் பொன்னாலே
வாகனமும் காணிக்கையும் செய்வேன் (வாகனமும்...)

செல்வமகன் பெற்றெடுத்து செப்புமுடன் நீராட்டி
சிறு குழவிக் கருள் சேனைஊட்டி (சிறுகுழவி...)
பைய மகனை யெடுத்துப் பாலூட்டித் தாராட்டி
பாரத்தொட்டிலில் ஆட்டி மகிழேனோ (பாரத்...)

ஆட்டியே மகன்தனையும் அன்புடனே தானெடுத்து
அல்லோரும் கூடிநின்று பார்க்க (அல்லோரும்...)

வாட்டமில்லாப் பாலகனை மார்போடே அணைத்து
வாயார முத்தமும் கொடேனோ (வாயார...)

முத்தி முகத்தோடணைத்து மோகவர்ணப் பொட்டுமிட்டு
முகவாசை மகவாசை பார்த்து (முகவாசை...)

எத்திசையுள் ளோரறிய இலங்கும்பள்ளி தன்னில்வைத்து
எந்தன்மகன் வரும்பவனி பார்த்து (எந்தன்...)

பார்த்துமகன் தோழருடன் படித்துவிளையாடிவரும்
பாவனை பார்த்தாசை தெளியேனோ (பாவனை...)

ஏற்றமகன் படித்துவர ஏடுடனே சேர்த்தணைத்து
இலங்குமணி மார்போ டணையேனோ (இலங்கு...)

மார்போடே சேர்த்தணைத்து வையகத்தோர் தானறிய
மகன் தனக்குக் கலியாணம்செய்து (மகன்...)

சீருடைய மருமகளும் செல்வமகன் கூடிவர
சேர்த்து மணிமார்போ டணையேனோ (சேர்த்து...)

அணைத்தெடுக்க மருமகளும் ஆசைமகனுட னிருக்க
அந்நேரம் கண்டு மகிழேனோ (அங்கே...)

இணைபிரியா திருபேரும் இருந்துகொஞ்சி விளையாடி
இருப்பது கண் டாசை தெளியேனோ (இருப்பது...)

தெளிவான கருவூலமும் தேடும் பொன் திரவியமும்
சேரும்வகை ஆடை யாபரணமும் (சேரும்...)

அழியாமல் அரசாள அருமை மகன் பெறுவதற்கு
ஆதி மிருகண்ட னேதோ சொல்வான் (ஆதி...)

சொல்வதுகேள் பெண்ணரசே துலங்குமகன் பெறுவதற்கு
சூட்சமொன்று சொல்ல வுரை கேளாய் (சூட்ச...)

வல்லபர மனிதரிடம் நல்லமகன் தாருமென்று
வாடாமல் தவம் புரியலுற்றான். (வாடாமல்...)

## (மிருகண்டன் பிள்ளை வேண்டித் தவமிருத்தல்)

## (வேறு)

உத்தமிரு கண்டனவன் உடையவனே துணையெனவே
பத்தியுடன் தவமிருக்கப் பராபரத்தின் திருப்பதியில்
சென்று மிரு கண்டனவன் தண்ணீரில் தானாடி
ஒன்றான உட்பொருளை ஓரெழுத்தில் அறிவாக்கி
கண்டானே பின்கலையைக் காலிறுகத் தான்பிடித்து
சென்று நடு நாட்டுவழி திருநடன ஒளியைக் கண்டான்
அன் றரனார் மனமகிழ்ந்து ஆதி மிருகண்டனுடன்
இன்றுநன்றாய்த் தவமிருந்தாய் என்னகுறைச் சொல் எனவே
கன் றரனார் தனைவணங்கி காதலுற்று அருள்மறையோன்
மன்றுதனை அரசாள மதலை தர வேணுமென்றான்

## (சிவன் குழந்தைவரம் நல்குதல்)

அந்தவுரை தனைக்கேட்டு ஆதிபரன் ஏதுரைப்பார்
மைந்தன்செவிடு குருடு மடையன் முடவன் கசடன்
சந்தமில்லா சப்பாணி சடைநோயன் பேயனென்றால்
வந்தவயதொரு நூறு வரிசையுடன் சொல்லுகிறேன்
சொந்தமுடன் அறிவுடையோன் சொல்வயது பதினாறு
எந்தமகன் வேணுமென்று ஈசுரரும் தான்கேட்க
உற்றுணர்ந்து ஆராய்ந்து உகந்து மிருகண்டன் சொல்வான்
எத்தியடி கூன் குருடு ஈனன் கசடன்பிறந்தால்
சற்றுங்கெணியா ரொருத்தர் தாரணிக்கும் ஆகாது
புத்திப் பெரிதுள்ளவனாய் பொறியினிலே மிகுந்தவனாய்
ஏற்ற வயதெத்தனையும் இனியமகன் தாருமென்றார்

பார்த்தரனார் மனமகிழ்ந்து பதினாறு வயதாக
கீர்த்தியுள்ள மகனாகக் கெருவிதமாய்த் தந்தோமென்றார்
சாத்திரங்கள் உடையவனாய் சத்தி திருமாலறிய
பிரமாவும் நயினாரும் பெருங்கணக்கில் எழுதுவராம்
அரனாரும் மனமகிழ ஆனசங்கம் தானறிய
கருணைக் கணக்கொரு கூட்டம் கால தூதர் தானறிய
வெருக எமன் தானறிய பிள்ளைதந்தோம் எனவுரைத்தார்

### (மருத்வதி வயிற்றில் கரு உண்டாதல்)

தந்தார் ஆண் மதலையென்ன சங்கரனார் தனைத்தொழுது
அந்தரத்து எழுத்தைஉன்னி அருளுங் கடவூரில் வந்தார்
சொந்தமுள்ள காதலிக்குச் சொல்லி மகன்தன் வயசை
சிந்தைமெய்க்க இருபேரும் சேருங்கப்பல் சேர்வதுபோல்
கன்னியரும் கணவனுடன் கலந்து கொஞ்சி விளையாடி
நன்னிலத்தில் இருவருமாய் நன்றாக வாழ்ந்திருந்தார்
சொன்னபரன் திருவருளால் தோகைநல்லாள் உதரமதில்
வன்னமுடன் ஆண்மதலை வந்து கருதரித்திடுமாம்.

### (மருத்வதி வயிற்றில் கரு வளருதல்)

### (வேறு)

தனனா தனந் தனனா தனந் தனனா தனந் தனனா
தனனா தனந் தனனா தனந் தனனா தனந் தனனா

வந்தே மிருகண்டு முனி வனிதை மருத்வதிதன்
வயிற்றில் கரு வளரும் விதம் வகுப்பேன் பெரியோரே
சந்தமுடன் மருத்துவதியும் தண்மை அறிவுடனே
சர்ப்பமதை அணிந்த பரன் தயவை மிகநாடி
நன்றாம் மிருகண்டுமுனி தனையே மருத்துவதியும்
நாடி ரதி மதன் போலவே நலமாய் மனம் ஒத்து
இன்பமுற அருகு நுனிபனிபோல் விந்துசாட
ஏற்றே நாதம் கௌவிப் பையை மூட பிராணன்கூட
அன்றே வந்த பானன் அருகாகக் காவல்செய்ய
அரியதொரு உதானன் கரு வளர்க்க வினை கலர
ஒற்றிற் கடு கிரண்டில் மல்லி மூன்றில் மிள காக
ஓர் நாலதில் அவரை அஞ்சில் குமிளியென வளர
வளர நெல்லிக்காயாம் ஆறில் ஏழில்புன்னைக் காயாம்
வளமாய் பஞ்ச பூதம் பஞ்சவர்ணம் எட்டில் தோன்றும்

தளரா நவத்தினத்தல் குயில் முட்டையெனவளர
தசம் பூரனைக் கோழி யண்டம் எனவே உருவளர
வளர மதி யொன்றில் வாழைப் பூவின் வடிவாக
வாய்த்த மதிரண்டில் தலை கழுத்து உருவளர
பழுதே இலா திரி மாசத்தில் கால்கைச் சந்து உருவளர
பகவானருளாலே நாலில் பாதம் துண்டம் வளர
துண்டம் செவி கண்ணா நகம் தோன்ற அஞ்சு ஆறில்
தோகை மெத்த மயங்க அயல் தோகையரும் அறிய
மண்ணடமுதல் எங்கும் நரம் வெலும்பு மயிர் தோன்ற
மாசமது ஏழில் மல சலம்போம் பாதை யிரண்டும்
உண்டாகிட மாதம் எட்டில் உண்ட அன்ன சாரம்
உச்சிவழியாக உயிர்தொப்பிள் வழிமாறும்
பண்டைமுறை போல தனபாரமதும் கறுக்க
பரவை கற்பத் துற்றகருக் குற்ற உயிர் பரவ
பரவ நவ மதியில் சிசு பரமன் தனை நோக்கியே
பாங்காய் அறிவோடு நின்று தவமே புரிந்திடவே
அரவமதுதாயா ரறி வாகப் பிள்ளை யூரும்
அப்போ பக்கத் துள்ளோர் வந்து ஆதித்தர்க்குப் பொங்கலிட
பொங்கமதி வளர மருத்வதியும் பொறி கலங்க
புகழாகவே பக்கத் துள்ள பெண்கள் வந்துதேற்ற
பங்க மிலாப் பாவையர்க்குப் பரமன் அருளாலே
பத்துமதி வரவே மிருகண்டு முனி பகர்வார்.

### (மருத்துவச்சியை அழைத்து வரக் கூறுதல்)

### (விருத்தம்)

பகருவார் பெண்க ளோடு பார்ப்பன முனிவ னவனும்
நகருளோர் எவரு மேத்த நாயகி மருத்வதிக்கு
தவறிலா மாதம் பத்தும் சரியாய் வந்ததாலே
கவறிலா மருத்துவத்தை கட்டுடன் வவைழையு மென்றார்.

### (மருத்துவச்சி மருத்வதிக்கு ஆறுதல் கூறுதல்)

### (வேறு)

அழையுமென்று மிருகண்டனும் அரிவையரிட முரைக்க
சளையாமல் பெண்கள் சென்று தையலாளை மருத்துவத்தை
நாட்டமுடன் புகழுடைய நாரியராம் லட்சுமியை
கூட்டிவந்தார் அப்பொழுது நற்கோலமுள்ள அகரமதில்

தேட்டமுடன் மருத்துவத்தாள் தெளிவுடனே ஏதுரைப்பாள்
வாட்டமில்லை உந்தனக்கு வானுதலே மலங்காதே
மலங்காதே என்றுரைத்த மங்கையரே மருத்துவமே
கலங்குதடி உடமேலும் காலிடைந்துச் சோருதடி
குறுக்கதுவும் உழையுதடி கொடுநடுக்கம் ஆகுதடி
பொறுக்க மனம் கூடுதில்லைப் பூவையரே மருத்துவமே
மலடிருக்க மாட்டாமல் மகன்வேணும் என்றேனே
வலுவான உடமெலங்கும் வயிறதுவும் நோகுதென்றாள்
கேட்டதொரு லட்சுமியும் கெட்டியுடன் ஏது சொல்வாள்
வாட்டமில்லை மருத்வதியே வரிசையுடன் சொல்லுகிறேன்
பதறாதே பெண்கொடியே பயந்து முறிந்து ஏங்காதே
கதறாதே உந்தனக்குக் கடுந்துயரம் இல்லையென்று

## (நலமுடன் குழந்தைப் பிறக்க நேருதல்)

ஆதரவாய் மனந்தேற்ற அடிபிடியாய் வயிறு நொந்து
சோரகன்னிக் குடமுடைய தோகைநல்லார் பிடித்திருக்க
பரிவிடனே அருகு நின்ற பார்ப்பினிகள் ஏது சொல்வார்
அரிகரி நாராயணரே ஆதி கிருட்டிணரே
கயத்தைவிட்டு கரையேற்றி காத்தருளும் என்பாராம்
நயத்துடனே கிருட்டிணர்க்கு நல்லதொரு வாகனமாம்
கெருடனொன்று தங்கத்தினால் கெட்டியுடன் செய்துவைப்போம்
மருளிலைக் காண் என்று சொல்லி மங்கையர்கள் பிடித்திருக்க

## (குழந்தை பிறத்தலும் பேரிடலும்)

பொங்கமுடன் ஏவல் செய்ய புதல்வன் வந்து பிறந்தானாம்
தங்கமகன் பிறந்தவுடன் தையலர்கள் குரவையிட
மங்கைக்கொப்பூழ் அறுத்திடவே மாதுநல்லார் பொலிபோட
இங்கிதமாய் மிருகண்டர்க்கு ஏற்றமகன் இவனெனவே
நீராட்டி மகன்தனையும் நேசமுடன் தானெடுத்து
தாராட்டி மகன்தனக்குத் தனப்பாலும் தானூட்டி
வளர்த்துவரும் நாளையிலே வண்ணமகன் தனக்கு
அலங்காரப் பணியூட்டி ஆபரண மாலையிட்டு
காலில் சிறு தண்டையிட்டு கைதனிலே காப்புமிட்டு
பாலனுட விரல்தனிலே பாரக் கணையாழி யிட்டு
பொன்பூட்டி மகனார்க்குப் பேர்கூற வேணுமென்ன
தன்குலத்து மறையவரைத் தவறாமல் கூட்டிவந்து
பொங்கியன்னம் தான் கொடுத்து பொருந்தஅடைக்கா யருந்தி

சந்தனமும் பன்னீரும் சவ்வாது புனுகணிந்து
கலங்காத மிருகண்டரும் காதலியாம் மருத்வதியும்
மலங்காமல் வந்தமகன் மார்க்கண்டன் எனவுரைத்து
பேருமிட்டு மிருகண்டனும் பிரியமுடன் வளர்க்கலுற்றார்
வீரமுடன் வளர்த்துவர வெல்லரிய மகனாரை
ஏழுநல்ல பிராயமதில் எழுத்தோத வைத்தனராம்
நாளும் நாளும் தவறாமல் நன்றாகப் படித்துவர
படித்தா னரி விரிமுதலாய பலநூலும் சாஸ்திரமும்
கடுத்ததமுள்ள உயிரெழுத்தும் கட்டான மூன்றெழுத்தும்
தொடுத்தபுகழ் அஞ்செழுத்தும் தேராத எட்டெழுத்தும்
எடுத்தநவ கோணெழுத்தும் இகலோக சக்கரமும்
அரி யெழுத்தும் குருவெழுத்தும் ஐங்கோணமுக்கோ ணெழுத்தும்
தெரியுந் திரி கோனுடனே சிதம்பரத்து அட்சரமும்
பார்வேதம் நாலாறும் பதினெட்டுப் புராணமுடன்
சீரான எட்டெட்டு சிறந்தக்கலை ஞானமதும்
ஞானம்முதல் வேதாந்தம் நன்றாகத் தான்படித்து
ஆனமறை மார்க்கண்டனும் அறிவுகலை தங்கியபின்
சோதிபரன் மேலாசைச் சொல்நினைவு தவறாமல்
காதலுடன் மார்க்கண்டனும் கறைக்கண்டர்மேல் அன்புவைத்து
கேடாமல் ஈசனுக்குக் கோயில்வைத்துப் பூசைசெய்ய
நாடிப்பத்து வயசதிலே நல்ல கடவூரில் வந்தான்
வாடாத மறையவனாம் வாய்த்ததொரு மார்க்கண்டனும்
தேடியரன் தனைக்காணத் திருப்பதிகள் வைத்தனராம்.

## (சிவன் பாதத்தைத் தஞ்சமென வாழுதல்)

## (வேறு)

வாய்தத சிவனுக்கோர் பொன்னம்பலமும்
வன்னத் திருமதில் சிற்றம்பலமும்
ஏற்றதோர் தங்கத் தகடு வொதிந்து
எங்கெங்கும் பத்தியாய்த் தூணும் நிறுத்தி
சுற்று மதிலும் திருக்கோபுரமும்
சிவபூசைச் செய்ய வசனப் புரையும்
கற்றக் கணபதிக் கோர் மண்டபமும்
கார் வர்ணனாருக் கோர் மேடையும் வைத்தார்
சத்திக் கணபதிக் கோர் மண்டபமும்
சரவணருக்கொரு கோயிலும் வைத்தார்
பத்தி பத்தியாய் மாலை விளக்கும்

பதிவாகக் கல்லில் அடித்து வைத்தாரே
எத்திசையோர் காண லட்சாதி தீபம்
ஏந்திய ஆலத் தீ எங்கும் இலங்க
முத்து மணிமேடை மண்டபம் வைத்தார்
முக்கோடித் தேவர்க்கோர் அம்பலம் வைத்தார்
தெப்பக்குளமும் திருமதில் சுற்றும்
தேரும் கொடிமரம் நாட்டிவைத்தாரே
உற்பனமாகவே கோயிலும் வைத்து
ஊரும் கடவூர் உலகம் அறிய
சொல்தவறாத மார்க்கண்ட னப்போது
சுற்றி நந்தாவனத் தோட்டமும் வைத்தார்
அல்லும் பகலும் அயராத வண்ணம்
ஆதியை நெஞ்சில் அடக்கிக் கொண்டானே
சொல்லால் பெரிய அரி யெழுத் துண்ணி
சூட்ச எழுத்தை மனதிலடக்கி
வல்லாத மார்க்கண்டன் அஞ்செழுத்தோடு
வாகான ஐம்பத்தோர் லக்கமும் கொண்டு
பெண்ணாசை பூமியின் ஆசை வெறுத்தான்
பூதங்கள் அஞ்சையும் ஒன்றாகச் சேர்த்தான்
கண்ணானக் கண்ணு மார்க்கண்டன் அப்போது
காசினி மீது பொன் ஆசை வெறுத்தான்
உண்ணாமல் உன்னியே பேரின்ப வீட்டில்
ஒன்பது வாயில் அடைத்துக்கொண்டானே
எண்ணாமல் எண்ணிப் புரவி யீராறும்
இருக்கும் தலத்தை அறிந்துகொண்டானே
அண்ணாக்கில் சுழுமுனை எழுத்தையும் கண்டான்
அப்புறத் தக்கினித் தீர்த்தமும் கண்டான்
சொன்ன முப்பாலும் சுருதியாற் கண்டான்
சிவபட்சி மேயும் தலத்தையும் கண்டான்
பொன்னம்பலத்தில் திருநடம்செய்து
பூரித் துலகரைக் காக்கும் பரனை
வண்ணமாய்ப் பூசிக்கக் கோயிலுள் சென்று
வாடாதப் பூவதை ஈசன்மேல்சாத்தி
எவ்வுல கெங்கும் உயிருக் குயிராய்
இருந்துல காளும் பரமசிவனே
நவ்வி அடியேனைக் காத் தரசாளும்
நாதனே வேதப்பொருளே மெய்ஞானி

கரு வுருவாகக் கலந்து நின்றோனே
கண்ணின் மணியொளி யாகிநின்றோனே
அரியும் அயனாகக் கூடிநின்றோனே
தெரியும் தெரியா தடிமுடி காண
தினமு மென் நெஞ்சில் திருப்பாதங்காண
சதாசிவ நாதாவுன் சரணமென்றாரே.

## (சிவசரணம் சொல்லித் தொழுதல்)

## (வேறு)

சரணம் சிவ சங்கரனே சரணம்
சர்வதா பரனே சரணம் சரணம்
அரவணியும் பிறை சூடிச் சரணம்
ஆனந்தம் ஆடிடும் சிவனே சரணம்
திரிபுரத்தை அனல் எரித்தாய் சரணம்
திருமால் அய னரியானே சரணம்
பெருகக் கூடை மண் சுமந்தாய் சரணம்
பிட்டுக் கடிபட்டவரே சரணம்
எண்ணெழுத்தில் அடங்கானே சரணம்
எங்கும் நிறை யாதிபரனே சரணம்
மண்ணுடன் விண்ணும் நிறைந்தாய் சரணம்
மங்கை உமையொரு பங்கா சரணம்
சுந்தரக் கடவுளே சரணம் சரணம்
சுவாமி திருநீல கண்டா சரணம்
சந்திர சேகரத் தேவே சரணம்
சண்முகன் தனையருள் சாமி சரணம்
சிவனாண்டி குரு வாண்டி சரணம்
சிவசங்கரனே சரணம் சரணம்
பொது வாண்டி மடத்தாண்டி சரணம்
பிறப்பும் இறப்பு மில்லானே சரணம்
கருத்தாண்டி உருத்தாண்டி சரணம்
காராண்டி பாராண்டி சரணம்
மறுத்தோர் பிறவியில்லானே சரணம்
மான் மழு வேந்தும் சிவனே சரணம்
கங்காளா உமை பங்கா சரணம்
கயிலாசக் கூத்தாடிச் சரணம்
எங்கும் நிறைந்த இறைவா சரணம்
ஈஸ்வர பரனே சிவனே சரணம்

தும்பை மலரணிந்தவனே சரணம்
தூண்டாத மணி விளக்கே சரணம்
மெய்க்கு மெய்யாக நின்றோனே சரணம்
மெய்ஞானி மெய்ப்பொருளே சரணம்
மிக்கதோர் விசுவநாதா சரணம்
மேயும் காளை மாடேறியே சரணம்
சற்குரு பரனே சரணம் சரணம்
சாம்பல் அணிந்தப் பரனே சரணம்
என்மனம் நீங்கா திருப்பாய் சரணம்
எவ்வுயிர்க் குயிராய் இருப்பாய் சரணம்
வண்ணத் திருக்குற்றாலநாதா சரணம்
வா வா சிவனே எனத்தொழுதானே.

**(மருத்வதி அழுது புலம்புதல்)**

**(வேறு)**

தொழுது மார்க்கண்டன் சிவபூசைச் செய்து வரவே
தோகை மருத்வதி கோயில் நடைதனில் சென்று
பழுது வராமல் மகனே உனை வளர்த்தேனே
பத்து வயதாச்சி உற்ற வயதாறிலேதான்
சாத்திர வேதச் சடங்குநீ செய்வாயோ என்று

**(மார்க்கண்டேயன் அழுவதற்கான காரணம் கேட்டல்)**

தாயார் அழுத குரல்கேட்டு மார்க்கண்டன் சென்று
பார்த்து முகத்திலே கண்ணீர் துடைத்தந்த தாயின்
பாதத்திலே விழுந் தாசாரம் செய்து தொழுதான்
எத்தேசரும் புகழ் தேனே கனியே என் னம்மா
ஏதுக்காய் நீயும் இரங்கி யழுதது ஏனோ
நற்றமிழ் கற்று நம் நாயகனைப் பணிந்தேற்றும்
நாயடியேன் முன் அழுதவகை சொல்வீரென்ன
ஆதிமார்க்கண்டன் அடிதொழுது கேட்டபோது

**(பதினாறு வயதில் மார்க்கண்டேயன் இறக்கப் போகும் செய்திக் கூறுதல்)**

ஆயிழையாளும் மகனுடன் ஏதுசொல்வாளாம்
வேதனை மெத்தஉண்டு மகனேஉனைக் கண்ணில் காண
வெகுநாள் தவங்கள் இருந்தோம் சுமைதாங்கி வைத்தோம்
கோயிலுடன்சிவ சாலையும் வைத்துத் தொழுதோம்
குளமும் கிணறும் நந்தாவனச்சாலையும் வைத்தோம்

ஆவலுடன் தவம் செய்திருந்தோம் வெகுநாளாய்
ஆதிபரனார் இரங்கித் தந்ததோர் மகனே
காதலுடனே கருத்தாய் உனை வளர்த் தோமே
கண்ணு மகனே வயது கடந்து பத்தாச்சே
ஆறுவயதினில் ஏதுகடனெல்லாம் செய்வாய்
அங்கம் பதறுதே கும்பிக் கொதிக்குதே என்றாள்

### (மார்க்கண்டேயன் சிவன் காப்பாற்றுவார் என்று தாயிடம் கூறுதல்)

வேதனை கொண்டு தாய் சொன்னதை மார்க்கண்டன் கேட்டு
வேகித்துக் கோபித்துத் தாயாரோ டேதவன் சொல்வான்
சோதிபரனார் இருக்கும் வரையும் நான் உண்டு
சும்மா மலங்காதே அம்மா அகரத்தில் போ போ
அன்னாயிருக்கிறப் பொன்னம்பலவாணர் காப்பார்
அப்பனும் அம்மையும் ஆருந் துணையில்லை அம்மா
எண்ணி மலங்காதே புண்ணிய வாட்டி நீ போபோ
ஈன்றது சிப்பி பிறந்தது முத்தல்லோ தாயே

### (மருத்வதி வீட்டிற்கு மகனை அழைத்தலும் மார்க்கண்டேயன் பதிலுரையும்)

கண்ணான கண்ணே அகரத்தில் வாவா மகனே
காணவும் மாதமோ ரேழு மூன்றாச்சு மார்க்கண்டா
இன்றைத் தினத்தில் அகரத்தில் நீவா மகனே
இன்பமுடன் பார்த்துச் சந்தோசமாக இருக்க
சும்மா மலங்காதே அம்மா அகரத்தில் போ போ
சுவாமியை விட்டுப் பிரிந்து தனியே வரவோ
உந்தனைக் காணா தொருகோடி நாளிருந்தாலும்
உட்பொருளைக் காணா தற்பநேரமும் தரியேன்
பாவிமகனே போ பூசைமுடங்குது இப்போ
பரமனைக் காணப் பரதாபமாகுது அம்மா
ஆருனக் கிந்த அறிவுசொல்லித் தந்தார் தாயே
ஆதியைக் காணாது அரைநாழிகை இருப்பேனோ
சொந்தச் சிவனார் அடிமை முழுது மென் தாயே
சோலிப்பண்ணாதே நீ சும்மா அகரத்தில் செல்லு

### (மருத்வதி மீண்டும் வீட்டிற்கு அழைத்தலும் மகன் சமாதானங்கூறி அனுப்புதலும்)

தந்தை தாய் வார்த்தையைத் தட்டாதே கண்ணு மகனே
தவறா தகரத்தில் வந்து சிவபூசை செய்வாய்
பெற்றதாய் வார்த்தையைத் தட்டாதே காரியமுண்டு
பேச்சிமகனே புலம்பாதே யான் சொல்லக் கேளு

ஏற்றிய பாவம் இடுப்பு கொடும்பழி செய்யும்
ஈனச் சண்டாளரை அல்லோ விலக்கணம் தாயே
நீதி தவறாதச் சோதி பராபர நாதர்
நினைவில் திருநடனம் ஆடி வருகிறா ரிப்போ
நாத வேதத்தொனி காதில் முழுங்குது தாயே
நாதனைக் காணவோர் நல்லபுத்தி சொல்வாய் அம்மா
ஆசை மகனே அகரத்தில் வந்திருந்தாக்கால்
அல்லோருங் காணவே செல்லக் கலியாணம் செய்து
ஆருமறிய மகனே மருமகளோடே
சீருடன்வாழ்ந் துண்டிருந்தே சிவபூசைச் செய்து
ஆதியருள்பெற்று ஆண்டங்கிருப்பது நன்று
அருமை மகனே உன் அம்மைசொல் வார்த்தைத் தட்டாதே
நீதியுடனந்தத் தாயுரை கேட்டு மகிழ்ந்து
நினைவு தவறாமல் நின்றந்த மார்க்கண்டன் சொல்வான்
போதும் போதப் புத்தி காதாரக் கேட்டே னென் தாயே
புவன மீரேழு லகாளும் பரம சிவனை
மாத்திரைக் கைநொடி நேரம் மறக்கவும் மாட்டேன்
மாதாவே நீயும் மலங்கா தகரத்தில் செல்லு
ஆத்திரமா யிந்த வார்த்தை உரைக்கவும் வேண்டாம்
அன்பாய் அகரத்தில் செல்லெனப் போற்றிப் பணிந்து
தோத்திரம் செய் தந்த தாயை மார்க்கண்டன் வணங்க
தோகைத் தாயாரும் துணிந்து மனந் தெளிந்தாளே

### (மார்க்கண்டேயன் சிவனை வழிபடுதலும் காலன் உயிர் பிடிக்க வருதலும்)

தேற்றமுட னந்த தாய்க் குரை சொல்லி யனுப்பி
சிவபூசைச் செய்யத் திருப்பதி தன்னிலே வந்து
சிவசிவா அரகராவென்று சிவனை வணங்கி
ஏற்ற திருத் தூப தீபங்கள் எங்கும் இலங்க
ஈசர் திருப்பூசைச் செய்தங் கிருக்கின்ற நாளில்
வாழும் எமராசர் ஆளும் பெரும்படை யோடே
வையகத் தோர்கள் வயது கணக்கின் படியே
நாளும் சிவகால தூதுவச் சென்றுப் பிடித்து
நாதன் கருவில் விதிப்படி சிட்சைகள் செய்து
இட்டமுடன் கால தூதர் இமயபுரத்தில்
ஏற்றச் சட்டங்கள் இலை குலுங்காமல் நடக்க
கட்டுடனே எமராசர் கணக்கை விரித்து
கருணைக் கணக்கில் இறப்பும் பிறப்பையும் பார்த்தார்
திட்டமுடன் பார்த் தெழுதி வருகிற நேரம்
தீரன் கடவூர் மார்க்கண்டன் கணக்கெடுத்தாரே

பட்டமாய் மார்க்கண்டன் வயது பதனாறதாச்சே
பாரச் சிவகாலா ஓடிப் பிடித்துவா வென்றார்
ஏற்ற சிவகால தூதுவரும் படை யோடே
இன்று பிராமணக் கன்றைப் பிடிப்போம் எனவே
மாற்றமில்லாமல் உடுப்பிடவே மனதுன்னி
மாந்தளிராம் உடுப்பிட்டவர் காங்கியும் கட்டினார்.

## (மார்க்கண்டேயன் காலனிடம் வரமறுத்தல்)
## (வேறு)

வீணாகச் சாகாதே போபோ நில்லாதே
விசுவநா தரிப்போ வருவார் வருவார்
கோனார் அடிமைநான் சுவ்பிட வேண்டாம்
கூட வருவதில்லை நீ காலா

## (காலன் கோபம் கொண்டு நாளை உயிர்பிடிக்க வருகிறேன் எனல்)

என்று மார்க்கண்டன் உரைத்தப் பொழுது
ஏற்ற சிவகாலன் ஏதுரைப் பானாம்
சின்ன மதியினால் சீறி உரைத்தாய்
சிவபெருமானை அறியமாட்டோமோ
உன்னைப் பிடித்துக் கொடுபோக வென்றால்
ஒருவலை வீச்சுக்குப் பற்றவும் மாட்டாய்
நன்றாய்நீ இத்தனை வார்த்தையும் சொன்னாய்
நாயன் உனக்குத் தனியேதா னுண்டோ
சங்கரனாரை அறியமாட்டோமோ
சகலவரமும் அவரல்லோ தந்தார்
எங்களுக் கல்லோ உயிர்ப்பாட்டம் தந்தார்
இடையிலே நின்று செறுப்பாரு முண்டோ
ஆடியே நீ சொன்ன வார்த்தைகளெல்லாம்
அண்ணா எமன்முன்பு சொல்லி உரைத்து
கூடி எல்லோரும் பெரும்படை யோடே
குத்தியே உன்னை வலையாலே வீசி
பாசக் கயிற்றினால் கட்டிக் கொடுபோய்
பாரச் செக்கிலிட்டு ஆட்டம் பாராட்டால்
காலனில்லை யென்று கடும்பாசை யிட்டு
கனத்தப் பெரும்படை தன்னை நடத்தி
நாளைக்கா கட்டினி சொல்லுகிறே னென்று
நாடிக் கடவூர்விட் டோடி நடந்தான்
வேளை கடந்தது காலனும் போனான்

## (மார்க்கண்டேயன் சிவனிடம் அடைக்கலமாகுதல்)

வீரன் இயமன் இனிவருவானே
நாளைக் கினியென்ன செய்யலாமென்று
நல்ல திருக்கோயில் உள்ளே புகுந்து
சூழவே தீபம் துலங்கவே காட்டி
தோத்திரம் செய்து மார்க்கண்டன் வணங்க
மந்திர வேதப் பொருளே உமக்கு
மறவாச் சரணம் அடைக்கலங் காரும்
சுந்தரித் தாயே பராசக்தி யம்மா
சுவாமிக்கும் உனக்கும் அடைக்கல மென்றார்.

## (வேறு)

வாரும் அடைக்கலம் காரும் குருபரா
வா சிவா இன்றெனை மறலி தொடாமலே
காரும் சிவபதம் தாரும் பரகெதி
கங்காளர் இங்கெனைக் காலன் அணுகாமல் (வாரும்...)

ஆதியே சோதியே ஐயனே மெய்யனே
ஐங்கரா சங்கரா இங்கேவா இங்கேவா
வேதனையாய் எம ராசன் அணுகாமல்
வெல்லவா சொல்லவா விச்சுவ நாதனே (வாரும்...)

உத்தமனே சிவ சக்தி பங்காளனே
ஓடிவா காளையில் ஏறிவா சீக்கிரம்
எத்திசை மெய்க்கும் இயமன் அணுகாமல்
என்னைப் பிடியாமல் முன்னே வாருமையா (வாரும்...)

ஏரும் அடைக்கலம் காரும் அடியேனை
இயமராசன் கடா ஏறி வந்ததுண்டால்
பாரக்கிடாவுட பல்லும் வாயுங் கண்டால்
பயங்கரம் தோனுமே பரமசிவனாரே (வாரும்...)

உள்ளமும் நெஞ்சும் உடம்பும் பதறாமல்
உம்மை முன்கண்டால் உறைத்திருப்பேனையா
அல்லாடி நில்லாமல் தாயில்லாப் பிள்ளைபோல்
அங்கங்கே பார்த்துப் பரதவியாமலே (வாரும்...)

இயமன் வருகிறான் கிடாவடி கேட்குது
ஈயம்போல உடல் எங்கும் உருகுது
பசையிட்ட நன்னூல் வலுத்தது போலவே
பற்றிக் கொண்டே னுமைகிட்ட வாருமையா (வாரும்...)

காளை நடக்காமல் தாமத மாச்சுதோ
கார்வண்ணர் ரகசியம் பேசிடும் வேளையே
நாளை யென் றுந்தன் திருமண தாச்சுதோ
நாடி எமன் வாரான் ஓடி வாருமையா (வாரும்...)

திருநடனமது ஆடிடும் வேளையோ
தெய்வார்கள் பூமாரி பெய்கிற நேரமோ
அரியும் அயனும் உடன்வாறேன் என்றாரே
அன்னை பிதாவென முன்னே வாருமையா (வாரும்...)

வேதமுனி தவம் பார்த்திடும் நேரமோ
விருந்து வைத்தாரோ சிறுத்தொண்டனைப் போலே
காத விநாயகர் கூடி வருவதால்
நடக்கப் பெருச்சாளி தாமத மாச்சுதோ (வாரும்...)

தேசக் கணக்கு நயினார் உரைத்திட
திருச்செவி கொண்டுரைக் கேட்கிற நேரமோ
பாசவலை கொண்டு இயமன் வரும்முன்னே
பையப் பையப் பாலன் முன்னே வாருமையா (வாரும்...)

இப்படியே பாலன் ஈசனைப் போற்றிட
ஏற்றதோர் காலனும் தூதனும் ஓடியே
செப்பமுடன் எமன் முன்சென்று நின்றுமே
சென்ற விபரங்கள் நன்றுடன் செப்புவார்.

## (வேறு)

செப்புகிறேன் கேளும் அரசே விண்ணப்பம்
சென்றே கடவூரு எங்குமே தேடி
அப்புறம் கோயிலில் சென்றபொழுது
ஆனதோர் மார்க்கண்டன் அன்புடன் நின்று
செப்பமுட னரன் தன்னைப் பணிந்து
தீரமாய் நின்றிடக் கண்டதோர் நேரம்
இப்போ சமயமில்லை யென்று நின்றோம்
ஏறிட்டு மார்க்கண்டன் எங்களைப் பார்த்து
பூனையைச் சென்று எலிபிடித்தாப்போல்
பொல்லாத வார்த்தைகள் சொல்லிப் பறைத்தான்
ஆனாலும் உம்மோ டறிவிக்க வென்று
அவனை விட்டிங் கோடி வந்தோ மென்றாரே
வந்தோம் எனக் காலதூதுவர் சொல்ல

வடவா முகம்போல் இருகண்ணும் சீற
பந்துபோ லோடியே மார்க்கண்டன் தன்னை
பதறப் பதறவே பாசம் இறுக்கி
கொண்டு வருகிறேன் என்றியம ராசன்
கோடிப் பெரும்படை தன்னை நடத்தி
நன்றியம ராசன் சிங்காசனம் விட்டு
நாடிக் கடாவதில் ஏறி நடந்தார்
எண்டிசை ஈரேழு பதினாலு புவனம்
இரைந்து முழங்கக் கதிரோன் ஒளிக்க
சண்டனுடன் காலதூதுவர்கள் சேர
தடதடென மலை கிடுகிடென்றாட
வந்தார் கடவூர் திருப்பதி தன்னில்
வா சிவா என்று மார்க்கண்டன் வணங்க
கண்டார் எமராசன் மார்க்கண்டன் தன்னை
கடலும் மலையும் குமடும் குலுங்க
செங்கையினால் மலை எடுத்தவன் போல
சீறிச் சினத்தார் பெரும்படை யோட
எங்கே ஒளித்தாலும் உன்னை மார்க்கண்டா
இருபிளவாக்கி எறிசூலத்தாலே
துண்டப் படுத்தி வலையாலே வீசி
சுழிக்கச் சுழிக்கவே சூலத்தால் குத்தி
எண்டிசையோரும் அறியவே கொல்வேன்
என்று எமராசன் ஏகின ரப்போ
கண்டு மார்க்கண்டன் கதறிக் கதறி
கடக்கே நின்ற எமராசரை நோக்கி
பண்டை இருந்த அசுரர் குலத்தை
பரமன் பகைத்து இருத்தி வைத்தாரோ
தொண்டர்தன் கிட்டத்துடர்ந்து முடுகி
துரிதத்தில் நீயும் அழிந்து போகாதே
என்று மார்க்கண்டன் உரைத்தபொழுது
எமராசர் பற்கடித்தேது சொல்வாராம்
சண்டி உனக்கு வயசுபத னாறு
சரியான நாட்கழித்தால் விடுவேனோ
வென்றி நயினார் பிரமன் கணக்கும்
விரும்பி இயம புரத்துக் கணக்கும்
அன் றரனார் எனக்கே பட்டம் வைத்து
அர சாண்டிருந் துயிர் பிடிக்க வரங்கள்
தந்தக் கணக்கறியாத முட்டாளே
சாமியைத் தேடிப் பரதவியாதே
பாட்டமும் கெட்டியே தோட்டம் காப்பாரோ

பழைய சிவனோ புதுக்க வந்தாரோ
தேட்டமாய் நீயும் உரைத்தது போலே
சிவனார் எனக்கிட்ட சட்டமே சட்டம்
ஏற்றதோர் தோரணைச் சீட்டுக்கு மேலே
இன்னம் ஒருசீட் டெழுதுவா ருண்டோ
பார்த்த வயது பதினாற தாச்சு
பாசக்கயிற்றால் இறுக்குவே னென்ன

(மார்கண்டேயன் காலனை விலகி ஓடிப்போகச் சொல்லுதல்)

கூற்றா வுன் பாசக்கயிறென்ன செய்யும்
கூடிவந்தக் காலதூத ரென் செய்வார்
சோற்றுக்குப் பற்றித் திரிந்த ஈ போலே
சும்மாகு மாதி யமராசரே கேளும்
ஈசனடியார் உயிரைப் பிடிக்க
எதிர்க்குமோ கல்லுக்குத் தேங்காய் சரியோ
தேசத்திலுள்ள இரும்பைக் கறையான்
சிதல மரத்துண்டைத் தின்பது போல
பாயுங் கடுவாய் புலிக்குப் பதறி
பார மரத்திலே ஏறியிருந்தால்
சீறிச் சினத்து புலியென்ன செய்யும்
திரும்பி வழிதேடிப் போவதல்லாமல்
கோலுக்குத் தண்ணீர் பதறுவதில்லை
குருபர னோடே எதிர்ப்பாரும் உண்டோ
வாழைக்கு முள்ளு பதறுவ துண்டோ
வரிக்கல் பிளப்பது சிற்றுளி யல்லோ
காளையி லேறியே நாதன் வருவார்
காணாமற் சென்று கடந்தோடிப் போங்கோ
ஏழை மார்க்கண்டனும் இவ்வுரைச் செப்ப

(உயிரைப் பறிப்பேன் என காலன் கூறுதல்)

எமராசரும் பின்னர் ஏதுரைப்பாராம்
வெட்டுக் கிடாய்முன்னே வேதம் படித்தால்
விடுமோ கொம்பாலே குடல் சரியாமல்
பட்டத்துக் கத்திமுன் வாழை எதிர்த்தால்
பதறியே கத்தி விலகுவதுண்டோ
குட்டி யானைமுன் மடல்கொஞ்சினக்கால்
குவட்டில் அடக்காமல் விடுவதும் உண்டோ

(மார்க்கண்டேயன் உயிரைப் பறிக்க முடியாது எனல்)

எட்டியே யானை விழுங்கிவிடும் உண்மை
எமராசரே ஒருகதை கேளும் சொல்வேன்
சம்பாமல் வாழும் சமுத்திரம் தன்னில்

தாக்குடைய பனை போலொரு மச்சம்
கொம்புக்கல் ஊழியை வம்பால் விழுங்க
குடலைத் துளைத்துமே கொப்பூழில் பாயும்
பேசா தூடனந்த மச்சம் இறக்கும்
பெருங்குடல் தன்னில் இரைதங்கா வண்ணம்
பீசத்துடன் மெத்த வந்தேன் எனவே
பிரபல மாகவே எண்ணமும் வேண்டாம்

### (காலம் முடிந்து விட்டது உயிர்பிடிப்பேன் என காலன் சபதம் செய்தல்)

என்றுமார்க் கண்டன் உரைத்த பொழுது
எமராசர் பார்த்துமே யாதுரைப்பாராம்
உண்டுனக்குப் பதினாறு வயசு
ஊரும் கடவூர் உலகம் அறிய
இன்றுனை எந்தன் வலையாலே வீசி
இறுக்கியே பாசக் கயிற்றினால் கட்டி
கொண்டங் கியம புரக்கோட்டை தன்னில்
குரங்கு போல விட்டு ஆட்டங்கள் பார்த்து
வண்டத் தனம்செய்யும் வாய்படும்பாடு
வந்தி யமபுரம் கண்டால் அறிவாய்
என் றியம ராசன் சொன்ன பிறகும்
எரிச்சலுடன் பின்னும் யாதுரைப் பானாம்
வாராய்நீ மார்க்கண்டா இவ்வார்த்தைச் சொல்லி
வலுப் பேசினதாலே வம்புடன் உன்னை
பாரச் செக்கிலிட்டு ஆட்டம் பாராட்டால்
பாரெங்கும் போற்ற நடுநிலை கற்ற
காலனும் இல்லையெனக் கடும் பாசை சொல்ல

### (மார்க்கண்டேயன் எமபுரம் அழியும் என எச்சரித்தல்)

கட்டுடன் மார்க்கண்டன் ஏதுரை சொல்வான்
திண்டு மிண்டு சொல்லவேண்டாம் மறலி
சினத்தில் இயம புரமும் அழியும்
நன்றான ஈசர் அடியார் கலங்கில்
நாட்டில் இயமனும் காலனும் உண்டோ
தொண்டர்கள் தன்னை அறியா திருந்தால்
சுடரிலே விட்டில் விழுவது போலே
இந்தப் பொழுதிலுள்ள செங்கோலும் நீயும்
இயம பட்டங்கள் இருக்கிறச் செய்தி
சொல்லுகிறேன் கேளீர் மறலி சாகாமல்
சுவாமி வருமுன்னே ஓடிப் பிழைத்திடு.

## (காலன் பாசவலை வீசுதலும் சிவன் காலனை அழித்தலும்)
## (வேறு)

அந்தநேரம் தன்னில் மன்னர் அதிகோபமாய் நெருங்க
அலறிக் கிடுகிடென அங்கலாய்த்து மார்க்கண்டனும்
சிந்தையதுவும் கலங்கி சிவனார் திருப்பதத்தை
சேர விருகையா லாவி சேர்ந் திருநாள் பூண்டு கொண்டான்
கண்டு யம ராசனுமோ கனல்போலே கண் ணிலங்க
கையினால் வலையெடுத்து கடுங்கோப மாகவீச
அன் றிருபேரும் வலைக்குள் அகப்பட்ட மானதுபோல்
ஆதிமறை மார்க்கண்டனும் ஆகோவென் றபய மிட்டான்
வெற்றியுள்ள வீச்சுவலை விதனம் பொறுக்காமல்
வீறு வீறென் றோலமிட்டு விழுந்து புரளும் முன்னே
கர்த்தனாதி வேதநாதன் கடுங்கோபம் கொண்டெழுந்து
காலதூதுவர் இயமன் கருகக் கருகவென்ன
உற்றதோர் திருப்பதத்தை உயர்த்தி மிதித்திடவே
ஊடுருவக் காலதூதர் ஒக்கவே பாதாளமதில்
எத்திசை யுள்ளோரறிய எமதர்மர் பாசமுடன்
எரிந்து பொடிநீறாக எமபுரம் போயினரே.

## (என்றும் பதினாறு வயதுடன் வாழ மார்க்கண்டேயனுக்கு சிவன் வரம் நல்குதல்)
## (வேறு)

இறந்தாரே எம கால தூதுவர் மூபேரும்
ஈசனுடன் எதிர்த்து வலை வீசினதினாலே
சிறந்த சிவ னாதர் திருக்கோபமும் தெளிந்து
தீர னாதி மார்க்கண்டனைத் திருக்கையினால் சேர்த்து
பத்திமுத்தி பெற்றவனே எத்திசையோர் மெய்க்க
பதினாறு வயதுனக்குக் குறையா தொரு நாளும்
மற்றுமுள்ள உயிர்களுக்குச் சாவுநோவும் வேண்டாம்
மாயவலை பாசமுடன் மறலிகளும் வேண்டாம்
மந்திரங்கள் தந்திரங்கள் யந்திரங்கள் வேண்டாம்
மார்க்கண்டா வா என்ன யமன் மாண்டஇடம் விட்டு
நன்றியுடன் ஈசுரனார் கயிலை மலைக் கேக

## (காலன் இறந்ததால் மக்கள் பெருக்கம் அதிகமாதல்)

நளினமுடன் தெய்வார்கள் பூமாரி பொழிய
சந்திரர்கள் சூரியர்கள் தவத்தியர் மா முனிவர்
சார்புடனே கயிலாச மேருகிரி தன்னில்

நந்தியுடன் அகத்தீசர் நாரதவாழ் முனியும்
நளினமுடன் முப்பத்துமுக் கோடித்தேவர் முதலாய்
அல்லோரும் தொழுதுநிற்க வல்ல பரனாரும்
ஆனமலை கயிலைமேலே வீற்றிருக்கும் நாளில்
சொல்பெரிய இயமகால தூதுவர்கள் தம்மை
சோதிபரன் திருப்பதத்தால் உதைத் திறந்த தாலே
எல்லையில்லா சீவசெந்து இறப்பதற்கில்லாமல்
ஏற்ற உலகெங்கும் நருள் எங்கும் கலிப்பாக
செல்லுதற்குப் பாரமுண்டு சீவசெந்து நெருக்கம்
தீனமுடன் சாவுமில்லை நோவுகளும் இல்லை
சொல்லவொண்ணாப் பல்லுயிர்கள் உயிரழிவில்லாமல்
சூரமுள்ள யானை கடுவாய் புலிக ளோடே
வல்லமைசேர் ஆழிசிங்கம் வரிக்கடுவா யோடே
வாழும்மலை நாகம் வரையாடு புல வாயோடே
நல்லபல சீவசந்தும் நாட்டில் வந்ததோடு
நருட்பெருத்த ஏதுவினால் நாடிக் கூனை வைத்து
வல்லமணல் தோண்டிக் கரை யேறி வெகு நாளாய்
வழிநடைக ளில்லாமல் வாரிக்கரை தோறும்
எத்திசையும் மனிதருடல் முப்பதுக் கூனாக
ஏகமெங்கும் முள்முளைத்து ஓரிகள் போலாகி
உற்ற கிடங் கோடை நதி கூவத்தி லிட்டாலும்
உடனெழுந்து கரையேறி பலவிடங்கள் தோறும்

## (பூமாதேவி பூமிபாரம் தாங்காமல் திருமாலிடம் முறையிடுதல்)

நாட்டமுள்ள பூவுலகில் நருட்பெருத்த தாலே
நாயகி பூ மாது பதம் சேடன் தரியாமல்
தாட்டிகவான் முறையமிடத் தார்குழல் பூமாது
தான்நெடுமால் தனக்குரைத்து சங்கரனார் இடம்போய்
உற்றதிருக் கூட்டமுடன் தேவர்முனி வோரும்
உடையவனார் இடமதில் போய் முறையமிட்டுச் சொல்வார்
கர்த்தாவே கயிலாசக் கண்ணே மணி விளக்கே
கால தூதுவ ரியமன் கடந் திறந்த தாலே
மன்றுதனில் எறும்பு காடை யானை முதலாக
மாளாமல் பலவுயிர்கள் பெருகுவதனாலே
ஒண்டொடி பூமாது பதம் சேடன் தரியாமல்
உலகமெல்லாம் யுகமுடிவு ஊழிகால மாச்சே

### (திருமால் காலனை உயிர்பிக்குமாறு கூறுதல்)

எந்தவிதம் திருமனதில் நினைத் திருக்குதையா
வம்பாக இறந்த எமராசரையும் எழுப்பி
வாழுலகம் ஈரேழும் ஆளும்படியாக
நம்பினவர்க் குதவிசெய்து நாட்டை யரசாளும்
நளினமுள்ள சிவக்கொழுந்தே பழுதுகள் வராமல்
தம்பிரானே இயம கால தூதரையும் எழுப்பி
தவறாத இயமபட்டக் குறைவுகள் வராமல்
எந்தவித மானாலும் ஏழைகளுக்காக
இரங்கி யிந்த முறைநடத்தும் என்ன வுரைத்திடவே

### (சிவன் மார்க்கண்டன் பெருமையை திருமாலுக்குக் கூறி விபரங்கேட்டல்)

பந்தமறுத் தாளுகின்ற பரமன் மனம்மகிழ்ந்து
பத்மநாபன் தன்னுடனே பதிலுரைத் தாரப்போ
தப்புமொழி சொல்லறியேன் தரணி யளந்தோனே
தவறாமல் எமதூதர் தனைப்பிறவி செய்து
ஒப்பமுள்ள மூவரையும் உலக மரசாள
உறுதியுடன் இயமனுக்கு வரங்கொடுக்கும் நேரம்
பத்திமுத்திபெற்ற சித்தர் உற்றதவ முடையோர்
பாரதனில் மாமுனிவர் தேவர்முதலாக
எத்திசை யுள்ளோ ரறிய பக்த ரடியாரை
இயமகாலன் அணுகாமல் ஏற்ற வரங் கொடுத்தேன்
மருந்தெனுமென் மைத்துனரே மாறாட்ட மில்லை
மார்க்கண்டன் செய்தவப்போ் மனுக் குலத்திலில்லை
அருந்தவங்கள் தனையறிந்து அவனிடத்தில் சென்றேன்
அறிந்திருந்தும் மறலி வலை வீசினதினாலே
உதைத்தேனே இயம காலர் இனிவேண்டா மென்று
வையகத்தோ ரறியச் சட்டம் வைத்திருக்கு திப்போ
நினைத்து வந்த செய்தியென்ன நீல நெடுமாலே

### (திருமால் எமதர்மனை மன்னித்து உயிர்ப்பிக்க வேண்டுதல்)

நேசமுடன் சொல்லுமென்று ஆதிபரன் வினவ
அனைத்துமொழி தான்கேட்டு அரிநெடுமால் வணங்கி
அன்புடனே வந்தசெய்தி இன்புடனே கேளீர்
திருத்தமுற்ற பூவுலகில் நருட்பெருத்த தாலே
சேயிழைபூமாதுபதம் சேடன் தரியாமல்
வருத்தமுற உலகமெங்கும் வாடிப் போகுதென்ன
வந்தேன்நான் உம்மிடத்தில் எனக்குதவி செய்வீர்
சிறியோர்கள் செய்தபிழை பெரியோர்கள் பொறுப்பீர்

சீருடைய இயமகால தூதுவரை எழுப்பி
குறியான இயம பட்டம் தவறுகள் வராமல்
குருபரனே நீர்பொறுத்து மன திரங்கு மையா
அழுந்தாமல் எங்களையும் ஆதரித்துக் காப்பீர்
ஆர்பொறுப்பர் அவனிதனில் நீர்பொறுப்ப தல்லால்
வழுகாமல் இயமனுக்கு வண்மை தவறாமல்
வதைத்தவரை எழுப்புதற்கு மாய னுரை செப்ப

## (கால தூதர்களை உயிர்ப்பித்தல்)

அந்தவுரை தனைக்கேட்டு ஆதிபர நாதர்
ஆன பிரமா நயினார் அல்லோரும் கூடி
சந்தோசமாக வந்து சண்டர்களை எழுப்ப
சந்தமுடன் படுகளத்தில் தானவர்கள் வந்து
உருக்கமுடன் பிரமனுமோ எழுப்புவதற்காக
உற்றுணர்ந்து பரமனிரு பாதமதைத் தொழுது
திருத்தமுடன் திருநீறு கையதனால் வாங்கி
சிவாயமென்ற அட்சரத்தைத் திருப் பிரம்பினாலே
மகத்துவமாய் தான்வரைந்து மறலி வரவென்ன
மாறாட்டமின்றி ஓம் நமசிவய வெனவே
அகத்துறையும் ஆதிபரன் அரு ளதனால் உலகில்
ஆனகால தூதுவர்கள் அன்புடனே உறங்கி
அசதிவிட்டு எழுந்ததுபோல் அரனருளால் மறலி
அல்லோரும் தானெழுந்து அவனி மனுவோரும்
வசதியுடனரிய வந்து வணங்கி எழுந்திருந்து
வண்மையுடன் பூவுலகில் வந்துநின்றா ரங்கே.

## (கால தூதர் சிவனிடம் தெண்டனிட்டு நிற்றல்)

## (விருத்தம்)

நன்று மார்க்கண்டன்தன்னை நலமுடன் சேர்த்ததாலே
சென்றுநாம் போனோம் நம்மைதிரும்பவும் எழுப்பிவிட்டார்
பண்டுபோல் உலகை யாள பதிதனில் வாருமென்ன
அன் றரன்சொல்ல ஆதிபரனையும் தொழுது நின்றார்.

## (வேறு)

அகம் பதறியே இயமராசன்
அரனைத் தொழுதுமே ஏது சொல்வான்
வேதப் பிரமனார் தன்கணக்கும்
வெல்லும் புகழ் நயினார் கணக்கும்
காதலுட னிங்கே இறப்பவரை
கருணைக் கணக்கிலும் பதிக்க வென்ன

ஏகாம்பரனே நீர் எழுதச் சொன்னீர்
எல்லாக் கணக்கிலும் பதினாறு
மாறிக் கணக்கொன்றும் அறியாமல்
மாயத் திருப்பாதத்தா லுதைத்தீர்
கூறி எழுப்பினீர் ஈஸ்வரனே
கூற்றனைக் கொன்றக் குருபரனே
சீறி யவரோடே மற் றொரவும்
சென்று துயர்பட வேண்டாமே
ஆறில்லார் வரம் பெற்றவரே
அருளாம் சிவகெதி தாருமென்றார்
அந்த உரைகேட்டு மார்க்கண்டனும்
அருளும்படி கறை அத்தனையும்
சிந்தை தனில்நன்றாய் வரவழைத்து
தேவர் திருக்கூட்டம் மிகக்கூடி
வந்தவர் பிச்சிச் சரங் குவித்து
வாய்த்தச் சிவன்பாதம் தொழுது நிற்க

**(நயினாரிடம் கணக்குக் கேட்டலும் நயினாரின் பதிலும்)**

சந்தோஷம் கொண்டு அரியவனும்
நழைக்கும் சித்திர புத்திரரை
திட்டமுடன் கிட்ட வருத்திவிட்டு
செய்திஉரைத்துப்பின் ஏதுரைப்பார்
இட்டமுடைய மார்க்கண்டனுக்கு
எழுதிவைத்ததார் என்றுரைக்க
சட்டமுடன் விதி தன்கணக்கும்
சாரும் பெருங்கணைக் கணக்கும்
கட்டாய்க் கணக்குடன் இது மூன்றும்
கருத்துடனே பார் என் றுரைக்க
சென்று கணக்கெல்லாம் பார்ப்பளவில்
சேரப் பதினாறு வயதல்லாமல்
என்றும் பதினாறென் றெழுத வில்லை
இந்தக் கணக்கல்லால் வேறுமில்லை
என்று சித்திர புத்திரரும்

**(சிவன் எமதர்மனின் ஆணவத்தைக் கூறுதல்)**

இன்பமுடன் சொல்லி நிற்கையிலே
அன்று நயினார்தன் உரைகேட்டு
ஆதிபர நாதர் ஏதுரைப்பார்
நன்ற தவத்தோர்கள் தனைநீக்கி

நாட்டை யரசாள வரங்கொடுத்தோம்
நன்றியுடையதோர் மார்க்கண்டனும்
நல்ல நினைவுகள் தவறாமலே
சொல்லத் தொலையாது அவன் தவங்கள்
சூட்ச நிலையாகத் தவங்கள் நின்றான்
வெல்லும்படி எந்தன் அருகிருக்க
வீரன் மறலியும் கண்ட பின்பும்
மாறியொரு நொடி நேரத்துள்ளே
மறலி வலையாலே வீசிவிட்டான்
கூற மறுமொழி இல்லை யல்லோ
கோல நெடுமாலே சொல்லு மென்றார்
என்று சிவனாரும் சொன்னபோது

### (திருமால் எமதர்மன் மேல் குற்றம் கூறுதல்)

ஏற்ற திருமாலும் ஏதுரைப்பார்
முந்தைப் பெரியோர்கள் செய்தவம்போல்
முறையாய்த் தவம்நின்றான் மார்க்கண்டனும்
வெல்லும் மறலிதன் ஆணவத்தால்
விமலர்தனைச் சற்றுங் கெணியாமல்
கொல்லும் வலைவீச முறையு முண்டோ
குற்றம் உன்பேரில் இயமா வென்றார்

### (காலன் சிவனிடம் மன்னிப்பு கேட்டு வரங்கேட்டல்)

அந்த உரைகேட்டு இயம காலன்
ஆதி நெடுமாலைத் தொழுது நின்றான்
சொந்த அடிமை நான் செய்தக் குற்றம்
சுவாமி பிழைபொறுத் தாண்டு கொள்வீர்
நன்றாய் முக்கோடித் தேவர்களும்
நல்ல கணைக்காக எல்லோருமே
கண்டு அரனென்று அறிந்திருந்தும்
கடுக வலையது வீசினதால்
பாதகமின்றி பக்தனுக்காய்
பரமன் மனமது வெகுண்டெழுந்து
கோதை உமைபங்கர் கோபமுற்று
கூற்றை உதைத்ததுக் குற்றமில்லை
நல்ல தினமின்று இயம பட்டம்
நன்றா யொருகாலம் அழிவில்லாமல்
சொல்லும் திருவாக்குப் படியாக
சுவாமி வரங்கொடுத் தனுப்பு மென்றார்

### (காலன் உயிர்பிடிக்கும் வரம் வேண்டாம் எனல்)

நல்ல வரங்கொடுத் தனுப்பு மென்ன
நாடி இயமனும் ஏது ரைப்பான்
வெல்லும் பலவரம் தந்திட்டாலும்
வேண்டாம் உயிர்ப்பாட்டம் வேண்டாமென்ன

### (நாராயணர் எமதர்மனுக்குச் சமாதானங் கூறுதலும் சிவன் வரமருளுதலும்)

அந்த மொழிகேட்டு நாரணரும்
ஆதி சிவனாரும் அருளுகின்றார்
இந்த மொழியொன்றும் பேசவேண்டாம்
ஏற்ற எமகாலா வாவெனவே
வென்றியுடன் நன்றாய் அருகழைத்து
வீரன் இயமனோடே துரைப்பார்
மன்ற தனிலுள்ள பல் லுயிரும்
மற்றும் பலபல உயிர்தனையும்
நன்றாய் அவரவர் விதிப்படியே
நாளுந் தொகைச் சரியான துண்டால்
கண்டு பிரமாவின் தன்கணக்கும்
காராவின் மகன் தன்கணக்கும்
உந்தன் கணக்குடன் இது மூன்றும்
ஒத்துத் தொகைசரி தான் பார்த்து
சந்தமுடன் நாளு சரியானால்
தக்க உயிரதைத் தான்பிடித்து
ஆளும்படி நன்றாய் வரந் தாரேன்
அரசு புரிந் துலகாளு வென்றார்

### (பாவம் அணுகாத வரம் கேட்டல்)

நாளும் சிவபதம் தனைத்தொழுது
நல்ல எமகாலன் ஏதுரைப்பான்
வாழும் மனுஉயிர் மடிந்த துண்டால்
வம்பாய் எமகாலன் கொன்றானென்பார்
நாளும் வசைசொல்லி நகைத்திடுவார்
நம்மிற் பாவங்கள் அணுகாது
தோணும்படிவரம் தருவீரானால்
துணிந்து உயிர்ப்பாட்டம் ஏற்றே னென்றான்

### (சிவன் வரம் நல்குதல்)

நாணும் உரைதனைக் கேட்ட பொது
நாரி பங்கனும் மகிழ்ந்துரைப்பார்
நன்றியுடைய தோர் இயம காலா

நாட்டிலுன்பேரை நகையாமல்
பண்டை விதியென்றும் அறியார்கள்
பகருவா ரவர் தங்களிலே
சண்டைதனில்வெட்டி மடிந்தா னென்பார்
தவறி விழுந்துயிர் போச்சு தென்பார்
தின்றப் பிடிசோறு கொட்டு தென்பார்
தீயில் விழுந்துயிர் போச்சு தென்பார்
கண்ட மிருகங்கள் கடித்து தென்பார்
கடிய வியாதியால் இறந்தா னென்பார்
மங்கை மயக்கத்தால் மாண்டா னென்பார்
மாடு குத்தியே இறந்தா னென்பார்
கெங்கைதனிற் றுள்ளி இறந்தா னென்பார்
கிருஷ்ண சர்ப்பத்தால் மடிந்தானென்பார்
அங்கும் இங்குமாய்த் தங்களிலே
அவரவர் மனம் அறிந்தபடி
பிறந்தால் இறந்தாலும் ஒருப் போலே
பேசுவா ரவர் மனப் படியே
சிறந்தத் திருமால் மேலாணை யிட்டேன்
சிவகால னென்று சொல்ல மாட்டார்

**(காலன் உல்கை ஆள வரங் கேட்டலும் சிவன் நல்குதலும்)**

என்றங் குறைதனைக் கேட்டபோது
இயமனுடன் கால தூதுவர்கள்
நன்றியுட னுல கரசாள
நாடி வரந்தாரும் எனவுரைத்தார்
அந்த மொழிதனைக் கேட்டபோது
ஆதி பரனாரும் ஏதுரைப்பார்
இந்த உலகங்கள் ஈரேழுமே
எறும்பு கடையானை முதலாக
தந்தோம் அரசாள என்றும் வரம்

**(காலன் மேலும் பலவரங்கள் கேட்டலும்
சிவன் வழங்குதலும்)**

தவத்தர் முனிவர்கள் சடையாமல்
மற்றும் பலபல உயிர்தனையும்
மரணம் கருவிதிப் படியாலே
சுற்று வலையாலே வீச வரம்
சூலம் எறிந்துயிர் பிடிக்க வரம்
உற்ற மனிதரை மயக்க வரம்
ஓடி உயிர்களைப் பிடிக்க வரம்
மற்ற மனிதரை மடக்க வரம்

மாய வலையாலே வீச வரம்
பாசக் கயிற்றாலே இறுக்க வரம்
பாயுங் கடாவதில் ஏற வரம்
தேச மதிலுள்ளோர் காணாமலே
திசைகள் திசைதோறும் ஒளிக்க வரம்
வானந்தனில் பறந்தோட வரம்
வாய்த்த மலைபோலே உயர வரம்
கானந் தனில் பாயும் வெள்ள மதில்
கருங்கடாவேறி நடக்க வரம்
இல்லத் தறையிலே ஒளித்தாலும்
ஏறிக் காற்றெனப் பிடிக்க வரம்
கல்லறை தன்னி லிருந்தாலும்
கடிய வலையாலே வீச வரம்
இரவும் பகலுமே திடுதிடென்ன
இருளுக் கிருளாக ஓட வரம்
பரவும் வெளிதனி லொளித் தாலும்
பாய்ந்து புலிபோல் பிடிக்க வரம்
வானம் வையகம் உள்ள மட்டும்
வரிசையுடன் பூசை உண்ண வரம்
தீனம் பலதிட்டு வதைக்க வரம்
தீயைக் கொழுத்தியே பிடிக்க வரம்
இந்தப் படியுள்ள வரங்களெல்லாம்
இயமனுடன் கால தூதுவரும்
சந்தமுட னாதி பரனிடத்தில்
தானே வரங்கொண்டு காணாதையா
இன்னம் பலவரம் தாருமென்றான்
பந்தமுடன் வரம் கேட்டபோது
பரமன் மகிழ்ந்துபின் ஏதுரைப்பார்
நாளுந் தவறாமல் ஊட் டுண்வு
நல்கப் பருகிநீ உயிர் பிடித்து
கோளு நடப்புக்கே கைகொடுத்து
குவல யந்தனை ஆளு மென்றார்.

## (வழங்கிய அருள் நிலைக்க வரம் நல்குதல்)
## (வேறு)

என்று சிவனாரும் சொன்ன பொழுது
ஏமனுடன் கால தூதன் மூபேரும்
நன்று நன்று நாட்டு நருள் மீறினாக்கால்
நாங்களென்ன செய்ய வேண்டுமென்றாரே
நேராய்ப் புவியுளோர் மீறினதுண்டால்

நினக்கு வரமது தருகிறே னிப்போ
சீராய்ச் சிதம்பர வித்தையுந் தந்தேன்
சீமை மனுவை மயக்கவே செய்து
ஈளை இருமல் இளைப்புடன் விக்கல்
இரத்தக் கடுப்போ டுழைதல் கழிச்சல்
கோழை சுரத்துடன் தேகத்திலெங்கும்
குத்துடன் நிட்டூர வாந்தி சஞ்சாரம்
மெத்தவே வேர்வை அசதி மயக்கம்
மேல்மூச்சு தன்னுடன் உள்மூச் செறிய
நித்தம் பலபல யோசனை செய்து
நேரில் அறிந்து பின்உன்னை நினைப்பார்
காலனார் கோட்டி கடுங்கோட்டியென்பார்
கண்ணைச் சொருகி வலிக்குதே யென்பார்
சீலை மறந்துகை காலும் மறந்து
செப்பிலிருக்கின்ற பொன்னை யெடுத்து
கண்காண நேர்ந்தவர் கையாலே கெட்டி
காலா உயிர்கொண்டு போகாதே என்பார்
அண்ணு உனையும் பெருக நினைப்பார்
அதுகடந்த பின்பு அனைத்தும் மறப்பார்
பொன்னழிந்தாலும் பொருளழிந்தாலும்
பிள்ளைப்புருடன் பிழைக்கட்டு மென்பார்
தன்னை மறந்துமே உன்னைத் தொழுவார்
சற்றுக் கழிந்தால் அதையும் மறப்பார்
நித்தம் ஒருகோடிப் புத்தி நினைப்பார்
நீதிக்கு மாறாய் நெருக்கஞ்செய்யாதே
இத்தனையுங் கூடத் தந்தே னுனக்கு
இந்த வரங்கள் அழியாது போநீ
அழியாதெனவே உரைத்தப் பொழுது

### (காலன் வாகனம் கேட்டலும் ஈசன் கருங்கடா வாகனம் நல்குதலும்)

அந்தகன் பின்னும் அரனோடு கேட்பான்
இழிவாக நானும் நடந்துசெல்வேனோ
ஏறிப்போக ஊர்தி ஈயுமன்றோனே
ஈயுமென எமன் கேட்ட பொழுது
ஈசுரனாருமே யா துரைப் பாராம்
சீயமதன் மேலே காளியும் செல்வாள்
சீருடன் கந்தன் மயிலேறிப் போறார்
மூத்தமகன் பெருச்சாளியி லேறி
மூதண்டம் சுற்றியே ஓடியே வாறார்

நாற்றிசை போற்றப் பருந்திலே யேறி
நாரணனாரும் நடக்கிறாரெங்கும்
ஈஸ்வரி யாள்கலை யேறி நடக்க
இந்திரன் வெள்ளானை மீதினில் போறார்
சாஸ்வத மாக எருதிலே யேறி
சர்வ உலகமும் சுற்றியே வாறேன்
வேளைக்குத்தக்க விதக்கோலங்கொண்டு
வீறுடன் சென்று வருவதனாலே
காளை யெனக்கே உனக்கேற இப்போ
கருங்கடா ஒன்று தருகிறே னென்ன

### (கால தூதர் விடைபெற்று செல்லுதல்)

பிரமன் வகுத்துக் கொடுக்கவே எமன்
பிரபலமாகவே ஏறி நடக்க
பிரமனும் சித்திரபுத்திரர் தாமும்
பெருங்கணக் கானதைக் கையிற் கொடுக்க
கணக்கதைப் பார்த்து எமதர்மராசன்
கயிலை மலைமுதல் கணக்கிலிருக்க
தணுப்பாய் சராசரம் அத்தனையுந்தான்
தட்டிலா தெண்ணுக்குள் உட்பட்ட தென்ன
சந்தமுடன் சிவநாதர் கொடுத்த
சகல வரமுமே கையேற்று எமன்
சொந்தக் கருங்கடா மீதிலே ஏறி
துடுக்கன் எமகால தூதர் படையும்
சிந்தைக் களித்து சிவனார் கொடுத்த
சிறந்த பலபடை ஏற்று நடக்க
இந்தப் படியே உலகாளு மென்ன
இயமகாலர்க்கு விடைகொடுத்தாரே.

### (அரனும் மாலும் கயிலைச் செல்லுதல்)
### (விருத்தம்)

நன்றாய் அவரவர் ஆயுதங்கள் நல்ல வலைபாசம் சூலமுடன்
அன்று வரங்கொடுத் தங்கிருக்க ஆன சிவன்மால் நயினாரும்
பண்டு முனிவோர் திருமாதும் பரம சிவனடி தொழுது நிற்க
அன்றங் கியமனைத் தானனுப்பி அரனும் மாலுமே கயிலைசென்றார்.

### (எமதர்மன் ஆட்சி செய்தல்)
### (வேறு)

அரனும் அரியும் வழிகொளவே நின்ற ஆன எமராசர்
அந்தக் கருங்கிடா மீதினி லேறியே அழகு முடிசூடி
உரமுள்ள காலனும் தூதனுங் கூடியே உற்ற உடுப்புமிட்டு

ஊக்கமுடனே உலகமதை யாள உத்தமனைத் தொழுது
தொழுது வணங்கப் பெரும்படை யானது சுற்றி அணிநெருங்க
வழுவிலாத எமராச புரமெனும் வையம் அரசாள
வாட்டமில்லா தெமராசர் கிடாவினில் வரிசை யுடனிருக்க
நல்லதொரு ஐயங் காச்சிப் பெரும்படை நாலுதிக் கும்வரவே
நாடிய தீடிய ஏணிப் பந்தமதும் நல்ல ஒளிவீச
எல்லை யில்லாதப் பெரும்படையானது எங்கும் நெருங்கிடவே
ஏற்றதோர் மேளம் ஒலிக்க நடந்து இருந்த பதிகடந்து
சந்தோசமாகநடந்து எமக்கோட்டையின் உள்ளே செல்வதற்கு
சகல பெரும்படையுங் கால தூதரும் தாட்டிகமாய் நடக்க
விந்தை யதாகவே வாணங்கள் மத்தளம் வெடிகள் குமிறிடவே
வெங்கலத் தம்பட்டம் கொம்பு மல்லாரி விரைந்து முழங்கிடவே
வேதப் பிரமன் இருக்கும் இடம்விட்டு வேண்டும் படையுடனே
வேணி யரனார் பதத்தை மறவாமல் விருப்பமுடன் நடந்து
சோதனைப் பார்த்து இயமன் படையுடன் சுத்த மனதுடனே
சோதிபரன் துணை யுண்டெனக் கூடியே சுகமாய் அரசிருந்தார்.

## (நயினார் கணக்குப் பார்த்தல்)
## (விருத்தம்)

இயமனுங் கால தூதர் எண்ணிலாப் படையும் சூழ
பய மணுகாத வண்ணம் பாங்குடன் வந்த போது
தயவுடன் நயினார் தாமும் தன்கணக் கதுவே கூற
கயவர்கள் தனக்குச் சிட்சை கணக்குடன் செய்கிறாரே.

## (தீர்ப்பு வழங்குதல்)
## (வேறு)

காலனுடனே இயமனும் தூதனுமாக
கட்டுடன் எமபுரமதில் வந்து இருந்து
சீலமுடனே கணக்கதைச் சித்திரகுப்தர்
சென்று விவரித் துரைக்க இயமனு மப்போ
நித்த மொராயிரம் என்ன உயிரைப் பிடித்து
நேரே நிறுத்திக் கணக்கதைச் சோதித்துப் பார்த்து
சித்தத்துக் கேற்றபடி ரட்சை சிட்சைகள் செய்து
தீரன் எமராசன் வீரமுடனே யிருக்க
கொத்துக் குறைத்துக் குறைமரக் காலிட்ட பேரை
கொடியதோர் செக்கதிலிட்டு அரைத்ததும் அன்றி
எத்திசையோர் காண எண்ணெயும் பிண்ணாக்கும் ஆக்கி
எடுத்து நரகமதிலே எறிந்தன ரப்போ
மட்டில்லா வேதனை செய்தப் பிறகந்தப் பேரை
மறுகப் பிறவிசெய் தாரொரு வாணிகனாக

அட்டியில் லாதவன் செய்த கருமத்தினாலே
ஆனமத்யானப் பறையனென்றே புவி சொல்லும்
மாதா பிதாக்கள் பசியோ டிருந்திடக் கண்டும்
மங்கையுடன் புசியாறி மகிழ்ந்திட்ட பேரை
ஊதாரி யென்னவே மண்ணொடு மண்ணாய் பிசைந்து
உற்றவன் வாணாளை அற்றிடச் செய்தன ரப்போ
பொல்லாதப் பாவிப் பயலைப் புழுக்கள் கடிக்கப்
போட்டும் அவனைப் பிறவி செய்தா ரொரு வண்டாய்
அல்லாது தாயைத் தகப்பனைத் தீண்டி யடித்த
அசடர் தமைப் பல ஆண்டாய் நரகத் தழுத்தி
சற்றும் அறிவில்லாச் சண்டாளப் பாவியைப் பின்னால்
சப்பாணியாகத் தரணியிலே வகுத்தாரே
மற்றும் ஒருகணக் கானதைச் சித்திரகுப்தர்
மட்டுடன் பார்த்து மறுவிலாதே உரைத் திட்டார்
நன்னெறி சொல்லும் நடுச்சபை மீதேயிருந்து
ஞாயக்கேடாக வழக்குரைத்தப் பாவி தன்னை
பின்னும் பல்லாண்டாய் நரகத் தழுத்தின பின்பு
பேசாத ஊமை எனவே பிறவிகள் செய்தார்
கட்டுடன் வாய்பேசா ஊமையெனவே இருந்தும்
காட்டில் பயிருக்குக் காவல்காக்க வைத்து விட்டார்
மட்டுடனே கடன்கேட்க வழியில் மறித்து
மானக் கேடாகவே வைதோர் பாதகர் தம்மை
நெருப்பிற் கிடத்தியே நெஞ்சினிற் கல்லதை வைத்து
நிச்சயமாய் அவன் வாயதிலும் சூடு சுட்டார்
விருப்புடனே யவன் தன்னை மறுபிறப் பாக்கி
வீணனை வாய்க்கு அரிசியில்லா னெனச் செய்தார்.

## (தீயவரை மறுபிறவி செய்தல்)

## ( இரட்டைச்சீர்)

இப்படியே கள்ளனையும் ஈசுரனார் பிறவி செய்து
இன்னும்பல வேதனைகள் செய்வார் (இன்னும்...)

செப்பமுடன் ஒன்றுகொடுத் தொன்பாக வாங்குகின்ற
தீயரை மறுபிறவி தன்னில் (தீயரை...)

உண்பதற்கும் உடுப்பதற்கும் ஒன்றில்லாதப் பாவியாக
உடனே பிறவியது செய்தார் (உடனே...)

நண்பகலிலே உணவு நல்காத பாவியரை
நாடும் பிச்சை ஏற்கவிதி செய்தார் (நாடும்...)

ஒருவீட்டுச் செய்திதனை ஓடி மறு வீட்டிற் சொன்ன
உரனில்லார் தங்களையும் அப்போ (உரனில்லார்...)

நருக்கெனவே முள்முனையில் நாக்கதையும் கோர்த்து வைத்து
நாடியவன் தனைப்பிறவி செய்தார் (நாடியவன்...)

மறுபிறவி அவன் றனையும் வாயதிலே குட்டம் பற்ற
மாநிலத்தில் பிறவியது செய்து (மாநில...)

ஒருவருட னும் பேசா ஊமை செவிடாகும்படி
உத்தமனும் தான் படைத்தா ரப்போ (உத்தனும்...)

பிள்ளைப்பெண்டு பசித்திருக்க பெருவயிறு தான்வளர்த்த
பெரும்பாவி தன்னையும் பிடித்து (பெரும் பாவி...)

எள்ளளவுமே இரக்கம் இன்றியவனை நரகில்
ஏற்றிப்பல ஆண்டு சென்ற பின்பு (ஏற்றி...)

நாலுபேர்க்கும் பொதுமாடாய் நானிலத்திலே பிறந்து
நாடெங்கும் திரிந்தலையச் செய்தார் (நாடெங்கும்...)

சீலமுடன் ஏழைகட்குச் செவிகொடுத்து இரங்காத
தீய இடும்புள்ளவர்கள் தம்மை (தீய...)

நாடெங்கும் திரிந் திரந்து நாலுபேர் நகைத்திடவே
நாட்டிலே பிறவி செய்தா ரப்போ (நாட்டிலே...)

வீடெங்குந் திரிந்தலைந்து வீண னவன் மெய்குழறி
வேலனேஎன் செய்வனென நிற்பான் (வேலனே...)

கற்புடைய மங்கையரைக் கற்பழித்தப் பாவியரை
கட்டுடனே தான்பிடித்து வந்து (கட்டுடனே...)

நற்பறியாய் பாதகனை நாடி யக்கினித் தூணில்
நாட்டியே அணைத்து வைத்தா ரப்போ (நாட்டியே...)

அக்கினித் தூணைத்தழுவி அனலாய் எரிந்திடவே
அற்பனை மறுபிறவி செய்தார் (அற்பனை...)

செக்கிழுக்கும் மாடாகச் செகமதிலே தானனுப்பி
சேரவே கணக்கெழுது வாராம் (சேரவே...)

ஒன்றுவைத்து ஒன்றுபண்ணி ஊழியங்கள் கொண்டவரை
ஊரெருது மாடாக்கி விட்டார் (ஊரெருது...)

நன்றுடனே ஊரிலுள்ள நல்லாரும் பொல்லாரும்
நாடிப்பொதி யேற்றிவேலை கொள்வார் (நாடிப்...)

ஒருவிளையில் வேலைசெய்து உகந்திருக்கும் அவ்வேளை
உண்மையுடன் சொல்லுகிறேன், அங்கே (உண்மை...)

மறுவிளையில் ஒருபாவி மயங்குமட்டும் வேலை கொண்டு
மகிழ்ந்து கொத்து ஈயாத பேரை (மகிழ்ந்து...)

கண்டு எம காலதூதர் கண்டித்து அவன் தனையும்
கையிரண்டும் கட்டியே அடித்து (கையிரண்டும்...)

உண்டுடுக்க இல்லாமல் ஊதாரிப் பையனையும்
உடனே நரகமதி லிட்டார். (உடனே...)

## (தண்டனை வழங்குதல்)

## (விருத்தம்)

நரகத்தி லிவனும் சாடி நாடியே ஆறு மாதம்
விரைவுடன் புழுக்கள் தின்ன விதனமும் பொறுக்கா வண்ணம்
உரையது குழறி யந்த உண்மையை மனதி லெண்ணி
பரம்பொருள் தன்னை நாடிப் பாவியும் அழுந்தி னானே.

## (மறுகணக்கு வாசித்தலும் தண்டனையும்)

## (வேறு)

மறுகணக்குத் தானெடுத்து வாசித்தார் நயினாரும்
மதமெடுத்து கற்பழித்த மாபாவி தங்களையும்
மறுக விரித்துவைத்து மணிநாக்கைத் தான் பிடுங்கி
மார்பதிலே கல்லேற்றி மாறிமாறி யடிப்பாராம்
பின்னுமந்தப் பேய்ப்பயலை பூவுலகில் பிறவி செய்து
பெருவியாதி என்னுங்குட்டம் புறப்படவே செய்தனராம்
பொன்னெனும் மந்தையுடன் பூரிப்பொடு பேசிநின்று
பூவாகிலுங் கொடுத்துப் போகாத பாவிகளை
வாயிற்படிக் கல்லாக மாதர்மிதித்து நடக்க
வண்மையுடன் ஒருபிறவி வகுத்தாரே நயினாரும்
மோசம்செய்து பெண்பிடித்த மூதேவிதிப் பயல்களையும்

முன் எளியிலே சேர்த்து முட்டியே அடிப்பாராம்
தாகத்துக்கு நீர்கேட்க தண்ணீர் கொடாப் பாவிகளை
தக்கவெந்நீர் ஆனதையும் தான்கொதிக்கவே காய்த்து
ஆகமுறவே குடிக்க அவர்களுக்கு ஊட்டினபின்
அங்குமிங்கு மாய்இழுத்து அலக்கழிவு செய்குவாராம்
மன்னவனும் தேவியுமாய் மகிழ்ந்திருந்து வாழ்க்கையிலே
மன்னனுக்கு முன்னுறங்கும் மாபாவிச் சண்டாளியை
மன்னவ னில்லாதபடி மறுபிறவி செய்தவளை
மட்டுடன் நாணற்றவளாய் மாநிலத்தில் அலைய வைத்தார்
புத்திரரை உறக்கிவிட்டு பிறபுருடர் தமை விரும்பி
போனதொரு பாவியரைப் போடுமென்றார் கழுவதிலே
தந்திரமாய் இருவரையும் தக்கச்செப்புத் தூணதிலே
தடித்தனமாக இறுக்கி தானே துயர் செய்கிறாராம்
மாப்பிள்ளையின் சொற்கேட்டு வணங்கா திருக்குகின்ற
மாபாவி யானவளை மாட்டுமென்றார் சேவகர்க்கு
தாப்புடனே தூண்டலிலே தான்கோர்த்துமே இழுக்க
சங்கடங்க ளேறியவள் தான்புலம்ப வைத்தனராம்
தன்கணவன் உண்ணுமுன்னே தானே பிற புருடனுக்கு
தக்கபசி யாற்றி வைத்தச் சண்டாளப் பாவியெனும்
கல்நெஞ்சம் படைத்தவளைக் கண்டித்து மறுபிறவி
காட்டாமை யாக்கிவைத்து கணக்கதிலே எழுதுவாராம்
வம்பாகக் குடமெடுத்து வாரிமுடியாதவட்கு
வழியே வருமொருவன் வாய்மைசொல்லக் கேளாமல்
சம்பமாப் போனதொரு சண்டாளி யவள்தனையும்
சட்டெனவே தூதுவர்கள் தானவளையும் பிடித்து
செம்புத் தூணைத் தான் காய்த்து சேர்த்துக்கட்டி தானடித்து
சேரவே அவள்தனையும் சிறுத்தையெனத் தானமைத்தார்
வம்புரைத்தப் பாவிதனை மறுபிறவி செய்யவென்று
வரியமுங்காய்ப் பிறவிசெய்து வகுத்தார் நயினாரும்
காரிருளிலே ஒருவன் கனத்தமழை பெய்திடத்தில்
கட்டுடன் ஒதுங்கவிடம் காரியமாய்க் கேட்டிடவே
காரிநாயை விட்டேவி கடிக்கவிட்ட பாவிதனை
காட்டுச்சியா யமைத்து கணக்கதிலே எழுதுவாராம்.

## (நல்லோர்க்கு நற்கெதி நல்குதல்)
## (வேறு)

தன்மங்கள் செய்து இறந்து பிறந்தவள் தம்மை
சங்கர னாரும் அருகில் அழைத்திடக் கண்டு

வந்தவளைப் பரன் சந்தோசமாக இருத்தி
வண்மை நடத்திடும் புண்ணிய வாட்டி எனவே
பத்தினியைக் கூட்டி உத்தமப் பெண்மணி யென்ன
பாராட்டிச் செல்வம் குறையாத வாழ்விற் படைத்தார்
நித்தமும் வாழ்வு குறையாமல் வாழ்ந்திருவென்ற
நீணிலந் தன்னில் பிறப்பித்தாரே நயினாரும்
நந்த வனங்களை வைத்து வளர்த்திட்ட பேரை
நல்ல பதத்தில் இருத்தவென்றே எண்ணி விட்டார்
சந்தமாய் பூக்களுண்டாக மரங்களைநட்டு
சாமிக்கு நித்தம் பறித்துப் பணிசெய்வோர் தம்மை
எல்லாப் பவிசும் குறையாத வண்ணம் படைத்து
ஈஸ்வரனாரும் மகிழ உலகிலே வாழ்வார்
கல்லால் கிணறு சமைத்த பெரியவர் தாமும்
கனகப் பதவி பெறுவார்கள் ஈதுண்மை என்றார்
வையக மெங்கும் வழியில் மடங்கட்டி வைத்தோர்
வாழ்ந்திருப்பார் சதா காலம் கிளைகளுடனே
தெய்வத் தலங்கள் முடித்துத் திருப்பணி செய்தோர்
தேவலோகத்தில் பரமகெதிகள் அடைவார்
தாயுந் தகப்பனும் சஞ்சலங் கொள்ளாதவாறு
தானே யவர்க் கன்னம் தந் தாடை ஈந்தவர் தாமும்
ஆயுங் கலைகள் அறுபத்து நான்கதும் பெற்று
ஆன்றோர் மதிக்க அவனியில் வாழ்வார் நிசமே
எங்கும் அதிதிகள் தங்க மடங்களுங் கட்டி
இன்பமாய் அன்னமும் ஏற்றதோர் ஆடையும் ஈந்தோர்
சங்கரன் மா லயன் தன்பதம் பெற்று மகிழ்வார்
சாட்சியிலை யிது சத்திய மென்றே வரைந்தார்
தன்மணவாளனைப் பேணின கற்புடையாளை
தாமரை வாழும் நீராழியிலே முழுக் காட்டி
சந்தமுடன் மக்கள் கொஞ்ச மகிழ்ந்து சாமட்டும்
தன்மங்கிலியம் தப்பாமலே பெறுவாரே
நாணயமான நயினாரைப் பூசித்தபேர்கள்
நல்லகெதிகள் பெறுவது நிச்சய மென்றார்
பார்வதி லட்சுமி பா மடந்தையைத் தொழுதோர்
பார்தனில் அட்ட ஐசுவரியம் பெறுவார்
நேர்மையுடன் பர காளியை நித்தம் தொழுவார்
நீங்காதப் பேரின்ப வாழ்வெய்துவாரென நின்றார்.

## (முக்தி பெறும் வழி)

### (விருத்தம்)

அத்தன் மால் பிரம தேவன் அடியிணை மறவா நின்ற
சுத்தனாம் இயமன் காலன் தூதுவர் நயினார் மற்றும்
சித்தர்கள் முனிவர் தேவர் சீரடி மறவா நின்றோர்
பத்தராய் முத்த ராகிப் பரன்பதம் பெறுவார் திண்ணம்.

( சுபம் )

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

தரமணி, சென்னை - 600 113


| அண்மை வெளியீடுகள் | ரூ. பை. |
|---|---|
| அறிவியல் பார்வையில் வேதாத்திரிய உடல்நலக் கொள்கைகள் | 60.00 |
| பழங்குடி மாணவர்களுக்கான தமிழ்மொழிப் பாடநூல் மதிப்பீடு | 65.00 |
| பதினெண் கீழ்க்கணக்கு நூல்களும் மனிதவள மேம்பாடும் | 50.00 |
| மேலைநாட்டறிஞர்களின் தமிழ்த் தொண்டு | 175.00 |
| பெரியார் என்னும் பேரொளி | 60.00 |
| சீனக்கவிஞர் குமோரோவின் தேவதைகள் (கவிதைத் தொகுப்பு) | 70.00 |
| புலம்பெயர்ந்தோர் படைப்புகளில் செவ்வியல் இலக்கியங்களின் தாக்கம் | 100.00 |
| உலகத் தமிழியல் ஆய்வுகள் (தொகுதி 1) | 450.00 |
| செவ்விலக்கியச் சாரம் | 70.00 |
| வேதாத்திரி மகரிசியும் மதநல்லிணக்கமும் | 45.00 |
| வீரமாமுனிவரின் சொல்லிலக்கணம் | 50.00 |
| திருமந்திரம் காட்டும் வாழ்வியல் நெறிகள் | 165.00 |
| தொல்காப்பிய உத்திகள் | 60.00 |
| தமிழில் இசுலாமிய மரபுகள் | 60.00 |
| தமிழில் இலக்கிய மானிடவியல் | 80.00 |
| தொடரியல் கோட்பாடுகளின் வளர்ச்சி | 65.00 |
| இராசேந்திர சோழனின் திருவாலங்காட்டுச் செப்பேடுகள் | 80.00 |


வெ.எண் : 781

**கதைப் பாடல் சுவடித் திரட்டும் பதிப்பும் (பகுதி- 3)**

**விலை : ₹ 240.00**





ISBN : 978-81-925359-1-3

9 788192 535913